காணிகள் மீதும் அன்பு-என்று சிலர் சொல்வர். இது பக்தர் களுக்கு இலக்கணமல்ல; திருத்தொண்டர்களுக்கும் இலக்கணமல்ல.

பக்தர்கள் பரமனுக்கு மட்டுமே அன்பு பூண்பர்; ஆட்செய்வர். கதிர்மணி தாளை இடமாகக் கொண்டு உணவெடுத்துத்தான் வளர்ந்தது. ஆனால், அந்தக் கதிர்மணி தன்னைத் தாங்கும் தான் நிற்கும் நிலத்திடைக் கிடைக்கும் உரம், தண்ணீர் ஆகியவற்றின்மீது மாளா அன்பு கொள்ளின் மனிதனுக்கு ஏது உணவு? அதுபோல் பரமனுக்கு ஆளாம் அன்பர்கள் வாழத் துடிப்பவர்கள் அல்லர், - வாழ்விக்கத் துடிப்பவர்கள்.

முற்றிய கதிர் பல ஒன்றோடொன்று இணைந்து தழுவித் தலை வணங்கி நிலத்திடைக் கிடக்கும் காட்சி, ஊன்றிய கருத்துடையோருக்கு ஒரு தத்துவப் பல்கலைக் கழகம். பத்திமையிற் சிறந்த அடியார்களின் வாழ்க்கையில் 'தனிமை! இருத்தல் கூடாது; இருத்தல் இயலாது. அடியார்கள் தத்தமில் அகந்தழீஇக் கூடுவர். யார் வணங்கினார் என்று அறிந்து கொள்ள முடியாத வண்ணம் ஒருவரையொருவர் முந்திக் கொண்டு தொழுவர்; வணங்குவர். மெய்ப்பாட்டு மிகுதியால் வணங்கக் கிடைத்த தம்மையும் வணங்கிக் கொள்வர்.

வணக்கம், உள்ளீடு நிறைந்தது. முற்றிய கதிர்மணி இல்லாப் பதர் வணங்காது. உள்ளீடற்ற பதர், கழனியில் தலை நிமிர்ந்து நிற்கும்; ஆடும்; சுழன்று ஆடும், காற்று ஆட்டிய வகையிலெல்லாம் ஆடும். அதுபோல, உள்ளீடற்றவர்கள் அபாரமாக ஆட்டம் போடுவர்; செருக்குடன் ஆடுவர்; ஆசைக் காற்று அலைக்கும் வழியெல்லாம் ஆடுவர்.

அடியார் வணக்கம் உள் நிறைந்து புறத்தே வெளிப் படுவதேயாம். அவர்கள் வயிற்றுக்காக வணங்குபவர்கள் அல்லர்; முகமனுக்காக வணங்குபவர்கள் அல்லர்.

ஞானத்தின் முதிர்ச்சியிலேயே உண்மையான வணக்கம் முகிழ்க்கிறது. இத்தகைய ஞானிகள் நாட்டின் மழைக்கு உதவுவார்கள்; மாண்பினைச் சேர்ப்பார்கள். இவர் களே சான்றோர்கள். இத்தகு சான்றோர்கள் பல்கி வளரும் நாட்டிலேயே நரையிலா வாழ்க்கை கிடைக்கும்.

நாட்டிலுள்ள உழவர்கள் உழைத்துப் பொருள் சேர்க் கின்றனர். அரசுக்கு உரிய கடமையைச் செலுத்துகின்றனர். பழந்தமிழகத்தில் அது வரியல்ல. கடமை உணர்வுடன் செலுத்தப் பெறும் கடன். அரசுக்குத் தருவதை மகிழ்வுடன் முந்தித் தருவது முன்னோர் வழக்கம். அரசுக்குரிய வரியைக் குறைத்துக் காட்ட இரட்டைக் கணக்குமுறை இருந்ததில்லை - இருக்கக்கூடாது.

காவிரி நாட்டு மக்கள் அரசுக்குரியனவற்றைக் கடமை யெனக் கருதித் தந்தனர்; அறங்கள் பலசெய்தனர்; கடவுளைப் போற்றினர்; ஆசிரியர்களுக்கு அளித்தனர்; விருந்திற்கு வழங்கினர்; உற்றார் உறவினரைப் பேணி பாதுகாத்தனர். ஏன்? ஆட்சித் தலைவன் அநபாயனின் கொற்றக்குடை வெய்யில் மறைக்கும் குடையன்று. சமுதாயத்தைக் காப்பதில் தாய் குழந்தையைக் காப்பது போன்ற தண்ணளிக் குடையாக விளங்கியது. இஃது ஒரு சிறந்த நாட்டின் சமுதாய வாழ்க்கை.

இத்தகைய வாழக்கை சமுதாயத்தில் கால் கொள்ளு மானால், அங்கு இயல்பாகவே இன்றைய சோஷலிசத் தத்துவம் விளங்கித் தோன்றும். இந்த வாழ்க்கை முறையில் மாறுபாடுகள் தோன்றியதால் வளம் குறைந்துள்ளது. வறுமை பெருகியுள்ளது. அரசு, வரியை ஏவலர் வைத்து அச்சுறுத்தி கட்டாயப்படுத்தி வாங்குகிறது. திருக்கோயில்கள் கட்டாய மான கட்டணம் வைத்து வசூலிக்கின்றன. ஆசிரியர்களுக்கு அரசு சம்பளம் வழங்குகிறது; சமுதாயம் நேரிடையாக வழங்க வில்லை.

விருந்தினர்கள் வீட்டுக்கு வருவதில்லை. 'லாட்ஜ்' களுக்குப் போய் விடுகின்றனர். உற்றார்-உறவினர் 'ஒப்பு'க் குரியவராகி விட்டனர். நிர்ப்பந்தத்தின் அடிப்படையில் பழகுகின்றனர். ஆதலால், அரசும் செயற்கை முறையில் சோஷலிசம் படைக்க முயலுகிறது. அதற்கு மாறாகப் பழந்தமிழக வாழ்க்கை முறை-சேக்கிழார் காட்டியநெறி வாழ்க்கையாக மலருமானால் இயற்கையில் சோஷலிசம் மலரும்.

# 4. *நாட்டுப்பற்று

**மா**னிட வாழ்க்கை நிலத்தை மையமாகக்கொண்டு நிகழ்கிறது. ஆதலால் நாடின்றி வாழ்க்கை இல்லை. ஆதலால் பழங்காலத்திலிருந்தே நாட்டுப்பற்று எல்லாத் துறையின ரிடத்தும் தோன்றி வளர்ந்து வந்திருக்கிறது, பெரிய புராணத்தில் வரும் திருக்குறிப்புத் தொண்டர் நாயனார் தொண்டை நாட்டைச் சேர்ந்தவர். சேக்கிழாரும் தொண்டை நாட்டைச் சேர்ந்தவர். ஆதலால் திருக்குறிப்புத் தொண்டர் வரலாற்றில் தொண்டைநாட்டின் சிறப்பைப் பற்றிப் பல பாடல்கள் இயற்றியுள்ளார். தமிழ்க் காப்பிய மரபில் "நாட்டுப்படலம்" செய்த பிறகுதான் காப்பியம் தொடங்கும். ஆதலால் பழைய இலக்கியங்கள் அனைத்திலும் நாடு சிறப்பித்துப் பேசப்படுகிறது.

நாடு, வாழ்க்கைக்குத் துணையாய், களமாய் அமைந்து வரலாற்றை நடத்தி வைக்கிறது. நாடு வாழும் மக்களால் பெருமையடைகிறது. பொருள் தன்மை அடைகிறது. "நாடு நாடாக இருந்தால் என்ன? காடாக இருந்தால் என்ன? மேடாக இருந்தால் என்ன? பள்ளமாக இருந்தால் என்ன? நல்ல ஆடவர்கள் வாழ்ந்தால் போதும்! அவர்கள் நாட்டைக்

* கடவுளைப் போற்று! மனிதனை நினை

குறை சொல்லமாட்டார்கள்; நாட்டுக்கு வளம் சேர்ப்பார்கள்; வரலாற்றில் இடம் பெறுவார்கள்.

*"நாடா கொன்றோ*
*காடா கொன்றோ*
*அவலா கொன்றோ*
*மிசையா கொன்றோ*
*எவ்வழி நல்லவர் ஆடவர்*
*அவ்வழி நல்லை வாழிய நிலனே!* (புறம்–187)

என்பது புறநானூறு.

நாட்டுப் பற்று ஒவ்வொருவருக்கும் தேவை. நாட்டுப் பற்று என்பதன் பொருள் "வாழ்க பாரதம்" "வாழ்க செந்தமிழ் நாடு" என்று வாயினால் முழக்கம் செய்வதன்று. மழை பெய்யாது, இடி இடித்துப் பயன் என்ன? தன் வாழ்க்கையில் தொடர்புடையதாய் அமைவது வாழ்வளிக்கும் நாடு, எதையும்விட நாடு உயர்ந்தது; எல்லாவற்றையும் விட உயர்ந்தது என்ற அசைக்க முடியாத நம்பிக்கைவேண்டும். நாள்தோறும் இனிய நல்லுழைப்பால் நாட்டை வளர்ப் படுத்திக் கொண்டே இருக்கவேண்டும். நாடு உணவளித்து வாழ்வளிக்கிறது. ஒருவன் தான் உண்ணும் உணவுக்கும் அதற்கு மேலும் நாட்டை வளப்படுத்தவேண்டும். நாட்டின் அனைத்துத் துறை வளங்களையும் பாதுகாக்கவேண்டும்.

நாடு என்றால் வரலாறு உண்டு. ஒரு நாட்டின் மக்கள் அந்த நாட்டின் வரலாற்றுக்குப் பாத்திரங்களாகவும் விளங்கு கிறார்கள்; வரலாற்றைப் பாதுகாப்பவர்களாகவும் இருக்கிறார்கள். இந்த இருவகைப் பணிகளையும் செய்வது குடிமக்களின் நீங்காக் கடமையாகும். நாட்டின் வளங்களைப் பாதுகாப்பது சமுதாய வாழ்க்கைக்கு உறுதியளிக்கக் கூடியது. நாட்டின் பல்வகை வளங்களும் தொடர்ச்சியாக வளர்ந்து கொண்டே இருக்கும்படி பார்த்துக்கொள்ளும் நாட்டில்

வறுமை வராது; பஞ்சம் வராது; தூய்மையான நாட்டுப் பற்றுடைய சமுதாயம் நாட்டுப்பற்றை எந்தப் பற்றையும்விட உயர்ந்ததாகக் கருதவேண்டும். நாட்டுப்பற்று மற்ற எல்லாப் பற்றுகளுக்கும் பொருள் தந்து வளர்க்கும்; வாழ்விற்கும் சிறந்த நாட்டுப்பற்று இறையன்புக்கு ஈடாகாதது மட்டுமல்ல; அதனிலும் உயர்ந்தது. ஏன்? நாட்டில் பாதுகாப்புக்கு வளர்ச் சிக்குச் செய்வனவெல்லாம் வாழும் மக்களுக்கே திரும்பி வருகின்றன. நாட்டு மக்களே பயன் பெறுகின்றனர். அதனால் இந்த நூற்றாண்டில் நமது நாட்டில் செழித்து வளர வேண்டியது நாட்டுப் பற்றேயாம்.

நாடு-பொதுச் சொல்; பொருள் பொதித்தசொல்; நாடு என்பதற்குத் திருக்குறள் இலக்கணம் வகுத்துக் காட்டுகிறது. நாட்டுப்பணி என்றால் பொதுப்பணிதான்! கடவுள் தொண்டுதான்! நாட்டின் வளத்தை-வனப்பை-இயற்கைச் செல்வங்களை வற்றாது வளம் பெருக்கி வாழ்வளித்து வாழ்வதே நாட்டுப்பற்று.

நமது நாடு அந்நியருக்கு அடிமைப்பட்டது ஏன்? நாட்டுப் பற்றில்லாமல் நாட்டை முறையாகப் பேணாத தாலேயே நாடு அடிமைப்பட்டது. அடிமைத் துன்பம் தாங்காமல் அல்லற்பட்ட இந்திய மக்களில் சிந்திக்கும் இயல்புடையவர்கள் நாட்டுப்பற்றுக் கொண்டார்கள்! வீட்டை மறந்தார்கள்; தன்னலத்தைத் துறந்தார்கள்; நாட்டின் விடுதலைக்குப் போராடினார்கள்! சிறைப்பட்டார்கள்; சித்திரவதைக்கு ஆளானார்கள்! நாடு விடுதலை பெற்றது! நாம் பெற்ற சுதந்திரத்தைப் பாதுகாக்க மீண்டும் நாட்டுப்பற்றியக்கம் வளர்தல் வேண்டும்! நாட்டுப் பற்றினைத் தளரவிடக்கூடாது. நாட்டுப்பற்றினை வேள்வி யாகக் கருதி இயற்றுவோமாக!

“மக்கள் சிந்தனை” 15-12-80

# 5. *மக்களாட்சி

விடுதலை தவறிக் கெட்டுப் பாழ்பட்டுக் கிடந்தது நமது பாரத தேசம். இந்த நாட்டு மக்கள் ஊமையராய்... செவிடர்களாய்...உணர்வின்றி நெடு மரம் போல் வாழ்ந்தார்கள். ஆதிக்கக்காரர்கள் ஏறிச் சவாரி செய்வதற்கு இலாயக்காகக் கூனிக் குறுகி வாழ்ந்தார்கள். வாழ்க்கையில் வளம் இல்லை. ஆனால், வறண்ட வேதாந்தங்கள் உண்டு. மண்ணகத்து வாழ்வு பற்றிய அறிவு சூன்யம்; ஆனால் விண்ணகத்தைப்பற்றி ஆயிரமாயிரம் கற்பனைகள், எண்ணற்ற சமயங்கள். ஆனால் கிராமத்தில் அருளாட்சி இல்லை. அகத்திலும் புறத்திலும் இருளாட்சி செய்த காலம். இருள்கடிந்து எழுகின்ற ஞாயிறென பாரத சமுதாயத்தில் அண்ணல் காந்தியடிகள் தோன்றினார். அடிமைகளாக வாழ்ந்த நமக்குச் சுதந்திரம் வாங்கித் தந்தார். இல்லை–சுதந்திரமாக வாழவும் கற்றுக் கொடுத்தார். இந்நாடு சுதந்திரம் பெற்றது. நாமிருக்கும் நாடு நமதாயிற்று. நமக்காக நாமே ஆட்சி செய்யும் குடியாட்சியும் மலர்ந்தது. ஆயிரமாயிரம் ஆண்டுகள், வாழ்ந்து புகழ்பெற்ற சுதந்திர பாரத நாட்டின் குடிமக்களாக நாம் வாழ்வது முன்னைத் தவத்தின் விளைவே யாகும்.

நாடு சுதந்திரம் பெற்றுவிட்டது. ஆனால், அந்நிய விளைவுகளை–அவற்றின் அடிச் சுவடுகளை அழித்து–மாற்றி யமைத்துப் புதிய சமுதாயத்தை அமைக்கும் பெருங்கடமை நம் முன்னே நிற்கிறது. பிறர் வாழ்வதற்கென்றே நாம் பிரித்து வைக்கப்பெற்றோம். (ஒளி விளக்கில் வீழும் விட்டில் பூச்சி களைப்போல,) நம்மையே அழித்தொழிக்கக்கூடிய சாதி, இன, மத வேற்றுமைகளை ஏதோ புனிதமானவையெனக் கருதிப் போற்றி வளர்த்து வந்திருக்கிறோம். சுதந்திர பாரத சமுதாயம்

* பொங்கல் பரிசு

ஒரு குடும்பம். அக்குடும்பத்தில் பல மொழி பேசுவோர் உண்டு - பல்வேறு நாகரிகமுடையோர் உண்டு. எனினும் வேற்றுமைகளைக் கடந்து - மறந்து விழுமிய ஒருமைப்பாடு கண்டு வாழும் ஒரு குடும்பமே நாம். இதற்கு மாறான உணர்வுகள் நாட்டிற்கும் நல்லதல்ல-நமக்கும் நல்லதல்ல.

உலகப் பெரும்போரின் போது சர்ச்சில், "வெற்றி! வெற்றி!" என்ற குரல் வழியே அந்நாட்டு மக்களை எழுச்சியும் புத்துணர்வும் பெறச் செய்து வெற்றி பெற்றார். இன்று நம்முடைய நாட்டிற்குத் தேவைப்படுகின்ற இன்றியமையா உணர்வும், 'ஒன்றே குலம்' - 'வளர்க ஒருமைப்பாடு' என்பனவுமேயாகும். வீட்டிலும், வீதியிலும் நாம் அன்றாட வாழ்க்கையில் கொண்டொழுகும் 'ஒருமைப் பாட்டுணர்வே' தேசீய ஒருமைப்பாட்டை வளர்க்க உதவும். ஊராட்சி மன்றங் களில் பொறுப்பேற்றிருக்கும் நண்பர்கள் தங்களுடைய கிராமச் சமுதாயத்தை அன்பியல் தழுவிய-உறவோடு கலந்த ஒரு குடும்பமாக ஆக்குவதில் முயற்சித்து வெற்றி பெறுதல் வேண்டும்.

தேசீய ஒருமைப்பாட்டின் அடித்தளம் கிராமச் சமுதாய அமைப்பிலேயே இருக்கிறது.

இந்தியா என்றால் கிராமம்; இந்திய நாட்டின் இதயம் கிராமங்கள். இந்திய நாட்டின் எண்பது விழுக்காடு மக்கள் கிராமங்களிலேயே வாழ்கின்றார்கள். அவர்களிற் பெரும் பாலோர் வேளாண்குடி மக்கள். அவர்களால் உண்பிக்கப் பெறுவோர் பலர். ஆனால் அவர்கள் வாழ்க்கையில் முன்னி ருந்த நிலைதான். இதை எண்ணிப் பார்க்கவும் நெஞ்சம் குமுறுகிறது. உழைப்பவர் வாழ்க்கையில் சோர்வு; உழைக்காத வர்கள் நகரங்களில் "வெளிச்சம் போட்டு" வாழ்ந்து கொண் டிருந்தார்கள். சாதி ரீதியான ஆதிக்கம்-சமுதாயத்தை அட்டைபோல் உறிஞ்சி அலைகழிக்கச் செய்யும் நிலப் பிரபுத்துவ முறை ஆகியவைகளால் வலிவும் வனப்பும்

வளமும் இழந்து போன கிராம வாழ்க்கைக்குப் புத்து யிரூட்டியது. நாம் பெற்ற சுதந்திரம். வேளாண்குடி மக்கள் உழைப்பில் நியாயமான பங்குபெற அது வழி செய்தது. ஏன்? அண்ணல் காந்தியடிகள் சொன்னது போல, உழவர்களுக்கு உழும் நிலத்தில் உரிமை கிடைக்கும் வண்ணம் நிலச் சீர்த் திருத்தத்தைக் கொணர்ந்தது. இத்தகு புதிய சாதனைகள் விவசாயிகளிடத்தில் எழுச்சியைத் தந்திருக்கின்றன-தன்னம் பிக்கையைத் தந்திருக்கின்றன- உற்பத்தியைப் பெருக்கியிருக் கின்றன.

நமக்கு தெய்வசாநித்யம் தெரியுமோ தெரியாதோ ஆனால், எண்ணற்ற தெய்வங்களைப் பற்றி நமக்குத் தெரியும். ஆனால், எப்படி வாழ்வது என்று மட்டும் கற்கமாட்டோம். நமது பாட்டன் பூட்டன்கள் ஏடெடுத்தடுக்கிப் பூசித்தனர். ஏடு கிடைக்காதவன் ஆயுத பூஜையின் பெயரால் மண் வெட்டியும் கலப்பையும் வைத்துக் கும்பிட்டான். எத்தனை பூசை போட்டும் அந்தக் கலைமகள் தேவியின் கருணா கடாட்சம் இந்த நாட்டில் இல்லை. அறிவிலே தெளிவ தில்லை. ஆற்றலிலே உறுதியில்லை. வெந்ததைத் தின்றார்கள்; விதிவந்தபோது செத்தார்கள். "மரணமிலாப் பெருவாழ்வு" என்று சித்தர் சொன்னது ஏட்டில் இருந்தது. படித்த பண்டிதர்கள் பதவுரையும் பொழிப்புரையும் சொன்னார்கள். எனினும் பாரில் அந்த வாழ்க்கை- "மரணமிலாப் பெரு வாழ்வு" இல்லை. சுதந்திரம் வந்தது. தேடித் திரிந்தாலும் கிடைக்காத கல்வி சமுதாயத்தையே தேடிவந்தது. கவிஞன் பாரதி,

> "வீடுதோறும் கலையின் விளக்கம்
> வீதிதோறும் இரண்டொரு பள்ளி"

என்று முழங்கினான். இன்று "தமிழகமெங்கும் கல்வி" என்பதே பேச்சு. "ஒரு பள்ளியைத் திறப்பவன் ஒன்பது சிறைச் சாலையை மூடுகிறான்" என்பது பழமொழி. மேலும், "கல்வி

ஆயிரங்காலத்துப் பயிர்" என்பதும் பழமொழி. இன்றையத் தமிழகத்தின் கல்வித்துறை மறுமலர்சி எதிர்காலத் தமிழகத்தின் ஏற்றத்திற்கு ஏற்ற அறிகுறியாகும். ஊராட்சி மன்றங்கள் கல்வி நிலையப் பொறுப்பை மேற்கொண்டிருக்கின்றன. வளரும் பயிருக்கு வான்மழைபோல, வளரும் குழந்தைக்குக் கல்வி. மன்றத்தின் தலைவர்கள் உறுப்பினர்கள் கல்வித் துறையில் இன்னும் அதிக ஈடுபாடு கொள்ளவேண்டும். மேதைத் தன்மைக்குச் சாதியும், அதிர்ஷ்டமும் வேண்டும் என்பது பத்தாம் பசலிக் கொள்கை; இன்று நாம் முயன்றால் நம் கிராமத்தில் எண்ணற்ற மேதைகளை உருவாக்க முடியும். ஆதலால் ஊராட்சி மன்றங்கள் எல்லாருக்கும் கல்வி-எப்படி யாவது கல்வி-வையத்துள் வாழ்வாங்கு வாழக் கற்றுக் கொடுக்கும் கல்வியளிக்கும் பொறுப்பை மேற்கொள்ள வேண்டும்.

குழந்தைகள் மட்டும் கற்றால் போதாது. இன்று வாழும் "வளர்ந்தவர்"களுக்கும்கூடக் கருத்துப்புரட்சி தேவைப்படு கிறது. அடிமைக்கால உணர்வுகள், ஆதிக்க எண்ணங்கள், தன்னல நாட்டம் இவற்றிலிருந்து நம்மிற்பலர் இன்னும் விடுதலை பெறவில்லை. வளர்ந்துவரும் சமுதாயத்திற்கு ஏற்றவாறு இணைந்துவாழ நாம் அனைவருமே நம்மைத் தகுதிப்படுத்திக்கொள்ள, வேண்டியிருக்கிறது. ஆதலால் கிராமத்தில் வாழும் நெறி காட்ட "வள்ளுவம்", எத்துறை யிலும் எப்பொழுதும் எதிலும் "அஹிம்சை" என்னும் காந்திய தத்துவம் ஆகியவற்றைப்பற்றிக் கேட்க-சிந்திக்க வாய்ப்புக் களை உண்டாக்க வேண்டும்.

சுதந்தரத்திற்கு முன்னர் இந்த நாட்டில் வாழ்ந்த மக்களின் சராசரி வயது சற்றேறக்குறைய 26 தான். வேத மந்திரங்கள் முழங்க, ஜாதகம் கணித்துப் புரோகிதர்களால் "நூறாண்டு வாழ்க" என்று வாழ்த்தப் பெற்றவனும்கூட 26 வயதில்தான் செத்தான். ஆனால், அவன் கவலைப்பட வில்லை. வழக்கம்போல் விதி முடிந்தது என்று நினைத்து

அமர்ந்திருப்பான். அவனுக்குத் தெரியுமா, நாம் சுகாதாரக் குறைவாக வாழ்கிறோம் என்று? கங்கையும் காவிரியும் அவனுடைய தத்துவத்தின்படி தீர்த்தங்கள்தாம். ஆனால், ஆற்றின் கரையோரங்களையே அவன் மலங்கழிக்கும் இடமாகக் கொண்டு மாசுபடுத்துவதைப் பற்றி அவன் எண்ணிப் பார்த்ததில்லை. ஊராட்சி மன்றங்கள் கிராமத்தின் சுகாதாரத்தைப் பேணுவதில் கண்ணுங்கருத்துமாக இருத்தல் வேண்டும். நோயற்ற வாழ்க்கையும், நிறைந்த வாழ்நாளும் போற்றுதற்குரியன. அதனால் வீட்டையும், வீதியையும் தூய்மையாக வைத்துக்கொள்ள கிராம மக்களைப் பழக்குதல் வேண்டும். அதனாலன்றோ பாரதி.

*"சந்தித் தெருப்பெருக்கும்*
*சாத்திரம் கற்போம்"*

என்றான், மேலும் வாழ்க்கைக்குத் தேவையான- சத்துள்ள இயற்கை உணவுகளை நமது கிராம மக்கள் எண்ணிப் பார்த்து உண்பதில்லை. வெறும் அரிசிச்சோறு, மனித வாழ்க்கைக்கே மாபெரும் பகையான புளி, மிளகாய் இவற்றில் மூழ்குகிறார்கள். ஆங்கிலேயன் அதிலும் கெட்டிக்காரன் ஆனான். உடலுக்கு இதந்தரும் நம்முடைய மிளகை வாங்கிக்கொண்டு, எரியூட்டும் மிளகாய் தந்தான். நாமோ மிளகாய்ச் சட்னி அபாரம் என்போம்! பொருந்தா உணவுப் பழக்கத்தைத் தவிர்க்க மக்கட்குச் சொல்லிக் கொடுக்க வேண்டும். கைக்குத்த லரிசி, நல்ல காய்கறிகள், பால், தயிர், இவைகளை உண்டு உடல் நலத்தோடு உங்கள் கிராமத்து மக்கள் வாழும்படி செய்ய வேண்டும்.

கிராம மக்கள் நிலையான பொருள் வளமும் சீரான வாழ்வும் பெற ஊராட்சி மன்றங்கள் ஊக்கமூட்டி வழி நடத்த வேண்டும்.

கிராமச் சமுதாயத்தில் பெரும்பான்மையோராக இருக்கும் விவசாயிகள் துணைத்தொழில் இன்றிப் போதிய

வருவாய் பெற முடியாது. ஆதலால் ஜப்பான் தேசத்தைப் போல, கிராமத்தின் ஒவ்வொரு வீடும் தொழிலகங்களாக வளர்ந்து காட்சியளிக்க வேண்டும். மேலும், வேளாண்மைத் துறையிலும் புதிய வழிதுறைகளைக் கையாண்டு திருந்திய முறையில் சாகுபடி செய்து, உயர்ந்த அளவு விளைச்சலைக் காணத் தூண்ட வேண்டும். கிராமத்தின் தேவைகள் அனைத்தையும் அந்தக் கிராமமே உற்பத்தி செய்யும் அளவிற்குக் கிராமம் வளர்ச்சியுடைய வேண்டும். தன்னிறைவு இல்லாத கிராமத்தின் செல்வம் நகர்வாழ் மக்களால் சூறையாடப் படும். ஆதலால், ஊராட்சி மன்றங்கள் தமது கிராமத்திற் கேற்றவாறு திட்டங்களைக் கண்டு செயல்படுத்தி அதைத் தன்னிறைவு உள்ள கிராமமாக்குதல் வேண்டும்.

கிராமத்தில் தேங்கிக் கிடக்கும் மனித சக்தியை வெளிப் படுத்திச் செயல்படுத்தும் ஆற்றல் கூட்டுறவு இயக்கத்திற்கு உண்டு. சுதந்திர பாரத சமுதாயக் குடும்பத்தின் இலட்சியம் சோஷலிச சமுதாய அமைப்பு. அந்த இலட்சியத்தை அடைய நம்முடைய இரண்டு நேர்ப்பாட்டைகள் கிராம ராஜ்யமாகிய பஞ்சாயத்தும் கூட்டுறவுமாகும். பிரிந்து கிடக்கும் மனித சக்திகளைக் கூட்டுறவு இயக்கத்தின் மூலம் ஒன்றுபடுத்த முடியும். கூட்டுறவால் நாட்டுயர்வு ஏற்படும். ஆதலால் கிராமத்தின் எல்லா முயற்சிகளையும் வேளாண்மை முதல் வாணிபம் வரை கூட்டுறவு முறையிலே செய்ய முயற்சிப்பது நல்லது. கூட்டுறவின் மூலமே சுரண்டுபவன், சுரண்டப்படுபவன் என்ற இரண்டு சாதிகளை ஒழிக்க முடியும். அதுமட்டுமல்ல-எதிலும் எப்படியாவது இலாபம் எடுத்ததாக வேண்டும் என்ற வடிகட்டிய பிற்போக் குணர்விலிருந்து சமுதாயத்தைப் பேணிக் காப்பாற்றவும் முடியும். கூட்டுறவின் மூலம் "நமக்காக எல்லோரும்; எல்லோருக்குமாக நாம்" என்ற உயர்ந்த வாழ்க்கை முறை உருவாகும்-உறவுகலந்த பந்தபாசம் பல்வேறு குடும்பங் களுக்குள் ஊடுருவி வளரும்.

மக்களாட்சி முறை இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கொள்கை. உலகம் முழுவதிலும் மனிதன் இந்தச் சுதந்திரத்திற்காகப் போராடிப் போராடி இந்த உரிமையைப் பெற்றிருக்கிறான். அப்படிப் பெற்றது ஆளுவதற்கோ, ஆதிக்கத் திற்கோ அல்ல. சுதந்திர நாட்டில் ஆளும் இனம், ஆளப்படும் இனம் என்ற வேறுபாட்டிற்கு இடமே இல்லை. ஆட்சி முறை என்பது நல்வாழ்விற்கு உரிய நடைமுறை அமைப்பேயன்றி ஆதிக்கத்திற்காக அன்று. சுதந்திர நாட்டில் நாட்டின் குடியரசுத் தலைவரிலிருந்து கிராமத்தின் ஆட்சித் தலைவர் வரை அனைவரும் சமுதாயத் தொண்டர்கள்- காவலர்கள் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. ஆதலால் ஊராட்சி மன்றங்களில் பொறுப்பேற்றிருக்கின்ற நாம் நல்லெண்ணத் திற்கும், நம்பிக்கைக்கும் உரிய குடியாட்சி முறையை உருவாக்க முயற்சிக்க வேண்டும்.

# 6. *வாக்கும் வாழ்வும்

நம்முடைய சுதந்திரபாரத சமுதாயத்தை இரண்டு வழிகளில்-வெவ்வேறல்ல - ஒன்றுபட்ட - பண்பின் வழிப் பட்ட துறைகளில் செழுமைப்படுத்தி வளர்க்க முயற்சித்துக் கொண்டிருக்கிறோம். ஒருவழி மக்களாட்சி-, மற்றையது கூட்டுறவு வாழ்க்கை. வளர்ந்து வாழவிரும்பும் சமுதாயத்திற்கு இவ்விரு கொள்கைகளும் விழிகள் போலவாம். நமது நாடு சுதந்திரம் பெற்ற பிறகு, பல தேர்தல்கள் (பொதுத் தேர்தல்கள் மட்டுமல்ல) நடைபெற்றிருந்தும்கூட நம்முடைய அன்றாட வாழ்க்கையில் மக்களாட்சி முறைக்கேற்ற செழுமை வளரவில்லை- கூட்டுறவுப் பண்புகளும் வளரவில்லை. அதுமட்டுமன்று. அவைகளுக்கு மாறாகக்கூடப் பலதடவைகளில் சொந்த

* மண்ணும் விண்ணும்

நலனுக்காகச் செயல்படுகிறோம். சாதாரண மக்கள் மாத்திரமே இப்படியல்ல-தேர்ந்தெடுக்கப்பெற்ற பிரதிநிதி களிலும்கூடப் பலர் இவ்வண்ணமே வாழுகிறார்கள். தேர்தல், ஒருவகைப் பயிற்சியேயாகும். தேர்தல்வழி சமூக ஒப்புரவுப் பழக்கவழக்கங்கள் மலர்ந்து உருப்பெற வேண்டும்.

தேர்தல் கருத்து வழிப்பட்ட புரட்சி இயக்கமாகும். தேர்தலில் பகைமையைக் காட்டுகிறவர்கள் மக்களாட்சிப் பண்பைப் பொறுத்த வரையில் சிறு பிள்ளைகளாகவே கருதப் பெறுவார்கள். மற்றவர்கள் கருத்தைக் கேட்க மறுப்ப வர்கள்-சிந்திக்க மறுப்பவர்கள் மக்களாட்சி முறைக்குத் தகுதி யுடையவர்கள் அல்லர். மற்றவர் கருத்தில் நியாயமிருக்கிறது என்று தெரிந்திருந்தும் கட்சிக்காக-வெற்றிக்காக மறைத்துப் பேசுகின்றவர்கள் மிகவும் பொல்லாதவர்கள். தேர்தலில், தம் முடைய கருத்தை-தாம் இந்தச் சமுதாயத்திற்காக வழங்கும் திட்டங்களை முன்வைத்தே வாக்குகளைக் கேட்க வேண்டும். மற்றவர்களுடைய பலவீனத்தால் வெற்றி பெறுவது தன்னுடைய கருத்து வலிமையைக் காட்டாது. வெற்றி பெறுவது வளர்ந்த முழுநிறைவான ஜனநாயகமுமாகாது. ஜன நாயகம் என்பது உயர்ந்த-ஆழமான-தூயதத்துவம். அங்கு தனிமனித ஆதிபத்தியத்திற்கு இடமில்லை. நம்முடைய நாட்டை நாம் ஆளுந்தகுதி யுடையதாக்குவது நம்முடைய வாக்குரிமை. சுதந்திர நாட்டில் வாக்குரிமை பெற்றிருப்பதும், அவ்வாக்குரிமையை முறையாகப் பயன்படுத்துவதும் வாழ்க்கையின் இன்றியமையாத கடமைகளில் ஒன்று. வாக்குரிமையைப் பெறாமலேயே பலர் வாழுகின்றார்கள். அவர்கள் அடிமைகளாகவே வாழ விரும்புகின்றார்கள். வாக்குரிமை பெற்றிருந்தும் அதைப் பயன்படுத்தாதவர்கள் வாழ்ந்தும் வாழாதவர்களாகவே கருதப் பெறுவார்கள். வாக்குரிமையைச் சில இடங்களில் காசுக்கு விற்கிறார்கள். ஐயகோ! என்ன கொடுமை! பெற்ற தாயைக் காசுக்கு விற்கும் கொடுமையினுங் கொடுமை வாக்குரிமையைக் காசுக்கு

விற்பது, வாக்குரிமையை யாருமே காசுக்கு விற்காதவாறு கவனமாகப் பார்த்துக் கொள்ளவேண்டும். இது ஒரு பெரிய தொண்டு. தேர்தலுக்குப் பல மாதங்கள் முன்பே சில கட்சிகள் கோடிக்கணக்கில் நிதி திரட்டி வைத்துக் கொண் டிருக்கின்றன. அவைகளின் எண்ணம் எப்படியும் காசு கொடுத்து வாக்குகளை வாங்கிவிடலாம் என்பதுதான் போலும். வாக்குகளைப் பெறவும், வாக்குகளை வழங்கவும் நடைபெறும் தேர்தலில் பணத்திற்கு வேலையில்லை. அப்படிப்பட்ட சூழ்நிலையிருந்தும் வாக்குகளைப் பெற விரும்பித் தேர்தலில் குதிக்கும் கட்சிகளில் பல பண பலத்தையே இன்றியமையாத ஒன்றாகக் கருதிப் பணத்தைத் தேடிக் குவித்து வைத்துள்ளன. பணத்திற்கும் வாக்குக்கும் தொடர்பு ஏற்படுத்திக் கொள்வதன் மூலம் எப்படியோ மக்களாட்சி முறைக்கு விரோதமாக இன்றைக்கு மேற்கண்ட நிறுவனங்கள் செயற்படுகின்றன என்பது "குடிமக்கள் சொன்னபடி குடிவாழ்வு" என்ற கொள்கைக்கு எத்துணை மாறுபட்டது என்பதை வாக்காளர்களாகிய நாம் நன்றாகச் சிந்தனை அடிப்படையிலும், செயலின் அனுபவத்திலும் ஆராய்ந்து முடிவு செய்தல் வேண்டும்.

வாக்காளர்கள் சாதிமுறை வழிப்பட்டுத் தமது வாக்கு களைப் பயன்படுத்தக் கூடாது. வாக்குரிமை பெற்றிருக்கும் ஒருவன் தனது வாக்கைத் தான் விரும்புகிற ஒருவருக்குத் தான் விரும்பியபடி வழங்குகிற சூழ்நிலையை உருவாக்காத நிலையில், இன்றையச் சமுதாய அமைப்பின்படி சாதியின் பெயரால் – காசின் பெயரால் வாக்குகளைப் பெறத் தொடர் புடைய நிறுவனங்கள் முயற்சி செய்வதை எப்படித் தடுத்து நிறுத்துவது என்பது மக்களாட்சிக் கொள்கையுடைய அறிஞர்கள் சிந்திக்க வேண்டிய ஒன்று. தேர்தலில் ஈடுபடும் கட்சிகளில் பல சாதிமுறை அமைப்பை வெறுத்து ஒதுக்கும் கொள்கையுடையனவேயாம். ஆனாலும், தேர்தலில் உடனடியாக வெற்றிபெற வேண்டும் என்ற வேட்கையால்

தேர்தல் காலத்தில் அவர்கள் சாதியைத் துணிந்து பயன் படுத்தத் தவறவில்லை.

வாக்குரிமையைப் பயன்படுத்துவதற்கு முன்பு, தெளிந்த சிந்தனையோடு சிந்திக்கவேண்டும். தேர்தலுக்கும் உணர்ச்சிக்கும் நெடுந்தொலைவு. எழுத்தால்-பேச்சால் எடுத்துக்காட்டுக்களால் வாக்காளர்களை உணர்ச்சி வசப் படுத்தி, அந்த உணர்ச்சியில் வாக்காளர்கள் மயங்கிக் கிடக்கும்போது, வாக்குகளைப் பெற முயற்சிப்பார்கள். தேர்தல் மேடைகளில் பேசுகிறவர்கள் உணர்ச்சி வசப்படு வார்கள். ஆனால் கேட்கின்ற வாக்காளர்கள் உணர்ச்சி வசப்படக்கூடாது. உணர்ச்சி வசப்படுத்தி வாக்குரிமையைப் பறிப்பது ஒரு வழிப்பறி போன்றதே. வாக்குரிமையைப் பயன் படுத்துவதில் தெளிந்த-அறிவின் வழிப்பட்ட சிந்தனைக்கு இடங்கொடுக்கவேண்டும்.

கணவனுக்கும் மனைவிக்கும் தனித்தனியே வாக்குரிமை உண்டு. மனைவியைப் பார்த்துக் கணவனோ கணவனைப் பார்த்து மனைவியோ வாக்குரிமைகளைப் பயன்படுத்த வேண்டும் என்பது நியதியில்லை. அப்படி யிருக்க யார்யாரையோ காட்டி வாக்குகளைக் கேட்பார்கள். அவர்கள் காட்டக்கூடியதைக் காட்டினாலும் வாக்காளர்கள் காட்சி வசப்பட்டு வாக்குரிமைகளை வழங்கி ஏமாறக் கூடாது. காட்சிகளைக் காணும் இடம் தேர்தல் களமல்ல.

தேர்தல், சமுதாயத்தின் கருத்துவழிப்பட்ட புரட்சி இயக்கமேயாகும். எந்தக் கருத்து சமுதாயத்திற்கு நல்லது என்று கருதுகிறதோ அவ்வழியில் மக்களை வழிநடத்தி அமைத்துச் செல்வதே ஜனநாயக வழிப்பட்ட இயக்கங்களின் கடமை. அக்கருத்தை ஏற்றுக் கொள்வதென்பது மக்களுடைய பரிபூரண சுதந்திர உரிமை. நம்முடைய கருத்து சரியானது தானா? அதை, மக்கள் விரும்பி ஏற்றுக் கொள்கின்றனரா? அக்கருத்துக்கு மக்களின் ஆதரவு எந்த அளவிற்கு இருக்கிறது

என்பனவற்றையெல்லாம் பரிசீலனை செய்யவே தேர்தல் முறை கையாளப்பெற்றது. சமுதாயம் வளர்ச்சியுறுவதன் காரணமாகக் கருத்து மாற்றங்களும் வளர்ச்சியும் ஏற்படக் கூடும். அவற்றைக் கணக்கிலெடுத்துக் கொண்டு ஒருநாடும் சமுதாயமும் முன்னேற வேண்டும். அதற்காகவே சில ஆண்டு களுக்கு ஒருமுறை தேர்தல் நடைபெறுகிறது. மக்களாட்சி முறைக்கும் தேர்தலுக்கும் வேண்டிய இன்றியமையாத பண்பு தன்னுடைய கருத்துக்கு மாறுபட்டிருக்கிற கருத்துக்களையும் கேட்டு சிந்திப்பதில் ஆர்வம் காட்டுவதாகும். பிற கருத்துக் களை விமரிசனத்திற்கு எடுத்துக் கொள்ளாது தன்னுடைய கருத்தே முற்றிலும் சரியானது-அதில் குற்றங்குறை இருக்க முடியாது என்ற பிடிவாதம் மக்களாட்சி முறைக்கு ஏற்புடைத் தல்ல. அப்படியானால் கொள்கை உறுதிப்பாடு வேண்டாமா? என்ற கேள்வி எழக்கூடும். பிடிவாதம் வேறு-கொள்கை உறுதிப்பாடு வேறு. தன்னுடைய கருத்துக்கு முரண்பட்ட கருத்துக்களையும் கேட்டு கருத்தின் அடிப்படை யிலும் விவாத ரீதியிலும் விமரிசனம்செய்து எதிர்க் கருத்து சரியல்ல என்று ஒதுக்குவதன் மூலமே கொள்கையில் உறுதிப்பாடு தோன்றமுடியும். எதிர்க் கருத்துத் தெரியாமல் கொள்கை உறுதிப்பாடு என்று கூறுவது செக்குமாடு. தான் சுற்றிய தூரத்தைக் கணக்கிட்டு உலகத்தைச் சுற்றினேன் என்று கூறுவதாகும்.

மற்றும், இங்கு கருத்து விமரிசனமே தவிர மனித விமர்சனம் அல்ல. கருத்து மாறுபாடேயொழிய மனித மாறு பாடல்ல. உயர்ந்த ஜனநாயக வாழ்க்கையில், பகைமைக்கும் மாச்சரியத்திற்கும் இடம் கிடையாது. ஜனநாயகத்திலும் தேர்தலிலும் பகைமையையும் மாச்சரியத்தையும் காட்டு பவர்கள் ஜனநாயகத்துறையில் வளராத-பக்குவம் அடை யாத சிறு பிள்ளைகளாகவே கருதப்பெறுவர். மக்களாட்சி முறையில் தேர்தலுக்கு நிற்கும் கட்சிகள் அனைத்துமே மக்கள் நலனை இலட்சியமாகச் சொல்லியே நிற்கின்றன. தம் தம்

நிலையில் நாட்டு மக்களுக்கு இன்னின்ன கொள்கைகள் நலம் தருவன என்று கருதி அவற்றை வாக்காளர்கள் முன்னே வைத்து வாக்குகள் மூலம் தீர்ப்பை எதிர்பார்க்கின்றன. அக் கொள்கைகளை ஏற்றுக் கொள்ளுகின்ற அல்லது இயல்புடை யனவல்ல என்று ஏற்றுக்கொள்ளாமல் ஒதுக்குகின்ற உரிமை வாக்காளர்களுக்கே உண்டு. அப்படியிருக்க மக்களின் நலனுக்கான கருத்தை வைப்பவர்களிடையே காழ்ப்போ பகையோ வர வாய்ப்பு ஏது? அதுபோலவே கருத்தை ஏற்றுத் தீர்ப்பளிக்கின்ற உரிமை மக்களுக்கு இருக்கும்போது தன்னுடைய கருத்தை ஏற்றுக்கொள்ளாத மக்களிடமோ அல்லது மாற்றுக் கருத்துடையவர்களிடமோ வெறுப்பும் பகையும் காட்டுவது ஜனநாயக முறைக்கே முரண்பட்ட ஒன்று என்பதை வாக்காளர்களின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகின்றோம். ஆதலால், தேர்தலைக் கருத்து வளர்ச்சிப் பிரச்சார இயக்கமாகவும் அதன்வழிச் செயற்படும் இயக்கமாகவும் நடத்தாமல், மனிதர்களுக்குள் பகைமையை-வளர்க்கும் இயக்கமாகப் பயன்படுத்துகிறவர்களிடத்தில் வாக்காளர்கள் விழிப்போடு இருக்கவேண்டும். அவர்கள், பகைமையை வளர்க்கும் முறையில் ஈடுபட்டாலும் அல்லது வாக்காளர்களை ஈடுபடுத்த முயன்றாலும் அவர்களை ஒதுக்கித் தள்ளுவது வாக்காளர்களின் உரிமை வழிப்பட்ட கடமையாகும்.

ஒரு சிறப்பான எதிர்காலத்தை அமைக்க விரும்புகிற வர்களுக்குக் கடந்த கால வரலாற்றறிவு இன்றியமையாத ஒன்று, தமிழ்ச் சமுதாயம் இவ்வுலகின் பல்வேறு சமுதாயங்கள் நாகரிகம் பெறுவதற்கு முன்னரேயே உயர்ந்த நாகரிகத்தில் வாழ்ந்த சமுதாயமாகும். இந்த நூற்றாண்டில் "ஒருலகம்" பேசப்பெறுகிறது. ஆனால், இன்றைக்கு 2000 ஆண்டுகளுக்கு முன்பே புறநானூற்றுக் காலக் கவிஞன்:

**"யாதும் ஊரே யாவரும் கேளிர்"** என்று கூறி ஒருலக ஒருமைப்பாட்டை வலியுறுத்தியிருக்கின்றான். இக் கவிதை

யின்படி நாடு, எல்லை, மொழி, இனம் ஆகிய வேற்றுமை களையெல்லாம் கடந்து, "மனித குலம்" என்ற அடிப்படை யில், ஓர் ஒருமைப்பாட்டைக் காண்கின்றோம். பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டக் காவியம் செய்தருளிய சேக்கிழார் பெருமானும், "உலகம்" என்றே பல இடங்களில் முதன்மைப் படுத்தி வற்புறுத்தியுள்ளார். ஏன்? திருமூலர் "ஒன்றே குலம்" என்று தெளிவாகவும் உறுதியாகவும் பேசுகின்றாரே. ஆனாலும், அயல் வழக்கு நுழைவின் காரணமாகவும் வேண்டாத ஆதிக்கத் தத்துவங்களின் ஆட்சியின் காரணமாகவும் நம்மிடையே எண்ணத் தொலையாத-பொல்லாத சாதி வேற்றுமைகள்– பிரிவினையுணர்ச்சிகள் சமூக பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் நுழைந்தன. இத் தீவினைகளை சில சமயச் சான்றோர்களும் அறிஞர்களும் தொடர்ந்து வன்மையாகச் சாடி வந்தும் கூட இப்பிரிவினை உணர்வுகளினின்றும் நாம் விடுதலை பெற்றோம் இல்லை. இதன் காரணமாகவே இந்த நாடு பலகோணங்களில் அடிமைப்பட்டது என்பதை நாம் மறந்து விடுவதற்குமில்லை. அதுமட்டுமா? தவறான கொள்கைகளின் காரணமாகவும் அயல் ஆட்சிகளின் காரணமாகவும் நமதுநாட்டு மக்களில் பெரும்பான்மையோர் கல்வியறிவில்லாதவர்களாக ஆனார்கள். இல்லாமை, அறியாமை, பிரிவினையுணர்வு. அந்நிய ஏகாதிபத்தியம், அந்த ஏகாதிபத்தியத்திற்குக் கங்காணம் பார்க்கும் வேலை இவற்றின் காரணமாக நம்முடைய நாட்டில் மலையும் மடுவும் அனைய பொருளாதார ஏற்றதாழ்வுகள் ஏற்பட்டிருக் கின்றன. சிலர் வாழ்வதும் பலர் வாடுவதுமாக இருக்கின்ற சமுதாய அமைப்பைக் காண்கின்றோம். மேற்காட்டிய குறைபாடுகளை மாற்றி நிறைவு பெறச் செய்யும் முயற்சிக்கே சமுதாய நலம்பேணும் வாக்காளர்களின் ஒத்துழைப்பும் ஆதரவும் இருக்கவேண்டும் என்று சொல்லவும் வேண்டுமோ?

இன்றைய நீதி சமகுல சமுதாயம் காண்பதுதான். நாம் மொழிவழி தமிழர்கள். நாட்டுவழி இந்தியர்கள்; கூடிவாழ

உலகம். இதைத்தவிர நாட்டை வேறுபடுத்தும் வேறு எந்த தத்துவமும் நமது வாக்காளர்களை ஆட்கொள்ள இடம் கொடுக்கக் கூடாது. அப்படி வேறுபடுத்தும் தத்துவங்களை நாம் ஏற்றுக்கொள்ளுவது நமக்கும் நம்முடைய நாட்டுக்கும் நல்லதல்ல. இந்த நீதி வழிப்பட்ட கொள்கையைக் கொணர வாக்காளர்களின் ஆதரவும் முயற்சியும் வேண்டும். முன்னர் குறிப்பிட்டதுபோல இன்றைய சமுதாய அமைப்பில் சிலர் வாழ்வதும் பலர் வாடுவதும் என்ற நிலை நிலவிவருகிறது. இத்தகைய சமுதாய அமைப்பு கடவுள் தத்துவத்துக்கும், நீதிக்கும், நியாயத்திற்கும், தர்மத்திற்கும் முற்றிலும் முரண் பட்டது. ஒரு சிலரின் தேவையற்ற ஏகபோக வாழ்க்கைக்கும் கூட தர்மத்தின் வடிவங் கொடுக்கச் சிலர் முயற்சிக்கின்றனர். அம்முயற்சி பகலை இரவாக்கும் முயற்சி போன்றதே. பழங்கால சமுதாயத்தில், சிறந்து விளங்கிய சான்றோர்களும்–சமயப் பெரியோர்களும், எல்லோரும் வாழ்கின்ற வாழ்க்கையே, அறநெறியின்பாற்பட்ட கொள்கையென வற்புறுத்தி வந்துள்ளனர்.

> *"எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே யல்லால்*
> *வேறொன் றறியேன் பராபரமே"*

என்று வலியுறுத்தினார் தாயுமானார். உண்மை இப்படி இருக்க இடைக்காலத்தில் முதலாளித்துவத்தின் இரும்புப் பிடியில் சமயம் சிக்கியது. அதனால் ஒருவனுடைய ஏகபோக சொத்துரிமை புண்ணியத்தின் பயன் என்ற தவறான கருத்துப் பரப்பப்பெற்றது. அதுபோலவே வறுமையில் கிடந்து வாடி உழலுவதற்குப் பாபம் காரணம் என்று காட்டிப் படுகுழியில் ஆழ்த்தினர், உழைப்பை உறிஞ்சி–செல்வத்தைச் சுரண்டி சமுதாயத்தை வாட்டிவதைப்பவர்கள்–மக்களின் மதப் பிடிப்பைத் தவறானவழியில் தங்களது சுயநலத்துக்குத் திருப்பிவிட்டுக் கொள்ளத் தவறவில்லை. புண்ணியத்திற்கும் செல்வத்திற்கும் என்ன உறவு? பாபத்திற்கும் வறுமைக்கும்

என்ன உறவு? ஒரு உறவும் இல்லை. புண்ணியத்தின் விளைவு நல் நெஞ்சமும், நல்உணர்வுமாகும். பாபத்தின் விளைவு தீய நெஞ்சமும், தீய உணர்வுமாகும் என்பதே உண்மை. இறைவனும்-இறைமைத் தன்மையும்-அவனது அருட் கொடைகளும் பொதுவானவை-நீலவானும் நீலக்கடலும் போலப் பொதுமையானவை. ஈசனது இணையடி நிழலின் அனுபவத்தைக் கூறும் அப்பரடிகள், உலகமக்கள் அனை வரும் விரும்பி அனுபவிக்கும் பொருள்களையே வரிசைப் படுத்திக் கூறுவது நினைக்கத்தக்கது:

> "மாசில் வீணையும் மாலை மதியமும்
> வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
> மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
> ஈசன் எந்தை இணையடி நீழலே"

பண்பட்ட சமயத் தத்துவத்திற்கும் சிலர் வாழும் கொள்கைக்கும் சிறிதும் உறவில்லை. ஆனாலும், நன்னலத்தின் விளைவு வழிவழிச் சமுதாயத்தை வாழ்வாங்கு வாழ்வித்துக் கொண்டு வந்த உயர்ந்த-தூய சமயத்தத்துவங்களைக் களங்கப் படுத்தவும், சமுதாய விரோதமாகச் சுயநலத்திற்குப் பயன் படுத்தவும் தயங்கவில்லை. இப்படி உபயோகப்படுத்தியதன் காரணமாகவே அருள் நெறிக்கு முற்றிலும் மாறுபட்ட "பொருள் முதல்வாத" தத்துவங்களும் "எண்ண முதல்வாத" தத்துவங்களும் தோன்றின என்பதை மறுப்பதற்கில்லை. இத்தவறான-பொய்யான கருத்தின் தொடர்பு இன்றும் சிலரிடம் இருந்து வரத்தான் செய்கிறது. ஆனாலும் வளர்ந்து வரும் சமுதாயத்தின் முன்னிலையில் சக்தியற்று மூலையில் ஒதுங்கிக்கிடந்தது. மூலையில் முடக்கப்பெற்ற தத்துவத்தை மீண்டும் தர்மத்தின் பேரால் உயிர்ப்பிக்க முயற்சிக் கின்றார்கள். இவர்களிடத்தில் நாம் மிகமிக விழிப்பாக இருக்கவேண்டும். அவர்களுக்கு நாம் கொடுக்கின்ற ஆதரவு நம்மைப் பல நூற்றுக்கணக்கான ஆண்டுகளுக்குப் பின் தள்ளி

விடும். ஒழுக்கம் நிறைந்த அறநெறியின் பாற்பட்ட சமுதாயத்தைக் காண-சமவாய்ப்புச் சமுதாயம்-சோஷலிஸ சமுதாயம் இன்றியமையாத ஒன்று. சோஷலிஸ சமுதாய அமைப்பின் மூலமாகத் தனிமனித வாழ்க்கை நசித்து விடுமோ என்ற அச்சம் தேவையில்லை. தனிமனித வாழ்க்கையும் சமுதாய வாழ்க்கையும் மலரும் மணமும் போல. மலர் தனி மனிதனைப் போல-அதன் மணம் சமுதாயத்தைப் போல. மலரின் செழிப்பு மணத்திற்கு உண்டு. மணம் நின்று நிலவிப் பயன்தர மலரும் இன்றியமையாத ஒன்று. மலரினாலேயே மணம் வாழுகிறது; மணத்தினா லேயே மலர் சிறக்கிறது. தனிமனிதனாலேயே சமுதாயம் செழிப்படைகின்றது; சமுதாயத்தினாலேயே தனிமனிதன் சிறப்படைகின்றான். தனிமனிதனுடைய வாழ்வின் நசிப்பில் தோன்றுவதல்ல சமுதாய அமைப்பு.

தனிமனிதனை வளர்க்கவும், வாழ்விக்கவுமே சமுதாய அமைப்பு. தனி மனிதனுடைய வாழ்க்கை எவ்வளவு முக்கிய மானதோ, அவ்வளவு முக்கியமானதுதான் சமுதாய வாழ்வும். தனிமனிதனுக்கும் சமுதாயத்திற்கும் பொதுவாகச் சில ஒழுக்கத் துறைகளை வகுத்துக்கொண்டு போற்றிக் காப்பாற்றுவது முற்போக்கான கடமைகளில் ஒன்று.

தனிமனிதனின் சமுதாய நலனுக்கு மாறுபட்ட தாகவோ தன்னிச்சைப் போக்குடையதாகவோ இருக்கக் கூடாது. அது போலவே, சமுதாயமும் தனிமனிதனின் வாழ்க்கைக்கு உத்தரவாதம் கொடுக்கக் கடமைப்பட்டிருக் கிறது. இங்கு சோஷலிஸ சமுதாய அமைப்பு என்பது பொருளியல் வழிப்பட்ட அமைப்புக்கேயாம். சிந்தனைக்கும் – உணர்வுக்கும் அல்ல. சோஷலிஸ சமுதாய அமைப்பின் தத்துவத்தை நாம் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும். ஒரு சிலர் வேண்டுமென்றே சோஷலிஸ சமுதாய அமைப்பைப் பகிரங்கப்படுத்தி மக்களிடம் காட்ட முயற்சிக் கின்றனர். சோஷலிஸ தத்துவம் அப்படி ஒன்றும் பயங்கர

மானதல்ல-அதைப் பார்த்து நாம் பயப்பட வேண்டியது மில்லை. இன்றைய சமுதாய அமைப்பில் திறமையுடைய பலருக்கு வாய்ப்பில்லை; வாய்ப்பின்மையின் காரணமாகவே, நாட்டை வளமாக்கப் பயன்படக்கூடிய பலருடைய திறமை பாழ்பட்டுப்போகிறது. திறமையற்றவர்களிடத்தில் வாய்ப்புக்கள் குவிந்துள்ளன. இது எப்படி எனில், செவிடர்கள் அவையில் இசைக் கச்சேரியும், குருடர்கள் அவையில் வாண வேடிக்கையும் நிகழ்த்துவது போன்றதுதான். குருடர்கள் அவையில் இசைக்கச்சேரியும் செவிடர்கள் அவையில் வாணவேடிக்கையும் நிகழ்த்தினால் பயன் உண்டு. உழைப்பு பொருளைக் கொண்டுவரும் என்பது பொதுவிதி. ஆனால் இன்றோ, பொருள் உழைப்பை விலைக்கு வாங்குவதைக் காண்கிறோம். உழைப்பவன் உலருகிறான். உழைப்பைக் கொள்ளை கொள்ளுகிறவர்கள் வாட்டமின்றி வாழு கின்றார்கள். இந்நிலையை மாற்றுவதே சோஷலிஸ சமுதாயப் போக்கின் நோக்கம்; சோஷலிஸ தத்துவத்தின் விழுமிய பயன். இக்கருத்தினையே வள்ளுவப் பெருந்தகை "ஒப்புரவு" என்ற அதிகாரத்தில் தெளிவாக விளக்குகிறார். "உலகத்தோடு ஒட்ட ஒழுகலே ஒழுக்கத்தின் விதி" என்று அறுதியிட்டுக் கூறுகின்றார். சமுதாயத்தோடு ஒப்புரவாக ஒத்ததறிந்து வாழும்போது தனிமனிதனுக்குக் கேடுவராது. அப்படியே வருமாயினும், அது விரும்பி ஏற்றுக் கொள்ளத்தக்கதே என்று பேசுகின்றார்.

> "ஒப்புரவி னால்வரும் கேடெனில் அஃதொருவன்
> விற்றுக்கோள் தக்க துடைத்து"
>
> –குறள் 220

என்பதே குறள்.

சோஷலிஸ சமுதாய அமைப்பின்மூலம், தனி மனிதனின் சிந்தனைகளுக்கோ, அல்லது தார்மீக வாழ் வுக்கோ எந்த விதமான ஊறும் விளைவதற்கு வழியில்லை. ஆதலால், இன்றைய உடனடியான நம்முடைய கடமை

சோஷலிஸ சமுதாயத்தை அமைப்பதேயாகும். இத்தகைய ஒரு சமுதாயத்தின் இன்றியமையாத தேவையை இற்றைக்கு எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னமேயே கம்பன் வலியுறுத்தி யிருக்கிறான்.

"தெள்வார் மழையும் திரை
ஆழியும் உட்க நாளும்
வள்வார் முரசம் அதிர்
மாநகர் வாழும் மக்கள்
கள்வர் இலாமைப் பொருள்
காவலும் இல்லை; யாதும்
கொள்வார் இலாமைக் கொடுப்
பார்களும் இல்லை மாதோ!"

என்று பேசுகின்றான்.

இது கம்பன் கண்ட இராமநாடு. தசரத இராமனைப் பின்பற்றுகிறவர்களுக்கு ஏன் இத்தகைய நாட்டைக் காண மனம் வரவில்லையோ தெரியவில்லை.

பொருளாதார ஏற்றத்தாழ்வுகளைக் குறைத்து எல்லார்க்கும் எல்லா வாய்ப்புக்களையும் வழங்குகின்ற சோஷலிஸ சமுதாய அமைப்பை மனமார விரும்பி நடைமுறை வாழ்க்கையில் கொண்டுவர விரும்புகின்றவர்களுக்கே வாக்காளர்கள் தங்கள் ஆதரவைக் கொடுத்துதவ வேண்டும்.

தனி மனித வாழ்க்கையாயினும் சரி, சமுதாய வாழ்க்கையாயினும் சரி திட்டமிட்டுச் செயல்படுவதன் மூலமே முன்னேற்றம் காணமுடியும். "திட்டமில்லாத வாழ்க்கையைத் தேவனாலும் காப்பாற்ற முடியாது" என்ற பழமொழி நினைவிற் கொள்ளத்தக்கது. நடைமுறைக்கு ஒவ்வாத பழக்கவழக்கங்களின் காரணமாகவும், அடிமை வாழ்வின் காரணமாகவும் இந்த நாட்டின் சுதந்திரத்திற்கு முன்னர் திட்டமிட்ட முன்னேற்றங்கள் கிடையா. இந்த நாடு சுதந்திரம் பெற்ற பிறகு, ஆளும் உரிமையை நம்முடைய

வாக்குகளின் மூலம் பெற்ற காங்கிரஸ் கட்சி தேசத்தின் முன்னேற்றத்தைத் தொழிற் புரட்சியின் மூலமே காண முடியும் என்ற நம்பிக்கையுடன் ஐந்தாண்டுத் திட்டத்தையும் மக்கள் முன்னே வைத்திருக்கிறது. ஆளுங்கட்சியின் ஐந்தாண்டுத் திட்டங்களைப் பொறுத்தவரையில், பழமை விரும்பும் கட்சிகளைத் தவிர, ஜனநாயக வாக்காளர்களின் நலன் விரும்பும் கட்சிகளின் கருத்துக்கும், ஆளும் கட்சியின் கருத்துக்கும் இடையே வேறுபாடுகள் அதிகமில்லை. திட்டமிட்ட முன்னேற்றத்தை விரும்புகிறவர்களுக்கும், திட்டங்களைச் செயற்படுத்தும் திறனுடையவர்களும், திட்டங்களை நிறைவேற்றுவதன் மூலம் விளையும் பலன்களை அதை நிறைவேற்றும், இந்த நாட்டு மக்கள் அனைவருமே அனுபவிக்க ஒழுங்குபடுத்துகிறவர்களுக்குமே வாக்காளர்கள் வாக்குகளைத் தந்துதவ வேண்டும். அடுத்து, இன்றைய வாக்காளர்களிடத்தில் எழுப்பப் பெற்றுள்ள ஒரு பெரிய பிரச்சனை வாழ்க்கையின் இன்றியமையாத அன்றாடத் தேவைப் பொருள்களின் விலை ஏற்றம், விலைவாசி ஏற்றத்திற்குக் காரணம் உற்பத்திக் குறைவு என்று கூறுவது நிறைவுடைய கருத்தாகாது. உற்பத்தி பெருகி யிருப்பதைப் புள்ளி விவரங்கள் தெளிவாக விளக்குகின்றன. தேசிய வருமானமும் கணிசமான அளவிற்கு அதிகரித்திருக் கிறது. இவ்விரண்டிலும் எவ்விதமான குறைவும் ஏற்பட்டு விடவில்லை. ஆனாலும், சோஷலிஸ சமுதாய அமைப்பை ஒத்துக்கொள்ளாத தன்னலச் சார்புடைய பிற்போக்குச் சக்திகள் இன்னமும் நாட்டில் வலிவுடன் வாழ்ந்து கொண்டு தான் இருக்கின்றன. அவற்றின் காரணமாக தேசிய வருமானம் உயர்ந்த அளவிற்குச் சராசரி மனிதனின் வருமானம் உயரவில்லை. பொதுநலனை மனத்தில் கொள்ளாதவர்கள் வருமான உயர்வைத் தம் வழிப்படுத்திக் கொண்டுள்ளனர். விலைவாசி ஏற்றம் ஒன்றும் கடுமையான தல்ல. ஆனால், மக்களின் வாங்கும் சக்தி குறைவாக இருப்ப

தனால் விலைவாசிகளின் ஏற்றம் நமக்குத் தெரிகின்றது. திட்டமிட்ட காரியங்கள்மூலம் பொருள் வருவாய் உயர் வதனால் பண்டங்களின் விலை உயர்வு தவிர்க்க முடியாத ஒன்று-இயற்கையும் கூட. சோஷலிஸ சமுதாய அமைப்பை நோக்கி நாம் ஒழுங்காக நடை பயில்வதன்மூலம் நம்முடைய வாங்கும் சக்தி அதிகரிக்கும். விலைவாசி ஏற்றம் மறைந்து விடும். அதுமட்டுமன்றி, உற்பத்தி செய்வோரும், வாங்கு வோரும் தம்முடைய வாணிபத்தைக் கூட்டுறவு அமைப்பு களின் மூலமே நடத்திக் கொள்வார்களானால் விலைவாசி ஏற்றத்தைத் தவிர்க்க முடியும். ஆதலால், மக்களின் வாங்கும் சக்தியை அதிகப்படுத்த விரும்புகிறவர்களுக்கும், வாணிகத் துறையில் கூட்டுறவு முறையை வளர்க்க விரும்புகிறவர் களுக்குமே வாக்காளர்கள் வாக்குகளை வழங்க வேண்டும்.

மொழி வழித் தமிழர்களாகவும், நாட்டு வழி இந்தியர் களாகவும் வாழும் நமது எதிர்காலத்தைப்பற்றித் தெளிவான முடிவெடுக்க நம்முடைய நாட்டின் சென்றகால நடைமுறை அல்லது கருத்து இவற்றைத் தெளிவான அடிப்படையில் கணக்கிலெடுத்துக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கின்றோம். சென்றகால நிகழ்ச்சிகளின் தெளிவில் உருவாகி வளரும் நிகழ்கால சிந்தனை வாக்காளர்களுக்கு யாரை ஆட்சியில் அமர்த்துவது என்பதை முடிவு செய்யத் துணை புரியும்.

நமது விடுதலைக்குத் தொடர்ந்து போராடி வெற்றி பெற்று, விடுதலையைத் தொடர்ந்து சுதந்திரப் போராட்டக் காலத்தில் மக்களிடத்தெழுந்த உள்ளக் கிளர்ச்சிகளைத் தெளிவுற உணர்ந்து, மக்களை அவ்வழி நடத்திச் செல்லும் ஆற்றல் பெற்ற சக்தி எது?

கட்டும் துணிக்காக மான்செஸ்டரை நம்பியிருந்த நாட்டை, மான்செஸ்டருக்குத் துணியனுப்பி அந்நாட்டுச் சந்தையிலும் வாகை சூடத்தக்க தொழிற்புரட்சியை உருவாக்கிய சக்தி எது?

இயந்திர அறிவு எள்ளளவும் இல்லாதிருந்த நாட்டிற்குப் பல்வேறு இயந்திரங்களையும் உற்பத்தி செய்து அவற்றை உலகச் சந்தைகளுக்கு அனுப்பும் இயந்திரப் புரட்சியைக் கண்ட சக்தி எது?

மின்சாரத்தால் ஊரெல்லாம் ஒளிபரப்பி ஒண்புகழ் கொண்ட சக்தி எது?

வழிவழியாகக் கலைமகளைத் தெய்வமெனக் கொண்டாடியும் எழுதப்படிக்கத் தெரியாதவரே மிகுந்திருந்த இந்நாட்டில், "கல்விக்குக் காசு வேண்டும்-சாதி வேண்டும்" என்றிருந்த நிலையை மாற்றி, எல்லார்க்கும் கல்வி-சோறொடு துணி கொடுத்துக் கல்வி வழங்கிய சக்தி எது?

ஈசன் இவ்வுலகத்திற்குத் தாயும் தந்தையும் என்பர். இறைவனின் படைப்பே இவ்வுலகம் என்பர்; எண்ணி லடங்கா வேத சாத்திரங்களை எடுத்து ஒப்பிப்பர். ஆனால், மனிதருக்குள் சாதியை ஒழித்தாரில்லை. நமது மக்களில் ஒரு பகுதியினர் தீண்டத்தகாதவர்களாக இருந்த நிலைமையை மாற்றி, எல்லோரும் ஓர்குலமாக வாழும் உரிமையை வழங்கிய சக்தி எது?

"உழுவோர் உலகத்திற்கு ஆணி", "உழுதுண்டு வாழ் வாரே வாழ்வார்", "உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத் தோரே?", என்றெல்லாம் பேசினார்களே தவிர உழவர் களுக்கு நிலம் தந்தாரில்லை.

உலர்ந்து போனவர் வாழ்க்கையில் வளம் ஏற்பட நியாய வாரம், நிலச்சீர்திருத்தம் ஆகியவற்றின் மூலமாக வாழ்க்கையில் நம்பிக்கையும் நல்வளமும் நல்கிய சக்தி எது?

"செப்பும் மொழி பதினெட்டுடையாள் எனிற் சிந்தனை ஒன்றுடையாள்," என்ற பாரதி வாக்குக்கேற்ப, நம் கண் முன்னேயே ஒரு மொழி இன்னொரு மொழியை அடக்கி ஆளவிடாமல், மொழிவழி மாநிலம் கண்டு மொழி வழி தேசியத்தை வளர்த்து எந்த ஓர் இனமும் கன்

மொழியையும், நாகரிகத்தையும் இழக்காமல் வாழக்கூடிய உத்திரவாதத்தைக் கொடுத்த சக்தி எது?

காலரா, பிளேக் என்றால் கதிகலங்கிய நாட்டில்-பத்திலும், இருபதிலும் பல்லாயிரவர் செத்த இந்நாட்டில் நோயற்ற வாழ்வைக் கணிசமாக வளர்த்து மனிதனின் சராசரி வயதை 45 ஆக உயர்த்திய சக்தி எது?

ஆசியாவிலேயே வயதுவந்தோர் அனைவருக்கும் வாக்குரிமையைத் தந்து ஆளும் உரிமையுடையவர்களாக்கிய சக்தி எது?

எல்லாவற்றிற்கும் மேலாக, உலக நாடுகள் பலவற்றையும் விட பாரதத்திற்குச் சிறப்பான பாரம்பரியம் ஒன்றுண்டு. அப்பாரம்பரியமானது அன்பிலே பிறந்து, தியாகத்திலே திளைத்து, அமைதியிலே தழைத்து, அருளியல் வழியாகச் சமாதானம் காண்பது. இன்று, உலக வல்லரசுகளிடையே உறவையும் நட்புரிமையையும் வளர்த்துச் சமாதானம் நிலைக்கச்செய்யும் தலைமை எது?

இங்ஙனம் சுதந்திரத்திற்குப் பிறகு, இந்த நாட்டைப் பல துறைகளில் புதுமையும்-பொதுமையும், வலிவும் வளமும் நிறைந்த நாடாகத் திகழச் செய்ய முயற்சித்துக் கொண்டிருக்கும் சக்தியைப் பற்றி மேலும் சொல்லவேண்டிய அவசியமில்லை. நாம் மேலே காட்டியபடி பாரதத்தையும் சிறப்பாக, தமிழகத்தையும் வழி நடத்திச் செல்லும் தலைமையும், சக்தியும் எவை என்பதை நான் சொல்லவும் வேண்டுமா? இக்கருத்துக்கள் இன்றைய ஆட்சிப் போக்கைப் பற்றிய உண்மை நிலை.

மற்றொரு சக்தியான இரண்டாவது சக்தியையும் பார்க்க வேண்டும். மேற்சொன்ன முதல் சக்திக்கு ஆக்க ரீதியான கருத்துக்களைத் தருதல், செயல்பட ஆதரித்தல், ஒத்துழைத்தல், தேவைப்படும் இடங்களில் நிர்மாண ரீதியில்

விமரிசித்தல் ஆகியவைகளின் மூலம் வாக்காளர்களின் வாழ்வுத்துறை வளர்ச்சிக்குத் துணைநிற்கும் சக்தியே அது.

இதைத் தவிர மூன்றாவதாகவும் ஒரு சக்தி உலவுகிறது.

நமது நாட்டை அந்நியர்கள் ஆண்ட காலத்தில் அவர்களுக்குக் கங்காணிகளாக இருந்த ஜமீன்தார்களும், மன்னர்களும், நிலச்சுவான்தார்களும் இன்று சிலரைத் துணைக் கொண்டு எல்லோரும் வாழ்வதா? என்ற விபரீத உணர்வில் நிரந்தரமாக மக்களை ஆன்மீக ரீதிக்கும் உலகாயத ரீதிக்கும், நியாயத்திற்கும் முரண்பட்ட-வழிவழியாக வளர்ந்து வந்துள்ள அருளியல் வழிப்பட்ட சமயநெறிக்கும் முற்றிலும் முரண்பட்ட ஒரு கொள்கையைத் துணிந்து தர்மத்தின் போர்வையில் சமயத்தின் பேராலேயே சொல்லி சமூகத்திலுள்ள-அழிந்து கொண்டிருக்கும் தீய சக்திகளையெல்லாம் ஒன்று திரட்டி உயிர் கொடுத்து வல்லடி வழக்குப் பேசும் சக்தி. அதுவே மூன்றாவது சக்தியாகும்.

இம்மூன்று சக்திகளிலும், எந்த சக்தி ஊக்கப்படுத்தத் தக்கது? எந்த சக்தி ஒதுக்கப்படத் தக்கது என்பதை நிர்ணயிக்கும் ஆற்றல் வாக்காளர்களாகிய உங்களுக்குண்டு என்று நாம் அறிவோம். எனினும், இந்த நாட்டின்மீதும், நமக்குள்ள கடமையுணர்ச்சியால், உங்களுக்குத் தெரிந்திருந்தாலும், மீண்டும் நினைவுபடுத்துவது நல்லது என முனைந்தோம். மூன்றாவது சக்தியைச் சமுதாயத்தினின்றும் ஒதுக்கித் தனிமைப்படுத்துவது வாக்காளர்களின் தலையாய கடமை என்பதையும் நினைவு படுத்துகின்றோம்.

அத்தீயதை ஒதுக்கும் கடமை முயற்சி எவ்வளவு இன்றியமையாதது என்பதை, என்னைக் காட்டிலும் வாழ்க்கைப் போராட்டத்தில் ஈடுபட்டுள்ள நீங்கள் தெளிவாக உணர்ந்திருப்பீர்கள் என்று நம்புகின்றோம்.

மற்றைய இரண்டு சக்திகளிலும் முதலாவது பரந்த தேசிய மனப்பான்மையுடையது-நாட்டின் முன்னேற்றம்

கருதித் திட்டங்கள் தீட்டும் போக்குடையது-தீட்டிய திட்டங்களை நிறைவேற்றும் ஆற்றலுடையது.

மேலும் வாழ்க்கையில் நம்பிக்கையைத் தந்து ஒளிமிக்க எதிர்காலத்தை நமக்குக் காட்டுவது-தலைமை தாங்கி நடத்திச் செல்லும் சக்தி அது.

இக்கருத்து கணிசமான கணக்கின் வழி ஏற்புடையது என்பதே நமது எண்ணம். ஆதலால் உயர்ந்த ஆக்க ரீதியான தலைமைக்கும், சக்திக்கும் வாக்காளர்கள் துணை நிற்க வேண்டும். அங்ஙனம் நிற்பீர்கள் என்றே நாம் நம்புகின்றோம்.

முதல் சக்தி ஏற்புடையதாக ஆகிறது; மூன்றாவது சக்தி மக்களை விட்டு ஒதுக்கப்பட்டு விடுகிறது.

எஞ்சி நிற்பது இரண்டாவது சக்தி. இது, முதல்சக்தி சொல்லும் சோஷலிசப்பாதையில் செயல்முறையில் துணை நிற்கவும், ஆக்க ரீதியில் விவாதிக்கவும், விமரிசிக்கவும் செய்து முழுமையான ஜனநாயக ரீதியில் ஆற்றப்படுத்தி நட்பு வழியாக நானிலத்தை வளப்படுத்தத் துணை செய்யவும், இச்சக்தியைப் பயன்படுத்த முடியும். அச்சக்தியும் நாம் கருதும் வழி இயங்கும் என்று நாம் நம்புகின்றோம். இந்த அடிப்படையில் இரண்டாவது சக்தியை நாம் ஒதுக்கித் தள்ளாமல், ஆனால் அப்படியே நாம் ஏற்றுக் கொள்ளக்கூடிய நிலைமையில் இல்லாததால் முதல் சக்தியின் ஆக்கப் போக்கில் துணையாக நிற்க அவர்களுக்கும் தேவையான அளவிற்குப் பலம் கொடுக்க வகை செய்யலாம் என்பதும் நமது கருத்து. அப்படிச் செய்வது நாட்டின் வளர்ச்சிக்குப் பேருதவியாகவும் இருக்கும்.

நாம் மேற்சொன்ன கருத்துக்களை நினைவிற்கொண்டு வாக்காளர்கள் சிந்திக்க வேண்டும். ஒருகுல சமுதாயத்தை-சமவாய்ப்புச் சமுதாயத்தை-திட்டமிட்ட முன்னேற்றத்தை உருவாக்கும் தகுதியும் வாய்ப்பும் எந்தக் கட்சிக்கு இருக்கிறது என்று தேர்ந்து தெளிந்து அந்தக் கட்சிக்கே தங்கள் மேலான

வாக்குகளை வழங்க வேண்டும். நம்முடைய ஜனநாயக ஆட்சியின் இன்றியமையாத் தேவைகளில் ஒன்று எதிர்க்கட்சி. நம்முடைய கருத்துக்கு இயைய ஆட்சி நடத்துகிறவர்களுக்கே நமது வாக்குரிமைகளைப் பெற முழுவதும் தகுதியுண்டு. எனினும் நம்முடைய கருத்தை மேலும் முழுமைப்படுத்திச் செழுமைப் படுத்தவும், மாறுபட்ட கருத்தை விவாத ரீதியில் விவாதித்து ஒதுக்கவும், மாறுபட்ட கருத்துடையவர் களிடையேயும் சிறந்த பாரம்பரியமுடையவர்களாகத் திகழும் சிலரைத் தேர்ந்தெடுப்பது நல்லது. ஆனால், இக்கருத்தை எல்லைக்குட்படுத்தியே செயற்படுத்த வேண்டும். அப்படி யில்லாது போனால் நிலையான அரசாங்கம் அமைப்பது சாத்தியமில்லாமல் போகும் என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும். எதிர்க்கட்சி என்றால், ஆளும் கட்சியோடு முற்றிலும் முரண்பட்ட கட்சியாக இருக்கவேண்டும் என்பது நியதியில்லை. அப்படி இருப்பதும் இந்தத் தேசத்திற்கு நல்லதல்ல. எதிர்க்கட்சிகளில் சிறந்த முற்போக்கு எண்ணம் படைத்தவர்களாகவும், இந்த தேசத்தின் நம் வாழ்வில் நாட்டம் உடையவர்களாகவும், நல்ல முற்போக்கு பாரம்பரியம் உள்ளவர்களாகவும், இருப்பவர்களையும் தேர்ந்து எடுத்தனுப்புவது, ஜனநாயகத்தைச் செழுமைப்படுத்த உதவும். இது நம்முடைய கடமையும்கூட. ஆனாலும் எதிர்க்கட்சி வேண்டுமே என்ற சம்பிரதாயத்திற்காகப் பிற்போக்குச் சக்திகளுக்கு ஊக்கமும் உரிமையும் அளிப்பது விரும்பத்தக்கதல்ல.

பொதுவாக, தனிமனிதன் தன் நலனை அடிப்படை யாகக் கொண்டே பெரும்பாலும் தன் இலாபத்திற்காகத் தன் வாக்கை உபயோகப்படுத்த நினைக்கிறான். அப்படித் தன்னலத்திற்காக உபயோகப்படுத்தப்படத்தான் வேண்டும் என்று முடிவு செய்து விட்டானானால் வாக்காளர்களிடத்தில் சாதி, இன பொருளாதார பலவீனங்கள் ஏற்பட்டு விடுகின்றன. இத்தகைய பலவீனங்களிடையே, வாக்காளர்

களிடத்தில் சமுதாய பொது நல உணர்வு குன்றி விடுகிறது. இந்த பலவீனத்தைப் பயன்படுத்திக்கொண்டு வாக்கு வேட்டையாடுபவர்கள், தவறுகள் செய்ய வாய்ப்பு ஏற்பட்டு விடுகிறது. இத்தகைய பலவீனங்களிலிருந்து வாக்காளர் ஒவ்வொருவரும் தம்மை விடுவித்துக் கொள்வதோடு, முற்போக்கான அப்பழுக்கற்ற சோஷலிஸ சமுதாய அமைப்புக்கேற்றவாறு தங்களுடைய அகவாழ்க்கையையும் புற வாழ்க்கையையும் செழுமைப்படுத்தத் தகுதிப் படுத்திக் கொள்ள வேண்டும். ஏனெனில், வாக்கை கேட்பவர் எவரானாலும் வாக்கை உபயோகப்படுத்துவது நாம் விரும்பும் ஒரு சமுதாய ஆக்கத்திற்காகவேதான். எனவே, சிறந்த ஜனநாயகத்தின் முழுமை, வாக்காளர்களின் செழுமையைப் பொறுத்ததேயாம். இல்லையானால். பெர்னாட்ஷா சொன்னதற்கு இலக்கியமாகி விடும்.

"வாக்காளர்கள் முட்டாள்களாக இருந்தால், அவர்களால் தேர்ந்தெடுக்கப்பெற்றுச் சட்டசபைக்குச் செல்லுகிறவர்கள் அயோக்கியர்களாகத்தான் இருப்பார்கள்" என்பது பெர்னாட்ஷாவின் வாக்கு. இங்ஙனம் இருக்க யார் தாம் விரும்புவார்கள்?

# 7. *இரட்டை உருளைகள்

**சு**தந்திர பாரத சமுதாயம் இனி வருங்காலத்தில், மக்களாட்சி முறையில், எல்லாரும்-எல்லாச் செல்வங்களும், பெற்று வாழும் சமநிலை சம வாய்ப்புச் சமுதாயமாக-பூரண ஜனநாயக சோஷலிச அமைப்புடையதாக இருக்கவேண்டும் என்பது நம்முடைய திட்டம். இந்த ஜனநாயக சோஷலிச சமுதாயத்தை உருவாக்குவதில் ஆட்சிக்கு இருக்கும் பொறுப்பைவிட இந்த நாட்டுக் குடிமக்களுக்கு இருக்கும்

* மண்ணும் விண்ணும்

பொறுப்பு அதிகம். தனி வாழ்வு உணர்ச்சியிலிருந்து மக்கள் கொஞ்சம் கொஞ்சமாக விலகிச் சமுதாயப் பொதுவாழ்வு உணர்ச்சிக்குத் தங்களைத் தகுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். இந்த முறையில் மக்களை வளர்த்துப் பக்குவப் படுத்தவே ஊராட்சி மன்றங்களும், ஊராட்சி மன்ற ஒன்றிப்புக்களும்.

தமிழர் வரலாற்றில் பஞ்சாயத்துசபை-ஊராட்சி மன்றம் புனிதமான ஒரு பேரவையாகவே இருந்து வந்தது. அவ்வாறே கருதப்பெற்று வந்தது. அண்ணல் சிவபெருமானுக்கும், ஆரூரருக்கும் இருந்த வழக்கைத் திருவெண்ணெய் நல்லூர் பஞ்சாயத்துச்சபை விசாரித்தது என்றால் பஞ்சாயத்தின் தொன்மைக்கும் தூய்மைக்கும் வேறென்ன சான்று வேண்டும்?

பல சுவர்கள் கடந்த-வீதி வேற்றுமைகளைக் கடந்த இவர் அவர் என்ற இரண்டாட்டு எண்ணங்களைக் கடந்த கிராம ஒருமைப்பாட்டின் சின்னமே பஞ்சாயத்து. அந்நிய ஆட்சியினாலும், பயன் தராத-பழங்கால சமுதாய அமைப்பின் வழிவழி வந்த பழக்க வழக்கங்களாலும் வலிவும் பொலிவும் இழந்து நிற்கும் கிராமத்திற்குப் புத்துணர்வும் புதுப் பொலிவும், புது வாழ்வும் கொடுப்பது பஞ்சாயத்து. இக்கருத்துடனேயே நமது அரசு பஞ்சாயத்தை-பஞ்சாயத்துக் கூட்டு மன்றங்களை அதிகமாக ஊக்குவிக்கின்றது; ஆனாலும் எதிர்பார்த்த அளவிற்குப் பஞ்சாயத்து முறை ஆழமாகவும் அகலமாகவும் செயற்பட்டிருக்கிறதா என்பதை நாம் ஆராய்ந்து பார்க்கவேண்டும்.

ஆண்டுதோறும் ஒவ்வொரு பஞ்சாயத்தும் செய்து முடித்திருக்கிற வேலைகளை-நடைமுறைகளைப் பஞ்சாயத்துக் கூட்டு மன்ற ஆணையர் விமரிசனம் செய்து, அதைக் கூட்டுமன்றத்தில் வைத்து, அதன்பின் வட்டாரப் பஞ்சாயத்து அலுவலர்களுக்கு அனுப்பி, அவர்களின்

குறிப்புக்களைப் பெற்றுக் குறைபாடுகளை நீக்கி நிறைவு படுத்தினால் இன்னும் நன்றாக இருக்கும். பஞ்சாயத்து ஆட்சி என்று வருகின்றபொழுது, மேலேழுந்த வாரியாக வரி வசூலித்தல், செலவு செய்தல் ஆகிய இரண்டை மட்டுமே வைத்துப் பஞ்சாயத்தின் நடைமுறைகளை அளந்து பார்க்கக் கூடாது. பஞ்சாயத்து மூலம் வளரவேண்டிய ஆட்சித்திறன்-உற்பத்திப் பெருக்கம், கிராம ஒற்றுமை, நாட்டுப்பற்று, கிராம மக்களிடையே உடன் பிறப்புணர்ச்சி, கல்வி வளர்ச்சி சிறந்த-காலத்திற்கேற்ற மனவளர்ச்சி ஆகியன மக்களிடையே வளர்ந்து வலுப்பெற்றிருக்கின்றனவா என்பதையும் பார்க்க வேண்டும். இத்தகு தூய-சிறந்த பஞ்சாயத்து, சமுதாயம் என்ற பெருவண்டியின் ஓர் உருளையாகும்.

"கூடித்தொழில் செய்தால் கோடி லாபம் பெறலாம்" என்கிறார் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன். கூடி வாழ்ந்தால் நாம் கோடி நன்மை பெறலாம். 'குறைந்தகாலத்தில்-குறைந்த செலவில்-குறைந்த உழைப்பாற்றலின் மூலம் மற்றவர் களுக்குக் காழ்ப்போ கசப்போ, ஏற்படுத்தாமல் பொருள் தேடிக்குவிக்கும் புதிய முறையைக் கையாள வேண்டும். அந்தப் புதிய முறையின் பெயரே கூட்டுறவு. கூடிவாழ்தல் மனித சமுதாயத்தின் சிறப்பொழுக்கம், அதனால்தான் மனிதர்களைச் சுற்றியே நாடும் நகரமும் எழுகின்றன. அவ்வாறு கூடிவாழ்கின்ற வாழ்க்கை முறையை மேற் கொள்ளுவதன் மூலம் தனிமனிதனும் பண்புகள் நிறையப் பெற்றுப் பக்குவமடைகிறான். அத்தோடு சமுதாயமும் பொருள்வளம் பெற்றுப் பொலிவுறுகிறது. குற்றங்கள் குறை கின்றன-காவல்கள் நீங்குகின்றன.

நம்முடைய சமுதாய அமைப்பில் கூட்டுறவு இயக்கம் ஒரு முக்கியமான-பொறுப்பு வாய்ந்த இடத்தைப் பெறுகிறது. ஒரு கிராமத்தில் இன்று 600 வீடுகள் இருக்கின்றன என்றால் 40 அல்லது 50 கடைகள் இருக்கும். அத்தனை கடைகளுக்கும் இடவாடகை, ஊழியர்கள், மேலாளர்கள், தனித்தனியே

அன்றாடச் செலவுகள், தனித்தனிக் கணக்குகள் இத்துணையையும் கணக்குப் போட்டுப் பார்த்து, அத்துணை பேரும்-அந்தக் கிராமத்தில் உள்ள எல்லா மக்களும் சேர்ந்து ஒரு கூட்டுறவு பண்டக சாலையை வைத்தால் எத்துணைப் பொருள் மிச்சமாகும் என்று கணக்கிட்டுப் பார்க்கவேண்டும்.

மேலும், இன்று பல கடைகளில் பாத்திரங்களில் பல பண்டங்கள் இல்லாமலே இருக்கும். இதற்குக் காரணம், போதிய முதலீடு இன்மையே! இதுபோலவேதான் விவசாயமும், வேறுபல துறைகளும். பொதுவாகப் பலரிடம் தனிமனித உணர்ச்சிகள் வளர்ந்திருப்பதால் அவர்களும் அல்லற்படுகிறார்கள்-சமுதாயத்தையும் அல்லற்படுத்து கிறார்கள். பலரிடம் சிறிய அளவில் சிதறிக் கிடக்கின்ற மூலதனத்தைக் கூட்டுறவு மூலம் ஒன்றாக்கிப் பெரிதாக்க-பெரும் மூலதனமாக்க முடியும். பலர் முயன்று, நிறைந்த செலவில் குறைவான இலாபத்தைப் பெறுவதோடன்றிச் சிலரே இலாபத்தைப் பெற்றுப் பலர் பெறாமல் இருப்பதால் ஏற்படுகின்ற பொருளியல் ஏற்றத்தாழ்வு அவ்வழி ஏற்படு கின்ற விருப்பு வெறுப்புணர்ச்சிகள் ஆகியவற்றிலிருந்தும் விடுதலை பெற, சிலர் முயன்று குறைந்த செலவில் நிறைந்த லாபத்தைப் பெற்று அன்போடியைந்த உறவு வாழ்க்கை வாழத் துணை செய்யும் கூட்டுறவு வாழ்க்கை. அதற்கு கூட்டுறவு வாழ்க்கை புதிய பாரத சமுதாயம் என்ற பெரு வண்டியின் இன்னோருளையாகும். பஞ்சாயத்து, கூட்டுறவு என்ற ஈருளைகளையும் இணைக்கின்ற அச்சு மனங்கலந்த — உளமொத்த நம்பிக்கையேயாகும். உருளைகள் அச்சோடு பொருந்தி — அவை சுழலும்போது கழன்று ஓடாதவாறு தடுத்து நிறுத்தும் அச்சாணிகள் தந்நலத் துறவும் பிறர் நலம் பேணும் வெற்றியுமே யாகும். இத்தகு சமுதாயம் பெரு வண்டியை இணைத்துக் கோத்துச் செலுத்த சுதந்திர பாரதக் குடிமக்களாகிய நாம் அனைவரும் தம்மைத் தகுதிப் படுத்திக் கொள்வோமாக!

# 8. பஞ்சாயத்து ராஜ்

இன்று நாடு முழுவதும் "பஞ்சாயத்து ராஜ்" பற்றிப் பேசப்படுகிறது. ஆனால் விவாதம் செய்திகளுடன் பொருத்தியதாக - விவரமாக இல்லை என்பது வருந்தத் தக்கது. நாட்டின் நாடி நரம்புகள் பஞ்சாயத்துகளே; பஞ்சாயத்துகள் வலிமை பெற்றாலே கிராமங்கள் வளரும்; நாடு வளரும். அண்ணல் காந்தியடிகள் கண்ட கிராம சுயராஜ்யம் தோன்றும். இதில் இரண்டுவிதக் கருத்திருக்க நியாயமில்லை.

## இன்றைய பஞ்சாயத்துகள் நிலை

இன்றைய பஞ்சாயத்துகள் எந்தவிதமான பொறுப் புள்ள நிர்வாகமும், இல்லாதவை. துப்புரவுப்பணி மின்விளக்கு எரித்தல் ஆகியவை மட்டுமே இன்றைய பஞ்சாயத்துகள் செய்கின்றன. இவற்றையும் கூடப் பல பஞ்சாயத்துகள் செய்ய நிதி வசதி இல்லை. நிதி நிர்வாகமும் பஞ்சாயத்தினிடம் இல்லை. உண்மையைச் சொன்னால் பஞ்சாயத்துத் தலைவர் பஞ்சாயத்து ஒன்றிய ஆணையருக்கு எழுத்தர் மாதிரிதான். இந்த நிலைமைகள் மாற்றப்பட வேண்டும் என்பதில் நாட்டு வளர்ச்சியில் அக்கறையுடைய அனைவருக்கும் உடன்பட்ட கருத்திருக்கும் என்று நம்பு கின்றோம்.

## மதிப்பு மிக்க தகுதி நிலை

முதலில் பஞ்சாயத்துக்கு மதிப்புமிக்க தகுதிநிலை வழங்க வேண்டும். ஒவ்வொரு பஞ்சாயத்தையும் நிதிநிலை யில் தற்சார்பானதாக்கவேண்டும். பஞ்சாயத்தின் நிதி நிலையை வலிமைப்படுத்த முதலில் திட்டங்கள் வேண்டும். கிராமப் பஞ்சாயத்து எல்லையில் உள்ள நிர்வாகங்களும் பஞ்சாயத்தில் நேரிடையானவையாகவும் ஒரு சில இனங்கள்

பஞ்சாயத்தின் கவனத்திற்குரியனவாகவும் அமைய வேண்டும்.

1. கிராம எல்லையில் உள்ள அனைத்து நீர் நிலைகளும் பஞ்சாயத்தின் நிர்வாகத்தின் கீழ் வரவேண்டும்.

2. அனைத்துச் சாலைகளும் பஞ்சாயத்தின் நிர்வாகத் தின்கீழ் வரவேண்டும். (நெடுஞ்சாலைகளும் - தேசிய நெடுஞ் சாலைகளும் தவிர) அனைத்து உரிமங்களும் வழங்கும் உரிமை பஞ்சாயத்திற்கே இருக்க வேண்டும்.

(அ) மீன் பாசிக் குத்தகைகள்.

(ஆ) நெடுஞ்சாலை மரக்குத்தகைகள் இன்ன பிறவற்றுக்கும் உரிமம் வழங்கும் உரிமை வேண்டும்.

நெடுஞ்சாலைத் துறைக்கும் பொதுப்பணித் துறைக்கும் கிராமம், ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட தொகை செலுத்த வேண்டும். மீன்பாசிக் குத்தகை, நெடுஞ்சாலை மரங்கள் ஏலம் முதலியவற்றைப் பிரதிநிதிகள் முன் ஏலம் விடவேண்டும் என்ற நியதி வகுக்கலாம்.

4. மேலும் அடியிற் கண்டுள்ள வருவாய் வரக்கூடிய அமைப்புகளை அமைக்கவும் நிர்வகிக்கவும், அதன்மூலம் பஞ்சாயத்தின் நிதி ஆதாரங்களை வளர்த்துக் கொள்ளவும் ஊராட்சி மன்றங்களுக்கு உரிமையும் அதிகாரமும் இருக்க வேண்டும்.

(அ) சந்தை, (ஆ) பேருந்து நிலையம், (இ) ஆட்டி கூடம், (ஈ) இடுகாடு, (உ) திருமணமண்டபம், (ஊ) கால்நடை அடைப்புக் கூடம் (பவுண்டு).

5. ஒவ்வொரு ஊராட்சி மன்றத்திற்கும் செயலராக, கிராம நல அலுவலர் (RWO) அயல் வழிப் பணியில் அரசு தர வேண்டும்.

6. செயலரின் நியமனம், மாறுதல், ஊராட்சி மன்றத்தின் இசைவுடனே செய்யப்படவேண்டும். அரசு

கொடுக்கின்ற நால்வர் கொண்ட பட்டியலிலிருந்து ஒருவரை ஊராட்சி மன்றம் நியமித்துக் கொள்ள வேண்டும்.

அ. ஊராட்சி மன்றம் தனக்கு ஒத்திணைந்து வரக் கூடிய ஒருவரை நியமித்துக் கொள்ளும் உரிமை பெற்று இருக்கவேண்டும்.

ஆ. அப்படி நியமித்துக் கொள்ளும் அலுவலரின் மாறுதல் ஊராட்சி மன்றத்தின் இசைவைப் பொருத்ததாக அமைய வேண்டும்.

இ. மற்றும் ஒரு முழு நேர எழுத்தர் ஊராட்சி மன்றத் திற்கு நியமனம் செய்யவேண்டும்.

ஈ. மேலும் ஒரு கடைநிலை ஊழியர் பல்துறைப் பணியாளராகப் பணி செய்யக் கூடியவர் தேவை.

## மைய—மாநில அரசுகளின் உதவி

7. பஞ்சாயத்தின் நிதி ஆதார வளர்ச்சிக்கு, முதலில் மைய அரசும், மாநில அரசும் பங்களிப்புத் தொகை மான்யமாகத் தரவேண்டும்; நீண்டகாலக் கடனும் தந்து உதவ வேண்டும். நிதி ஆதாரங்களைப் பெருக்கிக் கொள்ளும் இனங் களுக்கு, மதிப்பீட்டின் அடிப்படையில் 75% தந்து உதவ வேண்டும். (50% மான்யம்; 25% நீண்டகாலக்கடன்) 25% ஊராட்சி மன்றத்தின் பொறுப்பாக அமையவேண்டும்.

8. ஊராட்சி மன்றங்கள் தற்சார்பான நிதி ஆதாரங் களை அடையும் வரையில், ஊராட்சி மன்றங்களுக்கு மாநில அரசு நடைமுறைச் செலவுக்கு மான்யமாக ஊராட்சியின் வருவாய் அடிப்படையில் 1:2 தந்து உதவ வேண்டும். இவ்வாறு ஐந்து ஆண்டுகளுக்குத் தந்து உதவவேண்டும்.

## பஞ்சாயத்தின் நிர்வாகத்தில் வரவேண்டியவை

9. பஞ்சாயத்துகளின் நிர்வாகப் பொறுப்பில் வரவேண்டியவை:

1. கிராமத்தில் உள்ள கல்வி நிறுவனங்கள்.

அ. தனியார் பள்ளியாக இருந்தாலும் அந்தப் பள்ளியின் ஆட்சிக் குழுவில் பஞ்சாயத்துத் தலைவர் அலுவல் ரீதியாக இடம் பெறவேண்டும்.

ஆ. பஞ்சாயத்து தலைவருக்கு, பள்ளியைப் பார்வையிட்டு வழிகாட்ட உரிமை இருக்க வேண்டும்.

2. மருத்துவ மனைகள் (கல்விக்குக் கூறியது இதற்கும் பொருந்தும்.)

3. நூலகம், 4. குடி தண்ணீர் வழங்கல், 5. சுகாதாரம், 6. மின் விளக்குகள் எரித்தல், 7. கிராமப்புறச் சாலைகள்.

மற்றும் கிராமத்தில் எந்தவிதமான அரசு நிறுவனம் இருந்தாலும் அதில் ஊராட்சிமன்றத் தலைவர் பங்குபெறும் உரிமை இருக்கவேண்டும்.

கிராமத்தில் உள்ள அனைத்து அரசு நிறுவன அலுவலர்களும் ஊராட்சி மன்றத்தின் (பஞ்சாயத்தின்) ஆட்சிக்கு இணங்கி ஒத்துழைக்க வேண்டும்.

(மின்சார வாரியம், வேளாண்மை துறை, கால்நடைத் துறை, நெடுஞ்சாலைத் துறை, கிராம நிர்வாகம் முதலியன).

10. கிராமங்களில் எந்த ஓர் உடமையும் விற்பனை முதலியவை செய்வதைப் பதிவு செய்யும்போது, பதிவுத்துறை ஊராட்சி மன்றத்தின் சான்று கேட்டுப் பெற்றுச் செய்ய வேண்டும்.

11. மற்ற அதிகாரங்கள்:

1. கிராமத்தில் நடைபெறும் கள், சாராயம் தொடர்புடைய குற்றங்கள், விபசாரக் குற்றங்கள், சில்லறை விஷமங்கள், சில்லறைச் சச்சரவுக் குற்றங்கள், சுற்றுப்புறச் சுகாதாரக் கேடு செய்தல். இவைகளுக்கு ஊராட்சி மன்றங்களே விசாரித்துத் தண்டம் விதிக்கும் அதிகாரம் இருக்கவேண்டும்.

*2. மிகக் கடுமையான குற்றங்களைக் காவல் துறைக்கு Refer பண்ணும் உரிமையும் பஞ்சாயத்தில் இருக்க வேண்டும்.*

**3. ஊராட்சி மன்றத்தின் தேர்தல் நிர்வாகம் அரசியல் கட்சிகளுக்கு அப்பாற்பட்டதாக அமையவேண்டும்.**

*அங்கீகரிக்கப்பட்ட அரசியற் கட்சி. அதன் பிரதிநிதியை அந்தக் கட்சியே பஞ்சாயத்து அமைப்பிற்குத் தேர்ந்தெடுத்து அனுப்புவதன் மூலம் பஞ்சாயத்தைக் கட்சிச் சார்பற்றதாக ஆக்க இயலும். இந்த உறுப்பினர்கள் எண்ணிக்கை, மக்களால் தேர்ந்தெடுக்கப் பெறும் எண்ணிக் கையில் 4:1 என்ற விகிதத்தில் இருத்தல் நல்லது. அல்லது மூன்றில் இரண்டு பங்கு உறுப்பினர்கள் மக்களால் தேர்ந் தெடுக்கப் பெற்ற பிரதிநிதிகளாக இருத்தல் வேண்டும்.*

## அரசியல் சட்ட அந்தஸ்து

*12. பஞ்சாயத்து சபைக்கு, அரசியல் சட்ட* (Constitutional status) *அந்தஸ்து கொடுக்க வேண்டியது அவசியம்.*

## தேர்தல்கள்

*13. பஞ்சாயத்துக்களின் தேர்தலை எந்தக் காரணத்தை முன்னிட்டும் ஒத்தி வைக்கக் கூடாது. பஞ்சாயத்துத் தேர்தல் முற்றிலும் மறைமுகத் தேர்தலாக இருத்தலே நல்லது. அதாவது, வாக்களிப்பது மட்டுமல்லாமல் வாக்குகளை எண்ணுவதிலும் மறைமுகம் நடைமுறைப் படுத்தப்பெறுதல் வேண்டும். அதாவது, வார்டு வாரியாக வாக்குகளை எண்ணாமல் எல்லா வார்டு வாக்குகளையும் ஒன்றாகக் கொட்டி கலந்து எண்ணுதல் வேண்டும். பஞ்சாயத்தின் தேர்தல் ஐந்தாண்டுக்கு ஒருமுறை கட்டாயம் நடத்த வேண்டும். பஞ்சாயத்துத் தேர்தல், தேர்தல் கமிஷனின் கண்காணிப்பில் நடப்பதில் தவறில்லை.*

## நிதிக் கழகம்

*14. பஞ்சாயத்துகள், தங்களுடைய தேவைக்கேற்பவும், வசதிக்கேற்பவும் நிதி உதவிகள் கடனாகப் பெற்று, நிதி ஆதாரங்களை வளர்த்துக் கொள்ள "நிதிக் கழகம்" ஒன்று அமைப்பதும் அவசியமானது.*

## பொறியாளர் நியமனம்

*15. (அ) பஞ்சாயத்துகளின் பணிகளுக்கு மதிப்பீடுகள் அளவை செய்ய மாநில அரசு, ஒரு பொறியாளர் பட்டியல் தயாரித்து அறிவிக்க வேண்டும்.*

*(இந்தப் பட்டியலில் உள்ள ஒருவர் மூலம் பஞ்சாயத்து தனது பணிகளை நிறைவேற்றும்.)*

## கணக்குத் தணிக்கை

*(ஆ) பஞ்சாயத்துக் கணக்குத் தணிக்கைக்கு மாநில அரசு ஒரு தணிக்கையாளர் பட்டியலை அறிவிக்க வேண்டும்.*

*(இந்த பட்டியலில் இருந்து ஒருவரை பஞ்சாயத்து தேர்ந்தெடுத்துத் தனது பணிக்குப் பயன்படுத்தும்.)*

## தலைவர் மீது நடவடிக்கை

*(இ) தணிக்கை அறிக்கை, மாவட்டப் பஞ்சாயத்து உயர் அலுவலராக இருக்கும் மாவட்ட ஆட்சித் தலைவரின் நடவடிக்கைக்கு உரியது. பஞ்சாயத்துகளின் மீது, பஞ்சாயத்துத் தலைவரின்மீது நடவடிக்கை எடுக்கும் அதிகாரம் மாவட்ட ஆட்சித் தலைவருக்கு உண்டு.*

## படிப்பணம்

*16. ஊராட்சி மன்றத்தின் உறுப்பினர்களுக்குக் கூட்ட இருக்கைக்குரிய படிப்பணம்* (Sitting Fees) *ரூ. 20/- தரவேண்டும்.*

*17. பஞ்சாயத்தின் தணிக்கை அறிக்கைகள் மீது கடுமையான குற்றச்சாட்டுகள் இருந்தால் மாவட்ட ஆட்சித் தலைவர் நடவடிக்கை எடுக்கவேண்டும்.*

## பஞ்சாயத்தே அடிப்படை

*நாட்டில் மக்களாட்சி முறையின் வளர்ச்சிக்குக் கிராமப் பஞ்சாயத்து ஆட்சியே அடிப்படை, அது போலவே கிராமப் பஞ்சாயத்து ஆட்சி முறையின் சிறப்பே, நாட்டின் கலசமாகவும் அமைய வேண்டும். கிராமங்கள் நல்ல மக்களாட்சி மரபுகளைப் பேணி, தற்சார்பான வளத்தைப் பெற்றுப் பொலிவுடனும் வளத்துடனும் விளங்கினால்தான் குடியரசுத் தத்துவம் வெற்றி பெறும். இம்முயற்சியில் அனைவரும் ஈடுபடுதல் வேண்டும்.*

## நிர்வாக அமைப்புகள்

*வளமெல்லாம் இன்று உருப்படியாகப் பயன்பட வில்லை. நாட்டின் நிர்வாக ஆட்சி அமைப்பில் மைய, மாநில அரசுகள் என்ற இருநிலைகள் மட்டுமே உள்ளன. அல்லது இவை இரண்டு மட்டுமே என்று எண்ணுவது பிழை. உண்மையில் நாட்டின் நிர்வாக மையங்கள் மூன்று. கிராமம், மாநிலம், மையம். இவை மூன்றும் அதனதன் எல்லைக்கேற்ப அதிகார உரிமங்களைப் பெறுவதே சிறந்த மக்களாட்சியின் சிறந்த நடைமுறை. மூன்றும் ஒரே சங்கிலியில் உள்ள கணைகள். இவற்றிற்குள் முரண்பாடுகள் அதிகாரச் சண்டைகள் வரக்கூடாது.*

## காலத்தின் கட்டாயம்

*கிராமப் பஞ்சாயத்துகளே மாநில அரசுகளையும் மைய அரசினையும் தாங்கும் நிலையினவாக வேண்டும்; தாங்க வேண்டும். மைய அரசைத் தாங்க வேண்டும். இது அரசியல் சார்ந்த கடமை; பொறுப்புகள் வழிப்பட்ட*

பரிணாம வளர்ச்சி. கிராமப் பஞ்சாயத்துகள் கிராமக் குடியரசுகளாக விளங்குவது காலத்தின் கட்டாயம்.

# 9. *கூட்டுறவு இயக்கம்

**கூ**ட்டுறவு ஒரு வாழ்க்கைத் தத்துவம்; ஒரு வாழ்க்கை முறை. மனிதகுலத்தின் மேம்பாடு கூட்டுறவின் மூலம்தான் நிகழ முடியும். கூட்டுறவு மனித குலத்தை அகநிலையிலும் புறநிலையிலும் வளர்த்துச் செழுமைப்படுத்தி வளர்க்கும். இந்திய நாட்டில் சோசலிச சமுதாயத்தை-பொதுவுடைமைச் சமுதாயத்தைக் கூட்டுறவின் மூலமே அமைக்கமுடியும். இந்த மகத்தான சாதனையைக் கூட்டுறவின் மூலம் சாதிக்க வேண்டும் என்றால் கூட்டுறவுக் கல்வி, கூட்டுறவுச் சிந்தனையை நிறைய வளர்த்து நமது மக்களை இயல்பான கூட்டுறவாளர்களாக வாழப் பழக்கவேண்டும். ஒருவருக் கொருவர் உதவியாக இருப்பது அறம். ஒழுக்கம், கடமை, தவிர்க்க இயலாதது என்ற கொள்கையை மக்கள் தங்களுடைய வாழ்க்கையின் கொள்கையாக ஏற்றுக் கொள்ளும்படி செய்யவேண்டும்.

ஒருவருக்கும் மற்றொருவருக்குமிடையில் மாறுபாடுகள் முரண்பாடுகள் தோன்றும். இதுவும் இயற்கை. மானிடப் படைப்பு ஒரே அச்சு வார்ப்பல்ல, அச்சுவார்ப்பாக இருந்தால் சுவையில்லை, உயிர்ப்புமில்லை. ஆயினும் மாறுபாடுகளை முரண்பாடுகளைப் பகையாக்கி வளர்த்து வாழ்க்கையைப் பாழடிக்கக்கூடாது. மாறுபாடுகளையும் முரண்பாடுகளையும் அலட்சியப்படுத்தி உரியவர்களை ஒதுக்கி அல்லது ஒதுங்கி வாழ்தலும் சமுதாயக் கேடேயாகும். ஆதலால் மாறுபாடுகளையும் முரண்பாடுகளையும் திறந்த மனத்துடன், பரந்த மனப்பான்மையுடன் ஆராய்ந்து ஆக்க

* கடவுளைப் போற்று! மனிதனை நினை!

வழிக்கு மாறுபாடுகளை, முரண்பாடுகளைப் பயன்படுத்த வேண்டும். இந்தச் சூழ்நிலைகளிலெல்லாம் மனிதர்களை மறந்துவிடவேண்டும். எது சரி? எது தவறு? எது மக்களுக்கு மிகுதியும் பயன் தரும்? என்பதே எண்ணமாக அமைய வேண்டும். இந்த எண்ணப்போக்கு மிகுதியும் வளர்ந்து பயன் தரவேண்டுமானால் "நான்" "எனது" என்ற செருக்குணர்வு அழியவேண்டும். பெருமை என்பது மற்றவர்கள் தருவதே யன்றி தாமாக எடுத்துக் கொள்ளக்கூடியதன்று.

அடுத்து, அறிவார்ந்த நிலையில் கூட்டுறவு உணர்வு செயல்படுத்தப்படவேண்டும். ஒருவருக்கு ஒருவர் சிந்தனை செயலில் ஒத்துப்போதலில் தொடர்ச்சி இருக்கவேண்டும். ஒத்துப்போதலில் தொடர்ச்சி இருக்கவேண்டும். ஒத்துப் போதல் என்பது அருமைப்பாடுடைய நுண்ணிய வாழ்வியல் எதிலும் தொடர்ச்சி நீங்காமல் நிலவவேண்டும். முழுமையாக, வளர்ச்சியடையும் வரையில் தொடர்ச்சி தேவை, வளர்ந்த நிலையில் தொடர்ச்சி ஒழுக்கமாகவும் பழக்கமாகவும் அமைந்துவிடும். பலருடைய வாழ்க்கையில் உறவுகளில் செயல்முறைகளில் தொடர்ச்சி இன்மையாலேயே வெற்றி கிடைக்கவில்லை. சோறு சமைக்கும்பொழுது இடையிடை விட்டுச் செய்தால் அது சோறாக இருக்காது. ஏன் நம்முடைய உயிர்ப்பு நிலையை இடையீடு இல்லாத தொடர்ச்சியாக மூச்சுத்தானே பாதுகாத்து வருகிறது. ஒரு விநாடிகூட மூச்சு தானாக நிற்காது; நின்றால் கதை முடிந்தது. அதுபோல நமது பணிகளும் உறவுகளும் அமைய வேண்டும். அதனால்தான் திருக்குறளும் "உணர்ச்சி நட்பாங் கிழமை தரும்" என்றது.

அடுத்து கூட்டுறவின் தலையாய நோக்கம் மற்றவர் களுக்கும் பயன்படுதல் என்பதேயாகும். மற்றவர்க்குப் பயன் படும் வழியில் நமக்குப் பயன்படலாம் என்பதே கூட்டுறவின் தத்துவம். கூட்டுறவின் இந்த அடிப்படையைச் சிந்தனை செய்ய வேண்டும். இந்தச் சிந்தனை நமது கூட்டுறவாளர் களிடையே இருக்கிறதா? என்பதே ஐயப்பாடு. இன்று கடன்

வாங்கலாம் என்பதற்காகவும் கூட்டுறவு சங்கத்தில் பலர் சேர்கிறார்கள். ஆனால் கடனைத் திருப்பிச் செலுத்த வேண்டும் என்ற எண்ணம் வளரவில்லை. கூட்டுறவு சமூக நிறுவனம். குடியரசு நாட்டில் ஆட்சியும் அரசும் மக்களுடையது. நாட்டின் மூலதனத்தை நாம் விரும்பிய வாறெல்லாம் பயன்படுத்தி அழித்தால் அந்நிய நாடுகளில் கடன் வாங்க வேண்டியதுதான்! வேறுவழி என்ன? உண்மையில் கடனைத் திருப்பிச் செலுத்த இயலவில்லை என்றால் அதை எப்படி நிர்வகிப்பது என்ற பிரச்சனையைக் கூட்டுறவாளர்களிடம் விட்டுவிட வேண்டும். அவர்கள் விரும்பி, தேவை என்று கேட்டால் அரசு உதவி செய்யலாம். ஆனால், நமது நாட்டில் "கடன் வாங்குவதே திருப்பிக் கொடுக்காமல் இருப்பதற்காகத்தான்" என்ற பழக்கத்தை உருவாக்க மக்களில் ஒரு சிலரும், அரசும் முயன்று ஓரளவு வெற்றி பெற்றுவிட்டார்கள்! இந்த வெற்றியில் மக்களின் ஏழ்மையைத் தொடர் கதையாக்கி விட்டார்கள்.

அடுத்து, கூட்டுறவு நிறுவனங்கள் சீராக நடைபெற அரசின் கண்காணிப்பு அவசியம். ஆனால், எந்தக் காரணத்தை முன்னிட்டும் கூட்டுறவு, அரசின் பிறிதொரு அலுவலகமாக மாறிவிடக்கூடாது. கூட்டுறவுத் துறையில் பணிசெய்யும் அரசு அலுவலர்கள், தணிக்கையாளர்கள் புலனாய்வு காவல்துறையினரைப் போலவும் "பிரேத விசாரணை" செய்பவர்கள் போலவும் ஆகிவிடக் கூடாது. அவர்கள் கூட்டுறவாளர்களுடன் இயல்பாகக் கலந்து நின்று பழகித் தவறுகள் நிகழ வாய்ப்பில்லாமல் தடுக்க வேண்டும். இல்லை! நிறைகளின் வழியில் இயக்கப்படுவதால், குறைகள் நிகழவே வாய்ப்பில்லாமல் தடுக்கப்படுதல் வேண்டும். யாரும் யார்மீதும் எளிதில் குற்றச்சாட்டுக்கள் சுமத்தலாம். அந்தக் குற்றங்கள் நிகழாமல் தற்காக்க தடுக்க அரசு அலுவலர்கள் எடுத்துக்கொண்ட அக்கறை என்ன? முன்முயற்சி என்ன? என்பதே கேள்வி. ஆதலால், கூட்டுறவுத் துறையில் பணி செய்யும் அரசு அலுவலர்கள் எண்ணிப் பார்க்கவேண்டும்.

குடியாட்சி என்பது மக்களால் ஆளப்படுவது. அதற்கு ஏற்ப, மக்களே ஆட்சித்திறன் உடையவர்களாக ஆகக் கூட்டுறவைவிடச் சிறந்த சாதனம் இல்லை. இந்தக் கூட்டுறவில் அரசு நேரிடையாகவோ மறைமுகமாகவோ தலையிடுதல் அறவே தவிர்க்கப்படுதல் வேண்டும். கூட்டுறவு இயக்கத்தில் அரசியல் கட்சிகள் கட்சி உணர்வுகள் புகுந்து விட அனுமதித்தல் தற்கொலைக்குச் சமம். கூட்டுறவாளர்கள் அரசியல் வாதிகளாக இருக்கலாம். தவறில்லை, ஆனால் அரசியலுக்குக் கூட்டுறவைப் பயன்படுத்தக்கூடாது. அரசியல் வாதிகள் கூட்டுறவாளர்களாக இருக்கலாம்; இருக்க வேண்டும். ஆனால் கூட்டுறவைப் பொதுமையானதாகப் பாதுகாக்கவேண்டும்.

உலக இயக்கத்தின் உயிர்ப்பு உழைப்பில்தான் இருக் கிறது. கூட்டுறவாளர்கள் உழைப்பாளர்களாக, உருமாற்றம் பெறவேண்டும். உழைக்காமல் உண்ணுவது காலப் போக்கில் மனிதனையும் கெடுத்து பொருள்களையும் அழித்துவிடும். உழைத்து உண்பதைக் கட்டாயமாக்கவேண்டும். எப்படி யாவது பணம் வருவது என்ற வாழ்க்கை நாட்டுக்கு உகந்த தன்று.

இந்தக் கூட்டுறவு வாரத்தின்போது சபதம் ஏற்போ மாக! உண்மையான கூட்டுறவுத் தத்துவத்தின் வழியில் கூட்டுறவாளர்களாக வாழ்வோம்! உழைப்போம்! உண் போம்! கதிரவன் ஒளியைப் பிரதிபலிக்கும் நமது கூட்டுறவுக் கொடியைப் போல, மக்கள் நலனைப் பிரதிபலிப்போமாக! பேச்சிலும் செயலிலும் கையோடு கை சேர்ப்பதால் கூட்டு உழைப்பு! உற்பத்திப் பெருக்கம்! இதுவே கூட்டுறவு! இந் நிலையை நமது வாழ்க்கையாக-உழைப்பாக மாற்றுவோமாக!

கு.XIII.6.

'மக்கள் சிந்தனை' 15-11-81

# 10. *கூட்டுறவுப் பண்பு

நமது பாரதநாடு அடிமைப்பட்டுக் கிடந்த காலத்தில் சமுதாயத்தைப் பிரித்து வைத்தால்தான் தாங்கள் ஆதிக்கம் செலுத்த முடியும் என்று கருதிப் பிரித்துவைத்தார்கள்.

பொதுவாக, கருத்து வேறுபாடுகள் தோன்றுவது இயல்பு; தவிர்க்க முடியாதது. நீண்ட எதிர்கால இலட்சியங் களை மனத்தகத்தே கொண்டு, வேறுபாடுகளை மறந்து ஒன்று படுவது நாட்டின் முன்னேற்றத்திற்கு மிகவும் இன்றியமை யாததொரு பண்பாகும். நாம் சில ஆண்டுகள் கூட்டுறவு இயக்கத்தில் ஈடுபட்டுக் கூட்டுறவுப் பண்பிலே திளைத்தால் கோபதாப உணர்வுகள் கூடக் குறைந்து மறைந்துவிடும். கூட்டுறவு இயக்கம் நம்மைப் பண்படுத்துகிறது- பக்குவப் படுத்துகிறது. 'நல்வாழ்வுக் கூட்டுறவுச் சங்கம்' (Better living Co-operative) என்ற ஒரு புதுவகையான கூட்டுறவுச் சங்கம் ஆங்காங்கு ஏற்படுத்தப்பெற்று வருகிறது. அம்மாதிரிச் சங்கம் கிராமங்களில் பரவலாக ஏற்பட்டுவிட்டால் கிராம மக்களிற் பலர் வழக்கு மன்றங்களுக்குச் செல்வது கூடத் தவிர்க்கப் படும்.

கூட்டுறவு இயக்கங்களில் ஈடுபடுகிறவர்கள் சாதாரண சராசரி மக்களின் நிலையை நன்றாக அறிந்திருக்க வேண்டும். சமூகத்தை ஒரே மாதிரியாகக் கருதுகிற உணர்ச்சி கூட்டுறவு இயக்கத்தினாலேயே ஏற்படும்.

சமுதாயத்தைப் படிப்பிப்பது கூட்டுறவு இயக்கத்தின் தலையாய பண்பாகும். வளர்கின்ற மனித சமுதாயத்திற்கு ஜனநாயகப் பண்பும், கூட்டு வாழ்க்கைப் பண்பும், சேவை உணர்வும் இன்றியமையாதன.

* பொங்கல் பரிசு

கோயில்கள் கூட்டுறவு இயக்கங்கள், பஞ்சாயத்து மன்றங்களிற் பங்கேற்பவர்கள் அழுக்காறு, விருப்பு, வெறுப்புணர்வுகள் இல்லாதவர்களாக இருக்கவேண்டும். இவற்றிற்கெல்லாம் மேலாக மனச்செழுமையுடையவர்களாக இருத்தல் வேண்டும். இங்கு வாழ்கின்றவர்கள் எல்லாரும் வாழும் உரிமை பெற்றவர்கள். **இந்தியாவின் குடிமகன் ஒவ்வொருவனுக்கும் வாழ்வுரிமை அளிப்பதே கூட்டுறவு இயக்கத்தின் இலட்சியம்.** கூட்டுறவு இயக்கத்தின் மூலம் காந்திய தத்துவங்களை வளர்த்து நாம் பயன்பெற முடியும்.

வரியால் விலைவாசிகள் உயர்ந்து விட்டன என்கிறார்கள். இன்று பொதுவாக, உற்பத்தியாளர்கள் எண்ணிக்கையை விட வியாபாரிகளின் எண்ணிக்கையே உயர்ந்திருக்கிறது. சரக்குகள் பல கைம்மாறுவதால் நிர்வாகச் செலவு பல மடங்கு பெருகுகிறது. உற்பத்தியாளர்கள், வாங்குபவர்கள் கூட்டுறவுச் சங்கங்களின் மூலம் இந்த விலைவாசி உயர்வை ஓரளவு தவிர்க்கமுடியும்.

கூட்டுறவு இயக்கத்தில் நுழைகிறவர்கள் ஒவ்வொருவரும் நான் இந்தக் கூட்டுறவுக் குடும்பத்தின் ஓர் அங்கத்தினன் என்ற தூய்மையான எண்ணத்தோடு நுழைய வேண்டும். உற்பத்தியாளர் நான் உற்பத்தி செய்கின்ற பொருள்களைக் கூட்டுறவுச் சங்கத்திற்குத்தான் விற்பேன் என்று உறுதி எடுத்துக் கொள்ள வேண்டும். தங்கட்குத் தேவையானவற்றைக் கூட்டுறவு சங்கங்கள் மூலமாகவே வாங்கவும் உறுதி கொள்ளவேண்டும். கூட்டுறவு இயக்க அங்கத்தினரிடையே சேமிப்பு உணர்ச்சி பெருக வேண்டும்.

விலை உயர்கின்ற பொருள்களைப் பலநோக்குக் கூட்டுறவுச் சங்கங்களின் மூலம் வாங்கவும் விற்கவும் முடியும். இவ்வளவு வசதிகளும், வாய்ப்புக்களும் இருந்தும் நாம் பயன் படுத்திக்கொள்ளாமல் இருக்கின்றோம்.

கூட்டுறவாளர்கள் தங்கட்குள் மனம் விட்டுப் பேசிப் பழக வேண்டும். அவர்கள் தங்கட்குள் சந்தேக உணர்வு களுக்கு இடங்கொடுக்கக்கூடாது.

கூட்டுறவு இயக்கத்தின் மூலம் சமுதாயத்தில் உள்ள மிகச் சாதாரண மக்களுக்கும் வளமை தரமுடியும். நீண்ட கால அபிவிருத்திக் கடன்கள் வாங்குவதில் நமது மக்கள் இன்னும் போதிய அக்கறை காட்டவில்லை. கூட்டுறவுக் கடன் விஷயமாக இதைக்காட்டிலும் எளிமையாகச் சட்டங்கள் ஆக்கமுடியாது. கூட்டுறவு இயக்கத்தில் கடன் வாங்குவது மிகவும் சுலபமானது. கூட்டுறவு இயக்கத்தில் இன்று நமக்கு வாய்த்திருக்கிற அதிகாரிகள் அலுவலர்கள் எல்லோரும் இனிய பண்புடையவர்களாக பழகுதற்கு எளியவர்களாக இருக்கிறார்கள் என்பது பெருமகிழ்ச்சிக்குரியது.

இன்று, கூட்டுறவு இயக்கத்தில் ஈடுபட்டவர்களாவது வம்புவழக்குச் செய்து கொள்ளாமல் அன்பாகப் பண்பாகப் பழகி மற்றவர்களுக்கு முன்மாதிரியாக விளங்க வேண்டும். கூட்டுறவு இயக்கத்திற்கும் அதிகார உணர்வுக்கும் நெடுந் தொலைவு. நம்முடைய நாடு எல்லார்க்கும் எல்லா வாய்ப்புக் களும் வழங்குகிற ஒரு சுதந்திர சோஷலிசக் குடியரசு நாடாக விளங்க நாம் எல்லாரும் அன்பாகப் பண்பாக, அண்ணனாக, தம்பியாக மனச்சாட்சியோடு பழக வேண்டும்.

# 11. *கூட்டு வாழ்க்கை

**ம**ண்ணில் மனித வாழ்க்கை என்பது முன்மாற்றத்தை வளர்ச்சியை, முன்னேற்றத்தைக் குறிக்கோளாகக் கொண்டது. மானுடத்தின் குறிக்கோளை ஒரு வார்த்தையில் சொன்னால் "முன்னேற்றம்-PROGRESS" என்று கூறலாம். மனிதன் பொருளாதாரத் துறையிலும் சமய ஞானத் துறையிலும் பல அனுபவங்களைப் பெற்று வளர்ந்து முன்னேறி மகிழ்ச்சியை அனுபவிக்கிறான். அமைதியைக் காண்கிறான்.

* சிந்தனைச் சோலை

மனித வாழ்க்கை மேம்பட முதல் தேவை எது? அன்பா? அறிவா? அன்பு என்றே பதில் கூறுவீர்கள். இல்லை! இல்லை! அறிவே முதல் தேவை. ஏன் அறிவார்ந்த நிலையில் காட்டப்பெற்று வளராத அன்பில் இடைமுறிவு ஏற்படும். விலங்குகளிடத்தில் நிலவும் அன்பைப் பாருங்கள்! பிறப்பில் பரம்பொருள். அமைதியில் மாந்தர் யாவரும் ஒரு குலமே. மனிதன் அறிவியலடிப்படையில் அன்பு காட்டிப் பழகுவானானால் அன்பு தோன்றும்; வளரும்! ஆக, வாழ்க்கையை வாழ்வாங்கு வாழக் கற்றுக்கொடுப்பது அறிவியலே! இத்தகு ஒரு சிறந்த அறிவியலைப் பின்தங்கிய கிராமப்புற மக்களாகிய எங்களுக்கு அறிமுகப்படுத்தி அழைத்துச் செல்கின்ற மத்திய அறிவியல் மற்றும் தொழில் நுட்ப மையத்திற்கும், காரைக்குடி மத்திய மின்வேதியியல் ஆய்வக விஞ்ஞானிகளுக்கும் நன்றி; கடப்பாடு.

மானுடம் சிறக்க, மானுட சமுதாயம் தோன்ற-சிறப்புற இயங்க அறிவியலே அடிப்படை அதனாலேயே திருக்குறள் "அறிவு அற்றம் காக்கும் கருவி" என்றும், "அறிவுடையார் எல்லாம் உடையார்" என்றும் கூறியது. இன்று-நம்முடைய வாழ்க்கை சிறப்பாக அமைய என்ன அறிவு தேவை? இன்று மனித உலகம் அறிவியல் துறையில் அளப்பரிய சாதனையைச் செய்துள்ளது. அறிவியலும் தொழில் நுட்பமும் பொருளாதாரத்தை வளர்த்து நுகர்வுப் பொருள்களைப் பலவாக்கி, வாழ்க்கை அனுபவங்களை எளிமையாக்கி இன்பத்தையும் சேர்த்துள்ளது. ஆயினும் நாம் எந்த அளவுக்குப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறோம் என்று வினவினால் விடை எதிர்மறையே! ஏன் எதிர்மறைத் தன்மை வாய்ந்த விடை?

பல மனிதர்கள் தங்களுடைய முரண்டு தட்டிப்போன தன்மையை மாற்றிக்கொள்ள முன்வராமையினாலேயே முன்னேற்றம் தடைப்படுகிறது. எங்கு எல்லாம், நிர்வாணத் தன்மை வாய்ந்த சுயநலமும், ஆதிக்க மனப்பான்மையும்

ஆட்சி செய்கிறதோ, அங்கு தனி மனிதன் மற்றவர்களோடு மோதுதலே செய்வான்.

மனிதன் தனி ஒரு தீவு அல்ல. பல நீர்த் திவலைகளை உள்ளடக்கிய ஏரி அனையவன். மனிதனிடத்தில் ஒப்படைக்கப் பெற்றுள்ள வைப்பாகிய ஆற்றல், அறிவு, கருவிகள் அளப்பில; ஆனால் மனிதன் இவற்றை முழுமையாக நேற்றும் பயன்படுத்தவில்லை! இன்றும் பயன் படுத்தவில்லை! அது மட்டுமா? அவன் இயற்கையாகப் பெற்ற பெரும் வைப்புக் கருவிகளில்-திறன்களில் சிலவற்றை அழித்தும் கெடுத்தும் இருக்கிறான். மனிதன் பல தவறான திருப்பங்களை எடுத்து வாழ்க்கையின் இலக்கிலிருந்து நெடுந்தொலைவு விலகிச் சென்றுவிட்டான்! இயற்கையோடு இசைந்து வாழ்ந்து முன்னேறிச் செல்லாமல் இயற்கையோடு முரண்பட்டுத் துன்பத்தையும் அதிகமாகத் தேடிக் கொண்டு விட்டான்! இந்தத் தவறு நிகழ்ந்ததற்குக் காரணம் மனிதன் கூடிச் சிந்தனை செய்து, முடிவு எடுக்கும் மரபைக் கைவிட்டதுதான்! மனிதனின் கூட்டுச் சமூக வாழ்க்கையில் நாள்தோறும் கூட்டு ஞானத்தைக் கண்டு வளர்த்துக்கொண்டு பயனடைதல் வேண்டும்.

சமுதாய உணர்விலும் சமுதாய ஒழுக்க நலத்திலும் சிறந்து வளர்ந்தால்தான் அன்பு வளரும். அன்பினால் சமுதாயம் உருவாவதில்லை. சமுதாய உணர்வின் செழிப்பில் தான் அன்பு வளர்கிறது. சமுதாய நலஞ்சார்ந்த வாழ்க்கையில் தான் வெறுப்புக்கு மாற்று-மருந்து அன்பு ஒன்று ஆகும். இத்தகு சமுதாய நலங்காணும் வாழ்க்கையில்தான் பொறை யுடைமை, மன்னித்தல், துன்பம் செய்யாமை, அகிம்சை ஆகிய பண்புகள் நிலவும்.

இன்று நம்முடைய வாழ்க்கை சிறப்பாக அமைய உடனடியாகச் சமுதாய உணர்வும், அறிவும் தேவை. சமுதாய அமைப்புமுறைக் கட்டுமானத்தை-உருவாக்குவதே

முன்னேற்றத்திற்குரிய ஒரேவழி! ஒரே ஒருவழி! இன்று நாம் பரஸ்பரம் ஒருவருக்கொருவர் தீமை இழைத்துக் கொண்டு அழியும் 'பேய்களாக' (Devil) மாறிவருகிறோம். இல்லை, இல்லை! பேய்கள்கூட இங்ஙனம் தம்முள் தீமை செய்து கொள்வதில்லை! ஆனால் மானுடம் அவற்றைவிடவும் கீழிறங்கிவிட்டது! இன்று வாழ்க்கையில் எண்ணற்ற சிக்கல்கள் தோன்றியுள்ளன. இந்தச் சிக்கல்களுக்கெல்லாம் தீர்வுகாணச் சிந்திக்காமல் சாதிகள், மதங்கள் இவற்றில் தொடர்பான வேற்றுமைகளை வளர்ப்பதில் காலத்தை வீணடித்துக் கொண்டிருக்கின்றோம்.

காலம் அரிதானது. காலம் விண்ணில் சிறகு கட்டிக் கொண்டு பறக்கிறது. காலத்தை வீணாக்காது பயனுள்ள செய்யவேண்டும். இன்று தோன்றுவன புதிய-புத்தம் புதிய சிக்கல்கள்! பிரச்சினைகள்! புதிய பிரச்சினைகளுக்கு, முந்திய நூற்றாண்டுகள் விட்டுச் சென்றுள்ள சிந்தனைப் போக்கின் அடிப்படையில் ஒருபோதும் தீர்வு காணமுடியாது. சென்ற காலம் மறைகிறது; மறைந்து போகிறது. ஏன் அழியக்கூடச் செய்கிறது; வெற்று அழிவு அல்ல; அந்த அழிவில் புதிய ஆக்கம் தோன்றுகிறது. இதுவே உலகத்தியற்கை.

இன்றைய சமுதாயச் சிக்கல்களுக்கும் பழைய முறை தீர்வுகளையும் முயற்சிகளையும் பின்பற்றுவதால்தான் நம்முடைய சமுதாயத்தில் வேறுபாடுகளும், வேற்றுமைகளும் அகலவில்லை. மருத்துவம் நடந்தது என்னவோ உண்மை! ஆனால் நோய் நீங்கியபாடில்லை! வறுமையும் ஏழ்மையும் அகல, பல பணிகள் செய்யப்பெற்றன, செய்யப்பெற்று வருகின்றன. ஆனால் வறுமையும் ஏழ்மையும் அகலவில்லை. நமது மக்களில் சரிபாதிப்பேர் வறுமைக்கோட்டிற்குக் கீழ் வாழ்கின்றனர்! ஏன் இந்த அவலம்? நமக்குச் சிக்கல்களுக்குத் தீர்வு காணவேண்டும் என்ற ஆர்வத்தைவிட நம் ஒவ்வொரு வருக்கும் தனிப்பட்ட முறையில் நம்மை வளர்த்துக் கொள்ள

வேண்டும் என்ற ஆர்வமே மேலிட்டது. இந்த முறை பிழையான முறை.

நம் ஒவ்வொருவரிடமும் இன்னமும் நாடு தழுவிய நிலையில் உலகந் தழீஇய நிலையில் மொழி, இனம், சாதி, மதம் என்ற எல்லைகளைக் கடந்த மனிதகுல உணர்வு-மனித நேயம் உருக்கொள்ளவில்லை. சமுதாய உணர்வு பெறுதல் வேண்டும். திருக்குறள் மனிதகுலத்தைச் சார்ந்து ஒழுகு தலையே ஒழுக்கம் என்று கூறுகிறது.

> "உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
> கல்லார் அறிவிலா தார்" —குறள் 140

என்பது குறள். நாகரிகம் என்ற சொல்லுக்கு என்ன பொருள்? வாழ்கின்ற மாடமாளிகையும் கூடகோபுரங்களுமா நாகரிகத்தின் சின்னங்கள்! அல்லது விண்ணளந்து நிற்கும் கோபுரங்களா? இல்லை, இல்லை! நாகரிகத்தில் உயர்ந்து விளங்கிய மனித குலத்தின் படைப்புகளாக இவை விளங்கு கின்றன. இன்று நாகரிகம் என்பது நம்முடைய உடம்பின் தோலைக்கூடத் தொட்டுப் பார்க்கவில்லையே!

"நாகரிகம் என்றால் நல்ல நடத்தை" என்று பொருள். "பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகுதல்" என்று கலித் தொகை கூறும். அதாவது மக்கள் தொகுதியுடன் ஒத்தறிந்து ஒழுகுதலாகும். இங்ஙனம் ஒத்தறிந்து ஒழுகும் பொழுதுதான் சமுதாயம் உருவாகும்; உருவாயும் வருகிறது. எவ்வளவுதான் தனி மனிதன் சிறந்தவன் ஆனாலும்-அவனுடைய சிறப்புக்கே சமுதாய அமைப்புதான் காரணம். இரண்டு பேருடைய அறிவார்ந்த விவாதத்தில் பிறக்கும் அறிவுக்கும் சக்திக்கும் நிறைய ஆற்றல் உண்டு!

நாம் அனைவரும் ஒருவரை ஒருவர் சார்ந்து வாழக் கூடிய ஒரு சமுதாய அமைப்பு தோன்றி வளர்ந்து வருகிறது என்பதை நினைவிற் கொள்ளவேண்டும். இன்று இந்திய சமூகத்தில் பரந்த நிலையில் மக்களாட்சி முறையும் கூட்டுறவு

வாழ்வியல் அமைப்பும் வளர்வதுபோல ஒரு தோற்றம் இருப்பது தெரிகிறது. இல்லை பரந்த ஜனநாயகக் கூட்டு வாழ்க்கைமுறை அறிமுகப்படுத்தப் பட்டிருப்பதும் அத்தகைய வடிவங்கள் இருப்பனவும் உண்மை. ஆனால், உள்ளீடுதான் இல்லை! கூட்டு வாழ்க்கை ஆன்மாக்களிடத்தில் தாக்கத்தை-விளைவுகளை ஏற்படுத்தவில்லை. இந்தியாவில் நம்மிடம் மறைந்து போயுள்ள – மறைந்துகொண்டு வருகின்ற ஒரு முக்கியமான பழக்கம், பலர் ஒன்று சேர்ந்து கட்டுப்பாட்டுக்கு உட்பட்ட ஒரு குழுவாகப் பணியாற்றும் திறன்தான் என்பதாகும். ஒரே வழி கட்டுப்பாட்டு வடிவத் துடன் அமைந்த சில குழுக்களைப் பார்க்கிறோம். இந்தக் கட்டுப்பாடு, உயர் இலட்சியங்கள் இல்லாத தற்சார்புள்ள சிலரின் ஆதிக்க அடிப்படையில் முரண்பாடுகளை உள்ள டக்கிக்கொண்டு அமைந்துள்ள சந்தர்ப்பக் குழுக்களாகும். இந்த அமைப்புமுறை நீண்ட நெடுங்காலம் நிலவாது; மனித குலச் சிக்கல்களுக்கும் தீர்வு காணாது; சாதனைகளும் செய்யாது. இன்றைய உடனடித் தேவை – சமுதாய உணர்வைத் தூண்டி வளர்த்து பாரத சமுதாய அமைப்பைக் காண்பதேயாகும்.

ஆன்மிகத் தன்மை வாய்ந்த உயிர்ப்புள்ள சமுதாய உணர்வு தேவை! நமக்குத் தேவை பருத்த உடல் அல்ல. திறமான, தரமான ஆன்மாக்களே தேவை. ஏன்? உடல் எப்போதும் தன்னலப் பற்றுடன் தனக்கு இன்பத்தையே எதிர்பார்க்கும்; நாடித் தேடி அலையும். ஆனால், ஆன்மா பிறர் நலனையே கருதக்கூடியது. இன்று சமயம் என்ற பெயரில் வளரும் மூடப் பழக்கங்களிலிருந்து மனித குலத்தை மீட்டுப் பிறருக்கு உழைத்தல் என்ற வேள்வி இயற்றவும், சமய நெறியைத் தொண்டு நெறியாக வளர்க்கவும் வேண்டும். மனித குலத்தின் நன்மைக்கு உழைப்பதில்தான் நமக்கு நலன்களும் உறுதிப்படுத்தப்பெறும் என்ற சிந்தனையை வளர்க்கவும், மனித குலத்தினிடையில் நம்பிக்கையையும் நல்லெண் ணத்தையும் வளர்த்து இணக்கம் ஏற்படுத்தவும் வேண்டும்.

இவ்வாறான சமுதாய இணக்கம் ஏற்பட்டால்தான் மனிதகுலத்தின் பொது எதிரிகளாகவுள்ள அறியாமை, வறுமை, ஏழ்மை, வேறுபாடுகள், பகைமை, போர் இவை களை எதிர்த்துப் போராட முடியும். மனிதகுலம் தழுவிய இந்தப் போராட்டத்தில் ஈடுபடுபவர்களே மாமனிதர்கள்! மதிப்பிற்குரியவர்கள்! புகழுக்குரியவர்கள்! மனித சமுத்திரத் திற்குள் மூழ்கிக் குளித்து மனிதகுல மேம்பாட்டையே தவ மாகச் செய்யும் தவமே, தவம்! அறம்! மனிதகுலத்தின்பால் காட்டும் பெருந்தன்மையே ஒழுக்கம்!

இத்தகு மனிதகுல ஒழுக்கத்தை அறிவு நிலையிலும் செயல்நிலையிலும் வளர்க்க, கூட்டுறவு சமுதாய அமைப்பு மிகுதியும் துணை செய்யும். நாம் நம்முடைய மனிதகுல மேம் பாட்டுக்காக ஒரு புதிய சக்தியைத் தோற்றுவிக்க இயலாது. முடியாது. ஆனால், மனிதகுலம் உயர்ந்த இலட்சியங்களின் அடிப்படையில் ஒருமை உணர்வுடன் ஒன்றுபட்டால், கூடித் தொழில் செய்து வாழத் தலைப்பட்டால் ஒரு புதிய சக்தி தோன்றும்! இந்த அற்புதமான மனிதக் கூட்டுறவு சக்தி, படைப்பாற்றலுடையதாக விளங்கும். இந்தியாவின் மேடு பள்ளங்கள் நில அமைப்பில் மட்டுமல்ல, மனிதர்களிடையும் கூட இருக்கிறது. இந்த நிலை மாறி, எல்லாரும் எல்லாம் பெற்று இன்புறு நலன்களுடன் வாழ்ந்திடக் கூட்டுறவு வாழ்க்கையே சிறந்தது! "கூட்டுறவு" என்ற சொல்லைச் சிந்தனை செய்யுங்கள்! அது, கூட்டு வாழ்க்கையல்ல! கூட்டு வாழ்க்கை போதாது! வாழ்க்கையின் தேவைகள் நிறைவுற்ற நிலையிலும் வேறுபாடுகள் தோன்றியபோதும் சுயநலம், தன் மதிப்பு அடிப்படையில் கூட்டு வாழ்க்கை சிதையும். இங்கு தேவை கூட்டுறவு வாழ்க்கை! உறவு அடிப்படையில் மலரும் வாழ்க்கை! இங்குக் குறிப்பிடப்பெறும் உறவு, சுற்றத்தின் வழிப்பட்ட உறவு மட்டுமல்ல. "யாதும் ஊரே, யாவரும் கேளிர்!" என்ற அடிப்படையில் கால்கொள்ளும் உறவு! உலகம் உண்ண உண்ணும் உறவு! உலகம் உடுத்த உடுத்தும்

உறவு! பொருளாதார அடிப்படையில் மட்டும் தோன்றி வளரும் உறவல்ல, கூட்டுறவில் வளரும் உறவு! இஃது ஆன்ம நிலையில் வாழ்க்கையின் விவரிக்கப்பட முடியாதபகுதி என்ற சிந்தனையில் மலர்ந்து வளரும் உறவு! இத்தகைய கூட்டு உறவு மக்களிடத்தில் வளர்ந்தாலே பாரத சமுதாயம் தோன்றும்! இத்தகு கூட்டுறவு நிலையில் மக்களை நெறிப்படுத்தி வளர்க்க அரசு துணைசெய்ய வேண்டும். அதேபோழ்து அரசின் அதிகார அமைப்பாகக் கூட்டுறவு அமைந்துவிடக்கூடாது என்பதில் அரசு விழிப்பாக இருக்கவேண்டும்.

நமது பாரத சமுதாயமும் சரி, உலக சமுதாயமும் சரி எதிர்வரும் காலத்தில் சிறப்புற வளர, வாழ மனித இதயங்களைப் பரிவர்த்தனை செய்துகொண்டு, “ஒருவர் எல்லாருக்காகவும் எல்லாரும் ஒருவருக்காகவும்” என்று வாழும்பொழுதுதான் இந்த மண்ணகம் விண்ணகமாக மாறும்!

(காரைக்குடி, மத்திய மின்வேதியியல் ஆய்வகம் – அறிவியல் ஆய்வுக் கருத்தரங்கம் 1991, ஆகஸ்ட் 15,16.)

# 12. *திருப்பணி

இந்தப் பூவுலகம் மனிதர்கள் கூடிவாழ்ந்து இன்ப நலம் பெறுவதற்கேயாம். உலகியல் அமைப்பில் எப்பார்வை கொண்டு பார்ப்பினும், மனித இனத்திற்கு நலம் தருகின்ற காட்சியையே பார்க்கின்றோம். ஆனாலும் மனித சமுதாயத்தின் வாழ்க்கைப் போக்கில் இன்ப நலன்களைவிடத் துன்ப நலன்களே மிகுந்து காணப்பெறுகின்றன. இதற்குக் காரணம் என்ன? உலகியல் என்றோ, ஊழியல் என்றோ சொல்லித் தப்பித்துக் கொள்ள முயற்சிக்கக் கூடாது. மனித சமுதாயத்தை அச்சத்திலிருந்தும் துக்கத்திலிருந்தும் காப்பாற்றியே

* பொங்கல் பரிசு

தீரவேண்டும். இந்த இலட்சிய நோக்குடனேயே மத சித்தாந்தங்கள் தோன்றின. ஆனால் நடைமுறையில் அந்தச் சாதனையைச் செய்யும் முயற்சியில் மதம் தோற்றுவிட்ட தென்றே கூறவேண்டும்.

ஒரு பெரிய வண்டியை அதனுள் நுட்பமாக அமைந் திருக்கும் இயந்திரமே இயக்குகிறது. அதுபோல மனித னுடைய ஆன்மாவாகிய உள்ளுணர்வைத் தூண்டிவிட்டுச் சிந்திக்க வைக்கின்ற ஆற்றலைக் காலப்போக்கில் மனித சமுதாயம் இழந்துகொண்டே வருகிறது. சிந்தனைச் சூழலும் கருத்துப் புரட்சியும் உருவானாலே, மனிதகுலம் தரத்திலும் தகுதியிலும் வளரமுடியும். மனிதகுலம் அறியாமையின் காரணத்தினால் வலியத் தன் தலையில் நெருப்பை அள்ளிக் கொட்டிக் கொள்வது போல மிக எளிதில் தீய உணர்வுகளின் வழி இழுத்தலைக்கப்படுகின்றது. தன்னைத்தானே நேசிக்கின்ற உணர்ச்சி வளர்ந்திருக்கின்றதே தவிர, தன்னைச் சுற்றியிருக்கிற மனிதகுலத்தை நேசிக்கவேண்டும் என்ற கருத்து தேவையான அளவிற்கு வளரவில்லை. உயர்ந்த சிந்தனை களைத் தூண்டிவிட்டு மனிதகுலத்தை வளர்க்கப் பயன்பட வேண்டிய மதம் வறட்சியான பழக்க வழக்கங்களின் பாற்பட்டு ஆற்றல் இழந்திருப்பதை என்னென்று சொல்லுவது?

அன்பியல் வழிப்பட்ட வாழ்க்கை முறையைச் சமுதாயம் மேற்கொள்ளத் தவறிவிட்டால் நிச்சயம் கொடிய கொலைக் கருவிகளின் மூலம் உலகத்திற்கு அழிவே ஏற்படும். கொள்ளிக் கட்டையால் சொறிந்து கொண்ட குரங்கின் கதை போல் சமுதாயத்தின் கதையும் முடிந்து போகும். இத்தகு பேராபத்தினின்றும் சமுதாயத்தைக் காப்பாற்றச் சமய நெறியாளர்களும் சிந்தனையாளர்களும் முன்வரவேண்டும். அணுகுண்டு யுகத்தில் வாழும் நாம் உள் உணர்வால் அமைதியின் உச்சியை எட்டிப்பிடித்தால் ஒழிய மனித குலத்தைப் பேராபத்தினின்றும் மீட்க முடியாது. இன்றையச்

சமுதாயத்திற்கு உடனடியான தேவை, வாழ்க்கையை வளமாக்கிக் கொள்கின்ற விஞ்ஞான அறிவு. விஞ்ஞான அறிவு வாழ்க்கையின் புறச்சூழலை வளர்த்துச் செழுமைப் படுத்த வேண்டும்; அதே காலத்தில் நம்முடைய பாரம் பரியமான அருளுணர்வு சமுதாயத்தின் உள் உணர்ச்சியைத் தூண்டி வளர்த்துச் செழுமைப்படுத்த வேண்டும்.

பாரத நாட்டுச் சிந்தனையாளர்களும், சமய நெறி யாளர்களும் இத்திருப்பணியில் ஈடுபடவேண்டும்.

# 13. *நமது கடமை

"பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும் நற்றவ வானினும் நனி சிறந்தனவே" என்று கருதிப் போற்றுவது நமது மரபு. பாரதம், அன்பின் தாயகம்; அருளின் பெட்டகம்! கருணைக் கதிரவன் சுற்றுலாப் போதரும் திருநாடு! சமாதானத்தின் பண்ணை; எல்லாரையும்– எவரையும் ஏற்றிப் போற்றும் இனிய பண்பிற் சிறந்தநாடு. இத்தகு தாய்த் திருநாட்டின் எல்லையில் சீன அரசாங்கம் ஆக்கிரமிப்புச் செய்து, நமக்குத் தொல்லைகளைத் தந்து வருகிறது.

இமயம் நமது இலட்சியம்.

"மன்னும் இமயமலை எங்கள் மலையே"

என்று பூரிப்புடன் நாம் பாடிப் பரவும் பெரும் மலை. மண்ணகத்தில் பாய்ந்து விண்ணகத்தின் வளமெல்லாம் தரும் பேராறுகள் ஊற்றெடுத்துப் பாய்ந்து வரும் உயர்மலை. ஆறுகள் மட்டுமா? தம்மையடக்கித் தம்முடைய தலைவனை யுணர்ந்து உலகுயிர் அனைத்தும் இன்ப நலன் எய்தி மகிழ வேண்டும் என்ற நோன்பிற் சிறந்த மனிதருள் தேவர் வாழ்ந்த – வாழ்ந்து கொண்டிருக்கிற பனிமலை. அமைதியின்

* பொங்கல் பரிசு

சிகரத்திலே ஆணவத்தின் தீண்டல். விடுதலையைத் தரும் மலையின் சாரலில் ஆதிக்கத்தின் நடமாட்டம். அனுமதிப் பதற்கில்லை. அனுமதிக்க மாட்டோம். எல்லையில் தொல்லை விளைவிக்கும் சீன அரசாங்கத்தை ஒல்லையில் ஓடிப்போகும்படி செய்வது நமது தலையாய கடமை.

சுதந்திரத்திற்குப் பிறகு, நம்முடைய நாட்டின் பொது வாழ்வில் எங்கோ ஒரு தொய்வு ஏற்பட்டது. வேண்டாத வீண் போட்டிகள், தனிக்குடித்தன உணர்ச்சிகள் தோன்றி வளர்ந்தன. இவையெல்லாம் "எல்லையில் சீனன்" என்று கேட்டவுடன் எங்கோ ஓடி மறைந்து விட்டன. பாரததேசம் பொங்கி எழுந்து நிற்கிறது. கங்கு கரையற்ற தேசீய உணர்ச்சி! மக்களாட்சியின் தனிப்பெருந் தலைவராக - இந்நாட்டு மக்களின் நல்வாழ்வில் கரைந்து-கலந்து-ஒன்றாகி ஒருருவாக நிற்கும் மாசற்ற மாணிக்கமாகத் திகழும் பிரதமர் ஜவஹர்லால் நேரு அவர்களின் பின், மலர்ந்த முகத்துடன், மலைபோல் வீங்கிய தோள்களுடன் நிமிர்ந்த நடை போடு கின்றனர். உயிர் முதல் உடைமைவரை எந்த விலையையும் கொடுக்க அவர்கள் துணிந்து நிற்கின்றனர், தாயகத்தின் எல்லை காக்க.

எல்லையில் - போர்க்களத்தில் - காளையர் போர் புரி கின்றனர். இங்கு நமக்கென்ன வேலை? என்ற சிந்தனையில் நாம் செயல்பட வேண்டும். இத்தகு அவசர நிலையில் உள்நாட்டுச் சூழ்நிலையும் வலிமைப்படுத்தப் பெறவேண்டும். இந்த நேரத்தில் நமக்குள் அறிந்தோ, அறியாமலோ, தோன்றி உருவாகும் சில்லரைச் சிக்கல்களைத் தூக்கி மூட்டை கட்டி, நாட்டின் எல்லையில் எறிந்தால் சீனனை எறிந்தது போலாகும். நாட்டின் அமைதிக் காலத்தை விட அவசரக் காலத்தில் பல்வளங்களும் கொழிக்கும்படி செய்யவேண்டும். ஒன்றுக்குப் பத்தாக விளைந்து குவியும் செந்நெல் சீன அரசாங்கத்தை விரட்டும்! கழனியிலும், ஆலைகளிலும், தொழிற்சாலைகளிலும் உழைப்பினால் ஆன பொருள்களைச் செய்து மலைபோல் குவிப்பது நமது கடமை.

கேட்பதற்கே செவிகள், ஆனாலும் கேளத் தகாதன வற்றைக் கேட்பது கேட்டினை விளைவிக்கும். எப்பொழுதும், இல்லாத பொல்லாத வதந்திகளைக் கேட்கவேண்டும் என்று யாரும் விரும்புவதில்லை. ஆனாலும், "தீக்குறளைச் சென்றோதும்" வதந்திச் செய்தியாளர்கள் சுறுசுறுப்பாகச் செயல் படுவர். அது அவர்களுடைய தொழில். அவர் களுக்குப் பொழுபோக்கும்கூட. ஆதலால் யுத்த சம்பந்தப் பட்டவரை வானொலிச் செய்திகளே சரியானவை என்று கருதிப் போற்றுதல் வேண்டும்.

பாரதம் சுதந்திர நாடான பிறகு நடைபெறும் முதல் மக்கள் யுத்தம் இது. நம்முடைய எதிரி போருக்கென்றே திட்டமிட்டு வளர்ந்தவன். நாமோ, மக்களின் நலன்களுக் குரியவற்றைத் திட்டமிட்டுச் செய்து முன்னேறியிருக்கிறோம். அதன் காரணமாகப் போர்முறை கடினமாக இருக்கும் என்று கருதுவதில் தவறில்லை. இத்தகு அவசரகால சந்தர்ப்பங்களில் எல்லோரும்-நாட்டுமக்கள் அனைவரும் தங்களையும், தங்களைச் சார்ந்தவர்களையும் காப்பாற்றிக் கொள்ளப் பயிற்சி பெற்றிருக்க வேண்டும். இயன்றவரை, எல்லோரும் போர்ப்பயிற்சியும் முதலுதவிப் பயிற்சியும் பெற வேண்டும். அப்படிச் செய்வது நமது கடமை.

நாம் உலக வல்லரசு நாடுகளை நோக்கிப் "பல ஆண்டு களாகப் படைக் கலங்களைக் குறைத்துக் கொள்ளுங்கள்- பாரில் சமாதானம் செழிக்க உதவி செய்யுங்கள்" என்று கூறி வந்தமையின் காரணமாக, நாம் படைக் கலங்களைத் தேவை யான அளவிற்குத் தயார் செய்து வைத்துக் கொள்ளவில்லை. ஆனால், எதிர்பாராதவண்ணம், உலக மனித சமுதாயத் தினுடைய சுதந்திரத்தின் பகைவர்களாக - கொலையிற் கொடிய அரசாகத் திகழும் சீன அரசாங்கத்தை எதிர்த்து- தாக்கியழித்து நாசமாக்கி- நம்மையும் நம்முடைய சுதந்திரத் தையும் அவ்வழியே மனித சுதந்திரத்தையும் காப்பாற்றும் அவசியம் ஏற்பட்டுவிட்டது. அதற்குரிய படைக்கலங்கள்

தேவை. நமக்குத் தேவையான படைக்கலங்களை நாம் மிகுதியான பொருள் கொடுத்தே வாங்க வேண்டியிருக்கிறது. படைக்கலம் வாங்க ஏராளமான பொன்னும் பொருளும் தேவை. அன்றாட வாழ்க்கையில், சிக்கன முறையினைக் கையாண்டு பொருளைச் சேமித்துச் சீன அரசாங்கத்தை விரட்டியடிக்கத் தரவேண்டும். மாந்தர்க்கு அழகு தருவது சுதந்திர வாழ்க்கையே யாகும். சுதந்திரத்திற்கு ஆபத்து என்ற குரல் கேட்கும் பொழுது அணிகலன்களில் அழகைப் பார்க்கலாமா? தாயகம் காக்கத் தங்கம் தாருங்கள். அரசினர் ஒவ்வொரு நகரத்தையும் கிராமத்தையும் வலிமையிலும் வளத்திலும் தற்காப்பிலும் சிறந்து விளங்கும் கோட்டை களாக்கத் திட்டமிட்டுத் திறனுடைய தொண்டர்படை அமைக்கின்றனர். நெஞ்சில் உரமும் உறுதியும் உடையவர்கள், போனால் வராத-வர முடியாத இந்த நல்ல வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு தொண்டர் படையில் சேருங்கள்! சுதந்திரப் போராட்டங்களில் ஈடுபடாத-ஈடுபடமுடியாமல் சுதந்திரத்தின் பயன்களை அனுபவித்துக் கொண்டிருக்கிற பலருக்குத் தேசத் தொண்டு செய்ய இது ஏற்ற தருணம்.

நாற்பத்தாறு கோடி மக்களின் இதயத்தில் இடம் பெற்றிருக்கிற நேருவே நமது தலைவர். அவரது தலைமையை நாம் ஏற்றுப் போற்றி, நாட்டுக்கேற்ற நடுநிலைக் கொள்கையைக் கடைப்பிடித்து-உள்நாட்டின் வளர்ச்சிக் குரிய திட்டங்களை நிறைவேற்றிப் பொன்னும் பொருளும் குவித்து எல்லையில் தொல்லைதரும் சீன அரசாங்கத்தை விரட்டுவது நமது கடமை.

# 14. *தேசீய ஊதியக் குழு

**நா**டு விடுதலை பெற்ற பிறகு உழைத்து வாழ்வோர் வாழ்க்கை வளராது போனாலும் உயர்ந்திருக்கிறது. அடிக்கடி

* கடவுளைப் போற்று! மனிதனை நினை!

ஊதிய உயர்வுகள், ஊதியச் சீரமைப்புகள் இவற்றுக்காகப் போராடிப் போராடி வந்துள்ளனர். படிப்படியாக வெற்றியும் பெற்று வந்துள்ளனர். ஊதிய உயர்வில் வெற்றியா? வாழ்க்கையில் வெற்றியா? வெற்றி, வாழ்க்கையில் அல்ல! ஊதிய உயர்வு என்ற பெயரில் பணத்தை எண்ணியதுதான் மிச்சம்! ஏன்? நமது நாட்டின் நிதிநிலையால் பண்டங்களின் விலை மதிப்புக் கூடி வருகிறது. நாணயத்தின் மதிப்புக் கீழிறங்கி வருகிறது. பணப்புழக்கம் அதிகரித்துள்ளது. பணவீக்கம் ஏற்பட்டுள்ளது. கணக்கில் வாராக் கருப்புப் பணம் கணக்கில்லாமல் நாட்டில் புழங்குவதால் நாணயத்தின் மதிப்பை நிலைநாட்ட முடியவில்லை. விலையேற்றத்தையும் தடுக்க முடியவில்லை. இந்தியப் பொருளாதாரம் தெள்ளிய நீரோடைபோல் அல்லாமல் குழம்பிக்கிடக்கிறது.

இந்த குழப்பத்தினால் மிகுதியும் பாதிக்கப்படுபவர்கள் கிராமப்புறத்து மக்கள். அவர்கள் நிலையான வேலையும் நிலையான-உத்தரவாதமான ஊதியமும் பெறாமல் அல்லலுறுகின்றார்கள். படித்தவர்கள், ஊதிய உத்தரவாதத் துடன் பணிகளில் அமர்ந்திருப்பவர்கள் மேலும் மேலும் ஊதிய உயர்வு கோரிப் போராடிப் பெற்று வருகின்றனர். அரசுகள் அவர்களின் மன நிறைவைப்பெறக் கருதியும் தேர்தல் உத்தியாகவும் ஊதிய உயர்வுகளை அள்ளி வழங்கிக் கொண்டு வந்தன. இப்போதுதான் நடுவணரசுக்கு இந்தச் சீரற்ற நடைமுறை கவனத்திற்கு வந்துள்ளது. உடன் கூடுதல் நேர வேலைக்குரிய ஊதியம் முதலியவற்றைக் கைவிட முன்வந்துள்ளது. அதற்காக ஆயுட்காப்பீட்டுக் கழகத் தொடர்பாக ஓர் அவசரச் சட்டத்தையும் பிறப்பித்துள்ளது. இந்தச் சட்டத்தை ஆயுட் காப்பீட்டுக் கழக அலுவலக ஊழியர்கள் எதிர்த்துப் போராடி வருகின்றனர். நாடு முழுவதும் இதுபற்றிய விவாதம் நடந்து வருகிறது.

கூடுதல் நேரப் பணி ஊதியம் தருதல் கொள்கை யளவில் தவறில்லையானாலும் கடமை உணர்வும் ஒழுக்க

நெறிச் சார்பும் இல்லையாயின் தவறாகப் பயன்படுத்தலாம். உரிய வேலை நேரத்தில் பணிகளைச் செய்து முடிக்காமல் தாமதித்துக் கூடுதல் நேர ஊதியம் பெறத் தக்க வகையில் செய்யலாம் அல்லவா? இங்ஙனம் நிகழாது என்று யார் கூற முடியும்? அதோடு பணிகள் கூடுதலாக இருந்து தேக்க மடையுமானால் வேலை பார்த்த அலுவலரையும் கூடுதலாக வேலை வாங்குவது அந்த அலுவலருடைய உடல் நலத்தைப் பாதிக்கும்; குடும்ப மகிழ்வைக் குறைக்கும். தேவையான ஓய்வின்றித் தொடர்ந்து பணி செய்யும். திறன், காலப் போக்கில் சோர்வுபடும். இதனால் கூடுதல் பணி நேரத்தைத் தவிர்ப்பது அலுவலர்களுக்குக்கூட நல்லது. மேலும் நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டமும் இருக்கிறது. கூடுதல் நேர வேலை வாய்ப்பின் மூலம் புதியவர்களுக்குரிய வேலை வாய்ப்பு குறையும். ஆதலால் கூடுதல் நேரவேலை தவிர்க்கப் பட வேண்டியதே.

இப்படிப் பல்வேறு துறைகளில் மாதந்தோறும் முறை யான உத்தரவாதமான ஊதியம் பெறுகின்றவர்கள் அரசின் சலுகைகளைப் பெற்று வருகின்றனர். அதுமட்டுமா? இந்த ஊதியக் கொள்கையிலும் ஒரே மாதிரி அடிப்படையில்லை. நூறாயிரம் வேற்றுமைகள்! ஏற்றத் தாழ்வுகள், இந்த ஏற்றத் தாழ்வுகளைக் காட்டி, தொடர்ந்து நாட்டில் போராட்டங்கள்! வேலை செய்யா நாள்களில் பணிப் பாதிப்பு! உற்பத்தி முடக்கம். ஏன்? இந்தியா ஒரு நாடல்லவா? இந்திய நாட்டின் அரசு அலுவலர்களிடையே ஊதிய ஒருமைப்பாடு இருத்தல் கூடாதா? எல்லாருக்கும் எல்லா இடத்திலும் ஒரே ஊதியம் சாத்தியமா? நியாயமான கேள்வி. அடிப்படை ஊதியம் ஒரே மாதிரியாக இருக்கலாம், இருக்க வேண்டும். சில சிறப்பூதியங்கள் படிகள் வழங்கலாம். தொழில் திறன், பணி செய்யும் நிறுவன அமைப்பு, சீதோஷ்ண நிலை, வாழும் ஊர் ஆகிய அடிப்படையில் சிறப்பூதியங்கள் வழங்கலாம். இந்தியாவில் ஊதியக் கொள்கையில் சீரான விதிமுறைகள் காணாத

வரையில் நிதிநிலை சிக்கலாகவே இருக்கும்; நெருக்கடியும் தீராது. இப்போது நடுவண் அரசு தேசீய அளவில் ஊதியம் நிர்ணயிக்கும் கொள்கையை ஆய்வுக்கு எடுத்துக் கொண் டுள்ளது. இது வரவேற்கத்தக்க முயற்சி! நாடு முழுவதுக்குமாக நிலையான தன்னாட்சி உரிமையுடைய ஊதியக்குழு இருத்தல் வேண்டும். இந்த ஊதியக்குழு அவ்வப்பொழு துள்ள விலைப்புள்ளியை அனுசரித்தும் நாட்டின் பொருளா தாரத்தைக் கவனத்தில் எடுத்துக் கொண்டும் ஊதியத்தை நிர்ணயிக்கவேண்டும். ஊதியக் குழுவின் முடிவுகளை அரசும் அலுவலர்களும் ஏற்றுக் கொள்ளவேண்டும்.

–'மக்கள் சிந்தனை' 1–3–81

# 15. *தொழிலாளர் நலம்

நல்லனவற்றை நாடி வாழத்தான் நமக்குக் கடவுள் வழிபாடு இருக்கிறதே தவிர, தீயனவற்றைத் தேடித் திரிந்து பெறுவதற்காக அல்ல. வாழ்க்கையிலே உங்களுக்கு மகிழ்ச்சி இல்லாமைக்குச் சிந்தனையற்ற போக்குத்தான் காரணம். வாழ்வில் சிந்தனையில்லாது போனால் வரும்பொருள் சேராது-வளமும் பெருமையும் கிட்டா. நாளும் உழைத்ததைச் சேமித்து நல்வாழ்வுவாழ ஆசைப்பட வேண்டும். பாடுபட்டு உழைத்து-அதற்குரிய பயனை அனுபவியாமற்போனால் அது மனிதத்தன்மையாகுமா? உங்களது வாழ்க்கைக்கு நல் வாழ்வுக்கு வழி சொல்லக்கூடிய பெரியாரை உங்களிடத்திலே தேடிப்பிடித்து-அவர் சொல்லும் அனுபவ உண்மைகளுக்குச் செவிசாய்த்து நீங்கள் வாழவேண்டும். வாழ்க்கைத் துணை யில்லாது போனால் வாழும் இல்லறம் சிறக்காது என்பார்கள். இல்லாள் இல்லாத இல்லறம் இடுகாட்டுக்கு ஒப்பாகும் என்பது நம்மவர் வழக்கு. இதுபோல் நல்ல

* முத்து மொழிகள்

அறிவுக்கு-நற்சிந்தனைக்கு நாம் பெரியாரைத் துணைக் கொள்ளவேண்டும். 'பெரியாரைத் துணைக்கோடல்' என வள்ளுவரே ஓர் அதிகாரம் வகுத்திருக்கிறார். நல்லவர் களாகிய பெரியவர்களின் துணை நாம் சிந்தித்து வாழவும், சிரித்து மகிழவும் அடிகோலும். அவர்களின் துணையற்ற நிலை தீமையை உண்டாக்கும்; "பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே நல்லார் தொடர்கை விடல்" என்கிறது தமிழ்மறை. உங்களுக்கு முன்னேற ஆசை இருக்கிறது. ஒரு முறையான-நெறியான ஒழுங்கில்லை. உங்களிடையே நீங்கள் நல்லவர்களெனக் கருதிப் பின்பற்றும் பெரியார்கள் நன்முறையைக் காட்டினால் அவ்வழிச் சென்று அவனியில் உயர முயலவேண்டும். பெரியவர்கள் வழியை முறையைக் காட்ட முடியுமே தவிர வேறெதுவும் செய்ய முடியாது. குதிரையை நீர்குடிப்பதற்காகக் குளத்துக்குக் கொண்டு செல்லலாம்; நீர் குடிக்கவேண்டியது குதிரையே தான். கொண்டு செல்பவரல்ல.

தொழிலாளர் என்ற முறையிலே ஒற்றுமையாக-ஒரு குலமாக இருத்தல் வேண்டும். தொழில் இனங்களிடையே பிரிவும்-பிளவும் இருந்தால் காலப்போக்கில் கசப்பு முற்றிக் கைகலப்பிலும்-பெருங்கலவரத்திலும் முடியும். உழைப்ப வர்கள் அன்பாகவும் ஒற்றுமையாகவும் இருந்தால் இன்னல்கள் இடுக்கண்கள் ஏற்படும்பொழுது ஓடிச்சென்று உதவ முடியும்-உதவிகளைப் பெறமுடியும். தொழிலாளர்களது கட்டுக்கோப்பிலே-திட்டமானதொரு முயற்சியால் பெட்டி பெட்டியாகப் பணம் சேர்க்கலாம். பலருக்கு உதவலாம். கட்டுக்கோப்பு இல்லையேல் நல்லதிட்டமும் இருக்காது. பெட்டியில் பணமும் நிரம்பாது. அவற்றுக்குப் பதிலாக வீட்டில் கடன் இருக்கும்-கவலையிருக்கும்-அழகாக அலங்காரமாக உடையணிந்து உலாவமுடியாது போனால் மழையில் நனைந்து, வெய்யிலில் காய்ந்து என்ன பயன்? நல்ல குறிக்கோளோடு ஒன்றி வாழவேண்டும். "ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு நம்மில் ஒற்றுமை நீங்கின் அனைவர்க்கும்

தாழ்வு" என்றும் "கூடிவாழ்ந்தால் கோடி நன்மை" என்றும் எண்ணி அதற்கேற்ற முறையில் வாழ்வை அமைக்கவேண்டும்.

தொழிலாளர்கள் பிளவுபட்டுப் பலப்பல சங்கங்களை உண்டாக்குவது பயன்தராது. பிரிவும்-பிளவும் நன்மையைத் தருவதில்லை. இதனாலேதான் வள்ளுவர் 'பல்குழு' கூடாதென்கிறார். தொழிலாளியின் நலனைப் பேணக்கூடிய மனக்கவலை பொருளற்ற துன்பம் போன்றவைகளை அகற்றக் கூடிய ஒரு மாபெரும் சங்கத்தை உண்டாக்க வேண்டும். உலகியலிலே-அதுவும் இன்றைய நிலையில் பொருள்தான் மிக முக்கியமானது, வேராடினால் மரம் வளராது; பூத்துக் காய்த்துக் கனி தராது. அதுபோலவே பல நன்மைகளுக்கும் பொருட்சேமிப்பு அவசியம் வேண்டும். பொருளில்லார்க்கு இவ்வுலகு இல்லையென்பதைப் போலவே பொருளற்ற சங்கத்துக்கும் வாழ்வில்லை; வளர்ச்சி யில்லை. பொருளாதார வளம் உண்டாகிவிட்டால் வறுமையில் செம்மையோடு வாழ்க்கையில் நேர்மையாக வாழவழிபிறக்கும். ஆன்மீகச் செழுமையும் அரும்பிவளரும். ஆகவே கட்டுக்கோப்பான ஒற்றுமையும்; உழைப்பும், சேமிப்பும், நேர்மையும், செம்மையும் உங்களிடத்தே உருவாக வேண்டும். அத்தகைய நிலைக்கு ஆண்டவனது துணையும் அவசியமானது.

உங்களின் கட்டுக்கோப்பில் சாதியோ, மொழியோ, மதமோ குறுக்கிடக்கூடாது. அவை தலைகாட்டினால் கட்டுக் கோப்புக் குட்டிச் சுவராகிவிடும். நாமெல்லாரும் மனிதர்கள்; ஒரு குலத்தைச் சேர்ந்தவர்கள்; நமக்கெல்லாம் தாயும் தந்தையுமான அம்மையப்பன் தலைவனாக இருந்து அருள் சுரக்கிறான். அவனது அருள் மழை நம் எல்லாருக்கும் சொந்தமானது. எல்லாரும் இன்புற்றிருக்க நினைக்கவே நம்மை ஆண்டவன் மனிதராகப் படைத்திருக்கிறான். பிறவிகளில் மனிதப் பிறவி உயர்ந்தது. "அரிது அரிது மானிடராதல் அரிது" என்று அவ்வைப்பிராட்டியும்

"வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்" என்று அப்பரடிகளும் சொல்லி யிருக்கிறார்கள். இவற்றை எண்ணி ஒற்றுமையைப் பேண வேண்டும். ஒற்றுமை உணர்வை உண்டாக்கக் கல்வியறிவு அவசியமானது. கல்வியில்லாத வாழ்வு காட்டு வாழ்வாகும். மற்றெல்லாச் செல்வங்களையும் விட, கல்விச் செல்வமே உயர்ந்ததென உயர்த்திப் பேசப்படுகிறது. "கேடில் விழுச் செல்வம் கல்வி" என்கிறார் வள்ளுவர். கல்வி இல்லையேல் சிந்திக்க இயலாது. சிறக்க இயலாது. கல்வி கற்கப் போதிய வசதி உங்களிடத்தில் இல்லாதது குறைதான், அக் குறையை நீக்கத் தோட்ட முதலாளிகள் முனையவேண்டும். அவர்கள் தொழிலாளிகளின் குழந்தைச் செல்வங்களைக் கல்விச் செல்வங்களாக்கினால் பொருட் செல்வத்தோடு புகழ்ச் செல்வமும் வந்தடையும்.

தொழிலாளர்களும் தமது குழந்தைகளைப் படிப்பிக்க ஆசைப்படவேண்டும். பட்டங்கள் பலபெற்றுப் பாரில் சிறக்க முடியாவிட்டாலும் பண்பாக வாழப் பழகி வாழவைக்கப் பழக்கக் கல்வி மிக அவசியம் தேவையானதென்பதை ஒவ்வொரு பெற்றோரும் உணரவேண்டும். படித்தும் முட்டாள்களாகத் திரியும் இந்தக் காலத்தில் படிக்காதும் போனால் என்ன ஆகும்?

படிப்பு பக்குவத்தைத் தருவதோடு பல்லுயிர்களோடு அன்பாக வாழவும் தூண்டுகிறது. நகரமும் நாடும் படிப்பு விஷயத்தில் போட்டி போடுகின்றன; நகரத்தைத் தோற் கடிக்கக் கிராமமும் கிராமத்தைத் தோற்கடிக்க நகரமும் போட்டி போடுகின்றன. இந்நிலையில் கெட்ட சிந்தனை களைத் தோற்கடித்து நல்ல சிந்தனைகளை வளர்க்க உங்கள் குழந்தைகளுக்குக் கல்வி இன்றியமையாதது. சாப்பிடாமல் உயிர்வாழ முடியாதென்பதைப்போல் படிப்பில்லாமல் உயரமுடியாது. வேட்டி கட்டிக்கொள்வது தனிமனிதனின் மானத்தைக் காப்பதற்கு மட்டுமல்ல. சமுதாய ஒழுக்கத் துக்கும் பயன்படுகிறது. அதுபோலவே கல்வி தனிமனிதனின்

நலத்துக்குமட்டுமல்ல-சமுதாய வளர்ச்சிக்கும் பயன்படுகிறது. வாழ்க்கையில் துணிவை-தன்னம்பிக்கையைப் பெற உங்கள் பிள்ளைகளைப் படிப்பிக்குமாறு வேண்டுகிறேன்.

இனி, கடவுளைப் பற்றிய எண்ணம் தொழிலாளர் களுக்கு எங்கும் எப்பொழுதும் வேண்டும். வேலைக்குச் செல்வதால் கடவுளை வணங்க நேரமற்ற நிலை உங்களுக்கு உண்டென்பதை நான் உணராமலில்லை. தேயிலைக் கொழுந்தைக் கொய்யும் பொழுதும், கூடையில் போடும் பொழுதும் கடவுளை நினைக்கலாம், வணங்கலாம். கூடையில் கொழுந்தைப் போடும்பொழுது, 'முருகா! முருகா!' என்று சொல்லிப் போட்டால் அது முருகனுக்கு லட்சார்ச்சனையாகிவிடும். மலையின் உச்சியிலே கொழுந்து கொய்யும் உங்களுக்கு ஏறுமயிலேறி மலைதோறும் மகிழ்வுடன் உலாவரும் முருகக்கடவுளின் கருணைகிட்டும்.

# 16. *தொழிலாளர் தினச் சிந்தனைகள்

இந்த உலகம் உழைப்பால் ஆனது; உழைப்பால் வளர்வது. கடவுள் கூட ஒரு தொழிலாளிதான். படைத்தல், காத்தல், மறைத்தல், அழித்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களை இறைவன் செய்கிறான். அண்டமெலாம் படைத்து, படைத்த அண்டங்களையெல்லாம் படைத்த வண்ணம் காக்கின்றான். உழைப்பே உலகின் உயிர்ப்பு, உழைப்பே உலகின் இயக்கம். உழைப்பே உலகத்தின் வாழ்வு.

இந்த உலகம் தோன்றிய நாள் தொடங்கி, உழைப்பு உலகத்தை வளர்த்து வந்திருக்கிறது. எண்ணற்ற தொழிலாளர்கள் இந்த உலகை வளர்ப்பதில்-மானுடத்தை வளர்ப்பதில்

* மதுரை வானொலி. 1–5–93

ஈடுபட்டிருந்திருக்கின்றனர். ஈடுபட்டுள்ளனர், ஆயினும் உழைப்பும் உழைப்பாளியும் மதிக்கப்படாதிருந்த காலம் ஒன்று இருந்தது. இன்றும்கூட மனநிறைவு தரக்கூடியதாக இல்லை. உற்பத்தி செய்யும் தொழில் திறமையுடையவனின் உழைப்பாற்றல் விலைப் பண்டமாயிற்று. உற்பத்தி செய்பவன், கூலி வழங்குபவனின் பணத்தின்முன்னே கைகட்டி நின்றான்! மூலதனத் திரட்சிக்குக் காரணமாக இருந்த தொழிலாளர்கள் ஓய்வில்லாத வேலை, உத்தரவாதமில்லாத வாழ்வு, குறைந்த கூலி, போதிய வசதியின்மைகளில் அவதிப்பட்டனர். தொழிலாளர்கள் கொள்ளையடிக்கப் பட்டனர்.

இந்தச் சூழ்நிலையில்தான் 1886-ம் ஆண்டு மே முதல் நாளில் சிகாகோ நகரில் தொழிலாளர்களின் ஆர்ப்பாட்டம் நடந்தது. இந்த ஆர்ப்பாட்டத்தினால் விளைந்த தலையாய நன்மை, தொழிலாளர்கள் உலகம், நாடு - எல்லைகளைக் கடந்து ஒன்றுபட்டது. ஆம்! எல்லை, வேலி, சுவர் - இவை மனிதனின் படைப்பு! இயற்கையில் எல்லை இல்லை! தொழிலாளர்கள் உலக சகோதரர்களாக ஆனது, உலக வரலாற்றிலேயே மிகப்பெரும் சாதனையாகும். இந்தச் சாதனையின் விளைவாக 1889 மே முதல் நாள் முதல் ஒவ்வொரு மே மாதம் முதல் தேதியைத் தொழிலாளர் தினமாகக் கொண்டாடி வருகிறோம்.

இன்னமும் தொழிலாளர் வாழ்க்கை மேம்பாடுறுதல் வேண்டும். தொழிலாளர்களுடைய தொழில் திறன் நாளும் வளர வாய்ப்புகள் வழங்கப்பெறுதல் வேண்டும். தொழிலாளர்களுக்குப் போதிய கல்வி வசதியும், சுகாதார மருத்துவ வசதிகளும் செய்து தரப்பெறுதல் வேண்டும். நாட்டளவில் சிறந்த தொழிலாளர்களைத் தேர்வு செய்து விருதுகள் வழங்கிச் சிறப்பிக்கவேண்டும். வேளாண்மைத் தொழிலாளர்களும், தொழிற்சாலைத் தொழிலாளர்களும் கூடித் தொழில் செய்து, நாட்டின் வளத்தைக் காப்பாற்ற வேண்டும் நாளும் உழைப்பின் தரம் தாழாமல் வளர்த்துக்

கொள்ளவேண்டும். தொழிலாளர் நலனே, நாட்டின் நலன். நாட்டின் நலனே, தொழிலாளர் நலன், இந்தச் சிந்தனை நமக்கும் நமது நாட்டுத் தொழிலாளர்களுக்கும் வந்தாக வேண்டும்; இதுவே நமது கொள்கை; கோட்பாடு!

இன்று பெரும்பாலும் தொழிலாளிக்கு உத்தரவாதம் பாதுகாப்பு நலன்கள் உறுதிப்படுத்தப் பெற்றுள்ளன. இந்தச் சூழ்நிலையில் தொழிலாளர்கள் பொறுப்பும் கடமை உணர்வும் உடையவர்களாக வளரவேண்டும் என்று எதிர் பார்ப்பது தவறல்ல. அண்மைக் காலமாகப் பணியின் தரம் குறைந்து வருகிறது. எண்ணற்ற பணிகள், செய்யவேண்டிய வர்கள் இருந்தும் செய்யப்படுவதில்லை. செய்யும் வேலையின் தரத்திற்கும் பயனுக்கும் உத்தரவாதம் இல்லையானால் காலப்போக்கில் மூலதனம் அழியும்; நாடு, வளம் குன்றும். இன்று, இந்தியாவின் நிலை இதுவே! ஏன்? சோவியத்தில் ஏற்பட்ட நொடிவுகளுக்குக் கூட இதுவே காரணம். தொழிற் சாலை, உற்பத்தி இலக்கை அடையத் தக்கவாறு உழைப்ப தில்லை. உற்பத்தி செய்யும் பொருள்களின் தரத்தைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. ஏன்? தொழிற்சாலையையே இழந்து விடுவோமோ என்ற அளவுக்குத் தொழிற்சாலைகள் பழு துற்று விட்டன. தொழிற்சாலைகள் கடுமையான நிதி நெருக் கடியில் சிக்கித் தவிக்கின்றன. இவைகளைப்பற்றித் தொழி லாளர்கள் கவலைப்படுவதில்லை. அப்படியே கவலைப் படுபவர்கள் இருந்தாலும் மிகச் சிலர்தான் கவலைப்படு கின்றனர். மிகச் சிலர் உதாரணத்திற்குத்தான் பயன்படலாம். நாட்டின் பணிகள் இடையீடின்றி, தரத்தில் தாழ்வு இம்மியும் குறைவுபடாமல் நடக்கவேண்டும். செய்யும் தொழிலைத் தெய்வமாகப் போற்றவேண்டும். தொழிற்சாலையைக் கோயிலாக எண்ணவேண்டும்.

அன்பு நிறைந்த தொழிலாளர்களே! மே தின வாழ்த்துக்கள்! ஒன்றுபடுவோம்! கூடி உழைப்போம் கூடி வாழ்வோம்! தொழிலாளர்களின் நலன்களைப் பேணிக் காப்போம்!

# 17. *ஒருங்கிணைந்த கிராமப்புற வளர்ச்சி

மதுரை காமராசர் பல்கலைக் கழகம் "எதிர்வரும் இருபத்தோராம் நூற்றாண்டு" என்ற கருத்தரங்கு நடத்துவது மிகுந்த மகிழ்ச்சியைத் தருகிறது. இக்கருத்தரங்கிற்கு ஏற்பாடு செய்துள்ள பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் கிருஷ்ணசாமி அவர்களுக்கும் துறை இயக்குநர் ஜி.கே. பிள்ளை அவர்களுக்கும் மற்றவர்களுக்கும் நமது நன்றி! பாராட்டு! வாழ்த்துக்கள்! கருத்தரங்கில் இளைய தலைமுறையினைச் சார்ந்த பலர் பங்கு பெற்றிருப்பது மகிழ்வைத் தருகிறது. அதுவும் சமநிலையில் மகளிர் பங்கேற்றிருப்பது அதைவிடச் சிறப்பாகும்.

இந்தியா கிராமங்கள் நிறைந்த நாடு. தமிழகமும் கிராமங்கள் நிறைந்த மாநிலமாகும். இந்தியாவில் செல்வ வளத்தின் ஆதாரங்கள் கிராமப்புறங்களிலேயே அமைந்துள்ளன. இந்திய கிராமப்புறங்கள், நிறைந்த செல்வவளமும் மிக அதிகமான மனித சக்தியும் உள்ள பகுதிகளாகும். ஆனால் இந்திய நகர வாழ்க்கைக்கும் கிராம வாழ்க்கைக்கும் உள்ள இடைவெளி மிக அதிகமாகும். இந்திய கிராமங்கள் வறுமையில் உழலுகின்றன. இந்திய கிராமமக்கள் ஏழைகளாக இருக்கின்றனர். ஆறு ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றிய பிறகும் கிராமப்புறங்களில் ஏற்பட்டுள்ள மாற்றம்–வளர்ச்சி மனநிறைவுதரத் தக்கதாக இல்லை. இந்திய கிராமங்கள் அழிந்தால் இந்தியா அழியும்; இந்திய கிராமங்கள் வளர்ந்தால் இந்தியா வளரும், ஆதலால் இந்திய கிராமங்களின் வளர்ச்சியைத் திட்டமிட்டுச் செயற்படுத்தினால் சிறந்த இருபத்தோராம் நூற்றாண்டைக் காணமுடியும்.

---

* கடவுளைப் போற்று! மனிதனை நினை!

## கல்வி

இந்தியாவில் நகர்ப்புறத்தில் வாழ்கின்றவர்கள் பெறும் கல்விக்கும் கிராமப்புறங்களில் வாழ்கின்றவர்கள் பெறும் கல்விக்கும் நிறைந்த வேறுபாடுகள் காணப்படுகின்றன. நகர்ப் புறத்தார் பெறும் தரமான கல்வியைக் கிராமப்புறத்தார் பெறுவதில்லை. கிராமப்புறத்தில் உள்ள பள்ளிகள், குழந்தைகளை அடைத்து வைக்கும் இடங்களாக உள்ளன. உயிர்ப்புள்ள குழந்தைகள் உள்ள இடங்களாக இல்லை. பள்ளிகளுக்குள்ள வசதிகள் போதா. ஆசிரியர்-மாணவர் விழுக்காடு கட்டுக்கடங்காமல் உள்ளது. எட்டு வயதுவரை ஒரு குழந்தைக்குச் சீரான கல்வி அளிக்கப் பெற்றால் அக் குழந்தையின் எதிர்காலம் சிறப்பாக அமையும் என்பது உளவியல் விதியாகும். கிராமங்களின் 1 முதல் 3 வரை படிக்கும் குழந்தைகள் உள்ள பள்ளிகளில், ஆசிரியர்-மாணவர் விழுக்காடு 1:60, 1:70 இந்தக் கணக்கில் உள்ளது. இதைப் பள்ளிக்கூடம் என்பதா? குழந்தைகளை அடைக்கும் பட்டி என்பதா? கிராமப்புறப் பள்ளிகளில் ஆசிரியர்-மாணவர் விழுக்காடு 1:25 என்ற முறையில் அமைத்தல் வேண்டும். கிராமப்புறப் பள்ளிகளில் தரமான அர்ப்பணிப்பு நோக்குடன் பணியாற்றக்கூடிய ஆசிரியர்கள் நியமனம் செய்யப்பெறவேண்டும். இப்பள்ளிகளில் நூலகம், இயந்திரத் தொழிற் கருவிகள், குழந்தைகளின் அறிவியல் தொழில் நுட்பத் திறனை வளர்க்கும் கருவிகள் இடம்பெறவேண்டும். கிராமப்புறப் பள்ளிகளின் வேலை நேரம், பாடவேளை அட்டவணைகள் கிராமத்தின் சூழ்நிலைக்கும் கிராமத்துக் குடும்பங்களின் சூழ்நிலைக்கும் ஏற்றவாறு அமைதல் வேண்டும். கிராமப்பள்ளி 1 மணி நேரம் குறைவாக நடை பெற்றாலும் பரவாயில்லை. ஆனால் தரமாக நடத்தப்பெற வேண்டும்.

தொடக்கப் பள்ளியில் பயிலும் கிராமப்புறக் குழந்தைகள் மதிய உணவுக்கு வீட்டுக்குச் செல்ல இயலாது.

ஆதலால், அனைத்து மாணவர்களுக்கும் வேற்றுமையின்றி, தரமான மதிய உணவு தரப்படவேண்டும். ஏழை என்ற பெயரில் ஒரு சிலருக்கு மதிய உணவு வழங்குவது ஏழ்மை உணர்ச்சியையும் தாழ்வுணர்ச்சியையும் அதிகப்படுத்தும். பள்ளியில் உள்ள அனைவருக்கும் கட்டாயம் மதிய உணவு வழங்கப்பெறவேண்டும். பொதுவாக, நாம் அரிசியை விரும்பிச் சாப்பிடுகிறோம் என்றாலும் அதுவே போதுமான வளர்ச்சியைத் தராது. ஆதலால் வெண்ணெய், ரொட்டி, பால், முட்டை ஆகியன வழங்குதல் குழந்தைகளின் அறிவு வளர்ச்சிக்குத் துணை செய்யும்.

கிராமப்புறங்களில் அறிவியல் ஆய்வுமையங்கள் தொடங்கி, உலகத்தின் புதிய வளர்ச்சி வேகத்தைக் கிராமப் புறத்தின் சூழ்நிலையைப் பாதிக்காத வண்ணம் கிராமத்தார் அறியத் துணை செய்தல் வேண்டும். இந்த முயற்சி கிராமத்து மக்களின் வாழ்க்கையில் சிறந்த மாற்றங்களை உண்டு பண்ணும்; அறிவை விரிவடையச் செய்யும். பாவேந்தர் பாரதி தாசன், "அறிவை அகண்டமாக்கு" என்றார். இதற்குரிய வாய்ப்புகள் கிராமத்தில் எளிதாக அமைய வேண்டும். படித்தவர்கள், படித்த அறிவியல் மேதைகள் கிராமப்புறங் களுக்குச் சென்று அறிவியல் தொழில் நுட்பங்களை எடுத்துக் கூற வேண்டும். இருபத்தோராம் நூற்றாண்டுக் கிராமத்து மனிதன் பண்பாட்டில்-கலாச்சாரத்தில் பழைய மனிதனாகவும் வளர்ந்துவரும் அறிவியல் மாற்றத்தைத் தழுவிக் கொண்டமையால் புதிய மனிதனாகவும் விளங்க வேண்டும். இதனைக் குன்றக்குடி சுதேசி விஞ்ஞான இயக்கம், காரைக்குடி, மைய மின் வேதியியல் ஆய்வக விஞ்ஞானிகள் துணையுடன் செய்து வருகிறது. இந்த முயற்சி பரவலாக்கப் படவேண்டும்.

## வேளாண்மை

கிராமப்புறத்தின் செல்வ ஆதாரம் வேளாண்மையை நம்பியிருக்கிறது. நாடு விடுதலை பெற்ற பிறகு வேளாண்மை

வளர்ந்திருக்கிறது. உணவுப் பற்றாக்குறையிலிருந்து இந்தியாவை மீட்ட பெருமை கிராமப்புறத்து விவசாயிகளுக்கு உண்டு. இன்று நமது நாடு தன்னிறைவு பெற்ற நாடாக விளங்குகிறது. ஒரு நாட்டை உணவுத் துறையில் தன்னிறைவாக்கிய கிராமப்புறத்து விவசாயிகளின் வாழ்க்கை தன்னிறைவுடையதாக இல்லை. ஏன்? நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் பூரண வெற்றி பெறவில்லை. நிலப் பிரபுத்துவத்தின் இரும்புப் பிடி ஒருபுறமும் பிறிதொருபுறம் துண்டு பட்ட நிலங்களும் உள்ளன. விவசாயிகளிடம் வாழ்க்கைக்குக் கட்டுபடியாகாத நில அளவே கைவசம் உள்ளது. இத்தகையோரின் வேளாண்மை தன்னிறைவுடையதாக ஆகாது. நிலவுரிமைக்குப் பங்கமில்லாத வகையில் கூட்டுறவுச் சாகுபடி முறையைக் கிராமங்களில் அறிமுகப்படுத்த வேண்டும். இதனால் வேளாண்மையின் தரமும், உயரும்; உற்பத்தியும் பெருகும். அது மட்டுமன்று. பல கிராமங்களில் தேவைக்கு அதிகமானவர்கள் வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டுள்ளார்கள். அவர்களின் சக்தியும் வேளாண்மைத் தொழில் நேரம் போக, மீதமுள்ள காலச் சக்தியும் வீணாகின்றன; வேளாண்மையில் ஈடுபட்டிருக்கும் மக்களில் குறைந்தது 40 விழுக்காட்டு மக்களை இருபதாம் நூற்றாண்டுக்குள் வேறு தொழிலுக்கு மாற்ற வேண்டும். கூட்டுறவுப் பண்ணை முறையில் வேளாண்மையைச் செய்யவேண்டும்.

**கால்நடை**

வேளாண்மைத் தொழிலுக்கு இணையாக - துணையாக அமைவது கால்நடை வளர்ப்புத்துறையாகும். இந்தத் தொழில் பயனீட்டும் தொழிலாக இன்னும் கிராமங்களில் வளரவில்லை. கிராமப்புறங்களில் பால் மாடுகளின் எண்ணிக்கை கூடுகிறதே தவிர பாலின் உற்பத்தி அளவு கூடவில்லை. குறைந்த அளவாக 10 முதல் 15 லிட்டர் பால் கறக்கின்ற மாடு இருந்தால்தான் பால்மாடு வளர்த்தல்

பயனுள்ளதாகும். கிராமப்புறங்களில் நிலத்தின் அளவுக்கேற்ப கால்நடைகள் வளர்க்கப்படவேண்டும். ஒரு ஏக்கருக்கு சராசரி 10 மாடுகளும் 50 ஆடுகளும் இருக்கவேண்டும். அப்பொழுதுதான் நிலம் உரப்படுத்தப் படும். விவசாயிக்கும் போதிய வேலை கிடைக்கும். போதிய வருவாய் கிடைக்கும். அத்துடன் சாண எரிவாயு அடுப்புகளை அறிமுகப்படுத்துவதன் மூலம் மரங்களை வெட்டாமல் தடுக்கலாம். ‘வீட்டுக்கு ஒரு மரம்’ என்று சொல்வது இந்தக் காலத்தில் போதாது. ஒருவருக்கு ஒரு மரம் வீதம் வளர்த்தல் வேண்டும். இந்தத் துறையில் குன்றக்குடி திட்டமிட்டுப் பணி செய்கிறது. எங்கள் குன்றக்குடிப் பள்ளி வளாகத்தில் ஒவ்வொரு சிறுவனும் சிறுமியும் ஒரு மரத்தை நட்டுப் பாதுகாக்கிறார்கள். 21-ம் நூற்றாண்டை நோக்கி கிராமங்கள் செல்ல வேண்டுமானால் தரமான கால்நடைகளை வளர்ப்பதோடு மரங்கள் நடுவதையும் வளர்ப்பதையும் கடமையாகக் கொள்ள வேண்டும்.

## தொழில் வளர்ச்சி

கிராமப்புறத்தில் பகுதிநேர வேலை உடையவர்களுக்கும், வளரும் தலைமுறையினருக்கும் தொழில் நிறுவனங்களை அமைத்து வேலைவாய்ப்பை உருவாக்க வேண்டும். கிராமப்புறத்தில் உண்டாகிற தொழில் கூடுமானவரையில் கிராமத்தில் கிடைக்கும் பொருள்களை அடிப்படையாகக் கொண்டு அமைவது நல்லது. புதிய அறிவியல் தொழில் நுட்பம் கிராமத்திற்கு வந்தாகவேண்டும். பஞ்சாபில் லூதியானாவில் வீடுதோறும் இதை உணர்ந்திருக்கின்றனர். அதை முன் மாதிரியாகக் கொண்டு 21ஆம் நூற்றாண்டில் கிராமப்புறத்தைப் பாதிக்காத தொழில் வளர்ச்சியைச் செய்து, காலத்தின்பயன் போற்றுதல், திறமையைப் பயன்படுத்துதல், செல்வத்தைப் பெருக்குதல் ஆகியவற்றை ஒருங்கிணைந்த நிலையில் செய்யவேண்டும்.

கிராமப்புறத்தில் மேற்போக்கான சில நாகரிகங்கள் இருந்தாலும் அதனுடைய அடிப்பரப்பில் இடைக்காலத்தில் ஏற்பட்ட ஏற்றத் தாழ்வுகள், செல்வ ஏற்றத் தாழ்வுகள், சாதி அமைப்புகள், பொருந்தாப் பழக்கங்கள் இல்லை என்று சொல்லிவிட முடியாது. இவற்றை மாற்றியமைக்க கிராமத்தின் அனைத்துச் சமூகப் பொருளாதார நிகழ்வுகளும் கூட்டுறவு மூலம் நடைபெற வேண்டும். கூட்டுறவு ஒரு சிறந்த வாழ்க்கைமுறை. சிறந்த கூட்டுறவில் பரஸ்பர நம்பிக்கை, நல்லெண்ணம், ஜனநாயகப் பாங்கு, கூடித் தொழில் செய்யும் தன்மை, பயனைப் பகிர்ந்து கொள்ளும் பாங்கு ஆகியன வளரும். இது இந்தியாவுக்குச் சிறந்த வாழ்க்கை முறையாகும். ஆதலால் இந்திய கிராமங்களை 21ஆம் நூற்றாண்டில் கூட்டுறவு நோக்கி அழைத்துச் செல்லவேண்டும்.

ஆனால் இந்தியாவில் கூட்டுறவு இயக்கம் நலம் சிறந்ததாக இல்லை. கூட்டுறவு இயக்கத்திலும் வல்லாண்மை அவ்வப்போது தலையெடுக்கிறது. அரசியல் ஆதிக்கக் குறுக்கீடுகள் உள்ளன. இவையெல்லாம் இல்லாமல் தன்னாட்சி அமைப்புடைய-தன்னைத் தானே சீரமைத்துக் கொள்கிற கூட்டுறவை அமைத்து ஒரு கிராமக் கூட்டுறவுக் குடியரசைக் காணவேண்டும். இது அண்ணல் காந்தியடிகள் கண்ட கனவாகும்.

## மருத்துவம்

கிராமத்தில் அடிப்படைத் தேவைகளை நாம் 21ஆம் நூற்றாண்டுக்குள் செய்து முடித்தாக வேண்டும். கிராமங்கள்தோறும் இயற்கை மருத்துவ முறையினைக் கொண்ட மருத்துவ நிலையங்கள் கண்டாகவேண்டும். கடைகளில் விற்கும் கண்ட கண்ட போதை மருந்துகளை உட்கொண்டு மக்கள் உடலைக் கெடுத்துக் கொள்கின்றனர்.

கிராமங்களில் இயற்கை மருத்துவ மனைகள் அமையவேண்டும். இது இந்திய நாட்டினுடைய பாரம்பரிய முறையாகும். இயற்கை மருத்துவம் நோயைக் கண்டறிந்து நீக்குவதோடு நோய்க்கான காரணத்தைக் கண்டு நீக்கும் ஆயுர்வேத-சித்த மருத்துவ மனைகள் உருவாக வேண்டும். ஒவ்வொரு ஊராட்சியிலும் இத்தகைய மருத்துவமனை ஒன்று இருக்கவேண்டும். நல்ல குடிநீர் கிடைக்கச் செய்யவேண்டும்.

ஆன்றோர் காலத்தைப்போல கிராமம் ஒரு குடும்பமாக விளங்கவேண்டும். “எல்லாரும் ஒருவருக்காகவும் ஒருவர் எல்லாருக்காகவும்” என்கிற சித்தாந்தம் கிராமத்தில் நிலவ வேண்டும். கிராமத்தில் கோயில்களை மையமாகக் கொண்ட ஒரு சமுதாய அமைப்பு, வளர்ச்சிக்குரிய வழிகளைக் காணும் சமுதாய அமைப்பு, தங்களைத் தாங்களே விமர்சனம் செய்துகொள்ளும் சமுதாய அமைப்பு, சுய ஆட்சித் தன்மை யுடைய கிராமசமுதாய அமைப்பு உருவாக வேண்டும். கிராமங்களின் செல்வத்தை வெளியே கொண்டு செல்லும் வலிமை யாருக்கும் இருக்கக்கூடாது. கிராமத்துச் செல்வம் கிராமத்திற்கே கிடைக்கவேண்டும். இந்திய கிராமம் செழித்து வளர்ந்த நிலையில் தன்னுடைய கணிசமான பங்கை நாட்டுக்களிக்கும்; அளிக்கவேண்டும். கிராமத்துச் செல்வம் கிராமத்திற்கே கிடைக்கவேண்டும் என்பது கிராமத்தை நாட்டிலிருந்து தனியே பிரிப்பதன்று. நாம் குறிப்பிடுவது சுரண்டும் நிலை இருக்கக்கூடாது என்பதேயாகும். 21ஆம் நூற்றாண்டில் இந்திய கிராமங்கள் தன்னிறைவுடையதாக - கூட்டுக் குடும்பமாக, பழமையும் புதுமையும் இணைந்து நிலவும் பகுதியாக விளங்கவேண்டும்.

—மதுரை காமராசர் பல்கலைக்கழகம் 25-3-87-ல் நடத்திய கருத்தரங்கில், தவத்திரு அடிகளார் அளித்த குறிப்புகள்.

# 18. *கிராமப்புற வளர்ச்சிக்கான தொழில்நுட்பம்

கிராமப்புற வளர்ச்சி பற்றிய சிந்தனை இன்று வேகமாக வளர்ந்து வரும் சிந்தனை; வரவேற்கத் தக்க சிந்தனை! ஆயினும், கிராமப்புற மக்கள் தங்களுடைய சுற்றுப் புறச் சூழ்நிலையை அறிந்து கொள்ளவும், அச்சூழ்நிலையைத் தங்கள் வாழ்க்கையோடு இணைத்துப் பயன்பெறவும் கற்றுக் கொள்ளவேண்டும்.

மாந்தர் தம் வாழ்க்கையின் அடித்தளம் நிலமே. நிலத்தின் வளம் காப்பாற்றப்படுதல் வேண்டும். நிலத்திற்கு அடுத்து மாந்தர்தம் வாழ்க்கை சார்ந்திருப்பது தாவரங்களையும் மரங்களையுமேயாம். மரங்களின்றி மண்ணுலக வாழ்வு அமையாது. இதுவே உண்மை. இந்த நிலத்தையும் தாவரங் களையும் மரங்களையும் தண்ணீரையும் பயன்படுத்தி விவசாயப் புரட்சி செய்யலாம். விவசாயத்தில் விளையும் பொருள்களைக் கொண்டு நுகர் பொருள்கள் பல செய்யலாம். கிராமப்புற வளர்ச்சி, விவசாய அடிப்படையிலான தொழில்களாலேயே ஏற்படமுடியும். அங்ஙனம் ஏற்பட்டால்தான் அந்தப் பொருளாதார வளர்ச்சி நிலையானதாகும். கிராமப்புற வளர்ச்சி என்பது மூன்று நிலைகளுடையது. இதில் இரண்டு அடிப்படை. ஒன்று விவசாயம், இரண்டு கால்நடை வளர்ப்பு, மூன்றாவது இவ்விரண்டின் அடிப்படையில் உருவாகும் தொழில்.

வடகொரியா, மிகச் சில ஆண்டுகளில் வளர்ந்து விட்டது! ஏன்? வடகொரியாவில் உழைக்காத மனிதன் இல்லை! விளையாத நிலமும் இல்லை! நமது நாட்டில் தரிசு நிலம் ஏராளம்! மரங்களை வளர்ப்பதில் அக்கறை காட்டுவ

* மதுரை வானொலி 21–6–93

தில்லை. பணத்தாசையும் சுவை நுகர் ஆசையும் பேயாட்டம் போடுகின்றன. இயற்கையை வளர்த்து வளப்படுத்தி வாழத் தெரியாமல் மலைவளங்களையும் மரங்களையும் அழிக்கின்றனர். "காடு கெட ஆடு" - என்பர். வெள்ளாடு, அண்ணாந்து வளரும் மரங்களையே கடிக்கும். கண்டபடி ஆடுமாடுகளை மேய விடுவது பசுமையைக் கெடுக்கும் ஆடும் மாடும் வீட்டுப் பிராணிகள்! வீட்டிலேயே சுட்டித் தீவனம் போட்டுத்தான் அவற்றை வளர்க்க வேண்டும்! நிலத்தின் வளமும் மரங்களும் காப்பாற்றப் பட்டாலே கிராமங்கள் வளரும்; அவ்வழி தொழில் பெருகும்!

பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் மாவட்டத்தில் மட்டும் புன்செய் நிலம் தரிசு ஒரு இலட்சத்து 32 ஆயிரம் ஹெக்டேர் இருக்கிறது. வறட்சியால் அடிக்கடி பாதிக்கப் படுகிறது. நிலத்தடிநீர் உண்டு. மழையும் கூடத் தேவையான அளவுக்குப் பெய்கிறது. ஆனால், வறண்ட நிலங்கள் குடித்து விடுகின்றன. நீர்ப்புரளி நிலங்களில் தாவரங்கள், மரங்கள் பயிரிட்டால் கண்மாய்களுக்குத் த்ண்ணீர் வரத்துக் குறையும் என்ற தவறான நம்பிக்கை இருக்கிறது. தாவரங்களும் மரங்களும் மழைத்தண்ணீரில் பத்து விழுக்காடு கூடக் குடிக்கா. மீதித் தண்ணீரை வேர்கள் வழி, நிலத்தடி நீராக மாற்றி, ஏரிகளுக்கும் கண்மாய்களுக்கும் கிணறுகளுக்கும் கொண்டுபோய்ச் சேர்க்கும். காற்றில் ஈரப்பசையைக் காப்பதன் மூலம் வறட்சியைத் துரத்தும்; வான்மழையை வரவழைக்கும். ஆதலால், எங்கும் பசுமை என்பது கிராமப்புற வளர்ச்சியின் முதல் நோக்கம்.

பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் மாவட்டத்தில் ஏராளமான நிலம் புன்செய்த் தரிசாகக் கிடக்கிறது. இவைகளில் ஒரு பகுதி மண் அரிப்புக்கு இரையாகிக் கெட்டுப் போய்விட்டது. இந்த நிலங்களில் ஆமணக்கு சாகுபடி செய்யலாம். தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக் கழகமும் திண்டிவனம் எண்ணெய் வித்து ஆய்வு மையமும்

மூன்றுமாத ஆமணக்கு விதையைக் கண்டுபிடித்துத் தந்துள்ளன. இந்த விதையை ஜூன் அல்லது ஜூலையில் விதைத்துவிட்டால், பெய்யும் மழையிலேயே வளர்ந்து மகசூல் தரும். ஆமணக்கு தனிப்பயிர் சாகுபடி செய்ய ஏக்கர் ஒன்றுக்குச் செலவு ரூ 1500/- ஆகும். வருமானம் ரூ.4000/- கிடைக்கும். செலவு மிகக் குறைவு. நோய், பூச்சித் தாக்குதல்களும் அவ்வளவாகப் பாதிப்பதில்லை. திண்டிவனம் TM.V ரகம் 1, 2, 3 ஆமணக்கில் எண்ணெய்ச் சத்து 50 முதல் 54 விழுக்காடு இருக்கிறது.

ஆமணக்கு எண்ணெய் இன்று பல தொழில் நுட்பங் களுக்குரியதாக விளங்குகிறது. நமது நாட்டில் வழிவழியாக ஆமணக்கு எண்ணெய் வீட்டு உபயோகத்தில் சிறந்த மருத்துவப் பொருளாகப் பயன்பட்டு வந்தது. இன்று ஆமணக்கு எண்ணெய் பயன்படும் விதத்தை ஹைதரா பாத்தில் உள்ள இந்திய வேதியியல் தொழில்நுட்ப நிறுவனம் (I.I.CT) ஆராய்ந்து பல முடிவுகளை வெளியிட்டுள்ளது. ஆமணக்கு எண்ணெய்யிலிருந்து 32 உப பொருள்கள் தயார் செய்யலாம். இந்த உப பொருள்களுக்கு உள் நாட்டிலும் வெளிநாட்டிலும் நல்ல சந்தை வாய்ப்பு இருக்கிறது.

தமிழ்நாட்டில் ஏராளமான் பனைமரங்கள் உள்ளன. ஆனால், அவற்றை முறையாகப் பயன்படுத்திப் பொருள் செய்யும் முனைப்பு இல்லை. நெல்லை மாவட்டத்திலும், இராமநாதபுரம் மாவட்டத்திலும் சாயல்குடி, கடலாடிப் பகுதிகளிலும் பனைமரங்களை முறையாகப் பயன்படுத்து கிறார்கள். தமிழ்நாடு முழுதும் உள்ள பனைமரங்கள் முறை யாகப் பயன்படுத்தப் பெற்றால் நிறைய செல்வம் பெருகும். பனை நுங்கைப் பதப்படுத்தி வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யலாம். பனைபடு பொருள்களில் நல்ல தரமான சாக்லெட் செய்ய இயலும். இந்தத் தொழில்நுட்பம் இன்னும் பயன்படுத்தப்படவே இல்லை. தமிழ்நாட்டில் ஏராளமாக

மலைபோல் குவிந்து கிடக்கும் தென்னை நார்கள் கழிவுப் பொருள்களிலிருந்து உரம் தயார் செய்யலாம். வீட்டுச் சுவர்களுக்கு அலங்கார அடைப்புப் பொருள்கள் தயார் செய்யலாம்.

தமிழ்நாட்டில் முந்திரி அடிப்படையிலான தொழில் களுக்கு நல்லவாய்ப்பு இருக்கிறது. முந்திரிப் பழங்களிலிருந்து சாறு - ஜாம் முதலியன தயார் செய்யலாம். இது நல்ல உணவு. முந்திரிக் கொட்டைத் தோலிலிருந்து எண்ணெய் எடுத்தல் நல்ல இலாபகரமான தொழில். முந்திரி எண்ணெய்யிலிருந்து மரங்கள், இரும்புகளைப் பாதுகாக்கும் நல்ல வண்ணப் பூச்சு எண்ணெய் தயார் செய்யலாம். இந்த வண்ணப்பூச்சு எண்ணெய் இரும்புகள் துருப்பிடித்து அழியாமலும் மரங்கள் கெட்டுப்போகாமலும் பாதுகாக்கும். நல்ல சந்தை வாய்ப்புக்கள் உள்ளன.

இந்தியர்களின் பழக்கம் உணவு உண்பதைவிட இடைத் தீனி அதிகம் தின்பதுதான்! இது இன்றையச் சந்தையில் எளிதில், அடக்கவிலையில் கிடைப்பதில்லை. குறிப்பாகப் பள்ளிக் குழந்தைகளுக்கு எளிதில், குறைந்த விலையில் நிறைந்த ஊட்டச் சத்துணவுத் தன்மையுடைய மிக்சர் தயார் செய்து விற்பது ஒரு நல்ல தொழில். அது மட்டுமன்று. நாட்டுத் தொண்டும் ஆகும்.

நறுமணம் நுகர்தல் இதயத்திற்கு வலிமை சேர்க்கும்; மன அமைதியைத் தரும். இன்று, நறுமணப் பொருள் நுகர்வு பெற, சராசரி மனிதர்களால் இயல்வதில்லை. ஏன்? எளிமையாகக் கிடைப்பதில்லை. நாம் அண்மைக் காலமாகப் பணமதிப்பீட்டுச் சமுதாய அமைப்பில் இருப்பதன் காரணமாக இயற்கையோடிசைந்து வாழ்தலை மறந்து விட்டோம். மேடைகள் தோறும் மலர்மாலைகளுக்குப் பதில் துண்டுகள் போர்த்தும் பழக்கம் வந்ததால் மலர்ச் செடிகளை வளர்க்கும் பழக்கம் அருகிப் போயிற்று. மலர்களிலிருந்து

'எஸென்ஸ்' எடுத்து நறுமணப்பொருள்கள் தயார் செய்வது நல்ல இலாபகரமான தொழில்.

களர் நிலங்களில், குறிப்பாக உப்பு நிலங்களில் உப்புத் தண்ணீரையே குடித்து வளரும் தாவரங்களை வளர்க்கும் தொழில் நுட்பத்தையும், உப்பு அடிப்படையிலான தொழில் நுட்பத்தையும் பவ நகரில் உள்ள மத்திய உப்பு, கடல் தாவரங்கள் ஆய்வு நிறுவனம் (CSMCRI) வழங்குகின்றது. ஜோஜோபா என்றொரு தாவரம். இத்தாவரம் எண்ணெய் வித்து வகையைச் சார்ந்தது. ஜோஜாபாக்கிலிருந்து எடுக்கப் பெறும் எண்ணெய் தோல் அடிப்படையிலான தொழில் களுக்குப் பயன்படுகிறது. ஜோஜோபாக் செடி 150 ஆண்டுகள் வரை பலன் கொடுக்கும். நீண்ட கடற்கரையுடைய நமது நாட்டில் கடற்பாசி வளர்த்து அகர்அகர் செய்யலாம். இந்தோனேசியா முதலிய நாடுகளில் கடற்பாசியை உணவுப் பொருளாகப் பதப்படுத்திப் பயன்படுத்துகிறார்கள். நமது நாட்டில் கடற்பாசி வளர்க்க நிறைய வாய்ப்புக்கள் உள்ளன.

நமது நாட்டின் கிராமப்புறங்கள் செல்வக் களஞ்சியங் களாகும். கிராமப்புறங்களின் செல்வ ஆதாரங்களை முறை யாகப் பயன்படுத்தினால் குறைந்த மூலதனத்தில் நிறைந்த பயனடையலாம். கிராமங்களிலிருந்து நகரங்களை நோக்கி நகரும் வாய்ப்பைக் குறைக்கலாம். கிராமப்புறச் செல்வ ஆதாரங்களை முறையாகப் பயன்படுத்தினாலே போதும். கிராமங்களும் வளரும்; நல்ல தொழில் நுட்பமும் வளரும்.

வளர்ந்து வரும் கிராமங்களில் இயந்திரவியல் தொழில் களுக்கும் நல்ல வாய்ப்பு இருக்கிறது. உழு கருவிகள், நீர் இறைவை எந்திரங்கள் பழுது பார்க்க வேண்டும். மேலும் மேலும் விவசாயத்திற்குப் பயன்படும் கருவிகளையும் செய்து முடிக்கவேண்டும். மேலும், இன்று மின்சாரம் இல்லாத கிராமங்களே இல்லை என்று கூறலாம். மின்சாரம் சார்பான சாதனங்களைப் பழுதுபார்த்தல் முதலிய பணிகளைச்

செய்யலாம். மின்னியல் சார்ந்த பல தொழில்களைத் தோற்றுவித்து வளர்க்கலாம்.

கிராமப்புற வளர்ச்சி பற்றி நிறையப் பேசியாயிற்று! இனி, செய்யவேண்டும். நமது கிராமங்களில், என்று உழவும் தொழிலும் சிறந்து விளங்குமோ அன்றுதான் கிராமங்கள் மேம்பாடு அடையும். கிராமப்புறங்களில் எளிய மூலதனத்தில் தொடங்கக்கூடிய பழங்கள் பக்குவப்படுத்துதல், உணவுப் பொருள்கள் பக்குவப் படுத்துதல் முதலிய தொழில்களைத் தொடங்க வேண்டும். சுகாதார, மருத்துவப் பொருள்கள் உற்பத்தித் தொழிலையும் தொடங்கலாம். இங்ஙனம் கிராமப்புற வளர்ச்சிக்கு நமது நாட்டில் ஏராளமான தொழில் நுட்பங்கள் இருக்கின்றன. தேவை, ஆர்வந்தான்! கிராமப் புறங்கள் பண்டகசாலைகளாகவும், நகரங்கள் சந்தை களாகவும் வளர்ந்தால்தான் கிராமங்களை வளர்க்க இயலும்.

கிராமப்புறங்களில் உழைக்காத மனிதன் இல்லை, விளையாத நிலம் இல்லை, மாடுகள் இல்லாத வீடுகள் இல்லை என்ற நிலைமை உருவாக வேண்டும்.

## 19. *டாக்டர் ஜே. சி. குமரப்பாவின் கருத்துக்களை இன்றைய சூழலில் நடைமுறைப்படுத்தும் வழிகள்

இந்திய நாடு கிராமங்கள் நிறைந்த நாடு. கிராமங்கள் இயற்கை அமைப்பால் நெற்களஞ்சியம்; செல்வக் களஞ்சியம். நகரங்கள் விற்பனைக்குரிய சந்தைகளே! இதுவே பழங்கால இந்தியா. இன்றைய இந்தியாவில் கிராமங்கள் சுதந்திரமிழந்து ஒளியிழந்து நகர்ப்புறத்தைச் சார்ந்து விளங்குகின்றன. இத்தகு அவல நிலையிலிருந்து கிராமங்களை மீட்கத் தோன்றிய

* சிந்தனைச் சோலை

அறிஞர், கிராமியப் பொருளாதார மேதை. டாக்டர் ஜே.சி. குமரப்பா அவர்கள், உலக நாடுகளின் பொருளாதாரச் சித்தாந்தங்களைத் துறைப்போகக் கற்றுத் தெளிந்தவர். ஜே.சி. குமரப்பா அவர்களின் கிராமப் பொருளாதாரக் கொள்கை வெற்றி பெற்றால் நது நாடு, தன்னிறைவுள்ள நாடாக மாறி சிறந்து விளங்கும்.

மேதை குமரப்பாவின் கிராமப் பொருளாதாரக் கொள்கையில் விவசாயம் முதல் இடத்தைப் பெற்றிருக்கிறது. ஏன்? மனித குலத்தின் முதல் தேவை உணவு. அடுத்த தேவை உடை, உணவு, உடை அடிப்படையிலான உற்பத்தி-இவை சார்ந்த தொழில்கள் கிராமங்களில் முறையாக வளர்ந்தாலே கிராமங்கள் வளரும். வேலைகள் கிடைக்கும், தன்னிறை வுள்ள கிராமங்களாகும் என்பது மேதை குமரப்பா அவர் களின் கருத்து. இது நூற்றுக்கு நூறு உண்மை.

கிராமப் பொருளாதார மேதை குமாரப்பா அவர்கள் கிராம வளர்ச்சிக்கு, கூட்டுறவைப் பெரிதும் நம்பினார். ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு பலநோக்குக் கூட்டுறவு சங்கம் இருக்கவேண்டும் என்பது அவர் கொள்கை. "பண அடிப்படையிலான பொருளாதாரத்தைவிடப் பொருள் அடிப்படையிலான பொருளாதார இயக்கங்களே-வங்கிகளே -கூட்டுறவு அமைப்புகளே கிராமத்துக்குத் தொண்டு செய்ய இயலும்" என்பது மேதை குமரப்பா அவர்களின் கருத்து. இன்று நமது வேளாண்மைத் தொடக்கக் கூட்டுறவு வங்கிகள் இந்த அடிப்படையை ஏற்றுக்கொண்டு இயங்குதல் வேண்டும். அதாவது, தொழுஉரம் தயாரிப்பதிலிருந்து வேளாண்மையின் அனைத்துத துறைகளிலும் துணையாக, இந்த, தொடக்கக் கூட்டுறவு வங்கிகள் அமையவேண்டும்.

இன்று நீர்ப்பாசன நிர்வாகம் அரசின் பொறுப்பிலும் இல்லை; கிராமத்தின் பொறுப்பிலும் இல்லை; வல்லாளர்கள் கையில் இருக்கிறது. கிராமப்புற நீர்ப்பாசன

மேலாண்மையை, பராமரிப்பை தொடக்கக் கூட்டுறவு வங்கிகள் மேற்கொள்ள வேண்டும்.

இந்த யுகம், போட்டிகள் நிறைந்த யுகம். போட்டிகள் வளர்ச்சிக்குத் துணை செய்யும் என்கிற சித்தாந்தமே தோன்றி விட்டது. இந்தப் போட்டி மனப்பான்மையை மேதை குமரப்பா அவர்கள் வரவேற்கவில்லை. மாறாகக் கூட்டுறவு முறையில் அது நடக்க வேண்டும் என்பது மேதை குமரப்பா அவர்களின் உயர் கருத்து; கொள்கை. கிராமத்தின் அனைத்துத் தொழிற்பாடுகளும் கூட்டுறவின் மூலமே நடைபெற வேண்டும் என்பது மேதை குமரப்பா அவர்களின் உறுதியான கொள்கை. “ஒரு வெள்ளிச் சரட்டில் பவழங்களைக் கோர்த்தது போல்” கிராமத்தின் அத்துணை மக்களையும், பணிகளையும் கூட்டுறவு இணைந்து சிறந்து விளங்கவேண்டும். ஒரு கூட்டுறவு நிறுவனத்தின் செயற்பாடு பற்றி அந்தக் கூட்டுறவு நிறுவனத்தின் நிதிநிலை அறிக்கையை வைத்து அறிதல் கூடாது. மற்று எப்படி? கிராமத்தின் அன்றாடத் தேவைகளான உணவுப் பொருட்களையும் மற்றும் துணி முதலிய தேவைகளையும் உற்பத்தி செய்து வழங்கும் தகுதி பெறுவது கொண்டுதான், கூட்டுறவு நிறுவனத்தின் பணியை மதிப்பீடு செய்யவேண்டும் என்பது மேதை குமரப்பாவின் கொள்கை. ஒரு கிராமத்துக்கு ஒரு பலநோக்குக் கூட்டுறவு சங்கம் என்பது மேதை குமரப்பாவின் கொள்கை. இந்த ஒரு பலநோக்குக் கூட்டுறவு சங்கமே கிராமத்தின் உற்பத்தி மற்றும் சந்தை முதலிய பொருளியல் நிர்வாகத்தை நடத்தவேண்டும். இந்த முறையில் கூட்டுப் பொறுப்பு அதிகமாகி, நல்லவண்ணம் இருக்கும். ஆனால் இன்றோ கூட்டுறவை... துறைவாரியாகப் பிரித்து எண்ணற்ற நிறுவனங்களாக ஆக்கியதால் நிர்வாகச் செலவும், சுமையும் கூடுதலாகி இருக்கிறது. இது, வரவேற்கத்தக்கதல்ல. கிராமப் பலநோக்குக் கூட்டுறவு சங்கமே அனைத்துப் பணிகளையும் மேற்கொள்ளலாம் என்பது சிறந்த கொள்கை.

கிராம அளவில் பலநோக்குக் கூட்டுறவு சங்கம் அமைக்கப் பெற்று, பல நோக்குக் கூட்டுறவு சங்கம் நன்முறையில் நடந்தால், உலக நாடுகளுக்கிடையேகூட பொறாமையுடன் கூடிய போட்டிகள் தவிர்க்கப்படும் என்பதும், இந்தியாவிலும், சர்வதேச அளவிலும் பொருளாதார விடுதலையும், அமைதியும் கிடைக்கும் என்பதும் மேதை குமரப்பா அவர்களின் திடமான நம்பிக்கை. நமது நாட்டு வங்கிகள், மேற்கத்திய நாட்டு வங்கிகளைப் போல, தொழிலாகச் செய்யக் கூடாது. மேற்கத்திய நாடுகளில் வங்கி நடைமுறை, ஊசியின் மூலம் உடம்பிலிருந்து இரத்தத்தை எடுக்கும் முறை போன்றது. பொருளாதாரச் சுரண்டல் வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள். உற்பத்தியாளர்களைச் சுரண்டுவதை நிகர்த்தது. இத்தகைய சுரண்டல் முறையால் உணவுப் பொருள்கள் மற்றும் நுகர்வுப் பொருள் உற்பத்தியாளர்கள் பல ஆயிரக்கணக்கில் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். உற்பத்தி செய்யப்பெறும் உணவுப் பொருள்கள் காலகதியில் கெட்டுப்போகும் அல்லது அழிந்துபோகும் இயல்பின. ஆதலால், உற்பத்தி செய்த பொருள்களை அறுவடை செய்த கையோடு கையாக விற்க வேண்டிய ஒரு நிர்ப்பந்தமான பரிதாப நிலைமைக்கு விவசாயிகள் ஆளாகின்றனர். பலநோக்குக் கூட்டுறவு சங்கம் உற்பத்திப் பொருள்களில் கிராமத்தேவை போக மீதியைச் சந்தைக்கு எடுத்துச் சென்று விற்றுத்தர வேண்டும்.

கிராமப் பொருளாதாரத்திற்கும், மேம்பாட்டுக்கும் திட்டமிடும்பொழுது முதலில் சுகாதாரத்திற்குத் திட்ட மிடுவது நல்லது. உண்ணாமல் ஒருபொழுது இருக்கமுடியும். ஆனால் மலம், சிறுநீர் கழிக்காமல் இருத்தல் இயலாது. அது போலவே கால்நடைக் கழிவு, வீடுகளில் சேரும் குப்பைகள். இவற்றை உடனுக்குடன் அப்புறப்படுத்தி தொழு உரமாக ஆக்குதல் அவசியம். இதனால் கிராமமும், சுற்றுப்புறச் சூழலும் தூய்மையாக அமைகிறது. நோய் தடுக்கப்படுகிறது.

அழகு அமைகிறது. எல்லாவற்றிற்கும் மேலாக, முதல் தரமான உரம் தயாரிக்கப்படுகிறது. இன்று பெருவாரியாகப் பழக்கத்தில் உள்ள இரசாயன உரங்கள், உரங்களே அல்ல. அவை கிரியா ஊக்கிகளேயாம். உரங்களுக்கு பதில் மட்கிய தொழு உரங்களைப் பயன்படுத்தினால் நிலத்தின் தரமும் காப்பாற்றப்படும்; உற்பத்தியும் பெருகி வளரும். இரசாயன உரம் வாங்கும் செலவும் குறையும்; கிராமமும் அழகாக இருக்கும்; நோயற்ற வாழ்வும் அமையும்.

கிராமங்களில் அடுத்த இடத்தைப் பெறுவது விவசாயம். கிராமத்தின் தேவைகளை நிறைவு செய்யும் தொழிலில் முதன்மையான இடத்தை வகிப்பதும் விவசாயமே. கிராமத்தின் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளத்தக்கவாறு விவசாயத்திற்குரிய விளைபுலன்களை பகிர்தல் செய்யவேண்டும். மேதை குமரப்பா ஒரு கிராமம் சராசரி தன்னிறைவுடையதாக அமையவேண்டுமானால் அடியில் கண்டவைகள் அந்தக் கிராமத்தில் உற்பத்தியாக வேண்டும் என்கிறார்:

நவதான்யம், நெல், பருப்பு, சர்க்கரைக்கான கரும்பு, தேன். பனை கொட்டைவகைகள், எண்ணெய் வித்துக்கள், காய்கள், கிழங்கு வகைகள், பழவகைகள் ஆகியன உணவுக்கும், பருத்தி உடைக்கும் உற்பத்தியாக வேண்டும்.

கிராம மக்கள்தொகை அடிப்படையில் இவைகளின் தேவையைக் கணக்கிட்டு கிராமத்தில் எந்தெந்த நிலத்தில் எவை எவை விளையும் என்று கண்டு தெளிந்துகொண்டு பன்முகப் பயிர்ச் சாகுபடியை கிராமத்தில் அறிமுகப்படுத்த வேண்டும். இதனால் கிராமம் தன்னிறைவு உடையதாக விளங்கும். கிராமங்களில் பண்டமாற்று முறையை நடை முறைப்படுத்த வேண்டும். பணத்திற்குப் பண்டம் விற்பனை முறை தவிர்க்கப்படுதல் வேண்டும். இவையனைத்தையும் திட்டமிட்டு உற்பத்தி செய்து கிராம மக்களுக்குச் சமவிகிதச்

சத்துள்ள உணவுக்கு உத்தரவாதம் செய்யவேண்டும். இன்றைய இந்தியக் கிராமங்களின் உற்பத்தியில், இந்த உற்பத்தி முறை இல்லை. ஆட்டு மந்தைபோல், மற்றவர்கள் பயிர் செய்வதையே பயிர் செய்கின்றனர். அதுமட்டுமல்ல, இந்திய நாட்டுக் கிராமங்களில் பல இலட்சக் கணக்கான ஏக்கர் நிலங்கள் தரிசாகக் கிடக்கின்றன. நமது கிராமப் பொருளாதாரம் மேம்பாடடையவும், தன்னிறைவு காணவும் மேதை குமரப்பா அவர்களின் கொள்கையை நடைமுறைப் படுத்துவதே நாட்டுக்கு நல்லது.

கிராம வளர்ச்சியில் அடுத்த இடம் பெறுவது கால்நடை வளர்ப்பு. விவசாயத்தின் இணைத்தொழில் இது. கால்நடைகளுக்குத் தேவையான பசுந்தீவனமும் விவசாயிகள் உற்பத்தி செய்து தரவேண்டும். கால்நடைகள் விவசாயிகளுக்குப் பால் வழங்குவதோடு எரு மூலம் உரம் தந்து நிலத்திற்கு, மேம்பாட்டினையும் வழங்குகின்றன. கால்நடை வளர்ப்பு ஒரு தொழில் என்ற கருத்து உருவாக வேண்டும்.

அடுத்து, கிராமத்தில் தச்சு, கொல்லு, மர அறுவை, தேனீ வளர்ப்பு, மண்பாண்டம் செய்தல், பாத்திரங்கள் செய்தல், தோல் பதனிடுதல், தோல் அடிப்படையிலான பொருள்கள் செய்தல், உணவுப் பொருள்கள் பதப்படுத்தும் தொழில், எண்ணெய் ஆட்டுதல், சோப்பு தயாரித்தல், பழங்கள் பக்குவம் செய்யும் தொழில், நெசவு முதலிய தொழில்கள் தொடங்குவதற்குரிய மூலப்பொருள்களும் உள்ளன. இத் தொழில்களைச் செய்வதற்குரிய தொழிலாளி களும் உள்ளனர். இத்தகைய தொழில்களைத் திட்டமிட்டுத் தொடங்கினால் கிராமங்களிலேயே வேலை வாய்ப்புக்கள் உருவாகும். கிராம மக்கள்-இளைஞர்கள் கிராமங்களைவிட்டு நகரங்களுக்குப் புலம் பெயரவேண்டிய அவசியம் ஏற்படாது. கிராமங்கள் தன்னிறைவு பெறும்.

மேதை குமரப்பா அவர்கள் கிராமங்கள் ஒருங்கிணைந்த நிலையில் வளரவேண்டும் என்று விரும்பினார். மேதை குமரப்பா அவர்களின் கொள்கை வழி கிராமங்கள் வளரவில்லை. குன்றக்குடி வளர்ச்சிகூட மேதை குமரப்பா அவர்களின் சித்தாந்தப்படி அமையாதது. ஒரு பெரிய குறையே. இந்தக் குறையை நிவர்த்தி செய்ய முயற்சிகள் மேற்கொள்ளப்பெறும்.

இந்தியாவின் செல்வக் களஞ்சியம் கிராமங்களே! கிராமங்கள் வளர்வதற்குரிய திட்டங்களை மேதை குமரப்பா அவர்களின் கருத்துவழி, திட்டம் தீட்டி நடைமுறைப் படுத்துவது சாத்தியமே! நமக்கு வேண்டியது மனம் ஒன்றே!

# 20. *சர்வோதயம்

ஐரோப்பிய நாடுகளின் சித்தாந்தங்களையும், மனித இன வரலாற்றையும் விட பாரதத்தின் சித்தாந்தங்களும் மனித இன வரலாறும் மிகப்பழமையுடையன. சிக்கல்களுக்கு மேலெழுந்த வாரியாகத் தீர்வு காண்கின்ற சில நாடுகள் உண்டு. நமது நாட்டு மேதைகள் சிக்கல்களை நன்கு ஆழ்ந்து சிந்தித்து அவை தீர்வதற்குரிய வகையில் இறுதி முடிவு கண்டிருக்கிறார்கள். அத்தகு மேதைகளில் சிறந்து விளங்குபவர் அண்ணல் காந்தியடிகள்.

காந்தியடிகளின் புரட்சி இளவெயில் போல; பொதிகை மலைத் தென்றல் போல. என்றாலும் அது வலிமையும் உறுதியுமுடையதாக விளங்கியது.

காந்தியடிகள் தலை சிறந்த ஞானி. அறியாமை கலப்பில்லாத தூய அறிவிற்குத்தான் ஞானம் என்று பெயர். அது பேரொளியனையது.

* பொங்கல் பரிசு

காந்தியடிகள் பழைய பண்புகளுக்கும் நிகழவிருக்கும் புதுமைப் பண்பிற்கும் ஓர் இணைப்பு பாலத்தை ஏற்படுத்தினார். கங்கையும் யமுனையும் கலப்பதுபோல் பழமைக்கும்-புதுமைக்கும் இடையே வேறுபாடு தெரியாத விழுமிய ஒற்றுமையை உருவாக்கினார்; புதியதொரு சமுதாயத்தை உண்டாக்கினார்.

நம்மிடையே எப்படியோ ஒரு தனிமை உணர்ச்சி வளர்ந்து இருந்தது. அதன் காரணமாகப் பழக்கவழக்கங்களில் நாம் கூனிக்குறுகி வாழ்ந்தோம். அந்தக் கூனல் அந்நியர்கள் ஏறி உட்கார்ந்து சவாரி செய்வதற்கு வசதியாக இருந்தது. காந்தியடிகள் நமது கூனை நிமிர்த்தார். கத்தியை எடுத்துக் கொடுக்காமல்-இரத்தம் சிந்தும்படி செய்யாமல் நமது கூனை நிமிர்த்தினார். அதுவரை சுகமாக உட்கார்ந்து சவாரி செய்த வர்கள் சவாரி செய்ய முடியவில்லை-இறங்கி விட்டார்கள். இந்த அதிசயத்தைக் காந்தியடிகள் செய்து முடித்தார்.

எதையும் எப்படியும் செய்யலாம் என்று காந்தியடிகள் கருதியதில்லை. வாழ்க்கையின் இலட்சியம் உயர்ந்ததாக இருக்கவேண்டும். அந்த இலட்சியத்தை அடையும் வழிமுறையும் உயர்ந்ததாக இருக்கவேண்டும் என்பது காந்தியடிகளின் விழுமிய கொள்கை.

புதிய சமுதாய அமைப்புப் பற்றி அவர் கனவு கண்டார் என்று கூறுவதைவிட, எதிர்கால புதிய பாரதத்தை அவர் தரிசனம் செய்தார் என்று கூறுவதே சாலப் பொருத்த மானது. ஏனெனில் கனவுகள் நிறைவேறாமல் போவதும் உண்டல்லவா?

இந்த நாடு சுதந்திரம் பெற்றபோது எப்படி இருந்தது என்பது நாம் அறிந்த உண்மையே. வரைந்த வாழ்நாள் முழுதும் வாழமுடியாமல் இளமையிலேயே மரணமடைந் தோர் எண்ணிக்கை அதிகம். சமுதாயத்தில் ஏழைகளே அதிகமாக இருந்தார்கள். மனிதனை மனிதன் தொட்டால்

தீட்டு என்கிற மனோபாவம் இருந்தது. இவ்வளவுக்கும் விடிவு காண விரும்பினார் காந்தியடிகள். மனித குலத்தை ஒருகுலமாக்க வேண்டுமென்று அவர் விரும்பினார். காந்தீய தத்துவம் சமரச தத்துவம். பல்லாயிரக்கணக்கான ஆண்டு களாக வழிவழி வந்த தத்துவம். திருவள்ளுவரும், அப்பரடி களும், இராமலிங்கரும் போற்றிப் பாராட்டி வந்த தத்துவங் களை நடை முறைக்குக் கொண்டுவர முயற்சித்தார். உணவிலும், உடையிலும், போக்குவரத்திலும் மாற்றம் வந்திருக்கிறது-மனிதனுடைய மனத்திலே மட்டும் மாற்றம் வரவில்லை. 'அணைத்து வாழு' என்று ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கூறியிருக்கிறார்களே, அந்தப் பண்பு இன்று வரை வளர்ந்திருக்கிறதா? மாறாக எப்படி அடித்தால் அவனுக்கு நன்றாக வலிக்கும்? எப்படி அடித்தால் அவனை வீழ்த்தலாம் என்று ஆராய்கின்ற பண்பு வளர்ந்திருக்கிறது.

இன்று நம்மை நாமே ஆத்ம சோதனை நடத்திக் கொள்ளும் நிலைக்கு நாம் வந்திருக்கிறோம். இந்த நாட்டின் சமுதாய வரலாற்றில் காந்தியடிகளின் சித்தாந்தம் முழுக்க முழுக்கப் பொருந்தும். அதுதான் சர்வோதயம். எப்படி உதயம் இயல்பாகவே ஏற்படுகிறதோ அதுபோல சமுதாயத்தில் எல்லோரும் வாழுகின்ற ஒரு நல்ல அமைப்பு முறை இயல்பாகவே-தானாகவே உருவாகவேண்டும். அப்படித் தன்னியல்பாக வளர்வதுதான் சர்வோதயம்.

'எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே யல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே' என்ற தாயுமானாரின் சித்தாந்தம் சர்வோதயத்தின் முழுச் சித்தாந்தம் என்று கூறலாம்.

'தனியொருவனுக்கு உணவிலையெனில் சகத்தினை யழித்திடுவோம்' என்று பாரதியார் பாடினார். அந்தத் தனியொருவன் யாராக இருக்கமுடியும்? உரிமைகளைக் கேட்க வாயற்று, தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வழியும்

வலிமையும் அற்று மூலையிலே ஒதுக்கப்பட்டுக் கிடக்கின்ற ஒருவனைப் பற்றித்தான் பாரதியார் பேசுகிறார். அத்தகைய ஒருவனை நோக்கிச் சோறும் துணியும் போகும்படி செய்வதுதான் சர்வோதயம்.

95 பேரின் வாழ்க்கை உரிமைகளையும் அவர்களிடத்து உரமும் உறுதியும் இல்லையென்ற காரணத்தால் எஞ்சியுள்ள 5 பேர் பறித்துச் சுகவாழ்வு வாழுகிறார்களே! இந்நிலை இருக்கலாமா?

மனித சமுதாயத்தில் எந்த ஒரு கோடியில் வறுமை இருந்தாலும் அது நம்மை அரித்துத் தின்றுவிடும் என்பதை நாம் உணர்ந்து கொள்ளவேண்டும். நாம் எதற்கும் கும்பிடு போட மிக நன்றாகக் கற்றுக் கொண்டிருக்கிறோம். ஆனால் எதைக் கும்பிடுகிறோமோ அத்னுடைய தத்துவத்தை மட்டும் வாழ்க்கையில் காப்பாற்ற மாட்டோம். புறக் காட்சிகளையும் புறத் தத்துவங்களையும் பார்த்து அவற்றை நம்முடைய வாழ்க்கையில் மேற்கொள்ள வேண்டும்.

காந்தியடிகளின் நினைவாக நாம் சத்தியம் செய்து உறுதி எடுத்துக் கொள்ளவேண்டும். அவர் வலியுறுத்திவந்த தத்துவங்களை-சித்தாந்தங்களை நாம் கொஞ்சம் கொஞ்சமாகவாவது வாழ்க்கையில் மேற்கொள்ளும் முயற்சியில் வெற்றி பெறவேண்டும்.

சமயவாதி என்றால் நல்ல மணமுள்ள மலர்போல இருக்கவேண்டும். மலரின் மணத்தினாலாய இன்ப அனுபவம் மனிதர்களுக்கே யாம் - மலர்களுக்கல்ல. மலர் இருக்கும் செடி அனுபவிப்பது பலருக்கு அருவருப்பூட்டும் உரத்தைத்தான். ரோஜா மலர் வண்ணத்தால் மணத்தால் பலருக்கு விருந்தளிக்கிறது; அதுபோலவே மனிதனும் காட்சி யாலும் செயலாலும் மற்றவர்களுக்கு இன்பம் அளிக்க வேண்டும். அது மனிதனின் கடமை. இதனை நமக்கு உணர்த்துவதுதான் சர்வோதயம்.

நாம் சுதந்திரம் பெற்ற நாளிலிருந்து இந்த நாட்டின் அரசியல் வரலாற்றில் ஒரு தொய்வு ஏற்படவில்லை. இப்போது தொய்வு ஏற்படுமோ என்ற ஓர் அச்சம் பிறந்திருக்கிறது. அந்த அச்சத்தைப் போக்கும் முயற்சியில் சர்வோதாய ஊழியர்கள் தீவிரமாக ஈடுபட வேண்டும்.

நாம் பூரண சுதந்திரத்தை அனுபவிக்க வேண்டு மென்றால், சர்வோதய தத்துவங்களை நடைமுறைக்குக் கொண்டு வருவது தவிர வேறு வழியில்லை. சமுதாய ரீதியாக-சமய ரீதியாக-அரசியல் ரீதியாக அமைந்த அற்புத மான ஓர் விளக்கு சர்வோதயம். விளக்கைச் செய்து கொள்ள முடியாதவர்களாக நாம் இருக்கலாம். விளக்கைச் செய்து கொடுத்த பிறகு அந்த விளக்கை ஏற்றி, இருளைப் போக்கி விளக்கொளியில் வாழ முடியாதவர்களாக இருக்கலாமா?

காந்தியடிகளுக்குப் பிறகு, வினோபாஜி சர்வோதய இயக்கத்தின் தலைவராக விளங்குகிறார். இந்த 20-ஆம் நூற்றாண்டிலேயே-வினோபாஜி நம்மிடையே வாழுகின்ற காலத்திலேயே காந்தியடிகள் காண விரும்பிய சர்வோதய சமுதாயத்தை-புதிய சமுதாயத்தைக் காணவேண்டும் என்ற முயற்சியில் நாம் ஈடுபடவேண்டும். நாமனைவரும் ஓரணியில் சேர்ந்து, அண்ணல் காந்தியடிகளுக்குக் காணிக்கையாக அவரது சித்தாத்தங்களை ஆண்டுக்கு ஒன்று வீதமாகவாவது எடுத்துக்கொண்டு நடைமுறைக்குக் கொணர முயற்சிக்க வேண்டும்.

## 21. *சோஷலிசம்

**த**மிழ் காலத்தால் மூத்த மொழி. கருத்தாலும் மூத்த மொழி. இன்றைக்குச் சற்றேறக்குறைய மூவாயிரம் ஆண்டு களுக்கு முன்பு தோன்றியது தொல்காப்பியம். இன்று தமிழ்

* பொங்கல் பரிசு

இலக்கியங்களில் மிகப் பழமையானது, தொல்காப்பியமே யாகும். மூவாயிரமாண்டுகளுக்கு முன்பே வாழ்க்கை நெறிமுறைகளைப் பற்றித் தமிழர்கள் கவலைப்பட்டிருக் கிறார்கள். வேறு எம்மொழிக்கும் இல்லாத சிறப்பு தமிழுக்கு உண்டு. தமிழில் எழுத்துக்கும் சொல்லுக்கும் சொல்லோடு தொடர்புடைய பொருளுக்கும் வளர்ந்த இலக்கண மரபுண்டு. ஆரிய மொழியைவிடத் தமிழ் இலக்கண வரம்பிற் சிறந்ததென்று பரஞ்சோதி முனிவர் பாராட்டுகின்றார். எழுத்திலக்கணம் சொல்லிலக்கணம் மட்டுமில்லாமல் வாழ்க்கைக்கும் இலக்கணம் கண்டமொழி தமிழ். பாட்டுக்குப் பொருள் என்றாலே நல்வாழ்க்கை என்று கருதுவது தமிழ் மரபு. அதனாலன்றோ எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என்று இலக்கண நூலை முறைப்படுத்தி னார்கள். பொருளதிகாரம் தனிமனிதன், அவனுடைய காதல் வாழ்க்கை ஆகியவற்றை அகத்திணை என்றும், அதே தனி மனிதன் வெளிப்புற உலகத்தோடு கொள்ளும் தொடர்பு களைப் புறத்திணை என்றும் வகுத்துப் பேசுகின்றது. இங்ஙனம், வழிவழியாக வாழ்க்கையின் நெறி முறைகளைப் பற்றித் தமிழினம் கவலைப்பட்டமையின் காரணத்தால் தமிழில் காலத்திற்குக் காலம் அறநெறி நூல்கள் நிறையத் தோன்றின. இங்ஙனம் தோன்றிய நூல்களுள் மிகமிகச் சிறந்தது திருக்குறள். மக்களாகப் பிறந்தோர் பேசுகின்ற வேறு எம்மொழியிலும், திருக்குறளைப்போல் ஒரு வாழ்க்கை நூல் தோன்றியதில்லை. ஏசு பெருமானுக்கு முற்பட்டவராகிய திருவள்ளுவர், மனித இனத்தின் வாழ்க்கையைப் பல்வேறு கோணங்களில் ஆராய்ந்து அரியதொரு நூலைச் செய்துள்ளார். அர்த்த சாஸ்திரத்தை ஆக்கித் தந்த கௌடல்யருக்கும் திருவள்ளுவர் முற்பட்டவர் என்பது வரலாற்றுண்மை.

திருக்குறள் தனிமனிதன், குடும்பம், சமுதாயம், அரசு ஆகிய படிமுறை வளர்ச்சிகள் வளர்ந்திருந்த காலத்திலே தோன்றிற்று. மனித சமுதாய அமைப்பில் மேற்கூறிய

படிகளைப்பற்றித் திருக்குறள் தனித்தனியே ஆய்வு செய்து விளக்குகிறது. சமுதாயத்தின் தொடக்கத்தில் தோன்றிய நூலன்று. எனினும், சமுதாய அமைப்பில் பல்வேறு படிகள் தோன்றியிருந்தாலும், அந்தப் படிவளர்ச்சிகள் நிறைவு பெறா மலும், பூரணத்துவம் அடையாமலும் அவல நிலையிலிருந்த பொழுது திருக்குறள் தோன்றிற்று. திருக்குறள், முறையாக சமுதாயத்தின் பல்வேறு படிகளின் வளர்ச்சி முறைகளைப் பற்றியும், அவை அமையவேண்டிய இயல்புகளைப் பற்றியும் தெளிவாக விளக்குகின்றது. தனிமனிதன், குடும்பம், சமுதாயம், அரசு எனும் முறைவைப்பைத் திருக்குறள் ஏற்றுக் கொள்ளுகிறது. சமுதாயத்தின் மேற்கூறிய அமைப்புகளுக்குள் இருக்கவேண்டிய உறவு முறைகளைத் திருவள்ளுவர் வரையறுத்துக் காட்டுகிறார். அறத்துப்பாலில் தனிமனிதனின் வாழ்க்கைக் கடமைகளை வற்புறுத்திக் கூறுவதோடு, தனி மனிதன் சமுதாயத்தோடு உறவு கொண்டு வாழ்தற்கு இன்றி யமையாத நல்லியல்புகளையும் எடுத்துணர்த்துகிறார். பொருட்பாலில் அரசு, குடி மக்கள் இயல்பு ஆகியவைகளை விரிவாக விளக்குகிறார்.

திருக்குறள் ஒரு நல்ல இலக்கியம். இலக்கியத்திலும் சிறந்த அறநூல்; அரசியல் நூலும் கூட. கற்பனைக் காட்டுக்குள் கருத்துக்கள் ஒளித்து போகாமல் கண்ணாடியின் முன் உருவமென அவை வெள்ளிடை மலையென விளங்கும் வண்ணம் அமைக்கப்பெற்ற நூல். குறைகளைக் காட்டுகின்றார்; ஆனால், அப்பட்ட நிர்வாணமாக அல்ல. குறைகளைக் காட்டும் முயற்சியைவிட நிறைவைக் காட்டும் முயற்சியே திருக்குறளில் மேம்பட்டுள்ளது. திருக்குறள் ஒரு சிறந்த ஒழுக்க நூலாகத் திகழ்கிறது. திருக்குறள் காட்டும் ஒழுக்கம் அதிமானுட (Superman)னுக்கு உரியதன்று. சராசரி மனிதன் கடைப்பிடிக்கக்கூடிய ஒழுக்க நெறிகளை வாழ்க்கையோடு இணைக்க முடியவில்லை என்று யாராவது சொன்னால்

அவர்களை ஐந்தறிவுடையவற்றோடு வைத்தெண்ணுவது தவிர வேறு வழியில்லை.

திருக்குறள் பழமை தழுவிய நூல். எனினும், புதுமை நலம் போற்றும் நூல். திருக்குறள் ஒரு முற்போக்கு நூல். அரசியல் மரபுச் சொற்படி கூறுவதென்றால் அது இடதுசாரி நூல். சமநிலைச் சமுதாய அமைப்பிற்குரிய வித்துக்களைப் பன்னூறாண்டுகட்கு. முன்பு கண்டு காட்டிய பெருமை திருக்குறளுக்கு உண்டு.

கொம்புகளும் கொப்புகளும் அடர்ந்து நிறைந்து விளங்கும் ஒரு மரம். தோற்றத்திற்குக் கொம்புகளும் கொப்பு களுமே மிகுதியும் வரும். பயனும் அப்படியே. எனினும் கொம்புகள் கொப்புகளின் தோற்றத்திற்கு நிலைக்களனாகவும், அவற்றைத் தாங்கி நிற்பதுவும் ஆகிய அடிமரத்தை மறக்க முடியாது. மறுக்கவும் முடியாது. அடிமரம் இன்றேல் கொம்புகள் இல்லை; கொம்புகளும் கொப்புகளும் இல்லை யானால் அடிமரத்திற்கு அழகில்லை; ஆற்றலில்லை. பயன் தரும் வகையிலும் சிறப்புக்குறையும். இதுபோன்றே தனி மனிதன்; சமுதாய அமைப்பு. பரந்துபட்டு, வளர்ந்திருக்கும் சமுதாய அமைப்பில், தனிமனிதன் முக்கியமான பாத்திரத்தை வகிக்கிறான். தனிமனிதனின் சிந்தனையால்-சீரிய முயற்சியால்-உருவாகியதே சமுதாய அமைப்பு. தனி மனிதனின் உரிமைகள் மதிப்பிற்குரியவை. அவை மதிப்பிற் குரியவை என்ற கொள்கை ஒரு மனிதனுக்கு மட்டுமன்றி சமுதாயத்தில் வாழும் எல்லாத் தனிமனிதனுக்குமே பொருந்தும். ஒவ்வொரு தனிமனிதனும் பிறிதொரு தனி மனிதனின் உரிமையைக் காப்பாற்றிக் கொடுக்கக் கடமைப் பட்டிருக்கின்றான். தனிமனிதனிடத்தில் காணப்பெறும் சிறப்புக்கள் சமுதாய வாழ்க்கைக்கும் பொருந்தி அமைவன வாகும். தனிமனிதன் கெட்டால் நாடு கெடும். ஆதலால், சமுதாயத்தின் அடித்தளமாக அமைந்துள்ள தனிமனிதனை வளர்க்கும் அரிய முயற்சியில் திருவள்ளுவர் ஈடுபடுகின்றார்.

முதற்பாலாக விளங்கும் அறத்துப்பால் முழுவதிலும் தனி மனித வாழ்க்கையைப் பற்றியே பேசுகின்றார். ஏன்? பாயிரத்திலே தனிமனிதனை உருவாக்கும் முயற்சியில் திருவள்ளுவர் ஈடுபடுகின்றார்.

காலம் மனிதனின் சிறந்த கருவி. அதை உணர்ந்து பயன்படுத்துகிறவன் வளர்கிறான்; முன்னேறுகிறான். மனிதன் பெறக்கூடிய அறிவு, செல்வம், புகழ் ஆகிய பேறுகள் அனைத்தையும் காலம் என்ற கருவியின் மூலமே மனிதன் அடைகின்றான். ஆதலால் காலத்தே செய்யவேண்டு மென்பது வள்ளுவர் நெறி. செல்வத்தை இழந்தால் திரும்ப ஈட்டலாம். இழந்த புகழையும்கூட திரும்பப் பெறலாம். ஆயினும், இழந்த காலத்தைத் திரும்ப அடைதல் - அல்லது பெறுதல் சாத்தியமில்லை. காலம் விலைமதிப்பற்றது. அதனா லன்றோ 'பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' என்று அப்பரடிகள் கூறியுள்ளார். ஒரு சோஷலிச சமுதாயத்தி னுடைய அமைப்பின் அடித்தளம் உழைப்பேயாகும். உழைப்பு உருப்பெறுவது காலம் என்னும் அடிப்படையி லேயே. அதனால்தான் திருவள்ளுவர்,

> "வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்
> வாழ்நாள் வழியடைக்கும் கல்"
>
> —குறள் 38

என்கிறார்.

காலத்தை 'வீழ்நாள்' என்று குறிப்பிடுவது அறிவியலின் பாற்பட்ட கருத்து. மனிதன் வேறு எதை நிறுத்தினாலும் நிறுத்தி வைக்க முடியும். ஆனால் காலத்தை வராமலோ போகாமலோ நிறுத்தி வைக்கமுடியாது. இயல்பாக நம்முன் வேலைக்கென்று-கடமைகளுக்கென்று வீழ்கின்ற நாட்கள் என்று பொருள்படும். பிறிதொரு வழியிலும் பொருள் கொள்ளலாம். நன்றாற்றின் நாள் வீழாமல் என்றும் கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளலாம்.

அதாவது, கடமைகளைச் செய்வதற்காக நம்முன் நாள் என்ற பெயரோடு வந்த காலத்தை வீணாக்காமல் பயன் படுத்தி நல்லன செய்தால் வையக வாழ்வு இன்பமாக அமையும். வையக வாழ்வு இன்பமாக அமையப் பெற்றால் இன்பங் கருதிச் செய்யப்படுகின்ற தீவினைகள் இல்லாமற் போகும். கொலை, களவு, பொய் போன்ற குறைகளில் இருந்து விடுதலை பெறலாம். இந்த விடுதலை கிடைக்கப்பெற்றபின் பிறப்பினின்றும் விடுதலை கிடைக்கும். அதன் காரணமாக மீண்டும் பிறத்தல் தடைப்படும். இதுவே சிறந்த சமயநெறி-சமயக் கருத்து. இக் கருத்தையே திருவள்ளுவர் வாழ்நாள் வழியடைக்கும் கல் என்று குறிப்பிடுகின்றார். ஈண்டு திருவள்ளுவர் கல் என்று குறிப்பிட்டது மிகமிகச் சிறந்த கருத்து. திருவள்ளுவர் காலத்திலேயே வாழ்நாள் வழியடைக்கும் முயற்சி-அதாவது பிறவிப் பெருங் கடலிலிருந்து கரையேறும் முயற்சி நடைபெற்றுவந்தது. இம்முயற்சியைப் பலர் பாராட்டி னார்கள்-வழிவகை காட்டினார்கள். ஆயினும் பலர் காட்டிய வழி வெள்ளத்திலே கட்டிய மணற்சுவர் போன்றிருந்தது-நெருப்பிடை எழுப்பிய விறகுக் குவியல் போன்றிருந்தது. முன்னது வெள்ளத்தில் கரைந்தழியும்; பின்னையது எரிந்தழியும். அதுபோல, வாழ்நாள் வழியடைக்கும் முயற்சி களுக்குப் பலர் நெறியல்லா நெறி தன்னைக் காட்டியபோது உண்மை நெறி காட்டுகின்றார் திருவள்ளுவர். அதாவது, உலகியல் வாழ்க்கைக்கு உரியது; வாழ்கைக்கு உரிய காலத்தை ஓடி ஒளிதல் மூலமோ உட்கார்ந்து உறங்குதல் மூலமோ பாழ் படுத்தல் பாலைப் பாலைவனத்தில் கொட்டியதற்கொப் பாகும். நன்றாக வாழ்தல் மூலமே விடுதலையே தவிர, வேறு வழியினால் அன்று. பசித் துன்பத்திற்கு விடுதலை, பட்டினி யன்று - உண்பதேயாகும். ஆர்வம் ஆசையினால் துடித்திடும்; ஆன்மா அதனைப் பெற்றனுபவித்து அதனினும் மேலான ஒன்றுக்கு இலட்சியத்தை விரிவடையச் செய்து கொள்ளுதலே வாழ்க்கை முறை. குழியில் தலைகாட்டிய

கொடியே கொம்பில் படர முடியும். அதுபோல, உலகியல் அனுபவத்திற்குரியன இல்லாமையை வழியின்பாற்படுத்தி வாழாக்கிடக்கச் செய்தலோ அல்லது கிடைக்காமையின் காரணமாக அவை நிலையற்றன-பயனற்றன என்று கூறுதலோ வாழ்க்கையின் முழுநிறை வளர்ச்சிக்குத் துணை நிற்கமாட்டா. அதனால் திருவள்ளுவர் வாழ்க்கையை ஒத்துக் கொள்ளுகின்றார். பொருள் செய்தல்வேண்டும் என்று வற்புறுத்துகின்றார்; வாழ்வாங்கு வாழவேண்டும் என்று வற் புறுத்துகின்றார்; வாழ்வாங்கு வாழ வழியும் காட்டுகின்றார். ஆதலால் தனிமனித வாழ்க்கையின் முன்னேற்றத்திற்கும் நாகரிகத்திற்கும் பண்பாட்டிற்கும் காரணமாக இருக்கின்ற காலத்தைப் பயன்படுத்திக் கடமைகளைச் செய்தலைத் திருவள்ளுவர் வற்புறுத்துவது மிகவும் முற்போக்கான கருத்து.

## ஊக்கமுடைமை

மனித உயிருக்கு இயல்பிலேயே அறிவறியும் ஆற்றல் உண்டு. கிளர்ந்து எழுகின்ற இயல்பும் உண்டு. உயிரின் இந்தக் கிளர்ந்தெழும் ஆற்றல் நல்வழிப்படுத்தப்பெறும்பொழுது சிறந்த பயனைத் தருகின்றது. உயிர் கிளர்ந்தெழுந்து செயல் செய்யும் உணர்வுக்கு ஊக்கமுடைமை என்பது பெயர். ஒப்பற்ற சமநிலைச் சமுதாயத்தை அமைக்க மனிதன் விரும்பு வானாயின் அவனுக்கு முதலில் தேவை ஊக்கமுடைமை. ஊக்கமுடையவர்கள் முற்பிறப்பு, அவ்வழிவரும் பலாபலன் களை நம்பமாட்டார்கள். அப்படியே ஒருகால் நம்பினாலும் தம்முடைய முயற்சியால் அதை மாற்றியமைக்க முடியும் என்ற உறுதிப்பாடு தோன்றும். திருவள்ளுவர், **'கூற்றம் குதித்தலும் கைகூடும்'** என்று கூறுகின்றார். ஆதலால் மனித னுடைய ஊக்கம், அவ்வழி, சமுதாயத்திற்கு இன்றியமையாத ஒன்று. கைப்பொருள் அழியலாம். ஆனால், உள்ளக் கிளர்ச்சியும், ஊக்கமும் அழியமாட்டா. சமநிலைச் சமுதாய அமைப்பைத் தோற்றுவிக்கும் முயற்சியின் முதற்படி

மக்களைச் செல்வ முடையோராக்குதல் அல்ல– உழைப்பதற்கு அறிவையும், ஆற்றலையும் தருவதேயாகும். அதனாலன்றோ திருவள்ளுவர்,

> 'உடையார் எனப்படுவது ஊக்கம் அஃதிலார்
> உடையது உடையரோ மற்று' –குறள் 591

என்கிறார். இன்றைய உலகியலிற்போல நிலவுடைமை– பொருளுடைமை முதலியவற்றை முதன்மைப்படுத்தாமல் அவற்றைப் படைக்கக்கூடிய ஆற்றலையே, அல்லது ஊக்கத்தினையே உடைமை என்று திருவள்ளுவர் குறிப்பிடுவது மிகவும் திருந்திய கருத்து. அதுமட்டுமா? உள்ளக் கிளர்ச்சியும் ஊக்கமும் இல்லாதார்மாட்டுச் சமுதாய அமைப்பில் உள்ள சீர்கேடுகளின் வழியாகக் குருட்டாம்போக்காகச் செல்வம் கிடைத்துவிட்டாலும் அப் பொருளுடைமை நில்லாது நீங்கிவிடும் என்பதும் திருவள்ளுவர் கருத்து.

பொதுவாக, பொருளைத் தேடிச் செல்வோர் பலருண்டு. பொருளைத் தேடிச் செல்வோர் பெருகியுள்ள சமுதாயம் வளர்ச்சியடைந்த ஒரு சமுதாயம் அல்ல. பொருள் மனிதனுடைய ஆற்றல்மிக்க படைப்பினால் படைக்கப் பெறும் ஒன்று. தான் படைத்து அனுபவிக்கக் கூடிய ஒன்றினைத் தேடிச் செல்வது அறிவுடைமையாகாது. பொருள் மனிதனை நோக்கி வரவேண்டும். அது எப்போது நிகழும்? நடுக்கமற்ற நம்பிக்கையுணர்வோடு எவனொருவன் உழைக்கின்றானோ அவனை நோக்கிச் செல்வம் வழிகேட்டுக் கொண்டு வலிய வந்து குடிபுகும்.

> 'ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
> ஊக்கம் உடையா னுழை' –குறள் 594

என்கின்றார் திருவள்ளுவர். ஊக்கத்திற்கு அசைவிலா ஊக்கம் என்று அடைமொழி கொடுத்துப் பேசுகின்றார். பலருக்குத் தொடக்க நிலையில்... முதல் தடவையில்

கிளர்ச்சியும் ஊக்கமும் தோன்றும். ஆனால், எடுத்த காரியம் கைகூடாது போனாலும் இடையில் இடுக்கண்கள் பல ஏற்பட்டாலும் சோர்வடையாமல் மீண்டும் உழைப்பவனே பொருள் உடையவனாக விளங்க முடியும். பெருங்கதை, 'ஊக்கவேந்தன் ஆக்கம்போல்' என்று பேசுகின்றது. ஆதலால் இன்பத்தைக் கண்டு மகிழாமலும், துன்பத்தைக் கண்டு துவண்டுவிடாமலும் தொடர்ந்து முயற்சித்தலே வாழ்க்கையை வெற்றி முகமாக்கிக் கொள்ளுதற்கு உரிய வழி. சிறந்த முறையில் எண்ணி ஊக்கத்தோடு செயற்பட்டால் காரியம் கை கூடினாலும் கூடாதுபோனாலும் அந்த எண்ணத்திற்கும் ஊக்கத்திற்கும் பயனுண்டு, **'வாழ்க்கைப் போராட்டங்களில்தான் நற்பண்பு தங்கியிருக்கிறது—வெற்றியிலல்ல'** என்னும் அனுபவ உரை எண்ணி இன்புறத்தக்கது. உலகியல் இயற்கையிலும் செயற்கையிலும் பல்வேறு துன்பங்களால் சூழப்பெற்றது. இச்சூழலை வெற்றிகொண்டு பொருளை உற்பத்திசெய்து குவித்தலின் மூலமே சமநிலைச் சமுதாயத்தை உருவாக்க முடியும். தரித்திரத்தைப் பங்கு போடுவதும் மிகச் சிறிதாக இருக்கும் - முடங்கிக் கிடக்கின்ற மூலதனத்தைப் பகிர்ந்துகொள்ளுதலும் சமநிலைச் சமுதாயமல்ல. உழைப்பும் உற்பத்திப் பெருக்கமும் சமநிலைச் சமுதாயத்தின் இரட்டை நாடிகள். பொருள் செய்து குவிக்க வேண்டும் என்ற உள்ளம்—உள்ளத் துடிப்பு-உள்ளக் கிளர்ச்சி-ஊக்கம் இல்லாதவர்கள் செல்வமுடையோர் என்ற செருக்கை ஒருபொழுதும் பெறமாட்டார்கள் என்று திருவள்ளுவர் திட்டவட்டமாகக் கூறுகின்றார்.

> 'உள்ளம் இலாதவர் எய்தார் உலகத்து
> வள்ளியம் என்னும் செருக்கு'
>
> —குறள் 598

என்பது திருவள்ளுவர் வாக்கு. ஆதலால், வாழ்க்கையின் இன்றியமையாத் தேவையாகிய பொருளை—அப்பொருள் பற்றிய மதிப்பீட்டை—அப்பொருளைப் பெறுதற்குரிய

வழியைத் திருவள்ளுவர் விளக்கும் முறை முற்றிலும் விஞ்ஞானப் பார்வையின்பாற்பட்டதாக உள்ளது. மிகவும் முற்போக்கான கருத்து. வாழ்க்கைக்குப் பொருள் இன்றியமை யாதது என்பதை இரு பொருள்படப் பேசாமல் திட்டவட்ட மாக ஒத்துக்கொள்ளுகின்றார். அந்தப் பொருள் பரம்பரை வழியாகக் கிடைத்திடுமாயின் அது உடைமையல்ல என்றும் கூறுகின்றார். பொருள் உடைமையைவிடப் பொருளைப் படைக்கின்ற ஆற்றலுடைமையை-ஊக்கமுடைமையையே உடைமை எனப் பாராட்டுகின்றார். இஃது இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு மிகமிக வியக்கத்தக்க ஒரு கருத்து. இதனையே இன்றையப் பொருள் முதல் வாதம் சித்தாந்தமாக எடுத்துக்கொண்டிருக்கிறது; தனிமனிதன் காலம் என்ற களத்தில் நின்று, ஊக்கமுடையவனாகப் பொருள் செய்து குவிக்க வேண்டும். இதுவே சமநிலைச் சமுதாய அமைப் பிற்குத் தொடக்க நிலையாகும்.

## அறிவுடைமை

முற்போக்குச் சமுதாயம் அமையக் காலமும் ஊக்கமும் எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியமானது அறிவும். ஏன்? காலத்தையும் ஊக்கத்தையும்விட அறிவுடைமை மிகமிக இன்றியமையாதது. அறிவுடைமைதான் காலத்தையும் ஊக்கத்தையும் முறைப்படி பயன்படுத்தத் துணை செய்கிறது.

சோஷலிச சமுதாய அமைப்பை உருவாக்க வேண்டுமானால், மக்களிடத்தில் சரியான அறிவு பரவுதல் வேண்டும். சென்ற காலத்தில், தனிமனித வாழ்க்கையிலும் சரி, சமுதாய வாழ்க்கையிலும் சரி ஏற்பட்டுள்ள எண்ணற்ற தவறுகளுக்கு அடிப்படை அறியாமையேயாகும். மயக்கத்தின் பாற்பட்ட-முறை பிறழ உணர்ந்த அறிவினாலும் தவறுகள் நிகழ்வதுண்டு.

வாழ்க்கை ஆக்கத்தின்பாற்பட்டது. ஆக்கமும் அறிவினாலாயது. ஆனால், ‘ஆக்கம் அறிவினாலும் முயற்சி

யினாலும் ஆவதில்லை-அது அவன் செயல்' என்று கருதி வாழ்க்கையை இழந்தோர் ஏராளமானவர்கள், இதனை யுணர்ந்த திருவள்ளுவர் அறிவுடைமையின் இன்றியமை யாமையை வற்புறுத்துகின்றார். அவர் காட்டும் அறிவு அமிழ்ந்துகிடக்கும் அறிவு அல்ல; அதிட்டத்தை எதிர் நோக்கி யிருக்கும் அறிவல்ல; ஆண்டவனையே நம்பிக் கிடக்கும் அறிவு மல்ல! 'அறிவுடையார் ஆவதறிவார்' என்று திருவள்ளுவர் கூறுவது மிகச் சிறந்த கருத்து. சோஷலிச சித்தாந்தத்திற்கு உடன்பட்ட கருத்து.

உலகம் தொன்மையானது. சென்ற காலத்திலும் உலகம் நிகழ்ந்தது-இன்றும் நிகழ்ந்துகொண்டிருக்கிறது, இன்று வாழும் பலர், அறிவிலும் உணர்ச்சியிலும் சென்ற காலத்தி லேயே இருந்துகொண்டிருக்கிறார்கள். அஃது அறிவின் சின்னமல்ல. இன்றைய உலகம் எங்ஙனம் இயங்குகிறதோ அதன் இயல்புக்கேற்றவாறு தம்முடைய வாழ்க்கையை அமைத்துக்கொள்ளுதல் அறிவுடைமை. யதார்த்த உலகம், நடைமுறையனுபவம் இவற்றோடு இணைக்கப்பட்ட அறிவே அறிவு என்பது சோஷலிச சித்தாந்தத்தின் அடிப்படை. இதனைத் திருக்குறள்,

"எவ்வ துறைவ துலகம் உலகத்தோடு
அவ்வ துறைவது அறிவு"

—குறள் 426

என்று பேசுகின்றது.

மேலும், அறிவு என்பது வளர்ந்துகொண்ட இருக்கக் கூடிய ஒன்று. அஃது நிலைபெற்ற தன்மையுடையதல்ல. இன்றைய அறிவு நேற்றைய அறிவைவிட வளர்ச்சியுடைய தாக இருக்கவேண்டும். இன்றைய அறிவைவிட நாளைய அறிவு வளர்ச்சியுடையதாக இருக்க வேண்டும். இதுவே உலக நியதி. திருவள்ளுவரும்,

*"தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து*
*மன்னுயிர்க் கெல்லாம் இனிது"* –குறள் 68

என்ற குறட்பாவின் மூலமும் இக்கருத்தை வலியுறுத்துகிறார். **'அறிதோ றறியாமை கண்டற்றால்'** என்ற சொற்றொடராலும் அறிவின் வளர்ச்சியைத் திருவள்ளுவர் ஏற்றுக் கொள்ளு கின்றார்.

1. மனித வாழ்க்கையின் வளர்ச்சிக்கும் ஏற்றத்திற்கும் அறிவு இன்றியமையாதது.

2. அறிவு, உலகியலில் யதார்த்த நடப்புக்கு ஒத்திருக்க வேண்டும்.

3. அறிவு வளர்ச்சி அடையக்கூடியது.

என்னும் மூன்று கருத்துக்களும் சோஷலிச சித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கைகள். இம்மூன்றையும், 19ம் நூற்றாண்டின் மக்கள் மன்றத்தில் அறிமுகமான சோஷலிச சித்தாந்த இலக்கியப் படைப்புக்கள் விரிவாக ஆராய்ச்சி செய்கின்றன. அக்கருத்தினையே இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தோன்றிய 'திருவள்ளுவர் குறட்பா வடிவில் எடுத்துக் காட்டியுள்ளதை எண்ணும் பொழுது பெருமித உணர்ச்சி மேலிடுகிறது. எனினும் பெருமித உணர்ச்சி தோன்றிய சுவட்டையும்கூட கண்டுகொள்ள முடியாத வண்ணம் சிறுமை மூடிவிடுகிறது. திருவள்ளுவர் காட்டிய அறிவுப் பார்வை இன்றளவில் தமிழகத்தில் வளரவில்லை. மாறாகத் திரிந்த கருத்துக்கள் கால்கொண்டுள்ளன. இன்று அறிவு என்றால் புத்த அறிவு– உலகம் என்றால் உயர்ந்தோர். நிகழ் கால அறிவைவிடச் சென்றகால அறிவு சிறந்தது என்பன போன்ற கருத்துக்களே பரவி வருகின்றன. அதனாலேயே, தமிழ் இனம் வளர்ந்து வீழ்ந்து வருகிறது. இந்த அவல நிலைமைக்குப் பிறகாவது திருவள்ளுவர் இனங்காட்டி எடுத்துக்கொள்ளத் தூண்டிய அறிவை எடுத்துக் கொள்வோமாக!

# 22. *சமவுடைமைத் தத்துவம்

சமூகத்திலிருந்து, தனிமனிதனா? தனி மனிதனிலிருந்து சமூகமா? என்பது ஒரு கேள்வி, இந்தக் கேள்விக்கு விதை முந்தியதா? மரம் முந்தியதா? என்று வினவி விடை காண்பது போலத்தான் விடைகாணவேண்டும். ஆனால், தனி மனிதனே சமூகம் என்பதற்கு தெளிவான விடை கிடைக்கிறது. உருவ அமைப்பில் பல தனி மனிதர்களின் கூட்டே சமூக அமைப்பு.

உணர்வு அடிப்படையில் சமூகத்திலே இருந்துதான் தனி மனிதன் தோற்றுவிக்கப்படுகிறான். ஒவ்வொரு தனி மனிதனும் பரந்துபட்ட சமுதாயத்திலிருந்தே அறிவை-உணர்வை சீலத்தைப் பெறுகின்றான். சமுதாயத்தினுடைய நடைமுறைகளுக்கு ஏற்றவாறுதான் த்னி மனிதன் உருவாக்கப்படுகின்றான் என்பது மார்க்சீய தத்துவங்களுள் ஒன்று. இதையே திருவள்ளுவர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு ஐயத்திற்குச் சிறிதும் இடமின்றி,

> "மனத்துளது போலக் காட்டி ஒருவற்கு
> இனத்துளது ஆகும் அறிவு" —குறள் 454

என்று தெளிவாகக் கூறியுள்ளார்.

ஆம்! மனிதனின் அறிவு அவன் மனத்தில் இருப்பதாக ஒரு கற்பனை! அங்ஙனம் இல்லை. தன்னைச் சுற்றியிருக்கும் உலகத்தோடு தொடர்புகொள்ளும் பொழுது அறிவைப் பெறுகின்றான். சமூகம் எதை மதிக்கிறதோ அதை அவன் மதிப்பான். அதைச் சரியா? தவறா? என்று கருதிகூடப் பெரும்பாலும் ஆசைப்படமாட்டான். ஒருசிலர் ஆராய்வர். அவர்கள் சமூகத்தால் வெறுக்கப்படுவர். அவன் கற்கும் நூல்களோ அவன் காலத்துச் சமுதாயத்தின் கருத்துக்களையே

---

* மனம் ஒரு மாளிகை

பிரதிபலிக்கும், ஆதலால் எந்த ஒரு குறைவுக்கும் அல்லது நிறைவுக்கும் தனி மனிதன் பொறுப்பல்ல. அவன் வாழும் காலத்துச் சமுதாயமே பொறுப்பு.

சமுதாயம் முழுமையாகத் திருந்தாமல் தனி மனிதர்களுக்கு நீதி உபதேசம் செய்வது கசாப்புக் கடைக்காரன் புலால் உண்ணாமைப் பிரச்சாரம் செய்வது போலத்தான். ஆதலால், சமுதாயம் முழுமைக்கும் பயன்தரத்தக்க சீர் திருத்தங்களை முதலில் செய்யவேண்டும். நிறை நலமுடைய சமுதாயமே ஒரு நல்ல தனி மனிதனை உருவாக்க முடியும்.

சமுதாயமே தனி மனிதனின் அறிவுக்கு ஊற்று; செயல் திறனுக்குக் களம்; உணர்வுக்கு மையம், ஒழுக்கத்திற்குக் களைகண். சோஷலிச சமுதாய அமைப்பில் சமுதாயமே முதன்மைப் படுத்தப்படுகிறது. திருவள்ளுவரும் இனத்தி லிருந்தே அறிவு கிடைக்கிறதென்றும்; உலகத்தோடு ஒட்ட ஒழுகுதலே ஒழுக்கம் என்றும் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே கூறிய திருக்குறள் பாடல்கள் நினைவுக்குரியன.

மனிதனின் மனம் அறிவுக்குக் களமாய் அமைவது. ஆனால் அதுவே அறிவன்று. அறிவை ஏற்றுத் தொழிற் படுத்தும் ஆற்றல் மனத்திற்கு உண்டு. ஆனால், வளர்ச்சி யடையாத உடற் குறைபோல மனக்குறையுடையோர் உணர்ச்சிவசப்படுவர். ஆனால் அறிவுநலம் இருக்காது. அதனால்தான் அறிவோடு சாரா உணர்ச்சி விலங்குணர்ச்சி யென்று இழித்துப் பேசப்படுகிறது.

மனத்தூய்மை இயற்கையில் அமைவதன்று. மனத் தூய்மையின்றி வினையில் தூய்மை காண்பது அரிது. வினைத் தூய்மையின்றி உயிர் தூய்மையுறுதல் அரிது. மனத்தூய்மை வினைத்தூய்மை இவ்விரண்டும் சாரும் தூய்மையில் வந்து பொருந்தும்.

அதனாலன்றோ தெய்வப் புலவர் திருவள்ளுவர் சார் பறிந்து சார்ந்து ஒழுகச் சொன்னார். மனிதனின் சார்பு

தகுந்தாக அமையாவிடின் துன்பம் அகலாது. இன்பம் வந்து சாராது. ஆதலால், வள்ளுவர் நெறியில் வையகத்தை வாழ்விப்போமாக. சமவுடைமைத் தத்துவமே மனம் என்ற மாளிகையில் இருளகற்றும் ஒளிவிளக்கு ஆகும்! எனவே சமவுடமைத் தத்துவத்தை நாம் நம் அரிய வாழ்க்கையில் தவறாது கடைப்பிடித்து வாழ்வோம்! சிறப்புறச் செயலாற்றி மகிழ்வோம்!

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு. —குறள் 215

செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது. —குறள் 101

செந்தமிழ்க் குறளோசை திசையனைத்தும் பரவிட
வேண்டும்
செம்மைசேர் பொதுமொழியென்றே தேர்ந்திட வேண்டும்.
—அரசு

# 23. *மானுடம் மகிழ்வாக வாழ தீர்வுக்குரிய ஒரே வழி!

**மா**னுடம் இன்று மகிழ்வாக வாழவில்லை; வாழ அனுமதிக்கப்பெறவில்லை என்பது உறுதி. இதற்குக் காரணங்கள் இரண்டு. ஒன்று, தனி உடைமைச் சமுதாய அமைப்பு. பிறிதொன்று, ஆதிபத்திய அரசுகளைக் கொண்ட சமுதாய அமைப்பு. இந்த அமைப்பு முறையே சமுதாயத்தில் பல்வேறு சிக்கல்கள் தோன்றக் காரணமாகும். இந்த அடிப்படையில் தோன்றும் உணர்ச்சிகள், மொழி, சமயம், ஆகியவற்றைக் கருவியாகக் கொண்டு செயற்பாட்டு நிலையை அடை

* சிந்தனைச் சோலை

கின்றன. ஆனால் உண்மையில் மொழி காரணம் அல்ல; சமயம் காரணம் அல்ல. எல்லாவற்றிற்கும் மேலாக உள்ள ஒரு பொதுவான வாழ்வியல் அறத்தினை, ஆதிபத்திய உடைமைச் சமுதாயம் அழித்துவிட்டது. அதுதான் மனித நேயம்!

மனித நேயத்தை வளர்க்கவே மொழிகள், மொழிகளின் பயன், மனித உறவுதான். சமய நெறிகளின் பயன் மனித உறவுகளும்.மேம்பாடுமேயாம். ஆனால் கருவிகள் முதன்மை பெற்று, கருவிகளின் பயன் புறக்கணிக்கப்படுகிறது. மொழிக் களன் பகைப்புலனாக்கப் பெற்றுள்ளது. சமய நெறியும் பகைப்புலனாக்கப் பெற்றுள்ளது. எங்கும் எதிர்மறையான அணுகுமுறை.

கல்வி, அறிவு வாயிலாக இல்லை. தேர்வுச் சான்றிதழாகவும், வேலை வாய்ப்பைப் பெறக்கூடிய நுழைவுச் சீட்டாகவும் மாறிவிட்டது. அறிவு, செயல் திறனாக இல்லாமல் விவாதத் திறனாக ஆகிவிட்டது. உழைப்பு, விரிவு-வளர்ச்சி-வாழ்வித்தல் நோக்கின்றி பிழைப்புச் சாதனமாகி விட்டது. உறவு, தன்னலமறுப்பு-பிறர்நலம் நாடல் நெறியி லிருந்து முறை பிறழ்ந்து தற்சார்பினதாகவே மாறிவிட்டது. அரசுகள் ஆளப்படுபவருக்கு உத்தரவாதம் கொடுக்காமல் ஆள்கிற தங்களுக்கு உத்தரவாதம் தேடிக்கொள்ளும் நிலைக்கு வந்துவிட்டன. எங்கும் சிறைப்பட்ட அறிவு; உணர்வு. அதனால் மனித மதிப்பீட்டு அடிப்படையில் அமைய வேண்டிய சமுதாயம், பண மதிப்பீட்டுச் சமுதாயமாக மாறி விட்டது. இதுமுறை பிறழ்ந்த வளர்ச்சி. இந்த வளர்ச்சியின் எதிர் விளைவுகளே இன்றைய சமுதாயச் சிக்கல்கள். இன்று இந்த எதிர்விளைவுகள் பூதாகாரமாக வளர்ந்து தீமைகளைச் செய்கின்றன. மனித உறவுகள் அடியோடு கெட்டுவிட்டன. பகை வளர்ந்து ஒருவரை ஒருவர் அடுதலும் தொலைதலும் என்ற நிலைக்கு வந்துவிட்டனர். மனிதர்கள்; நோய்க்குரிய

காரணத்தை மாற்ற முயற்சி செய்யாமல் நோய்க்கு மருந்து கொடுக்கின்றனர். சிலர் மருத்துவம் என்ற பெயரில் நோயை வளர்க்க முற்படுகின்றனர். இவை ஏற்கத் தக்கன அல்ல. முற்றாக வெறுக்கத்தக்க செயல்முறைகள்.

இலங்கை ஒரு நாடு; ஒரு சிறிய தீவு. ஆனால் வளமான தீவு. இலங்கையில் வாழும் மக்கள் வளமுடன் வாழ்ந்திட, அங்குள்ள இயற்கைச் செல்வம் போதும். ஆனால், தனி உரிமைச் சமுதாய அமைப்பு, சுரண்டலுக்கு இடமளிக்கிறது. இந்த உலகத்தில் உள்ள இயற்கைச் செல்வத்தைக் கொண்டு, அனைவரும் மகிழ்ச்சியுடன் வாழமுடியும். ஆனால், ஒருவருடைய பேராசைக்குக் கூடப் போதாது என்றபடி, இலங்கையின் பொருளாதார நியதி ஆகிவிட்டது. பற்றாக் குறை உருவாக்கப்பட்டுவிட்டது; போட்டிகள் தோன்றி விட்டன; உடையாரும் இல்லாரும் தோன்றிவிட்டனர்; உத்தரவாதமுள்ள சமுதாயம் இன்று இல்லை; ஒருவர் எல்லாருக்காகவும், எல்லாரும் ஒருவருக்காகவும் என்ற பொதுவாழ்வியல் அறம் புறக்கணிக்கப் பெற்றது; இலங்கையில் பிரச்சனை தோன்றிவிட்டது.

இலங்கையில் ஈழம் ஒரு பகுதி. ஈழத்தில் வாழ்கிறவர்கள் தமிழர்கள்; ஈழத்தமிழர்கள் புத்திசாலிகள்; நல்ல நிர்வாகிகள். இலங்கையில் ஆங்கிலேயர் ஆட்சி நடந்தபோது ஈழத்தமிழர்களே பெரும்பாலும் ஆட்சியில் அமர்ந்திருந்தனர். ஆட்சியை இயக்கினர். அப்போது சிங்களவர்கள், பின்தங்கிய நிலையில் இருந்தனர். சிங்களவர்களில் கிறிஸ்தவரானவர்கள் மட்டும் ஓரளவு முன்னேற்றம் அடைந்தனர். ஆக, இடை வெளிகள் வளர்ந்துவந்தன. இந்த இடைவெளிகளை அகற்று வதில் மொழிகளும் சமயங்களும் முக்கிய பாத்திரத்தை வகித்தன என்பது மறுக்கமுடியாத உண்மை. ஆயினும் மொழி –சமய உணர்வாளர்களை இயக்கிப் பயன் கொண்டது

பொருளாதார அமைப்பேயாகும். இன்றும் இலங்கைப் பிரச்சனையில் பிரதான பாத்திரமாக விளங்குவது, மொழியும் சமயமும் ஓரளவு பாத்திரமேற்றுள்ளன. ஆயினும் பொருளாதாரக் காரணங்களே மிகுதி.

இலங்கைப் பிரச்சினை தீர, இலங்கையில் வாழும் அனைவருக்கும் உத்தரவாதமளிக்கும் ஒரு சமுதாய அமைப்பை காலம் கடத்தாமல் பெறத்தக்க வகையில் ஆட்சி முறை அமையவேண்டும். அடிப்படைத் தேவைகளுக்குக்கூட உத்தரவாதம் தர, இயலாத சமுதாய அமைப்பால் என்ன பயன்? அது இருந்தால் என்ன? இல்லாமல் போனால் என்ன?

அடுத்து ஒரு காரணம். இருபதாம் நூற்றாண்டில் ஒரு நோய் பரவி வருகிறது. இளங்கோவடிகள் ஆட்சிக்கட்டில் இன்பம் தருவது என்று செங்குட்டுவன் வாயிலாக விளக்குகின்றார். ஆனால் இன்றோ, ஆட்சி அதிகாரம் செலுத்தும் கருவியாக, அடுக்கிய கோடி செல்வம் சம்பாதித்துக் கொள்ளத்தக்க கருவியாக அமைந்துவிட்டது. அதனால் தகுதியிலாதார்கூட 'ரௌடிச'த்தின் மூலம் ஆட்சியினைப் பிடிக்க முயலுகின்றனர். இதன் தாக்கங்களும் பலநாடுகளில் பாதித்துள்ளன.

மூன்றாவதாக உலக வல்லரசுகளின் சந்தை பிடிக்கும் ஆசை நீங்கிய பாடில்லை. ஆதலால் வளர்முக நாடுகளில் பின்தங்கிய நாடுகளில் சமூக மோதல்களை–கலகங்களை உருவாக்கி அந்த நாடுகளின் உற்பத்தியைப் பாதிக்கச் செய்து தங்கள் பொருள்களை விற்கின்றன. இதனாலும் வளர்முக நாடுகளில் பிரச்சனைகள் உருவாகின்றன; வளர்கின்றன.

இத்தகு சமூகத் தீமைகளைக் கண்டு மக்கட் சமுதாயம் கொதித்து எழுதலும், நல்லதோர் சமுதாய அமைப்பை பெறுதலுமே தீர்வுக்குரிய ஒரேவழி.

கு.XIII.10.

# 24. *பன்னாட்டுத் தொடர்பு

உலகம் ஒன்றே; மாந்தரினமும் ஒன்றே. "எல்லா உலகமும் ஆனாய் நீயே!" என்ற வழக்கு, உறவு கலந்த உரிமையின் அடிப்படையில் அமைந்த வழக்கே! மொழி, சமயம், அரசியல் முதலியவற்றின் அடிப்படையிலும் ஒரோவழி உலக நிலப்பரப்பின் ஊடே எழுந்துள்ள உயர்ந்த மலைகள் காரணமாகவும் - விரிந்துள்ள ஆழ்கடல்கள் காரணமாகவும் உலக நிலப்பரப்புத் துண்டு பட்டுள்ளது. ஆனாலும் மாந்தர், மாந்தரே! மாந்தருக்கு அறிவியல் தலைப்பட்ட காலத்திலிருந்து உலகம் தழீஇய நிலையில் நாடுகளிடையே தொடர்புகளை வளர்த்து, உறவுகளைப் பேணிக் காக்கத் தொடர்ந்து போராடி வந்துள்ளனர்.

இத்துறையில் அறிவியல் உலகம் காலத்தையும் தூரத்தையும் இயற்கைத் தடைகளையும் கடந்து ஒப்பற்ற சாதனைபுரிந்துள்ளது. ஆயினும் மனிதகுலம் உடைமைகள், அதிகாரங்கள், குறுகிய பற்று பாசங்கள் ஆகியவற்றால் அறிவியல் உலகம் சாதித்த உலகந்தழீஇய தொடர்புகளைத் துண்டாக்கவும், உறவுகளை உருக்குலைக்கவும் எதிர்நிலையில் போராடி ஓரளவு வெற்றியும் பெற்றிருக்கிறது. ஆனாலும் இந்த முயற்சி தோற்பது உறுதி. எதிர்வரும் 21ஆம் நூற்றாண்டில் 'ஓருலகம்' அமையும் - விளங்கும்!

உலக நாடுகளுக்கிடையே தொடர்பு கொள்வதற்கு, பண்டைக் காலத்தில் இருந்த சாதனங்கள் மிகச் சிலவே. பறவைகள், விலங்குகள்கூட ஒரு காலத்தில் தொடர்புச் சாதனங்களாக விளங்கின. வெகுகாலத்திற்குப் பின் கப்பல்கள், பேருந்துகள், இரயில்கள், விமானங்கள், தொலை பேசிக் கருவிகள் முதலியன தொடர்புச் சாதனங்களாக வளர்ந்து பெருகி வந்தன. இன்று உலகத்தின் பல நாடு

* சிந்தனைச் சோலை

களையும் இணைத்து ஒன்றாக்குவதில் தொலைபேசி, வானொலி, தொலைக்காட்சி, விமானம் முதலியன அதிகமாகப் பயன்பட்டு வருகின்றன.

பழங்காலந்தொட்டே மாந்தர்குலத் தொடர்புகளைக் குறிக்கோளாகக் கொண்டு உலகந்தழீஇய பயணங்கள் மேற் கொள்ளப் பெற்று வந்தன. யுவான்சுவாங், வாஸ்கோடகாமா, கொலம்பஸ் போன்றவர்களுடைய பயணங்களும் பன்னாட்டுத் தொடர்புக்கு உரமூட்டின. நம் நாட்டில் காசி-இராமேஸ்வரம் யாத்திரை என்பது சமய வழிப்பட்டது மட்டுமன்று, நாட்டுமக்கள் தொடர்பு பெறுவதற்காகவும் அமைந்தது.

இன்று உலகம் முழுதும் வளர்ந்து வரும் ஒரு பண்பு-பழக்கம் சுற்றுலாப் போதலாகும். சுற்றுலாச் செல்வோர் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது. இதன்மூலம் மக்களிடையே பன்னாட்டுத் தொடர்பு வளர்ந்து வருகிறது. இங்ஙனம் வளர்ந்துவரும் பன்னாட்டுத் தொடர்பால் மனிதகுலம் பல்வேறு பயன்களையும் அடைந்து வருகிறது. முதலாவதாக மனிதர்களுக்கு விரிந்த மனப்பான்மை உருவாகிறது. மனிதரின் வாழ்நிலை, உயர்ந்த நாகரிகத் தரத்திற்கு உயர்த்தப்படுகிறது.

பன்னாட்டுத் தொடர்பினால், பல மொழிகள் கற்கும் ஆர்வம், தூண்டி வளர்க்கப்படுகிறது. மொழி, மனித குலத்திற் கிடையே தொடர்பையும், உறவையும் ஏற்படுத்தி வளர்க்கும் ஒரு கருவியே யாகும். மொழி, உறவுச் சாதனமே. ஒரு பொழுதும் மொழி, பிரிவினைச் சாதனமாக இருந்ததில்லை; இருக்கவும் முடியாது. ஆனால் உடைமை, அதிகாரம் ஆகிய வற்றில் வெறி பிடித்தவர்கள் மொழிகளையும் பகைவளர்க்கும் கருவிகளாகப் பயன்படுத்துகின்றனர். இது முறையுமன்று; நெறியுமன்று. பன்னாட்டு மக்களின் உணர்வுகளைப் புரிந்து

கொள்ள அவ்வழி வாழ்க்கையை வளமாக்கிக் கொள்ளப் பன்மொழிப் பயிற்சி தேவை.

வீடு காற்றோட்டமுள்ளதாக வேண்டுமென்றால் நிறைய சாளரங்கள் தேவை, நிறையச் சாளரங்கள் உள்ள வீட்டில் ஒளிக்கதிர்களும், மெல்லிய பூங்காற்றும் நலச் சூழ் நிலையை உருவாக்கும். அதுபோல் பலமொழி நூல்களைக் கற்றுணர்வோரின் வாழ்க்கை சிறப்புடையதாக அமையும்.

இன்று, பன்னாட்டு நூல்களை அவரவர் மொழியில் பயிலும் வாய்ப்புப் பெருகியுள்ளது. எண்ணற்ற மொழி பெயர்ப்பு நூல்கள் வெளிவந்துள்ளன. இந்த பன்னாட்டுத் தொடர்பை உருவாக்கி வளர்ப்பதில் நாளிதழ்கள், வார, மாத இதழ்கள், நூல்கள் முக்கிய இடம் வகிக்கின்றன. அது போலவே இசையும் நாடகங்களும், திரைப்படங்களும், பிற கலைகளும் பன்னாட்டுத் தொடர்புச் சாதனங்களாக உள்ளன. பன்னாட்டுத் தொடர்பு வளர்வதால், உலகின் அனைத்து நாடுகளும் அறிவியலிலும், தொழில் துறையிலும் அவற்றினைச் சார்ந்த பொருளாதாரத் துறையிலும் வளர்ச்சி அடைகின்றன.

இத்தகைய பன்னாட்டுத் தொடர்பில் தமிழகம் வழி வழியாக வளர்ந்து வந்துள்ளது. பண்டைத் தமிழக அரசுகள் கடல் வாணிகத்தில் சிறந்து விளங்கின. தமிழகத்தின் முத்து, அகில், சந்தனம், மிளகு, புகையினும் மெல்லிய பூந்துகில் ஆடைகள் முதலியனவும் அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டுள்ளன. தமிழகம், இந்தோனேசியா, சீனா போன்ற ஆசிய நாடுகளுக்கும், ரோம் முதலிய ஐரோப்பிய நாடுகளுக்கும் ஏற்றுமதி வாணிகம் செய்தது. அதுபோலவே தமிழகம் அயல்நாடுகளிலிருந்து தேவையான பொருட்களை இறக்குமதி செய்தது. தமிழகத்தில் தொண்டி, பூம்புகார், கொற்கை, முசிறி ஆகிய துறைமுகங்கள் வரலாற்றுச்

சிறப்புடையன. இவற்றுள் பூம்புகார் நகரம் மிகச்சிறந்து விளங்கியது.

பூம்புகாருக்கும் பல்வேறு நாடுகளுக்கும் ஏற்பட்டிருந்த வாணிகத் தொடர்புகளை கி.பி முதல் நூற்றாண்டின் தலைசிறந்த யாத்திரை நூலான பெரிபுளூஸ் விளக்கமாகத் தெரிவிக்கிறது.

இந்தப் பிரதேசத்தின் வாணிகச் சந்தை கூடும் நகரங் களில் டிமிரிகாவிலிருந்தும்[1] வடக்கிலிருந்தும் உள்ள துறை முகங்களிலிருந்து[2] வரும் கப்பல்கள் தங்குவதற்கு வசதியான இடங்களில் முதன்மைத்தானம் வகிப்பது காமாரா[3] என்பதாகும். அதற்கடுத்தது பொதுகா[4] என்பது. அதற்கடுத்தது சோபடனா[5] இவற்றில் அந்நாட்டுக் கப்பல்கள் கடலோரமாக டிமிரிகா வரையிலும் சென்று தங்குகின்றன.

ஒரே மரத்தில் செதுக்கப்பட்ட ஒரு கட்டையுடன், மற்றொரு மரத்தில் செதுக்கப்பட்ட வேறொரு கட்டையைப் பிணைத்து விடப்பட்டதே பெரிய கப்பல் என்று வழங்கப் படும்.

இதன் பெயர் சங்காரா[6] என்பதாகும். ஆனால் கிரிஸே,[7] கங்கே[8], முதலிய நாடுகளுக்குச் செல்லும் கப்பல்கள் கொலாண்டியா[9] என்று வழங்கப்படுகின்றன. அவை பார்வைக்குப் பெரிய உருவம் படைத்தனவாகவும் காட்சி

1. தமிழகம்
2. காவிரிப்பூம்பட்டினம்
3. தொண்டி, முசிறி துறைமுகங்கள்
4. மாமல்லபுரம்
5. சென்னைப்பட்டினம்
6. இரண்டு கட்டுமரங்கள்
7. சுமத்ரா
8. கங்கையின் கழிமுகம்
9. கலம் (மரக்கலம்) எனும் தமிழ்ச் சொல் அடியாகப் பிறந்தது.

யளிக்கின்றன. இவ்விடங்களில் இறக்குமதி செய்யப்படும் பொருள்கள் யாவும் டிமிரிகாவில் செய்யப்பட்டனவே யாகும். மற்றும் எப்பொழுதேனும் எகிப்திலிருந்து[10] கொண்டு வரப்படும் சரக்குகளில் பெரும்பாகம் இங்கு வந்து குவிக்கப்படுகின்றன. இவை டிமிரிகாவிலிருந்து வாங்கப்படும் பொருள்கள் யாவற்றினோடும், மற்றும் பராலியா[11] வழியாக எடுத்துச் செல்லப்படும் பொருள்களோடும் ஒன்று சேர்க்கப் பட்டுக் கொண்டு வரப்பட்டனவாகும்.

[ பெரிப்புளூஸ் (கி.பி. 50–80) வி.எஸ்.வி. இராகவன் பக். 264 ]

மேலும் பூம்புகாரில் காலினும் கலத்தினும் வந்திறங்கிய பண்டங்கள் குறித்து:

"நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணகடல் துகிலும்
கங்கை வாரியும் காவிரிப் பயனும்
ஈழத் துணவும் காழகத் தாக்கமும்
அரியவும் பெரியவும் நெளிய ஈண்டி"

என்று, பட்டினப்பாலை விரிவாகக் கூறுவதை அறிக.

இந்திய நாட்டில் நடைபெற்றுள்ள அகழ்வாராய்ச்சி களும் இந்த உண்மையை எடுத்துரைக்கின்றன.

சோழப் பேரரசின் துறைமுகம் பூம்புகார். இதனைக் காவிரிப்பூம்பட்டினம் என்றும் அழைப்பர். சிலப்பதிகாரத்தின் தொடக்கம் பூம்புகாரேயாம். "பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்" என்று இளங்கோவடிகளால் போற்றப் பெற்றது பூம்புகார். இது, காவிரியாறு கடலில் கலக்கும்

10. எகிப்து
11. பரலிசா். பாரீசா் என்பதன் திரிபு. இன்றைய திருவனந்தபுரம்.

இடத்தில் அமைந்திருந்த துறைமுகப்பட்டினம். இத்துறை முகத்தில் சோழப் பேரரசு சுங்கம் என்ற வரி வசூலித்துள்ளது. இத் துறைமுகத்திலிருந்து உலகின் பல நாடுகளுக்கும் பண்டங்கள், கப்பல்களில் ஏற்றுமதி செய்யப்பெற்றன. அதுபோலவே, சோழநாட்டிற்குத் தேவையான பண்டங்கள் அவற்றைச் சுமந்துவந்த கப்பல்களிலிருந்து இறக்கி, நாட்டிற்குள் அனுப்பப்பெற்றன.

> "நீரினின்று நிலத் தேற்றவும்
> நிலத்தினின்று நீர்ப்பரப்பவும்
> அளந்தறியாப் பலபண்டம்
> வரம்பறியாமை வந்தீண்டி
> அருங்கடிப் பெருங்காப்பின்
> வலியுடை வல்லணங்கினோன்
> புலிபொறித்துப் புறம்போக்கி
> மதிநிறைந்த மலிபண்டம்
> பொதிமூடைப் போரேறி" (பட்டினப்பாலை 129–137)

என்ற அடிகள் தமிழ்நாட்டிற்கு இருந்த பன்னாட்டுத் தொடர்பை விளக்குவனவாக அமைந்துள்ளன.

ஏற்றுமதி – இறக்குமதி செய்யப்படும் பண்டங்கள் அளந்தறிதற்கு உரியனவாக அமையாமல் அளவிறந்து குவிந்திருப்பதனை "அளந்தறியாப் பலபண்டம் வரம்பறியாமை வந்தீண்டி" என்றும் "பொதிமூடை போரேறி" என்றும் பட்டினப்பாலை ஆசிரியர் கூறுவது குறிப்பிடத்தக்கது.

தமிழ்நாட்டு மக்கள் பல நாடுகளுக்கும் சென்று வாழ்ந்து வந்துள்ளனர். சிவநெறி, தமிழ் நெறியேயாம். இந்தோ–சீனாவில் அங்குர்வாட் (Ankurvat) என்னும் நகரில் ஒரு பெரிய சிவன் கோயில் உள்ளது. இத் திருக்கோயில் கோபுரங்கள் தமிழகக் கோயில் கோபுரங்களைப்போல் உள்ளன. "முக்கட் செல்வர் நகர்" (புறம் – 6) என்று புறநானூறு குறிப்பிடும் கோயில் (நகரம் போல) பெரிய திருக்கோயிலாக

இத்திருக்கோயில் அமைந்துள்ளது. இது கருங்கல்லாலான திருக்கோயில். இத் திருக்கோயிலில் இராமகாதை, முழுதும் கருங்கல்லில் சிற்பமாகச் செதுக்கப்பெற்றுள்ளது. இந்தோனேஷியா கருங்கல்லில் தலைநகரிலும் ஜாகர்த்தா விலும் பழைய சிவாலயங்கள் அமைந்துள்ளன.

பாலித் தீவில் நமது சமயம் பரவியிருந்த தடயங்கள் பல கிடைத்துள்ளன. அங்குள்ள மக்கள் திருநீறு போன்ற ஒரு பொருளை இன்றும் அணிந்து கொள்கின்றனர். இந்தோ னேஷியாவில் உள்ள பல ஊர்கள் இராமகாதையில் குறிக்கப் பெறும் ஊர்ப் பெயர்களாக அமைந்து விளங்குகின்றன. அந்நாட்டில் கிராமியக் கலை நிகழ்ச்சிகளில் இராமகாதை நாட்டிய நாடகம் முக்கிய இடத்தை வகிக்கிறது. ஏன்? இன்றும் சோவியத் தலைநகராகிய மாஸ்கோவில் திராவிடக் கலை இலக்கியக் காட்சியகம் ஒன்று அமைந்துள்ளமை, பெருமைக்குரிய செய்தி. பண்டைக்காலத்தில் இந்தியா உணர் வினால் ஒரு நாடாக அமைந்து விளங்கியது. இன்று அரசியல் புகழ்பெற்று விளங்கும் நடுநிலைக் கொள்கை-அணிசேரா நாடு என்ற கொள்கைகள். பழந்தமிழகத்திலேயே வழக்கிற்கு வந்துவிட்டன. பாரதப் போரில் ஈடுபட்டிருந்த கௌரவர் படைகளுக்கும் பாண்டவர் படைகளுக்கும் சோறு அளித்துப் புகழ்பெற்றவன் பெருஞ்சோற்று உதயன் சேரலாதன் என்பது புறநானூறு கூறும் செய்தியாகும்.

"அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்"

(புறம் – 2)

என்பது அறியத்தக்கது.

சீன நாட்டுக்கும் தமிழ் நாட்டுக்கும் அரசியல் தொடர்பு இருந்தது என்று சீன வரலாறு கூறுகிறது.

சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குச் சிலை எடுத்து வணக்கம் செலுத்தியபோது இலங்கை அரசன் கயவாகு வந்திருந்ததே தமிழகத்தின் பண்பாட்டுத் தொடர்புக்கு எடுத்துக்காட்டு.

தமிழ் மக்கள் உலகந்தழீஇய ஒட்பம் உடையவர்களாக விளங்கினர், ஒழுக்கத்திற்கு 'உலகத்தோடு ஒட்ட ஒழுகல்' என்று இலக்கணம் வகுத்தது தமிழ். உலக நிலப்பரப்பில் எந்த நாடாக இருந்தாலென்ன? எந்த ஊராக இருந்தாலென்ன? அந்த நாடுகளையும் ஊர்களையும் அங்குக் குடியேறி வாழ்பவர்கள் தமது நாடுகளாக, தாம் பிறந்து வளர்ந்த ஊர்களாக ஆக்கிக் கொள்ளுதல் கல்வியின் விழுமிய பயன் - அறிவின் ஆக்கம் என்கிறது தமிழ் மறை.

*"யாதானும் நாடாமால் ஊராமால் என்றொருவன்*
*சாந்துணையும் கல்லாத வாறு"* —குறள் 397

என்பது திருக்குறள்.

ஒரு நாட்டு மக்களுக்குப் பன்னாட்டுத் தொடர்பு இருக்குமானால் அந்நாட்டு மக்கள் விசாலப் பார்வை பெறுவர். எல்லைகளைக் கடந்து அவர்களுடைய வாழ்வியல் பண்பு வளரும்; விரிவடையும்; நயத்தக்க நாகரிகத்தில் வளர்வர். ஒரு நாட்டு மக்கள் பன்னாட்டு மக்களுடன் தொடர்பு கொள்ளும்பொழுது, அறிவியல் வளரும். தொழில் நுட்பம் வளரும். கருத்துக்கள் பரிமாற்றத்தால் பல ஆண்டுகள் வளர்ச்சியைச் சில ஆண்டுகளில் எளிதில் பெறமுடியும்.

இனி எதிர்வரும் காலத்தில் உலக நாடுகள் நெருக்கமான நட்புறவை வளர்த்துக்கொண்டு, "ஒருலகம்" காணும் என்னும் நம்பிக்கை வளர்ந்துவருகிறது. ஆதலால், பன்னாட்டுத் தொடர்பை வளர்த்துக்கொள்ளும் வகையில் மாணவர்கள் பலநாட்டு இலக்கியங்களைப் படிக்கும் வழக்கத்தை மேற்கொள்ள வேண்டும். கற்கும் காலத்திலேயே

சுற்றுலாச் செல்லும் பழக்கத்தை மேற்கொள்ள வேண்டும். கல்வித் திட்டத்தில் சுற்றுலா கட்டாயமாக்கப்படவேண்டும்.

மனித உலகத்தை விரிவான – பரந்த பண்பாட்டில் நிலை பெறும்படி செய்வது பன்னாட்டுத் தொடர்பேயாம். பன்னாட்டுத் தொடர்பு அறிவை விரிவாக்குவது; மனித நேயத்தை வளர்த்து இதயப் பாங்குகளைச் செழுமைப் படுத்துவது, ஆதலால் நமது வாழ்க்கையில் துறைதோறும் பன்னாட்டுத் தொடர்பைக் கொண்டு புதுமை பெறுவோமாக! நாட்டுக்கும் நாட்டுக்குமிடையேயுள்ள எல்லைகளைத் தகர்த்து விசாலப் பார்வையுடன் மானிட சமுத்திரத்தில் சங்கமமாவோம்! “ஒரே உலகம்! ஒரே இனம்!” என்ற இலட்சிய உணர்வைப் பெறுவோம்!

இன்று அறிவியல், இருபக்கக் கூர்முனைக் கத்தியாக வளர்ந்துவருகிறது. அதாவது ஒரு பக்கம் வாழ்விற்கு ஆக்கம். மறுபக்கம் கொடிய போர்க்கருவிகள் மூலம் அழிவு. அழிவிலிருந்து இந்த உலகத்தைப் பாதுகாக்க வேண்டியது நம் கடமை. இக் கடமையை நிறைவேற்றப் பன்னாட்டுத் தொடர்பு துணை செய்யும். மானுடத்தின் அறிவும், ஆற்றலும் இந்த உலகத்திற்குப் பொது. இந்த உலகத்தின் வைப்புகள் பொதுவேயாம். மாந்தர்க்கு உலகப் பார்வை ஏற்பட்டுப் பன்னாட்டுத் தொடர்பு கிடைத்தால்தான் எல்லை கடந்த நிலையில் அறிவுக்கு மதிப்பு ஏற்படும். உழைப்புக்கு உயர்வு கிடைக்கும். அதனாலன்றோ மாமுனிவர் காரல் மார்க்சு “உலகத் தொழிலாளர்களே ஒன்றுசேருங்கள்” என்றார்.

நமது நாட்டு இளைஞர்களும் உலக மாந்தராக உயர்ந்து விளங்க முயற்சி செய்யவேண்டும். பல மொழிகளைக் கற்கும் முயற்சியில் ஈடுபடுதல் வேண்டும். கடவுள் ஒருவரே! அவர் பெயரால் ஒன்றாக வேண்டும்.

“ஒன்று பரம்பொருள்; நாம் அதன் மக்கள்” என்ற பாரதி வாக்கு வெற்றி பெற மாணவர் உலகம் உழைக்க வேண்டும்.

# 25. *இந்திய ஒருமைப் பாட்டைக் காப்போம்!

இன்றைய இளைஞர்களே நாளைய இந்தியாவின் தலைவர்கள். தலைமைப் பொறுப்பேற்பது என்பது எளிதான ஒரு செயலன்று. அஃது ஒரு கடினமான பணி. தலைமைப் பொறுப்பேற்பதற்குரிய சிந்தனைத் திறன் அறிவு, அறிவறிந்த ஆள்வினை, ஒப்புரவு நெறி மேற்கொண்டொழுகல் ஆகிய திறன்களும் பண்பாடும் தேவை. இவை ஒருங்கு வந்து பொருந்தி விடுவதில்லை. பலகாலும் பழகுவதன் மூலமே வந்தமையும், அத்தகைய பழக்கத்திற்குரிய முயற்சிகளில் ஒன்று இந்த முகாம். இந்த முகாமுக்கு ஏற்பாடு செய்த காந்தி கிராமம் பல்கலைக் கழகத்திற்கு ஆயிரமாயிரம் பாராட்டுதல்கள்.

இங்கு வந்துள்ள இந்திய இளைஞர்கள், ஆற்றல் துடிப்பு மிக்குடைய இளைஞர்கள். இந்த இளைஞர்களது இந்த முகாமை முழுமையாகப் பயன்படுத்திக்கொண்டு புதிய வரலாறு படைப்பார்கள் என்று நம்புகின்றோம்.

காந்தி கிராமம் கிராமியப் பல்கலைக்கழகம் தேசிய ஒருமைப்பாட்டு இளைஞர் முகாமில் 9.6.88-ல் ஆற்றிய உரை.

இந்தியா பழம் புகழ் வாய்ந்த ஒரு நாடு. இந்தியா ஒற்றுமையுடனும் ஒருமைப்பாட்டுடனும் இருந்த காலத்தி லெல்லாம் வளமாக இருந்திருக்கிறது; வரலாற்றுப் புகழ் பெற்றிருக்கிறது. எப்பொழுதெல்லாம் இந்தியாவில் ஒருமைப் பாடு குறைந்ததோ அப்பொழுதெல்லாம் நாடு அல்லற்பட்டி ருக்கிறது என்ற வரலாற்று உண்மையை நாம் மறப்பதற் கில்லை. அசோகர் காலத்தில் இந்தியாவில் ஒருமைப்பாடு சிறந்து விளங்கியது. அசோகரின் அணுகுமுறை நமக்கு வழிகாட்டியாகும். அது குறித்து அண்ணல் நேரு, "நம்மிடம்

* கடவுளைப் போற்று! மனிதனை நினை!

மாறுபடுகிறவர்களிடம் நாம் பழகும்போது அசோகரின் புத்திமதியைப் பின்பற்றுவது நலம்; அசோகரின் மனத்திலே பிரசாரப் போருக்கு இடம் இல்லை. இன்றும் "பிரசாரப்போர் ஏதும் நிகழத் தேவையில்லை" என்று எடுத்துக் கூறியுள்ளது ('இந்தியா இன்றும் நாளையும்' பக்.62) நினைவு கூரத்தக்கது. ஆதலால் இந்தியாவை-பாரதத்தை வளமை பெற்ற ஒரு நாடாக காணவைத்துக் கொள்ள இங்குக் கூடியுள்ள இளை ஞர்கள் முன் வரவேண்டும். இந்தியாவின் வலிமையையும் வளத்தையும் ஆன்மிகச் செறிவையும் இந்தியாவின் ஒருமைப் பாட்டினைக் கட்டி காப்பாற்றுவதன் மூலமே வளர்க்க முடியும்; பாதுகாக்க முடியும். ஆதலால் நாம் அனைவரும் எந்த விலை கொடுத்தும் இந்தியாவின் ஒருமைப்பாட்டைக் காப்பாற்ற முன்வரவேண்டும். 'உரமான நோக்கமும் உயர் வான உள்ளமும் கொண்டு இந்தப் புண்ணிய யாத்திரையை நாம் தொடங்கிவிட்டோம். இது எவ்வளவு நீண்டு போனாலும் இறுதியிலே நாம் இலக்கை அடைவோம்' எனும் அண்ணல் நேருவின் அமுத வாக்கை நாம் அனைவரும் நினைவிற்கொள்ள வேண்டும்.

இந்தியா ஒரு பெரிய நாடு. பல மொழிகள் பேசும் மக்கள் வாழும் நாடு; பல மதத்தினர் வாழும் நாடு; பல்வேறு வகையான மரபுகள், பழக்கங்கள், வழக்கங்கள் உடைய நாடு. இந்த வேறுபாடுகளே இந்தியாவில் நிலவும் சுதந்திரத்திற்கு எடுத்துக்காட்டு. இந்த வேறுபாடுகளுக்கு இடையில் இந்தியர் ஒருமை நிலையில் விளங்கி வந்திருப்பது பாரதத்திற்கே உரிய தனிப் பண்பு. இந்தியா, அரசியல் ரீதியாக வேறுபட்டிருந்த காலத்தில்கூட பண்பாட்டில் கலாச்சாரத்தில் ஒன்றாகவே இருந்தது என்பதை நாம் அறிந்தாகவேண்டும். இமயம் முதல் குமரி வரை-இராமேசுவரம் வரை ஒருவிதப் பண்பாட்டியல், பழக்க இயல் இந்தியாவைப் பல ஆயிரக்கணக்கான ஆண்டு களாக இணைத்து வைத்திருக்கிறது என்பது பெருமைப்படு வதற்குரிய செய்தி. இராம காதை. பாரதக் காதை ஆகியன

இவ்வாறு இணைத்த பெருமைக்குரியன. இத்தகு பாரம் பரியம் மிகவும் மிக்க-புகழ் மிக்க அடிச்சுவட்டில் இந்த நாட்டைத் தொடர்ந்து வழி நடத்த இளைஞர்கள் முன்வர வேண்டும்.

மனிதகுல ஒருமைப்பாட்டுக்கு மதம் தடையாக இருத்தல் முடியாது; இருத்தல் கூடாது. மதம்-சமயம் ஒரு வாழ்க்கை முறை. அந்த வாழ்க்கை எல்லாவற்றையும் கடந்த நிலையில் ஒரு அறிவாற்றலுடன் தொடர்பு வைத்துக் கொண்டு தன்னை உயர்த்திக் கொள்ளும்-பண்படுத்திக்கொள்ளும் ஓர் அனுபவம் மிக்குடைய அனுபூதி வாழ்க்கையேயாம். இந்த உயர்ந்த வாழ்க்கையில் வேறுபாடுகளுக்கு இடமே இல்லை; இருக்கவும் இயலாது. சமயம், உயிர்ப்புள்ள ஒரு வாழ்க்கை முறை. அன்பிலும், தவத்திலும், தொண்டுகளிலும் செயற் பட்டு மனித குலத்தை வளர்த்து வாழ்விப்பதே சமயம். வரலாற்றுப் போக்கில் ஆதிக்க உணர்வுகள் மேலிட மேலிட உண்மையான ஆன்ம அனுபவத்திற்குத் துணையாய் நின்ற சமயம் புரோகிதச் சமயமாக மாறி, பின்நெகிழ்ந்து கொடுக்க இயலாத நிறுவனமாக மாறி, மானுடத்திற்கு நன்மை செய்வதற்குப் பதிலாகத் தீமை செய்யலாயிற்று. இந்தக் கால கட்டத்தில்தான் சமுதாய ஒருமை நிலையையும் சமூக நீதியையும் காக்கும் கடப்பாட்டுணர்வில் சமயநெறிக்கு எதிராகச் சிலர் சிந்திக்கத் தொடங்கினர். ஆயினும் இதுவும் நெடிய பயனைத்தரத் தக்க அணுகுமுறையல்ல என்பதை இன்றைய வரலாறு உணர்த்துகிறது. சமயம் சாராத வாழ்க்கை முழுமையுறாது என்பதே உண்மை.

சமய நெறிகள் அனைத்தும் மானிட வாழ்வை மேம் படுத்தவே. நாம் அனைத்துச் சமயங்களிலும் பொது நோக்கு உடையவர்கள்; எந்த ஒரு சமயத்தையும் சார்ந்தவர்கள் அல்ல என்பதை அறிவுறுத்தவே (Secular State) என்று அறிவித் துள்ளோம். நமது நாட்டு இளைஞர்கள் இந்திய நாட்டின் அனைத்துச் சமய நெறிகளையும் அறிந்து பொதுநெறி பற்றி

ஒழுகவேண்டும். இதுவே இந்தியாவிற்கு நல்லது. தீவிரச் சமய வெறிகளை எதிர்க்கும் துணிவை இளைஞர்கள் ஏற்க வேண்டும்.

அடுத்து, நம்முடைய நாட்டில் பேசப்பெறும் மொழிகள் பலப்பல. ஒவ்வொருவருக்கும் தாய்மொழி வழிக் கல்வியும் தாய்மொழியில் தேர்ந்த புலமையும் அறிவும் தேவை. அதேபோழ்து இந்திய மொழிகள் பலவற்றை ஏற்பது நல்லது. தாய்மொழியில் தேர்ந்த அறிவு பெறுவதுதான் அறிஞர்கள் உருவாக வழி. பல்வேறு மொழிகளைக் கற்றுத் தேர்ந்தால்தான் அறிவு வளரும்; மனம் விரிவடையும்; பரந்த நோக்கம்வரும். மொழி, ஒருவர் கருத்தை மற்றவர்களுக்கு அறிவிக்கவும் மற்றவர்கள் அறியவும் பயன்படும் ஒரு கருவி (Tool). மொழிகள் மாறுபட்டாலும் கருத்து மாறுபடப் போவதில்லை. தேசியகவி பாரதி,

> "செப்பும் மொழிபதி னெட்டுடையாள்-எனில்
> சிந்தனை ஒன்றுடையாள்"

என்று பாடியது நினைவு கூரத்தக்கது. இந்தியர் அனைவருக்கும் சிந்தனை ஒன்றுதான் என்பதை மறவற்க. மொழிகளிடையே உள்ள அறிவுஜீவ ஊற்றுக்களில் இளைஞர்கள் குளித்து அனுபவிக்க வேண்டும். மொழிகளின் அடிப்படையில் பிரிவினை உணர்வு உருவாவது விரும்பத்தக்கதன்று. இது மொழிகளின் நோக்கத்திற்கே மாறுபாடு ஆனது. இந்தியாவில் எந்த ஒரு மொழியும் தனித்திருக்காது; ஆதிக்கம் செலுத்தாது என்பதை நினைவிற்கொள்ளவேண்டும். இந்திய ஒருமைப் பாட்டிற்கு உதவி செய்யத்தக்க வகையில் பல மொழிகளைக் கற்கவும், தாய்மொழிச் சிந்தனையில் அறிவியல் காலூன்றி நிற்கவும் இளைஞர்கள் தங்களைப் பயிற்றுவித்துக் கொள்ள வேண்டும்; வளர்த்துக் கொள்ளவேண்டும்.

பலர் ஒன்றுகூடி இணக்கத்துடன் நட்புறவுடன் வாழ்வதே ஒப்பற்ற சமுதாயம். கூடிவாழும் பண்பாட்டுக்குத்

தடையாய் எது இருப்பினும் அது வெறுக்கத்தக்கது. இந்திய ஒருமைப்பாட்டைக் கட்டிக் காக்கும் பண்பாட்டுக்குப் பல நற்பழக்கங்கள் தேவை. தன்னிச்சைப்போக்கு தவிர்க்கப்பட வேண்டும். கூடிச் சிந்தனை செய்தல், முடிவெடுத்தல் அந்த முடிவுகளுக்குச் செயலுருவம் கொடுத்தல் தேவை. எந்த வகையிலும் தனி நபர் வழிபாட்டிற்கு இளைஞர்கள் இடம் கொடுத்துவிடக்கூடாது. "ஒருவர் எல்லாருக்காகவும் எல்லாரும் ஒருவருக்காகவும்" என்ற வாழ்வியல் கோட்பாட்டை இந்திய இளைஞர்கள் பின்பற்றவேண்டும் என்பது நமது விருப்பம்; வேண்டுகோள்.

இந்திய ஒருமைப்பாட்டு வளர்ச்சிக்கு அரசுகளும் சில உதவிகள் செய்யவேண்டும். பன்மொழிப் பயிற்சி தரக்கூடிய பல நிறுவனங்கள் நாடு முழுவதும் தோன்ற அரசு ஊக்கமளிக்கவேண்டும். மொழி வளர்ச்சி அடிப்படையிலும், வேலைவாய்ப்பு அடிப்படையிலும் மாறுபட்ட உணர்வுகள் தோன்றாதிருக்க இந்திய தேசியமொழிகள் அனைத்தையும் நடுவண் அரசு திட்டமிட்டுப் பயிற்று மொழிகளாகக் கொண்டுவந்து வளர்க்கவேண்டும். இந்தியா தழுவிய சுற்றுப் பயணங்களை மக்கள்–குறிப்பாக இளைஞர்கள் மேற்கொள்ளப் பயண வசதிகள் செய்து தரவேண்டும்.

கார்லைல் என்ற அறிஞன் "பல்வேறு வகைப்பட்ட நெறிமுறைகளைச் சார்ந்த மக்களை இணைத்து ஒன்றுபடுத்த சக்திவாய்ந்த ஓர் இலக்கியம் வேண்டும்" என்கிறான், அதாவது நாட்டு இலக்கியம் வேண்டும் என்பது கருத்து. இந்திய நாட்டை இணைப்பதற்கும் ஒரு நாட்டு இலக்கியத்தை அரசு தேர்ந்தெடுக்க வேண்டும். இந்திய மக்கள் அனைவரும் இந்த நாட்டு நூலைக் கற்கவேண்டும். பயில வேண்டும். அந்நூல் நெறியில் நின்று ஒழுகுதல் வேண்டும். இப்படி ஒருநாட்டு நூலை இந்தியா தேர்வு செய்ய முன்வருமானால் அதற்கு ஏற்ற ஒரு நூல் திருக்குறள் என்பது தெளிவு; முடிவு. திருக்குறள் சமயம், மொழி, இனம்,

இவைகளைக் கடந்து விளங்கும் பொதுமறை; இந்திய மொழிகளிலும் உலக மொழிகளிலும் மொழிபெயர்க்கப் பெற்றுள்ள நூல். மாந்தரைப் பிரிவினைப் படுத்தக்கூடிய எந்தச் செய்தியும் திருக்குறளில் இல்லை. திருக்குறள் வாழ்க்கை நூல்-பொதுநூல், திருக்குறளைத் தேசிய நூலாக ஏற்று, நாடு தழுவிய நிலையில் ஏற்பாடு செய்வது நல்லது. செய்ய வேண்டியதும்கூட. நாடு தழுவிய நிலையில் ஒழுகுதலே குடிமைப் பண்பு என்று திருக்குறள் கூறுகிறது.

இந்தியா ஒரு நாடு, இந்தியாவின் மக்கள் இந்தியர்கள். நாம் அனைவரும் இந்தியர் என்ற கொள்கையை, கோட்பாட்டை உயிரினும் உயரியதாகப் போற்றுவோமாக!

நமது நாட்டின் தொன்மையான ஒரு பிரார்த்தனை யுடன் நமது உரையை முடிக்க விரும்புகின்றோம்.

"ஒன்று சேர்ந்து நம்மைக் காத்துக் கொள்வோம்.

ஒன்று சேர்ந்து உண்போம்

ஒன்று சேர்ந்து வீரியம் பெறுவோம்.

ஒன்று சேர்ந்து அறிவொளி பெறுவோம்.

எவரையும் வெறுக்காமல் இருப்போம்.

ஓம் சாந்தி, சாந்தி, சாந்தி!"

# 26. ஏன் திருவருள் பேரவை?

மனித உலக வரலாறு ஒரு தொடர் வரலாறு; வளர்ந்து வரும் வரலாறு; இனியும் வளரவேண்டிய வரலாறு. வளர்ச்சியும் மாறுதலும் இயற்கையின் நியதிகள். மனித குலத்தை அழிவிலிருந்தும் தேக்கத்திலிருந்தும் காப்பாற்றி நிலையான நல்வாழ்வினை அளித்த பெருமை சமயங்களைக் கண்ட சான்றோர்களுக்கு உண்டு.

சமயச் சால்பு என்பது தன்னலமறுப்பு. அஃதாவது பிறர்நலம் பேணுதல். சமயவாழ்க்கை என்பது செழித்த அன்பினால் ஆயது; அறத்தினால் ஆயது. சமய வாழ்க்கையின் அச்சு சம நோக்கு; குளுமையான சமநோக்கு. அஃதாவது தன்னைப்போல் பிறரை மதித்தலாகும். சமய நெறிகளின் வாயில்களாகவே இறையுணர்வு கிட்டுகிறது. வேண்டுதலும்- வேண்டாமையும் அவ்வழிப்பட்ட பகையும் சமயநெறிகளுக்கு ஏற்புடையனவல்ல. மனித உலகத்தை வாழ்விக்கும் ஆற்றல், கடவுளின் அருள் பெற்ற ஞானிகளுக்கு-தூதர்களுக்கு-அடியார்களுக்கு உண்டு. இவர்கள் வழியில் மனித உலகத்தை வழி நடத்த திருவருள் பேரவையைக் காண்க. திருவருள் பேரவையில் அனைவரும் ஒன்றுபடுவோம்! வையகத்தை வாழ்விப்போம்!

இந்திய நாடு ஒரு பெரிய நாடு. பலமொழிகள் பேசுநர் வாழும் நாடு; பல சமய நெறியாளர் வாழும் நாடு. வேற்றுமையில் ஒற்றுமை காணும் விழுமிய நாகரிகத்துக்கு இந்திய நாகரிகம் ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. இந்த ஒப்பற்ற ஒருமைப்பாட்டினைக் கட்டிக் காப்பாற்ற திருவருள் பேரவை அமைத்துப் பணி செய்வோம். நமது நாட்டில் அண்மைக் காலமாகச் சில தீயசக்திகள் இனத்தின் பெயராலும் மதத்தின் பெயராலும் வெறுப்பினை வளர்த்துக் கலகம் செய்து வருகின்றன. இத்தீய சக்திகளைத் தொடக்கக் காலத்திலேயே களைதல் வேண்டும். மனித நாகரிகத்தை விரும்புபவர்கள் சமநோக்கின்மையை விரும்பமாட்டார்கள். இந்த வெறுப்புக் கொள்கையை அகற்றுவது இந்திய மக்களுக்கும் இந்திய நாட்டிற்கும் அகில உலகிற்குமே செய்யும் சிறந்த தொண் டாகும். இத்தீய சக்திகள் சாதிமுறை அமைப்புகளையும் காப்பாற்றப் போராடுகின்றன. மனித குலத்திற்குள் உள்மோதல்களை உண்டாக்கி பாரத சமுதாயத்தை நலிவுறச் செய்கின்றன. இவை மட்டுமா? "எல்லாருக்கும் எல்லாம்" என்கிற சமநிலைச் சமுதாய அமைப்புக்கும் தடையாக

அமைந்து, வாழ்வோருடனேயே கூடிக் குலாவுவதும் இத்தீய சக்திகளே! இத்தீயசக்திகளைப் பொது மக்களுக்கு இனம் காட்டித் தனிமைப்படுத்த வேண்டியது உடனடியாகச் செய்ய வேண்டிய நாட்டுப் பணி! மக்கட் பணி! சமயப் பணி!

இத்தொண்டினைச் செய்வதற்குப் பயன்படும் ஓர் அமைப்பு திருவருள் பேரவை! திருவருள் பேரவை ஓர் இயக்கம். உலகிற்கு ஒரு கடவுள் உண்டு. ஒரே ஒரு கடவுள் தான் உண்டு. அந்தக் கடவுளுக்கு உருவம் உண்டு-உருவம் இல்லை-இப்படிப் பலப்பல கோட்பாடுகள். மேலும், மொழிகள் தோறும் கடவுளின் பெயர்கள் மாறும்; நாடுகள் தோறும் அனுபவங்களுக்கு ஏற்ப திருக்கோலங்கள் மாறும் அல்லது ஊரும் பெயரும் இல்லாமலும் போகலாம். கடவுள் எல்லையற்ற ஆற்றலுடையவன்; அளவற்ற அருளாளன். இந்தக் கருத்தில் முரண் இல்லை. எல்லாம் வல்ல இறை வனைப் போற்றிப் புகழ்ந்து வணங்கி இன்புற்று வாழ மனித உலகத்திற்குத் திருவருள் பேரவை வழிகாட்டும்; வழிநடத்தும்.

சமயங்கள் அனைத்திலும் ஒரே கடவுள் தான் நின்றருள் செய்கின்றான். சமய வேறுபாடுகள் இறைவன் அருளிய வகையாலும் நாட்டமைப்பாலும் காலத்தின் வேறு பட்டாலும் அனுபவ வாயில்களாலும் ஏற்பட்டனவேயாம். இந்த வேற்றுமைகள் ஆக்கந்தருவன; உயர்வைத் தருவன என்பதைக் கவனத்திற் கொள்வது நல்லது. இந்திய நாட்டில் விளங்கும் ஒவ்வொரு சமயமும் தத்தம் தனித்தன்மையை இழக்காமல் வளரவும், மன்பதைக்குத் தொண்டு செய்யவும் திருவருள் பேரவை துணை நிற்கும்; அரண் செய்யும்; எக் காரணத்தை முன்னிட்டும் சமய வெறுப்பையும் பகையையும் உண்டாக்க எடுக்கப்படும் எந்த முயற்சிகளையும் தடுத்து நிறுத்தும். இத்துறையில் தேவையெனில் அறவழிப் போராட்டங்களையும் நிகழ்த்தும். நாடு முழுவதும் திருவருள் பேரவை அமையுமானால் மதவெறி-மதக் கலவரங்கள்

என்கிற நச்சுக் காய்ச்சல் மனித உலகத்தைத் தீண்டாமல் பாதுகாக்க உதவும்.

இறைவன் திருவருளைச் சிந்தித்து வழிபடுக! திருவருள் பேரவையின் - அடியார் கூட்டத்துடன் இணைந்திடுக! திருவருள் பேரவைப் பணிகளுக்கு ஒத்துழைப்புத்தந்து உதவுக! இது நமது வேண்டுகோள்.

எங்கெங்கும் திருவருள் பேரவை அமைப்போம்!

ஆண்டவனைத் தொழுவோம்!

அனைத்துயிர் ஒருமைப்பாடு காண்போம்!

# 27. காலத்தின் கட்டளை

இந்தியா ஒரு நாடு. இன்றல்ல. பல்லாயிரம் ஆண்டு களாகவே இந்தியா ஒரு நாடாக விளங்கி வந்துள்ளமையை இந்திய இலக்கியங்கள் எடுத்துக் கூறுகின்றன. இந்தியா பல மொழிகள் பேசும் நாடு; பல மதங்கள் உள்ள நாடு, பல சாதிகள் உள்ள நாடு என்பது உண்மையே. ஆயினும் மொழி, மதம் சாதி காரணமாக மக்கள் அந்நியராகிக் கொண்டு சண்டை போட்டதில்லை; நெகிழ்ந்து கொடுக்கும் தன்மையில் சிறந்து விளங்கினார்கள். எந்தச் சூழ்நிலையிலும் பொருத் தாளும் பண்பு ஓர் ஒழுக்கமாகவே ஏற்று ஒழுகப் பெற்றது.

அண்மைக் காலமாக இந்தியாவில் சாதி மதங்களைப் பின்பற்றுகிறவர்கள் அவற்றை மையப்படுத்திச் சிறு சிறு எல்லைகளை உண்டாக்கிக் கொண்டு இறுக்கமான உணர்வைப் பெற்றுவரும் தீமை பரவலாக வளர்கிறது. இந்தத் தீய மனப்போக்கை, அரசுகளின் அணுகுமுறைகள் வலுப் படுத்துவதாகவே அமைந்துள்ளன. இந்தச் சூழ்நிலையில் இந்தியாவில், இந்திய மக்களிடத்தில் பரஸ்பர நல்லெண்ணத் தையும் நட்புறவையும் வளர்ப்பது நமது கடமை. நமது எதிர்காலத் தலைமுறையினருக்கு நாம் உத்தரவாதத் தன்மை

யுடைய நல்வாழ்க்கையையும் பாதுகாப்பான சூழ்நிலை யையும் உருவாக்கி வைப்பது என்பது நமது தலைமுறை யினருக்குக் காலம் தந்துள்ள கடமை. இந்தத் தலைமுறை யினருக்கு வாய்த்துள்ள அறிவியல் சார்ந்த கடமை. இந்திய மக்களிடத்தில் சமயச் சார்பற்ற தன்மையையும் இந்திய ஒருமைப்பாட்டைக் காப்பதுமேயாகும்.

காலம் தந்த இந்தக் கடமையை ஏற்க முன் வந்துள்ளது தமிழ்நாடு திருவருட் பேரவை. தமிழகம் தழுவிய திருவருட் பேரவை உறுப்பினர்கள் தஞ்சையில் சென்ற மாதம் 26, 27ஆம் தேதிகளில் கூடினர். இந்திய ஒருமைப்பாட்டுக்கு இந்தக் காலத்தில் வாய்த்துள்ள அறைகூவலை ஏற்று பணிசெய்ய உறுதி கொண்டனர். இதற்கு மனித நேயமிக்க பணியினை மேற்கொண்டு புனிதப்பயணம் தொடங்கியுள்ள திருவருட் பேரவை அணியினருக்குத் தலைமை ஏற்று அழைத்துச் செல்ல மக்கள் பேராயர் மதுரை ஆர்ச்பிஷப் மேதகு டாக்டர். எம். ஆரோக்கியசாமி தலைமை ஏற்றுள்ளார். இன்றைய வரலாறு தந்துள்ள பணியினைச் செய்து முடிப்பார் என்று நம்புகிறோம்; வாழ்த்துகின்றோம்.

# 28. *பழமையும் புதுமையும்

இன்று அறிவியலார் மின்னல் வேகத்தில் முன்னேறிச் செல்கிறார்கள். புதியன கண்டு-அதற்கு அளவுகடந்த வரவேற்பளிக்கின்றார்கள். பழைமையை வெறுக்கின்றார்கள். இன்றைய உலகம், புதுமையுமற்று-பழமையுமற்று இரண்டுங் கெட்ட நிலையிலே நிற்கிறது. மேலை நாட்டில் புதியன வளர்ந்து வருகின்றன. ஐன்ஸ்டீன் கருத்து பைபிளை விலக்கிச் செல்கின்றது. பைபிள் புதியனவற்றிற்கு மாறுபட்டபோதும் உயிர் வாழ்கின்றது; அதன் பழமை பாராட்டப்படுகின்றது.

* முத்து மொழிகள்

நம்மவர் புதியன கண்டு நமது பழைய சமயச்செய்திகளை நையாண்டி செய்கின்றார்கள். நம்மிடையே பழமை வளர வில்லை; சடங்குகளே வளர்கின்றன. அவற்றின் பலன் நம்மைக் கிட்டுவதில்லை. முள் நகராத மணிப்பொறிபோலச் சமயச் சடங்குகள் நடைபெறுகின்றன. பெண்டுலம் ஆடினாலன்றோ முள் நகரும். நெஞ்சைத் தொட்டாலன்றோ சமயச் சடங்குகளால் பலன் விளையும். ஆலய மணிகள் நெஞ்சை அசைத்துவிடவேண்டும். சோற்றால் செங்குருதியை ஆக்குவது போலக் கோயில் சடங்குகளால் இளைஞர் உள்ளங்களை அசைத்துவிடவேண்டும், பொருளாதார மேடுபள்ளங்கள் சமயத்தை வெறுக்கச் செய்கின்றன. சமயம் சமூகத்தால் ஒதுக்கப்பட்டு ஆலயங்களிலே சிறைப்பட்டுக் கிடக்கின்றது. பொருள்வளங் கொழிக்கும் நாடுகள் புண்ணிய பூமிகளா? அங்குப் பிறந்திருப்போர் அத்துணைபேரும் புண்ணியவான்களா? அங்குள்ள மக்கள் மற்றவர்களின் அல்லலைப் போக்கிப் பொருளாதாரத்தைச் சமப்படுத் தலைக் கண்ணாரக் காண்கின்றோம்.

சட்டம் புறத்தே நடைமுறையைச் சீர்படுத்த உதவுமே யன்றி மனத்தை மாற்றாது. சட்டத்தால் மனத்தை மாற்ற இயலாது. நீதியாலேதான் மனமாற்றத்தைச் செய்யமுடியும். சமய வாழ்வுபெற்று, இல்லார்க்கு இரங்கித் தொண்டு புரிந்து வாழ்ந்தால் இம்மையே சோறும் கூறையும் பெறலாம். கோயிலிலே அன்பின் அடிப்படையில் சடங்குகள் நடந்து உள்ளங்களைத் தொடவேண்டும். ஆண்டவனின் திருக்கோலக் காட்சியைக் கண்டு கசிந்து கண்ணீர் மல்க வேண்டும். இவ்வாறு ஆலயங்களில்லாவிடில் அவற்றை விட்டு, உள்ளம் கவரும் கடலையும் - மலையையும் கைதொழுவோம். 'மூரி முழங்கொலி நீரானான் கண்டாய்' என அப்பரடிகள் தேவாரம் இதற்கு வழி வகுத்துத் தருகிறது.

எறும்பு, ஈ, யானை எந்த ஆகமப்படி பூசை புரிந்தன? வழிபாடு நமக்காகவே நடைபெறுகின்றது. நாம் உய்திபெறவே

இறைவழிபாடு எழுந்தது. "வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான்" என மணிவாசகர் இதனை வற்புறுத்துகிறார். காற்றை நாம் சுவாசிப்பதனால் காற்றுக்கு என்ன பயன்? நாம்தான் பயன் பெறுகிறோம்! சோற்றை நாம் உண்பதால் சோற்றுக்கு என்ன பயன்? நாம்தான் பயனடைகிறோம். இவற்றைப் போலவே கடவுளை வணங்குவதால் நாமே பயன் பெறுகின்றோம். உயர்ந்த எண்ணத்தால்வரும் பரம்பரையே குலமாகும். இக்குலத்தை நாம் விரும்புகின்றோம். அதைக்கூட உயர் நிலைப்பட்டோர் கைவிடுவர். ஆதலால் எண்ணம் உயர்ந்ததாகவும் தூயதாகவும் இருப்பதற்குக் கடவுள் வழிச்செல்லல் இன்றியமையாதது.

மனிதகுலம் சுதந்திரமாகச் சுற்றிச் சுழன்று திரிய ஆசைப்படுவதில் வியப்பில்லை. எல்லா இனத்தவருடனும் இணைந்து-பிணைந்து வாழ்வதிலும், உரையாடுவதிலும் உவகை கொள்கிறது மனித இனம். இந்தச் சுதந்திர நோக்குக்கும் முட்டுக்கட்டையாக-தடையாக எது குறுக்கிடு கிறதோ அதை அகற்றி அழிக்கவேண்டுமென்ற வேட்கை உண்டாகிறது. மனிதகுல மேம்பாட்டுக்கும்; சமுதாய உயர்வுக்கும் உகந்த சில கருத்துக்களையும், நடைமுறை களையும் யாராவது தடுத்தார்களானால் அத்தடையை நீக்க முயற்சிப்பது தன் கடமையென மனிதன் காலப்போக்கில் உணர்ந்து வந்திருக்கிறான். அத்தகைய உணர்ச்சியின் உந்துதல் தான் சுதந்திரப் பற்றை அவனுக்குக் கொடுத்திருக்கிறது. தமிழினம் சுதந்திரத்தைப் பேணிக்காப்பதில் முன்னின்று உழைத்திருக்கிறது. விரிந்த-விசாலமான மனப்பான்மை தமிழினத்துக்கு இருந்தது போலவே-சுதந்திரம் காக்கும் உணர்வும் இருந்தது. நீங்கள் வாழும் ஊர் எவ்விடத்தி லுள்ளது? என்று அன்று கேட்டால் "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற பதில்தான்வரும். அவ்வளவு தூரத்துக்கு அகன்ற நெஞ்சு அப்போதிருந்தது. தன்னைப்போல பிறரை நேசித்து, தன் நாட்டைப்போலப் பிறநாட்டையும் எண்ணி-

எல்லாரும் ஒரு குலம்-எல்லாரும் ஓர் இனம் என்றபடி வாழ்தல்தான் தலையாய வாழ்வு என்று கருதியவர்கள் அன்றையத் தமிழர்கள்,

அன்றையத் தமிழர் பெரியோரைப் பேணினர்-சுற்றத்தைத் தழுவினர் -இரந்தவர்க்கு ஈந்தனர்-இன்னல் கண்டவிடத்து இரங்கினர். எல்லாவற்றுக்கும் சிகரமாகத் தமக்கு மேலான சக்திக்கு மதிப்பளித்து மதச்சார்புடைய மகிழ்ச்சி வாழ்வு வாழ்ந்தனர். கடவுள் நம்பிக்கையும், மதச் சார்பும் மனிதனுக்கு இன்றியமையாதனவென்று கருதி வாழ்ந்தனர். உள்ளத் தூய்மைக்கும்-உயர்ந்த வாழ்வுக்கும்-உவகை நிலைக்கும்-உள்ளூறு சோதியை, உள்ளம் விட்டு ஓரடி நீங்கா ஒருவனை நம்பினர்-நலம் பெற்றனர். யாருக்கும் அஞ்சாத நெஞ்சுரம் மதத்தைச் சார்ந்த மக்களுக்கு இருந்தது. தலைபோகின்ற நிலைவந்தாலும் கடவுளைத் தவிர வேறெவர்க்கும் தலைகுனியாத தருக்கு அப்போதிருந்தது. நாங்கள் எவருக்கும் குடிமக்களல்லர். எங்களை எமனும் எதுவும் செய்துவிடமுடியாது-நரகத்துக்கு நாம் செல்லப் போவதில்லை-எந்தத் துன்பமும் எங்களை எட்டிப் பாராது. இதனாலே நாம் இன்புற்றுச் செம்மாந்து உலவுவோம்; பிணி துன்பம் இல்லாத பேரின்ப வாழ்வு எங்களுடையது. நாங்கள் ஒரேயொருவருக்குத்தான் பணிந்தவர்கள்-அவரும் தமக்கு மேலாக யாராவது ஒருவரை வைத்திருப்பவரல்லர்-அவர் எவருக்கும் குடிமகன் அல்லர். அவருக்கே எமது பணிவு என்றுமுண்டு என்றார் அப்பரடிகள். "நாமார்க்கும் குடியல்லோம்............" என்பதே அத்திருப்பாடல்.

அப்பரது சுதந்திர தாகமும் உரிமை மனப்பான்மையும் ஓர்ந்து உணரத்தக்கவை. சுதந்திர தாகத்தை அப்பர் வெளிப்படுத்திய முறையினை நாம் மறந்துவிடலாகாது. அப்பரடிகளின் அசைக்கமுடியாத கடவுள் நம்பிக்கைதான் பல்லவ மன்னனின் கட்டளையைத் துச்சமென எண்ண வைத்தது. கடவுள் நம்பிக்கையுடைய சமய சீலர்கள் எதற்கும்

பயந்து விடுவதில்லை. அவர்களின் சமயச்சார்புடைய வாழ்வு அவர்களை அல்லலுக்குள் ஆழ்த்துவதுமில்லை என்பதை அப்பர் திருவாக்கால் நாமறிகிறோம். சுதந்திர உணர்ச்சிக்கு வித்தூன்றிய முதல் வித்தகரே அப்பரடிகள்தான், அவரை அடியொற்றித்தான் ஏனைய கவிஞர்கள் சுதந்திர உணர்ச் சிக்குக் கவிதையால் உதவினார்கள். நமது தலைமுறையிற் றோன்றிய பாரதிகூட அப்பரது அடிச்சுவட்டைப் பின்பற்றி யமை பாராட்டி மகிழத்தக்கது.

"பூமியில் எவர்க்குமினி யடிமைசெய்யோம்; பரிபூரண னுக்கே அடிமை செய்து வாழ்வோம்" என்று பாடியமை பாரதியின் புலமை வெளிப்பாட்டைக் காட்டுவதோடு அப்பரடிகளின் அருட்பாடலையும் நினைவூட்டி நிற்கிறது.

'ஓரினமாக ஒன்றி வாழ்ந்த வாழ்வில் எப்படியோ சாதி முறை நுழைந்துவிட்டது. இச் சாதீய நுழைவு சிலர் வாழவும், பலர் வீழவும்-சிலர் பெருக்கவும், பலர் வாடவும்-சிலர் சிரிக்கவும், பலர் அழவும் உதவி செய்தது. தெளிவாகச் சொன்னால் சிலருடைய வளமான வாழ்வுக்குச் சாதி உறுதுணையாய்-ஊன்றுகோலாய் உதவியது. பிரித்து வைத்து இன்பம் கண்டவர்களும்-தள்ளிவைத்துச் சுகம் அனுபவித்த வர்களும் சாதீய நெருப்புக்கு நெய் வார்த்தவர்கள். இந்தச் சாதீய நெருப்பானது சமயத்தின் தலையாய தத்துவங் களையும் மாசுபடுத்திவிட்டது. நமது சைவ சமயத்தின் கொள்கைகளும், கோட்பாடுகளும் இச்சாதீய நெருப்பால் தகிக்கப்பட்டுவிட்டன. ஆண்டவனின் குழந்தைகள் ஆண்டவனின் விருப்பத்திற்கு விரோதமாகத் தள்ளியும், விலக்கியும் வைக்கப்பட்டார்கள். இதனால் நமது சமயத்திற்குத் தளர்ச்சியும், வீழ்ச்சியும் வரலாயின. இவற்றை யெல்லாம் நல்லபடி சீராக்கி உயர்ந்ததொரு தொண்டினை உருவாக்குதல் சைவ உலகத்தினர் கடன் எனக்காட்டி-வாழ்த்தி-அறிவுறுத்த விரும்புகிறேன்.

# 29. நினைவு புதுப்பிக்கப் படுகிறது

எப்போதும் நினைவுப் புலனில் கிடக்கும் ஒரு செய்தி! ஆயினும் எப்போதும் நினைப்பதில்லை. அவசியமில்லாததால்! வாழ்க்கையில் சில நிகழ்வுகள் நடக்கும்பொழுது பசுரென்று பழைய நினைவுகள் வரும். அத்தருணத்தில் பழைய நினைவுகள் புதுப்பிக்கப்பெறும்.

இன்று நம்முடைய நாட்டு நிகழ்வுகள் நமது நாட்டுப் பழைய நினைவுகளைக் கிளறி விடுகின்றன. நினைவுப் புலன் தொழிற்படுகிறது. இன்றைய நிகழ்வுகள் நினைவுப் புலனில் கிடக்கும் செய்திகளுக்கு இணையாக இல்லை. ஒப்புமை யாகக் கூட இல்லை! ஏன்!' அறிவுப் புலன் காரண காரியங் களைத் தேடுகிறது! பழைய நினைவுகளை ஆராய்கிறது; பழைய நினைவுகளில் உள்ள செய்திகள் பொய்யா? கற்பனையா? இல்லை! இல்லை! அவை உண்மையே! அன்று வாழ்ந்தனர்! இன்று பிழைப்பு நடத்துகின்றனர்! அன்று அஞ்ச வேண்டியனவற்றிற்கு அஞ்சினர். அதாவது பழி பாவங்களுக்கு அஞ்சினர். அறநெறி பேண அஞ்சியவர்கள் இல்லை! இன்றைய நிலை என்ன?

மக்கட் சமுதாயத்தில் அரசுகள் ஏன் தோன்றின? மக்கட் சமுதாயத்தின் பரிணாம வளர்ச்சியில்தான் தேவைக்கேற்ப அரசு தோன்றியது. அரசு தோன்றிய நோக்கம் உழைப்பை விரிவு செய்தல், காவலைப் பொதுமைப்படுத்தல்; வல்லாண்மையின் விளைவாக வல்லாண்மையற்றவர்கள் அழியாமல் அழிக்கப்படாமல் பாதுகாத்தல்! இவையே அரசின் தேவையை உருவாக்கியவை. அரசு தொடக்க காலத்தில் பணியமைப்பாகவே (Service) தோன்றியது. மக்கட் சமுதாயத்தை நெறிமுறைப்படுத்த ஓரளவு அதிகாரம் இருந்தது. ஆனால், காலப்போக்கில் அரசு, அதிகார

அமைப்பாக மாறி மக்கட் சமுதாய வாழ்க்கையையே ஆக்கிரமிப்புச் செய்துகொண்டது. செய்து கொண்டிருக்கிறது. இன்று, எங்கும் எதிலும் அரசின் ஆதிக்கம் விழுது இறங்கி உள்ளது; இறங்கி வருகிறது.

தமிழகம் பல அரசுகளைக் கண்டுள்ளது. பல நூற்றாண்டுகளாக அரசியல் சிறந்திருந்த வரலாற்றுப் பெருமை தமிழ்நாட்டுக்கு உண்டு! உலகின் மற்ற பாகங்களில் அரசை எதிர்த்து மக்கள் கிளர்ச்சி செய்ததுபோலத் தமிழ் நாட்டில் செய்ததில்லை! அரசர்களைக் கொன்றதில்லை! ஏன்? தமிழக அரசுகள் மக்கள் விரோத அரசுகளாக இல்லாமல் மக்கள் நலம் நாடும் அரசுகளாகவே இருந்து வந்துள்ள, அதனால் அரசியற் கிளர்ச்சிகள் இல்லை; புரட்சிகள் இல்லை!

தம்மை அடைக்கலாம் புகுந்த புறா ஒன்றைப் பாதுகாக்க சிபி சக்கரவர்த்தி தனது சதையையே அறுத்துத் தந்த பெருமையை வரலாறு கூறுகிறது. சாதாரணப் புறா! இந்தப் புறாவிற்காகத் தன் உடற் சதையையே அறுத்து அறுத்துக் கொடுத்த பெருமை உண்டு! இன்றோ மனித உயிருக்கு விலை பணம் தான்! மனிதன் உயிரின் மதிப்பு ரூ. 5000/-தான். இன்று அடைக்கலம் பொருளற்றதாகப் போய்விட்டது. காவல் நிலயங்களிலேகூட அடைக்கலம் பாதுகாப்பைத் தரவில்லை. உயிர்க் குலத்துக்கு ஊறு அரசால் வரக்கூடாது; அரசினுடைய சுற்றத்தால் வரக்கூடாது. அரசின் பரிவாரங்களால் வரக்கூடாது. ஏன்? பகைவரால் கூட வராமல் அரசு பாதுகாக்கவேண்டும். இங்ஙனம் புகழ்பூத்து விளங்கிய அரசுகள் நினைவுக்கு வருகின்றன.

பாண்டியநாட்டு மதுரையில் ஒரு வணிகன் இருந்தான். அந்த வணிகன் பொருள் செயலுக்காக அயலூர் செல்கிறான்; மனைவியிடம் விடைபெறுகிறான். மனைவி தன் பாதுகாப்புக் குறித்துத் தனக்குள்ள கவலையைப் புலப்படுத்துகிறாள்.

வணிகன் பாண்டிய அரசின் பெருமைகளை விளக்கிப் பாண்டியன் பாதுகாப்பான் என்று கூறுகிறான்; தன்னுடைய மனைவிக்கு நம்பிக்கை அளித்துவிட்டுச் செல்கிறான். பழங்காலத் தமிழ் நாட்டரசர்கள் நள்ளிரவில் தனியாக நகர் வலம் வந்து மக்களின் வாழ்நிலைகளைச் சோதனை செய்து அறிந்து கொள்வர். இங்ஙனம் பாண்டிய அரசன் நகர் வலம் வருகிறான். வணிகம் கருதி வெளியூர் சென்றிருந்த கணவன் திரும்பி வந்துவிட்டான். இரவில் மனைவியோடு பேசிக் கொண்டிருந்தான். வணிகன் வீட்டில் பேச்சுக் குரல் கேட்கிறது. குரல் கேட்டவுடன் பாண்டியன் கதவைத் தட்டு கிறான். கணவனாகிய வணிகன் ஐயப்படுகிறான். மறுநாள் பாண்டியனின் அரசவை கூடுகிறது. தனது வீடு இரவில் தட்டப்பெற்றது குறித்து ஐயப்படுகிறான் வணிகன். அரசனிடம் முறையீடு செய்ய அரசவை வருகின்றான்; முறையீடு செய்கின்றான். முதல்நாள் இரவு நடந்ததைக் கூறுகிறான். வணிகன் வீட்டுக் கதவைத் தட்டிய தனது கையைப் பாண்டிய அரசன் உடனே வெட்டிக் கொள்கிறான். வெட்டப்பட்ட கைக்கு மாறாகப் பின் பொன்னாலாகிய கை பொருத்தப்பெற்றது. அதனால் பொற்கைப் பாண்டியன் என இவன் அழைக்கப்பெற்றான். இன்று நாட்டில் நடக்கும் நிகழ்வினை நோக்கும்போது

> "உதவா வாழ்க்கைக் கீரந்தை மனைவி
> புதவக் கதவம் புடைத்தனன் ஒரு நாள்
> அரைச வேலி யல்லதி யாவதும்
> புரைதீர் வேலியில் என மொழிந்து
> மன்றத் திருத்திச் சென்றீர் அவ்வழி
> இன்று அவ் வேலி காவா தோ, எனச்
> செவிச் சூட் டரணியிற் புகையழல் பொத்தி
> நெஞ்சம் சுடுதலின் அஞ்சி நடுக்குற்று
> வச்சிரத் தடக்கை அமரர் கோமான்

*உச்சிப் பொன்முடி ஒளிவளை புடைத்தகை*
*குறைத்த செங்கோல் ..............*

(சிலம்பு கட்டுரைகாதை 42–50)

இந்தப் பாடல் பகுதி கூறும் பொற்கைப் பாண்டியனின் அரசு நினைவுக்கு வருகிறது.

சோழநாட்டைச் சேர்ந்த கோவலன் – கண்ணகி இருவரும் பிழைப்புக் கருதி, பாண்டிய நாட்டின் மதுரைக்கு வந்தனர். வாணிகம் செய்து பிழைப்பு நடத்தக் கையிலிருந்த சிலம்பில் ஒன்றை விற்பதற்கென, கோவலன் மதுரை நகர் அங்காடிக்கு வந்த இடத்தில் வஞ்சிப்பத்தனின் சூழ்ச்சியால் கோவலன், யாதொரு விசாரணையுமின்றிக் கொல்லப்படு கிறான். இது ஊழால் விளைந்த செயல். பாண்டியன் தனது அரசு பிழை செய்துவிட்டதை உணர்ந்த நிலையில் சமாதானம் பேசவில்லை. இழப்புத் தொகை தரவில்லை! உடன் அவன் உயிர் பிரிகிறது! ஓர் அரசன் தனக்குத்தானே "கெடுக என் ஆயுள்" என்று தண்டனை விதித்துக் கொண் டான். இன்று எத்தனை எத்தனை துப்பாக்கிச் சூடுகள்! உயிரிழப்புகள்! இவற்றையெல்லாம் காணும்பொழுதும் கேட்கும்பொழுதும் பாண்டியன் நெடுஞ்செழியனின் அரசு நினைவுக்கு வருகிறது.

சேரமான் பெருமாள் என்று ஓர் அரசர்! இவருக்குக் கழறிற்றறிவார் என்றும் பெயர் உண்டு. இந்த உலகில் வாழும் கோடானுகோடி உயிர் வர்க்கங்கள் கழறுவதன் செய்தியை அறிந்துகொள்ளும் பயிற்சி பெற்றிருந்தார். உயிர்க்குல நலம் நாடும் சேரமான் பெருமாள் எளிமையில் சிறந்து விளங்கினார். சேரமான் பெருமான் அரச வீதியில் தேரூர்ந்து வருகிறார். எதிரே ஓர் எளிய மனிதர் திருநீற்றுக் கோலத்துடன் வருகிறார். சேரமான் பெருமாள் தேரினின்றும் இறங்கி வணங்குகிறார். எதிரே வந்தவரோ முழுநீறு பூசிய முனிவர் அல்ல. சராசரி மனிதர் – வண்ணார்; அவர் அஞ்சி

நடுங்கி 'அடி வண்ணான்' என்றார். மன்னர் சேரமான் பெருமான் "கவலற்க! திருநீற்றின் வாரவேடம் நினைப்பித்தீர்! வருந்தாதீர்!" என்றார். இன்று மனிதன் மதிக்கப்படுகிறானா? திருநீற்று வேடம் மதிக்கப்படுகிறதா? இவையெல்லாம் நினைவிற்குரியன. நினைத்துப்பாருங்கள்.

தமிழ்நாடு இயற்கை வளம் கொழிக்கும் நாடு. பாரியாண்ட பறம்பு மலை. இந்த மலை வளமான மலை. உழவர் உழாமலே உண்டு வாழக்கூடிய உணவுப் பொருள்களை வழங்கிய மலை. "உழவர் உழாதன நான்கு பயனுடைத்து" என்று போற்றப்பட்டுள்ளது. நான்கு பயன்படு பொருள்கள் என்னென்ன? ஒன்று - மூங்கில் அரிசி; இரண்டு - வள்ளிக் கிழங்கு; மூன்று - தேன், நான்கு - பலாப்பழம். இங்ஙனம் வளம் கெழுமிக் கிடந்த பறம்பு நாட்டின் நிலை என்ன? வானில் உள்ள மீன்களைப் போல் பறம்பு மலையில் நீர் ஊற்றுச் சுனைகள்! அருவிகள்! இன்று பறம்பு மலையின் நிலை என்ன? அன்றையப் பறம்பு மலையை நினைத்துப் பார்க்க வேண்டாமா? மீண்டும் வளமான பறம்பு மலையைக் காண வேண்டாமா?

சங்க காலக் கவிஞன்,

ஓரில் நெய்தல் கறங்க ஓரில்
ஈர்ந்தண் முழவின் பணி ததும்பப்
புணர்ந்தோர் பூவணி அணியப் பிரிந்தோர்
பைதல் உண்கண் பணிவார் புறைப்பப்
படைத் தோன் மன்ற, அப் பணிபிலாளன்!
இன்னாது அம்ம, இவ் வுலகம்
இனிய காண்க, இதன் இயல் புணர்ந் தோரே!

(புறம் 194)

என்று பாடினார். ஒரு வீட்டில் துக்கம்; ஒரு வீட்டில் மகிழ்ச்சி! ஏன்? என்று வினவுகிறார். இரண்டும் கடவுள் படைப்பு என்று கூறுகின்றனர். துக்கம் - மகிழ்ச்சி என்று

இருவேறுபட்ட நிலை கடவுள் படைப்பாக இருப்பின் அக்கடவுளைப் பண்பில்லாதவன் என்று திட்டுகிறார். அதே கேள்வியை ஒன்பதாம் நூற்றாண்டில் சுந்தரர்,

*நிறையும் செல்வத் தெதிர் மனைகள்*
*இரண்டில் நிகழ்மங் கலவியங்கள்*
*அறையும் ஒலி ஒன்றினில்; ஒன்றில்*
*அழுகை ஒலிவந் தெழுதலும் ஆங்(கு)*
*உறையும் மறையோர் களை "இரண்டும்*
*உடனே நிகழ்வ தென்?"* (பெ.பு. வெள்ளானை – 5)

என்று கேட்கிறார். விதிப்பயன், வினைப்பயன் என்றெல்லாம் அமைதி கூற முயற்சி செய்யவில்லை! நம்பியாரூரர் வருந்து கின்றார்! சங்ககாலக் கவிஞன் கூட

*"இன்னா தம்ம இவ் வுலகம்*
*இனிய காண்க இதன் இயல்புணர்ந் தோரே!"*

என்றுதான் பாடினான். அதாவது இந்த உலக இயற்கை இன்னாததுதான்! துன்பமானதுதான்! இந்தத் துன்பத்தை இன்பமாக மாற்றவேண்டும் என்றான். வரலாற்றுப் போக்கில் மாற்றும் முயற்சியும் இல்லை; மாற்றவும் இல்லை! ஆனால் சுந்தரர் முதலையுண்ட குழந்தையை மீட்டுத் தந்து மகிழ்ச்சியை உண்டாக்கினார். இந்த வரலாற்றினை நினைவு கூர்வது நல்லது. இன்பச் சூழலைப் படைக்க நினைவு துணை செய்யும் அல்லவா?

சுதந்திரப் போராட்ட வீரர்கள் மருது சகோதரர்கள். வீரர்கள் மட்டுமல்ல. பக்திமான்களும் கூட! காளையார் கோயில் இராஜகோபுரத்தைக் கட்டியவர்கள். குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம் சங்கரலிங்க முனிவரை ஞானா சிரியராகக் கொண்டவர்கள். ஆங்கிலேயரிடம் தோற்றுப் போய்ச் சங்கரப்பதிக் காட்டிலே சுற்றிக் கொண்டிருந்த காலம். தங்களுக்கு மரணம் வர இருப்பதை உணர்ந்தனர்.

இங்கும் அங்குமாகச் செம்பொற் காசுகளைத் திரட்டி வந்து சங்கரலிங்க முனிவரிடம் பாதகாணிக்கையாக வைக்கின்றனர். சங்கரலிங்க முனிவர் அதனை வாங்க மறுக்கிறார். "எடுத்துக் கொண்டு போ! சுதந்திரப் போரைத் தீவிரமாக நடத்து, பின் பார்த்துக் கொள்ளலாம் காணிக்கையை" என்று அருளி விட்டார். மருது சகோதரர்கள் வேறு வழியின்றி எடுத்துக் கொண்டு போய்விட்டனர். ஆனால் அந்தச் செம்பொன்களைக் கொண்டு விவசாயிகளிடம் குடியுரிமையை வாங்கி ஆதீன முதல்வர் பெயருக்கு அறக்கட்டளையாக ஓலை எழுதினர். கிராமத்திற்கு 'செம்பொன்மாரி' என்று பெயர் சூட்டினர். அன்றைய ஆதீன அருளாளரின் தேசபக்தி நினைவுகூரத் தக்கது. மருது சகோதரரின் தேசபக்தியும் குரு பக்தியும் நினைவிற்குரியன. இந்த வரலாற்றினை நினைவு கூர்ந்தால் நமது சமயத் தலைவர்களிடையே தேசபக்தி வளரும்; தெய்வபக்தியும் வளரும்!

# 30. *ஒழுங்கு வளர

இயற்கை உலகியலில் ஏதோ ஓர் ஒழுங்கிருக்கிறது–அந்த ஒழுங்கு ஆண்டாண்டுக் காலமாக மாறவில்லை. அந்த ஒழுங்கை மையமாக வைத்தே மனித உலகம் வாழ்ந்து கொண்டிருக்கிறது. எப்போதாவது அந்த ஒழுங்கு தவறும் பொழுதுதான் விபத்துக்கள் தோன்றுகின்றன. விபத்துக்களின் விளைவாக அழுகை தோன்றுகிறது.

இயற்கையில் உள்ள ஒழுங்கைவிட மனித குலத்தின் ஒழுங்கு சற்று அதிகமாகவே இருத்தல் வேண்டும். காரணம் இயற்கை நியதியின் பாற்பட்டது. மனிதன் அதற்கும் மேலாக அறிவு, அன்பு ஆகிய ஒழுங்கின் நிலைக் களன்களாகிய

* பொங்கல் பரிசு

உணர்வுகளைப் பெற்றவன். ஆனால் இன்றோ, ஒழுக்க நடையும் தளர்ந்து வருகிறது. அவ்வழி ஒழுங்கும் நிலை பெறவில்லை. ஏன் இந்த நிலை? ஒழுக்கம் ஆகியவைகளையும் கூடப் பரந்த நிலையில் இயல்புகளுக்கேய்ந்தவாறு நோக் காமல் சிறிய எல்லைக்குட்பட்ட தன்னல நோக்குடனேயே நிர்ணயிக்கத் தலைப்பட்டுவிட்டார்கள். இன்று ஒருவர் ஒழுக்கமென்று கூறுவது பிறிதொருவருக்குத் துன்பமாகவும், தொல்லையாகவும் இருப்பதைக் காண்கின்றோம். இந்த அவல நிலைக்குக் காரணம், மனித குலத்திடையே ஒருமைப் பாட்டுணர்வு வளராமையேயாம். அவ்வழிப்பட்ட அன்பும் அரும்பி மலரவில்லை-மனமாற்றத்திற்கு அடிப்படையான கருத்துப் புரட்சியும் ஏற்படவில்லை.

ஒழுக்கத்தினின்று ஒழுங்கு தோன்றுகிறது. இது தொடக்கநிலை – அறிவு நிலை. பின் ஒழுங்கிலிருந்து ஒழுக்கம் தோன்றுகிறது. இது வழி நிலை-பயிற்றிக் கொள்ளும் நிலை. முன்னையது புலன்களின் சார்புடையது-பின்னையது பொறிகளின் சார்புடையது. முன்னையது சுதந்திரமானது- பின்னையது அஞ்சியும் செய்யலாம். ஒழுங்குநெறி கற்றுக் கொடுக்க முற்றிலும் தகுதிப்பாடுடையவன் இயற்கையென்ற பேராசிரியன். ஆனாலும், மனிதனிடத்தில் கற்றுக்கொள்ளும் உணர்ச்சியைவிட அனுபவிக்கும் உணர்ச்சியே மேலோங் கிற்று. அவன் இயற்கையிலிருந்து பாடம் படித்துக் கொள்ளத் தவறிவிட்டான். ஆனாலும், அடக்கியாண்டு அனுபவித்துக் கொண்டு வருகிறான். எதையும் அனுபவிக்க வேண்டும் என்ற உணர்வு, ஆசையை வளர்க்கும். அவ்வழி, விரும்பத் தகாத போட்டாப் போட்டிகள் தோன்றும். ஒழுக்கம் உறுதியற்றுப் போய்விடும்; ஒழுங்கு நிலைதடுமாறும்.

இயற்கையிலிருந்து ஒழுக்கத்தையும் ஒழுங்கையும் கற்றுக்கொள்ளத் தவறிவிடும் மனிதனுக்கு ஒழுங்கைக் கற்றுக் கொடுப்பது சமுதாயம். அந்தப் பரந்துபட்ட சமுதாயக் குடும்பம் என்ற நிலைக்களனிலிருந்து மனிதன் ஒழுங்கைக்

கற்றுக் கொள்ளுகிறான். பாரம்பரியம் என்பது உணர்ச்சி களின் சங்கிலி-உணர்ச்சிகளின் பிரதிபலிப்பு. இது எங்கோ ஒரோ வழிதான் மாறும். பெற்றோர் சமுதாயம் பெருமைக் குரியதாக அமையாது போனால் ஒழுங்குகள் மாறும். அவை உறுதிக்கொள்ள முடிவதில்லை. ஒழுங்குகள் கால்கொள்வ தில்லை. அஞ்சல் தலையில் ஒட்டுதற்குரிய பசையுண்டு. எனினும், அதுவே ஒட்டுதற்குப் போதாதது. அதற்குப் புறச் சேர்க்கையாகச் சிறிது தண்ணீரும் தேவை. அதுபோல, தனி மனிதன் தன் சிந்தனையாலும் அறிவினாலும் ஒழுங்கைக் கடைப்பிடிக்க எவ்வளவுதான் முயற்சித்தாலும் அதைக் காப்பாற்றிக்கொள்ளப் பெற்றோர் சமுதாயத்தின் ஒழுக்க முறை துணை செய்யாவிட்டால் பயனில்லை. இன்றையச் சூழ்நிலையில் பள்ளிக்கூடத்திற்கும் வீட்டிற்கும் போர் நடந்து கொண்டிருக்கிறது. ஆசிரியர்களும் பெற்றோர்களும் இரு அணிகளாகப் பிரிந்து நின்று போர் புரிந்து கொண்டிருக் கிறார்கள். இந்தப்போர் இன்றோ நேற்றோ தொடங்கியதல்ல. ஆயிரமாயிரம் ஆண்டுகளாகத் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டு வருகின்றது. இந்தப் போராட்டத்தில் ஆசிரியர் உலகம் தொடர்ந்து தோல்வியையே கண்டு அனுபவித்து வருகிறது. அது ஒருபொழுதும் வெற்றிபெற்றதில்லை. பள்ளிக் கூடத்தில் சொல்லிக் கொடுப்பதற்கு மாறான வாழ்க்கை யையே வீட்டிலும், நாட்டிலும் நாம் காண்கின்றோம். அதனாலன்றோ, 'பள்ளிக் கணக்கு புள்ளிக்குதவாது', 'ஏட்டுச் சுரக்காய் கறிக்குதவாது' என்ற பழமொழிகள் தோன்றின! பெற்றோர் சமுதாயம் மனம் வைக்க வேண்டும். நேற்றைய அனுபவத்தின் விளைவாக வரும் அறிவோடியைந்த வாழ்க்கையை விரும்பி ஏற்றுக்கொள்ளவேண்டும். தம்முடைய குழந்தைகளும் அதனை ஏற்றுக் கொள்ளும்படி முயற்சி செய்ய வேண்டும்; நன்றல்லவற்றை ஒதுக்க வேண்டும். நன்றுடையாராக இருந்தால் மட்டும் போதாது. தீமையைக் கடிந்து விலக்கும் ஆற்றலுடையராகவும் இருக்க வேண்டும்.

கு. XIII. 12.

அப்போதுதான் நன்றியின் பயனை அனுபவிக்க முடியும். நன்றின் பயன் விளையும். "நன்றுடையானை-தீய திலானை" என்பது தமிழ் மறை. இன்றையக் குறைநாளை நிறையாக வேண்டும். இதுவே வாழ்க்கை முறை. குறையே ஒரு பெருங் குற்றமாக முடியாது. குறையே ஒரு குற்றமன்று. ஆனால் குறையைக் குறையென்றுணராமல் இருப்பதுதான் குற்றமாகும். இன்று பலரிடம் குறையைக் குறையென்றுணரும் அறிவு இருக்கிறதா என்பதே கேள்வி. அந்த அறிவும் ஆற்றலுடன் செயல்படுகிறதா என்று பார்ப்பது அவசியம். எப்படி உலகியலில் அரும்பு மலர்ந்து மலராகிறதோ, பிஞ்சு காயாகிக் கனியாகிறதோ அதுபோல, மனிதனும் குறைகளைக் கடந்து பூரணத்துவம் பெற்று, முழு மனிதனாக வளர்ந்து, அதற்குரிய வாழ்க்கை முறைகளைப் பெற்று வாழ்க்கையில் வெற்றி பெறவேண்டும். அந்த வாழ்க்கை முறைக்கு வீடும் நாடும் துணை செய்யவேண்டும்.

ஆசிரியர்கள் புனிதமான தொண்டில் ஈடு பட்டிருப்ப வர்கள். ஆசிரியத் தொழில் யாழை மீட்டுதலைவிட நுணுக்க மான தொழில். யாழை மீட்டுகிற வழி மீட்டாது போனால் இனிய இசை தோன்றாது. யாழும் கெடும். கேட்பவர்களும் அருவருப்பர். புறப்பொருளாகி, நம்முடைய பூரண இயக்குத லுக்குக் கட்டுப்பட்ட யாழின் நிலையே இதுவானால், புலப்படாப் பொருளாகவும் நம்முடைய பூரண ஆற்றலுக்குக் கட்டுப்படாததாகவும் உணர்ச்சிகளின் சின்னமாகவும் இருக் கின்ற உயிர்களைத் திருத்தும் வேலை எவ்வளவு சிக்கலானது! சிக்கலானது மட்டுமல்ல-உலகில் எத்தொழிலுக்கும் தேவைப் படுகின்ற ஆற்றலைவிட இதற்கு ஆற்றல் அதிகமாகத் தேவை என்பதையும் நாம் உணர்ந்து கொள்ள வேண்டும். ஒழுங்கின் பெரும்பகுதி பிறர் வாழ்க்கையிலிருந்து எடுத்துக் கொள்வதே யாகும். ஆசிரியர்கள் தம்முடைய வாழ்க்கை முறையினா லேயே மாணவர்களுக்கு ஒரு பேராசிரியராகத் திகழ வேண்டும். சொல்லுக்கும் செயலுக்கும் இடையே ஏற்படும்

வேற்றுமை அல்லது பிளவு, உடலுக்கும் உயிருக்கும் இடையே தோன்றும் பிளவைப் போன்றது. உடலினின்றும் உயிர் பிரிந் தால் உடல் பிணமாகும். செயலினின்றும் சொல் பிரிந்தால் சொல் பிணமாகும். அதற்கு ஆற்றல் இல்லை. ஆதலால் ஆசிரியர்கள் முன் மாதிரியாக வாழ்ந்து காட்ட வேண்டும். அடுத்து, மனம் நுண்ணியது-மெல்லியது. பின்னிக் கிடக்கும் முடிச்சுகளைச் சிக்கல் நீக்கிச் சீர்செய்ய எத்துணைப் பொறுமை தேவையோ அதைவிடப் பன்னூறு மடங்குப் பொறுமை தேவை. மனித குலத்தின் சிக்கல்களைத் தீர்ப்ப தற்கு. குறை காண்பது எளிது-ஆனாலும், குறைகளுக்குரிய காரணங்களைக் கண்டு பிடிப்பதே அரிய முயற்சி. காரணங் களைக் கண்டு, அக் காரணங்களையே களைந்து குற்றங்கள் தோன்றாவண்ணம் செய்தல் வேண்டும். அதனாலன்றோ திருவள்ளுவர்,

> "நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
> வாய்நாடி வாய்ப்பச் செயல்"
>
> —குறள் 948

என்கிறார்.

"நோய் முதல் நாடி" என்று குறிப்பிடுகின்றார். "மூல நோய் தீர்க்கும் முதல்வன் கண்டாய்" என்பது தமிழ்மறை. ஆசிரியர்கள், மலர்களில் கையாளும் மென்மையைவிட அதிக நுணுக்கமாக மாணவர்களை-மாணவர் மனங்களைக் கையாள வேண்டும். அவர்களின் உணர்ச்சிகளை நன்றாகப் புரிந்து கொள்ளவேண்டும்- அதற்கு ஒரு மதிப்பும் கொடுக்க வேண்டும். எனினும் தன் திசையில் செல்ல அனுமதிக்கக் கூடாது. அப்படியானால், தடை செய்வது என்று பொருள் அல்ல. அவர்களை நல்வழிப்படுத்துதல் வேண்டும். இதனைத் திருமூலர் "மடை மாற்றல்" என்று குறிப்பிடுவார். உணர்ச்சி களை அடக்க முடியாது. ஆனாலும் அந்த உணர்ச்சிகள் பற்றிப்படர்கின்ற கொழுகொம்புகளை மாற்றி விடுவதன் மூலம் சீர்செய்ய முடியும். போர் செய்யும் உணர்ச்சி இயல்பி

லேயே மனிதனுக்கிருக்கிறது. இந்த உணர்ச்சியைத் தன்னலத் திற்காக-தன் உற்றார் உறவினர்களோடும் போரிடும் வகையில் வளராமல் தடுத்துத் தீமையை எதிர்த்துப் போராடும் போருணர்ச்சியாக வளர்க்கலாம்-வளர்க்க வேண்டும். உழவர்கள் நிலத்தின் இயல்பைத் தெரிந்து கொண்டாலே சிறந்த விவசாயிகளாகிறார்கள். அதுபோல ஆசிரியர்கள் குழந்தைகளின் மன இயல்பைத் தெளிவாகப் புரிந்து கொண்டாலே நல்லாசிரியர்களாகத் திகழ முடியும். நிலத்தின் இயல்புக்கு ஏற்றவாறு உரமிடப்படுதல் போல குழந்தைகளின் மன இயல்புக்கு ஏற்றவாறு நல்ல கருத்துணவுகள் வழங்கப் பெறுதல் வேண்டும். உடல் நலத்திற்கு ஏற்ற உணவுகள் கிடைக்காத போது, உடல் நோய்வாய்ப்படுவது போலவே, மனநலத்திற் கேற்ற கருத்துணவுகள் கிடைக்காதபோது ஒழுக்க உணர்வுகளும் ஒழுங்குணர்வுகளும் தளரத்தான் செய்யும். அதனைப் பருவமறிந்து தேவையறிந்து ஆசிரியர்கள் வழங்க வேண்டும். ஆசிரியரால் வழங்கப்பெற்ற கருத்துணவு செரித்துச் செயல்படுதற்குப் பெற்றோர்கள் துணை நிற்க வேண்டும். மனித குலத்திற்குள் அன்பு வழிப்பட்ட இணைப்பும் அமைதி தழுவிய நல்வாழ்க்கையும் வளர-ஒழுங்கு வளர ஆசிரியர்களும் பெற்றோர்களும் முயற்சித்து வெற்றியடைய வேண்டும் என்று விரும்புகிறோம்.

# 31. *சமூக நோக்கில் அறிவியல்

**ம**னிதர் பலர் கூடிக் கலந்து, வாழ்வதற்குச் சமூகம் என்று பெயர். சமூக அமைப்புத் தோன்ற, சமூக அமைப்பு வளர, சமூக அமைப்பு நிலைப்பட்டு நிற்க அறிவியல் அடிப்படையாக அமைகிறது; கருவியாக அமைகிறது. சமூக அமைப்புத் தோன்றிப் பல்லாயிரம் ஆண்டுகள் ஆயின.

* சிந்தனை மலர்கள்

மனிதர்களுக்கு இயற்கையாலும் விலங்குகளாலும் அயலவர்களாலும் அச்சம் இருந்த வரையில் சமூக அமைப்பு விரைந்து உருப்பெற்றது; வளர்ந்தது. ஏன், பாதுகாப்புக்குச் சமூக அமைப்பும் வலிமையும் தேவைப்பட்டன. சமூக அமைப்பு தோன்றி வளர்ந்ததில் பொருள் உற்பத்தி முறைக்கு மிக முக்கியமான பாத்திரம் உண்டு. பொருள் உற்பத்திக்குக் கூட்டு முயற்சியே எளிதாயிற்று. ஆதலால், பொருள் உற்பத்தி செய்து வாழ்வை இயக்க, சமூக அமைப்பு தேவைப்பட்டது. உற்பத்தி செய்த பொருள்கள் பணமாக மாற்றம் பெறும் வரலாற்றுக் காலக் கட்டத்தில் மனிதகுலம் மாற்றம் அடைந்தது. இந்நிலையில், மெல்ல சமூக அமைப்பு நிலைகுலையத் தொடங்கியது. சொத்துரிமை தோன்றிய காலமும் இதுவே! பணமதிப்பீட்டுச் சமூகம், சொத்து மதிப்பீட்டுச் சமூகம் தோன்றியவுடன் சமூக அமைப்பில் சரிவுகள் தோன்றின. சமூகக் கட்டுக்கோப்பு நெகிழத் தொடங்கியது. ஏன், சமூக அமைப்பு இல்லாமலே போகும் நிலை உருவாயிற்று. காலப்போக்கில் 'சமூகம்' என்ற அமைப்பு, வடிவத்தால் அமைந்து உணர்வாலும் பயனாலும் இல்லாமலே போய்விட்டது. சில இடங்களில் சமூகம் என்ற அமைப்பு வல்லாளர் வயப்பட்டுத் தீய வடிவம் பெறலாயிற்று.

சமூக இயக்கத்திற்கு - அமைப்பிற்கு அறிவியலே அமைப்புச் சாதனம்; இணைப்புக்கருவி. அறிவு அல்லது அறிவியல் என்பது என்ன? ஒன்றை, ஒரு நிகழ்வை அறிவியல் பார்வையில் அணுகுவது அறிவியல், "Attitude" "Approach" என்பர். கற்றறிந்த செய்திகளின் தொகுப்பு அறிவியல் ஆகாது. 'சமூகம்' அறிவியல் அடிப்படையில் இயங்கினால், சீராக இயங்கும். ஒருவரை ஒருவர் புரிந்து கொள்வதிலும் தெரிந்து கொள்வதிலும் தான்–ஒத்திசைந்து வாழ்வதிலும்தான் சமூகம் என்ற அமைப்பு தோன்றுகிறது; வளர்கிறது. காரியங்களைப் பற்றிய கவலையால் யாது பயன்? காரணங்களைப் பற்றிய

கவலையே அறிவியல் சார்ந்தது. கவலையை மாற்றும் கருத்துருவமே அறிவியல். ஒவ்வொருவருக்கும் சொந்த விருப்பங்கள் உண்டு. ஒருவர் தமது விருப்பங்களை மட்டுமே நிறைவேற்றிக் கொள்ள முயன்றால், சமூகம் என்ற அமைப்பு இருக்காது. உருக் குலையும். ஒருவர், மற்றவர்களின் விருப்பங் களை அறிந்து அவை நிறைவேறத் துணை செய்தலே அறிவியல் சார்ந்த சமூக வாழ்வியல்முறை.

சமூகம் என்பது ஓர் அளவினதாகிய ஒரு கட்டுக் கோப்பிற்குள் அமைந்து இயங்கும் மனிதக் கூட்டமாகும். தொடக்க காலத்தில் யாதொரு வேறுபாடுமில்லாது குறிப்பிட்ட ஓர் இடத்தில் வாழும் கூட்டமாக இருந்தது. பின் காலப்போக்கில் சாதிகளானது. பல குடும்பங்கள் ஒத்ததறிந்து வாழ்வது சமூகம். ஒப்புரவு நெறி நின்று ஒழுகும் மக்கள் தொகுதியே சமூகம். இத்தகு சமூக அமைப்பை ஓயாது இயக்கிக் கொண்டிருக்கும் ஆற்றல்களே அன்பும் தேவையுமாகும். அன்பு, மற்றவர் வாழ்தல் வேண்டும் என்ற விருப்பார்வத்தில் இயங்கும் உயிர்ப்பண்பு. அன்புக்கு, "நான்" இல்லை; "நாம்" உண்டு! அன்பின் சந்நிதியில் 'எனது' இல்லை; 'நமது' உண்டு! ஆம்! அன்பினால் கூடி வாழும் சமுதாயம் கூட்டுடைமைச் சமுதாயம்! உண்பித்து உண்ணல், வாழ்வித்து வாழ்தல், மகிழ்வித்து மகிழ்தல் என்ற உயரிய பண்பு அன்பாகும். இந்த அன்பு அறிவியல் சார்ந்த நிலையில் இயங்கும் பொழுது சமூகம் தோன்றும். இத்தகு சமூகம் நிலைபெறும்; வாழும்!

மனிதகுலம் என்னும் தேர் உருண்டோடுவதற்கு அச்சாக அமைவது பொருளேயாம். மனிதகுலம், பொருளுற் பத்தி நெறியால்தான் வளர்ந்து வந்துள்ளது. பொருள் உற்பத்தியில் அறிவியல் சார்ந்து அவரவர் பங்கேற்பைப் பெறுதல், செய்தல், பொருள் நுகர்வில் வேற்றுமையை அகற்றுதல் முதலியன பொருளியல் சார்ந்த அறிவியலாகும். இயற்கை அமைவில் சமூகத்தின் உறுப்பினர் அனைவரும்

அனைத்துத் திறனும் முழுதுமாகப் பெற்றிருப்பதில்லை. ஒருவர் தேவை. மற்றவர்களால் நிறைவு செய்யப்பெறுவதே அறிவியல் சார்ந்த உழைப்புமுறை; உற்பத்திமுறை. பொருள் செய்தலிலும், நுகர்தலிலும் இத்தகு அறிவியல் நோக்கு அமையின் சமூகம் சிறப்பாக அமையும்; இயங்கும்.

சமூக அமைப்பு, சீராக அமைந்து விளங்கிடச் சுற்றுப் புறச் சூழ்நிலை நன்கு அமைய வேண்டும். சுற்றுப்புறச் சூழ் நிலை என்பது பலவகை. அவற்றுள் மூன்று பெரும் பிரிவுகள் கவனத்திற்குரியன. அவை நம்மைச் சுற்றியுள்ள இயற்கை அமைவாகிய நிலம், தண்ணீர், காற்று ஆகிய மூன்றுமாகும். இயற்கைச் சூழலாகிய இவற்றைத் தூய்மையாகப் பேணவேண்டும். இவை, உடல்நலமுற இயங்குவதற்கும் வாழ்வதற்கும் தேவை.

முதலாவது நிலம். மானிட வாழ்வுக்கு நிலம் அடிப்படை நிலம், மண்ணரிப்பு நோய் முதலியவற்றிற்கு ஆளாகாமல் பேணப்பட்டால்தான் மானிட வாழ்வுக்கு உணவும் உடையும் கிடைக்கும் நிலத்தைப் பேணுதல் என்பது பயன்படுத்துதலிலேயே அமைந்திருக்கிறது. நிலத்தைப் பயன் படுத்திக் கொள்ளத் தெரிந்தாலே போதும்! நிலம் தன்னியல்பில் சிறந்து விளங்கும் தன்மையது. மனிதன், தன் வாழ்விற்காகவேனும் நிலத்தைப் பேணவேண்டும் என்ற அறிவியல் உண்மையை அறிந்திருந்தால் இன்று நமது நாட்டில் இலட்சக்கணக்கான ஹெக்டேர் நிலங்கள் மண்ணரிப்பு நோய்க்கு ஆளாகியிரா. ஆதலால் சமூகம் என்ற அமைப்பு நிலைத்து வாழ்ந்திட நிலம் பயன்படுத்தப்பெறுதல் வேண்டும்.

> நிலமகள் திருமேனியில் பசுமை ஆடைபோர்த்த வேண்டும். நிலமகள் முகத்தில் அழுக்குகளை, கழிவுப் பொருள்களை இட்டு அவளை அவலப்படுத்தா தீர்கள்! எல்லாக் கழிவுகளையும் சோம்பல் பாராமல் அவள் மடியில் வைத்துக் கட்டுங்கள்! அதாவது,

நிலத்தில் குழிவெட்டிக் கழிவுப் பொருள்களை அந்தக் குழியில் போட்டு மூடுங்கள்! அவள் அவற்றை உரமாக்கிப் பொன்மதிப்பில் உங்களுக்கே தந்து மகிழ்வாள்! தொற்றுநோய் குறையும்; வளம் கொழிக்கும்; இயற்கை எழில் பூத்துக் குலுங்கும்!

இரண்டாவது, தண்ணீர்! நீரின்றமையாது உலகியல் வாழ்க்கை. தண்ணீர் அற்புதமான பொருள். உலகில் மிகக் குறைவாகக் கிடைப்பது தண்ணீர். நமது மக்கள் "தண்ணீர் பட்ட பாடு" என்று பொருள்களையும் பணத்தையும் வீணாக்குவதைப் பார்த்து உவமையாகக் கூறுவர். இது தவறானது. தண்ணீர் மனிதகுலத் தேவைக்குப் போதிய அளவு கிடைக்கவில்லை. அதனால்தான் அடிக்கடி வறட்சி, பஞ்சம் முதலியன ஏற்படுகின்றன. எனவே, தண்ணீரைச் சிக்கனமாகப் பயன்படுத்த வேண்டும்; தூய்மையாகப் பேணவேண்டும். **"தாயைப் பிழைத்தாலும் தண்ணீரைப் பிழைக்காதே"** என்ற பழமொழியினைத் தேறுவீர்! நிலம்போலத் தண்ணீர் பொறுத்தாற்றும் இயல்புடையதன்று. தண்ணீரை நாம் கெடுத்தால் நாம் கெடுதல் - அழிதல் உடனடியாக நிகழும். ஆதலால், சமூக அமைப்பு நலமுடன் இயங்கத் தண்ணீரின் தூய்மையைக் காப்பாற்ற வேண்டும். மேலும் மேலும் தண்ணீர் வளத்தைப் பெறக் காடுகளைப் பேணவேண்டும்.

மூன்றாவது, காற்று! காற்று இயக்கத் தன்மை உடையது. மூச்சுக் காற்றின் உயிர்ப்பிலேயே வாழ்வு அமைந்து கிடக்கிறது. இம்மூச்சுக் காற்றினை மாசுபடாமல் பாதுகாத்தல் வேண்டும். நிலம், நீர் இவற்றின் தூய்மையில் ஓரளவு காற்றின் தூய்மையும் அமையும். ஆயினும் ஆலைப்புகை முதலியவற்றால் காற்றுகெடாமல் பாதுகாக்கப் பெறவேண்டும்.

அடுத்தது, சமூக இணக்கங்கள் - உறவுகளுக்குரிய சூழல். இஃது ஆன்மா சம்பந்தமுடையது. புறத்தூய்மை

செய்தால் போதாது. ஆன்மாவையும் சுத்தம் செய்தல் வேண்டும். ஏன்? ஆன்மாவைச் சுத்தம் செய்தலில் சமூக உறவு அரும்பும்! ஆதலால், சமூக உணர்வுகளும் உறவுகளும் வளரத்தக்க வகையில் ஆன்மா வளர்க்கப் பெறுதல் வேண்டும். எவ்வளவு பெரியமனிதராக இருந்தாலும் தனிமனிதராக வாழ்தல் இயலாது. அவருடைய வாழ்வு சீராக அமையக் குலம் தேவை; சுற்றம் தேவை; ஊர் தேவை. எந்தக் குடும்பத்தில் நல்ல மனைவி, மக்கள் வாழ்கின்றனரோ, அந்தக் குடும்பத்தில் முதுமை இல்லை; நோய் இல்லை இன்பம் பொதுளும். எங்கே நினைப்பினை முடிக்கும் அலுவலர்கள் உள்ளனரோ, அங்கே பணிகள் சிறப்புற நடைபெறும்; வளம் பெருகும்; வாழ்வு சிறக்கும்; மகிழ்ச்சி பெருகும். எந்த ஊரில் ஆழ்ந்த அனுபவங்களின் வழி புலன்களும், பொறிகளும் பக்குவப்பட்ட சான்றோர் இருக்கிறார்களோ, அந்த ஊரில் பல்குழு இருக்காது; பகை இருக்காது; மகிழ்ச்சியும் அமைதியும் நிலவும். இது சமூகச் சூழல்! இத்தகைய சூழல் அறிவியல் அடிப்படையில் அமைந்தால்தான் நிலைபெற்று இருக்கும். ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளுவதற்குரிய அறிவியல் சார்ந்த திறன் தேவை. இன்று, நமது நாட்டில் நிகழும் கொலைகள், தற்கொலைகள், கலகங்கள், சண்டைகள் ஆகிய அனைத்திற்குமே காரணம் நம்முடைய சமூக வாழ்க்கை அறிவியலைச் சார்ந்ததாக அமையாததேயாகும்.

அன்பு என்பது உயிர்ப்புள்ள, ஆற்றல்மிக்க பண்பாகும். அன்புதான் முறையான, நிறைவான வாழ்வின் அடையாளம்! அன்பு செய்தல் எளிதன்று. அன்புடையராய் வாழ்தல் அருமையான அறிவியல் சார்ந்த முயற்சி. அன்பு செய்து வாழும் வாழ்க்கைக்கு அன்பு செய்தலைத் தவிர வேறு நோக்கம் இல்லை. அன்பு செய்தலை வாழ்க்கையின் குறிக் கோளாகக் கொண்டவர்கள் அனைவரும் அல்லற் பட்டுள்ளனர். இஃது உலகியற்கை! ஆயினும் அவர்களுடைய

புகழ் நிலைத்து நிற்கிறது! நாம் இந்த மனித குலத் தொகுதியினை, மற்ற உயிர்க்குலத் தொகுதியினைப் புரிந்துகொண்டு, அவை நலமுற்று வாழ அன்பு செய்தல் வேண்டும்; தொண்டு செய்தல் வேண்டும். அறிவியல் சார்ந்த வாழ்க்கைக்கு அன்பே குறிக்கோள்!

ஆன்மா புலன்கள், பொறிகள் ஆகிய கருவிகளுடன் அமைந்த உடலுடன் கூடிவாழத் தொடங்கிய நாள்முதல், பொருள் இன்றியமையாததாகிவிட்டது. ஆதலால், வாழ் வாங்கு வாழப் பொருள் தேவை. துய்ப்பனவற்றின் வழியில் தான் உய்ப்பனவும் வந்தமைகின்றன. பொருளில்லார்க்கு இவ்வுலகமுமில்லை; அவ்வுலகமுமில்லை. இந்த உண்மையே அறிவியல் சார்ந்த உண்மை. பொருள் என்பது பணம் அல்ல; உண்டு, தின்று, உடுத்து வாழ்வதற்குப் பயன்படும் நுகர் பொருள்களே, பொருள்கள்! இவை உழைப்பால் வருவன; விலைமதிக்க இயலாதன. உண்மையில் பணத்திற்கு மதிப் பில்லை. வேளாண்மைத் தொழில், கால்நடை வளர்த்தல் ஆகியன பொருள் செய்யும் நெறிகளில் சிறந்தனவாகும். உழைத்துப் பொருளீட்டலே அறிவியல் சார்ந்த வாழ்வியல் முறை. அங்ஙனமின்றிப் பிறர் பங்கைத் திருடுதல், பணத்திலிருந்து நேரடியாகப் பணம் பண்ணுதல், கலப்படம், கொள்ளை முதலியன மூலம் பணம் திரட்டல் அறிவியல் முறையல்ல. அதுமட்டுமன்றிப் பெறும் பொருளுக்கேற்ப உழைப்பினைக் கொடுக்காது பொருளை நுகர்தலும் கூட அறிவியல் பார்வையில் குற்றம்தான்! அறிவறந்த ஆள்வினை வழிப் பொருளீட்டி வாழ்தல் சமூக அமைப்புக்குத் துணை செய்யும்!

உடல், உழைப்பினால் ஆயது; உழைப்புக்கு உரியது; உழைப்பினால் வளர்வது; பேணப்படுவது. உழைப்பின்மையா லேயே அறியாமை. வறுமை, நோய், கலகம், போர்! இத் தீமைகளிலிருந்து சமூகம் விடுதலை பெற, உழைப்புத் தேவை. உழைப்பு, அறிவியல் சார்ந்த தொழில் நுட்பமாக அமைதல்

பெரிதும் ஆக்கத்திற்குத் துணை செய்யும். உழைக்கும் ஆற்றல் சமூகத்தின் உரிமைக்குரிய பொதுச் சொத்து. உழைப்பாற்றல் தனிமனிதனிடத்தில் இருந்தாலும் அந்த உழைப்பாற்றல் வழிவழிவந்த சமூக வரலாற்று அடிப்படையிலும் அமைவிலும் வந்தமைந்ததேயாகும். ஆதலால், உழைப்பு சமூகத்திற்குரியது. அந்த உழைப்பு சமூகத்திற்கு நலம் பயக்கும் உழைப்பாக அமையவேண்டும். உழைப்பும் சுரண்டலும் எதிர் எதிர்ப்பகை! உழைப்பாளி சுரண்டி வாழ்தலை விரும்பான். சுரண்டிப் பிழைக்க நினைப்பவன் உழைப்பை விரும்ப மாட்டான். 'தொழிலாளி'யும் வரலாற்றுப் போக்கில் வளர்ந்து வந்துள்ள முதலாளிகளின் சுரண்டல் மனப்பான்மையை எதிர்த்துப் போராட வேண்டுமேயன்றி. அதை எதிர்க்கும் போக்கில் தொழிலாளியும் சுரண்டும் மனிதனாக மாறி விடுதல் கூடாது. உழைப்பாளிகள் வேலை செய்வதைத் தவிர்த்தல், ஆற்றலுக்கு ஏற்றவாறு உழைத்து உற்பத்தி செய்யா திருத்தல், தேவையில்லாமல் விடுப்பு எடுக்கும் நோய்க்கு இரையாதல் முதலியன கூடாது. உழைப்பு வான்மழையை நிகர்த்தது; இறைத்தன்மையது. உழைப்பே உலகத்தின் அமுதசுரபி!

பொருளே, மனிதகுல வரலாற்றுக்கு உந்து சக்தி! பொருளே, மனிதகுலத்தை இயக்குகிறது. பொருள் என்பது என்ன? மனிதர்கள் உயிருடன் கூடிவாழத் துணையான உண்டி, உடை, உறையுள் ஆகியன பொருளாகக் கருதப் பெறும். இவற்றுள்ளும் உயிர் வாழ்தலுக்கு இன்றியமையாதன வாகிய உணவுப் பொருள்கள், பொருள் என்று போற்றத் தக்கன. உண்ணும் பொருள்களுக்கு ஏற்றவாறு உடல்நலம், ஆன்ம நலம், அறிவுநலம் அமைகின்றன. உணவிலும்கூட அறிவியல் பாங்கு இருப்பின் நெடுங்காலம் வாழலாம். புரதப் பொருள், நோயற்ற வாழ்வுக்கு இன்றியமையாதது. சர்க்கரை, கொழுப்புப் பொருள்கள் குறைந்த அளவு தேவை. இத்தகு உணவைத் தேடி உண்ணத்துணை செய்வது பொருளீட்டும்

முயற்சி. பொருளீட்டலிலும் அறிவியல் பாங்கு வேண்டும். அந்தப் பொருளை நுகர்தலிலும் அறிவியல் பாங்கு தேவை. மற்றவர் - அயலவர் உண்ணாதிருக்கும் பொழுது நாம் மட்டும் உண்பது நெறியும் அன்று; முறையும் அன்று. அதுமட்டுமல்ல. பாதுகாப்பும் இல்லை. அயலவன் விழித்து எழுந்தால் நமது நிலை பாதிக்கும். ஆதலால், வாழ்வு அறநிலையப் பாதுகாவல் (Trusteeship) வாழ்வாக வேண்டும் இந்த வாழ்க்கை முறையை அப்பரடிகள் எடுத்துக் கூறினார்; அண்ணல் காந்தியடிகள் வழிமொழிந்தார். பாவேந்தன் பாரதிதாசனும் **"உலகம் உண்ண உண்; உடுத்த உடுப்பாய்!"** என்றான்! செல்வத்தின் பயன் ஒப்புரவு வாழ்க்கை. பொருளீட்டல் தாம் வாழ்வதற்காகத்தான் என்பது அறிவியல் கருத்தன்று. பொருளீட்டும் வாழ்க்கையே கூடச் சமூக வாழ்க்கைதான்! மற்றவர்களுக்கு வழங்கி, மகிழ்வித்து மகிழ, வாழ்வித்து வாழப் பொருள் தேவை என்பதே பொருளீட்டலுக்குரிய கரு. **"இரப்போர்க்கு இல்லென்று இயைவது கரத்தல்"** அறிவியலன்று அறமுமன்று. செய்வன செய்து பொருளீட்டி இரப்பார் துன்பத்தை மாற்றுவதே சமூகத்தின் பொதுநிலை. ஆதலால், பொருளீட்டல் என்பதூஉம் அறிவியல் பார்வையில் சமூக அமைப்பின் உயிர்ப்பேயாம்.

அடுத்து, சமூக அமைவில் அறிவியல் பாங்கில் வருவது ஆன்மிகம். ஆன்மிகம் என்பது இன்று இருப்பதைப் போல முற்றிலும் கடவுள் - மதச் சார்புடைய தத்துவமல்ல; கொள்கையல்ல. கார்ல் மார்க்ஸ், லெனின் முதலிய நாத்திக நெறியினரும் கூட, "ஆன்மா" "ஆன்மாவின் குணம்" என்ற சொற்களைக் கையாள்கின்றனர். ஆன்மீகம் என்பது ஆன்மாவின் தரத்தை - உயிரின் தரத்தை உயர்த்துதல் என்று பொருள்படும். ஆன்ம வாழ்க்கை என்றால், அக வாழ்க்கை என்பது கருத்து, அக நலவாழ்க்கையின் செழிப்புக்கு இசைந்தாற்போலத்தான் உடல் வாழ்க்கை அமையும். உடல்

வாழ்க்கையின் அமைவுகளுக்கு ஏற்பத்தான் உலகியல் நிகழ்வுகள் அமையும். இந்த நிகழ்வுகளே வரலாற்றின் உறுப்புகள்! ஆன்மாவிடம் உள்ள அழுக்காறு, அவா, வெகுளி, மடி, தற்சார்பு, தன்முனைப்பு, மந்தம், துக்கம் ஆகிய வேண்டாத குப்பை கூளங்களை நாள்தோறும் அள்ளி வெளியில் கொட்டவேண்டும்; ஆன்மா, நாள்தோறும் புதிய வாழ்வு வாழவேண்டும்; நாள்தோறும் தன்னை நினைந்து உயர்த்தி வளர்த்துக் கொள்ள வேண்டும். ஆன்மாவின் தரம் உயர்தலே வாழ்க்கையின் எல்லை; நலம்! ஆன்மாவின் தரம் உயர, உயர் குறிக்கோள் ஒன்றினை ஆன்மா இலக்காகக் கொள்ளவேண்டும். அக் குறிக்கோளை அடைய நாள்தோறும் ஆர்வத்துடிப்புடன் எடுக்கும் முயற்சியே வாழ்வு. ஆன்மா, சமூகத்தின் பாதிப்புகளுக்கு ஆளாவது; சமூகத்திற்குப் பாதிப்புகளைத் தரவல்லது. ஆதலால், ஆன்மாவின் அறிவியல் சார்ந்த நலனும், ஆன்மாவின் சமூகம் தழுவிய பண்பும், ஆன்மாவின் சமூக வாழ்வும் தான் சமூகத்திற்கு உடைமை; உந்து சக்தி! இந்த ஆன்மா, தன் தரத்தை உயர்த்திக் கொள்ள நாளும் அர்ப்பணிப்பு உணர்வுடன் கூடிய கடமை செய்யவேண்டும். ஆன்மாவின் அறிவுக்கும் ஆற்றலுக்கும் எல்லையில்லை! சுருங்கிய எல்லையிலிருந்து விரிந்த எல்லைக்கு ஆன்மா பயணம் செய்கிறது. இதற்குத் துணையாக, இயல்பிலேயே எல்லை கடந்த கடவுள், துணை செய்யக்கூடும்; துணை செய்யும்! கடவுள், துணையே! வழிபாடு - பிரார்த்தனை என்பது வாலறிவனின் - உயர்வற உயர்ந்துள்ள ஒரு பரம்பொருளின் - ஆற்றலை நினைந்து நினைந்து தனக்குத் துணையாகப் பெற்றுக் கொண்டு வளர்தலையே குறிக்கும். இத்தகு ஆன்மிக வாழ்க்கையும்கூட அறிவியல் சார்பானது தான்! மரங்கள், கதிரவனின் வெப்பத்தை ஈர்த்து ஒளிச்சேர்க்கைக்குப் பயன்படுத்தி, உணவு தயாரித்துக்கொண்டு செழித்து வளர்கின்றனவே, அது போன்றதுதான் பிரார்த்தனையுடன்

கூடிய ஆன்மிக வாழ்க்கை! இந்த ஆன்மிக வாழ்க்கையும் சமூக வாழ்வுதான்! "ஒன்று பரம் பொருள்; நாம் அதன் மக்கள்; உலகின்பக் கேணி" என்பதறிக.

எங்கு ஏற்றத்தாழ்வு இல்லையோ, எங்கு பகை இல்லையோ, எங்கு எல்லோரும் எல்லாம் பெற்று இன்பத் துடன் வாழ்கிறார்களோ, எங்கு எல்லாரும் உறவினராகிக் கூடிக்களித்து வாழ்கிறார்களோ, எங்கு அறிவு சார்ந்த வாழ்வு இருக்கிறதோ, எங்கு இன்பம் பொங்கி வழிகிறதோ, அங்கு அறிவியல் வெற்றிபெறுகிறது; ஆன்மிகம் வாழ்கிறது; அறிவியலும் அருளியலும் பொதுளச் சமூகம் இயங்குகிறது!

2-11-88

# 32. *சிவகங்கைச் சிங்கங்கள்

மூவேந்தர் மறைவுக்குப் பிறகு, நல்லறங்கள் செய்வதில் திருக்கோயில்கள் பாதுகாப்பில் குறுநில மன்னர்கள் ஈடுபட்டனர். சிவகங்கை சமஸ்தான அரச பரம்பரையைச் சார்ந்தவர்கள் பேரறங்கள் பல செய்துள்ளனர். அரசி வேலு நாச்சியாரின் அமைச்சராக இருந்த மருது சகோதரர்கள் வீரவரலாறு நிகழ்த்தியவர்கள். இந்திய மண்ணில் அந்நிய ஆதிக்கத்தை விரட்ட நடைபெற்ற விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்ட சுதந்திரப் போர் வீரர்கள், சிவகங்கை அரச குடும்பத்தினரின் நல்லெண்ணத்தினாலும், மக்களின் பேரன்பாலும் வேலு நாச்சியாருக்குப் பிறகு, சின்ன மருதுவே, சிவகங்கை அரசனானான். இராம காதையில் இராம இலக்குமணரிடையே எப்படிச் சகோதர ஒற்றுமை யிருந்ததோ, அதைப்போலவே மருது சகோதரர்கள் விளங்கினார்கள். ஏன்? இதிகாசத்தில் வரும் இராம இலக்குவ சகோதரர்களில் இராமனுக்குச் சிறப்பிடம் கொடுக்கப் பட்டி

* வானொலியில்.......

ருப்பது போல மருது சகோதரர்கள் வாழ்க்கையில் யாருக்குச் சிறப்பிடம் என்று கண்டுபிடிக்க முடியாத வண்ணம் சிந்தனையிலும் செயலிலும் ஒருமை உணர்வுடைய இணை யற்ற சகோதரர்களாக வாழ்ந்தார்கள்.

போர்க் களத்தில் வெற்றியன்றி வேறு காணாத இந்த வீர சகோதரர்கள் கடவுள் சந்நிதிகளில் அன்பினால் குழைந்து பக்தி செய்தமையை வரலாறு காட்டுகிறது. இந்த வீர சகோதரர்களின் கரங்கள்; கடவுளைத் தவிர வேறு யாருக்கும் கும்பிடு போட்டதில்லை. அவர்களுடைய கரங்கள் வழங்கிப் பழக்கப்பட்டனவே தவிர வாங்கிப் பழக்கப் பட்டவை அல்ல.

இவர்கள் வீரர்கள் ஆதலால் வீரவேல் கொண்டு சூரனைச் சாடிய குன்றக்குடி ஆறுமுகக் கடவுள்மீது அளவு கடந்த பக்தி கொண்டிருந்தனர். இன்றைய மலைக்கோயிலை எடுப்பித்துக் கட்டியவர்களே மருதுபாண்டியர்கள்தாம். குன்றக்குடிக்கு முருகனை வழிபட அடிக்கடி வருவார்கள். இருவரில் சின்ன மருது பலகாலும் வருவதுண்டு. குன்றக்குடி எல்லையிலேயே குதிரையிலிருந்து இறங்கி மலையை வலம் வந்து, கீழவீதியிலிருந்த அரண்மனைக்குச் சென்று, நீராடித் திருநீறணிந்து சின்னமருது மலையேறி வழிபட்ட காட்சியை என்னென்று கூறுவது! கைபுனைந்தியற்றாக் கவின் பெறுவனப்புடன் திகழும் திருமுருகனுக்கு, செம்பொன்னால் அங்கி செய்து சாத்தினான். அந்த அங்கியில் திருமுருகனின் வலக்கால் அணியின் அடிப்புறத்தில் “அடிமை சின்னமருது செய்த உபயம்” என்று அவன் எழுதி வைத்திருப்பது பேரரசன் இராசராச சோழன் “சிவபாத சேகரன்” என்று பெயர் கொண்டது போல் “ஆறுமுகன் அடியினை சேகரன்” என்று சின்ன மருதுவை வாழ்த்த வேண்டும் போல் இருக்கிறது. கோயிலைச் சார்ந்து மருதாபுரி என்னும் ஓர் அழகிய தெப்பக் குளத்தையெடுத்து, அதன் கரையில் தென்னஞ் சோலையை அமைத்தான் சின்ன மருது.

சிவகங்கைச் சீமையில் மருதுபாண்டியர் ஆட்சிசெய்த பொழுது குன்றக்குடி ஆதீனத்தில் குன்றக்குடித் திருமுருகன் கோவில் அறங்காவலராக சங்கரலிங்க முனிவர் இருந்தார். தவச்செல்வர் சங்கரலிங்க முனிவருக்கும் புவிச்செல்வர் மருது சகோதரர்களுக்கும் உள்ளம் தழீஇய உறவு வளர்ந்தது. மருது பாண்டியர் ஒருபொழுது சங்கரலிங்க முனிவர்க்கு அள விறந்த செம்பொற் காசுகளைக் காணிக்கையாக வைத்துக் கண்டு கொண்டனர். முனிவர் அவற்றை ஏற்க மறுத்து மருது பாண்டியர்க்கே வழங்குவதற்கு இன்னும் பொருள்தேவை எடுத்து வழங்குக என்று ஆணையிட்டார். ஆனாலும் மருதுபாண்டியன் அதனை எடுத்துக்கொள்ள ஒருப்படாமல் அந்தப் பொற்காசுகளைக் கொண்டு ஒரு கிராமம் வாங்கி அந்தக் கிராமத்திற்கு “செம்பொன் மாறி” என்று பெயர் சூட்டி, திருமடத்தில் மகேஸ்வர பூசைக்கென்று அறக் கட்டளை செய்தான்.

மருதுசகோதரர் குன்றக்குடிக் கோயிலை எடுத்தது போல ஒப்பற்ற சாதனை காளையார் கோவிலை எழுப் பித்தது. அதுவும் காளையார் கோவில் இராஜகோபுரத்தை எடுத்தது. மானாமதுரையிலிருந்து கைவழியே கற்களைக் கொண்டுவந்து அந்த ஒப்பற்ற கோபுரத்தை எடுத்தனன். ஊமைத் துரைக்கு அடைக்கலம் கொடுத்ததால் சினம் கொண்ட ஆங்கிலேயர் சிவகங்கை சமஸ்தானத்தோடு போர் செய்யத் தொடங்கினர். காளையார் கோவில் காட்டில் போர் நடைபெற்றது. சதியின் காரணமாக வீரர்களுக்கு வெற்றி கிடைக்கவில்லை. மீண்டும் படை திரட்டிப் போர் செய்ய காட்டில் மறைந்தனர். ஆங்கிலேயர்கள் மருதுபாண்டியரைப் பிடிக்க முடியாததைப் பார்த்து ஒரு சூழ்ச்சி செய்தனர். அதாவது மருதுபாண்டியன் குறிப்பிட்ட நாளுக்குள் சரணடையாது போனால் காளையார் கோவில் ராஜ கோபுரம் இடிக்கப்படும் என்று பறையறிவித்தான். இந்தச் செய்தி காட்டுக்குள் இருந்த மருது சகோதரர்க்கு எட்டியது. அரண்மனையை அகன்றபொழுது அல்லற் படாதவர்கள்

காட்டிலும் மேட்டிலும் சுற்றித் திரிந்த பொழுது கவலைப் படாதவர்கள் போர்முனையில் புண்கள் பலவற்றைச் சுமந்த போது வருந்தாதவர்கள் காளையார் கோவில் கோபுரம் இடிக்கப்படும் என்று கேட்டு அழவிடைப்பட்ட புழுவெனத் துடித்தார்கள். கோபுரத்தை இழந்த பிறகு வாழ அவர்கள் ஒருப்படவில்லை. அவர்களே வலிய ஆங்கிலேயரைச் சென்று அடைந்தார்கள். காளையார் கோவில் கோபுரம் காப்பாற்றப் படுவதற்காக, என்றால் மருதுபாண்டியர்கள் மன்னர்கள் மட்டுமல்லர், மாண்புடையவர்கள், வீரர்கள் மட்டுமல்ல, அருளாளர்கள். தலையைக் கொடுத்துத் தலையாய தேவன் கோவிலைக் காப்பாற்றிய மருதுபாண்டியரின் புகழ் ஒளி பெற்று நிற்பதாக!

# 33. *தமிழிசை வளர்ப்போம்

**மா**னுட வாழ்க்கை அற்புதமானது; அதியற்புதமானது. வாழ்தலே ஒருகலை. நிறைநலவாழ்வுக்கு ஈடாகக் கூடியது இங்கும் இல்லை; புத்தேள் உலகத்திலும் இல்லை; வளமான ஆறுகளுக்கு, பல கிளையாறுகள் நீர்வளத்தை ஈர்த்து வந்து நிரப்புகின்றன. அதுபோலவேதான், மானுடத்தின் வளமான வாழ்வுக்கு, அறிவு வாயில்களாக, அமைந்து விளங்குவன பொறிகள் ஐந்து; புலன்கள் ஐந்து. பொறிகள் அறிவுக் கருவிகள். புலன்கள் முதிர் அறிவுக் கருவிகள். ஆன்மாவுக்கு ஒருகுறையும் இல்லை. ஆன்மா, ஈடு இணையிலாத இன்பப் பெருவாழ்வு வாழ, இறைவன் அமைத்துள்ள வைப்புகள் பலப்பல. ஆனால் அவற்றை ஆன்மா பயன்படுத்துவதில்லை; பயன்படுத்த ஆன்மாவுக்குத் தெரிவதில்லை. ஏன் அவற்றைப் பயன்படுத்தவேண்டும் என்ற முனைப்பும்கூட இல்லை. இஃது இரங்கத் தக்க நிலை! இன்று பலரிடம் ஆன்மாவின் இயக்கம் இல்லை! உடலியக்கமே இருக்கிறது.

* சிந்தனைச் சோலை

கு. XIII. 13.

'பசிதீர உண்பதும் உறங்குவதுமன்றி ஒன்றுமே இல்லை என்று எண்ணி வாழ்பவர்கள் பலர். மற்றும் பலர் 'ஆன்மிகம்' என்ற பெயரில் மதங்களின் பாற்பட்ட மூடப் பழக்க வழக்கங்களில் சிக்கி அறிவை இழந்து ஆளுமையை இழந்து ஏன் ஆன்மாவையே இழந்து செத்தபிறகு போய்ச் சேரக்கூடிய இடத்தை தேடுகின்றனர்; இந்த உலக வாழ்வை நரகமாக்கு கின்றனர். இத்தகு இரங்கத்தக்க வாழ்வு, தமிழர் மரபன்று.

தமிழர் வாழ்வாங்கு வாழ ஆசைப்பட்டனர்; வாழ் வாங்கு வாழ இலக்கணம் கண்டனர்; ஆன்மாவை அறிந்திருந் தனர். ஆன்மாவின் தேவைகளையும் அறிந்திருந்தனர். உடல் வாழ்வு, ஊணால் ஆகும். உயிர் வாழ்வு-ஆன்ம வாழ்வு, மகிழ்வால் ஆவது; இன்பத்தால் ஆவது, மகிழ்வும் இன்பமும் அறிவினை வாயிலாகக் கொண்டு வருபவை; அன்பினால் விளைபவை; அர்ப்பணிப்பில் விளையக்கூடியவை. இந்த உயரிய பண்புகள் ஆன்மாவின்கண் தலைப்பட்டு ஆன்மா - இயற்கையோடிசைந்த வாழ்வு வாழ்தல் வேண்டும்.

இயற்கையோடிசைந்த வாழ்வியலுக்கு ஆன்மாவை ஆயத்தப்படுத்துவது கலையுணர்வு. பொருளுடைய கலையே, வாழ்க்கையைப் பொருளுடையதாக்குகிறது. தமிழர் கண்ட கலைகள் பல. அவற்றுள் ஓவியம், சிற்பம், இசை ஆகிய மூன்று கலைகளிலும் தமிழர் நெஞ்சங்கள் இயல்பாக ஈடுபட்டுத் திளைத்தன. தமிழரின் கலைபயில் வாழ்வியலுக்குப் பழைமை யான வரலாறு உண்டு. சங்ககால அரசர்களின் அவையில் உரிமை பெற்று விளங்கியவர்கள் புலவர்கள், விறலியர், பாவலர்கள் என்பதை சங்க இலக்கியங்கள் விவரிக்கின்றன.

தமிழரின் இசை, பண்ணிசையாகும். பாடலும் பாடலுக்கிசைந்த பண்ணிசையும் தமிழர் தம் வரலாற்றில் வளர்ந்து செழுமை பெற்றன. உலகத்தின் பிறநாட்டு வரலாறுகளில் காணப்பெறும் கொடுங்கோல் மன்னர்களைப் போன்ற மன்னர்கள் தமிழக வரலாற்றில் இருந்ததில்லை. ஏன்? தமிழக மன்னர்களின் மனங்களும் தமிழர்களின் இதயங்களும் இசையால் பண்பாடடைந்தன.

தமிழிசை தொன்மையானது. தமிழரின் இசைக் கருவிகள் பழமையானவை. விண்ணளந்து காட்டி விளை மறைக்கும் சிற்பங்கள் நிறைந்த எழில் மாடத்திருக் கோயில்கள், தமிழர் நாகரிகத்திற்கே தனியுரிமையுடையன. ஏழிசையாய் விளங்கும் தமிழிசை தமிழகத்தின் தனி இசைமரபு. தமிழர்தம் சமய வாழ்வில், கடவுட் பூசையில், படையல்கள் பெற்றிருந்த இடத்தைவிடத் தமிழோடு இசை கலந்த பிரார்த்தனைகளே சிறப்பிடம் பெற்றிருந்தன. "தமிழோடிசை பாடல் மறந்தறியேன்" என்ற அப்பரடிகள் அருள் நெறியும், "ஏழிசையாய், இசைப் பயனாய்" என்ற சுந்தரர் செந்தமிழும் இதற்குச் சான்று. தமிழர்தம் சமுதாய வாழ்வின் மையம் திருக்கோயில் நாகரிமேயாம். திருக்கோயில் நாகரிகம், கடவுளை மட்டும் மையமாகக் கொண்டு விளங்கவில்லை. சமுதாய உறவுகள், சிற்பம், ஓவியம், இசை, கூத்து முதலிய அருங்கலைகளும் திருக்கோயில்களை மையமாகக் கொண்டு சமுதாயம் வளர்ந்தன.

இடைக் காலத்தில் ஏற்பட்ட அயல் வழிக்கின் நுழைவால் – ஊடுருவலால் தமிழர், தம் நிலை தடுமாறினர். தமிழிசை மெல்ல மறைந்தது. உயரிய மலையில் உள்ள ஒளி விளக்கு. தன்னைச் சுற்றிலும் உள்ள இருளை இரிந்தோடச் செயதல்போல், தமிழர் வாழ்வில் படிந்த இருளை இரிந்தோடச் செய்து, தமிழிசையை வளர்த்துப் பாதுகாக்க, செட்டி நாட்டில் அண்ணாமலை அரசர் தோன்றினார். தமிழிசை, புத்துயிர் பெற்றது. தமிழிசை தமிழகத்தின் மேடை களில் இடம் பிடித்தன. தமிழிசையைக் காத்த பெருமை இந்த நூற்றாண்டில் செட்டிநாட்டரசர்களுக்கே உரியது.

தமிழில் சிந்திப்போம்! தமிழ் வாயிலாகக் கற்போம்! தமிழிசையில் பாடுவோம்! பண்ணுடன் கலந்த பாட்டிசைப் போம்! தமிழகத்தை வளப்படுத்துவோம்! வளர்ப்போம்!

# 34. *நன்றிக்குரியவர்கள்

தமிழினம் வளர்ந்த ஓரினம். சிந்தனை வளத்தாலும் சிறந்த இலக்கியத்தாலும் புகழ்படைத்த இனம். சிந்தனையின் உச்சவரம்பாகிய சமயநெறியில் நின்று வாழ்ந்த - வாழ்ந்து கொண்டிருக்கின்றன இனம். சிந்தனைக்கும், சொல்லுக்கும் அப்பாற்பட்ட - ஆனாலும் ஒன்றாகி உடனாகி நின்று ஆரா இன்பத்தை வழங்குகின்ற திருவருள் நினைவு அவர்களின் தலையாய ஒழுக்கநெறி. இந்த நினைவு தமிழினத்தின் அறிவின் தெளிவுக்கு அடிப்படையாக அமைந்திருந்தது. ஆற்றலைப் பெருக்கிற்று. இவற்றின் பயனாக, நாடு முழுவதும், சிற்றூர்களிலும் பேரூர்களிலும் திருக்கோயில்கள் எழுந்தன. விண்ணை அளந்து காட்டி வினைமறைக்கும் கோயில்கள் ஆயிரமாயிரம் எழுந்தன.

மனிதனின் வாழ்க்கை நிலமட்டத்தோடு கூனிக் குறுகிக் கிடப்பதன்று. ஓங்கி உயர்ந்து வளரவேண்டும் என்பதே தமிழினத்தின் விழுமிய நோக்கம். ஓங்கி உயர்ந்து வளர்ந்தால் மட்டும் போதுமா? அதிலே பொலிவு இருக்க வேண்டும். அது உலகம் தழுவியதாக இருக்கவேண்டும். அதனாலன்றோ, கண்கவர் ஓவியங்களும், கவினார்ந்த சிற்பங்களும், கருத்தீர்க்கும் சிந்தனைப் படைப்புக்களும் திருக்கோயில் கோபுரங்களை அணி செய்கின்றன. உச்சியில் கலசம். புகழ்மிக்க வாழ்க்கை. மண்ணுக்கும் விண்ணுக்கும் இணைப்பூட்டுகின்ற சின்னம். தமிழகத்தை ஆண்ட பேரரசுகளின் அரண்மனைகளைக் காணோம். கோட்டை கொத்தளங்களைக் காணோம். காணாமைக்குக் காரணம், வரலாறு பொய்யல்ல. தனி மனிதனின் வாழ்க்கை இலக்கிய மாகவும், மக்கட் சமுதாயத்தின் விழுமிய பொது இடமாகவும் உலகியல் நிலையிலும், உயிரியல் நிலையிலும் தூக்கி நிறுத்தும்

* பொங்கல் பரிசு

ஆற்றல் நிறைந்ததுமாகிய திருக்கோயில்கள் எழுப்புவதையே தமிழக அரசர்கள் தம் கடமையாகக் கருதினர். நோன்பாகக் கொண்டனர். அதனால், திருக்கோயில்கள் யாண்டும் எழுந்தன. நின்று நிலவுகின்றன.

எனினும் காலத்தின் கோலம் எவரை விட்டது? காலம் என்ற பெருவெள்ளத்திற்குக் கண்ணும் இல்லை. கருத்தும் இல்லை. தமிழகப் பேரரசுகள் மலைபடு கதிரென மறைந்தன. திருக்கோயில்கள், பேணுவோரை எதிர்பார்த்து ஏங்கின. நகரத்தார் சமூகம் வரலாற்றுக்கும் தமிழகத் திருக்கோயில் பாதுகாப்புக்கும் புதியதோர் திருப்புமுனையை அத்தியா யத்தை உண்டாக்கிற்று. நகரத்தார் சமூகம் பழந்தமிழர் நெறி பற்றி வாழ்வதில் சிறந்த சமூகம். பழங்காலச் சோழப் பேரரசு கலமோட்டி, அலைகடலுக்கு அப்பாலும் சென்றது. நகர்த்தார்களும் திரைகடலோடித் திரவியம் திரட்டி வந்தனர். பழைய அரசர்களைப் போன்றே செந்தமிழையும் சிவநெறியையும் போற்றி வளர்த்து வருகின்றனர். கோயில் வழியதாக குடிகளை அமைத்துக் கொண்ட ஒப்பற்ற நாகரிகம் நிலவுவது நகரத்தார் சமூகத்தில்தான். வேறெந்த சமூகத்திலும் இந்த அமைப்பில்லை. தோன்றிய இடத்திலும் உறுதியோடு வளர இல்லை. அதனால், அவர்கள் திருக்கோயில்களுக்கு வழங்குவதில் கணக்குப் பார்ப்பதில்லை. வழங்குவதோடு மட்டுமின்றி, முறையாக வழிபாடுகள் செய்வதிலும் ஈடுபட்டார்கள். தாய் குழந்தைக்கு அணிசெய்து அழகூட்டிப் பார்த்தல் இயற்கை. அது தாய்மை அன்பைப் பெருக்குகிறது. குமரகுருபரரின் கவிதையுலகத்தில் குழந்தையான அங்கயற் கண்ணி அம்மையும் வேலெறிந்தசமர்த்தனும் குழந்தை களாக்கப் பெற்றனர். நகர்த்தார் சமூகத்தினரின் பக்தி யுலகத்தில் அவர்கள் குழந்தைகளாக இடம் பெறுவது மறக்க முடியாத ஒன்று. திருப்படிவங்களை அணிசெய்தலிலும், அழகு செய்வதிலும் அவ்வழி மகிழ்தலிலும் நடைமுறை வாழ்க்கையில் பக்திநெறி மிக்கோங்கி நிற்கிறது. இங்ஙனம்

பக்தி நெறியில் வளர்ந்த நகரத்தார் சமூகத்தினர் தமிழகத்தின் திருக்கோயில்களைப் புதுப்பித்தார்கள். புதிய கோயில்களை எழுப்பினார்கள். வடமொழியிலும் தென் தமிழிலும் மறைகளை ஓதும் பாடசாலைகளைத் தோற்றுவித்தார்கள். பசிப் பிணி நீக்கும் மருத்துவமனைகளாக எண்ணற்ற சத்திரங் களைச் சமைத்தார்கள். இன்னமுது படைத்தார்கள். செட்டி நாட்டின் நடுநாயகமாக விளங்குவது குன்றக்குடி. அக்குன்றில் பிறவிப் பிணிநீக்கும் மருந்தெனப் படர்ந்து திருக்கோயில் கொண்டு வாழ்வித்தருளும் ஆறுமுக அண்ணல் நகரத்தார் சமூகத்தின் கண்கண்டதெய்வம் - குலதெய்வம். அத்தெய் வத்தைப் போற்றிப் பரவுவதில் சென்ற காலத்தில் செய்த பணிகள் ஏராளம் ஏராளம்! இனிச் செய்ய இருப்பவையும் ஏராளம்! நகரத்தார் சமூகம் தமிழகத்தின் வரலாற்றுக்குத் தொடர்ச்சியூட்டிய சமூகம். தமிழ்க்கலைக்கும் நாகரிகத்திற்கும் உயிரூட்டிய சமூகம். ஒவ்வொரு சைவத் தமிழ் மகனும் நன்றிக் கடப்பாடோடு பாராட்டவேண்டிய சமூகம். நாமும், இந்தப் பொது விதிக்கு விதிவிலக்கல்லவே? நகரத்தார் சமூகம் நீடுயர் செல்வமும் ஓங்கி, உயர் புகழும் பெற்று நெடிது வாழ-வளர திருவருள் பாலிக்கும் வண்ணம் அண்ணாமலை அண்ணலின் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

# 35. *நாம் காணும் பெரியார்

இன்று தமிழகத்தின் சமுதாய மறுமலர்ச்சி இயக்கத் தலைவர் ஈ.வெ.ரா. பெரியார் அவர்கள் பிறந்த நாள். மனித சமுதாயத்தின் வரலாறு, காலங்கடந்த மூப்புடையது. காலத்திற்குக் காலம் பல்வேறு கருத்துக்களோடு இயைந்து சமுதாயம் வளர்ந்து வருகிறது. எப்பொழுதுமே மனிதனுக்கு மாற்றம் காண்பதில் விருப்பம் அதிகம். நெல் விளையும்

* பொங்கல் பரிசு

கழனியில் புல்லும் முளைப்பதுபோல் மனித சமுதாய எண்ணக் கருத்துக் குவியல்களில் நல்லனவும் தலைகாட்டும்; அல்லனவும் தலைகாட்டும். இது ஒரு நியதி. அவ்வப்பொழுது மனித சமுதாயத்தைச் சமூகத்துறையாகவோ, அரசியல் துறையாகவோ சமயத் துறையாகவோ பிரித்து வைத்து, தம்வயப்படுத்தி, அழைத்துச் செல்லும் தலைவர்கள் தோன்றி யுள்ளனர். எப்பொழுதோ ஆயிரம் ஆண்டுகளுக்கொருதரம் மனித இனத்தை எந்தக் காரணத்தைக் கொண்டும் பிரிக்காமல் ஒரு குலமாக்கி அழைத்துச் செல்லும் உத்தமத் தலைவர்களும் தோன்றினர். பொதுவாக மனித இனத்திற்குப் பிரிவு தீயது. அது சாதியின் பாற்பட்ட பிரிவாயினும் சரி, அல்லது எத்துறையின் பாற்பட்ட பிரிவாயினும் சரி, "யாதும் ஊரே, யாவரும் கேளிர்" என்ற பழந்தமிழர் கொள்கை மீண்டும் சமுதாயத்தில் இடம் பெறல் வேண்டும். 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்று உயர்ந்தோர் காட்டிய உறுதி நெறி உரம் பெறுதல் வேண்டும். அண்மையில்தான் மேற்றிசை நாட்டார் ஒருலகக் கருத்தைக் கொண்டனர். ஆனால் ஆயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்னரே தமிழர்கள் ஒருலகக் கருத்தைக் கொண்டு வாழ்ந்தனர்.

இங்ஙனம் "ஒருகுல வளர்ச்சி" வளர்ந்து வளம் பெறல் வேண்டுமானால் எப்படியோ நம்மிடத்தில் நுழைந்துவிட்ட சாதி உணர்ச்சி மறைந்தொழியவேண்டும்; மனித இனத்தைத் தன்னலத் துறையில் அழைத்துச் செல்லுகின்ற சிறுமதி படைத்த தீய உணர்ச்சி சாதி என்ற பொல்லா எண்ணத்திற்கு உரித்தாகும். சாதியை ஒழித்து சமரச சமதர்ம சமுதாயம் காண்பதே பன்னெடு நாளைய தமிழ்ப் பெரியோர்களின் எண்ணம். அத்தகைய பெரியோர்களின் பரம்பரையில் நமது பெரியார் அவர்களும் வந்தவர். அவருடைய கடந்தகால வாழ்நாட்களில், கண்ணியமாக சாதியை எதிர்த்துச் சாடிய போராட்டங்களும், அப்போராட்டங்களால் அவர் அடைந்த கல்லடியும் சொல்லடியும் கணக்கிலடங்கா.

அவ்வமயம் சாதி முறையால் தம்மை வயப்படுத்தி வாழ்வுபெற்ற ஒரு சிலர் பெரியார் மீது கடுஞ்சினம் கொண்டு கனல் கக்கினர். பொய்யின் அடிப்படையில் தன்னல நோக்கோடு எழும் வெகுளி என்னதான் செய்யும்? இன்று தமிழகத்தில் சாதிச் சழக்குகள் சருகெனக் காய்ந்து, உதிர்ந்து வருகின்றன. விரைவில் சாதி என்ற சொல் தமிழகத்தைப் பொறுத்தவரையிலே அகராதிச் சொல்லாகவே மாறிவிடும் காலம்வரும். அத்தகைய மெச்சத்தகுந்த பெரும் பணியில் ஈடுபட்டுள்ள பெரியார் அவர்கள் வாழ்க!

## சமயநெறி

மனித இனத்தை நல்லன எண்ணத் தூண்ட நல் லாற்றலில் செயல்படச் செய்வது சமயநெறி. சமய நெறியின் அடிப்படைத் தத்துவமே இதுதான். காலப்போக்கில், எப்படி எக்காரணம் பற்றி என்று சொல்ல முடியாமல் சமுதாயத் துறையில் நுழைந்தது போலவே சமயத் துறையிலும் சாதி உணர்ச்சியும் ஏற்றத் தாழ்வு மனப்பான்மைகளும், சாத்திரப் புராணங்களின் பெயரால் நுழைக்கப்பட்டன. பழந்தமிழ் நூல்களும், தமிழ்த் திருமுறைகளும் இவற்றை வன்மையாகக் கண்டித்திருக்கின்றன. சமயம் என்றுமே வாழும். மனித இனத்தை வளப்படுத்தவே இருந்தது- இருந்து கொண் டிருக்கிறது-இருக்கவும் வேண்டும். ஆனால் மக்கள் வாழ்விலே மலர்ந்து வளரவேண்டிய சமயநெறி, காலப்போக்கில் மனித இனத்தை விட்டுப் பையப் பைய அகன்று கோயிலுக்குள்ளே சிறைபுகுந்து கொண்டது. ஆதலால் மனித இனம் நயத்தக்க நாகரிகத்துடன் வாழ முடியாமற் போயிற்று. இங்ஙனம் சொல்வதினால் கோயில்கள் சமயத்தைக் கெடுத்துவிட்டன வென்றோ, கோயில்கள் கூடாது என்றோ யாரும் விரைவில் முடிவுக்கு வரக்கூடாது. எடுத்துக்காட்டாக இருள் திசையைக் கிழிக்க, ஒளிமிக்க விளக்கு வேண்டும்.

ஆனால் அவ்விளக்கொளி என்னைச் சுற்றிலும் பரந்து கிடக்கின்ற இருளை நீக்கி ஒளி தந்து வாழ்வு தராமல் விளக்கிடத்தையே தேங்கிக் கிடக்கும்படி திரையிட்டு மறைக்கப்பயன்படுமானால், விளக்கினை விரும்புவார் யார்? அது போலவே கோயில்கள் வேண்டும். அத்திருக் கோயில் களுக்குள் கருணையின் சின்னமாய் நின்றிலங்கும் திருவருள் நாற்றிசைகளிலும் பரவி, இருள் விலக்கி, துன்பத்தின் தொடர் பறுத்து, இன்பம் பயத்தல் வேண்டும். அதனால் அன்றும் இன்றும் என்றும் விளக்கு சுடர்விட்டு எரிகிறது; விளக்கொளியும் கடிதில் சுற்றிலும் பாய்கிறது. அத்தன்மை அவ்விளக்கின் இயற்கை இயல்பு. எனினும் தன்னலமுடையார் சிலர் அச் சுடரொளிக்குத் திரையிட்டு மூடித் தனக்கே உரியதாக்கி, தன் வாழ்வுக்கே பயன்படுத்திக் கொள்ளுகின்றனர். அது விளக்கி னுடைய குற்றம் கிடையாது. தன்னலமுடையார் செய்த குற்றமிது. அதுபோலவே எங்கும் பூரணமாய்ப் பொங்கித் ததும்பும் திருவருளை எங்கெங்கோ சிறைப்படுத்தி, தனிப் பட்டோர் வாழ்வு வளப்படுத்தப்பட்டது. இதன் விளைவாக சமரசத்தின் அடிப்படையில் சமதர்ம சமுதாயத்தைக் காணும் நோக்கத்தோடு ஏற்படுத்தப்பட்ட சமயமும் திருக் கோயில்களும் சுயநலக்காரர்களின் பாசறையாக மாறின. இத் துறையில் விபரீத உணர்வுகள் இடையிலே புகுத்தப்பட்டன. இவ் விபரீத உணர்ச்சிகளை எதிர்த்துப் போராடும் இயக்கத்தைத்தான் பெரியார் அவர்கள் தொடங்கினார்கள். இச்சமயத்தில் நாம் ஒன்றைக் குறிப்பிடாமல் இருக்க முடிய வில்லை. அது, எதிர்ப்பு எங்கோ தொடங்கி, எங்கோ சென்று முடிந்திருக்கிறது என்பதுதான். உண்மையிலேயே பெரியார் அவர்களுடைய எண்ணமும் அதுதானோ என்னவோ என்பது நமக்குத் தெரியாது. ஆனால் பலர் அவ்விதமே நினைக்கின்றனர். அதாவது பெரியார் அவர்கள் சமய நெறியின் எதிர்ப்பாளர்; திருக்கோயில்களை உருக்குலையச் செய்பவர்; பரம்பொருளின் பரம விரோதி என்பனவாம்.

இந்தச் சூழ் நிலையில் பெரியார் அவர்களுக்கு நம்முடைய விண்ணப்பம் ஒன்று உண்டு. அதாவது பண்பட்ட சமயம் ஒன்று நாட்டிற்குத் தேவை. சன்மார்க்க சமய நெறி நாட்டிற்குத் தேவை. இந்தப் புனிதமான திருப்பணிக்குப் பயன்படுகின்ற திருக்கோயில்களும் தமிழகத்திற்குத் தேவை. இவைகளின் மூலமே அல்லன நீக்கி, நல்லன காண வேண்டும். இவ்விண்ணப்பத்தைப் பெரியார் அவர்கள் ஏற்றுக் கொள்வார்களோ என்னவோ நமக்குத் தெரியசாது. ஆனால் அதனைச் சொல்ல வேண்டியது நம்முடைய பொறுப்பும் கடமையுமாகும்.

பெரியார் அவர்கள் சமயத் துறையில் செய்த கிளர்ச்சிகளின் பயனாக ஒரு விழிப்புணர்ச்சி நாட்டில் வந்திருக்கிறது. சமயத்துறையினர்கூட சமுதாய சேவையில் அக்கறை காட்டத் தலைப்பட்டுள்ளனர். இத்துறையில் பெரியார் அவர்கள் செய்த மகத்தான பணிகளுக்கு நம்முடைய நன்றி.

இன்றையப் பெரியார் அவர்களின் பிறந்த நாள் கொண்டாட்டத்தில் எல்லோரும் நாமும் கலந்து கொள்ளுகிறோம். எத்தனையோ துறைகளில் பெரியார் அவர்களுக்கும் நமக்கும் கருத்து ஒற்றுமை வேற்றுமைகள் உண்டு. இருப்பினும் அவர்கள் சமுதாய மறுமலர்ச்சித் திருப்பணியில் ஈடுபட்டுச் செய்த ஒப்பற்ற திருப்பணிகளை நாம் மறந்துவிட முடியவில்லை. இப்படிச் செய்வதினால் சிலர் நம்மீதும் கூட வெறுப்புக் கொள்ளலாம். அப்படி வெறுப்பைக் காட்டுபவர்கள் பிரித்து வைப்பதின் மூலம் தன்னலத்தை வளர்த்துக் கொள்பவர்களே ஆவார்கள். வேற்றுமைக்குள்ளும் ஒற்றுமை காணும் விழுமிய பண்பு நாட்டில் வளர வேண்டும். ஆகவே சாதி ஒழிப்பு இயக்கத் தலைவராக, சமுதாய புனர்நிர்மாண இயக்கத் தந்தையாக விளங்கும் பெரியார் அவர்கள் நீடூழி வாழ்க என வாழ்த்துகின்றோம்.

# 36. *தமிழினத்தின் பொற்காலம்

திருவள்ளுவர், ஒரு சமுதாயச் சிற்பி. அவர் காலத்தில் மனித சமுதாயத்தில் புரையோடிக் கிடந்த புண்களைக் கண்டு காட்டி மருத்துவம் செய்கிறார். திருக்குறள் மனித குலத்தின் பொதுநூல். அதுவே தமிழ் இனத்தின் தனிமறை. தமிழினத்தின் வீழ்ச்சியைத் தடுத்து நிறுத்தவே திருக்குறள் செய்யப்பட்டது. தமிழினத்தின் நாகரிகத்திற்கும், நல்வாழ்க் கைக்கும் இடையூறாகப் புகுந்த பல்வேறு கொள்கைகளைத் திருக்குறள் விளக்குகிறது; தமிழினத்தின் தனித்தன்மை மிக்க நாகரிகத்தைப் பாதுகாத்துப் பேணுகிறது.

உலகியல் அமைப்பில் இன அமைப்பு இயற்கையானது. உடலியற்கூறு, சிந்தனைவழி நாகரிக வளர்ச்சி, சமயநெறி ஆகியவைகளை மையமாகக் கொண்டு இனம் அமைகிறது. இத்தகு இனத்தோற்றமும், வளர்ச்சியும் உலகம் முழுவதிலும் உண்டு. ஓரினத்தின் நாகரிகம் பிரிதோரினத்தின் நாகரிகத்தை எடுத்து விழுங்க முயற்சிக்கும் போதுதான் போர்கள் தோன்றுகின்றன. இன அமைப்பும், இன ஒருமைப்பாடும் நல்வாழ்க்கை அமைப்புக்கு இன்றியமையாத் தேவையாகும். இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே இன உணர்வுடன் கடமைகளைச் செய்கின்றவர்களைப் பாராட்டுகின்றார் திருவள்ளுவர், அது மட்டுமின்றித் தெய்வமும் துணை நிற்கும் என்றும் குறிப்பிடுகின்றார்.

> 'குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
> மடிதற்றுத் தான்முந் துறும்'
>
> —குறள் 1023

என்பது வள்ளுவர் வாக்கு. அது மட்டுமின்றித் திருவள்ளுவர், இழக்கக்கூடாத மானத்தையும் கூட இனப்பாதுகாப்பிற்காக, – இன முன்னேற்றத்திற்காக இழக்கலாம் என்றும்

* பொங்கல் பரிசு

கூறுகின்றார். மானமுடைமையைத் திருவள்ளுவர் பெரிதும் பாராட்டுகின்றார். ஆனால், மானம், மரியாதை எல்லாம் அந்நிய இனத்தில் பார்க்கவேண்டுமே தவிர, நம்முடைய சொந்த இனத்திற்குள் பார்க்கக்கூடாது என்பது வள்ளுவர் கருத்து.

> 'குடிசெய்வார்க்கு இல்லை பருவம் மடிசெய்து
> மானம் கருதக் கெடும்'
> —குறள் 1028

என்கிறார் திருவள்ளுவர்.

தமிழினம் காலத்தால் மூத்த இனம். கருத்தாலும் மூத்த இனம். எனினும், கடந்த பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாகவே தமிழினத்தில் இன ஒருமைப்பாடு கெட்டுவிட்டது. ஏன்? இல்லாமலேகூடப் போய்விட்டது. தமிழினத்தின் ஒருமைப்பாட்டுச் சிதைவில்தான் திராவிட இனம் என்ற புதிய இனம் தோன்றிற்று என்று கொள்ளுவதில் பிழையில்லையென்றே கருதுகின்றோம். தமிழினத்தின் ஒருமைப்பாட்டிற்கு எதிராகப் பிற இன ஊடுருவல்கள் உலை வைத்தன. சிந்தனை, இலக்கியம், சமயம் ஆகிய பல்வேறு துறைகளிலும் பிறமொழி, பிற இன ஊடுருவல்கள் எழுந்து தலை தூக்கி ஆதிக்கம் செய்யத் தொடங்கின. இதன் காரணமாகத் தமிழினத்திற்குத் தேவையில்லாத சாதீயமுறை வைப்புக்கள் தமிழினத்தில் தோற்றுவிக்கப்பெற்றன. சாதி முறைகளின் தோற்றத்தால் உடலும் உயிரும் போல ஒன்றி வாழ்ந்த தமிழினம் ஓராயிரம் சாதிகளாகப் பிரிந்தன. பரிவோடு பகையும் உடன் தோன்றிற்று, இனக்கட்டுக் கோப்புக் குலைந்தது. இதைப் பயன்படுத்திக் கொண்டு, வாழ வந்தோர் ஆதிக்க உரிமை பெற்றனர். மேல் சாதி, சமூகத் தகுதி, கல்வி உரிமை, உழைப்பில்லாமலே உரிய பொருள் பெறும் உரிமை ஆகியவைகள் குறிப்பிட்ட - ஊடுருவிக் கெடுத்த ஓரினத்திற்கே ஏகபோக உரிமையாயின. சிதறிய சில அவர்களுடைய கங்காணிகளுக்கும் கிடைத்தன. தமிழன் கீழ் சாதியானான்-

கல்வி உரிமை இழந்தான். கலைமகள் வழிபாட்டிற்குப் பதில் ஆயுதபூசை செய்பவனானான்-உழைத்தும் ஏழையானான்.

தமிழினத்தின் நாகரிகக் கூறுகளில் இயல்பாகத் தோன்றி வளர்ந்தது கடவுள் நெறி, மற்ற இனத்திற்குக் கடவுள் நெறியைக் கற்றுக் கொடுத்தவனும் தமிழனே. ஆயினும், கீழ்சாதி என்ற நிலைமை ஏற்பட்ட பிறகு அவன் கட்டிய கோயில்களில் வழிபாடு செய்யும் உரிமையை இழந்தான். இந்த இழிநிலையை வழிவழியாகத் தமிழ்ச் சான்றோர்கள் எதிர்த்து வந்திருக்கிறார்கள். திருவள்ளுவர், நக்கீரர், திருநாவுக்கரசர், சேக்கிழார், இராமலிங்க அடிகள், பாரதி ஆகிய தமிழ்ச் சான்றோர்கள் இந்த அநீதியை எதிர்த்து தமிழினத்தின் பாதுகாப்பிற்காகத் தொடர்ந்து போராடி வந்திருக்கிறார்கள். எனினும் தமிழினம் அவர்களுடைய போராட்டத்தின் சக்திகளுக் கேற்றவாறு நியாயமாக முன்னேறிவிடவில்லை. காரணம், இன உணர்வு என்பது தமிழினத்தில் அடிப்படையிலேயே கெட்டு விட்டதுபோலத் தோன்றுகிறது. அவர்களிடத்தில் இன வழிப்பட்ட கவர்ச்சி, பாசம், பரிவுகள் இல்லை. இன உணர்வுக்கு மாறான உணர்வே மேலோங்கி நிற்கின்றது. அதன் காரணமாகத் தமிழினத்தைச் சார்ந்தவர்கள் இன்று தமக்குள்ளேயே போராடிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் தமக்குள் பல்குழு அமைத்து உட்பகை வளர்க்கிறார்கள். கொல் குறும்பும் செய்கிறார்கள். இவ்வாறு கெட்டு அழிந்துபோன தமிழினத்திற்கு இருபதாம் நூற்றாண்டில் வாழையடி வாழையெனப் பாதுகாப்பளிக்கத் தோன்றியவர் தலைவர் தந்தை பெரியார். தந்தை பெரியார் சுயசிந்தனையாளர்-தமிழினத்தின் நல்வாழ்க்கையையே தம் வாழ்க்கையின் இலட்சியமாகக் கொண்டவர். அதுவே அவருக்குக் கொள்கை, சமயம் எல்லாம்.

தலைவர் பெரியார் அவர்கள் சென்ற நூற்றாண்டு களில் இன நலனுக்குப் போராடியவர்கள் அடைந்த

பலனைவிட அதிகமான பலனை அடைந்திருக்கிறார். அதற்குச் சான்று பல்வேறு மொழி பேசும் பல்வேறு இனமக்கள் வாழ்கின்ற இந்திய நாட்டின் அரசியல் உலகில் தமிழர் தலைவர் காமராசர் தலைமை பெற்றிருப்பதேயாகும். கடந்த பல ஆயிரம் ஆண்டுகளில் ஒருபோதும் தமிழனுக்கு இந்தப் பேறு கிடைத்ததில்லை. கிடைத்ததை இழக்காமல் தலைவ.ர காமராசரின் தலைமையைக் கட்டிப் பாதுகாப்பது தமிழரின் தலையாய கடமை என்பதைப் பெரியார் உணர்கின்றார்- உணர்த்துகின்றார். அதற்குரியவற்றையும் செய்கின்றார்-ஏன்? அண்ணல் காந்தியடிகள் தம் வாழ் நாளிலேயே நேருஜியைத் தலைவராக பாரத நாட்டு மக்களுக்கு அறிமுகப்படுத்தினார். அவர் பின் பாரத மக்கள் அணிவகுத்து நிற்கும்படி செய்தார். அதுபோல கோடான கோடித் தமிழர்கள் தம்மைத் தலைவர் என்று அழைத்தாலும், தந்தை என்று அழைத்தாலும், ஏவியதைச் செய்து முடிக்கக் காத்திருந்தாலும், அவற்றை யெல்லாம் உரிமையென்றோ, புகழ் என்றோ எடுத்துக் கொள்ளாமல் 'தமிழர் தலைவர் காமராசர்; அவர் பின் அணி வகுத்து நில்லுங்கள்' என்று நம்மை வழி நடத்துகின்றார் தந்தை பெரியார். இஃது பெரியார் அவர்களின் பெருமை யாவற்றுக்கும் மணி முடியாகத் திகழ்கிறது.

மக்கள் மன்றத்திலே நிலவும் சாதி வேற்றுமைகள் ஒழிய வேண்டும். அறியாமை நீங்கி அறிவு வளர வேண்டும். கண்மூடிப் பழக்கமெல்லாம் மண்மூடிப் போகவேண்டும். மக்களிடையே நிலவும் ஏழை, பணக்காரர் என்ற வேற்றுமைகள் ஒழியவேண்டும். புதுமையும் பொதுமையும் கலந்த ஒப்பற்ற புதிய சமுதாயம் மலரவேண்டும். இவையே தலைவர் பெரியாரின் இலட்சியங்கள் இந்த இலட்சியங்களைத் திட்டமிட்டு நிறைவேற்றித் தருகின்ற ஆற்றல் படைத்த பெருந் தலைவர் காமராசர். இந்த ஒப்பற்ற தலைவர்கள் தலை முறையில், நம்முடைய நாடு விழித்தெழுந்து முன்னேறாது போனால் பின் எப்பொழுதுதான் முன்னேறப்போகிறது?

# 37. *உலகத் தலைவர் பெரியார்

சேலம் நகராட்சி மன்றத்தினர், தலைவர் பெரியார் அவர்கள் படத்தை, நம்மைத் திறந்து வைக்கும்படிக் கேட்டுக் கொண்டுள்ளனர். இந்நிகழ்ச்சி பலருக்கு ஆச்சரியத்தைத் தரக்கூடும். தமிழர்களில் பலருக்கு இந்நிகழ்ச்சி மகிழ்ச்சியைத் தரும் என்பது உறுதி. தமிழ்ச் சமுதாயத்தின் ஒருமைப் பாட்டில்-வளர்ச்சியில் இது ஒரு படி என்றே நாம் கருது கிறோம். நயத்தக்க நாகரிகப் பண்பாடு நாட்டில் மலர, இது போன்ற நிகழ்ச்சிகள் துணைசெய்யும். (கருத்து வேற்றுமைகள், காழ்ப்பாக உருப்பெற்று, வளர இடம் கொடுப்பது, தீயதிலும் தீது. வேற்றுமைகளுக்குள்ளும் ஒற்றுமை கண்டு, கலந்து பழகுதலே தலைசிறந்த மனிதத் தன்மையாகும்.)

### வேற்றுமையில் ஒற்றுமை

நாம், தலைவர் பெரியார் அவர்களைப் பொறுத்த வரையில், பல துறைகளில் கருத்தொருமைப்பாடுடையவர் களாகவும், சில துறைகளில் வேறுபாடு உடையவர்களாகவும் இருக்கிறோம். தமிழர் சமுதாயத்தைப் பொறுத்த கொள்கை யளவில் உடன்பாடும், சமயநெறியைப் பொறுத்தவரையில் உடன்பாடின்மையும் உடையோம்.

### தந்தை பெரியார்

தலைவர் பெரியார் அவர்கள் இன்றைய தமிழ்ச் சமுதாயத்திற்குத் தந்தையாக விளங்குகிறார். ஆயிரம் ஆயிரம் தமிழர்கள், தமிழிளைஞர்கள் “தந்தை பெரியார்” என்று பெருமையோடு பேசி மகிழ்கின்றனர். சமுதாயத் தந்தையாக விளங்குதற்குரிய தெளிவான அறிவு – அனுபவம் – உழைப்பு அணைக்கும் தன்மை – இன நலத்திற்காகப் போராடும்

* தனி வெளியீடு

உறுதி-ஆகிய குணநலன்கள் எல்லாம் பெரியாரவர்களிடத்தில் நிரம்பப்பெற்றுள்ள உண்மை, நாடு அறிந்த ஒன்று.

பொது வாழ்வு என்பது உலகியல் ரீதியில் மலர் தூவிய பாதை என்று சொல்ல முடியாது: பொது வாழ்வு என்பது மிகவும் கடினமான ஒருதுறை. நாம் இங்கு குறிப்பிடுகின்ற பொதுவாழ்வென்பது, இந்த நூற்றாண்டில் பலர் மேலெழுந்த வாரியாக, ஏனோ தானோ என்று செயற்படுகின்ற பொது வாழ்வைக் குறிப்பிடவில்லை. கொள்கைப்பிடிப்போடு, ஆழமான பொதுவாழ்வு மேற்கொண்டிருப்பவர்களைப் பற்றியே குறிப்பிடுகின்றோம். (பொதுவாழ்வுக்கு இன்றியமையாக் குணங்கள்: உள்ளதை உள்ளவாறு சொல்லுதல்; வசையையும், வாழ்த்தையும் சமம் எனக் கருதுதல்; எந்தவிதமான இடர்ப்பாடுகளுக்கும் தான் ஆளாவது குறித்து வருத்தப்படாமல் இருத்தல்; இன்பம் விழையாமலும், துன்பம் கண்டபொழுது தளராமலும் அயராது உழைத்தல் ஆகியவைகளாகும்.

இத்தகு சிறந்த குணங்கள் அமையப்பெற்று, பொது வாழ்வில் ஈடுபட்டோருக்கு யாதும் பலன் இல்லை. அவர்கள் வரலாறு கண்ணீரைத் தருகின்ற நிகழ்ச்சிகளாகவே இருக்கும். ஆனால் நாட்டுமக்கள் எழுச்சியும், ஏற்றமும் பெறுவர். இக்கருத்துண்மையினை உலக வரலாறு முழுவதிலுமே, நாம் காண்கின்றோம். புதுமை காணப் புத்துணர்வு கொண்டவர்களை, சமுதாய இழிவை நீக்கி, ஏற்றம் தர முயன்றவர்களைப் புதைகுழிக்கே நாடு அனுப்பி வைத்துள்ளது. ஆனாலும், அந்தப் புதைகுழிகள் புதுமைப் பூங்காக்களாக மாறின என்பன, வித்தை வரலாற்றின் ஊடே, ஊடுருவிக் கிடக்கின்ற உண்மைகளாகும்.

## தன்னலச் சமூகம்

தலைவர் பெரியார் அவர்களுடைய பொது வாழ்வு தொல்லைகள் நிறைந்த ஒன்று என்பதை, யாரும் மறுக்கவோ,

மறக்கவோ முடியாது. எப்பொழுதுமே சமுதாயம் ஒரு புரியாத புதிர். சமுதாயத்தில் பரவலாகத் தன்னலச் சார்பும், அவ்வழிப்பட்ட அற்ப ஆசைகளும் மல்கிக்கிடப்பதை, நல்லோர் உணர்வர். தன்னலச் சார்பு ஒரு சமுதாயத்தினுடைய பொது உரிமைகளைக்கூட விட்டுக்கொடுத்துத் தன்னையும், தன்னுடைய சமுதாயத்தையும் இழிவுபடுத்திக் கொள்ளும் அளவுக்கு, இடம்பெறுவதை நடைமுறையில் காண்கின்றோம்.

## செயற்கரிய செயல்

இத்தகு மனநிலை படைத்த சமுதாயத்தோடு பழகுவதும், அவர்களுக்குரிய நலன்களிலேயே நாட்டம் கொள்வதும் எளிமையான ஒரு செயலல்ல. நாம் எந்த இனத்தின் மானத்திற்காகப் பாடுபடுகிறோமோ, அந்த இனத்தைச் சேர்ந்தவர்களே-தன்னினத்தவர்களே-காட்டிக் கொடுப்பதை நடைமுறையில் பார்க்கிறோம். இத்தகு சோதனையான ஒரு பொது வாழ்வில், சற்றேறக்குறைய 40 ஆண்டுகளுக்கு மேலாகத் தலைவர் பெரியார் அவர்கள், பொதுவாழ்வில் ஈடுபட்டு, அப்பொதுவாழ்விலும் நிலை பேறாக நிற்கின்ற காட்சியைப் பாராட்டாமல் இருக்க முடியுமா? நம் வாழ்நாளிலேயே, இத்தகு பொதுவாழ்வில் ஈடுபட்டவர்கள். பொதுவாழ்வுத் துறையில் நிலைபேறாக நின்றமை, அருமையிலும் அருமை, தலைவர் பெரியார் அவர்கள் பொதுவாழ்வில் வெற்றிபெற்று விளங்குகிறார்கள் என்றே சொல்ல வேண்டும்.

## சமயப் பெரியார்

தலைவர் பெரியார் அவர்களுடைய பொது வாழ்க்கையின் தொடக்கக் காலத்தில், சமயச்சார்பு நிறைய இருந்திருக்கிறது. அவர்களே ஒரு தடவை "ஞானியார் அடிகள் இவர்ந்து வந்த பல்லக்கைத் தூக்கி வந்ததாக

கு. XIII. 14.

நம்மிடம் குறிப்பிட்டார்கள்." அதுமட்டுமின்றி தலைவர் பெரியார் அவர்களுடைய பொதுவாழ்வு அரும்பி மலர்ந்தது, காங்கிரஸ் மகாசபையின் மூலமேயாகும். ஆனால், மணம் வீசுவது திராவிடர் கழகச் சமூக இயக்கத்தினாலேயேயாகும்.

## சமூகப் பெரியார்

தமிழ்நாடு காங்கிரசின் செயலாளராக-தலைவராக எல்லாம் இருந்து பணிசெய்திருக்கிறார். காங்கிரஸ் தாபனத்தின் தீண்டாமை ஒழிப்பு இயக்கத்தில் மிகத் தீவிரமாக ஈடுபட்டுக் கேரளத்தில், வைக்கத்தில் அறப்போர் நிகழ்த்தி வெற்றி பெற்று "வைக்கம் வீரர்" என்ற விருதும் பெற்றார். பின்னர், காங்கிரஸ் தாபனத்தில் ஏற்பட்ட சில கருத்து வேற்றுமைகளின் காரணமாக, அதை விட்டுப் பிரிந்து, சுயமரியாதைக் கட்சி-நீதிக் கட்சிகளின் மூலமாகப் பொதுப்பணி செய்து, அதன் பின் திராவிடர் கழகத்தைக் கண்டு, அதன் மூலம் பொதுப்பணி செய்து வருகிறார்.

## இனநலக் காவலர்

அவருடைய கொள்கைகள் பலவாகத் தோற்றம் அளித்தாலும் அக்கொள்கைகள் அனைத்தும் "இனநலம்" என்ற ஓரே கொள்கையின் அடிப்படையில் அமைந்தவைகளே யாகும். சிலர் பெரியார் அவர்களுடைய இனநலக் கொள்கையை வகுப்புவாதக் கொள்கையாகக் காண் கின்றனர். அந்தப்படி மக்களிடத்தில் பிரசாரமும் செய்து வருகின்றனர். அண்மையில், பிரதமர் நேரு அவர்கள் தென் ஆப்பிரிக்காவின் "நிறவெறி"க் கொள்கையைக் கண்டித்துப் பேசும்பொழுது, வகுப்புவாதக் கொள்கைகளையும் வன்மை யாகக் கண்டித்தார். அக்கருத்தைச் சித்தரிக்க வந்த தமிழகத்து ஏடு ஒன்று, பிரதமர் நேரு அவர்கள் வகுப்புவாதத்தைக் கண்டிக்கும் அதே காலத்தில், தமிழகத்தில் முதல் அமைச்சராக-தலைசிறந்த ஆட்சியாளராக விளங்கிக் கடமை

யாற்றும், நமது காமராசர் அவர்கள், வகுப்புவாதக் கொள்கையின ரோடு கூட்டுறவு வைத்திருப்பதாக, பெரியார் அவர்களையும், காமராசரையும் பிணைத்து "செய்திச் சித்திரம்" ஒன்று தீட்டியிருந்தது. (வகுப்புவாதக் கொள்கை, சிறு சிறு அளவில் "சாதிகள்" அளவேர்டு நிற்பது; வெறுப்புணர்ச்சியை வளர்ப்பது. ஆனால், இன நலக் கொள்கை, விரிந்த பரந்த நோக்கத்தோடு, ஓர் இனத்தின் மொழி, கலை, அடிப்படை உரிமைகள் ஆகியவைகளைப் பேணிக்காப்பதற்காக உருவானது.) சுதந்திர பாரத நாடு மிகப்பெரிய நாடு. இந் நாட்டில் பல்வேறு தேசீய இனங்கள் வாழ்கின்றன. பல்வேறு தேசீய இனங்களின் நலன்களைப் பாதுகாப்பதாக அரசியல் சட்டம் உறுதிமொழி அளித் துள்ளது. அத்தகைய இனநலத்தைக் காப்பதே பெரியார் அவர்களின் அடிப்படைக் கொள்கை.

## இனவெறி வெறுப்பாளர்

இனநலக் கொள்கையின் அடிப்படையில் வேலை செய்யும்பொழுது, இனவெறி வராமல் இருக்கவேண்டும்; வரவும் கூடாது. "இனவெறி"க் கொள்கை, பரந்துபட்ட தேசீயப் பண்பாட்டுக்கும் உகந்ததல்ல. அதுமட்டுமின்றி, இனவெறிக் கொள்கையின் மூலம், நாட்டின் ஒற்றுமை குறையும். இனவெறிக் கொள்கையை நாம் மறுக்க முடியுமே தவிர, இனநலக் கொள்கயை விரும்பாமல் இருக்க முடியாது. பெரியார் அவர்களை இனநலக் கொள்கை பேணும் ஒரு தலைவராகவன்றி, இனவெறிக் கொள்கையை யுடையவராக நாம் கருதவில்லை. ஆனாலும், இனநலக் கொள்கையை நடைமுறைக்குக் கொண்டுவரும்பொழுது, இனவெறிக் கொள்கை அரும்புவதற்கும் வாய்ப்புக்கள் உண்டு என்பதை மறுக்கமுடியாது. ஆனால், அவ்வாய்ப்புக்கள் தவிர்க்கப்படக் கூடியவைகளே என்று நாம் கருதுகிறோம்.

அதாவது, ஓர் இனம் இன்னோர் இனத்தினுடைய உரிமையில் தலையிடாமல், அந்த இனத்தினுடைய தகுதியையும், சிறப்பையும், இனமானத்தையும் காத்துக்கொள்ள ஒப்புக் கொள்ளுமானால், "இனவெறியைத்" தடுத்து நிறுத்த முடியும். ஓர் இனம், ஓர் இனத்தின் உரிமைகளில் தலையிடும் போதோ, அல்லது ஓர் இனம் ஓர் இனத்தினுடைய பெருமைகளைக் குறைக்க முற்படும்பொழுதோ, இனவெறிக் கொள்கை தோன்றுகிறது. இந்த மாதிரி, சில சமயங்களில் பெரியார் அவர்களுடைய பேச்சு அல்லது எழுத்துக்களில், இன வெறுப்புக் கொள்கை இருப்பது போலத் தோன்றுகின்றது. ஆனாலும், தம்முடைய இன நலத்திற்கு இன்னோர் இனத்தினால் கேடுவராதபோது, தம்முடைய இனவெறுப்புக் கொள்கையைக் கைவிட்டுவிடுவாரென்றே நம்புகிறோம்.

## சாதி ஒழிப்பாளர்

தலைவர் பெரியார் அவர்கள், தம்முடைய இனநலக் கொள்கையின் அடிப்படையாகச் சில துணைக் கொள்கைகளையும் வரையறுத்துக் கொண்டிருக்கிறார். அவைகளுள், தலையாயது சாதி ஒழிப்புக்கொள்கை. தமிழினத்திற்குச் சாதிக் கொள்கை உடன்பாடு உடையதல்ல. "யாதும் ஊரே, யாவரும் கேளிர்" என்று புலவர்கள் போற்றும் புறநானூறு பேசுகின்றது. "ஒன்றே குலம், ஒருவனே தேவன்" என்று உயர்ந்த மாமூலர் உரை பேசுகின்றது. தமிழகத்தின் தவவிளக்காக, ஞானச் சுடராகத் திகழ்ந்த திருநாவுக்கரசு சுவாமிகளும் "சாத்திரம் பல பேசும் சழக்கர்காள், கோத்திரமும் குலமும் கொண்டு என் செய்வீர்" என்று, சாதி வெறி பிடித்தவர்களை நோக்கி—அச்சாதி வெறிக்குச் சாத்திரங்களின் ஆதாரங்களைக் காட்டுபவர்களை நோக்கிச் சாடுகிறார். இங்ஙனம் தமிழ்ப் பெரியோர்கள் வாழையடி வாழையாக சாதி வெறியைச் சாடி வந்தபோதிலும், சாதிகள் தொலைந்தபாடில்லை. அப்பப்பா! சாதிகள் சல்லி வேர்களைப் போலத் தழைக்

கின்றன. இத்தகைய சாதீயக் கொள்கைகளைத் தகர்த்தெறியப் பெரியாரவர்கள் பேரார்வம் கொண்டுள்ளார்கள். அதற் கென்றே தம் வாழ்நாள் முழுதும் அர்ப்பணித்துள்ளார். இந்த சாதி ஒழிப்புக் கொள்கையை, நல்ல மனம் படைத்த அத்துணை பேரும் ஒப்புக் கொள்ளுவார்கள். சில பல பிற் போக்குவாதிகள் வேண்டுமானால் மறுக்கக்கூடும். ஆனால் எதிர்காலத்தில் சாதீய உணர்ச்சிகள் சருகெனக் காய்ந்து கருகிக் கீழே விழப்போவது உண்மை.

நமக்குள் இந்த 1961-இலும் சாதிப்பாகுபாடுகள் இருப்பது, நமது சமுதாயத்திற்கே இழுக்காகும். சிலர் சாதி ஒழியுமானால், மதம் ஒழிந்துவிடுமே என்று கூட அச்சப்படு கின்றனர். மதத்தைக் காப்பாற்றுவதாக எண்ணிக்கொண்டு, சாதி ஒழியக்கூடாது என்று கூறவும் முற்படுகின்றனர்.

தஞ்சை மாவட்டமும், திருநெல்வேலி மாவட்டமும் தான், தமிழ்நாட்டிலேயே சாதி ஆணவங்கள் தலை விரித் தாடிய மாவட்டங்கள். இப்படிப்பட்ட சாதிக்கொடுமையின் காரணமாகத்தான், தஞ்சை மாவட்டத்தில் திராவிடர் கழகமும், திருநெல்வேலி மாவட்டத்தில் கிருஸ்தவ சமயமும் மிகுதியாகப் பரவி இருக்கின்றன.

வருங்காலச் சந்ததிகளுக்குச் சாதியைப்பற்றிய எண்ணம் தோன்றாத அளவுக்குச் சாதி ஒழிந்த சமதர்ம சமு தாயத்தைத் தலைவர் பெரியார் அவர்களின் காலத்திலேயே நாம் அடையவேண்டும். நமக்குள்ளே, பல கருத்து வேறுபாடுகள் இருந்தபோதிலும், இன ஒருமைப்பாடு என்ற ஒரே இலட்சியத்தில் அனைவரும் ஒன்று திரள வேண்டும்.

## இந்தித் தடுப்பாளர்

அடுத்து, ஓர் இனத்திற்கு மொழி முதுகெலும்பு போல்; முதுகெலும்பு உள்ள மனிதனே நிமிர்ந்து நடக்க முடியும். அதுபோல மொழிநலம் படைத்த இனமே, பல்வேறு இனங்

களிடையே நிமிர்ந்து வாழ முடியும். பல்வேறு மொழிவழிப் பட்ட இனங்கள் வாழும் பாரதநாட்டில், அவ்வப்போது தேசீய மொழி என்ற பெயரில், தமிழகத்தின் தனி மொழியாக இருக்கின்ற தமிழுக்கு ஊறுகள் விளைவதை நடைமுறையில் கண்டு வருகிறோம். தமிழர்கள் "இந்தி"யைத் தேசீய மொழி யாக, தேசீய ஆட்சிமொழியாக ஏற்றுக்கொள்ள வேண்டு மென்று, மறைமுகமாகக் கட்டாயப்படுத்துகின்றனர். அப்படிப்பட்ட கட்டாயச் சூழல்கள் வந்த காலத்தி லெல்லாம், இந்தியை எதிர்த்துப் போராடி, சிறைத் துன்பங்களை மேற்கொண்டு, ஹிந்தியின் நுழைவைச் சில காலத்திற்குத் தள்ளிவைத்த பெருமை பெரியார் அவர்களுக்கு உண்டு. அத் துறையில் தமிழகத்தின் தன்மானங்காத்த தலைவர் பெரியார் என்று சொன்னாலும் மிகையன்று. எனினும் ஹிந்தியின் நுழைவு தவிர்க்கப்பட இல்லை; தவிர்க்க முடியாத ஒன்று என்று நாம் கருதுகிறோம். தேசீய ஆட்சிமொழியாக ஆங்கிலம் இருக்கவேண்டும். அல்லது ஹிந்தியோடு ஆங்கிலம் இருக்க வேண்டும் என்று சிலர் சொல்லி வருகிறார்கள். பாரதத்தின் தேசீய ஆட்சி மொழியாகப் பாரத நாட்டின் இனவழிப்பட்ட இனமொழி களுக்குள் ஒன்றோ அல்லது சில மொழிகளோ இருக்க வேண்டுமேயொழிய, ஆங்கிலம் தேசீய ஆட்சிமொழியாக இருப்பது என்பது ஏற்றுக்கொள்ளத்தக்க தல்ல. இந்தியாவின் தேசீய ஆட்சிமொழியாக இந்தி இருக்க வேண்டுமென்பதில், தமிழினத்துக்குக் கருத்து வேற்றுமை இருக்கவேண்டுமென்ற அவசியம் இல்லை. ஆனால் இந்தி மட்டும் பாரதத்தின் தேசீய ஆட்சிமொழியாக இருப்பதென்பதைத் தமிழினம் ஒரு பொழுதும் ஒத்துக்கொள்ளமுடியாது. சில ஐரோப்பிய நாடுகளில், ஒன்றுக்கு மேற்பட்ட மூன்று நான்கு மொழிகள் ஆட்சி மொழிகளாக இருப்பது போல, பாரதத்திலும் அரசினர் பாரத தேசீய இனமொழிகளாக ஏற்றுக் கொண்டுள்ள பல மொழிகள், ஆட்சி மொழிகளாக வர

வேண்டும். அப்பொழுது தமிழும் பாரதத்தின் தேசீய ஆட்சி மொழிகளுள் ஒன்றாகும். நாம் இப்படிக் குறிப்பிடும்பொழுது, ஆங்கிலத்தைப் புறக்கணித்து விடவேண்டுமென்று கருது வதாக யாரும் நினைக்கவேண்டாம். நமது நாட்டின் அறிவியல் வளர்ச்சிக்கும், தொழிலியல் வளர்ச்சிக்கும் ஆங்கிலம் மிக மிக இன்றியமையாத ஒன்று. இந்தி பொது அல்லது உறவுமொழி யாகவும், ஆங்கிலம் அறிவியல் துறைப் பயிற்சிக்குரிய துணை மொழியாகவும், தமிழ் தாய்மொழி யாகவும், ஆட்சிமொழி யாகவும் இருக்கவேண்டும் என்பதே நமது கருத்து. இத்துறையில் பெரியார் அவர்களுடைய கருத்து நம்முடைய கருத்துடன் ஒத்திருக்குமென்றே நம்புகின்றோம்.

## தமிழர் நலம் விழைவாளர்

தமிழகத்தின் ஆட்சி மனைகளில் தமிழர்கள் நிறை இடம்பெற வேண்டுமென்பதும் தமிழர்கள் எல்லாத் துறையிலும் பெருமை பெறவேண்டுமென்பதும், பெரியார் அவர்களுடைய பெருவிருப்பம்.

இத்துறையில் மக்கட் சதவீதத்தை அடிப்படையாக வைத்து, உத்யோகங்கள் ஒதுக்கப்படவேண்டும் என்பது பெரியார் அவர்களுடைய கொள்கை; இக்கருத்தும், பரவலாக எல்லோரும் உரிமை பெற்று வாழவேண்டும் என்று விரும்புகிறவர்களுக்கு, ஒத்த கொள்கையாகவே இருக்கவேண்டும். இதுபோன்ற பல்வேறு துறைகளில் தம்முடைய துணைக்கொள்கைகளை உறுதிப்படுத்தி வளர்த்து வருகின்றார். அதோடு தாம் விரும்பும் புதுமையும், பொதுமையும் நிறைந்த சமுதாயத்தை உருவாக்க சமயநெறி முட்டுக்கட்டையாக இருக்கிறது என்று பெரியார் நம்புகிறார்.

## சமயப் பகைவரா?

மதம், மனித இனத்தின் அறிவை மறைக்கிறது; மயக்கு கிறது, மனித இனத்தின் முன்னேற்றத்திற்குப் பெரிய இடை

யூறாக இருக்கின்றது என்றெல்லாம் கருதுகிறார்கள். இத் துறையில் பெரியார் அவர்களோடு நாம் முற்றிலும் முரண் பட்ட கருத்துக்களையே கொண்டிருக்கிறோம். அறிவிற்கும், அனுபவத்திற்கும் ஒத்துவராத, பிற இனவழிப் பட்ட சமயக் கொள்கைகள், பெரியார் அவர்களுடைய கருத்துக்கு இயைந்திருக்கக்கூடும்.

ஆனால், தமிழினத்தின் அறிவிலே, அனுபவத்திலே பூத்துக் காய்த்துக் கனிந்த சமயநெறி, அறிவிற்கும், அனுபவத் திற்கும் ஒத்து வரக்கூடியது; நம்பிக்கைக்கும், நல்வாழ்க்கைக்கும் ஏற்றது; முன்னைப் பழமைக்கும் பழமையினதாய், பின்னைப் புதுமைக்குப் பெயர்த்தும் அப்பெற்றியதாய் விளங்கும் பெருநெறி. தமிழினத்தின் சமயநெறி, சமரசநெறி, அன்புநெறி, அருள்நெறி ஆகும். பிற இனவழிப்பட்ட கொள்கைகளின் கூட்டால் பிற்காலத்தில் விளைந்த சமயத்தைச் சார்ந்த போலிக் கொள்கைகளையே தலைவர் பெரியார் அவர்கள் சாடுகிறார்களென்று நாம் கருதுகிறோம்.

தமிழினத்தின் தலைசிறந்த நாகரீக மேற்பாடுகள், சமயச் சார்பிலே விளைந்தனவேயாகும். இத்துறையில், காலப் போக்கில் ஒரு புதிய தெளிவான முடிவு உருவாகவேண்டும். சமயச் சார்பினர் நம்முடைய சமயச் சூழலை மக்கள் மனங் கொள்கின்ற அளவுக்கு ஏற்றவாறு, தகுதி படைத்த சமய வாழ்வினை மக்கள் முன்னிலையில் வைக்கவேண்டும்.

தம்மதத்தைச் சீர்திருத்தம் செய்யக்கூடப் பெரியார் உறவு தேவை என்று கருதுகின்றேன். நான் பயிர் வளர்ப்பவன். பயிரில் பல களைகளும் அடிக்கடி முளைத்துவிடுவது உண்டு. பெரியார் அவர்கள் பயிருக்கு இடையே முளைக்கக்கூடிய, களையினைப் பிடுங்கி எறியக்கூடியவர். களை பிடுங்கா விட்டால், பயிர் வளராது. எனவே சமயம் என்னும் பயிர் வளர, மூடத்தனம் என்னும் களையைப் பிடுங்குவதற்குப் பெரியார் அவர்களின் உறவு தேவைப்படுகின்றது.

## மக்களின் மடாதிபதி

"கடவுளைக் கூடக் கண்டுவிடலாம்; ஆனால் மடாதி பதிகளைக் காண முடியாது" என்று பெரியார் அவர்கள் கூறுகின்றார். அப்படி ஒரு காலம் இருந்தது. மடத்தின் நான்கு சுவர்களுக்குள் இருந்த என்னை, வெளியே இழுத்துவிட்டவர், தலைவர் பெரியார் அவர்கள் ஆவார்.

## பண்பாளர் பெரியார்

தலைவர் பெரியார் அவர்களிடத்தில் எல்லோரும் பாராட்டத்தக்க சில சிறப்பியல்புகள் நிறைந்துள்ளன. தெளிவான சிந்தனையாளர். எவ்விதமான கருத்துக்களையும் நடைமுறையில் காணமுயற்சிப்பவர். பருவம், மடி, மானம், கருதாமல் குடிசெயல் முயற்சியில் ஈடுபட்டிருப்பவர். தம்மோடு கருத்திலே மாறுபட்டவர்களிடத்திலும் மரியாதையும், பெருமையும் கொடுக்கும் சிறந்த குணத்தினர். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாதவர். எல்லா வற்றிற்குமேலாகக் குறிக்கோள் ஒன்றையே கருத்தில் கொண்டு வாழ்பவர்.

## இனநலக் கொள்கையாளர்

இனநலத்தைக் காக்கின்ற முயற்சியில், அவர் அயராது பாடுபட்டுள்ளார். ஆட்சித்துறையிலும், மற்றெல்லாத் துறை களிலும் தமிழர் சிறப்பெய்த வேண்டுமென்பதே அவருடைய கவலை. இன்றையத் தமிழகத்தின் ஆட்சி முதல்வர் திரு. காமராசர் அவர்கள், தமிழினத்தின் நலன்களைக் காப்பதில், அவைகளைக் கண்ணும் கருத்துமாய் வளர்ப்பதில் கடமை களை இயற்றி வருகிறார் என்பதைத் தன்மானம் படைத்த தமிழர் எவரும் ஒத்துக்கொள்வர்.

"வீதி தோறும் இரண்டொரு பள்ளிகள், வீடுகள் தோறும் கலையின் விளக்கம்" என்ற கவிஞன் பாரதியின்

கருத்தினை நடைமுறைக்குக் கொண்டுவந்த பெருமை காமராஜ் அவர்களுக்கே உரியது. பட்டிதொட்டிகளி லெல்லாம் பள்ளிகள் திறக்கப்பெறுகின்றன. சோறும், துணியும் கொடுத்துக் கல்வி கற்றுக்கொடுக்கப்பெறுகின்றன. கல்விச் செல்வம் பொது உரிமையாக்கப்பட்டுவிட்டது. இந்தச் சாதனை வள்ளல்கள் வாழ்ந்த காலத்தில்கூட நிகழ்ந்ததாக வரலாற்றில் இல்லை.

அதுமட்டுமா, காடுகள் கழனிகளாகின்றன! செந் நெல்லும், செங்கரும்பும் செழித்து வளர்கின்றன! மண்ணடியில் மறைந்து கிடக்கும் மாண்புமிக்கச் செல்வங்கள் தோண்டியெடுக்கப்படுகின்றன! இத்தகு, வியத்தகு சாதனைகளைச் செய்து வருகின்ற தமிழக ஆட்சி நீங்காது நிலைபெற வேண்டு மென்று விரும்புகிற காரணம் இனநலக் கொள்கையேயாகும்.

பெரியார் அவர்கள், இன்று நடைபெறும் காமராசர் ஆட்சியானது, நமக்குக் கிடைத்தற்கரியது; இந்தக்காலம் பொற்காலம் என்கிறார்கள். இந்தப் பொற்காலத்திலேயே, மக்கள் தங்கள் தேவைகளை எல்லாம் பூர்த்தி செய்து கொண்டு, மேலான வாழ்வு வாழத் தவறிவிடக்கூடாது.

## தன்மதிப்பு வளர்ப்பாளர்

பெரியார் அவர்கள் சுயமரியாதை உணர்வை ஆயிரக் கணக்கான தமிழர்களிடையே உருவாக்கி வளர்த்தார்கள். வாழுகின்ற மனித இனத்திற்குத் தன்மானமும், இனமானமும் இரு கண்கள்.

இத்தகு சுயமரியாதை உணர்வைத் தமிழர்களிடையே வளர்த்து, இனமானக் கொள்கைக்கும், இனநலக் கொள்கைக்கும் கால்கோள்செய்த தலைவர் பெரியார் அவர்களின் திருத்தொண்டினைப் பாராட்டுகின்றோம். நாம் சமயத் துறையில் ஆழமான பற்றும், நம்பிக்கையுமுடையோம்.

தமிழினத்தினுடைய நாகரிமனைத்தும், சமயச்சார்பில் உரம் பெற்றவைகளே என்று நம்புகிறோம். தமிழகத்தினுடைய சமயச்சார்பு, பிற இனத்தின் வழிப்பட்டதல்ல; தமிழகத்தின் தூய தன் இனவழிப்பட்டது என்றே நாம் நம்புகிறோம். காலஞ்சென்ற மறைத்திரு மறைமலையடிகளார் அவர்களுடைய கருத்தும் இதுவே. நாம் காணும் சமயநெறி சமுதாயத் தொடர்புடைய நெறி; சமுதாயத்தின் முன்னேற்றத்திற்காக-சமுதாயத்தின் நல்வாழ்வுக்காக-சமய நெறி வேண்டுவன செய்யக் கடமைப்பட்டிருக்கிறது.

"ஒவ்வொரு அரசியல் சிக்கலும் ஒரு சமுதாயச் சிக்கலாக மாறுகிறது. ஒவ்வொரு சமுதாயச் சிக்கலும் ஒரு சமயச் சிக்கலாக மாறுகிறது" என்ற ஆங்கில அறிஞனின் சிந்தனை, நம்மைப் பல காலம் சிந்திக்கத் தூண்டியதுண்டு. வாழும் மனித சமுதாயத்தின் சிக்கல்கள், தொல்லைகள், அனைத்தையும் பொறுப்பேற்று மாற்றி அமைக்கவேண்டிய பொறுப்பு சமயநெறிக்கு இருக்கிறது.

இடைக்காலத்தில், சமயநெறியும், அறநெறியைச் சார்ந்தவர்களும், சமுதாயத்தைப் புறக்கணிக்கத் தொடங்கி விட்டார்கள். அதன் விளைவாக, நாட்டில் எத்தனையோ விதமான விளைவுகள், இவைகளையெல்லாம் மாற்றி, ஒரு புதுமைச் சமுதாயம் காணவேண்டும் என்ற பெரு விருப்ப நோக்கு இருப்பதால், தலைவர் பெரியார் அவர்களுடைய சமுதாயத் தொடர்புடைய கருத்துக்களை நாம் ஏற்றுக்கொள் கிறோம்.

## உலகத் தலைவர் பெரியார்

ஈரோட்டிலே முதன் முதலில், நானும் பெரியாரும் சந்தித்தோம். அவரும் நானும் ஒரே மேடையில் பேசினோம். இருவரும் அவரவர் கொள்கையில் பற்றுக்கொண்டுள்ளோம்; ஒருமைப்பாடானவற்றை எடுத்துப் பேசுவதில் தவறென்ன?

பெரியார் உலகத் தலைவர் ஆவார். அவரது அனுபவ அறிவைப் பற்றிப் பாராட்டிப் பேசுவதில் மகிழ்வடைகிறேன்.

# 38. *நினைவின் அலைகள்

தமிழ்த்தாய் ஈன்றெடுத்த தனிப்பெரும் மாணிக்கமான நண்பர் ஜீவா இந்த நாட்டில் வாழ்ந்த-வாழ்கிற கோடானு கோடி மக்களிடம் பழகினார். அவருடைய பழக்கத்தைப் பெற்ற பேறு பெற்றவர்கள் வரிசையில் நானும் இடம் பெற்றது பெரும் பேறே. அவருடைய பழக்கம் சுவடு பதிந்த பழக்கம்- உணர்வினாற் கலந்து ஒன்றித்துப் பழகிய பழக்கம்.

திருக்குறள் நட்பின் இலக்கணம் பேசுகிறது; வள்ளுவர் கண்ட இலக்கணத்திற்கு இலக்கியமாகத் திகழ்ந்தது ஜீவாவின் நட்பு.

பெரும்பாலான தமிழர்கள் வாழ்க்கையில், சராசரி காணப்பெறுகின்ற குறை, தங்களுடைய கருத்து வேற்றுமையைக் காழ்ப்பாக்கிப் பகைமையை வளர்த்துக் கொள்வது. ஜீவா அவர்கள் சித்தாந்த ரீதியாக கருத்து வேற்றுமையுடையவர்களிடத்துங்கூடக் கலந்து பழகும் சக்தி பெற்றிருந்தார். மேடையில்-எழுத்தில் தம்முடைய சித்தாந்தத் தோடு முரண்படுகின்ற கருத்துக்களைச் சாடும் பொழுது சுழன்றடிக்கும் சூறாவளி வீசும். ஆனாலும் புழுதி பறக்காது. மார்க்சீய சித்தாந்தத்தின் ஊற்றுக் களனாகவே, ஜீவா வளர்ந்து வடிவம் பெற்று வாழ்ந்தார்.

இந்திய தேசிய ஒருமைப்பாட்டினைத் தம்முடைய உயிரினும் இனிதாகப் போற்றினார். ஆனாலும், மொழி வழி நாகரிகத்தைத் தமது மூச்சாகவே கொண்டு திகழ்ந்தார். கம்பன், வள்ளுவன், பாரதி, ஆகியோரின் இலக்கியங்களை மார்க்சீய சித்தாந்தப் பார்வையில் பார்த்து, விளக்க உரை யாற்றுவதில் அவர் ஈடும் இணையுமற்றுத் திகழ்ந்தார். என்னுடைய தொடர்பு அவருக்கு ஏற்பட்ட பிறகு, திருமுறை இலக்கியங்களையும் அவர் அந்தப் பார்வையோடு பார்த்து

* பொங்கல் பரிசு

விளக்க உரை செய்ய முன்வந்தார். திருப்புத்தூர்த் திருக் கோயிலில் ஆண்டுதோறும் நடைபெறும் திருமுறை விழாவில் "அப்பரடிகள் கண்ட சமுதாயம்" என்ற தலைப்பில் அவர் ஆற்றிய விரிவுரை இன்னும் ஒலித்துக் கொண்டிருக்கிறது. அப்பரடிகள் மீது பல ஆண்டுகளாகப் பக்தி கொண்டவர் களாக வாழ்ந்தவர்கள்கூட அப்பரடிகளை அந்த அளவிற்கு ஆவேசத்துடன் பாராட்டியிருக்கமாட்டார்கள். அந்தக் கூட்டத்தில் அவர் ஒடுக்கமாக சைவ மடங்களின் தலைவர் களுக்கு ஒரு வேண்டுகோள் விடுத்த காட்சி கண்களில் நீர்க்கக்கச்செய்தது. சமுதாய வாழ்வோடு இரண்டறக் கலந்த- ஒப்பற்ற சமுதாய இலக்கியமாகக் கருதப் பெறுகின்ற அப்பரடிகளில் திருமுறை இலக்கியத்தை இப்பரந்த உலகின் எட்டுத் திக்குகளுக்கும் எடுத்துச்செல்ல வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்.

குன்றக்குடியில் நமது உயர்நிலைப்பள்ளியின் சார்பில் நடைபெற்ற பாரதி விழாவில் நண்பர் ஜீவா அவர்கள் சிறப்புச் சொற்பொழிவாற்றினார். அதுபோழ்து, பாரதி கடவுள் நம்பிக்கை கொண்டவர்களைவிட, தன்னம்பிக்கைக்கும் முயற்சிக்குமே முதன்மை கொடுக்கின்றான் என்று விளக்கிப் பேசினார். அவருக்குப் பின் பேசிய நான், பாரதி தன்னம்பிக்கையையும் முயற்சியையும் மட்டும் வலியுறுத்தினார் என்று எடுத்துக் காட்டினேன்.

நண்பர் ஜீவா அவர்கள் இந்த என்னுடைய பேச்சில் தம்முடைய கருத்து முரண்படுவதாகக் கருதினார்கள். கூட்டம் முடிந்த பிறகும், இரண்டுமணி நேரத்திற்கு மேல் என்னுடன் விவாதித்தார்கள், நாங்கள் இருவரும் ஒருவருக் கொருவர் விவாதித்துக் கொண்டோம். அன்பர்கள் காரைக் குடி கி.நா. கிருஷ்ணன், மேலமாகாணம் எஸ். நாராயணன், தேவகோட்டை கே.எம். சுப்பையா ஆகியோரே உடனிருந் தார்கள். ஆனாலும் விவாதம் உரத்த குரலில் இருந்தது. சூடுடையதாக இருந்தது. விவாதம் முடியவில்லை. காலம்

அதிகமாகி விட்டதால் மீண்டும் ஒருமுறை விவாதிப்போம் என்று கூறி நண்பர் ஜீவா அவர்கள் விடைபெற்றுச் சென் றார்கள். காரைக்குடி சென்றபிறகு, அங்கு நண்பர் கே.எம். சுப்பையா அவர்களிடம், "சுவாமி அவர்களிடம் கடுமையான முறையில் விவாதித்துவிட்டேனோ? அவர்கள் வருத்தப்படு வார்களோ?" என்று கேட்டிருக்கிறார். இவ்வளவு குழைந்த அன்பை ஜீவா அவர்களிடத்தில்தான் பார்க்க முடிந்தது. இனிமேலும் யாரிடமும் பார்க்க முடியுமா என்பது ஐயப் பாடே!

நாகரிகமாகவும் கருத்தோட்டத்துடனும் விவாதிப்பதில் ஜீவா அவர்கள் சிறந்து விளங்கினார். அவருடன் விவாதிப்பதில் பல்கலைக் கழகத்தில் படிப்பதையொத்த அறிவு கிடைக்கும். ஆதலால் பட்டிமன்றங்களில் அவரை எதிர்க்கட்சியாகவைத்து விவாதிப்பதில் எனக்கு அதிக ஆசையுண்டு. ஆண்டுதோறும் தேவகோட்டையில் நடை பெறுகின்ற திருவள்ளுவர் விழாவில் ஓராண்டு நானும் அவரும் எதிர்-பிரதி கட்சியாக இருந்து விவாதித்தோம். தலைப்பு, "வள்ளுவர் மிகுத்துக் கூறியது அரசியலா சமயமா? என்பது, யார் யார் எந்தக் கட்சியில் இருந்து பேசினோம் என்பதைக் குறுப்பிடவேண்டிய அவசியமில்லை. விவாதம் மிக நன்றாக இருந்தது. என்னைவிடக்கூட ஜீவா அதிகமாக உழைத்துப் பேசினார்; பட்டி மன்றம் முடிந்த பிறகு வழித்தங்கல் மனையில் தங்கி உரையாடிக் கொண்டிருந்த பொழுது, "நீங்களும் நானும் எதிர்க்கட்சியாக இருந்து விவாதிக்கக் கூடாது; அத்தகையதொரு சூழ்நிலையை ஏற் படுத்தித் தர்ம சங்கடத்தைத் தராதீர்கள்" என்றார். இங்ஙனம் அவர் கூறியது நம்மீது உள்ள அன்பின் மிகுதியாலேயே என்பதை அவரது குரல் காட்டிற்று.

இவ்வாறு தம்முடைய அன்புச் சுவட்டைப் பதித்து அவர் பழகிய பழக்கத்தின் 'நினைவலைகள், இன்னும் மோதிக் கொண்டிருக்கின்றன. நினைத்தாலும் நெஞ்சு உருகு

கின்றது. கண்களில் நீர் நிறைகிறது, ஏக்கம் பிறக்கிறது. தமிழகம் முழுதும் பரந்த-பரவிய ஜீவாவின் புகழ் மிக்க பண்பு கூற்றுவனின் செவிக்குக் கேட்டு அவரோடு பழக வேண்டும் என்ற பொங்கியெழும் பேராசையால்தான் அவரைக் கொண்டு சென்றானோ என்னவோ? கூற்றுவன் அவரை நம்மிடமிருந்து பிரித்தாலும் அவர் நம்மிடையே விட்டுச்சென்ற கொள்கைகளைத் தொடர்ந்து செய்து நிறைவேற்றுவதன் மூலம் அவரை எண்ணத்தால் உணர்வால் என்றென்றும் நினைத்துக் கொண்டிருக்க முடியும். ஆம். அந்த முயற்சியில் நாம் ஈடுபடுவோமாக!

# 39. *இனிய பண்பினர்

"புரவலன் போலும் தோற்றம் உரல் கொள இரவன் மாக்களின் பணிமொழி பயிற்றி" என்பது இலக்கியம். புரவலன் போன்ற தோற்றம். பீடுநடை, எனினும் மற்றவர்களிடத்தில் பழகும் பொழுது இனிய எளிய அடக்கமான் பண்பு. இது வாழ்க்கையில் வெற்றி பெறுதற்குரிய அடிப்படைச் சாதனம். இந்த இலக்கிய நெறியில் நின்று வாழ்ந்தோர் உண்டோ இல்லையோ, நண்பர் ஜீவா அவர்கள் இந்த நெறி நின்று வாழ்ந்தவர். மனித சமுதாயம், கோடானு கோடி மக்களால் ஆய கூட்டமேயாகும். பல்வேறுபட்ட உணர்வுடையவர்கள் கருத்துடையவர்கள், சித்தாந்தமுடையவர்கள், மக்கட் சமுதாயத்தில் இருப்பார்கள். இருப்பது இயற்கை. வேற்றுமை உலகத்தியற்கை. வேற்றுமைகளை உள்ளடக்கி, விழுமிய ஒருமைப்பாட்டினை உருவாக்கி வளர்த்துப் போற்றுதல் மனிதனின் கடமை. இக்கடமையை நிறைவேற்றும் முயற்சியில்தான் மனிதன் பூரணத்துவம் பெறுகிறான். 'எனக்கும் அவருக்கும் வேற்றுமையுண்டு; என்

* பொங்கல் பரிசு

கொள்கைக்கும் அவருக்கும் வேறுபாடுண்டு' என்று கதறி, கருத்து வேறுபாட்டை காழ்ப்பு வழிப்பட்ட பகைமைச் சேற்றினை உருவாக்கி அச்சேற்றிலே விழுந்து புரண்டு காலப்போக்கில் கருத்தையே மறந்து கலகக் களத்தில் மடியும் எண்ணற்ற பேர்களைக் காண்கிறோம். இயற்கை நியதியின்படி வேற்றுமையின் பரிணாம வளர்ச்சியும் பயனும் ஒருமைப்பாட்டைப் பெறுதலும் இன்பந் தருதலுமே யாகும். உலகின் திசையனைத்திலும், தோன்றிய தத்துவங்கள், சித்தாந்தங்கள், இலக்கியங்கள் ஆகியவைகளை ஆராப் பசியோடு கற்றுத் தெளிந்தவர் நண்பர் ஜீவா. அவர் ஒரு சிறந்த கம்யூனிஸ்ட். கம்யூனிஸ்ட் சித்தாந்தத்தில் அவருக் கிருந்த பற்று, அளப்பரியது எனினும் அவர் தன்னுடைய வாழ்க்கையினை கம்யூனிஸ்ட் கட்சி என்ற சுவருக்குள்ளேயே ஒடுக்கி அடக்கி விடவில்லை. எல்லாக் கட்சி அன்பர் களோடும் பழகினார். எல்லாக்கட்சி மேடைகளிலும் பேசினார், சமய விழாக்களிலும் கூட அவர் கலந்து கொண்டு பேசினார். அப்பரடிகளின் தேவாரத்தையும், கம்பனின் இராமகாதையையும், வடலூர் வள்ளலாரின் திரு அருட்பாவையும் பற்றி அவர் பேசும்பொழுது, இலக்கியச் சுவைததும்பும். உணர்விற் சிறந்த உருக்கத்துடன் பேசுவார். அதே காலத்தில் இலாவகமாகத் தன்னுடைய வாழ்க்கைச் சித்தாந்தமாக இருக்கின்ற பொதுவுடமைச் சித்தாந்தத்தோடு இவர்களின் கருத்துக்களை இணைத்துச் சேர்த்து மக்கள் முன்வைக்கின்ற அழகு அலாதியானது.

ஜீவா அவர்களின் வாழ்க்கை இனவழிப்பட்ட சுய மரியாதையில் தொடங்கி, தேசீயத்தில் தங்கி, பொதுமையில் கலந்திருக்கிறது. அவர் நூற்றுக் கணக்கான? மேடைகளில் சொன்னார், 'மனிதன் வளர்ந்து கொண்டிருக்கிறான். அவன் தனது பூரணத்துவத்தை நோக்கி நடைபயிலுவதே வாழ்க்கை முறை' என்றெல்லாம் ஜீவா அளவில், மண்ணுலக வாழ்க்கை யிலேயே பூரணத்துவத்தைப் பெற்றிருந்தார். அவர் மேற்

கொண்ட பொது வாழ்வில், உள்ளத் துறவோடு வாழ்ந்தார். பொன்னையும் பொருளையும் சேர்த்தாரில்லை. கட்சியைச் சார்ந்து நின்றார். 'ஜன சக்தி'யைப் போற்றிப் பரவினார். தன் சக்தியை எல்லாம் ஜன சக்தியின் வளர்ச்சிக்கும் வாழ்வுக்குமே அர்ப்பணித்தார். இதைவிடப் பூரணத்துவம் எங்கே இருக்கிறது? நம்மோடு பழகியதனால், வழக்கம்போல ஜீவாவாகப் பார்த்தோம். ஆனாலும், அவர் ஒரு மார்க்சீய மெஞ்ஞானி-வாழ்க அவர்புகழ்! வளர்க அவர் தொடங்கிய தொண்டு!

# 40. *நீங்கா நினைவு

ஒளிவிளக்கு அணைந்துவிட்டது. இருள் சூழ்ந்து கவிந்து கொண்டிருக்கிறது. தந்தை பெரியார் கூறியது போல, "நடவாதது நடக்கக் கூடாதது நடந்துவிட்டது" "கணவனை இழந்தோர்க்குக் காட்டுவதில்"லென இளங்கோ அடிகள் கூறினார். அதே அடிகள் இன்று அண்ணாவை இழந்து அல்லலுறும் தமிழினத்திற்கும் பொருந்தும். அறிஞர் அண்ணா சிறந்தவர்; பிறவிச் சிந்தனையாளர்; அதே பொழுதில் கனிந்த அன்பினர்; தெள்ளுதமிழ் நெஞ்சினர்; தேன் தமிழ் நாவினர்; பீடு சேர் நடையினர்; பெருமைசேர் மாண்பினர்; எழுத்துலகின் ஏந்தல்; நானிலம் போற்றும் நாவலர்; கண்ணியத்தின் வடிவினர்; தமிழ்த்தாயின் தவப் புதல்வர்; தமிழினத்தின் தானைத் தலைவர்; தன்மானமும்-இனமானமும் காத்த நயத்தக்க நாகரிகப் பண்பினர்; அன்னை தமிழை அரியணை ஏற்றிய தாளாளர்; தமிழ்நாடு பெற்றுத் தந்த தன்னேரில்லாத் தலைவர்; தாயிற் சிறந்த கனிவுடையவர்; தடந்தோளர்-இந்தியை இன்பத் தமிழகத் திற்கு அப்பால் நிறுத்திவைத்த தடந்தோளர்; பெரியோரை

* பொங்கல் பரிசு
கு. XIII. 15.

வியந்தும்-சிறியோரை இகழ்ந்தும் அறியா இயல்பினர். காஞ்சியில் தோன்றி காசினி முழுதும் புகழ் விளங்க நின்ற செம்மல் நமது அண்ணா. நமது உயிர்மூச்சு. இதயத்தின் எழில்நாதம்-நெஞ்சகத்தின் ஒளிவிளக்கு அணைந்துவிட்டது. தமிழன்னையின் கண்களில் கண்ணீர் ஆறாகப் பெருகுகிறது. அன்னை பாரதம் அவலம் பிடித்து நிற்கிறது. அண்ணாவின் அரவணைப்பில் வளர்ந்த ஆயிரம் ஆயிரம் தம்பிகள் அழுது அரற்றுகின்றனர். நிலவை இழந்த விண்ணகமெனத் தமிழகம் விளங்குகிறது. அவர் தம் நினைவு நீங்காத நினைவு.

நேற்றுவரையில் நம்முடன் வாழ்ந்த தமிழக முதல்வர் அறிஞர் அண்ணா அவர்கள் நம்மை விட்டுப் பிரிந்து விட்டார். அவரது பிரிவு பொதுவாக இந்தியநாட்டுக்கும் - சிறப்பாக தமிழ் நாட்டிற்கும் ஈடு செய்யமுடியா இழப்பாகும். அறிஞர் அண்ணாதுரை தலைவராகப் பிறந்தவரல்லர். வாழ்நாள் முழுவதும் அடி அடியாகப் போராடியே முன்னுக்கு வந்தவர். அவர் ஆள்வினையின் சின்னமாகத் திகழ்ந்தார். தெள்ளு தமிழ் நெஞ்சத்தினராக-இனிய சொற்கள் பயிலும் ஏந்தலாக வாழ்நாள் முழுவதும் வாழ்ந்தார். கொடிய புறக்காற்று வீசும் அரசியலில் வாழ்ந்தாலும் கோபம் என்பது இன்னதென்றறியாமலே வாழ்ந்தார். அவருக்கு மன வருத்தங்கள் வருவதுண்டு. பேசாமல் மௌனம் சாதிப்பதே அவரின் அருமைத் தம்பிகளுக்கு அவர் இட்ட தண்டனை.

தமிழ் இலக்கியத் துறையில் இவர் ஒரு காலகட்டமாகத் திகழ்ந்தார். வாழ்க்கைக்கு ஒவ்வாப் பழமைகளைச் சித்தரித்து விலக்குவதிலும், புதுமைச் சிந்தனைகளைச் சேர்ப்பதிலும் அவர் படைத்த கதைகள் கவனத்திற்குரியன. பார்வதி பீ.ஏ. ஓர் அரிய படைப்பு. எழுத்தாளராக மட்டுமன்றி இனிய நாவலராகவும் திகழ்ந்தார் 'கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கோளாரும் வேட்ப மொழியும் சொல்' இந்த நூற்றாண்டில் இவருடைய தனியுரிமையாக இருந்தது. அடுக்கிய மொழித் தொடர், உரிய பொருள் விளக்கும் உவமை நலன்,

பொருந்தாக் கருத்துக்களை மனம்நோகா வண்ணம் நயம்படக் கேலி செய்யும் நகைச்சுவை-இவர் தம் பேச்சின் சிறப்பியல்புகள். உரத்த குரலில் உறுதியான கொள்கை விளக்கம், ஆயினும் குழைந்த நெஞ்சு. பரிவு, பாசம் ஆகிய சொற்கள் இவர்தம் அரசியல் உலகத்தின் நாடி நரம்புகள். கட்டுப்பாட்டில் வளர்த்த கட்சிகள் உண்டு. முன்னை மூலதனத்தால் வளர்ந்த கட்சிகள் உண்டு. ஆனால் இவர்தம் சுற்றுவட்டமோ 'அண்ணா' 'தம்பி' என்ற பாசத்திலேயே வளர்ந்தது. இவரே திராவிட முன்னேற்றக் கழகத்தைத் தோற்றுவித்த தந்தை. இவரே அதை வளர்த்தவர். பதினைந்து ஆண்டுக்குள்ளாக ஒரு கட்சி தோன்றி மக்களிடை வளர்ந்து நாடாளும் கட்சியாக இடம் பெற்றது அரசியல் வரலாற்றி லேயே ஒரு சாதனை. வாழ்நாள் முழுவதும் சாதாரண மக்களுக்காகவே பரிந்து பேசினார்; எழுதினார்; போராடி னார். தீண்டாமை ஒழிப்பும் சாதிகளற்ற ஓரின அமைப்பும் இவர்தம் இலட்சியமாக இருந்தன. இந்த சமுதாயத்தைக் காண இலக்கிய உலகத்தில் நெறிகண்ட இவரே அரசியல் சட்ட ரீதியாகவும் வழிவகை கண்டார். அரசியல் என்பது கரடுமுரடானது என்ற எண்ணம் மேலோங்கி வருகிற கால கட்டத்தில் அகனமர்ந்தமைந்த இவர் தமிழகத்தின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றார். மக்களாட்சி மரபு சிறக்க எதிர்க் கட்சித் தலைவர்களையும் வீடுதேடிச் சென்று ஆதரவு கேட்டபண்பு போற்றுதற்குரியதாகும். சட்டசபையில் யாருடைய மனமும் நோகாமல் விடைகள் அளித்த பண்பு பாராட்டத்தக்கது. காலத்தின் வளர்ச்சியில் அவசியம் என்று கருதியபொழுது தற்பெருமை கருதி வீண் பிடிவாதமில்லாமல் நாட்டின் நலங் கருதி பழைய கோட்பாடுகளைவிட்டுப் புதிய கோட்பாடு களை ஏற்று முன்னணியில் நின்றார் மூதறிஞர் அண்ணா துரை.

சீன ஆக்கிரமிப்பின்பொழுதும் பாகிஸ்தான் படை யெடுப்பின்பொழுதும் அவர் காட்டிய பரந்த மனப்பான்மை

பாரதத்தின் தவப்புதல்வனாக்கியது. இந்தியாவிலேயே நடுவண் அரசிற்கும் மாநில அரசிற்கும் ஆளுங்கட்சிகள் மாறுபட்ட நிலையில் ஒரு இணைந்த ஒருமைப்பாட்டை உருவாக்கிய சாதனை பாராட்டத்தக்கது. இந்தியப் பேரரசின் ஒப்புதலுடன் இந்திய நாட்டின் பாராளுமன்றத்தின் முழு நிறைவு இசைவுடன் 'தமிழ்நாடு' என்ற பெயர் நமது மாநிலத்திற்குச் சூட்டப்பெற்றது. பெயர் மாற்றத்தைவிட அதன் பின்னணியில் இருக்கின்ற அரசியல் இணைந்த உணர்வுச் சூழல் போற்றுதற்குரியது.

நிதானம் தவறாத ஓர் அரசியல் மேதை அவர். கண்ணியம், கடமை, கட்டுப்பாடு என்று ஆயுட்கால மெல்லாம் எடுத்துச் சொன்னார். வாழ்ந்தும் காட்டினார். அவர் யாரொருவரையும் கண்ணியப்படுத்தத் தவறியதில்லை. மதிப்பும் மரியாதையும் வழங்கத் தவறியதில்லை. யாரொரு வருக்கும் நெஞ்சினாலும் தீங்கு செய்யாமல் வாழ்ந்தார். கடமையுணர்வினாலேயே மருத்துவர்கள் ஆணையை மீறிக் கடமைகளை மேற்கொண்டு காலனுக்கு ஆளானார். வளமனை படைத்துத் தந்தும், வறியோர் வாழும் நாட்டில் வளமனை ஏன்? என்று வாழ மறுத்து வருத்தத்திற்குரிய ரானார். நம்மையும் வருத்தத்திற்கு ஆளாக்கினார். என்ன செய்வது? அவர் ஆவி முழுவதும் கடமை வழிப்பட்டது. அவர் ஆணையிடுகிற கடமை, கண்ணியம், கட்டுப் பாட்டினைக் காப்பாற்றுங்கள். அவ்வழியில் நாம் நடந்து ஒழுகி அவர் விட்டுச் சென்றிருக்கிற பணிகளைத் தொடர்ந்து செய்வதே அவருக்குரிய நன்றிக் கடன். அவர் கடவுள் நம்பிக்கை யுடையவராக இருந்தாரா இல்லையா என்பதல்ல கேள்வி. ஆனால் ஒரு சிறந்த அருளாளராக வாழ்ந்தார் என்பதை நாம் எண்ணிப் பார்த்து அவர்தம் பணியினைத் தொடர்ந்து செய்வோமாக! அவர்தம் ஆள்காட்டிவிரல் சுட்டிக் காட்டிய வழியே நமது வழி. அண்ணா அவர்களின் ஆன்மா சாந்தியடைவதாக.

அண்ணாவின் புகழொளியின் துணைகொண்டு அவர் விட்டுச் சென்ற கடமைகளை மேற்கொண்டு அவர் வழியில் நடைபயில உறுதி கொள்வோமாக!

# 41. *பல நூறு பிறைகண்டு வாழ்க!

"நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
மண்மாண் புனைபாவை யற்று" –குறள் 407

என்பது திருக்குறள். நுண்மாண் நுழைபுலம் உடையார் மிகமிகச் சிலரே. கழகப்புலவர் ஐயா அவர்கள் நுண்மாண் நுழைபுலம் உடையவர்கள். கடலனைய தமிழிலக்கியங்களை நுணுக்கமாகக் கற்றிருக்கிறார்கள். ஆயிரக்கணக்கான பாடல்கள் மனப்பாடம். இந்தவகையில் ஐயா அவர்களுக்கு அவர்களே நிகர்.

நச்சினார்க்கினியர், சேனாவரையர், மாதவச் சிவஞான முனிவர் ஆகிய உரையாசிரியப் பெருமக்கள் காலத்தில் நாம் வாழும் பேறுபெற்றிலோம். ஆனால் உரைவளம் பல படைத்துத்தரும் ஐயா அவர்கள் காலத்தில் வாழுகிறோம் என்று பெருமைகொள்ள முடிகிறது. சிவஞானபோதம், திருவாசகம், தமிழாகமம் ஆகிய திருமந்திரம் ஆகிய நூல்களுக்கு ஐயா அவர்கள் எழுதிய உரைகள் நுண்பெருக்கக் கண்ணாடியே போல நூலாசிரியர் கருத்துக்களை அரிதில் விளக்கிக் கற்போருக்குத் தெளிவுண்டாக்கும் வண்ணம் அமைந்துள்ளன.

கலப்படம் அருவெறுக்கத் தக்கது. நாடு முழுதும் மக்கள் கலப்படத்தை வெறுக்கவே செய்கிறார்கள். ஆனால் மொழி, தத்துவக் கலப்படத்தை யாரும் வன்மையாகக்

* "தமிழகம்" இதழ் 1–3–70

கண்டிப்பதில்லை. மறை மலையடிகள் காலம் தொட்டுத் தொடர்ந்து மறுத்தும் தேனினும் இனிய தென் தமிழில் மொழிக்கலப்படம் செய்வதைப் பலர் இன்னும் தவிர்க்க வில்லை; மாறாக, தனித் தமிழ் உணர்வைப் பலர் இன்னும் தகாத பாவ உணர்ச்சியாகவே கருதுகிறார்கள். ஐயா அவர்கள் தனித் தமிழுணர்வில் தலை சிறந்தவர்கள். ஐயா அவர்கள் எழுதிய உரை நூல்கள், கட்டுரைகள் ஆகிய அனைத்திலும் தனித்தமிழ்ச் சொற்களையே கையாண்டிருக் கிறார்கள். தத்து இயல்மரபுச் சொற்கள் பெரும்பாலும் வடமொழிச் சொற்களாகவே வந்து, தமிழில் சொற்கள் மறைந்தே போயின. தத்துவத் துறையில் தமிழ் வழக்குச் சொற்களைத் தமது பேச்சிலும் எழுத்திலும் கையாண்டு வழக்கத்திற்குக் கொண்டு வந்த தனித்தமிழ்க் காவலராகத் திகழ்கிறார்கள்.

தனித்தமிழ் மட்டுமல்ல, தமிழ் மரபுகளும் காப்பாற்றப் படவேண்டும்; தமிழ் நெறி காப்பாற்றப்படவேண்டும். "அசைவில் செழுந்தமிழ் வழக்கு அயல் வழக்கை வென்றேற" என்ற சேக்கிழாரடிகள் திருவாக்கில் ஐயா அவர்களுக்கு அசைவில் ஈடுபாடு உண்டு, ஐயா அவர்களின் சிந்தனை. சொல் செயல், அனைத்தும் தமிழ்மரபு பற்றியனவாகவே அமையும், அயல் வழக்குகள் ஐயா அவர்களுக்கு அயலேயாம்.

ஐயா அவர்கள் புறத்தோற்றத்தாலும், புலமையினாலும் சங்க காலத்துச் சான்றோர்களை நினைவூட்டிக் கொண்டிருக் கிறார்கள். எளிய தோற்றம்! ஏற்றமிக்கப் புலமை! சிவ வேடம் தாங்கிய திருக்கோலம்! சிந்தையில் சிவம் மணக்கும் பொலிவு! புலனழுக்கற்ற தன்மை! அருளார்ந்த கவர்ச்சி! தாயிற் சிறந்த பரிவு! அனைத்தும் ஐயா அவர்கள்! உரத்த குரல் ஒரு பொழுதும் எழுப்பாத உயரிய நா, புலமையாலும் செந்நா! உயர் செம்மைப் பண்பாலும் செந்நா! செல்வம் என்பது சிந்தையின் நிறைவே என்ற இலக்கணத்திற்கு

*இலக்கியம் ஐயா. ஆரவாரம், ஐயா அறியாத ஒன்று. பழக்கத் திற்கினிய நெஞ்சு! பண்புக்கோர் உறைவிடம்! செந்தமிழாயும் திறத்தினோர்க்கு ஓர் ஊன்றுகோல்! ஐயத்தைத் தெளிவிக்கும் அகன்ற புலமை! கழிவிரக்கம் ததும்பும் பேருள்ளம்! இன்னும் எவ்வளவோ பாராட்டலாம். சொற்களில்லை! பைந்தமிழ்ப் பயின்ற நம் நெஞ்சு, சுவைத்தது இரண்டு. ஒன்று தமிழ்: பிறிதொன்று ஐயா அவர்களின் உழுவலன்பு. இன்னும் பல நூறு பிறைகள் கண்டு இவர் வாழ்க! சாகாத தமிழும், இறப்பில் இறையும் இவர்தம் விழுமிய புலனுகர் திணை களாகும். ஆதலின் இறப்பு, இவரை அஞ்சுவதாக! சிவநெறியும் சீலமும் செந்தமிழின் தூய்மையும் நின்று நிலவ இவர் வாழ்க! நந்தம் தமிழுணர்வு தழைத்தினிது வாழ, வாழ்வாராக!*

# 2

# மொழி

## 42. *மானிடமும் மொழியும்

உலகியலை எண்ணிப் பார்க்கையில் எல்லாமே முதன்மையுடையனவாகவே தெரியும். அதாவது நாடு, மொழி, சமயம், கலை, பொருள் ஆகியன. இவையெல்லா வற்றுக்கும் அடிப்படையாகவும் ஆதாரமாகவும் அமையும், நாடு. மிகமிக இன்றியமையாதது, எல்லா விழுமிய பற்றுக்களிலும் மிகவும் விழுப்பம் உடையது நாட்டுப் பற்றேயாம். விழுப்பம் தரும் நாட்டுப்பற்றிலும் மிக்குயர்ந்தது நாட்டு எல்லைகளைக் கடந்த உலகந்தழீ இய விருப்பம். நாட்டுப்பற்றோடு இணைந்தது, பிணைந்தது. நாட்டில் வாழும் மக்களிடத்தே நிலவ வேண்டிய ஒருமைப்பாடு.

ஒரு நாட்டின் மக்கள் ஒருமைப்பாடுடையவர்களா யில்லாது போனால் அந்த நாடு சிந்தையில் ஒன்றாக விளங்கும் நாடாக உருப்பெறுதல் அரிது. நாட்டு மக்களிடத்தில் நல்ல வண்ணம் கலந்து பேசிக் கருத்துக்களைப் பரிமாறிக்

* வாழ்க்கை நலம்

கொள்ளும்; பழக்கம் மூலம்தான் நம்பிக்கை வளரும்; நல்லெண்ணம் வளரும்; நட்பு கால்கொள்ளும். உறவு தழைக்கும்; ஒருமைப்பாடு நிலவும். இந்த இனிய ஒப்புரவுப் பண்பாட்டுக்குத் துணையாகக் கற்கும் மொழிகள் அமைய வேண்டும். எந்த மொழி ஒருவரைப் பலருக்கு உறவாக்கு கிறதோ அந்த மொழியை முயன்று கற்க வேண்டும். ஒன்றுக்கும் மேற்பட்ட பல மொழிகளைக் கற்பது மானிடத்திற்கு நல்லது.

இந்தியா ஒரு பெரிய நாடு. பல மொழிகள் பேசும் மக்கள் வாழும் நாடு. நமது நாட்டிற்கு உணர்வு பூர்வமான ஒருமைப்பாடு தேவை. இந்த ஒருமைப்பாட்டை, அவாவி வாழும் ஒழுக்க உணர்வின் வாயிலாகத்தான் உருவாக்க முடியும்; வளர்க்க முடியும். இதற்கு நாம் கற்கும் மொழிகள் துணைசெய்தல் நல்லது.

ஒரு மனிதன் எந்த மொழியைக் கற்பது என்ற வினா எழுமானால் ஐயத்திற்கிடமின்றிக் கிடைக்கக் கூடிய முதல் விடை அவனுடைய தாய்மொழி என்பதே. தாய் மொழியை ஆரம்பக் கல்வியிலிருந்து பல்கலைக் கழகம் ஈறாக ஆய்வு நிலயில் கூடப் பயிற்று மொழியாகவும் எழுதும் மொழி யாகவும் கற்கும் மொழியாகவும் இருக்க வேண்டும். இது மனிதவியல் விஞ்ஞானத்தின் தெளிந்த முடிவு. இந்த வகையில் தமிழகம் பின்தங்கியிருக்கிறது என்பதை நாம் உணர்ந்து, தமிழை துறைதோறும் பயிற்று மொழியாகக் கொணடு வர வேண்டும்.

அடுத்து, பிற மொழிகளைக் கற்பது என்பது நல்லது; வரவேற்கத் தக்கது. இங்ஙனம் கற்கும் பல மொழிகள் ஆய்வுக்கும் உறவுக்கும் பயன்படும். ஆனால் எந்த ஒரு மொழியையும் மக்கள் விரும்பிக் கற்குமாறு செய்வதே நல்ல மரபு. தமிழ் மக்கள் இந்த ஒப்புரவைக் காணத்தக்க வகையில் இந்திய மொழிகளையும் உலக உறவுகளையும் வளர்த்துக்

கொள்ளும் வகையில் உலக மொழிகளையும் கற்க முன்வர வேண்டும். விரும்பிக் கற்பது என்பது எதிரதாகக் காத்துக் கொள்ளும் சமுதாய விழிப்புணர்வுடையோருக்கே உரியது. சாதாரண மக்கள் எளிதில் விழிப்படைய மாட்டார்கள். அவர்களை விருப்பமுறச் செய்வதும் அதற்குரிய நயத்தக்க மரபுகளைக் கடைப்பிடிப்பதும் தவிர்க்க முடியாதவை. இந்தியாவின் முதல் தேவை ஒருமைப்பாடேயாம். இரண்டாவது இடத்திலேயே மொழி இருக்க வேண்டும். இந்த விழுமிய கோட்பாட்டை நினைவிற் கொள்ள வேண்டும்.

## 43. *தாய்மொழி

மக்கள் இனத்தின் அறிவு வளர்ச்சிக்கு, அவ்வினத்தின் தாய்மொழி வளர வேண்டும். அத் தாய்மொழியில் அந்த மக்கள் நல்ல அறிவைப் பெற வேண்டும். பாவேந்தன் இத்துறையில் அதிக அக்கறை காட்டினான். "தமிழ்நாட்டின் தெருக்களிலே தமிழ் இல்லையே!" என்று கவலைப்பட்டான்! தமிழ் நாட்டு மக்கள் நாலுபேர் கூடினால் சமுதாய இயலை, அறிவியலை பொருளியலைப் பற்றிச் 'சள சள' எனப் பேசிட வேண்டும் என்று அவன் எண்ணினான். அந்த எண்ணத்தை நிறைவேற்றிட நாம் அனைவரும் அரசியற் கட்சி வேறு பாடின்றி முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும்.

இன்று மக்களிடத்தில் ஆழமான அறிவு நாட்ட மில்லை. கவர்ச்சிகளுக்கு ஆளாக்கப்பட்டிருக்கின்றனர். திரைப்படக் கொட்டகைகளிடத்திலேயே நாட்டை ஒப்படைப்புச் செய்து விடுவோம்போல இருக்கிறது. அன்பு கூர்ந்து நல்ல தமிழ்நெறி நாட்டில் பரவ உரிய முயற்சிகளை மேற்கொள்ளுங்கள். தமிழ் வளர்ந்தால் தமிழன் வாழ்வான், தமிழினம் நிலைத்து வாழும், அதனாலன்றோ.

* மனம் ஒரு மாளிகை

*'தமிழுக்கும் அமுதென்று பேர்!—அந்தத்*
*தமிழ் இன்பத் தமிழ்எங்கள் உயிருக்குநேர்!*
*தமிழுக்கு நிலவென்று பேர்!—இன்பத்*
*தமிழ்எங்கள் சமுகத்தின் விளைவுக்குநீர்!"*

என்று பாடினான்.

இந்திய நாட்டில் குறிப்பாகத் தமிழகத்தில் நிலவும் சாதி வேற்றுமை கொடுமைத் தன்மையுடையது. இந்தச் சாதி வேற்றுமையை ஒழிக்க நாம் தொடர்ந்து போராடினாலும் நம்மால் முடியாமல் தோல்வியே அடைந்துள்ளோம். இன்றைய நிலையில் சாதிமுறை, சாதி வேற்றுமை ஒழிக்கப் படக் கூடியவைதானா? என்பதே கேள்விக்குறியாகிவிட்டது. இதற்கு விடை நம்முடைய நாடாளும் அமைச்சர்கள்தான் சொல்ல வேண்டும். சாதி வேற்றுமையை ஒழிக்கும் பணியில் நாம் வெற்றி பெற்றாலும் சரி, தோல்வியே கண்டாலும் சரி அந்த வகையில் தொடர்ந்து முயற்சி செய்வது நம் ஒவ்வொருவருடைய கடமை.

வேறு எங்கு சாதி வேற்றுமை நிலவினாலும் சமுதா யத்தின் பொது ஒருமைப்பாட்டு நிறுவனமாக விளங்கும் திருக்கோயிலில் பிறப்பின் காரணமாக அமைந்துள்ள சாதி வேற்றுமை நிலவுதல் கூடாது. பாவேந்தன் திருக்கோயிலில் நிலவும் சாதி வேற்றுமையை சாதுரியமாகச் சந்திக்கின்றான். "திருக்கோயிலுக்குள் எழுந்தருளியிருக்கும் கடவுள் ஆற்ற லுடையவன். அந்தக் கடவுளைப் பறையர் குலத்து 'அமாவாசை' தீண்டுகின்றான். அமாவாசை தீண்டுவதனால் கடவுளின் ஆற்றல் குறைந்து விடுகின்றதென்றால் யாருடைய ஆற்றல் பெரிது? கடவுளின் ஆற்றலா! அமாவாசையின் ஆற்றலா?"-இது பாவேந்தன் கேள்வி. பாவேந்தன் புதிதாகக் கேட்கவில்லை. அவனுக்கு முன்னோடியாக வாழ்ந்த வள்ளற் பெருமானும் கேட்டார்.

'ஆடும் கரியும் அணிலும் குரங்கும் அன்பு
தேடும் சிலம்பியோடு சிற்றெறும்பு–நீடுகின்ற
பாம்பும் சிவார்ச்சனைதான் பண்ணிய தென்றால்பூசை
ஓம்புவதற்கு யார்தான் உவவாதார்?"

என்று வள்ளற் பெருமான் பாடுகிறார். நாம் அனைவரும் இந்த நியாயமான பாவேந்தனின் திட்டத்தை நடைமுறைப் படுத்த வேண்டும்.

பாவேந்தன் அடுத்து முழங்குகின்றான்., ஒடப்பரை ஒப்பப்பராக்க வேண்டும் என்கின்றான். **எல்லோரும் எல்லா வற்றையும் பெற வேண்டும்.** இது பாவேந்தனின் இலட்சியக் கனவு. இந்தக் கனவை நனவாக்க நம்முடைய அரசும் முயற்சி செய்கிறது. ஏழைகளின் சிரிப்பில் இறைவனைக் காண்பது நமது அரசின் நெறிமுறை, நம்முடைய அமைச்சர்கள் இறை வனைக் காண்கிறார்கள். ஆனால், காணும் முறை வேறு, காணும் இடம் வேறு, ஆனால் காணப்படுவது இறை வனையே என்பதை நாம் நல்லவர்களுக்கு நினைவூட்டக் கடமைப்பட்டிருக்கிறோம்.

ஏழைகளின் சிரிப்பில் இறைவனைக் காண்பது உயர்ந்த சமய நெறியே! நமது இறைவன் கூடத் திருக்கோயிலில் உண்ணாமலிருப்பது. உலகுயிர் அனைத்தும் உண்ணும் வரையில் தான் உண்ணக் கூடாது என்பதாலேயேயாகும். பாவேந்தனும் 'உலகுண்ண உண்!' என்றான். இந்த நாட்டு மக்கள் அனைவரும் வாழத் திட்டங்களைத் தந்த பாவேந்தனின் திட்டங்களைச் செயலாற்றி மகிழ்வோம்.

# 44. *புதைமணலில் சிக்கிய யானை!

**த**மிழ்நாடு வரலாற்று பழைமை உடைய நாடு. கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன்தோன்றிய மூத்த

* சிந்தனைச் சோலை

குடியினர் தமிழர். தமிழ் நாட்டின், தொன்மைக்குத் தமிழக வரலாறே சான்றாகும். உலக மொழிகளில் தமிழ் ஒரு சிறந்த செவ்வியல் மொழி; இலக்கிய வளமும் இலக்கண வரம்பும் பெற்று விளங்கும் பெருமொழி. ஒரு மொழி, இலக்கண வரம்பைப் பெறவே பல நூற்றாண்டுகள் பிடிக்கும். அது மட்டுமல்ல. தமிழைப்போல் இனிமையும் எளிமையும் படைத்த மொழி உலகில் வேறு இல்லையென்றே கூறலாம்.

எந்த ஒரு மொழிக்கும் இனிமையும் எளிமையும் எளிதில் வாரா. ஆயிரக்கணக்கான ஆண்டுகள் மக்கள் மத்தியில் பேசப்பட்டதன் காரணமாக ஒரு மொழி இனிமை பெறுகிறது; எளிமை பெறுகிறது. உலகின் எல்லா மொழி களிலும் மொழிக்கு இலக்கணம் செய்யப் பெற்றுள்ளது. ஆனாலும் தமிழுக்கு வாய்த்திருப்பதைப் போல் இலக்கண வரம்பு மற்ற மொழிகளுக்கு வாய்க்கவில்லை.

தமிழ் மக்கள் தாங்கள் பேசிய மொழிக்கு மட்டுமன்றித் தங்கள் வாழ்க்கைக்கும் இலக்கணம் செய்துள்ளனர். இன்றைக்கு மூவாயிரம் ஆண்டுகளுக்கு முந்தியது தொல் காப்பியம். தொல்காப்பியம் அகத்திணை என்று வீட்டு வாழ்வுக்கும், புறத்திணை என்று புறத்தே இயங்கும் வாழ்விய லுக்கும், இலக்கணம் கண்டு நெறிப்பட வாழ்தலை அறிவுறுத் தியது. மற்றும் இசை, கட்டடக் கலை முதலியவற்றிலும், காலத்தால் முத்து முகிழ்த்த பெரிய வரலாறு தமிழினத்திற்கு உண்டு. மெய்ப்பொருளியலிலும் தமிழே உலகத்திற்குத் தாயாக விளங்கியது; தமிழகமே சிறந்து விளங்கியது. இன்ன பிற சிறப்புகளெல்லாம் பெற்று விளங்கிய தமிழ்மொழி இன்று வளரவில்லை. வளர இயலவில்லை. ஆரியத்தாலும் ஆங்கிலத் தாலும் அன்னை மொழியாம் தமிழ் நெருக்குண்டு பொலி விழந்து நிற்கின்றது. தமிழ் மக்களின் தமிழார்வம் புதை யானை வெளிவர முடியாது தவிப்பதைப் போலத் தத்தளிக் கிறது. மதப் புரோகிதர்கள், மதத் தலைவர்கள் ஆகியோர் மதச் சடங்குகளில் ஞானத் தமிழைப் புறக்கணிக்கிறார்கள்;

தீண்டாமையைப் பாராட்டுகிறார்கள். நீரையும் நெருப்பையும் வெற்றிகொண்ட வீறு தமிழ், ஆன்மீக ஞான அமுதை அள்ளி வழங்கிய தமிழ் புறக்கணிக்கப்படுகிறது.

இந்த நிலவுலகத்திற்கு 'ஞாலம்' என்று அறிவியற் பொருள் சார்ந்த சொல்லைக் கண்டது சொற்றமிழ். அணு இலக்கணம் கண்டு காட்டியது கன்னித்தமிழ். உயிர்களின் பரிணாம வளர்ச்சியைப் பாங்குடன் எடுத்துக் கூறியது தொல்காப்பியம் தந்த தமிழ். வலவன் ஏவா வானவூர்தியை, பழந்தமிழ் மூளை அறிந்திருந்தது. வானவியலறிவைத் தமிழகம் பெற்றிருந்தது. இன்ன பிற அறிவியல் கருத்துக்கள் தமிழில் இருந்தும், தமிழ், அறிவியல் மொழியாக வளர முடியவில்லை; தொழிலியல் நுட்பம் சார்ந்த மொழியாக வளர இயலவில்லை. காலந்தோறும் புதுமை நலன்கள் பெற்றுப் பொலிவுடன் வளர்க்கப் பெறாமையால் தமிழ். இளமைத் தன்மையை இழந்திருக்கிறது. தமிழர்கள் மூளைச் சோம்பலுக்கும் உடற் சோம்பலுக்கும் இலக்காகியுள்ளனர். ஆதலால் தமிழர் வளரவில்லை; தமிழும் வளரவில்லை. தமிழக வரலாற்றில் ஒரு தேக்கம். தமிழ் மக்கள் நிறைய கற்கிறார்கள்; பேசுகிறார்கள். ஆனால் அறிவு பெற மறுக்கிறார்கள். அறிவு என்ற ஆற்றல் மிக்க கருவியைத் தமிழ்மக்கள் பெறாமையால் அவர்களுடைய வாழ்க்கையில் வளர்ச்சி இல்லை; மாற்றங்கள் இல்லை. பசி, சங்ககாலப் பசிப்பிணி மருத்துவன், பண்ணன், காலந்தொட்டு இன்று வரை தமிழகத்தை உள் நின்று வருத்துகிறது; துன்புறுத்துகிறது. சங்க காலம் முதல் "யாவரும் கேளிர்" என்று தொடங்கி இன்று வரை சாதித் தீமைகளை எதிர்த்துப் போராடியும் சாதி ஒழிந்தபாடில்லை. சாதி ஒழியாதது மட்டுமல்ல. மேலும், மேலும் வளர்ந்து வருகின்றது. நான்காம் நூற்றாண்டில் தமிழினத்தைச் சீர்குலைக்க முயன்று சாதிகளை—சாதி வேற்றுமைகளை நுழைத்த தீய சக்திகள், இன்று தமிழ் மக்களின் அங்கீகாரத்துடன் உலாவருகின்றன. இழிவுக்கு

வெட்கப்படாத இழி ஜன்மங்களாகிவிட்டனர். எல்லா வற்றிற்கும காரணம் கடவுள் பெயரால் செய்யப் பெறும் கயமைகளேயாம். தமிழ் மக்கள் அறிவும் தெளிவும் இல்லாது எல்லாவற்றையும நம்பிவிடுகின்றனர். இந்த இழிநிலையி லிருந்து தமிழகத்தை மீட்கத் திருவள்ளுவர், அப்பரடிகள், சேக்கிழார், வள்ளலார் ஆகியோர் எடுத்துக்கொண்ட முயற்சிகள் போதிய பயனைத் தரவில்லை. மீண்டும் மீண்டும் தமிழகம் புதை மணலில் சிக்கிய யானை போலச் சீரழிகிறது.

தமிழ் மக்களே! உங்கள் தாய் மொழியாம் தமிழில் படிக்க எண்ணுங்கள்! தமிழிலேயே சிந்தனை செய்யுங்கள்! தமிழ் நெறியில் நின்று ஒழுகுங்கள்! ஒன்றே குலம்! ஒருவனே தேவன்!

# 45. *வாழ்க்கைக்குத் தமிழ் பயில்!

**வா**ழ்க்கை வாழ்வதற்கே! வாழ்க்கையை வளர்ப்பது – உருவாக்குவது எண்ணமே! எண்ணங்களுக்கு ஊற்றுக் கண் சிந்தனை. கற்ற நூலறிவும் சுற்றுப்புறங்களின் நிகழ்வுகளும் சிந்தனையில் தாக்கம் உண்டாக்கும் பொழுது அறிவு தலைப்படுகிறது. அந்த அறிவுக்குத் தாயகம் சிந்தனையே! சிந்தனையுடன் தொடர்பில்லாத கல்வி பயனற்றது! சிந்தனை யுடன் தோய்வுபெறாத கேள்வி பயனற்றது. பயனற்றது மட்டுமல்ல. பாதகங்களும் செய்யும்! சிந்தனையுடன் இசை யாத வாழ்க்கை. பாழ்! நாட்டின் அன்றாடச் சுற்றுப் புற இயக்கங்கள் சிந்தனையைத் தொடாவிடில் உயிர்ப்பு இல்லை; இயக்கம் இல்லை! ஏன்? சிந்தனை சார்ந்த கடவுள் நம்பிக்கை, வழிபாடு ஆகியனவே பயனுடையன. மற்றெல்லாம் மூடத்தனமானவையே!

* சிந்தனை மலர்கள்

சிந்தனை இயக்கத்திற்கு - செயல்பாட்டிற்குத் தாய் மொழியே துணை செய்யும்! கருவாகக் கிடக்கும் காலத்தி லேயே சிந்தனைப்புலன் இயங்கத் தொடங்கி விடுகிறது! பின், பிறந்து மொழிபயின்ற காலத்திலிருந்து சிந்தனைப்புலன் உடனிருக்கிறது. உற்ற துணையாய் அமைந்திருக்கிறது. கருநிலைக்காலம், மழலைப்பருவம் ஆகியவற்றில் தாயின் நடைமுறைகளும், குடும்பச் சூழ்நிலைகளும் சிந்தனையை இயக்குகின்றன. இந்தப் பருவ காலங்களில் சிந்தனைப்புலன் தனக்குரிய பற்றுக்கோட்டைத் தானாகத் தேடிக் கொள்வ தில்லை. தாயும் குடும்பச் சூழ்நிலையும் அமைத்துக் கொடுத்த பற்றுக் கோடுகளேயாம்! இளமையில் கல்விச் சாலையும், ஊரும் இந்தப் பொறுப்பை ஏற்கின்றன. இதுவரையில் ஒருவரின் வாழ்க்கையில் தாய்மொழியே ஆதிக்கம் செலுத்து கிறது. தாய்மொழி வாயிலாகவே சிந்தனைக்குக் களங்கள் கிடைக்கின்றன. ஆதலால் சிந்தனைக்குரிய மொழி, தாய் மொழியே! எங்குச் சிந்தனை வளமாக இருக்கிறதோ அங்கு அறிவு வளரும். அந்த அறிவு வாழ்க்கையை வளர்க்கும் நமக்குத் தாய்மொழி, தமிழ்! நமது தலைமுறை தமிழிலேயே பழகிவந்த தலைமுறை. நம்முடன் விளையாடிய தோழர்கள் தமிழிலேயே சிந்தித்தார்கள்; பேசினார்கள்; நம்முடைய ஊரின் வீதிகள் தோறும் தமிழிலேயே பேச்சு; கருத்துப் பரி மாற்றங்கள்! நாம் கல்வியைத் தொடங்குவது - கற்பது தமிழில்! ஆக, எங்கும் தமிழ்! நமது தாய்மொழி தமிழ்! தமிழே நமது சிந்தனைக்குரிய மொழி; கல்வி பயில்வதற்குரிய மொழி; அறிவு மொழி; வாழ்க்கை மொழி; வாழ்விக்கும் மொழி!

ஆதலால், தமிழ் பயிலுக! தமிழ் வழிப் பயிலுக! நாம் உண்மையில் சிந்திக்கின்றவர்களாக வேண்டும் எனில் தமிழ் வழிக் கற்பதே முறை. தமிழ் வழிப்பயிலும் பொழுது சிந்தனை விரிவடையும்; வினாக்கள் பலதோன்றும்; ஆய்வுகள் வளரும்; அறிவு விரிவடையும். இதுவே; வாழ்வாங்கு வாழும் நெறிமுறை.

கற்கும் கருத்துகள், சிந்தனைப் புலனில் தங்கி அறிவாக மாறி வளர்ந்து நமது வாழ்க்கையில் அமையாது போனால் கல்வியால் பயனில்லை; கேள்வியிலும் அப்படியே! நம்மைச் சுற்றியுள்ள உயிர்க்குலத்தை - உயிர்க்குலமல்லாதனவற்றை நாள்தோறும் ஆய்வு செய்தல் வேண்டும். இந்த ஆய்வுக்குத் தமிழ் வழிப் பயிலுதல் துணை செய்யும்; பொருளறிவும், பூத பௌதிக ஆய்வறிவும் செழித்து வளர்ந்தால்தான், வாழ்க்கை பொருள் பொதிந்ததாக அமையும். சிறந்த பொருளறிவு வாழ்க்கையை வளர்க்கும். எனைத்தானும் தமிழ் பயிலுக, தமிழ் வழிப் பயிலுக! சிந்தனையாளராகுக! அறிஞராகுக!

என்றும், தமிழ் பயிலுக! தமிழ் வளர்ந்த மொழி! பழுத்த மனத்தவர்கள் படைத்த பண்பாட்டிலக்கியங்கள் சிறந்த மொழி! அறநெறியில் மூத்த மொழி! பண்பாட்டில் வளர்ந்த மொழி! நயத்தக்க நாகரிகம் இதுவெனக் காட்டும் மொழி! வாழ்க்கைக்கு - இலக்கணம் கண்ட மொழி! சமன் செய்து சீர்தூக்கும் மொழி! வாழ்வாங்கு வாழ வழிகாட்டும் மொழி! தமிழே வாழ்வு! வாழ்வே தமிழ்! ஆதலால் தமிழ் பயிலுக! செழுந்தமிழ் வாழ்க்கையில் நின்று வாழ்க! தமிழே போல் வளர்க! தமிழே போல் நீதியொடு வாழ்க! தமிழே போல் தடையிலா ஞானத்தில் பொலிக! தமிழ் தழீஇய வாழ்வே வாழ்வு வளர்க! வாழ்க!

12.12.88

# 46. மொழி வழிச் சிந்தனைகள்

## 1. அறிவியலும் தமிழும்

இந்த நூற்றாண்டு விஞ்ஞான நூற்றாண்டு. விந்தை மிகு சாதனங்கள் பலப்பல நிகழும் காலம். விண்ணையும் வியன் மண்டலத்தையும் வலம்வந்து வாழும் காலம். உலகில் பல் மொழிகள் சிறப்பாக ஆங்கிலம், ஜெர்மன், உருசியா ஆகிய

மொழிகள் அறிவியல் துறையில் நாளும் வளர்ந்து வருகின்றன. பாரதியே,

> 'புத்தம் புதிய கலைகள்
> மெத்த வளருது மேற்கே"

என்கிறார். இங்ஙனம் பிற நாடுகளில் விஞ்ஞானம் விண்ணை முட்டி வளரும் போது, தமிழில் அறிவியலைச் சொல்லிக் கொடுக்கலாமா, கூடாதா? என்ற ஆராய்ச்சியில் சிலர் இறங்கியிருக்கின்ற நிலை இரங்கத் தக்கது. சிலர் தமிழில் அறிவியல் வராது. ஆங்கிலமே அறிவயலுக்குரியதென் கிறார்கள். இவர்களைப் பாரதி "பேதை" என்று சாடுகிறார்.

இன்னமொழியில்தான் அறிவியல் வரும், அல்லது வளரும் என்று ஏதேனும் விதி உண்டா? சாத்திரமுண்டா? அல்லது கடவுள்தான் அப்படிச் செய்திருக்கிறாரா? எம் மொழிக்கும் உரியது அறிவியல். மொழி வழிப்பட்ட மக்களின் சிந்தனை முயற்சி இவற்றை ஒட்டித்தானே மொழி வளர்கிறது. கலை வளர்கிறது, அறிவியல் வளர்கிறது. அவ்வாறு இருக்கத் தமிழில் அறிவியல் வாராதென்று தமிழ் மீது பழியைச் சுமத்து வானேன்? உண்மையைச் சொன்னால், மற்றமொழிகளை விட அறிவியலை முறையாகச் சொல்லத் தமிழில் முடியும். அறிவியல் பருப்பொருளைப் பற்றியதேயாம். தமிழ், பண்டு தொட்டே நுணுக்கமான உயிரியல் கலைஞானத்தில் வளர்ந்து தத்துவ மொழியாகத் தழைத்தோங்கி வளர்வதை யாரே மறுக்க முடியும்? காணாப்பொருளைச் சொன்ன தமிழுக்குக் காணும் பொருளை ஆராய்தல் முடியாதா? நமது குறையை மொழியின் மீதேற்றுதல் மன்னிக்க முடியாதது.

அதுமட்டுமின்றித் தமிழில் பழங்காலந்தொட்டே அறிவியற் கருத்துக்கள் முகிழ்த்துக் கால்விட்டிருந்தும் அத் துறையில் நாம் தொடர்ந்து சிந்திக்காததாலேயே பின் தங்கிப் போனோம். அப்படிச் சிந்திக்காமற் போனதற்குக் காரணம், அறிவியல் வளர்ச்சி சமய அறிவுக்கு மாறுப்பட்டது என்று

பிழைபடக் கருதியதேயாம். ஏன்? எதனால்? என்று கேள்வி கேட்பது பாவம் என்று கருதியதால் ஆகும். ஆனால், உண்மை யான மெஞ்ஞானம் விஞ்ஞானத்தால் வளம் பெறுகிறது; உரம் பெறுகிறது, வாழ்கிறது; வாழ்வும் அளிக்கிறது. அது போலவே உண்மையான விஞ்ஞானம் பரிபூரணத்தை நோக்கி, வளர்ந்து கொண்டே இருக்கிறது. அப்பரிபூரணத் துவத்தை விளக்கி நிறைவான வாழ்க்கை அளிப்பதிலேயே நாட்டம் செலுத்துகிறது. இதை மறந்த தமிழர்கள் தமிழில் பல நூற்றுக்கணக்கான ஆண்டுகளுக்கு முந்தியே, அறிவியற் கருத்துக்கள் அரும்பியிருந்தும் அத்துறையை முறையாகத் தொடர்ந்து வளர்த்துக் கொள்ளத் தவறி விட்டார்கள். தாவர இயலை (Botany) எடுத்துக் கொண்டால் இன்றைக்கு மூவாயிரம் ஆண்டுகட்கு முன்னர் எழுந்த தொல்காப்பியம் செடி கொடிகளுக்கு உயிர் உண்டென உணர்த்தியது. அவ் வழியிலேயே வள்ளல் பாரியும், முல்லைக் கொடியின் துன்ப அனுபவத்தை உணர்ந்து நெடுந்தேரினை நிறுத்தினான். ஏன்? முள்ளிச்செடிக்கு வீடு பேறும் கொடுத்தது தமிழ் நாகரிகம். இங்ஙனமிருந்தும், தமிழில் பூரண தாவர தத்துவ நூல்கள் வளரவில்லை. நாம் வளர்க்கவுமில்லை. விண்ணிலே பறக்க முடியுமென்ற கருத்துத் தமிழர்களிடத்துப் பல நூற்றுக்கணக் கான ஆண்டுகளுக்கு முன்னமேயே தோன்றிவிட்டது.

புறநானூற்றுக் காலத்தில் வாழ்ந்த புலவர் “வலவன் ஏவா வான ஊர்தி” என்று குறிப்பிடுகின்றார். இன்றைய விஞ்ஞானம் புறநானூற்றுத் தமிழன் கண்ட அளவிற்கு வளரவில்லை. ஏனெனில், இன்று ஆளோட்டும் விமானமே இருக்கிறது. ஓட்டுவாரின்றித் தானே பறக்கும் விமானமே “வலவன் ஏவா வான ஊர்தி.” பின்னர் வந்த கம்பன், இராவணன் வானவீதி வழியே பூத்தேரில் சென்றதாகச் சொல்லுகிறார். திருத்தக்கத்தேவர், “மயிற் பொறி” என்ற பெயரால் ஒரு வான ஊர்தி பற்றி விளக்கிச் செல்கிறார்.

இக்கருத்துக்களை முன்னோர் வழிப்பெற்ற தமிழர்கள் அவற்றைப் பார்த்து ரசித்தனர். நடைமுறைக்குக் கொண்டு

வர மறந்தார்கள். அக்கருத்துக்கள் கொண்ட பாடல்களை ரசித்தனர். அனுபவத்திற்குக் கொண்டு வரவில்லை. கதா காலட்சேபம் செய்து காலங்கழித்தனர். கவிஞரின் கருத்தைச் செயல்படுத்தவில்லை. போதும் போதாததற்கு அறிவையும், முயற்சியையும் நம்பாத பிற்போக்கு மனம் படைத்த திண்ணைத் தூங்கி மதவாதிகள், இராவணன் வான வீதியில் பறந்ததற்குக் காரணம் அவன் சிவபெருமானிடம் பெற்ற வரமே என்று சமாதானம் கூறி மனித சக்தியை அறியாமையில் ஆழ்த்தினர். அன்று இராவணன் பறந்ததற்குச் சிவபெருமான் தந்த வரம் காரணம் என்றால், இன்று சிவபெருமானையே நம்பாத — தவம் செய்யாத — செய்ய மனமில்லாத "காகரின்" வான வெளியிற் பறந்து திரிந்து வந்திருக்கிறானே, என்ன சமாதானம் சொல்ல முடியும்? இது போலவே, இந்த நூற்றாண்டில் அணுவைப்பற்றி அதிகமாகப் பேசப்பெறுகிறது. இந்த யுகத்தை அணுயுகம் என்றே சொல்லலாம். இந்த அணுவைப் பற்றி நூற்றுக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த மாணிக்கவாசகர் தெளிவாகப் பேசுகிறார். அணுதேய்ந்து தேய்ந்து செல்லக் கூடியதே எனக் குறிப்பிடுகிறார்.

'சென்று தேய்ந்து தேய்ந்து அணுவாம்" என்கிறார். இந்த அற்புதமான கருத்தை-இக்கருத்து நிரம்பிய பாடல்களைப் பரகதிக்குப் பாதைகாட்டும் பாடல்களாக மட்டும் நினைத்தோமேயொழியப் பாரினை வளமாக்கப் பயன்படும் என நினைத்தோமில்லை. கையில் வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு அழும் கதையாக முடிந்தது.

தமிழ் வளர்ந்த-வளமான மொழி. தமிழர்கள் தாம் முயன்று தமிழில் அறிவியலை-தாவர இயலை- உள இயலை வளர்க்காத குறையை மொழிமீது சுமத்த வேண்டாம். இன்னமும் காலம் கடந்துவிடவில்லை. முடியுமா முடியாதா என்ற சண்டையை நிறுத்திவிட்டுத் தமிழுக்கு அறிவியலைக் கொண்டு வந்து சேர்ப்போம் என்ற முழு உணர்வுடன்

முயற்சிப்போம். அங்ஙனம் முயற்சிப்போமானால், எண்ணிச் சில ஆண்டுகளுக்குள்ளாகவே தமிழில் அறிவியல் வளம் கொழிக்கும். மேற்கத்தியர் அறிவியல் கற்கத் தமிழ் பயிலத் தொடங்குவர். நம்மால் முடியும். அறிவும் திறமையும் வழிவழியாக நம்மைத் தொடர்ந்து வருவன.

## 2. உணர்வை வளர்ப்பது தமிழே!

நடமாடுகின்ற மனிதனுக்கு முதுகெலும்பு இன்றியமையாத ஒன்று, அது போலவே வாழ்கின்ற மனித சமுதாயத் திற்கு - வளர்ந்து வாழ்கின்ற மனித சமுதாயத்திற்குத் தாய் மொழி இன்றியமையாத ஒன்று. (ஓர்) இனம் சிந்தனையால், செயலால், செல்வத்தால் செழித்து வளர, தாய்மொழியே துணைசெய்கிறது. தாய் மொழியால் இனம் வளர்கிறது; மொழிவழிப் பட்ட நாகரிகமும் வளர்கிறது.

பிறந்து, மொழி பயிலத் தொடங்குங் காலத்தலிருந்து பேசும் மொழியே தாய்மொழி; மழலையில் தொடங்கும் மொழியே தாய்மொழி. தாய் மொழி என்று கூறக் காரணம் என்ன? உடலுக்குத் தாய்போல் உள்ளத்திற்குத் தாய் மொழி, யாருடைய துணையும் இன்றி எல்லோரும் தாயைத் தாமே அறிந்து கொள்கிறார்கள்; அன்பு காட்டுகிறார்கள்; அன்பைப் பெறுகின்றார்கள். அதுபோலவே ஆசிரியர் துணை இன்றித் தாமே இயல்பாக உணரக்கூடிய மொழியே தாய்மொழி. இயல்பான தாய்மொழி வழியாகப் பெறுகின்ற சிந்தனை இயற்கையோடியைந்ததாகும்; எளிமையில் செயற்படக் கூடிய ஒன்று. எத்துறை வளர்ச்சிக்கும் சிந்தனையே மையம்; அடிப் படையும் கூட, எல்லோரும் தாய் மொழியில் சிந்திப்பது எளிது. பிற மொழிகளில் சிந்திப்பது முடியாத ஒன்று, 'ஆங்கிலத்தில் துறைபோகிய அறிஞர்கள் கூட அவரவர் தாய் மொழிகளிலேயே சிந்திக்கிறார்கள் என்ற அனுபவம் மறைக்க கூடியதல்ல. சிந்திப்பதற்குரிய மொழிவழியாகப் பெறுகின்ற

உணர்வும், அறிவும் நிலைத்த பயனைத் தரும்; ஈடும் இணையும் இன்றி வளரும்.

தமிழுக்கு அறிவியல் புதிதன்று; அறிவியலுக்குத் தமிழ் புதிது அல்ல. நூற்றுக்கணக்கான ஆண்டுகட்கு முன்பே தமிழில் அறிவியற் கருத்துக்கள் நடைபயின்றதுண்டு, என்று முன் தென்தமிழ் இயம்பி இசைகொண்ட கம்பன் அறிவியல் துறையிலும் கால்கோள் விழாச் செய்திருக்கிறான். கம்பன், இராவணன் வானவீதி வழிச் சென்றதாகக் கவிதை செய்துள்ளான். அக்கருத்தைப் படித்த தமிழ்ப் புலவர்கள் அக்கவிதையில் உள்ள எதுகை மோனைகளை மாத்திரம் எண்ணிப்பார்த்து ரசிப்பதில் ஆழ்ந்து மெய்மறந்து போயினர். பக்தர்களோ இராவணன் வானவீதியில் வலம் வந்தமை அவனுடைய முயற்சியின் திறமையாலன்று. கடவுளின் வரம் பெற்றதினாலேயே என்று கூறி அச்செயலை அற்புதமாக்கி மனித இனத்தின் தன்னம்பிக்கையைச் சாகடித்தார்கள்.

இந்தத் தலைமுறையில் வந்த பகுத்தறிவுலகமும் கம்பன் சொன்ன கருத்தை ஆராய்வதற்கு முன்வராமல் கண்மூடித் தனமாகக் கம்பன் கூறியவையெல்லாம் பொய்யென்று கூறி எரிக்கத் தலைப்பட்டது. ஐயோ, பாவம்! கம்பனுக்குப்பின் இப்படிப்பட்ட தலைமுறையா வரவேண்டும். இந்த வழி கம்ப னுக்கு மட்டுமன்று. திருத்தக்கதேவருக்கும் இதே கதிதான். அணுத் தத்துவத்தையும், அண்ட வெளித் தத்துவத்தையும் ஆராய்ந்து பேசிய மாணிக்கவாசகருக்கும் இதேகதிதான். மேற்காணும் குறிப்புக்களை மனத்தில் வைத்துக் கொண்டு சிந்ததித்தால் தமிழிலும் அறிவியலுண்டு என்ற முடிவுக்கே வரவேண்டி வரும். அக்கருத்துக்களைத் தொடர்ந்து சிந்தித்துச் செழுமைப் படுத்தாத காரணத்தால், அறிவியல் துறையில் பின் தங்கிப் போனோம். சிந்தனை மனித குலத்தின் பொதுஉடைமை. இன்ன சிந்தனை இன்ன மொழியில்தான் வரும் என்று வரையறுத்துச் சொல்வது அறியாமையென்றே கருதுகின்றோம். எத்துறையில் எந்த இனம் முயன்று சிந்திக்

கிறதோ, அத்துறையில் அவ்வினம் மேன்மையுற்று விளங்குவது உலக இயற்கை, வழிவழியாகத் தத்துவஞான அனுபவத்தில் ஈடுபட்ட நமது இனம் அத்துறையில் ஈடும் இணையுமின்றி வளர்ந்திருக்கிறது, காரணம் அத்துறையில் தொடர்ந்து வளர்ந்த சிந்தனையே ஆகும். பொறிகளுக்கும், புலன்களுக்கும் அப்பாற்பட்ட பொருள்களையும், அவ்வழிப் பட்ட அனுபவங்களையும் ஆராய்ந்து, தெளிவாகச் சொன்ன தமிழுக்கு, காணும் பொருளை ஆராய்ந்து அவ்வழிப்பட்ட உண்மைகளை எளிதிற் சொல்லுவது இனிமையிலும் இனிமை யென்றே நம்புகின்றோம்.

கல்வி ஆசிரியனால் மாணவனுக்குக் கொடுக்கக்கூடிய ஒன்றல்ல. மாணவன் தானே கல்வி பெறுகிறான். அதற்கு ஆசிரியன் தூண்டுகோலாக அமைகிறான். உதாரணமாக மாணவன் ஒரு வினாக்கேட்டால் அவ்வினாவிற்கு விடை மாணவனே சொல்லவேண்டும். விடை சொல்லத் தெரியாமல் மாணவன் தயங்கினால், ஆசிரியன், அவரசப் பட்டு விடையைச் சொல்லித் தரக்கூடாது. அம்மாண வனையே விடையைச் சிந்தித்துக் காணத் தூண்ட வேண்டும். அங்ஙனம் தூண்டுவதற்காகச் சில துணை வினாக்களையும் ஆசிரியன் செப்பலாம். இந்தத் துணை வினாக்களுக்கு விடைகாணும் முயற்சியிலேயே முன் வினாவுக்கு மாணவன் விடைகண்டு விடுவான். இங்ஙனம் கற்கின்ற கல்வியே தெளிவுடையதாக இருக்கும்; ஆழமாகவும் இருக்கும்; உறுதி யாகவும் இருக்கும். அதுமட்டுமின்றிச் சிந்தனைப் பயிற்சியும் திறமையும் வளம் பெறுகின்றன. நம்முடைய தலைமுறை யினரை அறிவியல் துறையிலே, பொருளியல் துறையிலே, தொழிலியல் துறையிலே சிந்தனையில் ஈடுபடவைத்து, வளர்ப்பது தலையாய கடமை. இக்கடமையை முறையாகச் செய்து முடிக்கப் பயிற்சிமொழி தாய்மொழியாகவே இருக்க வேண்டும் என்று சொல்ல வேண்டிய அவசியமில்லை. சிந்தனை ஊற்று தாய்மொழியாலேயே திறக்கப் பெறுகிறது.

சிந்தனை ஊற்று வற்றாது. நம்முடைய வாழ்வுக்கு வளம்பல தரவேண்டுமானால் தாய் மொழியே பயிற்சி மொழியாக இருக்க வேண்டும்.

கடந்த ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக ஆங்கில மொழியின் மூலம் அறிவியல், தாவர இயல், பொருளியல் படித்த ஆசிரியர்கள் நூற்றுக்கணக்கில் வெளிவந்துள்ளனர். அவர்களில் பலர் அத்தகைய ஆசிரியத் துறைகளில் ஈடு பட்டுள்ளனர். ஆனால் அவர்களில் பலருக்கு அவர்கள் பயின்ற துறையில் சுவையில்லை. அன்றாட வாழ்க்கையில் அந்தக் கண்ணோட்டம் அமையவில்லை. அத்துறையில் அவர்கள் மேலும் ஆராயவுமில்லை. காரணம் அவர்கள் பயிற்சி, சிந்தனை வழிப்பட்டதல்ல. ஏதோ படித்தார்கள்; தேர்வுக்கும் தொழிலுக்கும் பயன்பட்டது. அப்பயிற்சியைச் சிந்தனை மொழியாகிய தாய்மொழியில் பெற்றிருப்பார் களானால் தொடர்ந்து சிந்தித்திருப்பார்கள்; ஆராய்வார்கள். அதனால் அவர்களுக்கும் பயனுண்டு. அவர்களை ஈன் றெடுத்த நாட்டிற்கும் பயனுண்டு, கவிஞன், பாரதி, "யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல், இளங்கோவைப் போல் பூமிதனிலே யாங்கணுமே பிறந்ததில்லை" என்று பாடுகின் றார். இக்கவிஞர்கள் கவிஞர்கள் ஆனவர்களுமல்ல; ஆக்கப் பட்டவர்களுமல்ல கவிஞர்களாகவே பிறந்தார்கள். அங்ஙனம் பிறப்பதற்குரிய சூழ்நிலை தமிழகத்தில் இருந்தது. அது போலவே நாம் விஞ்ஞானிகளை ஆக்க விரும்பவில்லை. விஞ்ஞானிகள் பிறக்க விரும்புகின்றோம். அதற்குரிய சூழ்நிலையைத் தமிழகத்தில் உண்டாக்க வேண்டுமானால் பயிற்சி மொழியைத் தாய்மொழி ஆக்க வேண்டும்.

உலகம் விஞ்ஞானத் துறையில் விந்தை மிகுசாதனை களைச் செய்து வருகின்றது. பழங்காலக் கனவுகளாக, அற்புதங்களாகக் கருதப் பட்டவைகள், இன்று நடைமுறைக்கு வந்துள்ளதைக் காண்கிறோம். நம்முடைய அன்னை மொழி யாம் தமிழ்மொழி இருந்தபடியே இருப்பதை எண்ணினால்

வேதனை பிறக்கிறது. நமது முன்னோர்கள் காலத்திற்கேற்ற தொண்டுகளைச் செய்து தமிழை வளர்த்து வந்துள்ளார்கள். ஆனால் நாமோ நம்முடைய தலைமுறையில் ஒன்றும் செய்ய வில்லை. அண்மைக் காலக் கவிஞன் ஒருவன் தமிழன்னையின் திருமேனியில் சில பல அணிகள் இருப்பதாகக் கவிதை செய்துள்ளான். அன்னை மீதுள்ள அணிகலன்கள் அனைத்தும் நம்முடைய பாட்டன் காலத்திலும், முப்பாட்டன் காலத்திலும் செய்யப்பெற்றவை. நம்முடைய தலைமுறையில் என்ன செய்திருக்கிறோம்? நிறையக் கதைகள் எழுதிக் குவித் திருக்கிறோம் என்று பெருமை பேசிக் கொள்ளலாம் சிலர், அவர்கள் நிலை இரங்கத்தக்கது. உலகில் மற்ற இனங்களோடு நாமும் பெருமை பற்றி வாழவேண்டுமென்று விரும்பினால், தமிழில் வாழ்க்கைக்குரிய அறிவியல், பொருளியல், தொழி லியல், உளவியல், சமூகவியல், ஆய அத்தனைத் துறைக் கலை களையும் வளர்க்க வேண்டும். இதற்குத் தாய்மொழி, பயிற்சி மொழியாக இருப்பது பெரிதும் உதவிசெய்யும். ஆக எத் துறையில் பார்த்தாலும் தாய்மொழியே பயிற்சி மொழி என்று சொல்லுவதைத் தவிர வேறொன்றும் சொல்ல முடியாதென் றிருக்கிறோம். தமிழினம் சிந்தனையாலும், செல்வத்தினாலும் செழிக்கத் தாய்மொழியைப் பயிற்சி மொழியாகக் கொண்டு முன்னேற்றப் பாதையில் நடைபோடுவோமாக, அதற் கேற்றாற் போல் நம்முடைய தமிழ்நாட்டு அரசினர் எங்கும், எப்பொழுதும், என்றென்றும் தமிழே இடம்பெற வேண்டும் என்ற கொள்கையைக் கொண்டிருப்பதற்கு நம்முடைய நன்றி கலந்த ஆதரவைத் தருவோம்.

## 3. தமிழே பயிற்சி மொழி

தாய்மொழி மக்களுக்கு விழி போன்றது. தாய் மொழியின் வழியேதான் ஓர் இனம் வளர்ச்சிபெற முடியும். தமிழர்கள் நீடித்து நல்வாழ்வு பெற முடியாமற் போனமைக்

குரிய காரணங்களுள் ஒன்று அவர்களுடைய வாழ்க்கையில் அடிக்கடி பிறமொழிகளின் நுழைவும், அவ்வழி அயல் வழக்கின் ஆட்சியும் ஆகும். இந்த நாட்டின் சுதந்திர சாசனத்தில் இந்நாட்டின் பல்வேறு மொழிகளுக்கும் சுதந்திரமான வளர்ச்சி இருக்கும் என்று குறிப்பிடப் பெற்றுள்ளது. மாநில அளவில் தாய்மொழியே ஆட்சி மொழியாகவும் பயிற்சி மொழியாகவும் இருக்க வேண்டுமென்பது மக்களின் வேட்கை.

தாய்மொழி வழியிலேயே ஓர் இனம் சிறந்த தெளிவான - ஆழமான - தன்வயப்பட்ட அறிவைப் பெற முடியும். இது மறுக்கவோ மறக்கவோ முடியாத உளநூல் உண்மை. தாய் மொழி வாயிலாகப் பெறும் அறிவு உழுத நிலத்தில் மழை பெய்ததுபோல. பிறமொழி மூலம் பெறும் அறிவு பாறை நிலத்தில் மழை பெய்தது போல. தாய்மொழி மூலம் பெறும் அறிவு - அளவில் சிறியதாக இருப்பினும் - தன்னியல்பான சிந்தனையின் வழி மேலும் சிறந்து வளர வாய்ப்புண்டு! அது ஊற்றுக்கேணி போல. பிறமொழி மூலம் பெறும் அறிவு அளவிற் பெரிதாக இருந்தாலும் கூட சிந்தனை சிறக்க வழி யில்லாததினால் நீர் நிறைத்து வைக்கும் குளம் போலவே அமையும், அது மேலும் வளர வழியில்லை, ஊற்று இல்லாமையால். தாய்மொழி மூலம் பெறும் அறிவு ஊற்றுக் கிணறு போல் ஆற்றொழுக்காக - வழிவழித் தொடர்ந்து வளரும். பிறமொழி அறிவுக்கு தொடர்ச்சி இருக்காது. தாய் மொழியின் மூலம் கலைகளைப் பயிலுதல் குறைந்த நேர அளவில் இயலும். ஏன் எனில் மொழியறிவு பெறும் முயற்சி தேவைப்படாது. கலையறிவைப் பெறுதல் ஒன்றே செய்ய வேண்டும். பிறமொழி வழியாகக் கலைகளைப் பயில்வது சற்றுக் கடினம்; காலமும் அதிகமாகத் தேவைப்படும். ஏன் எனில் தனக்குத் தொடர்பில்லாத மொழியறிவைப் பெற்று அதன்பின் கலைகளைப் பயில வேண்டும். பிறமொழி அறிவைப் பெறுவதிலேயே அதிக நாளும் அதிக சக்தியும்

வீணாகிறது. ஆதலால் தாய்மொழியே பயிற்சிமொழியாக இருப்பது நல்லது. நாட்டுக்கும் நல்லது. இந்தக் கோரிக்கையை ஏற்றுக் கொண்டு தமிழக அரசு கோவையில் சில கல்லூரிகளில் தமிழைப் பயிற்சிமொழியாக கொண்டு வந்தது. நடப்பு ஆண்டில் தமிழக அரசினரின் பயிற்சி மொழிக் கொள் கையில் சலனம் ஏற்பட்டுள்ளதாகப் பலர் கருதுகின்றார்கள். தமிழ் பயிற்சிமொழியாக இருப்பதில் அரசு ஆர்வம் காட்ட இல்லையோ என்ற ஐய உணர்வும் எழுந்ததுள்ளது.

தமிழ்மொழி மூலம் பயிற்றுவிக்கும் கல்லூரிக்கு மாண வர்கள் விரும்பி வரவில்லை என்று அரசியலார் கூறி யுள்ளார்கள். ஆனால் உண்மை அதுவல்ல என்பதை பிள்ளை களின் சேர்க்கை தெளிவாக்கக்கூடும். அப்படியே பிள்ளைகள் விரும்பி வரவில்லை என்பதற்காகப் பயிற்சிமொழிக் கொள் கையில் மாறுதல் ஏற்படலாமா? பிள்ளைகளின் விருப்பம் மட்டுமே நாட்டின் தன்மைக்கு அளவு கோலாக அமைய முடியாது. நாட்டின் நலத்திற்கு எது நல்லதோ அவ்வழியிற் பிள்ளைகளை வழிநடத்தும் பெருங்கடமை அறிஞர்கட்கும், அரசுக்கும் இருக்கின்றது. ஏன்? பெரும்பாலான பிள்ளைகள் இந்தி படிக்க விரும்பவில்லை என்பதற்காகத் தேசிய மொழியை கற்காமல் இருக்க முடியுமா?

பிள்ளைகள் வரவில்லை என்றால், அது கல்விக் கொள்கையில் நாம் காட்டுகின்ற குழப்பமே காரணம். கல்வித் துறையில் இரண்டு ஜாதியை நாம் உருவாக்குகின்றோம். ஒரு ஜாதி ஆங்கிலம் மூலம் பயிலும் ஜாதி; இன்னொரு ஜாதி தாய்மொழி வாயிலாகப் பயிலும் ஜாதி. இந்த இரு ஜாதிகளிலும் எந்த ஜாதிக்கு எதிர்காலம் இருக்கும் என்பதிலும் மாணவர்கட்கு ஒரு தடுமாற்றம். பல சமயங்களில் ஆங்கிலம் மூலம் பயின்ற ஜாதிக்குச் சாதகமாகப் பலர் பேசுகின்றமையால் மாணவர்கட்கு அதில் விருப்பம் இருக்கக்கூடும். இப்படிக் கல்வித் துறையில் இரண்டு ஜாதிகளைப் படைப்பதே அடிப்படையில் தவறு.

தமிழகத்தில் உள்ள கல்லூரிகள் அனைத்திலும் தமிழையே பயிற்சி மொழியாகக் கொண்டு வருதல் வேண்டும். அதுவே தமிழர்களின் எதிர்கால முன்னேற்றத்திற்குப் பெரிதும் இன்றியமையாத தாகும்.

தாய்மொழி மூலம் கலைகளைப் பயிற்றுவிப்பதில் வெற்றியும் பயனும் ஏற்படுமா என்று ஐயப்படத் தேவை யில்லை. தமிழைவிட காலத்தாலும் கருத்தாலும் பிற்பட்ட உருசிய மொழி போன்றவைகள் அறிவியல் மொழியாக வரவில்லையா? அவர்கள் அறிவியல் துறையில் முன்னேற வில்லையா? காலங்கடந்த பழமையும், கருத்தளவில் பெரிதும் வளர்ச்சியும் பெற்ற தமிழ், அறிவியல் மொழியாக - பல்கலை மொழியாக வளர்வதற்குத் தடை என்ன இருக்க முடியும்? இந்திய தேசிய ஒருமைப்பாட்டுக்கு ஆங்கிலம் இன்றியமை யாதது என்பது ஒரு சிலரின் கருத்து. பாரதத்தின் தலைமை அமைச்சர் பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள் இந்திய ஒற்றுமையின் சின்னம் இந்தி என்று குறிப்பிட்டுள்ளார். நமக்கு இவ்விரண்டில் எதை ஏற்றுக் கொள்வது என்பது விளங்கவில்லை.

இந்திய தேசிய ஒருமைப்பாட்டின் அடித்தளம் மொழி வழியுரிமையும் சிந்தனையுமாகும். இந்தியாவின் ஒருமைப் பாட்டுக்கு ஏன் ஒரு மொழிக் கொள்கை வற்புறுத்தப் பெற வேண்டும். அங்கும், மும்மொழிக் கொள்கை காணலாகாதா? அல்லது பலமொழிக் கொள்கைதான் காணலாகாதா? ஆனால் நாம் - தமிழர்கள் இந்தி, ஆங்கிலம் ஆகிய மொழி களைப் பயிலக்கூடாதென்ற கொள்கையுடைய ஆங்கில எதிர்ப்பாளர்களோ, இந்தி எதிர்ப்பாளர்களோ அல்ல, இம்மொழிகளையும் தமிழர்கள் பயின்று பயன் பெறுதல் வேண்டும். ஒப்பு நோக்கும் அறிவிற்கும் உலகியல் வாழ்வுக்கும் பன்மொழிப் பயிற்சி கட்டாயமாகத் தேவை. ஆனாலும் பயிற்சி மொழி எந்தச் சூழலிலும் தாய் மொழியாகவே இருத்தல் வேண்டும். வாய்க்கால்களின் வழியாகத் தண்ணீர்

ஓடி வரலாம். அங்ஙனம் ஓடிவரும் தண்ணீர் வாய்க்காலுக்காக அல்ல - வயலுக்காகவே, அதுபோலத் தமிழர்கள் பன்மொழியும் பயிலலாம். ஆனாலும், அவர்களுடைய தாய்மொழியாகிய வயலை வளப்படுத்தவே பன்மொழிப் பயிற்சி.

எனவே, தமிழக அரசினர் எந்தவிதமான தயக்கமுமின்றித் தாய்மொழி வாயிலாகப் பயிற்றுவிக்கும் கொள்கையை நடைமுறைக்குக் கொண்டுவர வேண்டுமென்று கேட்டுக் கொள்கின்றோம்.

## 4. தாய்மொழிச் சிந்தனை

நாட்டின் வழி, மொழி வழி, பண்பாட்டின் வழி எண்ண - சிந்திக்கச் சுதந்திரம் வேண்டும். அந்தச் சுதந்திரம் இல்லையானால், இந்த நாட்டைச் சுதந்திரநாடு என்று சொல்லுவதிலோ, இந்த நாட்டை நம்மவரே ஆளுகின்றனர் என்று சொல்லுவதிலோ பொருளில்லை.

இந்த நாட்டில் நெய்வேலி நிலக்கரியையும், சேலத்து இரும்பையும், பார்க்கிறோம். எண்ணற்ற இயந்திரக் கருவிகளை உற்பத்தி செய்கிறோம். இவற்றையெல்லாம் உற்பத்தி செய்துவிட்டு, இவற்றை அனுபவிக்க மனம் படைத்த மனிதர்களைப் படைக்கவில்லையென்றால் என்ன பயன்? அவற்றை யார் அனுபவிப்பது?

சுதந்திரம் பெற்றிருக்கிறோம். சுதந்திர உணர்வுடையவர்களாக வாழ்கிறோம் என்றால் ஒரு சாதாரணக் குடிசைக்கு நாம் போனாலும் அங்கும் மொழி, அரசியல், பொருளாதாரச் சிந்தனைகளை - பிரச்சினைகளைக் காண வேண்டும். அப்போதுதான் உண்மையான சுதந்திரம் வந்திருக்கிறது என்று கருதமுடியும். இப்போது எத்தனை குடிசைகளிலே - சாதாரண மக்களிடையே இந்தப் பிரச்சினைகளைப் பார்க்கிறோம்? எனவே, நாம் இன்னும் பரிபூரண சுதந்திரம் பெறவில்லை என்பதுதானே கருத்து,

நாட்டு மக்களின் சிந்தனை ஊற்றை அடைத்து விட்டால், நாட்டிலே தேனாறும் பாலாறும் ஓடினாலும் பயனில்லை. நாடு சுதந்திரம் அடைந்து பல ஆண்டுகளாகியும் தமிழ் பயிற்சி மொழியாகவில்லை என்பது வெட்கப்படத் தக்கதுதான். குழந்தைக்கு ஆண்டுவிழாக் கொண்டாடு வதிலும் பெயர் வைப்பதிலும் அக்கறை காட்டுகின்ற பெற்றோர்கள், தம்மக்களின் கல்விக் கொள்கையில் அக்கறை காட்டாமல் இருக்கின்ற பெற்றோரின் போக்கு கண்டனத்திற் குரியதாகும்.

மனிதனின் உரிமைக்கும் உணர்வுக்கும் மொழி ஊற்றுக்கால் போல; தாய்மொழி வாயிலாக இயல்பாக எண்ணுகிறோம் - இயல்பாகச் சிந்திக்கிறோம் - இயல்பாகவே பேசுகிறோம். அயல்மொழி வாயிலாக இயல்பான எண்ணம், இயல்பான சிந்தனை, இயல்பான பேச்சு இருக்க முடியாது. அயல் மொழிகளில் படிப்பது, போலிக்கால்களால் நடப்பது போன்றதுதான். சொந்த மொழியில் படிப்பது சொந்தக் காலில் நடப்பது போல. சின்னஞ்சிறு குழந்தைகளுக்கு அவர்களின் தாய் மொழியில் ஒன்றைச் சொல்லி ஆணை யிட்டுப் பாருங்கள். அவர்களின் உள்ளுணர்வுகளையும் ஊக்கத்தையும் கவனியுங்கள்.

ஆட்சியின் பேரால், வைதிகத்தின் பேரால், மொழியின் பேரால் ஒவ்வொரு காலத்திலும் நாம் ஒவ்வொரு மொழியைச் சுமந்து வந்திருக்கிறோம். இன்று 'ஒருநாடு' 'ஒருமைப்பாடு' என்ற பெயரால் இந்தியைச் சுமந்து கொள்ள வேண்டியிருக்கிறது.

ஆங்கிலேயன், அவனுடைய ஆட்சிச் சக்கரம் செவ்வனே உருள ஆட்சி செவ்வனே நடக்க நமக்கு 'குமாஸ்தா' வேலை செய்வதற்குரிய படிப்பைக் கொடுத்தான். நம்மவர்களும் வேலை பெறுவதற்காக ஆங்கிலத்தைப் படித்தார்கள். எனவேதான் இன்று அவர்கள் 'தமிழில்

படித்தால் வேலை கிடைக்குமா?' என்று கேட்கின்ற நிலையில் இருக்கிறார்கள். ஆங்கிலக் கல்வி, வெள்ளையன் வைத்துப் போன அடிமை முத்திரை, இன்னும், அந்த அடிமை முத்திரையையே சுமந்து கொண்டிருக்க வேண்டும் என்று கருதலாமா? உலகத்தின் முன்னே நம்மை ஒரு தனிப்பெரும் சத்தியாக மனிதனாக ஆக்கிக் கொள்ள வேண்டும் என்ற பேராசை நமது இளைஞர்களுக்கு வேண்டும். தன்னியல்பாக பெருமித உணர்வோடு வாழ்வேன் என்ற உணர்ச்சி இளைஞர்களுக்கு வரவேண்டும்.

எண்ணுவதற்கு, சிந்திப்பதற்கு, ரசிப்பதற்கு அழுவதற்கு, சிரிப்பதற்கு, உணர்ச்சியைப் பெறுவதற்கு உரிய மொழி தாய் மொழிதான்; நான், ஆங்கிலம் படித்த பேராசிரியர்களைக் கேட்கிறேன். அவர்களால் ஆங்கிலத்தில் எண்ண - சிந்திக்க - ரசிக்க - அழ - சிரிக்க முடியுமா? நிச்சயமாக முடியாது. நடப்பதற்குரிய காலை இழந்தாலும் இழக்கலாம்; நமக்கு எண்ண, சிந்திக்க, ரசிக்க, அழ, சிரிக்கப் பயன்படுகின்ற தாய்மொழியை இழக்க முடியாது.

தேசிய ஒருமைப்பாடு மிக மிக இன்றியமையாதது. எனினும், இந்தியா ஒரு நாடாக இருக்க வேண்டும் என்பதற் காகத் தமிழன் தனது தாய்மொழியை இழக்க வேண்டுமா? இந்திய ஒருமைப்பாட்டைக் காப்பாற்ற வேண்டுமென்றால், சுதந்திர சாசனத்தில் தேசிய மொழிகள் என்று அறிவிக்கப் பெற்றுள்ள 14 மொழிகளையும் காப்பாற்ற வேண்டும்-பாது காக்க வேண்டும். அவ்வாறில்லையானால், இந்த அடிப்படை உரிமைகளை மறுக்கின்றவர்களே தேசிய ஒருமைப் பாட்டுக்குத் தீங்கு செய்தவர்கள் ஆவார்கள்.

தாய்மொழி ஆயிரம் ஆண்டுக் காலப் பயிர். நமது தாய் மொழி ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக பாரம்பரியம் உள்ள மொழி, முற்போக்குக் கருத்துக்கள், எண்ணங்கள் யாவுடனும் வளர்ந்த மூத்த மொழி.

'இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்.' —குறள் 314

என்று கூறும் இனிய பண்பாட்டு மொழி.

மனிதனின் உரிமைக்கு மொழி ஊற்றுக்கால்போல், தாய்மொழி வாயிலாக இயல்பாக எண்ணுகிறோம்; அயல் மொழி வாயிலாக அது இயலாததாகும்.

தாய்மொழிக்கு ஆக்கம் தராத முயற்சிகள் இந்த நாட்டை மீண்டும் அடிமை நிலைக்குக் கொண்டு போனால் நாம் வியப்படைவதற்கில்லை. பொருளால் அடிமைப்படக் கூடாது என்பது போல மொழியாலும், சிந்தனையாலும்கூட அடிமைப்படக் கூடாது.

உயிரியல் முயற்சிக்கு மரியாதை கொடுப்பதென்றால் தன்னியல்பாக எண்ண, சிந்திக்க விட வேண்டும். மொழி யால், ஆட்சியால் சிந்தனைச் சிறகையொடித்து முடமாக்கி விடக்கூடாது. சுதந்திர நாட்டில் மீண்டும் குருடர்களை செவிடர்களை உருவாக்குவதா?

உயிருணர்ச்சிகளுக்கெல்லாம் விளக்கம் தந்த நுண்மை சான்றமொழி, நமது தமிழ் மொழி. தாய்மொழிதான் சிந்தனை மொழியாக இருக்க வேண்டும்; அதற்கு நாம் எதை ஈடுகொடுத்தாலும் பரவாயில்லை. கொடுத்துப் பெற்றே யாக வேண்டும்.

எண்ணிச் சிந்திக்கின்ற கருத்துக்களைப் பக்கத்திலுள்ள வர்களோடு அளவளாவி, எண்ணத்தைச் சிந்தனையைப் பூர்ணத்துவமடையச் செய்து கொள்ள வேண்டும். மற்றவர் களோடு அளவளாவுவதற்குப் பிறமொழி நமக்கு எந்த வகையில் துணைசெய்ய முடியும் என்று கருதுகிறீர்கள்?

வெளிநாடுகளில் சென்று சுற்றிவர ஆங்கிலம் வேண்டும் என்கிறார்கள். குருஷேவும், புல்கானினும், எலி சபெத் இளவரசியும், எடின்பார்க்கோமகனும் இந்தியாவுக்கு

வந்த போது இந்தியையும், தமிழையும் படித்துக் கொண்டா வந்தார்கள்? எனவே, உலக உறவுக்குக்கூட ஆங்கிலம்தான் தேவை என்பது இல்லை.

பிறமொழிகளில் படிக்கும்போது எண்ணும்போது சிந்திக்கும்போது அவன் பழக்கத்தால் இயந்திரமாகவே மாறி விடுவான். டேப்ரிக்காடில் நாம் பேசிப் பதிவு செய்தால், நாம் பேசியதுதானே அதில் ஒலிபரப்பாகும்?

தாய் மொழிக் கல்விக்கு எண்ண சிந்திக்க வாய்ப் புண்டு; பிறமொழிக் கல்விக்கு அது இல்லை. தமிழ் பயிற்சி மொழியாக இருக்கும் கல்லூரிகளில் மாணவர்கள் வரிசை வரிசையாக நிற்கவேண்டும்; இது நமது இரண்டாவது சுதந்திரப் போராட்டம் போல. அதற்கு இளைஞர்கள் தங்களை தயார் செய்து கொள்ள வேண்டும். வேலை செய்கின்றவனுக்குத்தான் சோறு என்று மட்டும் இல்லாமல், சிந்தனையாளர்களுக்கு, அறிவியல் மேதைகளுக்கு அரசாங்கமே வீடு தேடிவந்து சோறு கொடுக்கின்ற நல்ல காலம் விரைவில் வரத்தான் போகிறது, எனவே தமிழில் படித்தால் வேலை கிடைக்குமா என்று யாரும் கவலைப்பட வேண்டியதில்லை.

தமிழில் அருச்சனை செய்ய வேண்டும் - வழிபாட்டு மொழி தாய்மொழியாக இருத்தல் வேண்டும் என்று கூறிய போது, இப்போது தமிழ் பயிற்சி மொழியாவதற்கு ஏற்பட்டி ருக்கிற எதிர்ப்பு போல இருக்கத்தான் செய்தது. நாம் நமது கோரிக்கையில் உறுதியாக நின்று அமைதியான முறையில் நமது கொள்கைகளை எடுத்து விளக்கினோம். இன்று தமிழில் அருச்சனை நடைபெறுகிறது. அது போல இப்போது தமிழ் பயிற்சி மொழியாக வேண்டும் என்ற நமது நியாயமான கோரிக்கைக்கு செவி சாய்க்கும் காலம் வரும். தாய்மொழி வழிச் சிந்தனையைத் தயவு செய்து தடைசெய்ய வேண்டாம். அது வருங்காலச் சமுதாயத்தைப் பாழ்படுத்திவிடும் என்று

கூறிக்கொள்ள விரும்புகின்றோம். வாழ்க்கையின் பண்பாட்டை மீண்டும் கொலுவேற்றுவதுதான் தமிழ் ஆட்சி மொழி - தமிழ் பயிற்சி மொழி என்பதெல்லாம். எனவே, தமிழ் பயிற்சி மொழியாக்க நாம் அனைவரும் முயற்சிப்போம்; நமது கோரிக்கையில் நியாயமிருக்கிறது. நேர்மையிருக்கிறது. எனவே, நிச்சயம் வெற்றி பெறுவோம். திருவருள் அதற்குத் துணைநிற்கும்.

## 5. ஆட்சிமொழி

இந்திய ஆட்சி மொழி சட்டம் பாராளுமன்றத்தில் நிறைவேற்றப் பெற்றுவிட்டது. தமிழன் தன்னுடைய தாய் மொழியைக் காப்பாற்றி வளர்க்க வேண்டும் என்ற உறுதி யில்லாமல் பதவி - பணப்பிச்சை கருதித் தாய்மொழிப் பற்றை இழப்பானாகில் 'மெல்லத் தமிழினிச் சாகும்' என்ற கவிஞன் கூற்று உண்மையாகிவிடும்.

பல்வேறு மொழிபேசும் மக்கள் வாழும் நாட்டில் ஆட்சிமொழிச் சிக்கல் தவிர்க்கமுடியாததே. 782 மொழி களுக்கு மேற்பட்ட மொழிகளைப் பேசும் மக்கள் இந்தியக் கூட்டாட்சியில் வாழ்கின்றனர். அவற்றுள் காலத்தாலும் - கருத்தாலும் சிறந்தவைகளைப் பேசுகின்ற மக்கள் தொகையின் எண்ணிக்கையை அடிப்படையாக வைத்து இந்திய தேசிய மொழிகள் 14 என்று அரசு முடிவெடுத் துள்ளது. தமிழும் இந்தியத் தேசிய மொழியேயாம். பல்வேறு மொழியினர் வாழும் கூட்டாட்சிக்கு எப்படியும் தொடர்பு மொழி - பொது மொழி தேவை என்பதை யாரும் மறுக்க முடியாது. அத்தகு பொது மொழியாக - தொடர்பு மொழியாக - அரசியல் சட்டம் இந்தியைத் தேர்ந்தெடுத்தது. கொள்கையளவில் நமக்கு முரண்பாடோ மறுப்போ இல்லை. ஆனாலும் ஒரு பெரிய நாட்டுக்கு ஒரு மொழிதான் ஆட்சி மொழி இருக்க வேண்டும் என்ற கருத்தில் எவ்வளவு நியாயம்

இருக்கிறது என்பதை நாம் ஆராய்ந்து பார்க்கவேண்டும். ஐரோப்பிய நாடுகள் பலவற்றில் ஒன்றுக்கு மேற்பட்ட பல மொழிகள் ஆட்சி மொழிகளாக இருக்கின்றனவே. அதுபோல ஏன் நம்முடைய நாட்டில் மொழி இனங்களின் தலைமை மொழிகளையாவது ஆட்சிமொழி ஆக்கக்கூடாது என்று கேட்கத் தோன்றுகிறது.

மனிதனுடைய நாகரிக ஊற்றுக்களின் அடித்தளம் மொழிவழிச் சார்பு. மொழிவழிச் சார்பை இழந்த மனித வாழ்வு, மணமற்ற மலர்களின் குவியலைப் போன்றது. அங்கு வளர்ச்சிக்கும், மகிழ்ச்சிக்கும் மாறுதலுக்கும் உரிய வாய்ப்புக்கள் இல்லாமற் போய்விடுகின்றன. தமிழனுக்கு அவனுடைய தாய்மொழியே அவனுடைய சென்றகாலம் எதிர்காலம் எல்லாம். அவனுடைய மொழி, அவனுடைய நாகரிகம் இவற்றை உலகம் தெரிந்து கொள்ளுகின்ற காலத்திலேயே அவனுக்கு உண்மையான பெருமை ஏற்படும். இவற்றை யெல்லாம் இழந்துவிட்டுத்தான், அவன் பாரத நாட்டுக் குடிமகன் ஆகவேண்டும் என்று சொன்னால் அதை ஏற்றுக் கொள்ளுவதில் தமிழர்கள் பெரும்பாலும் சங்கடப்படு வார்கள். பாரத நாட்டின் ஆட்சிமொழியாக இந்தி மட்டும் இருக்குமென்ற கொள்கையை உறுதிப்படுத்த விரும்பினால், மொழி வழி தேசீய இன மாநில ஆட்சிக்கு இன்னும் இன்றிருப்பதைவிட அதிகமான உரிமைகள் தரப் பெற வேண்டும். சோவியத் யூனியனில் இருப்பது போலத் தனிக்கொடியும், உலக நாடுகளின் அவைக்குச் சார்பாளர் அனுப்புவதற்கு உரிமையும் மற்ற தேவைப்படுகின்ற நாடுகளோடு தூதும் உறவும் வைத்துக் கொள்ளும் உரிமையும் தரப்பெறுதல் வேண்டும். இத்தகு உரிமைகள் எல்லாம் தமிழனுக்கில்லாமல் தமிழன், இந்தியையும் இந்தியாவையும் ஏற்றுக் கொள்வதற்குத் தயங்குவான். மேலும், இந்தி பேசாத மாநில மக்களின் முன்னேற்றத்திற்கு என்ன உத்தரவாத மிருக்கிறது? இந்தியைத் தாய்மொழியாக உடையவனும், இல்லாதவனும் இந்தியிலேயே அரசாங்கத் தேர்வுகளை

எழுதவேண்டிய நிலைவரும். அப்பொழுது எப்படி இந்தியைத் தாய்மொழியாக இல்லாதவன் இந்தியைத் தாய்மொழியாக உடையவனோடு போட்டி போட முடியும்? அதிலும், கடந்த 15 ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழக அரசு இந்தி மொழிக் கொள்கையில் பாலுக்கும் காவல் பூனைக்கும் தோழன் என்ற மனப்போக்கிலேயே காலம் கடத்தி வந்திருக்கிறது.

இந்தியாவின் ஆட்சிமொழியாக முன் ஆங்கிலம் இருந்ததற்கும் இப்பொழுது இந்தி இருப்பதற்கும் நிறைய வேறுபாடு உள்ளது. ஆங்கிலம் மாநில எல்லையளவிலும் ஆட்சி மொழியாக இருந்தது. அதனால் தமிழ் கெட முடிந்தது. அது மட்டுமல்ல - தமிழ் உரிய வண்ணம் வளரவுமில்லை. ஆனால் இன்றோ இந்தி இந்தியக் கூட்டாட்சியின் ஆட்சி மொழி மட்டுமேயாம். தமிழ் நாட்டளவில் தமிழுக்கே முதலிடம்; தமிழே ஆட்சிமொழி ஆதலால் இந்தியால் தமிழ் கெட்டுவிடும் அல்லது தமிழன் கெட்டுவிடுவான் என்று சொல்வதற்கில்லை. எனினும் பண்டு தமிழ் தானே வளர்ந்தது; இனி தமிழன் தற்காப்புணர்ச்சியுடன், தமிழைப் பாதுகாக்க வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது. இந்தி வருகிறது என்ற கிலி வளர்ந்துள்ள அளவிற்கு தமிழ் வளர்கிறது என்ற நம்பிக்கை தமிழ் மக்களுக்கு ஊட்டப் பெறவில்லை. தமிழை ஆட்சிமொழியாக்கும் முயற்சியிலும், பயிற்சிமொழியாக்கும் முயற்சியிலும் தக்க - தீவிர முயற்சிகளைக் காட்டியிருக்கு மானால் தமிழர்களிடத்தில் மொழிவழிச் சார்பான நம்பிக்கை பிறந்திருக்கும். மேலும் தமிழ்நாட்டு மக்களிடத் தெழுந்த இந்தி எதிர்ப்புணர்ச்சிக்கு அரசு சரியான அல்லது ஆக்க ரீதியான முடிவெடுக்காமல் இந்தி எதிர்ப்புணர்ச்சியை ஒத்துக் கொண்டது போலவே மௌனமாக இருந்துவிட்டது. ஆதலால், தமிழ்நாட்டில் இந்திப் பயிற்சி பரவவில்லை-வளர வில்லை. இப்பொழுது திடீரென்று இன்னும் 10 ஆண்டு களுக்குள் இந்தியில் தயாராக வேண்டும் என்றால் அது எப்படிச் சாலும் என்பதையும் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

இந்தச் சிக்கலைத் தவிர்க்க இந்தி பேசாத மாநில மக்களுக்குத் தேர்வு எண்களில் ஏதாவது சலுகை வேண்டாமா? இந்தி மொழிச் சட்டத்தால் பாதிக்கக்கூடும் என்று கருதப்பெறும் இனங்களுக்கு உத்தியோகங்களில் ஒதுக்கீடு வேண்டாமா? இந்தி பேசாத மாநில மக்களின் கருத்தறிவதற்கு 10 ஆண்டுகள் எல்லைக் கோடு வைத்து வரையறுத்துப் பரிசீலனை செய்வதன் மூலம் எதிர்பார்க்கும் பலன் கிடைக்கும் என்று சொல்லமுடியாது. இந்தி பேசாத மாநில மக்கள் இந்தியில் குறைந்தது 75 விழுக்காடாவது பயிற்சி பெறுகிற வரையில், ஆங்கிலம் நீடிக்கும் என்று சொல்லிவிட்டுப் போகலாமே. 10 ஆண்டுகள் கழித்து ஒரு குழு அமைத்து அக்குழு ஆராய்வது என்றால் அக்குழுவில் யார் இருப்பது என்பதும் சிக்கல்.,

இந்தி பேசாத மாநிலத்தின் சார்பாளர்களே அதிகமாக அந்தக் குழுவில் இருந்தாலும்கூட அவர்கள், நாட்டுமக்களின் உள்ளெண்ணத்தைச் சரியான முறையில் பிரதிபலிப்பார்கள் என்பது என்ன உறுதி? அவர்கள் பெரிய பதவிகளை எதிர்பார்த்து "ஆமாம்சாமி" போடுகிறவர்களாகி விட்டால் நிலைமை என்னாவது? ஆதலால், பொதுவாக இந்தி ஆட்சி மொழிச் சட்டம் குறைகளும் நிறைகளும் கலந்ததாகவே இருக்கிறது.

இந்தியாவின் ஆட்சி மொழியாக இந்தி இருக்கட்டும். ஆனால் இந்தி மட்டும் இருக்கக் கூடாது. இந்தியா வின் வட்டார தேசிய மொழிகளையும் ஆட்சி மொழியாக ஏற்றுக் கொள்ள வேண்டும். இலங்கை அரசு சொல்லுகிற அளவிற்காவது இந்திய ஆட்சித் துறையில் வட்டார தேசீய மொழிகள் நியாயமான அளவிற்கு உபயோகிக்கப்படும் என்ற கொள்கையாவது ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும். இந்த முடிவை இந்திய அரசு ஏற்குமானால் இந்தியா வலிமை மிகுந்த ஒரு பெரு நாடாகத் தொடர்ந்து விளங்கும்.

அல்லாது, இந்தியே இந்தியாவின் ஒரே ஆட்சி மொழி என்ற முடிவை இந்திய அரசு விரும்பி வற்புறுத்துமானால் இந்தியக் கூட்டாட்சியின் ஒருமைப்பாட்டுக்கும் உறுதிக்கும் இடையூறில்லாத மாநிலக் கடியாட்சி தரப்பெற வேண்டும். இன்றிருப்பதைவிட அதிகமான உரிமைகளும் அதிகாரங் களும் மாநில ஆட்சிக்குத் தரப்பெறுதல் வேண்டும். தமிழர்கள் வாழ்கின்ற எல்லா அயல்நாடுகளுக்கும் மற்றும் விரும்பு கின்ற பிற நாடுகளுக்கும் கலாசார ரீதியான தூதுவர்கள் அனுப்பவும் பெற்றுக்கொள்ளவும் உரிமை வேண்டும். தமிழகத்தில் உள்ள மந்திய அரசின் அலுவலகங்கள் தமிழில் இயங்க வேண்டும். அதாவது வருமான வரித்துறை, அஞ்சல் துறை முதலியவற்றில் தமிழே வழங்கப்பெற வேண்டும்.

இந்திய அரசின் உத்தியோகங்கட்குரிய தேர்வுக்கு இந்தி மொழி அறிவு கேட்கப் பெற வேண்டுமேயொழிய அதற்குரிய அலுவலகத் தேர்வுகளைத் தமது தாய்மொழியிலும் எழுதும் உரிமை வழங்கப்பெற வேண்டும். மத்திய அரசின் உத்தியோகத்திற்கு நியாயமான அளவில், மொழிவழி தேசீய இனங்களுக்கு விகிதாசாரப்படி ஒதுக்கியாக வேண்டும். இப்படிப் பல்வேறு முன்னேற்பாடுகளுடனும், தெளிவான கருத்தோட்டத்துடனும் செய்யப்பட வேண்டிய ஒரு சட்டத்தை அவசரக் கோலத்தில் செய்தது நமக்கும் நாட்டுக்கும் நல்லதல்ல என்றே கருதுகிறோம். அதே காலத்தில் மக்களாட்சி நடைபெறுகிற பாரத நாட்டில் ஜனநாயக ரீதியாகவும், நியாய சட்ட வரம்புகளுக்குட்பட்ட கிளர்ச்சிகள் மூலமாகவும் நம்முடைய உரிமையைப் பெற முடியும். அதை மறந்துவிட்டு மொழிச் சிக்கலையும் நாட்டுப் பிரிவினையையும் ஒன்றாக இணைப்பது நாட்டுக்கு நல்லதல்ல.

ஆதலால் மொழிச் சிக்கலை நாட்டுப் பிரிவினைக் கோஷத்தோடு இணைக்கும் முயற்சியை நாம் அனுமதிப்பதற் கில்லை. அது நல்லதுமல்ல. தமிழக மக்கள் இவ்வகையில்

விழிபபாக இருந்து இந்திய தேசீய ஒருமைப்பாட்டைக் காப்பாற்ற வேண்டும். ஜனநாயக ரீதியில் நம்முடைய மொழி வழி உரிமைகளைப் பெற முயலவேண்டும்.

## 6. மறு பரிசீலனை தேவை

"இந்திய அரசின் தேர்வுகளை இந்தியில் எழுத 1965 விருந்து ஏற்பாடு செய்யப்பெறும் என்றும் ஆங்கிலத்திலிருந்து இந்திக்கு மாறுவதை நெடுநாட்களுக்குத் தள்ளிப் போடக் கூடாது என்றும் அதே காலத்தில் இந்தி பேசாத மாநில மக்கள் பாதிக்கப்பெறா வண்ணம் ஒரு பொது முறை நிர்ண யிக்கப் பெற வேண்டும்" என்றும் முதலமைச்சர்கள் மாநாட்டில் முடிவு செய்யப் பெற்றிருப்பதாகத் தெரிய வருகிறது. முடிவில் முதல் இரண்டில் இருக்கும் தெளிவும் உறுதியும் மூன்றாவதில் இல்லை என்பது வெளிப்படை. இம்முடிவுகள் பொதுவாக நியாயமானவையாக இல்லை என்பதை நாம் வற்புறுத்த விரும்புகின்றோம்.

மொழி அறிவு வேறு – பொருளறிவு வேறு. திறமையின் அளவுகோல் பொருளறிவேயாகும். தாய்மொழியில்தான் பொருளறிவு சிந்தனையோடு பொருந்தியதாக – வளர்ச்சியின் கூறுகள் பொருந்தியதாக – தெளிவாக இருக்க முடியும். அதனால்தான் தாய்மொழி மூலம் கல்வி என்ற நியதி உலக அரங்கில் ஒத்துக் கொள்ளப் பெற்றிருக்கிறது.

இந்திய அரசின் தேர்வை இந்தியில் எழுதுவதானால் மொழி முட்டுப்பாடு முன் நின்று அல்லற்படுத்தும். மொழியின் காரணமாக திறமையும் பயனில்லாமல் போகிறது. இது நியாயமல்ல. இந்தி அலுவலக மொழியா யிருப்பது தவிர்க்க முடியாதது. அப்படியிருப்பதில் தவறில்லை என்பது நமக்கு உடன்பாடுதான். எனினும் அலுவலக மொழியாக இருக்கும் இந்தியில், ஒரு மொழி அறிவுத் தேர்வு எழுதப்பெற வேண்டும் என்று கூறினால்

நியாயம் இருக்கிறது. நாம் புரிந்து கொள்ள முடியும். அதற்கு மாறாக எல்லாத் தேர்வுகளையும் இந்தியில் எழுதக் கூடிய ஏற்பாட்டைச் செய்வது நியாயமில்லை. ஆதலால் பொருளறிவு தொடர்புடைய எல்லாத் தேர்வுகளையும் அவரவர் தாய்மொழியிலேயே எழுதக் கூடிய வகையிலேயே இந்திய அரசின் அலுவலர்கள் தேர்வு இருக்க வேண்டும். உடன் இந்திமொழி அறிவுத் தேர்வும் எழுதவேண்டும். இதுவே சிறந்தது. ஆதலால் அரசினர் மீண்டும் தங்களுடைய முடிவுகளை பரிசீலனை செய்ய வேண்டும் என்பது நமது விருப்பம்.

## 7. யார் வைத்த தீயோ எரிகிறது!

கல்லூரிகளில் தாய் மொழியின் மூலம் பயிற்சி என்ற தூய கொள்கை, ஈன்றெடுத்த அரசின் காலத்திலேயே மரணப் படுகுழியை நோக்கி விரைந்து கொண்டிருக்கிறது. தாய் மொழியின் மூலம் பயிற்சி என்ற கொள்கை தாய் மொழியின் மீதுள்ள பற்றின் காரணமாக எழுந்ததுன்று என்பதை நாம் தொடர்ந்து வலியுறுத்திக் கூறிவந்துள்ளோம். சிந்தனையைத் தூண்டிச் செழுமைப்படுத்தி நல்லறிவைத் தருவதில் தாய் மொழியைப் போல, வேறு எம் மொழியும் துணைசெய்ய முடியாது. இது மனித, இயற்கையின் அடிப்படை நியதி. தாய் மொழியின் மூலம் பல்வேறு கலைகள் கற்பிக்கப் பெறுவதால் நம்முடைய நாட்டில் சுய சிந்தனை வளரும். தன் வயப்பட்ட அறிவு வளரும். அத்தோடு பாரதப் பெருநாட்டின் மொழிவழி மாநில மக்கள் தம்முடைய மொழி வளர்கிறது என்ற நம்பிக்கை பெறுவர்.

தேசீய ஒற்றுமை பாதுகாக்கப் பெறும் என்ற நம்பிக்கையின் காரணமாக - இந்த நல்லெண்ண அடிப் படையில் தொடங்கப் பெற்ற தாய்மொழி மூலம் பயிற்சி என்ற திட்டம் பொது மக்களாலும் ஆர்வத்தோடு வரவேற்கப்

படவில்லை. அரசும் போற்றி வளர்க்கவில்லை. இந்த நிலைமையால் நடை முறையாண்டில் நமது அரசு இக்கல்வித் திட்டத்திற்கு அளித்து வந்த உதவியை நிறுத்தி விட்டதாகத் தெரிய வருகிறது. பிறிதொரு புறம் வகுப்புகளுக்கு போதிய விண்ணப்பங்கள் வந்துசேரவில்லை என்றும் சொல்லப் படுகிறது. இவ்விரண்டில் எது காரணம், எது காரியம் என்ற நுணுக்கமான ஆராய்ச்சியில் நாம் தலையிட விரும்பவில்லை. யார் வைத்த தீயாக இருந்தாலும் எரிகிறது; எரிந்து கொண் டிருக்கிறது. காலத்தாலும் கருத்தாலும் மூத்துவளர்ந்த தமிழ் மொழியின் ஒளிபொருந்திய எதிர்காலம் தள்ளிப் போடப் பெற்றுள்ளது. ஆனால் இந்தத் துக்ககரமான சம்பவம் தமிழகத்தில் யார் மனத்திலும் துணுக்கை ஏற்படுத்தியதாகத் தெரியவில்லை. தமிழகம் தங்கையென காவிரியென பொங்கித் ததும்பிக் கரைபுரண்டு வருகிறது என்ற வார்த்தைகள் வறட்டுப் பொய் என்பது நிரூபிக்கப் பெற்று விட்டது. தமிழைக் காப்பதே நமது கடமை என்று முரசறைபவர் தரப்பிலும் மௌனமே நிற்கிறது. டில்லியில் தமிழா இந்தியா ஆங்கிலமா என்ற சண்டைக்குக் கொடுக்கும் முக்கியத்துவம் ஏனோ தமிழகத்தில் தமிழா ஆங்கிலமா? என்ற கேள்விக்குக் கொடுக்கப் பெறவில்லை.

தமிழர்களிடத்தில் தாய்மொழி உணர்ச்சி போதிய அளவு உருப்பெற்று வளரவில்லை. அவர்கள் வாழ்க்கையில் எங்கும் எல்லாவற்றிலும் இன்பத்தமிழே என்ற இலட்சிய நோக்கம் உரம் பெற்றாலன்றித் தமிழுக்கும் எதிர்கால மில்லை! தமிழர்க்கும் எதிர்காலமில்லை.

## 8. தமிழின் எதிர்காலம்

தமிழக சட்டமன்றத்தில் தமிழக ஆட்சி மொழியாக ஆங்கிலமும் இருக்கும் என்று ஒரு மனதாக முடிவு செய்யப் பெற்றுள்ளது. இதனுடைய விளைவுகள் என்ன? எதிர்காலத்தில் தமிழுக்கு உரிய இடம் எது என்பதை நம்மால்

விளங்கிக் கொள்ள முடியவில்லை. இந்திய அரசியல் சட்டத்தின்படி மாநிலங்களின் ஆட்சிமொழி மாநில மொழியேயாகும். அதையொட்டி உயர்திரு காமராசர் தமிழ் நாட்டின் முதலமைச்சராக இருந்தபோது தமிழகத்தின் ஆட்சிமொழி தமிழ் என்று சட்டம் செய்தார்கள். நடை முறைக்குக் கொண்டு வருவதிலும், அக்கறை காட்டினார்கள். ஆனாலும் வளர்ச்சி மெதுவாக இருந்தது. இப்பொழுது திடீரென்று ஆங்கிலத்தை இணை ஆட்சிமொழியாக ஆக்கச் சட்டம் செய்யவேண்டியதன் அவசியம் என்ன வந்தது? இப்படி நாம் கூறுவதால் நம்மை ஆங்கில எதிர்ப்பாளர் வரிசையில் சேர்க்க வேண்டியதில்லை; ஆங்கிலம் வளர்ந்த - உலகறிந்த அறிவியல் மொழி, உலகில் பலர் பேசுகின்ற மொழி. ஆங்கில அறிவும் நுட்பமும் அருந்தமிழை வளர்க்க உதவும். தமிழர்களின் சிறப்பான எதிர்காலத்திற்கும் உதவும். இதில் எத்தகைய கருத்து வேறுபாடும் கிடையாது. ஆதலால், ஆங்கிலப் பயிற்சி தேவை. தமிழை வளர்க்கும் நோக்கத்தோடு ஆங்கிலப் பயிற்சியை வரவேற்க வேண்டும். ஆனாலும், ஆங்கிலமே எல்லாமும் ஆகிவிடக் கூடாது. ஆதலால், தமிழகத்தில் தமிழிலேயே ஆட்சி நடை பெற வேண்டும். இது, சுதந்திரம் வழங்கிய உரிமைகளில் ஒன்று. ஆங்கிலம் ஆட்சி மொழியாக இல்லாதுபோனால், ஆங்கில அறிவைப் பெற முடியாதா? பெற வேறு வழியில்லையா என்பதைச் சான்றோர்கள் பரிசீலனை செய்ய வேண்டும். மத்திய ஆட்சியில் ஆங்கிலம் இணைமொழியாக நீடிக்கும். ஆதலால், இங்கும் ஆங்கிலம் நீடிக்க வேண்டும் என்று சிலர் கூறுகிறார்கள். அதிலிருக்கிற விவாத அல்லது நியாயத் தன்மைகளை நம்மால் புரிந்து கொள்ள முடியவில்லை. அதே நேரத்தில் தமிழுக்காகவே ஏங்கிக் கொண்டிருப்பதாக அறிவித்துக் கொள்ளும் தி.மு.க. உறுப்பினர்கள் இந்த ஆங்கில நீடிப்பையும் வரவேற்றிருக்கிறார்கள். அவர்கள் இந்தி வந்துவிடும் என்ற அச்சத்தால், இதை வரவேற்கிறோம் என்று

கூறியுள்ளார்கள். மாநில ஆட்சியில் இந்தி வருவதற்கு இடம் ஏது? சட்டப்படியும் இல்லை. நியாயப்படியும் இல்லை. அதனால், அவர்களின் வாதம் எவ்வளவு தூரம் பொருந்தும் என்பது நமக்கு விளங்கவில்லை. ஆக, எப்படியோ தமிழ் நாட்டில் தமிழ் எல்லா இடங்களிலும் இடம் பெறுதற்குரிய முயற்சி தள்ளிப் போடப்பட்டிருக்கிறது - தட்டிக் கழிக்கப்படுகிறது என்றே நாம் கருதுகிறோம். தமிழ்ப் பெருங்குடி மக்களும் தமிழறிஞர்களும் இது குறித்து மீண்டும் பரிசீலனை செய்ய வேண்டும் என்று விரும்புகிறோம்!

## 9. தீயணைக்க வாரீர்!

தமிழகம் முழுதும் இந்தித் திணிப்பை எதிர்த்து இளந் தலைமுறையினர் கிளர்ச்சி செய்கின்றனர். கிளர்ச்சித் தீ பற்றி எரிகிறது - பரவுகிறது. உயிர்களுக்கும் உடைமைகளுக்கும் ஆபத்து ஏற்பட்டிருக்கிறது; இளந் தலைமுறையைச் சார்ந்தவர்கள் போலீஸ் அடக்குமுறைக்கு ஆளாகி உயிர் துறந்திருக்கிறார்கள். இச்செய்தி வேதனையைத் தருகிறது - விழிநீர் பெருக்குகிறது! மொழிக் கிளர்ச்சியில் உயிர் துறந்த வர்களின் ஆன்மாக்கள் சாந்தியடைய நமது பிரார்த்தனை!

மொழி வழிப்பட்ட உணர்ச்சிகளை, கவனமாகக் கையாளாவிடில் மனித சமுதாயம் ஒருமைப்பாடற்றதாகி உருக்குலைந்து விடும். உணர்ச்சி தோன்றுவதியற்கை. ஆனால் அவ்வுணர்ச்சியை ஒழுங்குபடுத்துவதே அறிவுடைமை - மனிதனின் விழுமிய கடமை. இப்பொழுது இங்கு மிகுந்து நிற்பது மொழியுணர்ச்சியா மொழியறிவா என்பது ஆய்வுக் குரியது. மொழியுணர்ச்சியின் பாற்பட்டு ஆதிக்க வெறி கொள்வது மனித இயல் ஒழுக்கத்திற்கு முரண்பட்டது. இத்தவற்றை யார் செய்தாலும் தவறு தவறுதான்.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபத்தைந்தில் மத்திய ஆட்சியின் அலுவலக மொழியாக இந்தி வரும் என்பது

ஆட்சியாளர் கொள்கை. அதே காலத்தில், மாநில மட்டத்தில் மாநில மொழிகள் அலுவலக மொழிகளாக இடம் பெற வேண்டும் என்பதும் ஏற்றுக் கொள்ளப் பெற்ற கொள்கை. இந்திய மட்டத்தில் இந்தி வருகிற வேகத்தைப் போல, தமிழ் மாநிலத்தில் தமிழை முழு அளவில் ஆட்சி மொழியாக - அலுவலக மொழியாக இடம் பெறச் செய்ய மாநில அரசு உரிய முயற்சிகளை காலத்தே செய்யாதது வருந்தத் தக்கது. அரசைச் செய்யும்படி தூண்டாதது மக்களின் தவறு. அரசியல் கட்சிகளின் தவறு. மாறாக, தமிழ் பயிற்சி மொழி இயக்கம் படுதோல்வியடைந்தது. தமிழ் பயிற்சி மொழி இயக்கம் வெற்றி பெற்றாலன்றோ தமிழ் ஆட்சி மொழியாக முடியும்? தமிழுக்குப் பாதுகாப்பு கிடைக்க முடியும்! தமிழ் பயிற்சிமொழி இயக்கத்திற்கு ஏற்பட்ட தோல்வி தமிழரின் சிந்தனையைத் தொடவில்லை. அதற்காக அவர்கள் வெட்கித் தலைகுனியவில்லை - அந்தச் செய்தியே செத்துவிட்டது. இன்று அது பற்றிப் பேசுவோரும் இல்லை; எழுதுவோரும் இல்லை.

நடைபெறுகின்ற கிளர்ச்சி தமிழ்ப் பாதுகாப்புக் காகவா ஆங்கிலப் பாதுகாப்புக்காகவா என்பதையே நம்மால் புரிந்து கொள்ள முடியவில்லை. அதனாலேயே நாமும் அமைதியாகக் கண்காணிக்க வேண்டிய பொறுப்பும் நிலையும் ஏற்பட்டன. தமிழ்ப் பாதுகாப்பு இயக்கமாக இருந்தால் மனநிறைவோடு வரவேற்கலாம், பாராட்டலாம். போராட்டத்திற்குத் துணை நிற்கவும் செய்யலாம். இது நம்முடைய கடமை என்பதை நாம் தெளிவாக உணர் கின்றோம்.

அடுத்து ஒரு குறிப்பிட்ட போராட்டத்தை நடத்து வதில் பொறுப்புள்ள தலைவர்கள் பொதுமக்கள் முன்நிற்க வேண்டும். அதிலும் நிலைமைகளைச் சமாளிக்கும் ஆற்றல் உடையவர்கள் கிளர்ச்சிகளை நடத்த வேண்டும். ஆங்கிலே யரின் ஆதிக்கத்தை எதிர்த்து விடுதலைப் போராட்டம்

நடத்திய அண்ணல் காந்தியடிகள், எதிர்ப்பு மறியல் போராட்டத்திற்கு வினோபாஜி, ராஜாஜி போன்ற பெரு மக்களையே தேர்ந்தெடுத்தார். போராட்டம் திசை தவறிச் செல்லாமல் அமைதியாகச் சென்றது. ஓரிரண்டு மறச் செயல்கள் நிகழ்வுற்றாலும் போராட்டத்தின் முழுவடிவம் கொலை, கொள்ளைகளினின்றும் விடுபட்ட அமைதிப் புரட்சியாகவே இருந்தது. இப்பொழுதும் இளந் தலைமுறை யினரைக் கிளர்ச்சிக்கு இழுக்காமல் அரசியல் சமுதாயம் ஆகியவற்றைச் சார்ந்த தலைவர்கள், பெரியவர்கள் போராட்டத்தை நடத்த முன்வந்திருக்க வேண்டும். அவர்கள் அவ்வாறு செய்யாதது வருந்தத் தக்கதேயாகும்.

அரசாங்கம், அதுவும் மக்களாட்சி அரசாங்கம் மக்களின் உணர்ச்சிகளுக்கு மதிப்புக் கொடுப்பது இன்றியமை யாதது - கடமையுங்கூட. மக்களின் இந்தி எதிர்ப்புணர்ச் சியை மாநில மத்திய அரசுகள், முழுமையாகக் கணக்கில் எடுத்துக் கொண்டு மாற்று வழிவகை காணாதது ஆழ்ந்த கவலையைத் தருகிறது. ஒரு மொழியைச் சார்ந்த மக்கள் விரும்பாத ஒன்றை எந்தப் பெயர் சொல்லித் திணித்தாலும் வெறுப்புணர்ச்சியே வளரும். என்ன அவசரம் அறுபத் தைந்தில் இந்தியை ஆட்சிமொழியாக்கிவிட வேண்டுமென்று? அதற்காக டில்லியில் ஒரு விழா ஏன்? நியாயமற்ற முறைகள் நியாயமற்ற பலாபலன்களையே தோற்றுவிக்கும். இதை மத்திய அரசின் ஆட்சித் தலைவர்கள் உணராதது விந்தை யாக இருக்கிறது - ஆங்கிலம் நீடிக்க வேண்டும் என்று மக்கள் விரும்பினால் நீடிப்பது அவசியம்தானே? இதற்கிடையில் "வார்த்தை ஜாலங்கள்" நடத்துவது நியாயமா? ``May" என்று போட்டாலும் ``Shall" என்று போட்டாலும் ஒரே பொருள் தான் என்று அரசு விவாதிக்குமானால் Shall என்றே போட்டுவிட்டுப் போகலாமே! மத்திய அரசு இத்தகு பிரச்னைகளில் பிடிவாதமாக இருப்பது விரும்பத் தக்கதன்று.

'பதினான்கு மொழிகள் தேசிய மொழிகளாக வழங்குகிற நாட்டில் - பூரண மக்களாட்சி நிலவ முடியுமா?

பாராளுமன்ற நடவடிக்கைகளில் அவரவர்களும் அவரவர் தாய் மொழியில் பேச உரிமை வழங்குவதே ஜனநாயகத்தின் முதற் கடமை. அரசின் தேர்வுகளை அவரவர் தாய் மொழியில் எழுத உரிமை இருந்தாலேயே அறிவின் செழுமை வெளிப்படும். தொடர்பு மொழி கற்றுக் கொள்வது வேறு... அதையே அறிவு மொழியாக ஏற்றுக் கொள்வது வேறு, மேலும் இந்தி அல்லாத மாநில மக்களின் உத்தியோக வாய்ப்புகளுக்கு உத்தரவாதமில்லை. இப்படி பல்வேறு குறைகள் மலிந்து காணப்படும்போது அவற்றிற்கு உரிய மாற்றங்களைக் காணாமல் இந்தியை மட்டும் அலுவலக மொழியாக அமர்த்துவது நியாயமுமாகாது - நீதியுமாகாது. இந்திய ஆட்சிக்கு இந்தியோடு ஆங்கிலத்தை அலுவலக இணை ஆட்சி மொழியாக என்றும் இருக்கும்படி செய்வது நாட்டின் ஒற்றுமைக்கும் நல்லது. உலக உறவுக்கும் நல்லது. உடனடியாக அரசு இக்கோரிக்கையை நிறைவேற்றி நாட்டில் அமைதிச் சூழலை உருவாக்க முன்வரவேண்டும். இப்பொழுது இதைச் செய்யாது போனால், மத்திய ஆட்சியின் அலுவலக மொழியாக தேசீய மொழிகள் அனைத்தும் இடம்பெற வேண்டும் என்ற கிளர்ச்சி மேலோங்கி ஒரு புதிய சிக்கலைத் தோற்றுவிக்கும். நம்மைப் பொறுத்தவரையில், தேசிய மொழிகள் அனைத்தும் இந்திய அரசின் அலுவலக மொழியாவதை விரும்புகின்றோம் - வரவேற்கின்றோம். ஆனாலும், நாட்டின் பொருளாதார நிலை, ஆட்சிமுறை இவற்றின் காரணமாக தற்பொழுது அது சாத்தியமில்லை என்றே கருதுகின்றோம். இருந்தாலும், எதிர்கால இலட்சியம் அதுவாக இருக்க வேண்டும் என்பதே நமது கருத்து. எனினும், இந்தியக் குடிமகன் ஒருவன் தாய்மொழி, ஆங்கிலம், இந்தி ஆகிய மொழிகளைப் பயில்வதும், அம்மொழிகளில் அறிவைப் பெறுவதும் தனிப்பட்ட வாழ்க்கைக்கும் பாரத சமுதாயத்தின் கூட்டு வாழ்க்கைக்கும் நல்லது என்று கருதுகிறோம். இந்தி

படிப்பதை, எதிர்ப்பதன் மூலம் நாட்டு மக்களுக்குள் உறவு ஏற்பட முடியாமல் போய்விடும். தென்னகத்து மக்கள் வட புலத்தில் பெரும்பான்மையோர் பேசுகிற இந்தியைக் கற்றுக் கொள்ள வேண்டும். அதுபோல, வடபுலத்து மக்கள் தென்ன கத்து மக்கள் பேசுகின்ற மொழியைக் கற்றுக் கொள்ள வேண்டும். இம்முறையைக் கட்டாயப்படுத்தினாலும் ஒன்றும் தவறில்லை. தொழில், வணிகம் முதலியன வளரவும் பரவவும் இது அவசிய மேயாம். ஆனாலும் எந்த ஒரு மொழியையும், ஆதிக்கத்தின் சின்னமாகத் தமிழன் ஒரு பொழுதும், ஏற்றுக் கொள்ள மாட்டான். ஏற்றுக் கொள்ளுமாறு கேட்பதும் நியாயமில்லை.

உடனடியாக மத்திய அரசு இந்தி ஆட்சி மொழி யாகிறது என்கிற அச்சத்தைத் தவிர்த்து ஆங்கிலம் நீண்ட நெடிய நாட்களுக்கு காலவரையறையின்றி இணையாட்சி மொழியாக இருக்கும் என்று அறிவிக்கவேண்டும். மாநில அரசுகள் குறிப்பாகத் தமிழக அரசு தமிழை எல்லா வகையிலும் பூரண ஆட்சி மொழியாக ஆக்கும் முயற்சியை இன்னும் தள்ளிப்போடாது உடனடியாக நிறைவேற்றுதற் குரிய ஆக்கப் பூர்வமான முயற்சிகள் எடுக்க வேண்டும். இவ் விரண்டையும் அரசுகள் செய்யத்தவறினால் போராடுவது தவிர வேறு வழியில்லை; நாம் குறிக்கும் போர் இந்தி எதிர்ப்புப் போராக இருக்காது. தமிழ்ப் பாதுகாப்புப் போராகவே அமையும்! மாணவர்களின் மொழியுணர்ச்சி பாராட்டுக்குரியது. அவர்களின் மொழியுணர்வை, மொழி யார்வத்தை தமிழைப் பாதுகாக்கும் முயற்சியில் ஈடுபடுத்த வேண்டும் என்பது நமது கோரிக்கை. அப்படி அவர்கள் செய்யும் ஒவ்வொரு முயற்சிக்கும் நமது உதவியும் ஒத்துழைப்பும் என்றும் எப்பொழுதும் ஒல்லும்வகை யெல்லாம் உண்டு. நம்முடைய எதிர்ப்புணர்ச்சியை முறைப்படுத்தி அமைதியாக அணிதிரண்டு காட்டுவது அதிகப் பயன் தரும் எனப்து மாணவர்கள் அறியாததன்று. அரசின் முடிவும் மாணவர்களின் அமைதிப் போக்கும் நாட்டை நல்வழிப்படுத்துவதாக!

# 10. இந்திய ஆட்சிமொழி

பாரதநாடு மிகப் பெரிய நாடு. பல வேறு மொழிகள் பேசும் மக்கள் வாழும் நாடு. இந்நாட்டின் ஒருமைப்பாடே பாரதத்தின் பாதுகாப்பு. இந்திய ஒருமைப்பாட்டுக்கு இடையூறாக மொழி, சமய உணர்ச்சிகளைக் கைக்கொள்வது நன்மை தராது. இன்று பாரதநாட்டு மக்களிடையே மொழி உணர்ச்சி எங்கு கூடுதல் எங்கு குறை என்று சொல்ல முடியாத வண்ணம் பெருகி நிற்கிறது. இந்தி மொழி வெறியர் எப்படியும், யார் எதிர்த்தாலும், சட்டத்தின் துணைகொண்டு இந்தியை அரியணையில் அமர்த்தி ஆட்சி மொழியாக்கி விடவேண்டும் என்றே கருதுகின்றார்கள். இந்தி பேசாத மாநில மக்கள் குறிப்பாகத் தமிழகம் - வங்கத்து மக்கள் இந்தியை எதிர்ப்பதொன்றே தங்கள் இலட்சியம் என்று கருதுகின்றார்கள். அவர்களுடைய இந்தி எதிர்ப்பு உணர்ச்சி தாய்மொழியின் மீது பற்றாகத் திருப்பிவிடப்படாமல் ஆங்கிலப்பற்றாக வளர்ந்திருப்பது, வருத்தத்திற்குரியதாகும்.

ஆட்சி மொழிக் கொள்கையைப் பல்வேறு மொழிகள் பேசும் மக்கள் வாழும் நாட்டில் எல்லோரும் மனநிறைவோடு ஏற்றுக் கொள்ளும்படி செய்வதன் மூலம்தான் ஒருமைப் பாட்டையும் அமைதியையும் வளர்க்க முடியும். அங்ஙன மின்றி சட்டத்தின் துணையுடனோ அல்லது பெரும்பான்மை யோரின் முடிவு என்ற வாதத்தின் அடிப்படையிலோ ஒரு கொள்கை திணிக்கப்படுமானால் அந்த முறை நாட்டின் நல்வாழ்விற்கு உகந்தது அல்ல. பரிபூர்ண மக்களாட்சி முறைக்கும் ஏற்றமல்ல. இந்தியாவில் - இந்தியைத் தாய்மொழி யாகக் கொண்டு பேசும் மக்களின் எண்ணிக்கையைத் தனித்தனியே பிறமொழி பேசும் மக்களின் எண்ணிக்கை யோடு தனியே ஒப்புநோக்கும் பொழுது இந்தி பேசும் மக்களின் எண்ணிக்கை அதிகம் போலத் தோன்றினாலும் மொத்தத்தில் இந்தி பேசாத மக்களே அதிகம். எனினும்

இந்தியை அலுவலக மொழியாக ஏற்றுக்கொள்வதென இந்திய அரசியல் நிர்ணய சபை முடிவு செய்திருக்கிறது. சட்டபூர்வமாக இந்தியை இந்தியாவின் அலுவலக மொழி யாக ஆக்குவதற்கு முன் இந்தி பேசாத மாநில மக்கள் இந்தியில் பயிற்சி பெற தக்க முயற்சிகள் செய்யப்பெற வேண்டும் என்றும், அதற்குரிய கால இடைவெளி தரப்பெற வேண்டும் என்றும் முடிவு எடுக்கப் பெற்றது.

இந்தச் சூழ்நிலையில் தமிழக மக்கள் தொடர்ந்து இந்தியைப் படிப்பதற்குக்கூட எதிர்த்துக் கொண்டு வந்திருக் கிறார்கள். எனினும் மத்திய அரசும் மாநில அரசும் ஒத்துக்கொண்ட மும்மொழித் திட்டத்தின் அடிப்படையில் தமிழக மாணவர்கள் உயர்நிலைப் பள்ளி அளவில் பரவலாக இந்தி படிக்கத் தொடங்கினார்கள். எனினும் இந்தி எதிர்ப் புடைய அரசியல் கட்சிகள் சலசலப்பை உண்டுபண்ணி கொண்டே இருந்தன. மாநில அரசும் கொள்கைக்கேற்ற நிர்ணயிப்பைக் கையாளாமல் 'கட்டாயமில்லை" என்றும் 'தேர்வு! இல்லை" என்றும் அடிக்கடி இந்தி படிக்கும் உணர்ச்சியை ஆர்வத்தைத் தடுத்து நிறுத்தின. ஆதலால் தமிழக மாணவர்கள் பெரும்பாலோர் இந்தியில் தயாராக இல்லை. பெரும்பாலோர் இந்தியில் தயாராக இல்லை. பெருமபாலோர் மொழியில் தயாராவதற்கு உரிய முயற்சி களை மத்திய அரசும், மாநில அரசும் முழு அளவில் எடுத்துக் கொள்ளவில்லை. ஆனாலும் சட்டப்படி இந்தி - இந்தியாவின் அலுவலக மொழியாக 1965 ஜனுவரி 26-ல் வந்துவிட்டது என்ற செய்தி இந்தி பேசாத மாநில மக்களிடத்தில் அதிர்ச்சியையும் அதிருப்தியையும் தந்துள்ளது. மொழிவழித் தொடர்பானதும் வாழ்க்கை நலனோடு பின்னிப் பிணைக்கப் பட்டதுமாகிய ஒரு சிக்கலுக்கு வெறும் வாக்குறுதிகளால் மட்டும் தீர்வு காண முடியாது. இந்திக்குச் சட்டப்படி உரிமை, தாய்மொழிக்கோ அல்லது ஆங்கிலத்துக்கோ சலுகைத் தன்மையுடன் கூடிய வாக்குறுதிகளால் பாதுகாப்பு

என்று சொன்னால் அதை எப்படி நம்ப முடியும்? அல்லது அது எப்படி உத்திரவாதமாக முடியும்? அல்லது நீதி மன்றங்களில் தான் செலாவணியாகுமா?

இந்தியாவின் அலுவலக மொழியாக இந்திய தேசீய மொழிகள் பதினான்கும் இடம்பெறுவது நியாயம். நீதியும் கூட. பூர்ண மக்களாட்சி மரபுக்கும் ஏற்றதும்கூட. ஆனாலும் இன்றைய நாட்டின் பொருளாதர சூழ்நிலை இந்த விரிவான அடிப்படையை ஏற்றுக் கொள்ள இடம் தராது என்பதற்கு நாம் முற்றிலும் உடன்படுகின்றோம். ஆனாலும் எதிர்கால இலட்சியம் இந்திய தேசீய மொழிகள் அனைத்தையும் இந்தியாவின் அலுவலக மொழியாக ஆக்குவதாகவே இருக்க வேண்டும்.

இந்த நிலைமை உருவாகின்ற காலம் வரையில் இந்தியோடு ஆங்கிலம் காலவரையறையின்றி இந்தியாவின் இணை ஆட்சி மொழியாக சட்டபூர்வமாக உரிமை பெற வேண்டும். ஆனாலும் ஆங்கிலம் நீண்ட நெடிய நாட்களுக்கு நீடிப்பதென்பதும் நல்லதல்ல. உண்மையை உள்ளவாறு சொன்னால் தற்காலிகமாக ஆங்கிலம் நீடிப்பதில்கூட இந்தி பேசாத மாநில மக்களின் பெரும்பாலோர் நலன் பாதுகாக்கப் பட்டதாக ஆகாது. ஏனெனில் தமிழ்நாட்டிலும் கூட ஆங்கிலம் அறிந்தவர்களின் எண்ணிக்கை சதவீதம் மிகக் குறைவே, தெரிந்தவர்களிலும்கூட படிப்பறிவு உடையவர்களே அதிகம். மொழியறிவுடையவர்கள் மிக மிகக் குறைவு. நாம் இப்படிக் கூட ஒரு கணக்குப் போட்டு பார்க்க விரும்புகிறோம். இந்திக்கு எதிராக ஆங்கிலத்திற்கு சாதகமாக நடைபெறும் போராட்டம் தமிழகத்தில் முன்னணிச் சமுதாயத்தினராக ஆங்கிலத்தைக் காலத்தில் பயின்று ஆங்கிலத்தின் மூலம் உத்தியோக வாய்ப்புக்களை ஏகபோகமாகப் பெற்று அனுபவிக்கின்றவர்கள் தங்களுடைய நலன்களைத் தொடர்ந்து காப்பாற்றிக் கொள்ளத்தான் செய்கிறார்களோ என்பது நமது ஐயப்பாடு. ஏனெனில் இந்தி

எதிர்ப்பு உணர்ச்சி தமிழ் ஆட்சிமொழி இயக்கமாகவே வளரவில்லை. அது ஆங்கில ஆட்சிமொழி இயக்கமாகவே உருவெடுத்தது. அது மக்கள் இயக்கமாக இருக்குமாயின் நிச்சயமாக தமிழ் ஆட்சிமொழி இயக்கமாகத்தான் வடிவெடுத்திருக்க முடியும். அங்ஙனம் இல்லாததின் காரணத்தால் முன்னணிச் சமுதாயத்தினர் தங்களுடைய நலனுக்கு என்று திட்டமிட்டு செய்யக்கூடிய ஒரு காரியம் இந்தி எதிர்ப்பின் பேரால் நடத்தும் ஆங்கிலப் பாதுகாப்புப் போர் என்பதும் நமது கருத்து. எது எப்படியிருப்பினும் இந்தியாவின் இணை ஆட்சிமொழியாக இந்தியோடு ஆங்கிலம், பிராந்திய மொழிகள் இந்தி பெற்றுள்ள இடத்தை பெறுகிற காலம்வரை நீடிப்பது அவசியம்.

இந்தியும் ஆங்கிலமும் மத்திய ஆட்சியின் அலுவலக மொழியாக இருப்பினும் மத்திய அரசின் அலுவலர் தேர்வுகளில் தாய்மொழியில் எழுத உரிமை வேண்டும். பாராளுமன்றத்தில் தேசிய மொழிகள் அனைத்திலும் பேசும் உரிமை வேண்டும். மேலும் மத்திய அரசின் அலுவலகங்கள் மாநில அளவில் பொதுமக்களோடு தொடர்பு கொள்ளும் போது மாநில மொழியிலேயே தொடர்பு கொள்ள வேண்டும். இத்தகைய ஏற்பாடுகள் சட்டபூர்வமாக செய்யப் பெற வேண்டும். உயர்நீதி மன்றத்தின் ஒப்புதல் வேண்டும். மாநில அரசுகள் தாய்மொழியை பல்வேறு துறைகளிலும் வளம்பெற்ற ஒரு மொழியாக வளர்க்க காலம் தாழ்த்தாது முயற்சிகள் செய்தல் வேண்டும். எல்லாவற்றிக்கும் மேலாக இந்தியாவை இணைக்கக் கூடிய ஒரு பொது உறவு மொழி (Link Language) மிகவும் அவசியமானது என்பதை நம் நாட்டு மக்கள் உணரவேண்டும். தென்னிந்திய மக்கள் குறிப்பாக இந்தி பேசாத மாநில மக்கள் நிச்சயம் இந்தியை ஒரு உறவுமொழியாக ஏற்றுப் படிக்க வேண்டும். அது போலவே இந்தி பேசும் மாநில மக்கள் வேறொரு இந்திய மொழியை நிச்சயம் படிக்க வேண்டும். இந்த நிலை ஏற்படாத வரையில்

இந்திய ஒருமைப்பாடு உணர்ச்சி பூர்வமானதாக வளராது அமையாது. எப்படியும் இந்தியின் ஆதிக்கத்தைப் பற்றிய தவறான எண்ணங்கள் இந்தி பேசாத மாநில மக்களின் மனதைவிட்டு அகல வேண்டும். இந்தியாவில் இந்தியப் பேரரசில் சமஉரிமைகள் பெற்ற நிலையில் இந்திய தேசீய மொழிகள் அனைத்தும் விளங்க வேண்டும். அதுவே இந்தியாவின் பொற்காலம்.

## 11. அமைதி காப்போம்

இந்தி ஆட்சி மொழிச் சிக்கல் தொடர்பாக, தமிழகத்தில் - தென்னகத்தில் வன்முறைச் செயல்களோடு கூடிய கலவரங்கள் நிகழ்வுற்றன. இத்தகு கலவர நிகழ்ச்சிகளுக்குப் பூரண பொறுப்பு மாணவர்களே என்று நாம் நம்பவில்லை. சமூக விரோத தீய சக்திகள் இவ்வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு ஆடித் தீர்த்து விட்டார்கள். நாட்டு வரலாற்றில் களங்கத்தை ஏற்படுத்தி விட்டார்கள். மன்னிக்க முடியாத குற்றம், வன்முறைச் செயல்கள் தலைவிரித்தாடியபோது, அந்த அறைகூவலைத் திறமையாக ஏற்றுச் சமாளித்த தமிழக முதலமைச்சர் மேதகு பக்தவச்சலம் அவர்களுக்கும், உள்துறை அமைச்சர் மேதகு கக்கன் அவர்களுக்கும்; திறம்படச் செயலாற்றிய நிருவாக உறுப்பினர்களுக்கும் நாடு மிகவும் கடமைப்பட்டிருக்கிறது.

மொழிக் கிளர்ச்சியின் முடிவில் மாநில அரசும் மத்திய அரசும் அறிவித்திருக்கும் முடிவுகள் மனநிறைவைத் தருவ தாகவே இருக்கின்றன. குறிப்பாகப் பலதுறைகளில், 1963 - ஆம் ஆண்டில் குன்றக்குடியில் நடைபெற்ற தமிழ்ப் பாது காப்பு மாநாட்டின் தீர்மானங்களை ஒட்டியே அமைந் துள்ளன. அதுகுறித்து நாம் மகிழ்ச்சி அடையவும் பெருமை கொள்ளவும் வாய்ப்பு இருக்கிறது.

பல்வேறு மொழிகள் பேசும் நாட்டில் ஒருமொழி மட்டும் உடனடியாக அல்லது வேகமாக ஆட்சி மொழியாவது அம்மொழியைச் சாராத மக்களிடத்தில் அதிருப்தியைத் தோற்றுவிப்பது இயற்கையேயாகும். அதுவும் மொழி வழி உணர்ச்சிகளைத் தூண்டிவிடும் இயக்கங்கள் உள்ள நாட்டில் மேலும் இயற்கையாகும். தாய்மாழிப் பற்று மனிதனின் குருதியோடு கலந்த ஒன்று. அந்த உணர்ச்சியைக் கட்டுப்படுத்த மொழி, சமயம் போன்றவற்றை விஞ்ஞானப் பார்வையோடு பார்ப்பவர்களுக்கே சாலும். இந்தியாவின் அலுவலக ஆட்சி மொழிகளாக இந்திய தேசீய மொழிகள் பதினான்குமே இருப்பது நல்லது; நாமும் அதையே விரும்புகின்றோம். ஆனாலும், இன்றைய இந்திய நாட்டின் பொருளாதாரச் சூழ்நிலையில் 14 மொழிகளையும் அலுவலக மொழிகளாக்க முடியுமா என்பதையும் நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். மக்களின் நல்வாழ்வுக்குத்தான் மொழியும் நிர்வாகமுமே தவிர அதற்கு மாறாக, நிர்வாகத்தைச் சுமையாக்கி, மக்களை வளமற்ற வறுமை நிறைந்த வாழ்க்கைக்கு அழைத்துச் செல்வதில் என்ன பயன்? ஆதலால் எதிர்கால இலட்சியமாக 14 மொழிகளையுமே அலுவலக மொழிகளாக்கலாம் என்பதை நாம் கொள்ளலாம்; கொள்ள வேண்டும். இந்தியப் பேரரசு உரிய காலத்தில், அதைச் செய்வதாக உத்தரவாதம் தரவேண்டும். இந்த இடைவெளிக் காலத்தில் இந்தி, இந்தியாவின் அலுவலக மொழியாக இருப்பதை, ஆங்கிலம் இணை ஆட்சி மொழியாக நீடிக்கிறது என்ற அடிப்படையில் நாம் ஏற்றுக் கொள்ள வேண்டும். எப்படியும் இந்திய மொழிகளில் ஒன்றுதான் இந்தியாவின் அலுவலக மொழியாக இருக்க வேண்டும்; இருக்க முடியும். ஆங்கிலத்தை மட்டும் அலுவலக மொழியாக்கக் கோருவது தேச பக்தியு மில்லை; நியாயமும் ஆகாது; நீதியும் ஆகாது. அப்படி ஆங்கிலத்தை மட்டும் ஆட்சி மொழியாக்கக் கேட்பது ஏற்கனவேயே ஆதிக்கம் பெற்றிருந்த சமுதாயத்தின் ஆதிக்கத்தை, தொடர்ந்து காப்பாற்றவே பயன்படும். மத்திய

அரசின் அலுவலகத் தேர்வுகளை, தாய்மொழியில் எழுத அனுமதிக்கும்படி தமிழ்நாடு காங்கிரசு மகாசபை கேட்டிருப்பது வரவேற்கத்தக்கது. பொதுப்படையாக, மொழிச் சிக்கலில் மத்திய அரசும் மாநில அரசும் அறிவித்திருக்கின்ற முடிவுகள் வரவேற்கத் தக்கவைகளேயாம். ஆனாலும், இந்த முடிவுகளை நிறைவுபடுத்துவது எப்படி என்பதுதான் பெரிய கேள்வி. அரசு வழங்குகின்ற உரிமைகள் சட்டபூர்வமானதாக இருக்க வேண்டும். இந்திய உயர்நீதி மன்றத்தில் செல்லுபடியாகக் கூடியதாக இருக்க வேண்டும். இதை நினைவில் கொண்டு மத்திய அரசையும் மாநில அரசையும், நீண்டு நிலைத்திருக்கக் கூடிய ஏற்பாட்டை செய்யுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

அலுவலக மொழி எதுவென்ற கேள்வியையும் மும்மொழிப் பாடத் திட்டத்தையும் ஒன்றாக்கிக் குழப்புவது நல்லதல்ல. இந்திய ஒருமைப்பாடு வளம்பெற மும்மொழிப் பாடத்திட்டம் இன்றியமையாத வொன்றாகும். வடமாநில மக்கள் தென் மொழி ஒன்றையும் தென்னகத்து மக்கள் வட மாநில மொழி ஒன்றினையும் நிச்சயம் படிக்க வேண்டும். மொழி ஆதிக்கத்தைப் பற்றிய தவறான கருத்து, மக்கள் மன்றத்திலிருந்து விலகிவிடுமேயானால், நிச்சயம் மும்மொழிக் கல்வித் திட்டத்தை மாணவர் உலகம் மனப் பூர்வமாக ஏற்றுக் கொள்ளும். அதற்குரிய ஏற்பாடுகளையும் மத்திய மாநில அரசுகள் செய்ய வேண்டும். எப்படி? எந்த வொன்றையும் யாரும் இழக்காமல், இந்திய ஒருமைப் பாட்டை நாம் கட்டிக் காப்பாற்ற வேண்டும். அன்பு நெறி சென்று அமைதி காத்து வாழ்வோமாக!

# 12. அனைத்து மொழிகளும் ஆட்சி மொழிகளாக வேண்டும்

இந்தி எதிர்ப்பு மாநாட்டைத் தொடங்கி வைக்கின்ற வாய்ப்பு மகிழ்வதற்குரியது: உங்கள் அனைவரையும்

காணவும் கலந்து பேசி மகிழவும் உணர்வுகளைப் பரிமாறிக் கொள்ளவும் கிடைத்த இவ்வாய்ப்பினை நினைத்து மகிழ் கின்றோம். வாய்ப்பை வழங்கிய திராவிடர் கழகத்தினருக்கு நமது நன்றி, பாராட்டு, வாழ்த்துக்கள்.

## மொழியின் பயன்

மனிதன், மற்ற உயிர்களினின்றும் வேறுபடுகிறான், ஏன்? அவன் சிந்திக்கும் பிராணியாக இருப்பதுதான் காரணம். மனிதன் சிந்தனைக்குரியவன்; சிந்தித்தற்குரியவன். சிந்திக்கும் ஆற்றலும், அறிவும் மனிதன் பெறாவிடில் அவன் விலங்கேயாம். சிந்தனையைத் தூண்டுவது உணர்வு; உணர்வை உந்திச் செலுத்துவது புலன்கள்; புறநிகழ்வுகளைத் துய்க்கும் நிலை; (அனுபவம்); புலன்களின் துய்ப்பு நிலையை இயக்கித் தொழிற்படுத்துவன பொறிகள். அவற்றில் நுண்ணிய திறமுடையாரைக் கண்கள் இயக்கும். அங்ஙனம் அல்லா தாரைச் செவிச் செல்வமாகிய கேள்வி இயக்கும். கேள்வியைப் புலனுணர்வுக்கு எளிதாக்கித் தருவது தாய் மொழி, ஆதலால் தாய்மொழியின் வாயிலாகத்தான் சிந்தனை தோன்றும்; சிந்தனை சிறக்கும்; ஒன்று பலவாக விரியும். அறிவு தலைப்படும்; தொழிற்படும்; தெளிவு நிலை எய்தும், தெளிந்த அறிவு ஆள் வினையிற் செலுத்தும். ஆதலால் தாய்மொழியே, மனிதனின் உயிர்! மொழி, கருத்தைத் தெரிவிக்கும் கருவியே என்ற கருத்து தவறானது. உண்மைக்குப் புறம்பானது. கருத்தைத் தெரிவிக்க மொழி பயன்டுவது உண்மை; கருத்தை எந்த மொழியிலும் வெளிப்படுத்தலாம். அதற்குத் தாய் மொழியே வேண்டாற்பாலதன்று. ஆனால், தாய் மொழியில் வெளிப்படுத்தினால் கேட்பார் மகிழ - கேளாரும் வேட்ப, உணர்வு சிறக்கத் தெரிவிக்கலாம். அது மட்டுமின்றி சராசரி மனிதருக்கும் தெரிவிக்கலாம். தாய்மொழியின் பணி கருத்தை எதிரொலிக்கப் பயன்படுவது மட்டுமன்று. அதைவிடச் சிறந்த

பணியைச் செய்கிறது. அக்கருத்தை உருவாக்குவதே தாய் மொழியின் பணிதான். ஓர் இனம் தெளிவான சிந்தனையைப் பெற, அறிவினை வளர்த்துக் கொள்ள, உணர்வுகளைப் பரிமாறிக் கொள்ளத் தாய்மொழியே துணை செய்கிறது. அந்நிய மொழியால் இவற்றைச் செய்ய இயலாது. வளரும் அறிவினை வழங்கவும், செழித்த உணர்வினைத் தரவும் தாய்மொழியினாலேயே இயலும்; முடியும்.

## தாய்மொழி

தாய் மொழியின் வளத்திற்கு ஏற்ப அம்மொழியைப் பேசும் மக்கள், வளமான சிந்தனையைப் பெறுவர்; தேர்ந்து செய்யும் தெளிவினையும் பெற்று அரிய வினைகள் ஆற்றுவர். தாய்மொழி வழி சிந்தித்து வாழும் மக்கள் அறியாமையை அறவே அகற்றி வெற்றி காண்பர். அதனால் வறுமையும் இருக்காது, 'ஐரிஷ்' மொழியாகிய "கெய்லிக்" வளர்ச்சியில்லாமல் படுகுழியில் வீழ்த்தப்பட்டுக் கிடந்தபோது, ஐரிஷ் மக்கள் அடிமைப்பட்டுக் கிடந்தனர். ஐரிஷ் மொழியை அறிஞர்கள் கவிதைகளால், காவியங்களால் ஒப்பனை செய்து பொது மக்களிடத்தில் கொண்டு சென்று, பொது மக்களை விழிப் படையச் செய்தார்கள். அயர்லாந்து மக்கள் மாட்சிமை மிக்க தம் தாய்மொழியின் மீது பற்றுக் கொண்டு வணங்கினர். அதனால், அவர்களிடத்தில் தன்னம்பிக்கை பிறந்தது; சுய மரியாதை உணர்ச்சி தோன்றியது. அந்நியர்கள், ஐரிஷ் மக்களை மதிக்கத் தொடங்கினர்; சுதந்திர வாயிலும் திறந்தது. நாட்டு விடுதலைக்கு நாட்டு மொழியின் விடுதலையே துணை செய்யும். இஃது அயர்லாந்து இருபதாம் நூற்றாண்டு வரலாற்றின் படிப்பினையாகும்.

நம்முடைய நிலை என்ன? இந்த நூற்றாண்டில் நமது இலக்கியம் பெற்றிருக்கிற மறுமலர்ச்சி என்ன? நாம் நமது பழந்தமிழ் இலக்கியத்தின் செய்திகளைச் சாதாரண மக்களிடத்தில் கொண்டு சென்றிருக்கிறோமா? எந்த

*இதிகாசங்கள் நம்முடைய அறிவை மழுங்கச் செய்தனவோ, உணர்வுகளை உருக்குலைக்கச் செய்தனவோ அந்த இதிகாசங் களே ஆர்ப்பரவத்துடன் பட்டி மண்டபங்களில் நடமாடு கின்றன. நாம் சங்க இலக்கியங்களைத் தமிழகத்தின் சந்து பொந்துகளில் நடமாடவிடவில்லை. அயல் வழக்கினை வென்று விளங்கிய செழுந் தமிழ் வழக்கினை நமக்குத் தந்த திருமுறைகள் தமிழகத்தின் தெருக்களில் முழங்கப் பெற வில்லை. அவை, தமிழகத் திருக்கோயில்களில் இரண்டாம் நிலைக்குத் தள்ளப் பெற்றுள்ளன. ஏன்? நமது நாட்டின் அரசியல் இயக்கத்தில்கூட மந்த நிலை தெரிகிறது. அதற்குக் காரணம் என்ன? நமது தமிழ் உயிர்ப்போடு இல்லை. எங்கும் கொச்சைத் தமிழ்; கலப்புத் தமிழ். உயிர்த்துடிப்புள்ள பாரதியின் தமிழை, பாரதிதாசனின் தமிழைக் காண இயலவில்லை. களியாட்டத் தமிழாகி உண்டாட்டில் உறங்கும் நிலையே காரணம். வாக்குரிமையின் அருமையை 75 விழுக்காட்டுக்கு மேற்பட்ட மக்கள் இன்னமும் அறியார். தெளிவில்லாத தேர்தல்! தெளிவை வழங்காத தேர்தல்! ஆதலால் நாட்டு மக்களிடத்தில் அரசியல் தெளிவில்லை. அரசியல் இயக்கங்கள் வெற்றிகளையே குறிக்கோளாகக் கொண்டு இயங்குகின்றன. மக்களிடத்தில் அரசியல் தெளிவு காணாத வரை, அதற்குத் தமிழ், பயன்படாதவரை இந்நிலைதான் தொடரும். நம்முடைய தமிழ் அரசியல் மொழியாக, சமுதாய மொழியாக உயிர்ப்புள்ள இடத்தைப் பெறவில்லை. 'தமிழ் மொழி வாழ்க!' என்று முழங்கினால் போதாது. உயிர்ப்புள்ள அறிவியல், தொழிலியில், பொருளியல், அரசியல் நூல்கள் தமிழில் தோன்ற வேண்டும். மொழிபெயர்ப்புகள் தோன்றி னால் போதா. நூல்கள் தமிழர்தம் சிந்தனையில் தோன்றி மலர வேண்டும். தமிழ்த் தாய் என்று புதுமை நலமும், நிறை நலமும் பெற்று ஒளிர்கிறாளோ அன்றே இந்தியின் ஆதிக்கம் அகலும். தமிழ்த் தாயை வளர்ப்பது நமது கடமை. தமிழ்த் தாய் வளர்ந்தால் தமிழர் வளர்வர்; தமிழகம் வளரும். பாரதம்*

பைந்தமிழ் அன்னையை ஏற்கும்; உலகம் ஏற்கும், தமிழ்த் தாயை நாம் வளர்க்கும் பணியே இந்தி எதிர்ப்புப் பணியில் எப்பணிக்கும் முதற் பணியாகும்.

## தமிழின் பெருமை

தமிழ் காலத்தால் மூத்தது. தமிழ், காலஎல்லை வரலாற்றறிவையும் கடந்தது. வரலாற்று அறிவு எல்லை கி.மு. 10,000 என்பது கருத்து. இன்றுள்ள நூல்களில் தொன்மை யானது தொல்காப்பியம். தொல்காப்பியத்தின் காலம் கி.மு. 3500க்கு மேல் கி.மு. 5000 ஆகும். தொல்காப்பியம் இலக்கண நூல். இலக்கியம் தோன்றிய பிறகே இலக்கணம் தோன்றும், தொல்காப்பியம் என்ற இலக்கண நூல் தோன்ற பல நூறு ஆண்டுகள் தோன்றிச் சிறந்த இலக்கியப் பின்னணி இருந்தி ருக்க வேண்டும். இலக்கியத் தோற்றத்திற்கு அடிப்படை யாகிய சிந்தனைத் திறன், செயல் திறன் ஆகியன தோன்றி வளர்ந்த கால எல்லை மேலும் கடந்து செல்கிறது. உலகின் மொழிகள், மொழிக்கு மட்டுமே இலக்கணம் பெற்றுள்ளன. இலக்கண வரம்பு இல்லை. ஆனால் தமிழ் இலக்கணம் வரம்பினைப் பெற்றுச் சிறந்து விளங்கும் மொழி. அஃதன்றி மொழியைப் பேசும் மக்களின் வாழ்க்கைக்கும் இலக்கணம் கண்ட ஒரே மொழி தமிழ்தான், தமிழர்க்கு, வாழ்க்கைக்கு இலக்கணம் வேண்டும் என்ற அறிவு சிறந்து பல ஆயிரம் ஆண்டுகளாயிற்று. தமிழ்ச் சொற்களின் அமைப்பும், செறிவும் வேறு எம்மொழிக்கும் இல்லாதன. சொல்லளவிலேயே பருவம், நிலை முதலியன உணர்த்தும் சொற்கள் தமிழிலேயே உண்டு. வாய்மை, உண்மை, மெய்ம்மை போன்ற பொருள் நிறைந்த சொற்கள் தமிழிலேயே உள்ளன. தமிழ்ச் சொல்வளம் பெருமைப்படுதற்குரியது. "வலவன் ஏவா வான் ஊர்தி," "இரும்பு தரும் மனத்தேனை ஈர்த்தது" என்ற வழக்குகள் அறிவியல் சிந்தனைத் தொடர்புடையன. இச்சிந்தனை தொடர்ந்து வளர்ந்திருந்தால் இன்று விண்வெளிக் கலம்

தமிழகம் கண்டிருக்க முடியும். உயிரினத்தை அறுவகையில் பிரித்துணர்ந்த தொல்காப்பியரின் உயிரியல் நுட்பம் அறிவியல் திட்பம் வாய்ந்ததுதானே! தமிழ் இன்று அறிவியலில் வளர்ந்துள்ள ஆங்கிலத்தை விட சிறந்தது என்பதே உண்மை. உலகப் பொது மொழியாதற்குரிய தனித்தகுதி தமிழிற்கு உண்டு. ஆனால் தமிழரிடை - ஒருமையின்மையாலும் இன மானம் காக்கும் பெரியார் நெறி நின்றொழுகாமையாலும் அவ்வாய்ப்பை இழந்துவிட்டனர். தொடர்ந்து சிந்தித்து வளரும் திறனை இழந்ததாலும், வாழ்க்கையைப் பிழைப் பாக்கிய அயல்மொழி, அயல்நெறி ஊடுருவலாலும் தமிழர் தமிழைத் தமிழ் நெறியைப் பேணி பாதுகாக்காமல் வறட்சித் தன்மையுடைய சமஸ்கிருதத்திற்கும் அடிமையாயினர். அதனால் தாய்மொழியில் திறம் இழந்தனர். இழந்தது போதாதா? அடைந்த அவலநிலை போதாதா? இந்தியாலும் நாம் மேலும் கெடவேண்டுமா? சுயமரியாதையைத் தன்னறிவை இழந்து இரண்டாந்தரக் குடிகளாக வேண்டுமா? அன்பர்களே! தமிழ்த் தொண்டர்களே! அன்பு கூர்ந்து எண்ணுங்கள்! உறங்கும் மனச்சான்றை உசுப்பி விட்டுக் கேளுங்கள்! தமிழ்ச் சான்றோரே! தமிழ்ப் பெரியீரே! தாங்கள் "மானம்" கருதாமல் ஒன்றுபட்டுத் தமிழகத்தை வழி நடத்தி னால் வையகமே குலுங்க வரலாறு படைத்திடலாம். இன்பத் தமிழை வளர்ப்போம்! இந்தியின் ஆதிக்கத்தைத் தடை செய்து அன்னை மொழியை அரியணை ஏற்றுவோம்! இதுவே நமது பணி! என்ற முடிவை இம் மகாநாடு எடுக்கும் என்ற நம்பிக்கையில் இம் மகாநாட்டைத் தொடங்கி வைக்கும் பணியை ஏற்றுக் கொண்டிருக்கிறோம்.

## பாரத நாடு

"பாரத நாடு இயற்கை அமைப்பில் ஒரு நாடன்று. பாரதம் ஒரு துணைக்கண்டம், "இந்தியாவின் வேற்றுமைகள் மகத்தானவை. அது வெளிப்படையானதும் கூட; அது

மேலெழுந்த வாரியாகப் படிந்துள்ளது" என்றார். அமரர் பண்டித நேரு, பாரதம் ஒரு நாடானது ஆங்கில ஆட்சியில் தான். ஆங்கில ஆட்சிக்கு முன்பு, பல வட இந்திய வல்லரசுகள் முயன்றும் தமிழகத்தை உள்ளடக்கிய பேரரசு தோன்றவில்லை. தமிழரசர்கள் வட இமய எல்லைவரை சென்று வெற்றி பெற்றிருப்பினும் அவர்கள் ஆதிக்க அரசு அமைக்கவில்லை. அஃது அவர்கள் நோக்கமன்று. பல்வேறு வேற்றுமைகள் உட்குழுச் சண்டைகள் இவைகளால் நாட்டுமக்கள் வலிமை இழந்திருந்த நிலை ஆங்கிலேயரின் ஆதிக்கத்திற்குத் துணையாயமைந்தது.

பிற்காலத்திய இந்திய அரசர்கள் மக்களை வளர்க்காமல் இன்பக் களியாட்டங்களிலே ஈடுபட்டு விட்டனர். அதனால் அந்த மன்னர்கள், அறிவையும், வீரத்தையும், ஞானத்தையும் இழந்து நாளையும் கோளையும் நம்பி வறட்சித் தன்மையுடைய அயல்வழி சமயப் புரோகிதர்களின் வலையில் சிக்கினர். இந்தக் கீழ்மைகளே நாடு அடிமைப்படு வதற்கு ஆயத்தம் செய்திருந்தன. ஆங்கிலேயருடைய விஞ்ஞான அறிவும் புதிய கருவிகளும் நாட்டை அடிமைப்படுத்து வதற்குத் துணை செய்தன. ஆங்கிலேயர்கள் தம் பால் உள்ள திறமையினால் இந்தியாவை ஒரு நாடாக்கினர்.

சர், ஜான் ஸ்ட்ரேசி என்பவர் 1903 ஆம் ஆண்டில் எழுதிய அறிக்கையில் "இந்தியா என்ற ஒரு நாடு இல்லை. பல நாடுகளின் கூட்டத்தைக் கொண்ட பெரு நிலப்பரப்புக்கு நாம் (ஆங்கிலேயர்) கொடுத்த பெயர்தான் இந்தியா என்பது" என்று எழுதியுள்ளார். ஆனாலும் ஆங்கிலப் பேரரசால் நாம் அடைந்த பெரு நன்மை இந்தியா ஒரு நாடு என்ற உருவத்தை பெற்றதுதான். உலகம் நெருங்கி வரும் இந்தக் காலத்தில் இந்தியா ஒரு நாடாக இருப்பது தவிர்க்க முடியாதது மட்டுமல்ல; அவசியமும் கூட, இன்றைய உலக அரங்கில் வலிமை பெற்ற பெருநாடுகள் தாம் வளர்ந்து வாழ முடியும்.

ஆதலால் பாரதம் ஒரு நாடு என்ற கருத்து நிலையானது. பாரதம் ஒரு நாடு என்பதை என்றும் காப்பது நமது கடமை.

## நாட்டு மொழிகள்

இந்தியத் துணைக்கண்டத்தில் பல்வேறு மொழிகள் பேசும் மக்கள் வாழ்கிறார்கள். பாரத நாட்டில் பேசப் பெறும் தாய் மொழிகளின் எண்ணிக்கை 1652. ஆனால் இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் நாட்டு மொழிகள் (தேசீய மொழிகள் – National Languages) என்ற தகுதியினைப் பெற்றுள்ள மொழிகள் 14. இந்த நாட்டு மொழிகள் 14–ல் 360 தாய் மொழிகள் அடங்கியுள்ளன. அரசியலமைப்புச் சட்டத்தில் நாட்டு மொழிகள் என்ற தகுதியைப் பெறாத மொழிகள் 17 உள்ளன. இந்த 17 பெருமொழிகளில் 241 தாய்மொழிகள் உள்ளன.

ஒவ்வொரு தாய்மொழியையும் சற்றேறக்குறைய 5 இலட்சம் மக்கள் பேசுகின்றனர். மேலும் ஒரு இலட்சம் முதல் அதற்கு மேலும் பேசக்கூடிய மக்களைக் கொண்ட மொழிகள் 19 உள்ளன. அவை தவிர ஆயிரக்கணக்கான மக்களால் பேசப் பெறும் தாய் மொழிகள் 857 உள்ளன. இங்ஙனம் தொகுக்கப் பெறும் கணக்கில் 1652 மொத்தத் தாய்மொழிகளும் 826 பெருமொழிகளும் உள்ளன. பல்வேறு மொழியினர் வாழும் ஒரு துணைக் கண்டத்தை எப்படி இந்தி என்ற ஒரு மொழியால் ஒருங்கிணைக்க முடியும்? இந்தியால் ஒரு நாடு காண இயலாது.

## இந்தி மொழியின் நிலை

இந்தி மொழியின் வரலாறு கி.பி.1100-ல் தொடங்குகிறது. பிராகிருதத்தின் சிதைவிலிருந்து தோன்றி வடமொழிக் கலப்பினைப் பெற்று, கங்கைச் சமவெளியின் மேல்பாகத்திலும், டெல்லியைச் சுற்றிலும் பேச்சு வழக்கிலிருந்த "இந்தோ ஆரிய" மொழிக்கு ஐரோப்பியர் "இந்துஸ்தானி" என்று

பெயரிட்டனர். விடுதலைக்கு முயன்ற காங்கிரஸ் கட்சியில் அம்மொழியைப் பேசுவோரின் ஆதிக்கம் இருந்ததால் இந்தி 'தேசீய மொழி' என்ற தகுதியை அந்த இந்துஸ்தானி செயற்கையில் பெற்றது. இந்திய மொழிகளில் இந்தியும் ஒன்று. இந்தி ஒரு மொழியாக உருவம் கொடுக்கப் பெற்றதே கி.பி. 14ஆம் நூற்றாண்டில் "லல்லுஜிலால்" என்பவரால்தான். இவர் பிராகிருதச் சிதைவான மொழியிலிருந்தும் அராபிய மொழி, பாரசீக மொழி, உருது மொழி ஆகியவற்றின் கலப்பிலிருந்தும் சீர்த்திருத்தம் செய்து இந்தி மொழியை உருவாக்கினார்.

இற்றைக்கு 500 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த இராமானந்தர் இராமன் மீது பாடிய பாடல்களே இந்தி இலக்கியத்தின் தொடக்கம். இந்தி, இன்றும் கூட ஒரு மொழி யென்று கூறுவதற்குரிய தகுதி பெறவில்லை. இந்தியை ஒரு மொழி என்பது மாயையின் தோற்றம் இந்தி மொழியானது நாட்டின் பல்வேறு பகுதிகளில் வேறுபட்ட ஒலி வடிவு களோடு பேசப்படுகிறது. எல்லா இடத்திலும் இந்தி ஒரே ஒலி வடிவைப் பெற்றிருக்கவில்லை. இந்தியை மேல்நாட்டு இந்தி, கீழ்நாட்டு இந்தி, பிகாரி என்ற மூன்று பெரும் பிரிவு களாக்கியுள்ளனர்.

ஒவ்வொரு பெரும் பிரிவும் பல்வேறு உட்பிரிவு களாகவும் பிரிந்துள்ளன. மேல்நாட்டு இந்தி என்பது தாங்காரு, பிரஜ்பாஷா, கனோஜ், பந்தேலி, உருது என்று ஐந்து பிரிவுகளையுடையது. கீழ் நாட்டு இந்தி என்பது அவதி, பகேலி, சத்தீஸ்கரி ஏன்ற மூன்று பிரிவுகளையுடையது. பிகாரி என்பது மைதிலி, போஜ்புரி, மகதி என்ற மூன்று பிரிவுகளை யுடையது. மேலும் இடுகுறி பெயர் பெறாத பலவகையான சிறு சிறு மொழிகள் 81, இந்தியின் கிளை மொழிகளாக வுள்ளன. இந்த இந்தி மொழிகளில் ஒருவர் பேசுவதை மற்றவர் புரிந்து கொள்ள முடியாது. அது மட்டுமன்று. இந்தி மொழியின் பிரிவுகளில் வினைச் சொற்கள் மாறுபடுகின்றன.

அதனால் பொருளும் வேறுபடுகின்றது. நாலுபேர் இந்தி மொழி பேசுவோர் சேர்ந்தால் குழப்பத்தைத் தவிர்க்க மொழி பெயர்ப்பாளர் தேவை. ஆதலால் இந்தி மொழி, பேசு வோரிடத்திலேயே குழப்பம் உள்ளது. இந்தக் குழப்பத்தை நாட்டுடைமையாக்குவதில் என்ன பயன்? இந்த இந்தி மொழிகளிலே எந்த இந்தியைத் தென்னாட்டார் ஏற்பது? அல்லது கற்பது? இந்த இந்தி மொழியை மென்மை தழுவிய தமிழினத்தாரின் – இசை தழுவிய தமிழினத்தாரின் மென்மைக் குரல் எப்படி உச்சரிக்கும்? மேற்கூறிய எந்த வொரு இந்தி மொழியைக் கற்றாலும் வடவுலத்தில் உள்ள அனைத்து மக்களுடனும் கலந்து பேசி மகிழ முடியாதே.

வடக்கே வாழும் பல கோடிக்கணக்கான மக்களால் இந்தி, லந்தி, பஞ்சாபி, குஜராத்தி, ராஜபுதானி, குமோனி கடுவாலி, நேபாலி, உரியா, பங்காளி, மராட்டி, சிணா, காசுமீரி, கோகிஸ்தானி, சித்ராலி, திராகி, பனஷ, கலாஷா, கவர்படி இன்னோரன்ன மொழிகள் பேசப்பெறுகின்றன.

தமிழைப்போல் உயிர்ப்புடன் வளர்ந்துள்ள வங்க மொழியும் இருக்கிறது. இந்த மொழிகளையெல்லாம் கற்காமல் எப்படி வடபுலத்து மக்களோடு உறவு கொள்ள முடியும்?

## பெரும்பான்மையோரின் மொழியா?

இந்தி மொழியைத் தெரிந்தவர்கள் பாரத நாட்டு மக்கள் தொகையில் பெரும்பான்மையர் என்பது நிறைவான உண்மையன்று. பாரத நாட்டு மக்களில் இந்தி பேசத் தெரிந்தவர்கள் 27 விழுக்காடுதான். இந்த 27 விழுக்காட்டிலும் இந்தியைத் தாய்மொழியாக உடையவர் எண்ணிக்கை எவ்வளவு? இந்துஸ்தானியைத் தாய்மொழியாக உடையவர் எண்ணிக்கை எவ்வளவு? இந்தியின் எந்தவொரு கிளை மொழியையும் தாய்மொழியாகப் பெறாமல் வழக்கத்தின் காரணமாகப் பேசத் தெரிந்தோர் எத்தனைபேர்

என்றெல்லாம் கணக்கெடுத்து ஆய்வு செய்தால் இந்தி பெரும்பான்மையோரால் பேசப்படுகிறது என்ற செய்தி உண்மையில்லை என்பதை அறியலாம்.

இந்த எண்ணிக்கையும் கூட எந்த இந்தியைத் தாய்மொழியாக உடையவர்கள் பேசக்கூடிய எண்ணிக்கை என்பது தெளிவில்லாதது. இந்தி மொழி பேசாத மக்கள் பாரத நாட்டு மக்கள் தொகையில் 73 விழுக்காட்டுக்குக் குறைவில்லை. இம் மக்கள் தொகுதியில் இலட்சக்கணக்கான மக்களும் கோடிக்கணக்கான மக்களும் பேசுகிற தாய் மொழிகள் உண்டு.

இவற்றில் தமிழும் வங்காளமும் குறிப்பிடத் தக்கன. இந்தி மொழியைப் பலர் பேசுகின்றனர் என்பதாலேயே அம்மொழி உயர்ந்ததாகி விடமுடியாது. இந்தியில் இலக்கிய வளம் இல்லை. விஞ்ஞானம், தொழில் நுட்பம், அரசியல் ஆகிய இன்றையத் தேவைகளை நிறைவு செய்யக்கூடிய ஆற்றல் இந்திக்கு இம்மியும் இல்லை.

இத்துறையில் வங்காள மொழியும் தமிழ் மொழியும் வளர்ந்த மொழிகள். இந்தி மொழியை விடப் பல நூறு மடங்கு வளர்ந்துள்ள தமிழைப் பொதுமொழியாக்காது புறக் கணிப்பானேன்? ஆதலால் பாரதநாட்டின் ஒரு மொழியாக, நடுவணரசின் அலுவல் மொழியாக - தொடர்பு மொழியாக இந்தியை ஒப்பனை செய்து அத்தாணி மண்டபத்தில் ஏற்றுவது மனித நிலையின் படியும் நியாயம் இல்லை; மொழியின் அடிப்படையிலும் முழுக்க முழுக்கத் தவறு.

மனித உரிமையின் அடிப்படையிலும் நீதியன்று. நாட்டில் எதிர்கால வளர்ச்சிக்கு ஏற்புடையதன்று. பாரத நாட்டின் ஒருமைப்பாட்டுணர்வை உருவாக்கும் செயலு மன்று. நாட்டின் அடிப்படையிலும் சரி, இன அடிப்படை யிலும் சரி, மொழி அடிப்படையிலும் சரி, ஒரு தவறான

கொள்கை - இந்தியே இந்த நாட்டின் அலுவல் மொழி என்பது.

## இந்தியின் நிலை – அரசியல் சட்டம்

இந்தியா போன்ற பெரிய நாடு ஒரு மொழியை ஆட்சி மொழியாக ஏற்றுக் கொள்வது நன்றன்று. இந்த இந்தி மொழி ஆதிக்க உணர்வு நாட்டின் ஒருமைப்பாட்டைச் சிதைக்கும்; சுதந்திரத்திற்கு இழுக்குண்டாக்கி இழக்கச் செய்யும். இந்தி, நாட்டின் பொது மொழியாவதால் விளையும் நன்மையை விடத் தீமையே மிகுதி.

இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் இந்தி பாரத நாட்டு ஆட்சி மொழி என்று இடம் பெற்ற வரலாறே இனிய வரலாறு அல்ல; கட்சிக் கட்டுப்பாடு, முகமன் காக்கும் நிலை ஆகியனவே இந்தியை அரியணை ஏற்றியது.

ஒருமனப்பாட்டுடன் இந்தி பாரத நாட்டின் ஆட்சி யுரிமையைப் பெறவில்லை என்பதை அரசமைப்புக் குழுவின் வரலாறு நாடாளுமன்றம் ஆகியன எடுத்துக் கூறுகின்றன. இந்திய அரசியலமைப்புச் சபையிலேயே தென்னகத்தைச் சேர்ந்த காங்கிரஸ் கட்சித் தலைவர்களால் கட்சிக் கட்டுப் பாட்டைக் கடந்தும் கூட அரசியல் அமைப்புக் குழுவின் நடவடிக்கை இந்தி மொழியில் இருக்க வேண்டும் என்பதைப் பற்றிய விவாதம் கடுமையாக நடைபெற்றிருக்கிறது. விவாதத்தின் பொழுது "இந்தி ஆதரவாளர்கள், இந்தி தெரியாதவர்கள் இந்தியாவில் இருக்கத் தகுதியற்றவர்கள்" என்று கூறினர்.

தமிழ்நாட்டைச் சேர்ந்த திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி அவர்கள் "இந்திதான் இந்தியாவின் ஆட்சிமொழி என்றால் நாட்டுப் பிரிவினை தவிர்க்க முடியாது" என்றார். அன்று கிருஷ்ணமாச்சாரி இந்தியை எதிர்த்துக் குரல் கொடுக்கப் பின்னணியாக அமைந்திருந்தது, தலைவர் தந்தை பெரியார்

அவர்களுடைய இயக்கத்தின் வலிவே என்பதை வரலாறு கூறும்.

அன்று இந்தியைத் தடுத்து நிறுத்திய இயக்கம் தந்தை பெரியார் அவர்களுடைய இயக்கமே. இந்தி பாரத நாட்டின் ஒரே ஆட்சிமொழி என்ற இயக்கம் தொடங்கப் பெற்றதி லிருந்து எல்லா மாநிலங்களிலும் ஒரே கட்சியினர் ஆட்சியில் இருந்ததால், இந்தி பேசாத மாநிலங்களின் ஆட்சித் தலைவர் களுக்கு இந்தி எதிர்ப்புணர்ச்சி இருந்தாலும் அதனை முழுமையாகக் காட்ட இயலவில்லை.

தொடக்க காலத்திலிருந்தே இந்தி எதிர்ப்புணர்ச்சி முனைப்புடையதாக இல்லாமல் தன்னிலை இழந்து உடன் பாடு செய்து கொள்வதில் நாட்டம் உடையதாகவே இருந்தது என்ற கசப்பான உண்மையை மறப்பதற்கில்லை. இந்தியின் நிழலில் சலுகை கோருவோருக்கும் சமவாய்ப்புக் கோரு வோருக்கும் இடையே ஏற்பட்ட உடன்பாடு எப்படி நீதியைத் தழுவியதாக இருக்கும்?

இந்த அவல நிலையில் இந்தியைப் பாரதத்தின் ஆட்சி மொழியாக இருசாராரும் ஏற்றுக்கொள்ளக் கூடிய நிலையே உருவாயிற்று. ஆஙகிலம் எத்தனை ஆண்டுகளுக்கு இந்தியுடன் இணையாட்சி மொழியாக நீடிப்பது என்ற கேள்வியே இருந்தது. ஆதலால், உண்மையில் இந்தி எதிர்ப்பு இயக்கம் - முனை மழுங்கி ஆங்கில நீடிப்பு என்ற திசையில் திரும்பி விட்டது.

இந்தி பாரதத்தின் ஆட்சிமொழியாவது பற்றிய விவாதம் அரசியலமைப்பு சபையில் நடந்து வாக்கெடுப்பிற்கு விட்ட போது இந்திக்கு ஆதரவாகவும், எதிர்ப்பாகவும் சம நிலை வாக்குகளே கிடைத்தன. 74-74 வாக்குகளே கிடைத்தன. இந்தி மொழி - ஆட்சிமொழி பற்றிய விவாதம் மீண்டும் அரசியலமைப்புச் சபையில் வந்தது. கடைசி வரையில் இந்தி அரசியலமைப்புச் சபையில் பெரும்பான்மை வாக்கு பெற்று

வெற்றி பெறவே முடியவில்லை. உடன்பாடுதான் செய்விக்கப் பெற்றது. தழுவிச் செல்லும் மனப்போக்கினால் இந்தி எதிர்ப்பு உணர்ச்சி முனை மழுங்கிவிட்டது.

காங்கிரஸ் என்ற பேராயக் கட்சியினரான தென்னகத் தலைவர்கள் இந்தி எதிர்ப்பு உணர்ச்சி பெற்றிருந்தும் உடன்பாட்டின் வயப்பட்டதால் இந்தியை ஆட்சிமொழியாக ஏற்றுக் கொள்ளத் தலைப்பட்டனர். இந்தியைத் தாய் மொழியாக உடையவர்களிடம் தென்னகத்தார் ஆங்கிலத்தை இணை ஆட்சிமொழியாக வைத்துக் கொள்ள வேண்டும் என்று மடியேந்திப் பிச்சை கேட்டனர்.

இந்தியல்லாத பிறமொழிகளைத் தாய்மொழியுடைய மாநிலத்தார் உரிமையிழந்த நிலையில் பிறந்த உடன்பாட்டை மையமாகக் கொண்டு பாபு இராசேந்திர பிரசாத் "பல நூற்றாண்டுகளுக்குப் பின்னர் நமது வரலாற்றிலேயே முதன் முறையாக இப்போதுதான் இந்திய நாடு முழுவதும் எல்லா அரசு நடவடிக்கைகளுக்கும் பயன்படுத்துவதற்காக ஒரே மொழியை நாம் ஏற்றுக் கொண்டிருக்கின்றோம்" என்று மகிழ்ந்து கூறினார்.

இங்ஙனம் கூறியது உண்மையன்று என்பதை வரலாற்று நிகழ்வுகளுக்குப் பின் நிகழ்ந்தவைகளே எடுத்துக் கூறுகின்றன. ஆதலால் "இந்தி மொழியே பாரதத்தின் ஆட்சி மொழி" என்று உரிமையைப் பெற்றுவிட்டது. பாரதத்தின் துணை ஆட்சிமொழியாக ஆங்கிலம் பதினைந்து ஆண்டுகள் நீடிக்கும். ஆங்கிலத்தை நாடாளுமன்றத்தின் சட்ட நடவடிக் கைகள் மூலம் நீடிக்கவும் செய்யலாம்! நீக்கவும் செய்யலாம்! அதே போழ்தில் மாநிலங்களின் தாய்மொழிகள் ஆட்சி மொழியாக ஆவதற்குரிய கால வரையறைகள் ஏதும் நிர்ணயம் செய்யப் பெறவில்லை. ஆக இந்தியாவின் ஆட்சி மொழிச் சிக்கலில் தமிழை முன்னிலைப்படுத்தத் தமிழகம் தவறிவிட்டது.

இந்தி மொழியை எதிர்த்து இன்பத் தமிழ் முன்னிலைப் படுத்தப் பெறவில்லை. ஆங்கிலம்தான் முன்னிறுத்தப் பெற்றது. ஆங்கிலமும் கால நீட்டிப்புச் சலுகை பெறவே முன்னிலைப்படுத்தப்பட்டது. இதனால் அன்னை மொழி தமிழ் உரிமையை இழந்தது. தமிழர்களும் உரிமையை இழந்தனர். இதனால் தமிழரின் வளர்ச்சி முற்றாகப் புறக்கணிக்கப்பட்டிருக்கிறது.

## மாநில மொழிகளின் வளர்ச்சி குன்றும்

இந்தி பாரத நாட்டின் தனி ஆட்சிமொழி ஆனால் மக்கள் மன்றத்தில் தனி மதிப்பினைப் பெறும். இந்தி பயின்றா லேயே அரசு அலுவல்களில் வாய்ப்பு உண்டு என்ற நிலை உருவாகும்; அதனால் எல்லோரும் இந்தி மொழியைக் கற்பர்; அரசின் ஆட்சி மொழிக்குத்தான் தனிச் சிறப்பு மக்கள் மன்றத்தில் கிடைக்கும்.

அரசு ஆட்சி மொழியைத்தான் அரசு வளர்க்கும்; அம் மொழி வளர்வதற்கான வாய்ப்புகளும் கிடைக்கும். இன்று இந்தியைத் தவிர இதர பாரத நாட்டு மொழிகள் வளராமைக்குக் காரணம் அவை அரசு மொழி என்ற உரிமையைப் பெறாமையே! அரசு மொழியாக ஏற்றுக் கொள்ளப் பெறாத மொழி அரசைப் பொறுத்தவரை மாற்றாந் தாய் நடைமுறையில் இருக்கும்.

அரசு மொழியைச் சாராத இதர மொழியைப் பேசுப வர்கள், ஆட்சியில் உயர்ந்த இடத்தைப் பெறுதல் அரிது. ஆட்சி மொழியாக அமைந்திருக்கின்ற மொழியில் பேசினால் தான் பெருமை என்ற மனப்பான்மை மக்கள் மன்றத்தில் வேரூன்றும்.

## பிற நாடுகளில்

ஆதலால், 'பாரதம் போன்ற பெரு நாட்டிற்கு ஒரு மொழி ஆட்சி மொழி என்ற கொள்கை எந்த வகையிலும்

ஏற்றுக் கொள்ள முடியாததொன்று. அங்ஙனம் ஏற்றுக் கொள்ளும்படியாக வற்புறுத்தப் பெற்றால் தென்னகத்தில் ஒரு கசப்புணர்ச்சி தோன்றும்; நிலவும். அதன் விளைவுகளை இப்பொழுது யாரும் கற்பனை கூடச் செய்து பார்க்க முடியாது" என்று அன்று கோவை இராமலிங்க செட்டியார் சொன்ன எச்சரிக்கையையே நாம் இன்றும் எடுத்துக்காட்டு கின்றோம். அன்றும் இந்தி அன்பர்கள் அறியத் தவறி விட்டார்கள்; தொடர்ந்தும் உணர மறுக்கிறார்கள். உலகில் பல்வேறு நாடுகளில் ஒன்றுக்கு மேற்பட்ட ஆட்சி மொழிகள் இருப்பதை உலகத் தொடர்புடைய நாம் மறந்து விடுவானேன்? சுவிஸ் நாட்டில், ஜெர்மனி, பிரெஞ்சு, இத்தாலி ஆகிய மூன்று மொழிகள் ஆட்சி மொழிகளாக இருக்கின்றன. ஏன்? அந்த நாட்டின் மக்கள் தொகையில் ஒரு விழுக்காட்டு மக்களே பேசும் 'ரோமஞ்சி' என்ற மொழியும் உரிமை பெற்றிருக்கிறது. அந்த நாட்டின் மக்களாட்சி மரபு எங்கே? 73 விழுக்காட்டு மக்களின் உரிமையை இழக்கச் செய்யும் நமது அரசின் மரபு எங்கே? கனடா நாட்டில் ஆங்கிலமும் பிரெஞ்சும் ஆட்சி மொழிகளாக இருக்கின்றன. தென்னப்பிரிக்கா நாடு ஒற்றை ஆட்சி நாடு. அந்த நாட்டிலும் கூட டச்சும் ஆங்கிலமும் ஆட்சி மொழிகளாக இருக்கின்றன. தென்னப்பிரிக்கா நாடு ஒற்றை ஆட்சி நாடு. அந்த நாட்டிலும் கூட டச்சும் ஆங்கிலமும் ஆட்சி மொழிகளாக இருக்கின்றன. மலேசியா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளில் தமிழ், சீனம், மலேசியம், ஆங்கிலம் ஆகிய நான்கு மொழிகள் ஆட்சி மொழிகளாக விளங்குகின்றன. ஆதலால், பாரதம் போன்ற ஒரு பெரிய நாட்டின் நாட்டு மொழிகள் என ஏற்றுக் கொள்ளப் பெற்ற அனைத்து நாட்டு மொழிகளும் ஆட்சி மொழிகளாவதே நியாயம். நீதி!

## ஆங்கிலமும் நாட்டு மொழி

"ஆங்கிலோ – இந்தியர்"கள் இந்த நாட்டின் குடி மக்களேயாவர். அவர்களுடைய தாய்மொழி ஆங்கிலம்;

ஆனால் நாட்டுமொழி வரிசையில் சேரவில்லை. எப்படி இந்தியைத் தெரிந்தவர்கள் - பேசுபவர்கள் வடக்கேயுள்ள மாநிலங்களில் சிதறி இருக்கிறார்களோ அதைப் போலவே ஆங்கிலம் தெரிந்தவர்கள் பேசுபவர்கள் - படித்தவர்கள் நாடு முழுவதும் பரவி இருக்கிறார்கள். இன்னும் சொல்லப் போனால் இந்தி பேசுகிறவர்கள், இமயம் முதல் குமரி வரை பரவியிருக்கவில்லை.

ஆனால் ஆங்கிலம் பேசுபவர்கள் பாரத துணைக் கண்டம் முழுவதும் பரவியிருகிகிறார்கள். இன்று இந்தியத் துணைக்கண்டத்தை இணைத்து நிற்கும் தொடர்புமொழி உண்மையில் ஆங்கிலமே! ஆதலால் பாரத நாட்டின் நாட்டு மொழிகளில் ஒன்றாக ஆங்கிலம் இடம் பெற வேண்டுவது அவசியம். அது பாரத நாட்டு மக்களுக்கு நல்லது. இந்திய நாட்டு மொழிகளில் ஒன்றாக ஆங்கிலம் இடம் பெறுவது தவிர்க்கமுடியாதது மட்டுமன்று; இன்றியமையாமையும் கூட, இந்தி எதிர்ப்பில் ஆங்கிலம் இணையாட்சி மொழி என்ற கொள்கை வெற்றி பெறவில்லை.

ஆங்கிலம் பெற்று பிழைத்து வருவதெல்லாம் கால நீட்டிப்புத்தான். ஆங்கிலத்திற்குக் கால நீட்டிப்பைப் பெற்று இந்தி பேசாதார் மனநிறைவு பெறுவது தற்கொலைக்குச் சமம். அடுத்த தலைமுறைக்குச் செய்து வைக்கும் கேடு! எந்தவொரு மொழியிலும் ஓர் இனம் சிந்திக்கவும் அறிவின் திறனைப் பெறவும் பல தலைமுறை பிடிக்கும். ஆதலால் இந்திய ஆட்சிமொழிச் சிக்கலை இந்தத் தலைமுறையில் தீர்வு காணாது அடுத்த தலைமுறைக்கு விடுவது இந்தத் தலை முறைக்குப் பழியைத் தரும்.

## இந்தி வந்தால்...

இந்தி ஆட்சிமொழித் தகுதியைப் பெற்ற காலத்தி லிருந்து நடுவணரசும் இந்தியைத் தாய்மொழியாகவுடைய மாநில அரசுகளும் முறையாகத் திட்டம் தீட்டி வளப்படுத்தி

வருகின்றன. இந்தி பேசப்படும் மாநிலங்களில் ஆங்கிலம் அகற்றப்பட்டுவிட்டது. கல்லூரிப் படிப்பிலும், அறிவியற் படிப்பிலும், மேற்படிப்பிலும் ஆங்கிலம் பெற்றிருந்த இடத்தை இந்தி கைப்பற்றி விட்டது. ஆனால் இந்தி அல்லாத பிறமொழிகள் பேசப்படும் மாநிலத்து மக்கள் இந்தியையும் ஏற்றுக் கொள்ள முடியாமல் ஆங்கிலத்தையும் அகற்ற முடியாமல், தாய்மொழியையும் ஆட்சிமொழியாக்க முடியாமல் இருதலைக் கொள்ளி எறும்பு போல் கையறு நிலையில் தவிக்கின்றனர்.

அதனால் அந்த மக்கள் தம் தம் தாய்மொழி உணர்ச்சியை இழந்து வருகின்றனர். அதன் பயனாக அவர்கள் அறிவியலில் வளரவில்லை. வளர்ந்துகொண்டு போகும் உலகத்திலிருந்து நெடுந் தூரத்திற்குப் பின் தள்ளப்பட்டிருக்கின்றனர். தமிழ் நாட்டின் பட்டதாரி மாணவன் ஒருவனுக்கு விண்வெளிக் கலத்தின் நுட்பம் தெரியாது. காரணம் அவன் அறிவியலை தாய் மொழி மூலம் படிக்கவில்லை. கடந்த 28 ஆண்டுகளாக இந்தி மொழி வளர்ந்திருக்கிறது. இந்தியைத் தாய் மொழியாக உடைய மாணவர்கள் வளர்ந்திருக்கின்றனர். இந்தி அல்லாத மொழி பேசும் மாணவர்கள் வளர்ச்சிக்குரிய வாய்ப்பினைப் பெறவில்லை. இந்தியைத் தாய் மொழியாகவுடைய சில மாநிலங்களில் இந்தி வளர்கிறது. இந்தியைத் தாய் மொழியாகவுடைய மாணவர்களும் வளர்கின்றனர். இந்தியைத் தாய் மொழியாகப் பெறாத மாணவர்கள் இந்தியைத் தாய்மொழியாகக் கொண்டிருக்கும் மாணவர்களுடன் போட்டி போட முடியவில்லை.

இந்தியைத் தாய்மொழியாகப் பெறாத மாணவர்கள் மேல்நிலை பெறமுடியவில்லை. ஏன்? அவர்கள் அந்நிய மொழியாகிய ஆங்கிலத்திலேயே படித்து வருகின்றனர். அதனால் அயல்மொழிச் சொற்களையும் சொற்றொடர்களையும் புரிந்து கொள்ளப் பெருமுயற்சி தேவைப்படுகிறது. கால அளவும் கூடுதலாகிறது. முயற்சியின் அளவு

கூடுதலாலும் காலம் நீடிப்பாலும் மனமும் மூளையும் சோர்வடைந்து விடுகின்றன.

இதனால் பலர் புரிந்து கொண்டு தெளிவு பெற முடிவதில்லை. மனப்பாடம் செய்து தேர்ச்சி பெறுகின்றனர். இங்ஙனம் தேர்ச்சி பெற்றவர்களில் பலர் அறிஞர்களாக விளங்குவதில்லை! உருப்போடும் பொறிகளாகவே விளங்கு கின்றனர். மனப்பாடப் படிப்புக் கல்வியில் ஆர்வத்தைத் தருவதில்லை; கசப்பையே தோற்றுவிக்கிறது.

அதன் காரணமாகவே கல்வி நிலையங்களில் அமைதி யின்மை. இன்று சோவியத் ஒன்றியம் அறிவியல் வளர்ச்சியில் அரிய சாதனைகள் செய்து வருகிறது. இது எப்படி முடிந்தது? ஆங்கிலத்தின் மூலமா? இல்லை, சோவியத் ஒன்றியத்தில் நாட்டு மொழிகள் பயிற்று மொழிகளானமையே காரணம்.

சோவியத் ஒன்றியத்தின் நாட்டு மொழிகள் பல்கலைக் கழகங்களில் பயிற்று மொழிகளாக இடம் பெற்றுள்ளன. அதனாலேயே சோவியத் ஒன்றியம் ஒளிமிக்குடையதாயிற்று. இறந்த மொழியாகக் கருதப்பெற்ற யூதர்களின் தாய்மொழி யாகிய எபிரேய மொழியைப் பயிற்று மொழியாக்கி இசுரேல் வளர்ந்துள்ள வளர்ச்சியை யார் மறுக்க முடியும்?

சப்பான், சீனம் முதலிய நாடுகளின் வளர்சசியும அந்நாட்டு மொழிகள் பயிற்று மொழிகளாக இருப்பதனாலே தான் என்ற உண்மையை ஓர்க; உணர்க! தாய்மொழியின் மூலம் அனைத்துத் துறைகளையும் பயின்றால்தான் சிந்தனைத் திறனும் படைப்பாற்றலும் கிடைக்கும். அன்னிய மொழியின் மூலம் பயிலும் கல்வி ஏட்டுச் சுரைக்காயேயாம்.

இந்தி பேசப்பாடாத மாநிலங்களின் மக்கள் போராடிப் போராடி ஆங்கிலத்திற்குத்தான் உயிர்ப் பிச்சை அளித்தனர். தாய்மொழிக்கு உயிர்ப்புத் தேடவில்லை; தேட நினைக்க வில்லை. இந்தியல்லாத மாநிலங்கள்

தாய்மொழியில் அரசுத் துறை நடவடிக்கைகள் அனைத்தும் செய்ய இயலவில்லை.

கல்வியிலும் அதே நிலைதான். மாநிலத் தாய்மொழிகள் வளர நடுவணரசு வழங்கும் நிதி உதவியோ இல்லையென்று சொல்லாமல் கிள்ளிக் கொடுத்ததுதான். இந்தியை வளர்ப்ப தற்கோ பாரத நாட்டு மக்களின் வரிப்பணம் நிறையச் செலவழிக்கப்படுகிறது.

## நேருவின் உறுதிமொழி

1959-இல் நாடாளுமன்ற விவாதத்திற்கு வந்த ஆட்சிமொழிச் சிக்கல் குறித்து ஆய்வுக்குழு அறிக்கை மீது அமரர் பண்டித நேரு, ஓர் உறுதிமொழி அளித்தார்.

'இந்தி திணிக்கப்படக் கூடாது. இந்தி திணிக்கப்படாது என்று நான் சொல்வதன் கருத்து அதுதான். சென்னையோ, ஆந்திரமோ, கேரளமோ, வங்கமோ வேறு எந்த மாநிலமோ தங்கள் மீது இந்தி திணிக்கப்படுகிறது என்று கருதக்கூடிய வகையில் ஒரு மொழியை அந்த மாநிலங்களின்மேல் திணிக்க நான் விரும்பவில்லை. தங்கள் மீது அழுத்தம் செலுத்தப் படுகிறது அல்லது திணிக்கப்படுகிறது என்று மாநிலங்கள் கருதினால் அம்மொழியை நான் அம் மாநிலங்களின் மீது திணிக்க விரும்பவில்லை. தமிழகம் கட்டாய இந்தி வேண்டாம் என்று கூறினால் அம்மாநிலப் பள்ளிகளில் கட்டாய இந்தி தேவையில்லை" என்று 7-8-1959 அன்று பாரதநாட்டு நாடாளுமன்றத்தில் அமரர் பண்டித நேரு அவர்கள் விளக்கம் கூறினார்.

மேலும் அதுபோது அவர்,

'நான் இரண்டு காரியங்களை யோசனைக்காகக் கூற விரும்புகிறேன். முதலாவதாக இந்தி திணிப்பு இருக்கக் கூடாது. இரண்டாவதாக, முடிவில்லாத கால அளவுக்கு, எவ்வளவு கால அளவு என்று எனக்குத் தெரியாது. அரசு

காரியங்களுக்காகப் பயன்படுத்துவதற்குத் துணை இணை மொழியாக ஆங்கிலம் இருக்கும்.

மக்கள் எத்துணைக் காலம் விரும்புகிறார்களோ அத் துணைக் காலம்வரை ஆங்கிலம் மாற்றுமொழியாக இருக்கும்., ஆங்கிலத்தின் கால எல்லை பற்றி முடிவு எடுப்பதை இந்தி பேசும் மக்களுக்கு நான் விடமாட்டேன் இந்தி பேசாத மக்களே அந்த இறுதி முடிவை மேற்கொள்வார்கள்."

இந்த வாக்குறுதியை வழங்கி பாரதநாடு சிதறுண்டு போகாமல் காப்பாற்றினார். இந்த உறுதி மொழியைப் பெற்றுத் தந்தது அமரர் அறிஞர் அண்ணா அவர்கள் தலைமையில் அமைந்திருந்த திராவிட முன்னேற்ற கழகத்தின் வலிவும் வனப்பும்தான் என்பதை நடுநிலை நெஞ்சினர் உணர்வர். ஆனால் பண்டித நேரு அளித்தது ஒரு வாக்குறுதி யேயாம்.

அது அரசியல் சட்டத்தில் விதியாக ஏற்றுக் கொள்ளப் பெறவில்லை. அமரர் பண்டித நேரு அவர்கள் அளித்த உறுதி நடுவணரசால் காப்பாற்றப் பெறவில்லை. நேருவின் உறுதி மொழியை மீறி ஆட்சிமொழி ஆணைக்குழு பரிந்துரை செய்த ஒரு தலைப்பட்சமான பரிந்துரைகளைக் குடியரசுத் தலைவர் பாபு இராசேந்திர பிரசாத் அறிவித்தார். அவர் அறிவிப்பின் சாரம்:

"இந்தி ஆட்சி மொழியாக வந்தே தீரும். அதற்கான ஏற்பாடுகளைத் துவக்க வேண்டும்" என்பதேயாகும்.

மீண்டும் 1960 - இல் பேரறிஞர் அண்ணா அவர்களைத் தலைமையாகக் கொண்ட திராவிட முன்னேற்றக் கழகம் இந்தியை எதிர்த்துக் கிளர்ந்தெழுந்ததால் அமரர் பண்டித நேருவும், குடியரசுத் தலைவரும், மத்திய உள்துறை அமைச்சரும் "ஆங்கிலம் இணையாட்சி மொழியாக நீடிக்கும்" என்று அறிவித்தனர்.

மீண்டும் 1963 – இல் பாரதத்தின் ஆட்சி மொழிச் சிக்கல் தோன்றியது. அன்றைய உள்துறை அமைச்சர் லால் பகதூர் சாஸ்திரி "1965ஆம் ஆண்டுக்குப் பின்னரும் கூட மத்திய அரசினுடைய காரியங்களுக்காக இந்தியுடன் ஆங்கிலமும் தொடர்ந்து பயன்படுத்தலாம்" என்ற வாசகங்களடங்கிய ஆட்சி மொழிச் சட்ட மசோதாவை நாடாளு மன்றத்தில் முன் மொழிந்தார். அஃதாவது 26–1–1965 முதல் இந்தி, பாரத நாட்டின் ஆட்சி மொழியாகி விடும். துணையாட்சி மொழியாக ஆங்கிலம் பயன்படுத்தப்படலாம் என்பது பொருள்.

இச்சொற்றொடரில் "படலாம்" (may) என்ற சொல், ஆங்கிலம் தொடர்ந்து நீடிப்பதற்கு உறுதி தரவில்லை. ஆங்கிலத்தை அகற்றுவதில் இந்தி பேசாத மக்களின் விருப்பம் முதன்மையானது என்ற பண்டித நேருவின் உறுதிமொழி இச் சட்டத்தில் இடம் பெறவில்லை. இச்சட்டத்தின் படி இந்தி மெல்ல மெல்ல ஆங்கிலத்தையகற்றி அந்த இடத்தை முழுமை யாகப் பிடித்துவிடுமோ என்ற அச்சம் இந்தி பேசாத மாநிலங் களிடையில் மேலோங்கி நின்றது. 1963 ஆம் ஆண்டில் ஆட்சி மொழிச் சட்ட மசோதாவின் மீது அமரர் அறிஞர் அண்ணா அவர்கள் தம் நிலையை விளக்கிப் பேசும் போது:

'நாங்கள் இந்தியை எதிர்க்கவில்லை. இந்தியைக் கட்டாயமாக நுழைப்பதைத்தான் எதிர்க்கிறோம். ஆங்கிலம் காலவரையறையின்றி நீடிக்கப்பட வேண்டும். இந்தி மட்டுமே நாட்டின் ஒரே ஆட்சி மொழியாக இருத்தல் கூடாது. அரசமைப்புச் சட்டத்தில் சொல்லப்பட்டுள்ள **நாட்டு மொழி களையும், நாட்டின் ஆட்சி மொழிகள் என்று அறிவிக்கவேண்டும்.** இந்திய நாட்டின் மொழிச் சிக்கல் தீர்வதற்கு இது ஒன்று தான் வழி" என்று திட்டவட்டமாக அறிவித்தார்.

ஆனால் பயன் ஒன்றும் விளையவில்லை. பண்டித நேருவின் உறுதி மொழியையே அலட்சியப்படுத்தியவர்கள்

இதற்கா செவி சாய்க்கப் போகிறார்கள். 1965இல் இந்தி, பாரதத்தின் ஆட்சி மொழியாகச் சட்டபூர்வமாக இடம் பெற்றுவிட்டது. ஆங்கிலம் துணையாட்சி மொழி நிலைக்கு நகர்த்தப் பெற்றது. இந்த ஆட்சி மொழிச் சட்டத் திருத்தத்தை அமரர் அறிஞர் அண்ணா அவர்கள் மீண்டும் எதிர்த்தார்கள். அறிஞர் அண்ணா மட்டுமல்ல -

அன்று காங்கிரஸ் கட்சியைச் சார்ந்தவர்களாகவும் நடுவணரசின் அமைச்சர்களாகவுமிருந்த திரு. சி. சுப்பிர மணியம், திரு. ஓ. வி. அளகேசன் ஆகியோர் நடுவணரசின் போக்கைக் கண்டித்து, நடுவணரசிலிருந்து வெளியேறினர். இந்த நிலையினைத் தொடர்ந்து இந்தி அரியணை ஏறும் 26-1-1965 ஆம் நாளுக்கு முதல் நாள் தொடர்ந்து நடை பெற்றுக் கொண்டிருந்த கிளர்ச்சி எல்லை கடந்தது.

மக்களின் கிளர்ச்சியை அரசின் அடக்குமுறைகள் அடக்கி விட முடியவில்லை. மழலை பேசும் சிறாரிலிருந்து மரணப் படுக்கையில் கிடந்த கிழவர் வரை இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியில் ஈடுபட்டனர். இறுதியில் நடுவணரசு அமரர் நேருவின் உறுதிமொழியைச் சட்டபூர்வமாகச் செய்வதாக உறுதிமொழி தந்தது.

அந்த உறுதிமொழியைச் செயற்படுத்த 1968இல் தோன்றிய அரசியற் சட்டத் திருத்தத்தில் 1 -ஆவது சட்டத் திருத்தத்தில் அத் திருத்தத்தின் மூன்றாவது சட்ட விதி 5வது பகுப்பில், "இந்தியை மாநில ஆட்சி மொழியாக ஏற்றுக் கொள்ளாத எல்லா மாநிலங்களும் தம் தம் சட்ட மன்றங் களில் அரசு காரியங்களுக்காக ஆங்கிலம் பயன்படுத்தத் தேவையில்லை" என்ற தீர்மானங்களை நிறைவேற்றி, அத்தீர் மானங்களை நாடாளு மன்றத்தின் ஒவ்வொரு சபையும் தனித் தனியாக ஏற்றுக் கொள்ளும் காலம் வரையிலும் ஆங்கிலமே பாரதத் துணைக் கண்டத்தின் இணையாட்சி

மொழியாக இயங்கி வரும் என்று உறுதியிட்டுக் கூறப் பட்டுள்ளது.

இந்த ஆட்சி மொழிச் சட்டத் திருத்தம் அமரர் அறிஞர் அண்ணா அவர்களின் வெற்றி, அவர் தம் இயக்கத்தின் மகத்தான சாதனை! 1967 இல் தமிழ் நாட்டு மக்களிடத்தில் அமரர் அறிஞர் அண்ணா அவர்கள் பெற்ற வெற்றியே இந்த முடிவை எடுக்கும்படி நடுவணரசை நிர்ப்பந்தப் படுத்தியது.

அமரர் அறிஞர் அண்ணா அவர்கள் பெற்ற வெற்றி பெரிதானாலும் வெற்றியின் பயன், நிலையானதல்ல. நாடாளுமன்றத்தின் சாதாரணச் சட்டத்தின் மூலம் தான் இந்த உறுதிமொழி கிடைத்தது. இந்த உறுதிமொழியைப் பிறிதொரு நாடாளுமன்றச் சட்டம், வந்து நீக்கக்கூடும்.

ஆதலால், ஆட்சி மொழிச் சட்டம் 3-ஆம் பிரிவில் 5-ஆம் பகுப்பில் கொடுக்கப்பட்டுள்ள இந்தி பேசாதவர்களின் உரிமையை அரசியல் அமைப்புச் சட்டத்தில் இடம் பெற வைத்தால்தான் நிலையான பாதுகாப்புக் கிடைக்கும்.

இந்தி கற்கக் கூடாதா? ஏன் கற்கக் கூடாது. கற்கலாம். எப்பொழுது தமிழுக்கு - தமிழர்க்கு எதிராக இந்தி அமையாத நிலை ஏற்பட்டால் தான் கற்கலாம். இந்திய அரசமைப்புச் சட்டத்தில் தமிழ் ஆட்சிமொழி உரிமையைப் பெறட்டும்! அதற்குப் பிறகு நாம் இந்தியைக் கற்கலாம்.

இல்லையென்றால் இந்திமொழியின் பேரபாயம் ஒருபொழுதும் நீங்காது; என்றும் இருக்கும். நடுவணரசு நடத்தும் அனைத்திந்தியப் பணித் தேர்வுகள் மாநில மொழி களில் நடத்தப் பெறுவதில்லை. அதனால் இந்தி பேசாத மாநில மாணவர்கள் பின் தங்கிப் போகின்றனர்.

அதுமட்டுமா, நீரில் நீந்தி விளையாடும் மீனைக் கரையில் இழுத்து உண்டு சீரணிக்க - தூண்டில் புழுவை மீனுக்குக் காட்டுவதுபோல - இந்தியைத் தாய்மொழியாகப் பெறாதார் இந்தியைப் பயில ஏராளமான சலுகைகள்;

இந்தியை கற்பிப்பாருக்கு ஊதியங்கள்; இந்தியைக் கற்றுக் கொண்ட அலுவலர்களுக்கு சிறப்பூதியங்கள். இவைகளுக்கும் அப்பால் மறைமுகமான கட்டுப்பாடுகள் ஆகியன மூலம் நடைபெறுகின்றன. இது மறைமுகமான இந்தித் திணிப்பு என்பதை யார் மறுக்க முடியும்.

பாரதத்தின் மொழிச் சிக்கல் தீர்வுக்கு ஆலோசனை யாக வைக்கப்பெற்ற மும்மொழித் திட்டமும், வடமாநிலங் களில் நடைமுறையில் இல்லை. அங்கு இந்தி, ஆங்கிலம் மட்டுமே கற்கப் பெறுகின்றன. மூன்றாவது மொழியாகிய இந்திய மொழி ஒன்றினை அவை விருப்பப் பாடமாக்கி ஒதுக்கி விட்டதால் வட மாநிலங்களில் மும்மொழித் திட்டம் நடைமுறையில் இல்லை. இதனை அறிந்து அமரர் அறிஞர் அண்ணா அவர்கள் 1968-ல் தமிழகத்திலும் இருமொழித் திட்டத்தைக் கொண்டு வந்தார்கள்.

தமிழ்நாட்டின் கல்வி நிலையங்களில் இந்தி மொழி இல்லை. அண்மைக் காலத்தில் மேற்கு வங்கமும் மும் மொழித் திட்டத்தைக் கைவிட்டு இருமொழித் திட்டத்தை ஏற்றுக் கொண்டுள்ளது. இது இந்தி எதிர்ப்பில் ஒரு திருப்பு மையம் என்பதை நாம் மறந்து விடுவதற்கில்லை.

1968-ஆம் ஆண்டில் ஆட்சிமொழிச் சட்டத் திருத்தத்தி னாலும் அமரர் அறிஞர் அண்ணா தமிழகத்தில் இருமொழிக் கல்வித் திட்டத்தின் கீழ் இந்தியை நீக்கியதினாலும் இந்தி நம்மைவிட்டு நீங்கியதென்று யாரும் மனப்பால் குடிக்கக் கூடாது. இந்தியினால் வரும் கேடு முற்றாக நீங்கியபாடில்லை. மேலும் ஆபத்து முறுகி வளர்ந்து கொண்டிருக்கிறது.

இந்தி பேசும் மாநிலங்க .950 – ஆம் ஆண்டிலேயே இந்தியை அரசு மொழியாக ஏற்றுக் கொண்டு விட்டன. அந்த மாநிலங்கள் ஆங்கிலத்தைப் பற்றிக் கவலைப்படவில்லை. அதனால் அந்த மாநிலங்களின் மாணவர்களுக்குத் தொடக்கக் கல்வி முதல் உயர் படிப்பு வரை தாய்மொழி

யாகிய இந்தியிலேயே கல்வி கற்றுக் கொடுக்கப்படுகிறது. அதனால் இந்தி மாணவர்களின் எதிர்காலம் எவ்வகையிலும் பாதிக்கப்படப் போவதில்லை; ஒளிமிக்கதாகவே இருக்கும்.

கடந்த 25 ஆண்டுகளாக நுண்ணியற் கல்வியைக்கூடத் தாய்மொழி மூலமாகவே கற்பதால் அவர்கள் திறமையும் வளர்ந்து கொண்டிருக்கிறது; இந்தியும் வளர்கிறது. போதும் போதாததற்கு நடுவணரசு வேறு இந்தி மொழியை நவீன மொழியாக்கத் திட்டமிட்டு வளர்த்து வருகிறது. நடுவணரசின் பணித்தேர்வுகள் இந்தி, ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளில் நடைபெறுகின்றன.

இந்தியைத் தாய்மொழியாகப் பெற்ற மாணவர்கள் எளிதில் இந்தியில் அந்தத் தேர்வுகளை எழுதி அதிக வாய்ப்பு களைப் பெறுகின்றனர். இந்தி பேசாத மாநிலத்தைச் சேர்ந்த மாணவர்களோ அவரவர் த்ாய்மொழியில் தேர்வு எழுத முடிவதில்லை.

காரணம் இரண்டு; ஆங்கிலத்தின் மூலம் பயின்றதால் தமிழில் எழுதும் பொருள் தெளிவு அவர்களுக்கில்லை. ஆங்கிலத்தில் எழுத முட்டுப்பாடு. தாய்மொழியில் எழுதுவது சலுகையே தவிர, உரிமை இல்லை. ஆதலால் தமிழில் எழுதுவது இழிவு என்ற உணர்வும் காரணம்; ஆதலால், அவர்கள் ஆங்கிலத்திலேயே எழுத வேண்டியவர்களா கிறார்கள். அதனால் அவர்கள் தாய்மொழி மூலம் நுண்ணியற் கலைகளைப் பயிலுதலும் தடைப்படுகிறது. அவர்களின் தாய் மொழி வளர்ச்சியும் தடைப்படுகிறது; அதனால் தாய் மொழியே பயிற்றுமொழி என்ற திட்டம் நடைமுறையில் வெற்றி தரவில்லை. நீதிமன்றங்களின் மொழிகளோ இந்தியும், ஆங்கிலமும்தான்.

இந்தி பேசும் மாநிலங்களில் இந்தியே சட்டத்துறைப் பயிற்று மொழி. இந்தி பேசாத மாநிலங்களில் ஆங்கிலம், சட்டத்துறைப் பயிற்று மொழி. இதனால் இந்தியைத் தாய்

மொழியாகக் கொண்ட மாணவர்களோடு மற்ற மாணவர்கள் போட்டி போட முடிவதில்லை. ஆதலால் இந்தி பேசாத மாநில மக்கள் உண்மையில் வளம்பெற வேண்டு மானால் பாரத நாட்டின் நாட்டு மொழிகள் அனைத்தும் ஆட்சி மொழிகளாவதைத் தவிர வேறு வழியில்லை.

இந்தி பேசும் மாநிலங்களுக்கு இந்தி தாய்மொழி. இந்தி பேசாத மாநில மக்களுக்கு ஆங்கிலம் தாய்மொழியன்று. அதனால் ஆங்கிலம் முதன்மைப்படுத்தப்படும் பொழுது அவர்களின் தாய்மொழி இரண்டாம் நிலையை அடைந்து விடுகிறது. இதனால் ஆங்கிலத்தை அகற்றி விடுவோம் என்ற அச்சம் வேண்டியதில்லை. அதுவும் ஒரு மொழிப் பாடமாக தொடர்ந்து பயிலப்பெறும், ஏன்? ஆங்கிலமே பாரதத்தின் உண்மையான தொடர்பு மொழியாக விளங்கும். ஆனால் தமிழ்நாட்டின் அனைத்துத் துறைகளிலும் தமிழே பயிற்று மொழியாக இருந்திட வேண்டும். ஆட்சிமொழியாக அமைந்திட வேண்டும்.

தமிழகத்தின் எல்லா நடவடிக்கைகளிலும் உண்மை யான ஆட்சி மொழியாகத் தமிழ் அரியணை ஏற வேண்டும். தற்போது தமிழ்நாட்டில் ஆங்கிலம் கைப்பற்றிக் கொண் டிருக்கும் இடத்தைச் செந்தமிழ் பற்றிக் கொண்டேயாக வேண்டும். இந்த நிலை உருவாகத் தமிழும் இந்தியத் துணைக் கண்டத்தின் ஆட்சி மொழிகளில் ஒன்றாக இடம் பெற வேண்டும். அதுவே அமரர் அறிஞர் அண்ணாவின் கொள்கை.

இந்நிலை ஏற்படாவிடில் இந்தியை எதிர்க்கும் உணர்ச்சியில் இன்பத் தமிழை நோக்கி நகராமல் நாம் ஆங்கிலத்தை நோக்கியே நகரவேண்டிய இரங்கத்தக்க நிலை ஏற்பட்டு விடும். அப்போதும் இந்திக்காரர்களை நோக்க நாம் இரண்டாம்தரக் குடியினரேயாம் என்பதை மறந்துவிடக் கூடாது. அதுமட்டுமன்று; இந்தி எதிர்ப்புப் போர்வையில்

ஆங்கிலம் நம்மைத் தொடர்ந்து ஆட்சி செயயும். அதனால் தமிழ் வளம் குன்றும். தமிழினத்தின் சிந்தனைத்திறன் வளராது. அறிவியல் வளராது. இயல்பாகவே, நமது தமிழினத்தின் அயல்மொழி அறிவு பெற்றுவிட்டால், தாய்மொழி அறிவை வளர்த்துக் கொள்ள மறந்துவிடும் மனப்பாங்கு இருந்து வருகிறது.

ஆங்கிலம் மட்டுமே தெரியும். அல்லது ஆங்கிலமும் தெரியும் என்று பலர் காட்டிக் கொள்ள விரும்புவர். இது இந்தி மொழியாளரிடமில்லாத - தமிழினத்தாரிடம் மட்டு முள்ள ஒரு குறை. இக்குறை நீங்கினால்தான் அயல் மொழியறிவு தமிழுக்குப் பயன்படும்; தமிழ் இனத்திற்குப் பய்னபடும். தமிழறிவு, தமிழ்வளம் பிற மொழியினருக்குப் பயன்படும். மேலும் தமிழர்களிடத்தில் ஆங்கிலத்தில் திறமை யுடையார் - ஆங்கிலத்தில் திறமை இல்லாதார் என்ற இரண்டு சாதிகள் உண்டாகும.

தெளிவாகச் சொன்னால் பெருவாரியான தாழ்த்தப் பட்ட - பிற்பட்ட தமிழ்க்குடியினர் முன்னேற முடியாது. எனவே, பாரத நாட்டின் மொழிச் சிக்கலுக்கு நிலையான தீர்வு, அறிஞர் அண்ணா கூறியபடி பாரதநாட்டின் நாட்டு மொழிகள் அனைத்தும் ஆட்சி மொழியாவதுதான் என்ற உண்மையில் உறுதியாக நிற்கவேண்டும். அறிஞர் அண்ணாவின் கொள்கையே தமிழகத்தின் கொள்கையாக உருப்பெற வேண்டும். இக்கொள்கையினின்றும் நாம் பிறழ்வது அல்லது விட்டுக் கொடுப்பது தமிழகத்திற்கு நன்மை தராது. இங்ஙனம் ஒன்றுக்கும் மேற்பட்ட மொழிகளை ஆட்சிமொழியாக்கு வதில் இடர்ப்பாடுகள் இருக்கலாம். ஆனால் வளர்ந்து வரும் அறிவியலின் முன்னே அவ்விடர்ப்பாடுகள் பெரிதல்ல.

இன்று ஒரு மொழியில் பேசுவதை இன்னொரு மொழியில் சொல்லும் கருவி அமைத்தல் எளிதே. அதுபோலவே மொழி பெயர்ப்புக் கருவியும் காணமுடியும்.

அப்படியே இடர்ப்பாடுகள் இருப்பினும் நாட்டுப்பற்றின் பேராலும், ஒருமைப்பாட்டின் பேராலும், அடிப்படை உரிமைகளின் பேராலும் நாம் அனைவரும் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்.

## அரசியல் சட்டம் திருத்தப் பெறவேண்டும்

வட மாநிலத் தலைவர்கள் அல்லது அமைச்சர்கள் 'இந்தி திணிக்கப்படமாட்டாது' என்றே, அடிக்கடி சொல்லி வருகின்றனர். இந்த உறுதிமொழியில் என்ன பயன் இருக் கிறது? வட மாநிலத் தலைவர்கள் அல்லது அமைச்சர்கள் நமக்குத் தரவேண்டிய உறுதிமொழி "இந்தி மட்டும் பாரத நாட்டின் ஆட்சிமொழியன்று, பாரத நாட்டின் அனைத்து நாட்டு மொழிகளும் ஆட்சிமொழிகளாக இடம்பெற்று செயல்முறைக்குக் கொண்டுவர நடுவணரசு உடனடியான முயற்சிகளை மேற்கொள்ளும். இந்த நிலையை எய்திட இந்தி பேசாத மாநிலச் சட்ட மன்றங்களும், நாடாளுமன்றமும் ஏற்று ஒப்புறுதி அளிக்கும் வரை ஆங்கிலம் இணை ஆட்சி மொழியாக இருக்கும்" என்ற உறுதிமொழியைத்தான் தமிழ் நாடு எதிர்பார்க்கிறது.

இந்தி பேசாத மாநிலங்களும் எதிர்பார்க்கின்றன. இந்த உறுதிமொழியையும் உறுதிமொழியாக அளித்தால் மட்டும் போதாது. அரசியற்சட்டத்தின் அடிப்படை உரிமைப் பகுதியில் மொழிப் பிரிவில் இந்த உறுதிமொழி ஏற்றப் பெற வேண்டும்.

இன்று இந்தி எதிர்ப்பு உணர்வு கூர்மையடைந்திருக் கிறது. மும்மொழித் திட்டத்தை ஏற்றுக்கொண்டு இந்தியைக் கற்பித்து வருகின்ற தென்மாநிலங்களின் முதலமைச்சர்கள் இந்தி எதிர்ப்பு அணியில் சேர்ந்திருக்கின்றனர். இத்திருப் பத்தைத் தோற்றுவித்த அரசியல் சூழல்களையும் சூழல் களுக்குச் செயலுருவம் கொடுத்த தமிழ்நாடு முதலமைச்சர் மாண்புமிகு புரட்சித் தலைவர் எம்.ஜி. இராமச்சந்திரன் அவர்

களையும் பாராட்டக் கடமைப்பட்டிருக்கின்றோம். இது இந்தி எதிர்ப்பில் ஒரு திருப்பு மையம், மேற்கு வங்கமும் சேர்ந்து கொண்டிருக்கிறது.

ஆதலால், இந்தத் தடவை இந்தி எதிர்ப்புணர்ச்சியை ஆங்கிலத்தை நீட்டிப்பதற்கு மட்டுமே பயன்படுத்தாமல் நாட்டு மொழிகளை நடுவணரசின ஆட்சி மொழிகளாக ஏற்றுக் கொள்ளும்படி வற்புறுத்துவது பயன் தரும். அதுவே இந்தியின் ஆதிக்கத்தைத் தவிர்க்கும் முயற்சி; பாராதநாட்டு மக்கள் அனைவரும் சமநிலையில் வளர வாய்ப்பளிக்கும் முயற்சி, இந்தியாவை ஒருமைப்பாட்டுணர்வுடன் வலிமை பெற்ற ஒரு நாடாகக் காக்கும் பணி.

பெரியார் நூற்றாண்டில் இந்தி எதிர்ப்புணர்ச்சி கொழுந்துவிட்டு எரியத் தொடங்குகிறது. இந்த வேள்வியை இன்பம் விளையாது இடும்பைக்கு அஞ்சாது எல்லா வற்றையும் மொழிநலம் காணும் பணியில் அர்ப்பணிப்புணர் வுடன் ஈடுபடவேண்டும். இப்பொழுது எழுந்துள்ள இந்தி எதிர்ப்புணர்ச்சி முழுமையான - நிலையான வெற்றியைப் பெறவேண்டும். ஆதலால் அறிஞர் அண்ணாவின் கொள்கை வெற்றிப் பெற வேண்டும்.

"இந்தி மட்டும் பாரதத்தின் ஆட்சி மொழியன்று. பாரதத்தின் அனைத்து நாட்டு மொழிகளும் நடுவணரசின் ஆட்சி மொழிகள், அவ்வழி நம் தாய்மொழியாம் தமிழும் ஆட்சி மொழியாக வேண்டும். ஆங்கிலமும் நாட்டுமொழிப் பட்டியலில் சேர வேண்டும். ஆங்கிலம் நாட்டின் தொடர் மொழியாகப் பயன்படுத்தப் பெறுதல் வேண்டும்" என்ற கோரிக்கையை முன்வைத்து நாம் போராட வேண்டும்.

நமது கோரிக்கை அரசியற் சட்டத்தில் இடம் பெறும் வரை தமிழ் நாட்டு மக்கள் அனைவரும் எந்த வகையிலும் வேறுபடாது ஒன்றுபட்டு நின்று வற்புறுத்த வேண்டும் இந்தப் பணியில் யார் பெரியவர்? யார் சிறியவர்? என்ற வேறுபாட்

டையும், கட்சி வேறுபாட்டையும் மறந்து ஒருமையுணர்வுடன் ஈடுபடவேண்டும்.

இந்தியைத் தாய்மொழியாகப் பெறாத வடபுலத்து மாநில மக்களிடையிலும் நாம் இந்தி எதிர்ப்பு உணர்வைத் தூண்டி இயக்கத்தில் ஈடுபடுத்த வேண்டும். இந்த இனிய பணியை நிறைவேற்றி முடிக்கத் தெளிவான முடிவுகளை இந்த மாநாடு காணவேண்டும் என்று கேட்டுக் கொண்டு மாநாட்டைத் தொடங்கி வைக்கின்றோம்.

*தமிழ் வாழ்க! இன்பத் தமிழே எங்கும் ஆட்சி செய்க!*

3

# சமுதாயம்

## 47. கடவுளைப் போற்று! மனிதனை நினை!

### 1. கடமை தாய்! உரிமை சேய்!

நாடு களமாக இருக்க வேண்டும். "நாடென்ப நாடா வளத்தன" என்று திருக்குறள் கூறும். ஒரு நாடு இயற்கை வளமுடையதாக அமைந்திருந்தாலும் பொருள் வளமுடையதாக அமைந்துவிடாது. இயற்கை வளத்தில் அனைத்தும் பொருந்திய நாடு ஒன்றைக் காண்பது அரிது. மாறிக் கிடக்கும் வளங்களை மாற்றி வளம் காணும் நோக்குடையதுதான் உலக உறவு. நம்முடைய நாடேகூட அனைத்து வளங்களும் நிறைந்த நாடு என்றுதான் பெருமை பேசிக்கொள்கிறோம். இது இயற்கை மட்டுமல்ல. அவசியமும்கூட. நாம் பிறந்த நாட்டை இனி நாம் மாற்றிக்கொள்ள முடியுமா? அல்லது மாற்றிக் கொள்ளத்தான் வேண்டுமா? பிறந்த நாட்டை விட்டு வேறு நாடுகளில் குடியேறலாம், குடியேறி வாழமுடியும். அதற்கு

இன்றைய உலக நாடுகளின் விதிகள் இடம் தருகின்றன ஆயினும் அது நடைமுறைக்கிசைந்த செயல் அல்ல. அப்படியே பார்த்தாலும் நமது நாட்டைவிடச் சிறந்த நாடு ஒன்று இருப்பதாகத் தெரியவில்லை.

நாட்டில் கிடைக்கும் இயற்கை வளங்களைப் பயன் படுத்திப் பொருள்களைப் படைத்துக் குவிக்க வேண்டும். அதற்கு உழைப்புத் தேவை. உழைத்து நாட்டின் வளத்தைப் பெருக்கிப் பாதுகாப்பதே சிறந்த ஆற்றல். நாட்டின் மக்கள் உழைப்பாற்றல் உடையவர்களாக உழைப்பவர்களாக விளங்க வேண்டும். நாட்டுப்பற்றின் செயற்பாடு, நாட்டின் வளத்தை - பெருமையைக் காப்பாற்ற கடமையைச் செய்தல் உழைத்த லாகும். உழைத்தல் தவம்; உழைத்தல் வேள்வி; உழைப்பே உயர்வு. ஒரு நாட்டில் உழைப்பவனே உண்பதற்கு உரிமை யுடையவன். உழைப்பும் உழைப்பின் துறைகள் விரிவும். உழைப்பின் வழி பொருள் படைத்தலுமே அறிவியல் வளர்ச் சிக்குக் கால்கோள் செய்தன. உழைப்பு - உற்பத்தி வளர்ச்சி அடிப்படையிலே நாகரிகங்கள் தோன்றி வளர்ந்து வந்துள்ளன - அல்லது அழிந்துள்ளன. மனித வாழ்க்கையில் அரசியல், சமயம், கலை, இலக்கியம் முதலிய எல்லாவற்றிற்கும் அடிப்படை உழைப்பும் உற்பத்திப் பெருக்கமுமே யாகும்.

இந்திய நாட்டில் வறுமை அகன்றபாடில்லை. இந்திய நாட்டைப் புண்ணிய பூமி என்று போற்றிப் புகழ்கின்றோம்! வணங்குகின்றோம்! வாழ்த்துகின்றோம்! ஆயினும் நாட்டை எல்லா வளங்களும் பொருந்தியதாக நாம் இன்னமும் உருவாக்கவில்லை. ஏன்? "சுதந்தரம் என்பது உரிமைகளைத் தருவது" என்ற பிழையான பாடத்தைப் படித்துக் கொண்டு விட்டோம். எங்கு பார்த்தாலும் உரிமைகளை மையமாகக் கொண்ட போராட்டங்கள்; கடமையைப்பற்றியாரும் கவலைப்படுவதாகத் தெரியவில்லை. வேலை செய்வதற்குரிய - படைத்தலுக்குரிய ஆற்றல் குறைந்து, போராட்டம் என்ற பெயரில் உற்பத்திக்கு விடுப்பு: இலாப நோக்கத்தில்

கதவடைப்பு; அதன் வாயிலாக உற்பத்தி முடக்கம்! இது இந்த நாட்டின் அன்றாடச் செய்தியாகி வருகிறது. இந்த அளவுக்கு உழைப்பில் அக்கறையில்லாது நாடு திசைமாறிச் செல்லும் சூழ்நிலையில் நெய்வேலி நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்கள் தங்கள் நாட்டுப்பற்றை, உற்பத்தி ஆர்வத்தைக் காட்டியுள்ளார்கள். அவர்களுக்கும் குறைகள் உண்டு. அவற்றை எடுத்துச் சொன்னார்கள். வழக்கம் போல நிர்வாகம் காதில் போட்டுக கொள்ளவில்லை. வேறு வழியில்லை. நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்கள் போராடத் திட்டமிட்டனர். ஆனால் அவர்கள் வகுத்த போராட்ட முறை நாட்டுப் பற்றுக்கு - நாட்டின் வளத்துக்கு அரண் செய்வதாக அமைந்தது. ஆம்! வழக்கமாகச் செய்யும் வேலையிலும் கூடுதலாக வேலை செய்வதும், மேலும் அதிக நேரம் வேலை செய்வதும் என்று முடிவெடுத்தனர். இந்த முறை வரவேற்கத் தக்கது; பாராட்டத்தக்கது!

இன்று நமது நாட்டில் உழைப்பாற்றல் உரியவாறு பயன்படுத்தப் பெறவில்லை என்பது நாடறிந்த உண்மை. ஒவ்வொருவரும் தமது ஆற்றலில் 17% தான் உழைப்பதாக ஒரு புள்ளி விவரம் கூறுகிறது. நாடு விடுதலை பெற்றபோது அரசின் நிர்வாக இயந்திரத்தில் பணி செய்தவர்களைவிட 2 மடங்கு கூடுதலாக இப்போது அலுவலர்கள், பணியாளர்கள் பணி செய்து வருகின்றனர். ஆயினும் நாடு பணியாளர்களின் எண்ணிக்கைக்குத் தகுந்தபடி வளரவில்லை! எங்கும் தேக்கம்! பல்வேறு அலுவலர்கள் அலுவல்களைப் பகுதி நேரப் பணிபோலத்தான் செய்கின்றனர். கோப்புகள் நகர்கின்றன - அல்லது ஊர்ந்து சுற்றுகின்றன. நான்கைந்து தாள்களில் முடிய வேண்டிய கோப்புகள் சுற்றிச் சுற்றி வந்து கோப்புக் கனக்கிறது. கோப்பு கனத்தால் பரவாயில்லை. பெண்ணின் வயிறு பெரிதானாலும் பிரசவமானாலும் குழந்தை கிடைக்கும் என்பது போலக் கோப்பு கனத்தாலும் நல்வாழ்வு கிடைக்கும் என்று நம்பலாம். ஆனால் இது கருக்

கொண்டுள்ள வயிறு அல்ல; ஊதிப்போன வயிறு! மகோ தரம். அவ்வளவுதான். அது போலக் கருத்துரைகள் கேட்டல், பரிந்துரைகள் கேட்டல், விளக்கங்கள் கேட்டல், சில தகவல்கள் கேட்டல், நினைவூட்டுக்கள்; நேர்முகக் கடிதங்கள் இப்படியாகப் பலப்பல. ஆயினும் முடிவு கோப்புப் பெருத்தது தான்; உண்டு அல்லது இல்லை என்ற முடிவாவது உண்டா? அதெல்லாம் அவ்வளவு சீக்கிரம் அறிவிக்கமாட்டார்கள். பரிசீலனையில் இருக்கிறது என்பர். ஏன் இந்த நிலை? நாட்டை வளப்படுத்த வேண்டும். மேம்படுத்த வேண்டும் என்ற குறிக்கோள் இல்லை. அக்குறிக்கோளுக்காக வேலைக்கு வரவில்லை. வேலைக்கு வந்த காரணம் கவலைப்படாமல் மாதம் முதல் தேதி ஊதியம் வாங்க; இந்த மனப்போக்கில்லை யானால் பொதுத் துறையில் இழப்பு வருமா? கூட்டுறவில் விலை கூடுமா? இன்று இந்த நிலை நாட்டின் எல்லா மட்டங்களிலும் நிலவுகிற உண்மை. இந்நிலையை நீடிக்க அனுமதிப்பது நல்லதல்ல.

இதுமட்டுமா? நாட்டில் பல இலட்சம் பேர் 'வேலை யில்லை வேலையில்லை" என்று பல்லவி அனுபல்லவி பாடு கின்றார்கள். உண்மை என்ன? இன்று இந்தியாவில் இருப்பது வேலையில்லாத் திண்டாட்டமா? அல்லது விரும்பும் வேலை கிடைக்காத திண்டாட்டமா? விரும்பும் வேலை என்றால் என்ன? அரசு வேலையாக இருக்க வேண்டும்! ஏவலர் வேலையாக இருந்தாலும் பரவாயில்லை; இப்போது காலியாக உள்ள கிராம மணியக்காரர் வேலையாகத்தான் இருக்கட்டுமே! அரசு வேலையாக இருக்க வேண்டும். அந்த வேலையும் அவர்கள் ஊர்ப்பக்கத்தில், முடிந்தால் அவர்கள் ஊரிலேயே கிடைக்க வேண்டும்; முதல் தேதி ஊதியம் கிடைக்க வேண்டும்; இதுதான் விரும்பும் வேலையின் இலக்கணம். இந்த அளவுக்கு மோசமாக, இளைஞர்கள் - அவர்களுக்கு முன் வாழ்வோர்கள் இருக்கிறார்கள்; இதற் கெல்லாம் காரணம் அவர்களுக்கு நாம் வழங்கிய கல்வி

முறை. நாம் அவர்களுக்குத் தந்து வரும் கல்வி தன்னம்பிக்கையைத் தரக்கூடியதாக இல்லை. படைப்பாற்றல் உடையவர்களாக நாம் அவர்களை வளர்க்கவில்லை. கடுமையான உழைப்புக்கு அஞ்சுகின்றனர். உடலுழைப்புப் பணிக்கு முன்வரத் தயங்குகின்றனர். வேளாண்மையும், கால்நடை வளர்ப்பும் படிக்காதவர்களின் தொழில் என்று பள்ளியிறுதி வகுப்பை எட்டிப் பார்த்தவன் கூறிக்கொண்டு வேலை தேடுகிறான். இந்த நாடு எப்படி வளர முடியும்?

நமது நாட்டை நாம் உழைப்பால் வளப்படுத்த வேண்டும் உளமார்ந்த உழைப்பு வேள்வி எல்லா மட்டங்களிலும் இயற்றியாக வேண்டும். காலமும் கருத்தும் ஆற்றலும் எஞ்சாமல் உழைப்பின் வழி பொருள்களாக்கப் பெறுதல் வேண்டும். கடமையே உரிமையின் வாயில், கடமையைச் செய்தலே நாட்டுப் பற்று. இன்றைய இந்தியாவின் தேவை கடமை வீரர்கள்! உழைப்பு வேள்வி! உற்பத்திப் பெருக்கம்! கடமை தாய்; உரிமை சேய். –“மக்கள் சிந்தனை” – 15–1–81

## 2. உண்மையான உழைப்பு தேவை

*“நாடென்ப நாடா வளத்தன நாடல்ல*
*நாட வளந்தரு நாடு”* – குறள் 739

என்று திருக்குறள் கூறும்.

நாடு என்றால் எல்லா வளங்களும் நிறைந்ததாக அமைய வேண்டும். அப்படியாயின் வளம் இயற்கையாய் அமைவதா? படைக்கப்படுவதா? என்ற கேள்வி எழும். பொதுவாக வளம் இயற்கையைச் சார்ந்ததேயானாலும் அந்த நாட்டில் வாழும் மக்களின் படைப்பாற்றலால்தான் வளம் படைக்கப்படுகிறது. படைப்பாற்றல் இல்லாத மக்களைப் பெற்றுள்ள நாட்டில் இயற்கை வளங்களும் கூடப் பயனற்றவை. எத்தகைய இயற்கைக் குறைகளுடைய நாடா

யினும் அந்நாட்டு மக்கள் முயன்றால் அந்நாட்டை வளமாக்க முடியும் என்பதற்கு இசுரேல் ஒரு சான்று.

நாட்டை வளப்படுத்த உழைப்பு தேவை. உழைப்பு என்பது உயிர்ப்புள்ள - படைக்கும் தன்மையுடைய சிறந்த ஆற்றல். இந்த உழைப்பை வேள்வியாக நினைத்துச் செய்தல் - இயற்றுதல் வேண்டும். மாமுனிவர் மார்ச்சு, "உழைப்பது என்பது உயிர்க்குணமாக - மாறாத இயல்பாக - இயற்கையி லமைந்த ஒழுகலாறாக என்றைக்கு இடம் பெறுகின்றதோ அன்றுதான் பொதுவுடைமைச் சமுதாயம் கால்கொள்ளும்" என்று கூறியுள்ளார். அதனால்தான் சோவியத் ஒன்றியத்தின் அரசியல் சட்டத்தில் உழைக்காதவனுக்கு உண்ண உரிமை இல்லை என்ற விதி இடம் பெற்றிருக்கிறது.

இன்று நமது சமுதாயத்தில் உழைக்காமல் உண்பதற்கு வசதி படைத்தவர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு உழைக்க வேண்டும் என்ற அவசியமில்லை. ஆனால் அவர்கள் உண்பனவும் நுகர்வனவும் உழைப்பால் படைக்கப் பட்டவையே என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். ஆம்! சிலர் உழைக்காமல் உண்கிறார்கள். மற்றவர்களின் உழைப்பில் உண்கிறார்கள்! இதை மத உலகம், "புண்ணியத்தின் பயன்" என்று பாராட்டுகிறது. அரசியல் சட்டங்கள் 'உரிமை' என்ற பெயரால் பாதுகாக்கின்றன. உழைத்து உண்பது கேவலம் என்ற உணர்ச்சி மறைந்து உழைக்காமல் உண்பது கேவலம் என்ற கருத்து, சமுதாயத்தில் கால் கொள்ள வேண்டும்.

உழைப்பையும்கூட மேம்போக்காக, மினுக்காக, யாருக்காகவோ செய்வதுபோலக் கடன் கழிக்கும் மன நிலையில் செய்வது உழைப்பாகாது. இத்தகையோர் உழைப்பில் ஆற்றலும் உயிர்த்துடிப்பும் படைப்பாற்றலும் இரா. தமது ஆற்றலுக்கு ஏற்றவாறு உழைக்காது - உழைப்பாற்றலைப் பயன்படுத்தாது வாழ்தல் ஒரு சமூகத் தீமை. அது வெறுக்கத்தக்கது. அழுகி ஒழுகும் தொழுநோயை

விட வெறுக்கத் தக்கவர்கள் உழைக்காது உண்பவர்கள். சமூகத்தின் எல்லா தீமைகளுக்கும் பிறப்பிடம் உழைக்காமல் இருப்பதுதான்! இன்று நமது நாடு அவாவி நிற்பது கடும் உழைப்பையே. கடமைகள் செய்யும் வாயிலாகவே உரிமைகள் வந்தடையும் என்பது உயர்ந்த நீதி. இன்று சிலர் கேட்கலாம். “உழைப்பவர்கள் ஏழைகளாக இருக்கிறார்களே” என்று, ஆம்; உண்மைதான்! உழைப்பவர்களின் இந்த ஏழ்மை உழைக்காதவர்களாலே, உழைக்காமல் மற்றவர்கள் உழைப்பைச் சுரண்டி வாழ்வதனாலேதான் ஏற்படுகிறது; ஆதலால் “உழைப்புத் தேவை” என்கிற கொள்கை தவறில்லை.

உழைக்காமல் சுரண்டி ஏமாற்றிச் சிலர் வாழ்வதைச் சமுதாயப் பொது விதியாக்க இயலாதல்லவா? சுரண்டலை எதிர்த்துப் போராடலாம். ஆனால் உழைக்காமல் சுரண்டலை எதிர்ப்பதாக வாய்ப்பந்தல் போட்டுவிட்டு வாளா இருத்தல் சமுதாயத்திற்குப் பயன்தராது. ஆதலால் இன்று நமது நாட்டின் அனைத்து மட்டங்களிலும் உண்மை யான உழைப்பு தேவைப்படுகிறது. எல்லா இடங்களிலும் உழைப்பது போன்ற ஒரு பொய்த் தோற்றம் காணப்பெறு கிறது. ஆனால் உழைப்பு இல்லை. நாட்டின் வளம் வளர வில்லை. ஆதலால் நாட்டை வளப்படுத்த உழைப்போம்! வஞ்சனையின்றி உழைப்போம்! உளமார உழைப்போம்; அறிவார்ந்த ஆள்வினை மேற்கொண்டு உழைப்போம்; உழைப்பின் பயனை வீணர்கள் கொண்டு போகாமல் உழைப் போர் உலகம் பெற்று மகிழச் செய்யப் புதுவிதிகள் செய்வோம்!

– ‘மக்கள் சிந்தனை’ 1–2–81

## 3. உழைப்பு – ஊதியம்

“உழைப்புக்கேற்ற ஊதியம்” என்ற கொள்கையே உயர்ந்த அறநெறி. பழங்காலத்தில் உழைப்பிற்கேற்ற ஊதியம் என்ற கொள்கை இல்லை. செல்வ வளமுடையோர்

சாதாரண மக்களின் உழைப்பை உறிஞ்சுகின்றவர்களாகவே இருந்தனர். காலப் போக்கில் உழைப்பிற்கேற்ற ஊதியம் என்ற கொள்கை நாகரிகம வளர்ந்தது.

இன்று நமது நாட்டில் உழைப்பிற்கேற்ற ஊதியம் பெறாத உழைப்பாளிகளும் உள்ளனர். ஊதியத்திற்கேற்ற உழைப்பைத் தராத உழைப்பாளிகளும் உள்ளனர். உழைப்பிற் கேற்ற ஊதியம் பெறாதவர்கள் கிராம மக்கள்! படிக்காத வர்கள்; சமுதாயத்தில் பின் தங்கியவர்க்ள். ஊதியத்திற்கேற்ற உழைப்பினை நல்காதவர்கள் படித்தவர்கள் - வசதி வாய்ப்பு உள்ளவர்கள். இந்த வகையினரின் நிலைமையே இன்று நம்மை வருத்துகின்ற துன்பம்.

இந்திய நாட்டில் இன்னமும் மக்கள் துறை என்று கூறப்பெறும் பொதுத்துறையும் கூட்டுத் துறையும், தொழில் திறனில் இலாபம் ஈட்டுவதில் வளரவில்லை. ஏன்? ஆனால் தனியார் துறை, தொழில் திறனில் வளர்ந்து வருகிறது. ஒரு தனிக் குடும்பத்தின் வருவாய் பலகோடி உயர்ந்து வளர்ந்துள்ளது. தனியார் துறையில் உள்ள கண்டிப்பும் கண்காணிப்பும் அக்கறையும் பொதுத்துறையில் இல்லை. கொஞ்சம் தலைகாட்டினால் உரிமை உணர்வின்பேரில் வேலை செய்யாமலிருக்கப் போராடுகின்றனர்! என்ன செய்ய? கூட்டுறவுத் துறையிலும் இந்த நிலைதான். கூட்டுறவுத் துறையில் வேலையின் தொடக்க நிலையில் இருக்கிற ஒரு சிற்றெழுத்தர்கூட நாளை எண்ணிச் சம்பளம் கேட்பாரே தவிர, உழைப்பைக் காட்டி அவர்தம் உழைப்பால் விளைந்த பயன்களைக் காட்டி உரிமையுடன் ஊதியம் கேட்க மாட்டார்; அதனால் உழைப்பிற்கு ஏற்ற ஊதியம் கிடைக்க வாய்ப்புள்ள பொதுத்துறை. இழப்பைச் சந்தித்து ஏழ்மையை வளர்க்கிறது. உழைப்பிற்கேற்ற ஊதியம் கேட்க இயலாத - உரிமை இல்லாத தனியார் துறை வளர்கிறது. அதனால் நாட்டு வருமானம் உயர்ந்தாலும் சராசரி மனிதனின் வருமானம் உயரவில்லை. ஏன்? உழைப்பால் வளரும்

செல்வம் தனியுடைமை ஆகிறது. கூட்டுறவாக இருந்தால் எல்லாருக்கும் கிடைக்கும்.

"உழைப்பிற்கேற்ற ஊதியம்" என்பது இருபக்கமுள்ள கொள்கையேயாம். இந்தச் செயல் முறையிலேயே 'உழைப்புக்கேற்ற ஊதியம் ஊதியத்துக்கேற்ற உழைப்பு" என்ற கொள்கை விளக்கப் பெறுகிறது. உழைப்புக்கேற்ற ஊதியம் வழங்கப் பெறாமையினாலேயே செல்வக் குவியல் ஏற்படு கிறது என்ற கொள்கையை கார்ல் மார்ச்சு விளக்கியுள்ளார். ஒருவன் எட்டு மணி நேரம் உழைக்கிறான். அவனுடைய எட்டு மணி நேர உழைப்பில் உற்பத்தியாகும செல்வம் ரூபாய் 100 மதிப்புள்ளது என்று வைத்துக் கொள்வோம். ரூபாய் 100 ஈட்டித் தரும் உழைப்பாளி பெறும் ஊதியம் இந்த நாட்டில் இன்றுள்ள நடுத்தரக் கூலி நாள் ஒன்றுக்கு ரூபாய் 20 என்று வைத்துக் கொள்வோம். ரூபாய் 20 கூலிபெற்றுக் கொண்டு ரூபாய் 100 மதிப்புள்ள பொருள் உற்பத்தி செய்கிறான். ரூபாய் 80 உழைப்பில் உபரி. இது போல் 100 பேர் வரை தொழிலுக் கமர்த்தித் தொழில் செய்கின்றவன் ஒவ்வொருவர் உழைப்பிலும் ரூபாய் 80 சதவீதம் அல்லது சராசரி 3-4 பங்கு பெறுகிறான். தனி உடைமை திரள்கிறது; குவிகிறது; இதனால்தான் "உழைப்பிற்கேற்ற ஊதியம்" என்ற சோசலிசக் கொள்கையை நடைமுறைப்படுத்த உற்பத்திப் பணிகளை நாட்டு மக்களுக்குரியதாய் அமைக்க வேண்டும். உற்பத்தியின் இலாபங்கள் மக்களைச் சென்றடைய வேண்டும் என்பது சோஷலிச விதி. இந்த விதியை நடைமுறைப்படுத்த நாம் நம்மைப் பக்குவப்படுத்தி கொள்ளவில்லை. வளர்த்துக் கொள்ளவில்லை.

நம்முடைய நாட்டில் ஒன்றிரண்டு பொதுத்துறை நிறுவனங்கள்தான் சிறப்பாக இலாபத்துடன் நடக்கின்றன. மற்றவைகளுக்குச் சிறந்த உற்பத்தித் திறனும் கூடவில்லை; நிர்வாகத்திறனும் கிடைக்கவில்லை. இழப்புத்தான் மிச்சம்! ஏன்! உழைப்பிற்கேற்ற ஊதியம் என்ற கொள்கை

விஞ்ஞானக் கொள்கை உழைப்பிற்கேற்ற ஊதியம் என்ற கொள்கை வெற்றி பெற்றால்தான் உழைப்பார்வமும் வளரும்; வளரும் திறமையும் வளரும்; செல்வமும் பெருகும். உழைப்பிற்கேற்ற ஊதியத்திற்கு உத்தரவாதம் பெறக்கூட முதலில் உழைப்பு வளர்ந்து வளத்தைக் குவிக்க வேண்டும். பானையில் இல்லாதபோது சட்டியில் எப்படி வரும்?

உழைப்பிற்கேற்ற ஊதியத்தை உற்பத்தி அடிப்படையில் நடைமுறைப்படுத்த நாட்டிற்குப் பொதுவான ஒரு சட்டமியற்றலாம். உற்பத்தித் துறை எதுவாயினும் உற்பத்தித் திறனுக்கும் அளவுக்கும் ஏற்றாற் போல் ஊதியம் நிர்ண யிப்புக் கொள்கையை நடைமுறைப்படுத்தலாம். இந்நடை முறை நாட்டிற்கு ஏற்றது. அது போலவே ஊதியத்திற்கு ஏற்ற உழைப்பினை நல்குதல் தவிர்க்க முடியாத கடமை என்ற நியதியையும் வலியுறுத்த வேண்டும். இங்ஙனம் முறையாக உழைக்கத் தவறுபவர்களைச் சமூகமே அங்கீகரிக்கக் கூடாது. உழைக்காமல் ஊதியம் வாங்குவது - உண்பது கேவலம் - விபசாரம் போன்ற ஒழுக்கக் கேடு என்று உணரச் செய்ய வேண்டும்.

இன்று சீரான ஊதியம், விலைப் புள்ளிக்கிசைந்த ஊதியம் பெறாது வருந்துகிறவர்கள் விவசாயிகளும் கிராமப் புறத்துத் தொழிலாளர்களும்தாம். சந்தையில் எல்லாப் பொருள்களின் விலையும் ஏறிவிட்டன. ஆனால், நெல் விலை உயரவில்லை. ஏன்? நகர மக்கள் கிராமத்து மக்களைச் சுரண்டுகின்றனர். இந்தச் சுரண்டல் முறை தீது; இந்தப் பயங்கரமான சுரண்டலிலிருந்து விவசாயிகளை - கிராமங் களை மீட்டாக வேண்டும். இதற்கு உள்ள நேரான வழி உணவுப் பொருள்கள் வியாபாரத்தை அரசு நாட்டுடைமை யாக்க வேண்டும். அல்லது கூட்டுறவு ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவர வேண்டும். இந்த நடைமுறையால் பல நன்மைகள் உண்டு. வியாபாரம் என்பது உற்பத்தி செய்யும் துறையன்று. அதனால் இடைத் தரகர் பணியில்

ஈடுபட்டுள்ளோர் உற்பத்திப் பணியில் ஈடுபட முடியாத நிலை. அடுத்து, தனியார்கள் குறுக்கு வழியில் இலாபம் ஈட்டும் நோக்கத்துடன் கலப்படம் செய்கின்றனர். கலப்படத்தால் வளரும் தீமை சொல்லுந்தரத்தன்று. எனவே கலப்படத்தையும் தவிர்க்கலாம். மூன்றாவதாக விலை வாசியைக் கட்டுப்படுத்தலாம். பொருளைப் பதுக்கி செயற்கை முறையில் பொருள் தட்டுப்பாட்டை உண்டாக்கி விலையை ஏற்றுவது என்பது தனியார் துறைக்குள்ள கைவந்த கலை. கூட்டுறவுத் துறையில் பொதுத் துறையில் விலையைக் கட்டுப்படுத்த முடியும். நான்காவதாக, கிடைக்கும் இலாபம் உற்பத்தியாளர்களுக்குக் கிடைக்கும். ஆனால், இன்றுள்ள நிலையில் கூட்டுறவுத் துறையில் விலை கூடுதலாக இருக்கிறது. ஏன்? கூட்டுறவுத் துறையில் பொறுப்பின்மையும் நீக்குப் போக்காக நடக்கத் தெரியாத நிர்வாக நடைமுறை களும் அளவுக்கு மிஞ்சிய நிர்வாகச் செலவுகளுமே காரணம். இந்த நடைமுறைகள் மாறியாக வேண்டும். அப்பொழுது தான் உழைப்பிற்கேற்ற ஊதியம் கிடைக்கும்.

–'மக்கள் சிந்தனை' 15–2–81

## 4. சமநிலைச் சமுதாயம்

இந்தியா இயற்கையமைப்பில் மட்டும் மேடு பள்ளங் களையுடைய நாடு அல்ல. இந்திய சமுதாயத்திலும் எண்ணத் தொலையாத மேடுபள்ளங்கள்; ஆனால் நாட்டில் உள்ள மேடுபள்ளங்கள் இயற்கையிலமைந்தவை. இந்த வேறுபாடுகள் கவர்ச்சியைத் தருவன; வாழ்க்கைக்கு ஆக்கமளிப்பன; இதமளிப்பன. இந்திய சமுதாயத்தில் உள்ள மேடு பள்ளங்கள் இயற்கையாயமைந்தவையல்ல; முற்றிலும் செய்றகையா யமைந்தவை. அருவெறுப்பைத் தரக்கூடியவை. அழிவைத் தரும் இயல்பின. இந்த மேடு பள்ளங்களும் பல வகையின.

இந்திய சமுதாயம் சாதிமுறைகளாலாய அமைப் புடையது. தீண்டாமை என்ற பெரிய படுகுழியும் உடையது.

பார்வைக்குச் சமுதாயத்தைத் தரவாரியாக அடுக்கி வைத்திருப்பது போலத் தோன்றும். ஆனால் இஃது உண்மையான தோற்றமன்று. மாயாவாதக் கொள்கையினரின் படைப்பாகிய சாதிமுறைகளும் ஒரு மாயை போலத் தோன்றும். ஆனால் உள்ளீடாக - ஆழமான வேற்றுமைகள் பகையுணர்ச்சிகள் வளர வழி வகுக்கப் பெற்று, தொடர்ச்சியாக இந்திய சமுதாயத்தை உருக்குலையச் செய்துவிட்டது. அடித்தட்டு மக்கள் எழுந்திருக்க முடியாமலே அமுக்கப் பெற்று விட்டனர். அதுமட்டுமா? எழுந்திருக்க வேண்டும் என்று எண்ணுவதே வேதத்திற்கு முரணானது என்ற சாத்திர அமைப்புக்களைக் காட்டி அவர்களுடைய சிந்தனைப் புலன்களை மரத்துப் போகும்படி செய்தாயிற்று. இப்படி ஒடுக்கப்பெற்ற பலகோடி மக்கள் சிந்தனையிழந்து, அறிவு இழந்து, உருவத்தில் மனிதராய் - வாழ்க்கை அமைப்பில் விலங்குகளாய் வாழ்ந்தனர். இந்தச் சாதி முறைகள் ஒழுக்கத்தின் பாற்பட்டவையல்ல; பிறப்பின் பாற்பட்டவை. இந்தத் தீண்டாமையைத் தமிழ்த் தலைவர்களாகிய அப்பரடிகள். இராமானுசர் முதலான சமயச் சான்றோர்கள் எதிர்த்துப் போராடியும் வெற்றி பெற்றார்களில்லை. ஆங்கிலேயர்களுடன் வந்த புகை வண்டியும் பேருந்துகளும் இந்த இறுக்கமான சாதி முறைகளை இடித்துத் தள்ளின. புகை வண்டியும் பேருந்தும் வசதிக்குரிய அமைப்புகளாயிற்றே! எளிதில் அதனை இழக்க மனம் வருமா? ஆதலால் ஒரே வண்டியில் பயணம் செய்தார்கள். ஓரளவு சாதி முறைகள் நெகிழ்ந்து கொடுத்தன. ஆயினும் வீட்டில் - வீதியில், கல்விக்கூடங்களில், திருக்கோயில்களில் இச்சாதி முறைகள் ஆட்சி செலுத்தியே வந்தன. புகைவண்டியில் பயணம் செய்தவர்கள் சிலர் வீட்டிற்குப் போனதும் குளித்து விட்டே வீட்டிற்குள் போவது வழக்கமாக இருந்தது. உணவகங்களில் பார்ப்பனர் சாப்பிடத் தனி இடமும் மற்றவர்களுக்குத் தனி இடமும் இருந்தன. இன்றும் கூட கிராமப் புறங்களில் இந்தத் தீமை அகன்ற பாடில்லை.

திருக்கோயில்களில் தாழ்த்தப்பட்டவர்கள் நுழையவே கூடாது; மற்ற சமூகத்தினர் நுழையலாம்; இறைவனைத் தொட்டு வழிபட முடியாது. ஏன்? இறைவனுக்கு தீட்டு வந்து விடுமாம். நாடு விடுதலைப் போராட்டத்தில் ஈடபட்டிருந்த காலத்தில் இந்தத் தீண்டாமையை எதிர்த்துப் போராட வேண்டிய ஒரு வரலாற்றுக் கட்டாயத்தைச் சந்திக்க நேரிட்டது. இந்திய விடுதலைப் போராட்ட இயக்கமாகிய 'காங்கிரஸ்' தீண்டாமை விலக்குப் பணியையும் இலட்சிய மாக ஏற்றுக் கொண்டு போராடியது. இதன் பயனாக நாடு விடுதலை பெற்றவுடன் ஆலய நுழைவுச் சட்டம் பிறந்தது. ஆண்டாண்டு காலமாகத் திருக்கோயிலுக்கு வெளியில் ஒதுங்கிப் படுத்துக் கிடந்த மக்கள் திருக்கோயிலுக்குள் வந்தனர். திருக்கோயிலின் எல்லா இடங்களுக்கும் அவர்கள் வர அனுமதிக்கப் பெறவில்லை. தடைகளுடன் கூடிய உரிமை தான் கிடைத்தது. நாடு விடுதலை பெற்றவுடன் எழுந்த பல் வேறு எழுச்சிகளில் இதுவும் ஒன்று; பாராட்டுதலுக்குரியதே.

அடுத்து இந்திய சமுதாயத்தினரின் அனைத்து மட்டங்களிலும் கற்கவேண்டும் - முன்னேற வேண்டும் என்ற உணர்வு கிளர்ந்து எழுந்தது. அமுக்கப்பட்டுக் கிடந்த அவர்கள் எழுந்து நடமாட முயன்றபோது தகுதி, திறமையின் பெயரால் அந்த நடமாட்டம் பயனற்றதாக்கப் பெற்று மீண்டும் கோடானுகோடி மக்களை முடக்கும் சூழ் நிலையையே வளர்ந்தவர்கள் உண்டாக்குகிறார்கள். அப்படி யானால் தகுதி திறமை வேண்டாமா? யார் சொன்னது வேண்டாம் என்று. தகுதியும் திறமையும் பெறுவது செயற் பாட்டினால் தானே ஒழிய வேறு அல்ல. அவர்கள் தகுதியை - திறமையைப் பெற முதலில் கற்கவும், வேலைகளைச் செய்யவும் உரிமை பெற்றதால்தானே தகுதியை திறமையைப் பெறமுடியும். இந்த எணணச் சூழலில்தான் கல்விக் கூடங் களில் அரசுப் பணிகளில் தேர்தல் தொகுதிகளில் தாழ்த்தப்

பட்டவரிகளுக்கு என்று இடம் ஒதுக்கும் சிந்தனை பிறந்து வளர்ந்து, இந்திய அரசியல் சட்டத்தில் இட ஒதுக்கீட்டுக் கொள்கை இடம் பெற்றது. இந்தச் சாதி அமைப்பு முறையில் எல்லாரையும் ஒரே அமுக்கமாக அமுக்கிவிட்டால் தீண்டத் தக்கவராக ஆக்கிவிட்டால் வாழ்க்கைக்குரிய உடல் உழைப்பைத் தந்து மேட்டுக்குடியினரை வாழ்விப்பர் யார்? அதனால் புத்திசாலித் தனமாகவே காரியம் செய்தனர். ஒரு சில கோடிப் பேர் தீண்டத் தகாதவர்கள். மற்றும் பல கோடிப் பேர் தீண்டத் தகாதவர்கள் அல்லர். ஆயினும் உடலுழைப்புக்குரிய பிறப்பினர். வியாபாரத்திற்குரியவர். போருக்கு உரியவர் என்று ஒதுக்கப்பெற்று விழிப்பாகக் கல்விக் கூடங்களிலிருந்தும் முறையான அரசுப் பணிமனை களிலிருந்தும் முறையாக ஒதுக்கி வைக்கப்பெற்றனர். இத்தகைய சமூகத்தினரும் கல்வி ஆட்சி உரிமைகளில் பின் தள்ளப்பட்டே கிடந்தனர். இத்தகைய சமுதாயம் முன்னேறத் துடித்த நிலையில் மிகவும் பிற்பட்டோர் என்ற அடிப்படையில் கல்வி நிலையங்களிலும் ஆட்சிப் பணி மனைகளிலும் இடம் ஒதுக்கும் செயல்முறை பிறந்தது. இந்த இட ஒதுக்கீட்டு முறையைப் பெற்றுத் தருவதில் முனைப்புடன் நின்று போராடிய பெருமை தலைவர் பெரியார் அவர்களுக்கு உண்டு. இந்த இட ஒதுக்கீட்டு முறையால் தாழ்த்தப்பட்ட வர்களும் பின்தங்கியவர்களும் கல்லூரிகளுக்குள் நுழைந்தனர். கற்றனர். பட்டதாரிகள் ஆயினர். ஆட்சிப் பணிமனைகளில் அமர்ந்தனர். சமுதாயத்திலிருந்து அருவெறுக்கத்தக்க மேடுபள்ளங்கள் சற்றே சமன் ஆயின. ஆயினும் போதுமான அளவு முன்னேற்றம் ஏற்பட்டுவிட்டது என்று கருதுவதற் கில்லை. இந்த நிலையில் இட ஒதுக்கீட்டைக் கைவிடும்படி முற்படுத்தப்பட்டோர் என்ற அணி போராடத் தொடங்கி உள்ளது. இந்தப் போராட்டம் தமிழ்நாட்டிலும் குசராத்தி லும் தோன்றி உள்ளது. இந்தப் போராட்டத்தில் நியாயங்கள் என்ன? கண்டறிவோம்.

–'மக்கள் சிந்தனை' 15–4–81

# 5. இட ஒதுக்கீட்டுக் கொள்கை ஒரு சிந்தனை

ஒரு சமுதாய அமைப்பில் வளர்ந்தவர் வளராதவர் என்ற நிலை இருக்கும்வரையில் இட ஒதுக்கீட்டுக் கொள்கை இருக்க அனுமதிப்பதுதான் நியாயம். ஆனால் முற்படுத்தப் பட்டோர் என்று தம்மைக் கூறிக் கொள்ளும் உயர் சாதியினர் இட ஒதுக்கீட்டுக் கொள்கையின் மூலம் தாம் பிற்படுத்தப் பட்டு விட்டதாக கூறிப் போராட்டங்களைத் தொடங்கி யுள்ளனர். இந்தப் போராட்டத்தின் அடிப்படை நியாய மானது என்று கருதமுடியாது. தாழ்த்தப்பட்டவர்கள் பிற் படுத்தப்பட்டவர்கள் என்று கூறப்பெறும் சமுதாயங்கள் இன்னமும் முற்படுத்தப்பட்டோருடன் ஈடுகொடுத்து நிற்கக் கூடிய தகுதியைப் பெறவில்லை. பிற்படுத்தப்பட்டோர் தாழ்த்தப்பட்டோரிலும்கூட ஓரளவு வசதி வாய்ப்புடைய வர்களும் மற்றவர்களைப் பார்த்து முன்னேற வேண்டும் என்ற உணர்வுடையவர்களும் மட்டுமே ஓரளவு முன்னுக்கு வந்துள்ளனர். அவர்களும்கூட ஓரளவுதான்! மற்றபடி தாழ்த்தப்பட்டோர் பிற்படுத்தப்பட்டோர்களில் இன்னமும் எழுபத்தைந்து விழுக்காட்டினர் பின்தங்கிய நிலையில்தான் இருக்கின்றனர். இவர்களுடைய முன்னேற்றத்திற்குரிய களம் கண்டு, வாயில் அமைத்ததே 35 ஆண்டுகளுக்கு முன்பு தானே? முன்னேறியோர் பயிற்சி பள்ளி ஆண்டுகள் ஆயிற்றே! எப்படி 35 ஆண்டுகளில் ஈடு கொடுக்க முடியும்?

கடமை உணர்வு, நாகரிகம், பண்பாடு, இசைந்து வாழ்தல் ஆகிய வளர்ச்சிக்குரிய பண்புகளைக்கூட இன்னமும் தாழ்த்தப்பட்டோர் பிற்படுத்தப்பட்டோர் பெற வில்லை. இந்தப் பண்புகளும் பொறுப்புணர்வும் கல்வி ஆர்வம் தோன்றிய பிறகுதான் தோன்றும். ஒரு பார்ப்பன இளைஞன் ஒரு வீட்டில் வேலை செய்துகொண்டே படித்துப்

பட்டதாரியாக வந்துவிடுவான். மாயூரத்தில் பல பார்ப்பன இளைஞர்கள் நான்கைந்து வீடுகளுக்குத் தண்ணீர் எடுத்துக் கொடுத்தும். வேறு ஏவல்களைச் செய்தும் வேளைக்கு ஒரு வீடாகச் சாப்பிட்டும் கல்வி பயின்று பின் நல்ல பொறுப்பு களுக்கு வந்திருக்கிறார்கள். பிற்பட்ட சமூகத்தினைச் சார்ந்த இளைஞர்களிடம் இந்தப் பண்பினை எளிதிற் பார்க்க இயலாது. நாமே சொந்த அனுபவத்தில் கண்டறிந்த ஒன்று. நமது பாபநாசம் திருவள்ளுவர் கல்லூரியில் இரண்டு பின் தங்கிய மாணவர்களை முழுப்பொறுப்பையும் நாமே ஏற்றுக் கொண்டு, படிக்க அனுப்பி வைத்தோம். ஆனால் அவர்கள் படித்துப் பட்டம் பெறாமல் இடையில் வந்துவிட்டார்கள். வந்ததும் நமக்குத் தெரியாது. பின் ஒரு சந்தர்ப்பத்தில் அவர் களைக் கேட்டபோது 'வசதியாக இல்லை' என்றார்கள். என்ன வசதி தேவை என்று கேட்டுப் பெற்றிருக்கலாம். அந்த அளவு பொறுப்பு இல்லை. இன்று அவர்கள் நிலை என்ன? எளிதில் வேலை கிடைக்கக் கூடிய பட்டங்களும் பெறவில்லை. தொழில் செய்து வாழும் பொறுப்புணர்வும் இல்லை. இதுபோல நூற்றுக்கணக்கான உதாரணங்கள் கூறலாம். ஏன்? கல்லூரியில் போராட்டங்களையெல்லாம் முன்னின்று நடத்துபவர்கள் இவர்கள்தாமே. இதற்கெல்லாம் காரணம் நன்முயற்சிக்குரிய பழக்கங்கள் தோன்றி வழக்கங்களாக மாற உரிய காலம் அமையாததுதான்.

ஆதலால் இட ஒதுக்கீட்டுக் கொள்கையை இந்தச் சூழ்நிலையில் கைவிட இயலாது - கூடாது. அது மட்டுமா? முற்படுத்தப்பட்டோர் வளர்ந்த சமுதாயத்தினர் புத்திக் கூர்மையுடையவர்கள் இவர்கள் ஒன்றும் பின் தங்கிவிட வில்லை. அந்தச் சமூகத்திற்குள்ளும் யாராலும் ஏற்கப் பெறாது உயர்நிலைச் சுற்றுவட்டார உறவுகள் இல்லாது சில குடும்பங்கள் பின்தங்கியிருப்பது உண்மை. ஆனால் இந்த உண்மை சமுதாயம் தழுவியது அல்ல. சென்னையில் சில ஆண்டுகளுக்கு முன் பல கல்லூரிகளில் உயர் சாதியினருக்கு

இடம் கிடைக்காத சூழ்நிலையை வெற்றி காணச் சில நாள்களிலேயே முயன்று விவேகானந்தா கல்லூரி காணப் பெற்றது என்று கூறுவர். மேலும் உயர் சாதியினர் நடத்தும் கல்லூரிகள் பல உள்ளன. இன்றும் தமிழகத்தின் தொழில் மன்னர்கள் உயர் சாதியினர்தாம்; அதிலும் குறிப்பாகப் பார்ப்பனர்கள்தாம்; இட ஒதுக்கீட்டுக் கொள்கையை இந்தத் தொழில் நிறுவனங்கள் சரியான முறையில் நடைமுறைப் படுத்துகின்றன: அதாவது இந்தத் தொழில் நிறுவனங்களுக் குரிய பணிகளில் உயர் சாதியினருக்கே பணிகள் ஒதுக்கப் படுகின்றன. எல்லாவற்றிற்கும் மேலாக உயர் சாதியினருக்கும் குறுகிய இடப்பற்று கிடையாது; இந்தி எதிர்ப்புணர்ச்சி கிடையாது. ஆதலால் நடுவண் அரசின் பணிவாய்ப்புகளை உயர் சாதியினரே அடைந்து அனுபவிக்கின்றனர். ஆதலால் இட ஒதுக்கீடுக் கொள்கையின் மூலம் உயர் சாதியினர் மிகவும் பின் தள்ளப்பட்டு விட்டனர் என்று கருதுவதற் கில்லை. ஆயினும் பழைய சமூக அமைப்பில் பிறப்பை அடிப்படையாகக் கொண்டது போலவே இட ஒதுக்கீட்டுக் கொள்கையைப் பிறப்பின் அடிப்படையில் அணுகாமல், இருக்கும் நிலைமைகளைக் கணக்கில் எடுத்துக் கொண்டு ஒதுக்கீட்டுக் கொள்கையை நடைமுறைப் படுத்துவது பற்றி ஆலாசிக்க வேண்டிய காலக் கட்டம் உருவாகியுள்ளது. பிறப்பு வழியிலான எந்த வேறுபாட்டையும் தொடர்ந்து ஆதரிக்காமல் இருப்பது நல்லது. பிறப்பு, வளரும் சூழல், வசதி இந்த அடிப்படைகளை அளவுகோல்களாகக் கொண்டால் என்ன என்று மறு ஆய்வு செய்ய ஆட்சியாளர்கள் முன்வரவேண்டும். இது குறித்துத் திருக்குறள் பேரவையினர் ஒரு பரிந்துரையை மக்கள் மன்றத்தின் முன் வைத்துள்ளனர். அப்பரிந்துரையை ஆராய்ந்து நடைமுறைப் படுத்துதல் இந்தியாவின் சாதிப் பகையை நீக்க உதவும்.

–'மக்கள் சிந்தனை' 1–6–81

# 6. சாதிச் சிக்கல் தீர ஒரு பரிந்துரை

பிறப்பின் அடிப்படையை மட்டுமே அளவுகோலாகக் கொண்டு முன்னேறியோர், தாழ்ந்தோர் என்று நிர்ணயிப்பது தவறு; முறைகேடு, பழைய சமூக அமைப்பை, சாதி முறைகளை, குலகோத்திர அமைப்புகளை அப்படியே நிரந்தரமாகப் பாதுகாக்க வேண்டும் என்று கருதுவோரின் எண்ணத்திற்கு வலிவு கொடுத்து விட்டது. சாதி அடிப்படை யிலான இட ஒதுக்கீட்டுக் கொள்கை. ஆதலால் சாதி முறைகளாலும் அவ்வழிப்பட்ட வேற்றுமைகளாலும் அழிந்து கொண்டிருக்கும் நம்முடைய சமுதாயத்தைக் காப்பாற்ற வேண்டும். பின்தங்கியவர்களுக்கு உதவி என்ற கொள்கை. இப்போது சாதி முறைகளைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்ற நிலைக்கு வளர்ந்துள்ளது. ஏன்? பழனியில் நடைபெற்ற பார்ப்பனர்கள் மாநாட்டில் பிராமணீயத்திற்கு உயிர்ப்புக் கொடுக்ககூடிய எண்ணம் எதிரொலித்தது என்பதை யார்தான் மறுக்க முடியும்? ஆசாரத்தின் பெயரால் வெளியில் சாப்பிடுவதைத் தவிர்த்தல் என்பது அவர் களுடைய கொள்கை. இது சாதி முறையில் நம்முடைய சமுதாயம் ஆழ்ந்து கிடக்கிறது என்பதற்கு ஒரு சான்று.

சாதி வேறுபாடின்றி எல்லாரும் அருச்சகராகலாம் என்ற சட்டம் இந்திய உயர்நீதி மன்றத்தால் ஏற்றுக் கொள்ளப் பெறவில்லை; தோற்றுப் போனது ஏன்? நம்முடைய சமுதாய அமைப்பு - சாதி முறை என்ற கொள்முறை நெகிழ்ந்து கொடுக்காததனால்தானே!

விடுதலை பெற்று முப்பத்து நான்கு ஆண்டுகள் ஓடி விட்டன. நம்முடைய குடியரசு நாடு மதச்சார்பற்ற நாடு. சுதந்திர சோஷலிசக் குடியரசு நாடு. இத்தகு நாட்டில் சாதி முறைகள் ஏன்? அதுவும் துறவிகளிடத்தில் கூட! உண்மை யான துறவிகளும் இதற்கு விலக்கில்லை; ஏன்? இந்து சமயம்

– இந்திய சமயங்களில் பௌத்தத்தைத் தவிர எந்த மதமும் உலகச் சமயம் ஆகாது – ஏன்? இந்தச் சாதி முறைகளால்தான் என்பதை மறந்து விடுவதற்கில்லை. கோயிலில் சாதி, மடங் களில் சாதி, ஜகத்குருமாரர்களும் சாதி, குலம், பிறப்புச் சுழிகளில் தலைப்பட்டுத் தடுமாறியவர்கள் தாம்! ஏன்? நமது குடியரசுகூட அப்படித்தான்! ஒரு மதத்திலிருந்து இந்து மதத் திற்கு வரலாம். ஆனால், வருகிறவர்கள் குறிப்பிட்ட சமூகத்தில் அவர்களுடைய ஒப்புதலுடன் சேரவேண்டும் ஏன் இந்த இரும்புச் சட்டம்? சாதி முறைகள் நெகிழ்ந்து ஒன்றாகிவிடக் கூடாது என்பதுதானே கருத்து?

ஆதலால் நமது மதத்தில் மற்றவர்களைச் சேர்த்தால் எந்தச் சாதியில் சேர்ப்பது என்ற பிரச்சினை வந்து விடுகிறது. ஆதலால் நமது சமயத்தைச் சார்ந்து ஒழுகுகிறவர்கள் இன்று உலக நாடுகளின் இனத்தைச் சார்ந்தவர்களிடையில் இல்லை. இன்று உண்மையில் "ஜகத்குரு"க்களாக விளங்குகிறவர் போப் தான்! அடுத்து ஆகாகான் தான்! ஆதலால் இந்தக் காலக் கட்டத்திலாவது சாதி முறைகளை அறவே அகற்றும் சிந்தனை நமது சமயத் தலைவர்களுக்கு வந்தாக வேண்டும். அவர்களுக்கு இது எளிதில் வருமா? சமயத் தலைவர்களுக்கு வந்தாலும் சரி வராமல் போனாலும் சரி பெரியாரைப் பின் பற்றுகிறோம், என்று கூறிக் கொள்ளும் தமிழ்நாடு அரசுக்கு இச்சிந்தனை வந்தாக வேண்டும். இந்தச் சிந்தனை எளிதில் வராது, ஏன்? உயர் சாதியினர் அரசுக்குக் கேடு செய்வார்கள். ஆனாலும் வெற்றி சாதியற்ற சமுதாயத்திற்குத்தான் என்பதை உறுதியாகக் கூறலாம். ஆதலால் 'திருக்குறள் பேரவை'யின், சாதிச் சிக்கல்கள் தீர்வுக்குச் செய்த பரிந்துரைகளைத் தமிழ்நாடு அரசு ஏற்றுக் கொள்ள வேண்டும்.

'திருக்குறள் பேரவை'யின் பரிந்துரை என்ன? இட ஒதுக்கீட்டுக் கொள்கைக்குப் பிறப்பினால் அமையும் சாதிகுல வேற்றுமைகளை அளவுகோலாகக் கொள்ளக் கூடாது. அவர்தம் வாழ்க்கை நிலைகளையே அளவு கோலாகக்

கொள்ள வேண்டும் என்பது. சமூக ஒதுக்கல் கொள்கை களினால் பாதிக்கப்பட்டவர்கள் கல்வியில் பின்தங்கிய வர்கள், வேலை வாய்ப்பில் பின்தங்கியவர்கள், பொருளா தாரத்தில் பின்தங்கியவர்கள் இத்தனை வகையிலும் பின் தங்கியவர்கள் அனைவரும் உதவிக்கு முழுதும் உரியவர்கள். இவர்கள் இன்றுள்ள தாழ்த்தப்பட்டோர் போல முதற் சலுகைக்கு உரியவர்கள். அடுத்து, கல்வி, வேலைவாய்ப்பு, பொருளாதாரத்தில் பின் தங்கியவர்கள் மிகவும் பிற்பட் டோர்கள் அடுத்து ஏதாவது இரண்டில் பின்பற்றியவர்களாக இருந்தால் அவர்கள் பிற்படுத்தப்பட்டோர்கள். இந்த முறை நடைமுறைப்படுத்தப் பெற்றால் சாதி வேற்றுமைகள் நீங்கும். இதுபோலவே நமது சமயத்தில் ஒட்டிக்கொண்டிருக்கிற சாதி முறைகளை அறவே அகற்ற வேண்டும்.

—'மக்கள் சிந்தனை' 15–6–81

# 7. வளர்ந்துவரும் சமுதாயத்தில் பிற்படுத்தப்பட்டோர் யார்? தாழ்த்தப்பட்டோர் யார்?

சமுதாயம் என்பது ஒருவர் பலருக்காகவும் பலர் ஒருவருக்காகவும் என்ற கொள்கை வழி உருக்கொள்ளும் அமைப்பாகும். இக் கொள்கை வழி அமைந்த சமுதாய அமைப்பில் இன, சமய, சாதி, குல, கோத்திர வேற்றுமைகள் இருக்க நியாயமில்லை; இருக்கக்கூடாது என்பது திருக்குறள் நெறி. பிறப்பிலேயே சாதி வேற்றுமைகளையும், சிறப்புத் தகுதிகளையும் இழிவுகளையும் படைத்துத் தந்த பிற்போக்கு வழக்கை மறுக்கிறது பொதுமறை திருக்குறள், சாதி வேற்றுமை, இன வேற்றுமை, நிற வேற்றுமை அவ்வழி ஒதுக்கல் ஆகிய அனைத்துச் சமுதாயத் தீமைகளையும் முற்றாக மறுக்கிறது. "எல்லா உயிர்களும் பிறப்பில் ஒத்த

உரிமையுடையன. பிறப்பின் காரணமாகச் சிறப்பும் இல்லை; இழிவும் இல்லை. உயிர்கள் முயன்று பெறும் பெருமை உண்டு" என்றும் திருக்குறள் கூறுகிறது.

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்பது திருக் குறள் ஆதலால் இந்த மாநாடு மக்கள் மன்றத்தில் நிலவும் இனவேற்றுமை, நிறவேற்றுமை, சமய வேற்றுமை முதலியவை களை முற்றாக வெறுக்கிறது. வேறுபாடுகள் இல்லாத ஒருமைப்பாடுடைய சமுதாயத்தை அமைப்பதே திருக்குறள் பேரவையின் குறிக்கோள். சாதி வேற்றுமையைச் சமுதாயத்தில் வளர்க்க நினைக்கும் ஒரு சில பிற்போக்கு மத, கலாச்சார சக்திகளைத் தக்கவாறு சந்தித்து அவைகளை மக்கள் மன்றத்திலிருந்து விலக்கித் தனிமைப்படுத்துவது என்று பேரவை தீர்மானிக்கிறது.

இந்த மாநாடு, சாதி மனப்பான்மையிலிருந்து விடுதலை பெற்று ஒரு குலம் காண முன்வரும்படி மனித குலத்தை அழைக்கிறது. அரசியற் கட்சிகள், நாட்டை நலிவுறச் செய்யும். சாதி மன்னபான்மைகளைக் கட்சி வளர்ச்சிக்கும், தேர்தல் வெற்றிக்கும் பயன் படுத்தாதிருக்கும்படி இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது. அரசுகள் சாதி, இனவேற்றுமைகள் வளராமல் கண்காணிக்கும் பொறுப்பை ஏற்க வேண்டும். மனித குலத்தில் வேற்றுமைகளை வளர்க்கும் இயக்கங்களை அரசுகள் மறைமுகமாகவோ, நேரிடையாகவோ ஊக்கு விக்கக் கூடாது. சாதி வேற்றுமைகளைத் தூண்டும் இயக்கங் களின் மீது நடவடிக்கை எடுத்து ஒடுக்க வேண்டும். சாதிகளற்ற சமுதாயத்தை நடைமுறைப்படுத்தும் பொழுது சமுதாயத்தில் முன்னைய வரலாற்று நிகழ்வுகளின் காரணமாகத் தாழ்த்தப்பட்டிருக்கின்ற - பிற்படுத்தப் பட்டிருக்கின்ற சமுதாயத்தினரின் முன்னேற்றத்திற்குத் தடை ஏற்பட்டுவிடக் கூடாது. சமுதாய நடைமுறைகளால் நலிந்து பின்னடைந்திருப்பவர்கள் வலிமையுடையவர்களுடன் சமநிலையில் போட்டி போடும் தகுதியினை இழந்திருப்பர்.

ஆதலால், நலிந்தவர்கள் வளர்ந்தவர்களோடு வளர்ந்து வந்து சமநிலையில் நிற்கும் வரை தகுதி, திறமை என்று பேசுவது ஏமாற்று வித்தையேயாகும். வளராதவர்கள் வளர வழி தேவை.

ஆதலால், தாழ்த்தப்பட்டோர் மிகவும் பிற்படுத்தப்பட்டோர், பிற்படுத்தப்பட்டோர் ஆகிய சமுதாய அமைப்புகளுக்கு உரிய ஒதுக்கீடுகள் நியாயமானவை. இந்த ஒதுக்கீடுகளுக்குச் சாதி அடிப்படையில் இலக்கணம் வகுக்காமல் தகுதி நிலையில் இலக்கணம் கண்டு நடைமுறைப் படுத்துதல் நல்லது.

அதாவது:

1. சமுதாய அமைப்பில் தீண்டத்தகாதவர்களாக வாழ்பவர்கள் சமூகத்தின் அங்கீகாரம் பெறாது ஒதுங்கி வாழ்பவர்கள்.
2. கல்வியில் பின் தங்கியவர்கள்
3. பொருளாதாரத்தில் பின் தங்கியவர்கள்.

என்ற இம்மூவகையிலும் பின் தங்கியவர்கள் தாழ்த்தப்பட்டவர்களாகக் கருதப்பெறல் வேண்டும்.

சிறந்த கல்வி பெறுவதில் பரம்பரையும் சூழ்நிலையும் முக்கிய பாத்திரத்தை வகிக்கின்றன என்பது கல்விச் சிந்தனையாளர்கள் கருத்து. பலநூறு ஆண்டுகளாகக் கல்வி பெறுதற்குரிய வாய்ப்பை இழந்த குடும்பங்கள் உள்ளன. கல்வி பெறாதவர்கள் வாழும் சூழ்நிலையும் கல்விக்கு எதிர் மறைதான் என்பதை விளக்கிக் கூற வேண்டியதில்லை. 'பேரனைத் திருத்த வேண்டுமானால் பாட்டியைத் திருத்த முயற்சி செய்ய வேண்டும்' என்பது பழமொழி. ஆதலால், மூன்று தலைமுறைகள் தொடர்ச்சியாகப் பட்டப்படிப்புப் பெற்ற பட்டதாரிகள் உள்ள குடும்பத்தைச் சேர்ந்தவர் கல்வியில் பின் தங்கியவர்களாக மாட்டார்கள் என்று விதி வகுக்கலாம். இத்தகைய வாய்ப்புப் பெறாதவர்களுக்குக் கல்வி

நிறுவனங்களில் இட ஒதுக்கீடும் தேர்வுக்குரிய மதிப் பெண்கள் பெறுவதில் சலுகையும் தொடர்ந்து வழங்கப் பெறுதல் வேண்டும்.

ஆண்டு ஒன்றுக்கு (ரூ.15,000) ரூபாய் பதினையாயிரமும் அதற்கு மேலும் வருவாய் வருகிறவர்கள் பொருளாதாரத்தில் பின் தங்கியவர்களாக மாட்டார்கள். அது போலவே நிலவுடைமையில் 10 ஸ்டாண்டர்டு ஏக்கர் உடைமையாக உடையவர்களும் பொருளாதாரத்தில் பின் தங்கியவர்கள் அல்லர். (இதற்கு உடைமை அளவையே எடுத்துக் கொள்ளவும் - வருவாயைக் கணக்கிடுதல் அவசியமில்லை. அது போலவே வருமான வரி, விற்பனை வரி கட்டுகிறவர் களையும் பொருளாதாரத்தில் பின் தங்கியவர்கள் அல்லர் என்று கொள்ளவும். வருமானவரி விற்பனை வரியில் சிலர் ஏமாற்றலாம். சாதி அமைப்பு முறையால் வரும் தீமையை நோக்க, இது பரவாயில்லை எனலாம்.)

மேற்கண்ட மூன்றில் (2) (3) இரண்டிலும் பின் தங்கி யிருப்போர் மிகவும் பிற்படுத்தப்பட்டவர்கள்; சமுதாயத்தில். தாழ்த்தப்பட்டவர்களாக இருந்தும் மற்ற இரண்டு தகுதிகளில் ஒன்றை அவர்கள் பெற்றிருந்தால் மிகவும் பிற்படுத்தப் பட்டோர் என்றே கருதப்பெறுவர். (2) (3) இரண்டில் ஏதேனும் ஒன்றில் பின் தங்கியிருப்போர் பிற்படுத்தப்பட்டோர்.

இந்த அடிப்படையிலே முன்னேற்றத்திற்குரிய நிதி உதவிகள் படிப்பிற்குரிய இட ஒதுக்கீடுகள், வேலை வாய்ப்புக் குரிய இட ஒதுக்கீடுகள், அனைத்தும் செய்து அவரவர் மேம்பாட்டுக்குரிய உதவிகளைச் செய்து ஒத்த நிலைக்கு உயர்த்திக் கொண்டு வருமாறு இந்த மாநாடு அரசுகளைக் கேட்டுக் கொள்கிறது.

மேலும் சாதிகளின் பெயரால் வணிக நிறுவனங்கள், பொது நிறுவனங்கள், கல்வி நிறுவனங்கள், அரசுச்சார்புடைய நிறுவனங்கள் தோன்றாமலிருக்க வழிவகை காணுமாறு

மக்கள் மன்றத்தையும் அரசுகளையும் கேட்டுக் கொள்வதுடன் சாதிப் பெயரால் அமையும் நிறுவனங்களுக்கு அரசுகள் உரிமம் வழங்கக் கூடாது என்றும் கேட்டுக் கொள்கிறது.

மனித குலத்தை வருத்துவது சாதி வேற்றுமை மட்டுமன்று. செய்யும் தொழிலால் ஏற்படும் வேற்றுமைகளாலும் சிலர் உயர்வாகவும் சிலர் தாழ்வாகவும், நடத்தப்படும் கொள்கை திருக்குறளுக்கு உடன்பாடுடையதன்று. செய்யும் தொழிலின் காரணமாக ஒருவர் சிறப்பைப் பெறுவதோ, இழிவைப் பெறுவதோ கூடாது என்பது திருவள்ளுவர் கொள்கை. அவரவர் தகுதிக் கேற்பத் தொழில் அமைகிறது. அதனால் எந்தத் தனிச் சிறப்பையும் பெற்றுச் சமுதாயத்திலிருந்து விலகி ஒதங்கி உயர்தல் - உயர்த்திக் கொள்ளுதல் கூடாது என்று திருக்குறள் கூறுகிறது. "சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமையான்'' என்பது திருக்குறள். ஆக, பிறப்பின் அடிப்படையிலும் சரி, தொழிலின் அடிப்படையிலும் சரி ஒருவர் உயர்ந்தவர். ஒருவர் தாழ்ந்தவர் என்பது கூடாது என்ற சமுதாயக் கொள்கையை இப்பேரவை மக்கள் மன்றத்தில் வைத்து வளர்த்து வழி நடத்துவது எனவும், அரசியல் முதல் ஆண்டவன் சந்நிதிவரை எங்கும் தீண்டாமையில்லாத ஒரு குல உணர்வை வளர்க்கப் பாடுபட வேண்டும் எனவும் இம்மாநாடு உறுதி கொள்கிறது.

வரலாற்று நிகழ்வுகளின் காரணமாகத் தாழ்த்தப்பட்டவர்களாகவும் ஒதுக்கப்பட்டவர்களாகவும் ஆக்கப்பட்டவர்கள் உயர் சமுதாயத்தினருடன் எல்லாத் துறைகளிலும் ஒத்து உயர்ந்து விளங்குகின்ற வகையில் அரசு செய்யும் உதவிகளைத் தொடர்ந்து செய்து அவர்களை வளர்த்து, எல்லாரும் சமநிலை என்ற கொள்கையை உறுதிப்படுத்தும்படி அரசுகளை இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது. சாதிவேறுபாடுகளை முற்றாக நீக்கி "ஒன்றே குலம்; ஒருவனே தேவன்" என்ற சமுதாய அமைப்பைக் காணத் தொடர்ந்து ஈடுபடுவதில்

தம்மை அர்ப்பணித்துக் கொள்ளுமாறு திருக்குறள் பேரவை யினரை இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

### விளக்கம்

## சமுதாயத்தின் பிரிவுகள் மூன்று

1. தாழ்த்தப்பட்டவர்கள் - சமுதாயத்தில் அங்கீ கரிக்கப் பெறாது ஒதுக்கப்பட்டவர்கள் - ஒதுங்கி வாழ்பவர்கள்.
2. மிகவும் பிற்படுத்தப்பட்டவர்கள்.
3. பிற்படுத்தப்பட்டவர்கள்.

ஒருவகையிலும் பின்தங்கிய நிலையில் இல்லாதவர்கள் வளர்ந்த சமுதாயத்தினர் - இவர்கள் தகுதி திறமையின் காரணமாகவே பொது இடங்களில் வெற்றி பெற்று வர வேண்டும். இவர்கள் மற்றவர்களுக்குரிய சலுகைகளைக் கேட்பதைத் தவிர்த்து அவர்களைச் சமநிலைக்குக் கொண்டு வரும் முயற்சிகளுக்கு ஒத்துழைக்க வேண்டும்.

இம் மூவகைப் பிரிவினரும் சலுகைகள் பெறுவதற்குரிய பிரிவினர். இப்பிரிவுகளின் வரிசைப்படியே முன்னுரிமைகள் வழங்கப்பெறுதல் வேண்டும். இம்மூன்றிலும் அடங்காத வர்கள் வளர்ந்த சமுதாயத்தினர் என்று கருதப்பெறுவது நியாயத்தின் பாற்பட்ட உண்மையே.

இந்தப் பிரிவுகள் இன்று நடைமுறையில் உள்ள பிரிவுகள் அல்ல, ஆதலால் இன்றுள்ள சாதிமுறைப் பிரிவுகளை மறந்துவிடுக. இப்புதிய பிரிவுகள் இன்றுள்ள சமூகங்களின் உண்மையான நிலைமையைக் கணக்கில் எடுத்துக்கொண்டு தற்காலிகமாகப் பிரிக்கப்பெறும் பிரிவுகள். இப்பிரிவுகள் நிலையானவையல்ல. காலப் போக்கில் வளர்ச்சியின் காரணமாக இப்பிரிவுகளுக்கிடையில் மாற்றங்கள் ஏற்படும். அதாவது ஒரு பிரிவு பிறிதொரு

பிரிவுக்கு மாறும் காலப் போக்கில் பிரிவுகளே இல்லாத சமநிலைச் சமவாய்ப்புச் சமுதாயம் தோன்றும். அப்போது இப்பிரிவுகள் இரா. இப் பிரிவுகளே இல்லாத சமுதாயத்தை அமைப்பதில் தொடக்கமே இந்த முயற்சி

1. *தாழ்த்தப்பட்டவர்கள்:*

   *சமூகத்தில் தீண்டாமையால் ஒதுக்கப்பட்டிருப்ப வர்கள் (இப்போதும் தீண்டாமை அவதி நடை முறையில் இருந்தால்)*

2. *கல்வியில் பின் தங்கியவர்கள்:*

   *ஒரு குடும்பத்தில் மூன்று தலைமுறைகள் தொடர்ச்சியாக (மூவர்) பட்டப் படிப்புப் பெற்றவர்கள் இருந்தால் அல்லது மூவர் பட்டப் படிப்புப் பெறும்வரை.*

3. *பொருளாதாரத் தகுதி:*

   *ஸ்டாண்டர்டு ஏக்கர் 10க்குமேல் சொந்தமாக உடையவர்கள், அல்லது குடும்ப வருமானம் (கணவன்-மனைவி இருவர் வருமானம்) ரூ. 15000க்கு மேல் உள்ளவர்கள்.*

1. *இம்மூன்று நிலைகளிலும் மூன்றிலும் பின் தங்கியிருப்பவர்கள் தாழ்த்தப்பட்டவர்கள்.*
2. *கல்வியிலும் பொருளாதாரத்திலும் பின்தங்கி யிருப்பவர்கள் - மிகவும் பிற்படுத்தப்பட்டவர்கள்.*
3. *கல்வியில் அல்லது பொருளாதாரத்தில் பின் தங்கியிருப்பவர்கள் - பிற்படுத்தப்பட்டவர்கள்.*

இந்தப் பிரிவுகளில் மூன்றிலும் பின்தங்கியவர்களுக்குக் கல்வியில் இடஒதுக்கீடு, மதிப்பெண்களில் சலுகை, உதவித் தொகை ஆகிய அனைத்தும் வழங்கப்பெறுதல் வேண்டும். மதிப்பெண்களில் சலுகை வழங்காமல் இவர்கள் தகுதியைப்

பெறத் தக்கவாறு சிறப்புடைய முயற்சிகளை எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற கருத்தும் ஏற்புடையதே.

மிகவும் பிற்படுத்தப்பட்டவர்களுக்கும் பிற்படுத்தப் பட்டவர்களுக்கும் எந்த எந்தத் துறையில் பின் தங்கியிருக் கின்றார்களோ அந்த அந்தத் துறையில் சலுகைகள் வழங்கப் பெறுதல் வேண்டும். அதாவது கல்வியில் பின்தங்கியிருந்தால் இடஒதுக்கீடும் மதிப்பெண் சலுகையும் தருதல் வேண்டும். கல்வியில் பின் தங்கியில்லாமல் வளர்ந்து பொருளா தாரத்தில் பின்தங்கியிருப்பவர்களுக்கு உதவிப்பணம் தரவேண்டும். அரசுப் பணிகளைப் பொறுத்தவரையில் பொதுவாக ஒரு குடும்பத்தில் இருவர் அரசிதழ்ப் பதிவுடைய பெரிய பணிப் பொறுப்பில் இருந்தால் அந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்கு அரசுப் பணிகளில் இட ஒதுக்கீடு செய்யக் கூடாது. அரசுப் பணிகளில் தாழ்த்தப்பட்டவர்களுக்கு இப்போது உள்ள 18 சதவீதம் போதாது. மேலும் இடங்களைக் கூட்டி 30 சதவீதம் ஆக்கலாம். பிற்பட்டோருக்கு 50 சதவீதம், மிகவும் கூடுதல் 45 சதவீதம் ஆக்கலாம். பொதுவாகத் தகுதி திறமையின் வழி வருகிறவர்களுக்கு 25 சதவீத இடம் ஒதுக்கலாம்.

—"மக்கள் சிந்தனை" 1–7–81
(11–10–80 இரத்தினகிரி திருக்குறள் பேரவை மாநாட்டுத் தீர்மான விளக்கம்)

## 8. *தீண்டாமை நீங்க...

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்றது உலகப் பொதுமறை. அதோடு "சிறப்பொவ்வா செய் தொழில் வேற்றுமையான்" என்றும் கூறியது. அதாவது பிறப்பால் எல்லாரும் ஒரு தன்மைத்தானவர்கள் என்பதாகும். பிறப்பில்

* மயிலாடுதுறையில் 21–9–1989இல் பாரதிதாசன் பல்கலைக் கழகம் நடத்திய திருநாளைப் போவார் சமூக நலக் கருத்தரங்கில் ஆற்றிய மையக் கருத்துரை.

உயர்வும் இல்லை. தாழ்வுமில்லை. பிறப்பில் வளம் - வறுமை வேறுபாடுகள் இல்லை; அறிஞரும் இல்லை - முட்டாள் களும் இல்லை! நல்லவர்களும் இல்லை - கெட்டவர்களும் இல்லை. சாதிகள் இல்லை - கடவுளும் இல்லை; மதங்களும் இல்லை; மொழிகளும் இல்லை! இனமும் இல்லை! இதுதான் இயற்கையின் நியதி. மேற்கூறியவையெல்லாம் பிறந்து வளரும் பொழுது சார்புகள் காரணமாக வந்தமைகின்றன. கற்பிக்கப் படுகின்றன. இவற்றுள் சில திணிக்கப்படுகின்றன; ஒருசில, நலத்தின் அடிப்படையில் தவிர்க்க இயலாத நிலையில் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

மனிதகுலம் இயற்கையோடு ஒத்திசைந்து வாழ்ந்து கொண்டிருந்த வரையில் எந்த வேற்றுமையும் தோன்ற வில்லை. ஒருமை நிலையே இருந்தது; சமநிலையும் இருந்தது. உழுது வேளாண்மைத் தொழில் செய்யத் தொடங்கிய சூழ் நிலையில்தான் தனியுடைமைச் சமுதாயம் தோன்றியது. பண்ணையடிமைச் சமுதாய அமைப்பிலிருந்துதான் சாதி முறைகள் தோன்றின; வளம்-வறுமை வேறுபாடுகளும் இடம் பெற்றன. இத்தகு முறைபிறழ்வான சமுதாய அமைப்பைக் காக்கும் நோக்கில் கடவுள் மதங்கள் கருவிகளாகப் பயன் படுத்தப்பெற்றன. இங்ஙனம் தோன்றி வளர்ந்த சாதி, குல, இன, மத வேற்றுமைகள் மனித குலத்தை என்புருக்கி நோய் போல் தின்று உருக்குலைத்து அழித்து வருகின்றன.

இந்திய வரலாற்றிலும் சரி, தமிழக வரலாற்றிலும் சரி சாதிகளால் விளைந்த தீமைகள் பலப்பல; இந்நாளிலும் இந்தத் தீமைகள் தொடர்கதையாய் நடந்து கொண்டிருக் கின்றன. சாதி, குல, கோத்திரப் பிரிவினைகளிலிருந்து மக்களை மீட்டாலொழிய நமக்கு எதிர்காலமில்லை.

சாதிமுறைகள் பொருளாதார அடிப்படையிலேயே தோன்றி வளர்ந்தன. சாதிமுறைகளை "ஈன்று தந்தது" நிலப் பிரபுத்துவ சமுதாயம். இந்தச் சாதி முறைகளை செவிலித் தாயாக இருந்து வளர்த்துக் காப்பாற்றிக் கெட்டித் தன்மை யுடையதாக ஆக்கியது புரோகித மதம்!

இந்தச் சாதிகள் மாநிலந்தோறும் எண்ணிக்கையில் மாறுபடுகின்றன. பலருக்கும் தெரிந்தது நால் வருணம்; நாற்சாதி! அதாவது பிராமணர் (புரோகிதர்), க்ஷத்திரியர் (போர் செய்வோர்), வைசியர் (வணிகர்), சூத்திரர் (வேலைக் காரர்) என்பன. இந்த நான்கனுள்ளும் அடங்காத – அப்பாற்பட்ட ஐந்தாவது சாதி – தாழ்த்தப்பட்டவர்கள்; தமிழ் வழக்கு புலையர் என்பதாகும்.

முதல் மூன்று பிரிவினர்களிடையிலும் கூட இடை வெளி உண்டு. ஆயினும் ஒரு நல்ல உடன்பாடு உண்டு. அறிவு, வலிமை; பணம் – இவற்றிற்கிடையே நெருக்கமான உறவு இருப்பது வியப்பல்ல. நான்காமவர் அவர்களுள் கடையர்; சொத்துரிமைக்குரியரல்லர். ஆயினும் தீண்டாமை இல்லை. ஏன் வீட்டு வேலை நடக்க வேண்டும்! இந்தியாவில் தாழ்த்தப் பட்டவர்கள் மற்றவர்களுடன் இணைந்து வாழ்தலுக்கேற்ற வாறு வளர்வதில்லை. மற்றவர்களும் மனித மதிப்பீட்டுணர்வில் தாழ்த்தப்பட்டவர்களுடன் உரிமையும் உறவும் கொண்டு வாழ்வதில்லை. தாழ்த்தப்பட்டவர்களுக்கு முற்காலத்தில் திருக்கோயில் வழிபாட்டுரிமை இல்லை. திருக்கோயில் வழிபாட்டுரிமையைப் பெறும் வகையில் நிலப்பிரபுத்துவ சமுதாயத்தையும் அதனால் ஏற்படுத்தப்பட்ட தீமைகளையும் அந்த நிலப்பிரபுத்துவத்திற்குச் சேவகம் செய்து பிழைத்த மதத் தலைவர்களையும் சாத்திரங்களையும் எதிர்த்துப் போராடிய முதல் தலைவர் திருநாளைப் போவார். அவருடைய போராட்டங்களில் கடவுள்கூட அவருக்குத் துணையாக இல்லை என்று புராணங்களே கூறுகின்றன. திருப்புன்கூர்த் திருத்தலத்தில் எழுந்தருளிய இறைவன், நந்தனாரை உள்ளே வரும்படி அழைக்கவுமில்லை. நந்தனாரைக் காண வெளியே வரவுமில்லை. நந்தி வழிவிடவில்லை. கடவுளையும் மீறிய சாதிக் கொடுமை புரோகித ஆதிக்கம் எல்லாம் தூரப் பார்வையாக நிகழ்கிறது. சாதிக் கொடுமைக்கு அடுத்துத் தோன்றி வளர்ந்தவை குலங்களும் கோத்திரங்களும், இந்தக்

குலங்களும் கோத்திரங்களும்கூட சமுதாயத்திற்குத் தீமை பயக்கும். ஏன்? ஒரு மனிதனைப் பிறிதொரு மனிதனிட மிருந்து பிரித்து அந்நியப்படுத்தும் எதுவும் தீமையே!

நமது நாட்டில் நூற்றுக்கணக்கான சாதிகள், இந்தச் சாதிகளை எதிர்த்து இரண்டாயிரதம் ஆண்டு காலமாக அரசியல் - சமய உலகங்களில் போராடிக் கொண்டிருக் கிறோம்.

"யாதும் ஊரே யாவரும் கேளிர்" —கணியன் பூங்குன்றன்

"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" —திருமூலர்

"சாத்தி ரம்பல பேசும் சழக்கர்காள்
கோத்திர மும்குல மும்கொண்டு என்செய்வீர்
—அப்பரடிகள்

"சாதி குலம் பிறப்பென்னும் சுழிப்பட்டுத் தடுமாறும்
ஆத மிலி நாயேனை" —மாணிக்கவாசகர்

'சாதி இரண்டொழிய வேறில்லை" —ஔவையார்

"சாதிகள் இல்லையடி பாப்பா" —பாரதியார்

என்று காலந்தோறும் கடிந்து வந்துள்ளனர். ஏன் நாம் வழிபடும் கடவுளும்கூட சாதி ஒழிப்புக்கு நடத்திய அருள் நிகழ்ச்சிகள் பலப்பல! ஆயினும் வெற்றிதான் கிடைக்க வில்லை. வெற்றி கிடைக்காதது மட்டுமல்ல. மாபெரும் தோல்வியைச் சந்தித்துள்ளனர் மதத் தலைவர்கள் முதல் ஆள்கிறவர்கள் வரையில். ஆட்சியாளர்கள் தயவில் சாதி முறைகள் பேணி வளர்க்கப்பட்டு வந்தன - வருகின்றன. இன்று சாதிமுறை பொருளாதார ஆதிக்கம் பெறுவதற்குத் தேவையான ஒன்றாக - அவசியமானதாக ஆகிவிட்டது. இதனை ஆட்சியாளர்கள் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும். ஒரு நாட்டின் ஆட்சி தமது மக்களை மக்கள் என்ற அடிப்படையிலேயே அவர்கள் வாழ்விற்கு உத்தரவாதம்

அளிக்கவேண்டும். சாதி மதங்களைக் கருவியாகக் கொண்டு வாழ்ந்திடுதல் நன்றோ? இல்லை, இல்லை! ஆதலால் ஆட்சி யாளர்கள் நமது நாட்டில் எந்த ஒரு பிரிவினரும் சாதிகளைக் கருவியாகக் கொண்டு வாழ்ந்திட வேண்டிய அவசியமில் லாமல் வாழ உத்தரவாதம் அளிக்கவேண்டும் - வாழ வைக்க வேண்டும். சாதிச் சான்று கேட்டு அலைய வைக்கக் கூடாது.

ஆதலால் நாடெங்கும் சாதிச் சங்கங்கள், சாதிப் பேரணிகள் சாதி முறைகளை வலியுறுத்திப் பேசும் கூட்டங்கள் முதலியன நடந்த வண்ணம் இருக்கின்றன. நாளுக்கு நாள் மனிதகுல ஒருமைப்பாடு சீரழிகிறது. இந்தச் சாதித் தீமைகளிலிருந்து விடுதலைபெற வழியில்லையா? வழியிருக்கிறது! செய்யத்தான் துணிவில்லை!

மத நிறுவனங்களுக்கு, பழக்க வாசனை காரணமாகச் சாதிமுறைகளைக் கைவிடத் துணிவில்லை! ஆட்சியாளர் களுக்கு, தேர்தல் காரணமாகச் சாதிமுறைகளைக் கைவிடத் துணிவில்லை! எல்லாவற்றிற்கும் மேலாக நமது "சமூக ஊழ்" வலிமையாக அமைந்துவிட்டது.

தீண்டாமை, சாதி வேற்றுமைகளை இந்தத் தலை முறையில் நாம் தீர்க்காவிட்டால் அவற்றால் ஏற்படும் எதிர் விளைவுகள் கடுமையாக இருக்கும் என்பதை விழுப்புரம், உஞ்சனை, போடி சாதிக் கலவரங்கள் எச்சரிக்கை செய் கின்றன. நமது நாட்டு அரசியல் அமைப்பின்படி நமது நாடு ஜனநாயக சோஷலிசக் குடியரசு ஆகும். இத்தகு அரசினை அருட்பிரகாச வள்ளலாரும்.

"ஒத்தாரும் உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் எவரும்
ஒருமையுள ராகிஉல கியல் நடத்த வேண்டும்"

என்றார். இன்று நம்முடைய அரசியல், மக்களாட்சி முறையின் வடிவம் உள்ளது; வண்ணம் இல்லை! உருவம் இருக்கிறது; உணர்வு இல்லை! நம்முடைய நாட்டுப் பணச் சந்தை "லேவாதேவிக்"காரர்களிடம் சிக்கிக் கொண்டது. அதனால் வாழ்க்கையில் துறைதோறும் அறிவு, திறன், கடமை

யுணர்வு, பண்பு, மனித நேயம் என்பவற்றிற்குப் பதிலாகப் பணமே ஆட்சி செய்கிறது. நம்முடைய நாடு கருப்புப் பணமுதலைகளின் வசம் சிக்கிக்கொண்டிருக்கிறது; இத்தகைய சமுதாய அமைப்பில் கல்வி, அறிவு, ஆன்மநேயம் ஆகியன எவையும் வளரா! ஆதலால் தீண்டாமை, சாதி வேறுபாடுகளை அகற்ற சமவாய்ப்புச் சமநிலைச் சமுதாயம் காண வேண்டும். சமவாய்ப்புச் சமநிலைச் சமுதாயம் அமைத்திட உடனடியான செயல் திட்டம் தேவை.

1. தீண்டாமையை நேரிடையாகவோ மறைமுக மாகவோ அனுசரிப்பது குற்றம் என்பது வலி யுறுத்தப்பட வேண்டும்.

   தீண்டத்தகாதவர்கள் என்ற தாழ்த்தப்பட்டவர் களும் தங்களுடைய தாழ்வு மனப்பான்மை காரணமாகவோ உயர்வு மனப்பான்மை காரண மாகவோ சமுதாயத்தில் எந்த ஒரு பகுதியி லிருந்தும் ஒதுங்கிவிடக் கூடாது. மற்றவர்களுடன் உரிமைகளும் உறவுகளும் கொண்டாடி மேவிப் பழகவேண்டும். மற்றவர்களும் அது போலவே தாழ்த்தப்பட்டவர்களின் உயிரில், உணர்வில் கலந்து அவர்களிடம் பழகி, உறவுகளைக் கண்டு வளர்த்துக் கொள்ள வேண்டும்.

2. தாழ்த்தப்பட்டவர்களுக்கு ஊருக்கு ஒதுக்குப் புறத்தில் வீடு கட்டுவது கூடாது: அறவே கூடாது. நடுவூரில் வீடுகள் கட்டித் தரவேண்டும். வீதிகளில் காலியாக இருக்கும் இடங்களில் வீடுகள் கட்ட வேண்டும். வீதிகளும் அழகுறும். மனிதநேய ஒழுக்கங்களைவிட ஒழுங்குமுறையில் வீடு கட்டுதல் பெரிதல்ல.

3. தாழ்த்தப்பட்டவர்களுக்குத் தனிப் பள்ளிக்கூடம், தனி மாணவர் விடுதிகள் கூடாது. எல்லா

ருடனும் கூடிக்கலந்து பழகும் வாய்ப்புள்ள பொதுப் பள்ளிக்கூடங்களிலேயே கல்வி கற்க வேண்டும். கல்வியிலும் பொருளாதாரத்திலும் பின் தங்கியவர்களுக்கென்று பொதுவான விதிகள் அமைத்து, அனைத்து வகுப்பினரும் கலந்து பழகவும் படிக்கவும் வாய்ப்பளிக்க வேண்டும்.

தாழ்த்தப்பட்டவர்களும் பின்தங்கியவர்களும் வளர்ந்தவர்களுடன் சமமாக நிற்கும் நிலை பெறும் வரையில் ஒதுக்கீடுகள் தவிர்க்க முடியாதன. ஆயினும் "நன்றாற்றலுள்ளும் தவறுண்டு" என்ற தமிழ் மறையை நினைவு கொள்க.

அரசுப் பணிகளுக்குரிய இட ஒதுக்கீடுகளுக்கு மிகமிகப் பின் தங்கியவர் என்ற அடிப்படையை அளவுகோலாக வைத்துக்கொள்ள வேண்டும். சாதிப்பெயர்கள் அறவே அகற்றப்படுதல் வேண்டும். இவ்விதம் வழங்கும் பொழுது குடும்ப அடிப்படையில் உதவி செய்ய வேண்டும். தாழ்ந்த - பின்தங்கிய நிலைக்குரிய அடையாள அட்டை வழங்குதல் வேண்டும். அந்த அடையாள அட்டை ஐந்து அல்லது பத்து ஆண்டுகள் வரையில் பயன்படும். அதாவது அவர்கள் முன்னேறுகிறவரையில் பயன்படும். இந்த உதவிகளை, சாதிகள் அடிப்படையில் அல்லாமல் பின்தங்கிய நிலையினைக் கணக்கில் எடுத்துக் கொண்டு அந்த அடிப்படையில் வழங்க வேண்டும்.

ஒரு குடும்பம் கல்வி, பொருளாதாரத்தில் வளர்ந்தவுடன் அந்த அட்டையைத் திரும்பக் கொடுத்து விட வேண்டும். அதாவது அந்தக் குடும்பத்துக்கு இட ஒதுக்கீடு இல்லை என்பது பொருள்.

*பிற்பட்ட சமுதாயம் சீரமைவுச் சமுதாயம் மிகவும் பிற்பட்ட சமுதாயம் ஆகியவைகளுக்கும் இந்த விதி பொருந்தும்.*

5. *தாழ்த்தப்பட்டோர் பிற்பட்டோர் உயர்குடியினர் யாரும் எந்த ஒரு பிரிவினர்க்கும் சாதிச் சங்கங்கள் அமைத்துக் கொள்ள உரிமை இருக்கக்கூடாது. சாதிச் சங்கங்கள் அமைத்து நடத்துவது சாதி களைப் பற்றிப் பேசுவது குற்றவியலைச் சார்ந்த குற்றங்களாகக் கருதப்படுதல் வேண்டும்.*

6. *காதல் திருமணங்கள் நிகழ்வதற்குரிய சூழல்கள் மிகுதியும் தேவை. காதல் திருமணங்களைத் தடுப்பது, கொடுமைப்படுத்துவது ஆகியன, கடுமை யான குற்றவியல் குற்றங்களாக்கப்படுதல் வேண்டும்.*

7. *பாடப் புத்தகங்களில் சாதிப் பெயர்கள் வராமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.*

8. *மத நிறுவனங்களில் சாதி முறைகள் அகற்றப்பட வேண்டும். திருக்கோயில்களில் பக்தர்கள் எந்த வேறுபாடுமின்றிப் பூவும் புனலும் சொரிந்து வழிபாடு செய்து கொள்ள உரிமை வேண்டும். மடங்கள் சாதியமைப்பின் படிமங்களாக இல்லாமல் சமய அமைப்புகளாக உருமாற்றம் பெற்றாக வேண்டும். சமய ஆர்வமுள்ள எவரும் திருக்கோயில், திருமடங்களில் எப்பணியிலும் அமரலாம் என்ற நியதி உருவாக வேண்டும்.*

9. *சாதி, குலம், கோத்திரங்களுக்கு அரண் செய்யும் மதத் தொடர்பான சாத்திரங்களில் புராணங்கள் இதர நூல்கள் தடை செய்யப்படுதல் வேண்டும்.*

10. *நமது சமுதாயத்தில் தீண்டாமை, சாதி வேற்றுமை களை அறவே அகற்ற தீவிரமான அறவழிப் போராட்டங்கள் தேவை.*

*அன்பு கூர்ந்து சிந்தனை செய்யுங்கள்!*

# 9. *இந்தியாவில் சாதி, சமூகச் சிக்கல்களும் – தீர்வும்

*அன்பர்களே! பெருமைக்குரிய பல்கலைக் கழகத் துணைவேந்தர் அவர்களே!*

கடந்த நான்கு நாள்களாக நாட்டுப் பற்றாளர்களும் சமூகச் சிந்தனையாளர்களும் அண்ணல் காந்தியடிகள் சிந்தனை நிழலில் கூடி இந்தியாவைப் பற்றிப் பொதுவாகவும், பஞ்சாப், காஷ்மீர், மண்டைக்காடு, இராமஜன்மபூமி போன்ற பல பிரச்சனைகளைப் பற்றிச் சிறப்பாகவும் சார்பற்ற நிலையில் மனம் விட்டு விவாதித்தோம்; கலந்து பேசினோம். ஒரு முடிவு மனோநிலையில்தான் கலைகின்றோம் என்று நம்புகின்றோம்.

பொதுவாக ஒரு தீமை, பிறிதொரு தீமையைத் தோற்று விக்கிறது என்பது நியதிகளில் ஒன்று. அது போல இந்திய நாட்டின் கல்வித்துறை அறிவுத் தாக்கத்தையும் அறிவியல் தாக்கத்தையும் ஏற்படுத்தாதது ஒரு பெரிய குறை. அடுத்து, நமது சமூக வாழ்வியலும் கல்விமுறையும் உழைப்பை வாழ்க்கையாக ஏற்றுக் கொள்ளும்படி தூண்டி நெறிப்படுத்த வில்லை. நம்மில் பலருக்கு வாழ்க்கை பிழைப்புச் சாதனமாக இருக்கிறது. இது நெறிமுறை பிறழ்ந்த நிலை. அதோடு சமூக வாழ்வியல் அமைப்போ இன்னமும் உருவாகவில்லை. இந்தியாவில் – தமிழ்நாட்டில் மக்கள், கூட்டம் கூட்டமாக வாழ்கின்றனர். இன்னமும் சமூகமாக வாழவில்லை. அறிவு, ஆளுமை, பண்பாடு வாழ்க்கையின் தேடு பொருள்களாக இல்லாமல் பணமே தேடுபொருளாக இடம் பெற்று விட்டது.

* மதுரை காமராசர் பல்கலைக் கழகம் காந்திய சிந்தனைத் துறை – இராமலிங்கர் சிந்தனைத் துறை 1990 மார்ச்சு 17, 18, 19, 20ஆம் நாள்களில் நடத்திய "இந்தியாவில் சாதி, சமூகச் சிக்கல்களும் – தீர்வும்" கருத்தரங்கின் தொகுப்புரை.

கற்கும் இயக்கம் பெருகி வளர்ந்திருக்கிறது. ஆனால், “அறிவு” தான் வளர்ந்தபாடில்லை. கற்ற கல்வியை வாழ்க்கையில் சோதனை செய்தால்தானே அறிவு தோன்றும். இந்த வாய்ப்பு வழங்கப் பெறவில்லை. மக்களிடத்தில் - இளைஞர் களிடத்தில் ஆர்வமும் இல்லை. “பொறிகளின் மீது தனியரசாணை” என்றான் பாரதி. பொறிகள், புலன்கள் ஆற்ற லுடையன; படைப்பாற்றலுடையன. இவற்றைப் படைப் பாற்றலாக வளர்த்துப் பயன் கொள்வது ஆளுமை, இன்றையச் சமூகம் களியாட்டத் தன்மையையும் சோம்பலையும், வளர்க்கத்தக்க சூழல்களையே உருவாக்கி வருகின்றது. பொழுது போக்கும் களியாட்ட வாழ்க்கையில் ஒரு பகுதியே - அதுவே வாழ்க்கையாக மாறக்கூடாது “ஒவ்வொருவரும் சமூகத்தால் வாழ்விக்கப்படுகிறோம்” என்ற சமூக உணர்வில் சமூகத்திற்கு நலம் தரும் உழைப்பினைக் கொடுக்கக் கடமைப் பட்டிருக்கின்றோம் என்று எண்ணி, சமூகச் சிந்தனையோடு நட்புறவாய் இணைந்து உழைத்து - ஒத்துழைத்து வாழ்வதே பண்பாடு. இவைகள் வளரும் வாய்ப்புகள் பல உருவாக்கப் படுதல் வேண்டும். இன்றைய இந்திய சமுதாயம் பண மதிப்பீட்டு முறையில் இயங்கும் சமுதாயம். ஆதலால், எங்கும் பணத்தோட்டம்; பணத்தின் ஆதிக்கம். அதனால் இளைஞர்கள் கூடத் தங்களுடைய ஆற்றலை வெளிப்படுத்திச் சாதனை செய்ய வேண்டும் என்று முனைவதில்லை. அரசுகள், மக்கள் போக்கில் செல்கின்றன. மக்களை நெறிமுறைப்படுத்தி வளர்க்க அரசுகள் முயலவில்லை; விரும்பவில்லை. இந்த நிலையில் நமது மாபெரும் சமுதாயத்தில் வலிமையும் வளமும் பெற்ற குடும்பம் தோன்றவில்லை; சமூகம் தோன்ற வில்லை; நாடு உருவாகவில்லை. இதுவே இன்றைய உண்மை நிலை.

எந்தவிதச் சமூகப் பிரச்சனையும் தோன்றுவதற்கு இந்த நிலைகெட்ட சமுதாயச் சூழலே காரணம். சமுதாயத்தில் சமாதான சகவாழ்வு, சட்டம், ஒழுங்கு, ஆகியவைகளைக் குலைக்கும் தீயசக்திகள் தோன்றி வளர்ந்து வருகின்றன. இந்த

மாதிரியான சமூகத் தீயசக்திகள் பல சமயங்களில் அரசு களாலேயே அங்கீகரிக்கப்பெற்று வலிமை பெற்றும் வரு கின்றன. இந்த அடிப்படையில்தான் பஞ்சாப் பிரச்சனை உருவாகியது. சமூகத் தீயசக்திகள் சாதீய அமைப்புகள், மத வெறுப்பு இயக்கங்கள் ஆகியன இன்று கெட்டிப்பட்டுள்ள நிறுவன அமைப்புக்களாகிப் பிழைப்புச் சாதனங்களாகவும் வளர்கின்றன. இந்த நடைமுறை இந்தியாவை - இந்திய சமுதாயத்தைக் கடுமையாகப் பாதிக்கும் என்பதை நாம் உணர வேண்டும். நமது மக்கள் உணரவேண்டும்; நமது அரசுகள் உணர வேண்டும்.

நாட்டு மக்களிடத்தில் குழு மனப்பான்மைகள், சாதி, மதப் பிரிவினைகள் இவற்றை அகற்றும் பயிற்சியைத் தந்து, ஒரு சமூகமாகக் கூட்டுறவில் - கூட்டுணர்வில் வாழப் பழக்கி ஆற்றுப்படுத்துதல் வேண்டும். நாட்டு மக்களை வருத்தும் வறுமையிலிருந்து மீட்க, வேலை வாய்ப்புக்களைக் கூட்டுறவு நெறியில் காணவும் ஒரு கூட்டுடைமைச் சமுதாயத்தைக் காணவும் அரசியல் கட்சிகளின் சார்பற்ற மக்கள் இயக்கம் உண்டாகவேண்டும். இந்த இயக்கம் போர்க்கால அடிப் படையில் பணி செய்தல் வேண்டும். சமயச் சார்பற்ற தன்மை இந்திய மக்களின் பழக்கமாக, வழக்கமாக உருக்கொள்ளுதல் வேண்டும். இந்தக் கருத்தரங்கின் நிகழ்வுப் போக்கில் கிடைத்த எண்ணங்கள் - எண்ணங்களின் தொகுப்பு இவையே!

என்றுமே நமது தத்துவங்களில் வறுமை இருந்ததில்லை. ஆனால் செயலில்தான் வறுமை. இந்தச் செயலற்ற தன்மையி லிருந்து — இந்திய சமூக ஊழியர்கள், அறிவு ஜீவிகள் — நீங்கி ஊக்கத்துடன் உழைத்தால் நமது நாட்டின் சிக்கல்கள் எளிதில் தீரும். 2001இல் புதிய இந்தியாவை - ஒரே இந்தியாவை-ஒரே கடவுளை வழிபடும் இந்தியாவைக் காண இயலும். இந்திய இளைஞர்களின் - உழைப்பவர்களின் சுதைகள், உழைப்பு ரீங்காரம் செய்யும் இந்தியாவைக்

காணலாம்; காணமுடியும்! நாம் செய்ய விரும்புகின்றோமா? என்பதே இப்போது உள்ள கேள்வி!

மற்றபடி கருத்தரங்கு சில பரிந்துரைகளையும் உங்கள் முன்னே, இல்லை! இல்லை! - இந்த நாட்டின் முன்னே வைத்திருக்கிறது! நடைமுறைக்கு வரக்கூடிய பரிந்துரைகள்! நாம் நடந்தால் நாடு நடக்கும்! நன்றி!

# 10. சமுதாயப் பார்வையில் இந்தியக் கிராமியப்புற மேம்பாடு

இனிய அன்பர்களே! பெருமைக்குரிய துணைவேந்தர் அவர்களே! பேராசிரியப் பெருமக்களே! கருத்தரங்கில் கலந்து கொள்ளும் அறிஞர் பெருமக்களே!

பாரதிதாசன் பல்கலைக்கழகம் - சமூக அறிவியல் துறை - நடத்தும் "சமுதாயப் பார்வையிற் கிராமப்புற மேம்பாட்டு"க் கருத்தரங்கைத் தொடங்கி வைக்கும் வாய்ப்பளித்தமைக்கு நன்றி; கடப்பாடு.

## முன்னுரை

இன்று அதிகமாகக் கிராமப்புற வளர்ச்சி பற்றிப் பேசப் படுகிறது. ஏன் பேசப்படுகிறது? சென்ற காலத்தில் கிராமங் களுக்கு இழைத்த தீங்கிற்குக் கழுவாயாகப் பேசப்படுகிறதா? அல்லது உண்மையிலேயே பேசப்படுகிறதா? என்று கேட்கக் கூடிய அளவுக்கு ஐயப்பாடு தோன்றிவிட்டது. அரை நூற்றாண்டுக்கும் மேலாகக் கிராமப்புற வளர்ச்சி பற்றிப் பேசப்படுகிறது. பலசோதனைகளும் செய்யப் பெற்றன. வங்கத்துக் கவிஞரின் "சாந்திநிகேதன் சோதனை", பிரெயின் துரையின் "குர்கான் சோதனை", "மார்த்தாண்டம் சோதனை" ஆகியவை வரலாற்றுப் புகழ் பெற்றவை. ஆனால் அவை முழுமையுற நடந்து வெற்றியைத் தரவில்லை. தோல்வி

யடைந்துவிட்டன. ஆனால், நேரு காலத்தில் நடுவண் அரசால் எஸ்.கே. டே. அவர்களால் தோற்றுவிக்கப் பெற்ற சமூக நலத்திட்டம், ஓரளவு பரவலாக வளர்ந்தது! கால் கொண்டது. ஆயினும் காலப்போக்கில் கிராம நலம் என்ற திசையிலிருந்து வேறு திசைக்குப் போய் இப்போது "ஒரு அலுவலக" வடிவத்தில் உயிர்ப்பின்றி இயக்கமற்றுள்ளது. ஒவ்வோர் ஐந்தாண்டுத் திட்டத்தை வகுக்கும்பொழுதும் கிராமப்புற மேம்பாட்டுக்குத் தனிக் கவனம் செலுத்தப் பட்டது என்பது உண்மைதான். ஆனால், நடைமுறைகளின் கோளாறு காரணமாக எதிர்விளைவுகளைக் கண்டதே உண்மை. ஆதலால் இந்தக் கருத்தரங்கில் கலந்து கொள்கிற அறிஞர் பெருமக்கள் கண்ணோட்டமின்றி வரலாற்றுப் போக்கில் உண்மைகளைக் கண்டு அதன் குறை நிறைகளை எடுத்துக்காட்டி நமது நாட்டின் கிராமப்புற வளர்ச்சிக்குச் சரியான - கண்டிப்பான நடைமுறைச் சாத்தியமான பரிந்துரைகளை மக்கட் சமுதாயத்திற்கும் அரசுகளுக்கும் பரிந்துரை செய்ய வேண்டும் என்பது நமது விருப்பம்; வேண்டுகோள்!

## சமூகம்

பல்வேறு மக்களிடையே வேறுபாடற்ற ஒருமை நலத்துடன் கூடிய உளஞ்சார்ந்த் பழகும் பாங்கையே "Social" என்ற சொல் உணர்த்துவதாக நாம் கருதுகின்றோம். இத்தகு உளநலம் - பழகும் பாங்கு. நாட்டில்வாழ் மக்களிடையில் நிலவச் சமசீரான பொருளாதார வாய்ப்புகள் தேவை. அரு வருப்புத் தன்மையுடைய போட்டிகளும் சுரண்டும் தன்மை யுடைய பொருளியல் சார்பும், மக்களின் நலத்திற்குத் தீங்கு செய்வன. இன்று இந்தியா அருவருப்பு நிறைந்த போட்டிகள் மிகுந்த நாடாக விளங்குகின்றது. "சுரண்டல் பொருளாதாரம்" ஏகபோகமாகக் கொழுத்து வளர்கிறது. ஏன்? இந்த இரண்டு தீமைகளையும் அரசுகள் அங்கீகரித்துச்

சட்ட சம்மதம் உடையதாக்கிவிட்டன. மதத் தலைவர்களும் அங்கீகரித்து "கடவுட் சம்மதம்" தெரிவித்துவிட்டனர். அதனால் இன்றைய இந்தியாவில் 'சமூகம்' சமுதாயம்' என்ற அமைப்புகள் உணர்வுபூர்வமாக இல்லை. இன்று மக்கள் கூட்டமே காணப்பெறுகிறது. மக்கள் கூட்டம் காடுகளைப் போன்றது. காடுகளில் ஒழுங்கு இருக்காது; நெறிமுறைகள் இருக்காது; தன்னிச்சைப் போக்காக மரங்கள் வளரும்; வல்லாண்மை வாய்ந்த தாவர இனங்கள் வல்லாண்மை குறைந்த தாவர இனங்களை அழித்துவிடும்; "வல்லாண்மை யுடையனவே வாழும்" என்ற நியதியே உண்மையாகி வருகிறது. சமூகம் என்பது நந்தவனம் - பூங்கா பழத்தோட்டம் போல அமைந்தது சமூகம். சமூக அமைப்பில் ஒழுங்கு நிலவும்; நெறி முறைகள் இருக்கும் கூட்டுச் சிந்தனை - கூட்டுச் செயல்முறை விளங்கித் தோன்றும். சமூக அமைப்பில் வாழ்வோம்; மற்றவர்களும் வாழட்டும் என்ற எண்ணப்போக்கும் வாழ்வித்து வாழும் பெருந்தன்மையும் நிலவும். பாவேந்தர் பாரதிதாசனின் "உலகம் உண்ண உண்; உடுத்த உடுத்து" என்ற ஆணை நடைமுறையில் இருக்கும். சமூக அமைப்பில் ஒவ்வொருவரும் தனியே வளர்ச்சி பெறலாம். அதே போழ்து சமூகம் முழுமையும் ஒருங்கிணைந்து வளரவும் வாய்ப்பு உண்டு. யாரொருவருக்கும் எந்தக் காரணத்தை முன்னிட்டும் வளர்ச்சிக்குரிய வாய்ப்புக்கள் மறுக்கப்படாத சமூகமே அறநெறியும் அமைதியும் தழுவிய நெடிய முன்னேற்றத்திற் குரிய வித்தும் அமைந்த சமூகமாகும். இத்தகைய சமூக அமைப்புகளும்கூட சிறியதாக இருந்தால் மிகவும் நல்லது. மனித இனத்தின் வரலாற்றிலேயே சிறந்த வாழ்க்கைக்கு ஏற்ற சூழ்நிலையைக் கொண்டிருந்தது சிறிய சமூக அமைப்பு என்று வரலாறு உணர்த்துகிறது. எங்கெங்கு மக்கள் கூடிவாழ்வதற்கும், தங்களுடைய வாழ்க்கையின் பயன்களைத் தங்களுடன் கூடி வாழ்பவர்களுடன் பங்கிட்டுக் கொள்வதற்கும் ஏற்ற சூழல்

அமைந்து விளங்குகின்றதோ அந்தச் சூழ்நிலையில் வாழும் பல குடும்பங்கள் சேர்ந்ததுதான் சமூகம். சிறந்த சமூக அமைப்பில் தனி மனிதன் அமைதியாக வாழ்க்கையை நடத்திச் செல்ல முடியும். ஒவ்வொரு மனிதனும் தோழமை யுடன் பழகுவதற்குரிய சமூக உறவுகள் எளிதாகக் கிடைக்கும்.

இத்தகு சமூகத்தில் ஒரு பிணைப்பு இருக்கும். ஒத்த கருத்திற்கும் ஒத்துழைப்பு இருக்கும். எந்தச் சூழ்நிலையிலும் 'நாம்' என்ற உணர்வே விளங்கித் தோன்றும். பொதுவாக, சமூக இயக்கத்திற்குத் தனது இருப்பும் உழைப்பும் இன்றியமையாதன என்ற எண்ணமும்தான் சமூகத்தைச் சார்ந்து வாழ்கிறோம், என்ற உண்மையும் தன்முனைப்பு மழுங்கிய அடக்க மனப்பான்மையும் காணப்பெறும். இத்தகு சிறந்த சமூகப் பண்புகள் நிறைந்த சமூகமாகப் பண்டைய கிராம சமூகம் அமைந்திருந்தது. இன்றைய கிராமங்களில் இத்தகு சிறந்த சமூகப் பண்புகளைக் காண இயலவில்லை. 'சமூகமே' மறைந்து சாதிகள் தோன்றி, "சாதிகளே சமூகம்" என்ற பெயரைப்பெற்று விட்டன. இன்றைய கிராமங்களில் நிறைய வேற்றுமைகள்! சமச் சீர்மை இல்லாத சமூகம் சுரண்டப்படும் வர்க்கத்திற்கு இரையாகி ஏழ்மையும் வறுமையுமுற்றுத் தாழ்நிலையில் வாழ்வதே இன்றைய கிராம மக்களின் வாழ்நிலை.

## கிராமங்களின் நிலை

இந்தியா கிராமங்கள் நிறைந்த நாடு. இந்திய நாட்டில் 5,57,137 கிராமங்கள் உள்ளன. தமிழ் நாட்டில் 16,812 கிராமங்கள் உள்ளன. கிராமங்களிலேயே செல்வக் களஞ் சியங்களாகிய நிலமும் நீரும் இயல்பாகவே அமைந்துள்ளன. இந்தியக் கிராமங்களில் வாழும் மக்கள் தொகை 50,76,07,678 தமிழ்நாட்டுக் கிராமங்களில் வாழும் மக்கள் தொகை 3,24,56,802, தமிழ்நாட்டில் கிராமப் புறங்களில் வாழும் மக்களே மிகுதி. நகரங்களில் வாழ்வோருக்கும் படித்தவர்

களுக்கும் உணவு அளித்துக் காப்பவை கிராமங்கள்தாம்; ஆயினும் கிராமங்கள் கவனிக்கப்பெற வில்லை. வசதியாக வீடுகள்கூட கிராமப்புறத்தில் இல்லை. தரமான கல்வி மருத்துவ மனைகள் ஆகியன கிராமங்களில் இல்லை. ஆதலால் யாவரும் விரும்பி, கிராமத்தில் குடியேறுவதில்லை. கிராமத்தில் இருப்பவர்களும்கூட வசதிகளை நாடி நகரத் திற்கே செல்கின்றனர். இது வருந்தத்தக்க ஒரு நிகழ்வு. பண்டைக் காலத்தில் கிராமங்களே தானியக் களஞ்சியங் களாக விளங்கின. கிராமங்களில் செல்வச் செழிப்பு இருந்தது. மக்களாட்சி முறை தழுவிய கிராமிய சுயாட்சியும் தன்னியல் பாகவே ஒரு கூட்டுறவு வாழ்க்கையும் அமைந்திருந்தன. "ஒத்தாரும் உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் எவரும் ஒருமை யுளராக உலகியல் நடத்தி" வந்துள்ளனர். காலப்போக்கில் அந்நிய ஆட்சியில் தோன்றிய ஜமீன்தாரி முறைகளாலும் நிலப் பிரபுத்துவ முறைகளாலும் கிராமங்கள் தன்நிலை தடுமாறின. கிராம மக்கள் வறுமையின் இரும்புப் பிடியில் சிக்கினர். நாள் ஒன்றுக்கு உயர் வாழ்வதற்குத் தேவை யானவை கூடக் கிடைக்க முடியாதவாறு வறுமையிருள் சூழ்ந்தது. இதன் காரணமாகக் கிராம சமுதாயத்தில் ஒழுங்கீனங்களும் சிதைவுகளும் தலைகாட்டத் தொடங்கின. விடுதலை பெற்ற பிறகு நிலை தடுமாறிய கிராமங்களைச் சீரமைப்பதற்கு 'இமாலய முயற்சிகள்' மேற்கொள்ளப் பெற்றன. கிராமப் புறங்களின் மேம்பாட்டுக்காகத் தீட்டிய திட்டங்கள் பெரிய நிலச்சுவான்தாரர்களுக்கும் செல்வந்தர் களுக்குந்தான் பயனளித்துள்ளது என்பதைப் புள்ளி விவரங்கள் பறைசாற்றுகின்றன. கிராமங்களில் சாதாரணப் புறநிலை மாறுதல்கள் சில நடந்துள்ளன. சாலைகள் அமைந்துள்ளன; மற்றும் சில கட்டடங்கள் கட்டப் பெற்றுள்ளன.

"Every village should have three things-a Panchayat, a Co- operative and a School. Only then the foundation of Country will be strong."

என்று அமரர் நேரு கூறியது போல, இன்று ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு பள்ளிக்கூடம், ஒரு கூட்டுறவு, ஒரு பஞ்சாயத்து சபை என மூன்றும் அமைந்துவிட்டன. ஆனால் இவை அமைந்ததால் கிராமங்கள் என்ன பயனை அடைந்தன என்று மதிப்பீடு செய்தால் ஒன்றும் இல்லாதது மட்டுமல்ல. பிரதிகூலத்தையும் தந்துள்ளன என்பதே உண்மை. கிராமங்களில் சமூக, பொருளாதார அமைப்பில் வளர்ச்சியில்லாமல் வேறு என்ன இருந்து என்ன பயன்? அது மட்டுமல்ல கிராமத்தில் வாழ்ந்த சிறு விவசாயிகள், மிகச்சிறு விவசாயிகள் நிலங்களை விட்டுவிட்டு அல்லது விற்று விட்டுக் கூலிகளாக மாறி வருகின்றனர். கிராமப்புற நிலங்கள், நகர்ப்புறத்தில் வாழும் முதலாளிகளால் வாங்கப்படுகின்றன. நிலங்கள் வாங்கி விவசாயம் செய்தால் விவசாய வருமானவரி விலக்கு இருக்கிறது; வருமான வரியிலும் சலுகை கிடைக்கிறது. ஆதலால், முதலாளிகள், கிராமப்புற ஏழைகளின் - நடுத்தர விவசாயிகளின் நிலத்தைச் சந்தடியில் லாமல் வாங்கிச் சேர்த்துக் கொண்டு வருகின்றனர். அரசு ஏழைகளுக்காக என்று தீட்டிய திட்டங்கள் கூட, ஏழை களுக்குப் பயன்படாமல் போனது வேதனை தரத்தக்க செய்தி. உணவுப் பொருள்கள் - தானியங்கள் - நாட்டில் நடைபெற்ற பசுமைப் புரட்சியின் மூலம் நிறைய விளைந் திருந்தும் மக்களில் பெரும்பான்மையினருக்கு இன்னமும் போதிய அளவு சத்தான உணவு கிடைக்கவில்லை. உணவுப் பொருளை உற்பத்தி செய்யும் விவசாயிகள், விவசாயக் கூலிகள் - கிராமங்களில் வாழ்வோர் அரசின் நியாய விலைக் கடைகளில் உணவுப் பொருள்களை ஒழுங்கு வரிசையில் நின்று கூடை தூக்கி வாங்குகிறார்கள். இது ஏன்? எதனால்? அரசுகள் சிந்திக்க வேண்டாமா? கிராம மக்கள் சிந்திக்க வேண்டாமா? பரிகாரம் காண வேண்டாமா? உழுது உலகத்துக்கு உணவளிப்பவனுக்கு உண்ணும் சோற்றுக்குப் பஞ்சம்! இது எந்த நியாயத்தைச் சேர்ந்தது?

## விழிப்புணர்வு வேண்டும்

இத்தகு அவலங்கள் தொடர்ச்சியாக நிகழ்வதற்குக் காரணம், கிராம மக்களிடத்தில் போதிய அறிவும் விழிப்புணர்வும் இன்மையேயாகும். மூட நம்பிக்கை, விதிக் கொள்கை, சோதிடம் ஆகியவற்றால் கிராம மக்களின் அறிவுநிலை மிகவும் பாதிக்கப்பெற்றுள்ளது. இந்த கிராம சமூகத்தை, அறிவும் தெளிவும், விழிப்புணர்வும் உரிமை யுணர்வும் உடையதாக மாற்றி வளர்த்தால்தான் கிராம சமுதாயம் அரசியல், பொருளாதார விடுதலையை முழுமையாப் பெறும். இஃது ஒரு தலையான கருத்து.

## வேளாண்மை:

கிராமப்புற வறுமை ஆழமானது; புரையோடிப் போனது. ஆனாலும் மனச் சான்றுடன் உழைத்தால் சில ஆண்டுகளிலேயே மாற்றம் காணலாம். கிராம சமூகத்தின் பொருளாதரத்தை, அரசும் வன்கடனாளர்களும் சுரண்டாமல் இருந்தாலேயே கிராமங்கள் காப்பாற்றப்பட்டு விடும். மக்களின் உடைமையாகிய நிலவுடைமை. அவரவர் உடைமை உரிமைகளுக்கு ஊறு இல்லாமல் அதே போழ்தில் உற்பத்தி, பராமரிப்பு முதலிய பணிகளின் அளவில் கிராம சமுதாயத்தினுடையதாகவும் கருதுதல் வேண்டும். நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் விழலுக்கு இறைத்த நீராயின; துருப் பிடித்த இரும்பு போலாயின. நிலச்சீர்திருத்தச் சட்டங்களைக் கட்டாயமாக அமல்படுத்த வேண்டும். நிலம், கிராம சமுதாய உடைமை. நிலம் விற்கப்படுவிதும் வாங்கப்படுவதும் உடனடி யாகத் தடை செய்யப்படவேண்டும். நிலங்கள் துண்டாடப் படுதலைத் தவிர்க்க வேண்டும். அகண்ட கூட்டுறவுப் பண்ணைகள் அமைவதுதான் கட்டுபடியான விவாசயத் திற்கு உதவியாக இருக்கும். நிலத்தினுடைய உற்பத்தித் திறன் முழுமையாகப் பயன்படுத்தப்படவில்லை. அதாவது - ஒரு ஹெக்டேருக்கு 30 டன் உற்பத்தி செய்யலாம் என்பது அறிவியலாளர்கள் கூறும் செய்தி. நாம் விளைவிப்பதோ

3 டன்தான்! எவ்வளவு இடைவெளி! இயற்கை அளிக்கும் செல்வம் இவ்வளவு வீண்படுதலுக்கு என்ன நியாயம் கூற முடியும்? அதனால்தான்.

> "இலமென்று அசைஇ இருப்பாரைக் காணின்
> நிலமென்னும் நல்லாள் நகும்" – குறள் 1040

என்றார் திருவள்ளுவர்.

ஆதலால், கிராமப்புற மேம்பாட்டில் விவசாயத்திற்கு முன்னுரிமை தந்து கவனிக்கப் பெறுதல் வேண்டும்.

இத்துறையில் கடந்த காலத்தில் நிறையச் செய்யப் பெற்றுள்ளன. அவை அளவில் கூடுதலாயினும் உரிய இடங்களுக்குப் போய்ச் சேரவில்லை; போதிய பயனும் விளையவில்லை.

## செய்ய வேண்டியன:

கிராமப்புற மேம்பாட்டில் விவசாயத் தொடர்பாகச் செய்ய வேண்டியவை யாவை?

1. கிராமத்தின் நிலம் முழுவதையும் கிராமத்தின் உடைமை என்றே கருதவேண்டும். ஆதலால், ஊராட்சி மன்றத்தின் கவனத்திற்கு வராமல் நிலம் விற்கப்படுதல் பராதீனம் செய்யப்படுதல் தவிர்க்கப்பட வேண்டும்.
2. கிராமத்தில் உள்ள சிறு விவசாயியின் நிலத்தை, நகர்ப்புறத்தைச் சார்ந்தவர்களும் பெருந்தனக்காரர்களும் வாங்குவது முற்றாகத் தடை செய்யப் பெறுதல் வேண்டும்.
3. கிராமத்தில் நிலங்களை ஒருங்கிணைத்துக் கூட்டுறவுப் பண்ணையாக நடத்துதல் மிகவும் நன்று. இங்ஙனம் செய்தால் தரமான உயர் அறிவியல் சார்ந்த தொழில் நுட்பத்துடன் சாகுபடி செய்யலாம்; விளைச்சலும் பெருகும்;

விவசாயிகள் அதிக வருவாய் பெறுவர்; நில அளவிற்கு ஏற்றாற்போல மகசூல் பிரித்துத் தரப் பெற வேண்டும். விவசாயிகள் விவாசய வேலை களில் பங்கேற்க வேண்டும்; அதற்குரிய ஊதியத் தையும் பெற்றுக் கொள்ள வேண்டும். விவசாயி களை உறுப்பினர்களாகக் கொண்ட கூட்டுறவு அமைப்பாக நிர்வாகம் செய்யப் பெறவேண்டும். உயர் அரசு அலுவலர் உதவியாலும் நடைபெற லாம். ஆனால் இது அவ்வளவு எளிதானதன்று. தனியுடைமை என்ற நஞ்சு, ஊனையும் உயிரையும் கெடுத்து, தந்தை – மகன் பாசத்தையும் கெடுத்துவிட்ட நிலை இன்று ஏற்பட்டுவிட்டது. ஆதலால், விவசாயம் செய்தலைத் தவிர, மற்றெல்லாப் பணிகளையும் நீர்ப்பாசனம், பயிர்ப் பாதுகாப்பு முதலியவற்றைக் கூட்டுறவினால் செய்ய முதல் நிலையில் முற்படலாம். அதோடு வேளாண்மைக் கருவிகள் முதலியன வாங்கி வாடகைக்குத் தரலாம்.

4. கிராமத்தில் நிலங்களை, வீட்டுத் தோட்டங் களைத் தரிசு போடுவதைத் தவிர்க்க முயற்சி செய்வதுடன், அவசியம் எனில் தரிசு போடு பவர்களுக்கு ஊராட்சி மன்றம் 'தரிசுத் தண்டனையாக' அபராதம் விதிக்கலாம் என்று வரையறை செய்வது நல்லது.

5. கிராமங்களில் பொதுவாக நெல் சாகுபடி செய்வதிலேயே பெரு விருப்பம் இருக்கிறது. இதனை அறிவார்ந்த முறையில் மாற்றிப் பலவகைப் பயிர்ச் சாகுபடிக்கு கொண்டு வர வேண்டும்.

6. கிராமத்தின் உணவுப் பொருள் தேவையைக் கணக்கிட்டு, நிலப் பரப்பையும் கணக்கிட்டுப்

பயிர்ச் சாகுபடி முறையை நடைமுறைப்படுத்த வேண்டும். அதாவது கிராமத்திற்குத் தேவையான நெல், பருப்பு வகை, எண்ணெய் வித்துக்கள், காய்கறிகள், பழ வகைகள், மிளகாய், பருத்தி, கால்நடைத் தீவனம் முதலியனவற்றைச் சாகுபடி செய்து கிராமத்தைத் தன்னிறைவுடையதாக ஆக்கும் விவசாய முறை நடைமுறைக்கு வந்தாக வேண்டும். கிராமம் உற்பத்தி செய்யும் ஒவ்வொரு வகைப் பொருளிலும் 20 சதவீதம் நாட்டுத் தேவைக்காக அரசுக்கோ நுகர்பொருள் வாணிகக் கழகக் கூட்டுறவு நிறுவனத்துக்கோ விற்க வேண்டும். அரசு தனக்குத் தேவையான தானியங்களைக் கொள்முதல் செய்வதற்கு என்று தனியே ஒரு நிறுவனம் அவசியமில்லை. நுகர் பொருள் வாணிகக் கழகம் நேரிடையாகக் கூட்டுறவு விவசாய சேவைச் சங்கத்திலேயே வாங்கிக் கொள்ளலாம். கிராமத்தில் உற்பத்தியாகும் பொருள்கள் நல்ல விலையில் விற்க விவசாய சேவைக் கூட்டுறவு சங்கங்கள் முன் வர வேண்டும். மேலும் நிலப்பரப்பு இருந்தால், தொழிலுக்கு ஆகக்கூடிய ஆமணக்கு, பப்பாளி மரவள்ளிக்கிழங்கு முதலியன சாகுபடி செய்து, வேளாண்மை அடிப்படையிலான தொழில்களை உருவாக்க வேண்டும். இதனால் விவாசயிக்கும் வருவாய் பெருகும்; வேலை வாய்ப்பும் கிடைக்கும்.

7. இன்று விவசாயத் துறையைக் கிராம அளவில் விவசாயிகளை ஒருங்கிணைத்துத் தக்கமுறையில் வழி நடத்திப் பொறுப்பேற்றுச் செய்யும் ஒரு நிர்வாக அமைப்பு அமையாதது ஒரு குறையே. இந்தக் குறையை நிவர்த்தி செய்யக் கூட்டுறவு

விவாசய நாணயச் சங்கம் தோன்றியது. அது விவசாயப் பணிகளை ஒருங்கிணைந்த நிலையில் செய்யவில்லை. பயிர்க் கடன் கொடுத்தது; உரம் வாங்கி விற்பனை செய்தது; செய்து கொண்டிருக் கிறது. அந்தக் கூட்டுறவு விவசாய நாணயச் சங்கம் பின், கூட்டுறவு விவாசய சேவைச் சங்கமாக மாறியது. பெயர்தான் மாறியது. சேவை கிடைக்க வில்லை. பின் சேவையை மறந்து விட்டுத் தொடக்கக் கூட்டுறவு வங்கியாக மாறி இன்று அஃதொரு அப்பட்டமான லேவாதேவி நிறுவன மாக, தங்க நகைக்குக் கடன் வழங்குவதை உயர் குறிக்கோளாகக் கொண்டு இயங்குகிறது. தொடக்கக் கூட்டுறவு வங்கிகளில் வழங்கப் பெற்றுள்ள தங்க நகைக் கடன்களே சொல்லும். கிராமத்தின் செல்வம் சீரழிவதை! கிராமத்தின் கடன்களே மிகுகின்றன. கிராமத்தில் சேமித்த, தோடு மூக்குத்திகள் எல்லாம் பறிபோகின்றன. இந்த நிலைமை முற்றாக மாற்றப்படுதல் வேண்டும். மீண்டும் கிராமத் தொடக்கக் கூட்டுறவு வங்கிகள் விவசாய சேவைச் சங்கங்களாக வேலை செய்ய வேண்டும். விவசாயத் தொடர்பான அனைத்துப் பணிகளையும் ஒருங்கிணைத்த முறையில் மண்பரிசோதனை. விதை, உரம் விற்பனை. விவசாயக் கருவிகள் வாடகைக்குத் தருதல், நீர்ப்பாசனம், விவசாய அறிவு வளர்த்தல், உற்பத்தி செய்த பொருள்கள் விற்பனை ஆகியன் இந்த விவசாயக் கூட்டுறவு சேவைச் சங்கத்தின் மூலமே நடைபெற வேண்டும். இந்த விவசாயக் கூட்டுறவு சேவைச் சங்கத்தின் நிதி ஆதாரங்கள் பலப்படுத்தப் பெறுதல் வேண்டும். அரசு, இந்த விவசாய சேவைச் சங்கத்தின் பணித் திட்டங்

களுக்கு ஏற்ப, பங்குத் தொகைகளும் மான்யமும் தந்து உதவ வேண்டும். நாட்டுடைமையாக்கப் பெற்ற வங்கிகள், இந்தச் சங்கத்திற்கு மத்திய, நெடிய கால விவசாயத் திட்டங்களுக்குக் குறைந்த வட்டியில் கடன் தந்து உதவவேண்டும். அதாவது ஆழ்துளைக் கிணறு வெட்டுதல், நீர் இறைவை இயந்திரங்கள் கொள்முதல் செய்தல், உழு கருவி இயந்திரங்கள் வாங்குதல் முதலிய விவசாயத் துறைப் பணி அனைத்திற்கும் இந்த விவசாய சேவைக் கூட்டுறவு சங்கம் அடிநிலையில் பொறுப்பேற்க வேண்டும். இந்தக் கூட்டுறவு சங்கம், விவசாயிகளால் நிர்வாகம் செய்யப் பெறுதல் வேண்டும். நிர்வாக அமைப்பில் மிகச் சிறு விவசாயிகள் 3, சிறு விவசாயிகள் 3, இதர விவசாயிகள் 1 என்ற விகிதத்தில் இயக்குநர்கள் அமைய வேண்டும்: எண்ணிக்கை கூடுதலுமாக லாம். ஆனால் இந்த விகிதத்திலேயே கூடுதல் அமைய வேண்டும். செயலாளராக ஒருவரை - கூட்டுறவுப் பயிற்சியும் வேளாண்மைப் பயிற்சியும் உடைய ஒருவரை - அரசுப் பரிந்துரையின் அடிப் படையில் சேவைச் சங்கம் நியமித்துக் கொள்ளும் உரிமை வேண்டும். விவசாயத் தொழில் நுட்பம் அறிந்த சிலபல ஊழியர்களைச் சங்கம் அமர்த்திக் கொள்ள வேண்டும். சங்கம் வழங்கும் பயிர்க் கடனிலேயே சேவைக்குரிய கட்டணங்களையும் சேர்த்துப் பணக் கடன் தருவதுடன் பொருள் களுடன் சேவையையும் தந்து உதவ வேண்டும். இத்தகைய பல்வகை பணிப் பொறுப்புக்களையும் ஏற்றுச் செய்யக்கூடிய விவசாய சேவைக் கூட்டுறவு சங்கங்கள் அமைவது அவசர அவசிய மான பணி.

8. நீர்ப்பாசனம் தொடர்பாக ஆற்றுக்கால் பாசனச் செலவு, ஏரிப் பாசனச் செலவு போலக் கிணற்றுப் பாசனச் செலவையும் அரசே ஏற்கவேண்டும். (தனியார் கிணறுகளுக்கல்ல) சமுதாயக் கிணறு களை ஆழ்துளைக் கிணறுகளாக அமைத்துத் தருதல். அவற்றைப் பராமரித்தல், இறைவைச் செலவு ஆகியவற்றை அரசே ஏற்று, விவசாயக் கூட்டுறவு சேவைச் சங்கத்திற்கும் தரவேண்டும். "Nabard" நிறுவனம் வேளாண்மை - கால்நடைத் துறைத் திட்டங்களுக்கு நிதி வழங்க இந்த விவசாயக் கூட்டுறவு சேவைச் சங்கங்களைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

(குறிப்பு) விவசாயச் சேவைக் கூட்டுறவு சங்கங்கள் இச்செலவுகளை ஏற்றுக் கொண்டு தக்க வகையில் நிதி வசதி பெற்றவுடன் அரசு பொறுப்பேற்க வேண்டியதில்லை.

9. கிராமங்களின் ஆதாரங்களாகிய ஆறுகள், ஏரிகள், கண்மாய்கள் அனைத்தும் விவசாய சேவைக் கூட்டுறவு சங்கத்தின் நிர்வாக அமைப்பின்கீழ் வந்து, சேவைச் சங்கம், நீர்க் கமிட்டிகளை நியமித்து முறைபடுத்தி நீர்ப்பாசனம் செய்துதர வேண்டும். தண்ணீர்ப் பற்றாக்குறை ஏற்பட்டுள்ள இன்று கிராமங்களுக்குத் தண்ணீர் நிர்வாக மேலாண்மை தவிர்க்க இயலாதது மட்டுமன்று; அவசியமானதும்கூட.

10. கிராமக் கழிவுகளைத் திரட்டிக் கலவை உரமாக்கும் பணியையும் கிராமப் பஞ்சாயத்துடனும் கூட்டுறவு பால் உற்பத்தி சங்கத்துடனும், ஆடு வளர்ப்போர் சங்கத்துடனும் ஓர் உடன்படிக்கை அடிப்படையில் விவசாயக் கூட்டுறவு சங்கங்கள்

நேரடியாகவும் ஒப்பந்தம் மூலமாகவும் செய்ய முன்வரவேண்டும். இன்று கலவை உரம் தயாரிக்கும் முயற்சியே இல்லை. தூண்டு சக்தியாக விளங்கும் இரசாயன உரங்களையே விவசாயிகள் உரங்கள் என்று நம்பிக் கொண்டிருக்கிறார்கள். அளவுக்கு அதிகமாக இரசாயன உரங்கள் உபயோகிப்பதால் நிலங்கள் நிலவளத்தை இழந்து கொண்டு வருகின்றன. இதை உடனடியாகத் தடுத்துக் கலவை உரங்கள் தயாரிக்கவும் உரச் செடிகளை வளர்க்கவும் வேண்டும். இந்தப் பொறுப்பை விவசாயக் கூட்டுறவு சேவைச் சங்கம் ஏற்கவேண்டும்.

11. விவசாயிகள் உற்பத்தி செய்த பொருள்களை அவரவர் தேவைக்கு வைத்து உபயோகப்படுத்திக் கொள்ளவும் கிராமத் தேவைக்கு (உற்பத்தியாளர் அல்லாதவர் உபயோகத்துக்கு) என்று 30 சதவீதம் கொள்முதல் செய்து வைத்துக் கொண்டு விற்பனைக்கு வழங்கவும் விவசாய சேவைச் சங்கம் முன்வர வேண்டும்.

12. விவசாயிகளின் உற்பத்திப் பொருள்களின் கிராமத்தின் தேவைபோக எஞ்சியவைகளை விவாசய சேவைச் சங்கங்களே வாங்கி நல்ல விலைக்குக் கொடுக்கவும் (இலாப நோக்கத்துடன் அல்ல); ஒருபகுதி கிராமத்தின் தேவைப் பெருட்களை - விளையாதவற்றைப் பண்டமாற்று முறையில் வாங்கி வைத்துக் கொடுக்கவும் விவசாயக் கூட்டுறவு சேவைச் சங்கங்கள் பணி செய்ய வேண்டும்.

13. பொதுவாக கிராமத்தில் பசுமைப் புரட்சிக்கு விவசாயிகளுக்கு உறுதணையாக அமையும்

பல்வகைப் பணிநிறுவனமாக இந்தக் கூட்டுறவு விவசாய சேவைச் சங்கம் இயங்க வேண்டும்.

14. இந்தச் சங்கம் விவசாயிகளிடம் சேமிப்பு முறை களை ஊக்குவித்து இட்டு வைப்புகளைப் பெற வேண்டும்.

15. விவசாய சேவைச் சங்க உறுப்பினர்களுக்குப் பணமிழப்பில்லாத ஏலச்சீட்டு முறையை அறிமுகப்படுத்தி நடைமுறைச் செலவுகளுக்கு உதவி செய்வதுடன் தனது நிதி ஆதாரத்தையும் பெருக்கிக் கொள்ளலாம்.

16. விவசாயத் தொழிலுக்கு அரசு உரமான்யம் முதலியன வழங்கப்படுவதற்குப் பதிலாக அடிப்படை உற்பத்தி அளவிலிருந்து கூடுதல் உற்பத்தி செய்கிற விவசாயிகளுக்குக் கூடுதல் நெல் ஒவ்வொரு குவிண்டாலுக்கும் உற்பத்தி ஊக்க ஊதியம் (Bonus) தருவது நல்லது. இந்த முறை ஜப்பானில் இருக்கிறது.

## மரம் வளர்ப்பு

கிராமப்புற மேம்பாட்டுக்குப் பலவகையிலும் உதவி செய்யக்கூடியது காடு வளர்ப்பு ஆகும். நல்ல மழை பொழிய வேளாண்மைக்கும், கால்நடைகளுக்கும் தண்ணீர் கிடைக்க கிராமப்புறத் தட்ப வெப்ப நிலைகளைச் சீராகப் பராமரிக்கக் காடுகள் தேவை. அறிவியற் பார்வையின் நாட்டின் மொத்த நிலப்பரப்பில் 1/3-ல் பங்கு காடுகள் இருக்க வேண்டும். ஆனால் இப்போது இந்தியாவில் இருக்கும் காடு 18 சதவீதம்தான். அதில் தமிழ்நாட்டில் இருப்பது 16 சதவீதம்தான். கிராமப்புறங்கள் அடர்த்தியான காடுகளால், மரங்களால் அணிசெய்யப்பெற்று விளங்கவேண்டும். “வீட்டுக்கு ஒரு மரம்” என்பது இன்றைய நிலையில் போதாது.

நபருக்கு ஒரு மரம் என்ற நியதி பின்பற்றப் படுதல் வேண்டும். பிள்ளைப் பிறப்பு திருமணம் போன்ற குடும்ப நிகழ்ச்சி களிலும் சுதந்திர தினம் குடியரசு தினம் முதலிய தேசியத் திருநாள்களிலும் திருக்கோயில் திருவிழாக் கொடியேற்று நாளிலும் திட்டமிட்டு மரங்களை நட்டு வளர்க்கும் மரபு - பழக்கம் தேவை. இந்த மரங்கள் பெரும்பாலும் உயரமான தாக பரந்து வளரக்கூடியனவாக வேப்பமரம், வாகை முதலியனவாக நடுதல் நல்லது. கிராமத்தின் தேவைக்கேற்ப ஓரளவு புளிய மரங்கள் நடலாம். பணம் தருவனவாகிய தென்னை, முந்திரி முதலியனவும் நடலாம். வீடு கட்டப் பயன்படக்கூடிய தேக்கு, மூங்கில், நாட்டுப் பூவரசு, பனை முதலிய மரங்களையும் நடலாம். கிராமங்களில் ஒரு ஏக்கர் முதல் மூன்று ஏக்கர் வரை (முந்திரி, தென்னை) மரம் வளர்க்கலாம். இது ஒரு, தொழிலாகவே அமையும்.

## சாண எரிவாயு அடுப்பு

மேலும் கிராமப்புறங்களில் சமையலுக்குரிய எரிசக்திப் பிரச்சனை - கடுமையான பிரச்சனையாக இருக்கிறது. கிராமத்தின் கால்நடைகளின் - மக்களின் கழிவுப் பொருள் களைக் கொண்டே "சாண எரிவாயு" (Bio-gas) அடுப்புத் தயாரித்தல் நல்லது. ஒரு வீட்டுக்கு 5 மாடுகள் அல்லது 15 நபர்கள் இருந்தால் இந்தச் சாண எரிவாயு அடுப்பு அமைக்கலாம். புகை வராது; எரி ஆற்றலும் அதிகம் கிடைக்கும். சாண எரி வாயு அடுப்பில் உபயோகப்படுத்தப் பட்ட கழிவுப் பொருள், வீரியம் மிகுந்த உரம், வேளாண்மைக்குப் பயன்படுத்தலாம். இந்த அரசுகளும் 3—ல் ஒரு பங்கு மான்யம் வழங்குகின்றன. மீதியை வங்கிகள் கடனாகத் தந்து உதவுகின்றன. சாண எரிவாயு அடுப்பு அமைப்பதன் மூலம் கால்நடைகள் வளர்த்தல், கால்நடைகள் வளர்த்தல் மூலம் வீட்டுக்குப் பால் முதலிய பொருள்கள், இறைச்சி ஆகியன கிடைப்பதுடன் மரங்கள் வெட்டப்

படாமலும் காப்பாற்றப்படுகின்றன. ஆதலால் சாண எரிவாயு அடுப்பு அமைத்தல் பலமுனைப் பயன்தரும் பணி. வீடுதோறும் சாண எரிவாயு அடுப்பு அமைத்தல், சமுதாயச் சாண எரிவாயு அடுப்பு அமைத்தல் ஆகிய பணிகளைக் காலக்கெடுவுடன் கூடிய திட்டம் தீட்டி நிறைவேற்ற வேண்டும். அதுவரையில் கிராமம் தோறும் பசுந்தழை வளர்ப்பது ஒரு சிறந்த தொழில்.

பல கிராமங்களில் நல்ல உரமாகக் கூடிய சாணத்தை வறட்டியாக்கி அடுப்பு எரிந்து வருகிறார்கள். இது நல்ல பழக்கமன்று. சாணம் உரமாக்கப்பட்டு விவசாயத்திற்குப் பயன்படுத்தப் பெறுதல் வேண்டும். பஞ்சாயத்தும் ஊர்ப்புறம் போக்கில் எரிப்பதற்குப் பயன்படும் விறகு மரங்களை உற்பத்தி செய்து விறகாக விற்கலாம்.

## கால்நடை வளர்ப்பு

விவசாயத்தை அடுத்து, கிராமப்புற வளர்ச்சியில் முக்கிய இடத்தை வகிப்பது கால்நடை வளர்ச்சி, இன்று கிராமங்களில் கால்நடைகள் எண்ணிக்கை குறைந்துக் கொண்டு வருகின்றது. ஒரு ஏக்கருக்கு உரம் சேகரிக்க ஐந்து மாடுகள் அல்லது இருபது ஆடுகள் குறைந்த அளவு தேவை. இந்த அடிப்படையில் இன்று கிராமங்களில் கால்நடைகள் இல்லை. இருக்கும் கால்நடைகளும் விவசாயிகளுக்குச் சுமை யாக விளங்குகின்றனவே தவிர, ஊட்டமுள்ள பயனுள்ள கால்நடைகளாக இல்லை. மனிதன் மரங்களை வெட்டி அடுப்பு எரிக்கிறான்: மண்ணைப் பாதுகாக்காமல் மண் அரிப்புக்கு இரையாக்கியும், ஊட்டம் அளிக்காமல் சுரண்டியும் மண் வளத்தைப் பாழாக்குகிறான். கடன் வாங்கும் வசதிக்காகப் புறம்போக்குத் தரிசு நிலங்களைப் பட்டாப் போட்டு வாங்கிக் கடனும் வாங்கி விட்டான். நிலம் 'ஐயோ' என்று கிடக்கிறது! கிராமத்தில் வளர்ந்த மேய்ச்சல் தரைகள் இல்லை. பசுந் தீவனப் புல் கிடைப்பதில்லை. அதனால்

கால்நடைகள் வெற்றுத் தரையை முகர்ந்து முகர்ந்து அழிகின்றன. கால்நடைச் செல்வத்தில் கவனம் செலுத்தத் தவறினால் இன்னும் ஒரு நூற்றாண்டில் கொடிய பஞ்சத்திற்கு இரையாகி அழிவோம் என்பதை அறிய வேண்டும். கிராமங்களில் ஒவ்வொரு கூட்டுறவு பால் உற்பத்தி சங்கத்தையும் கூட்டுறவு ஆடு வளர்ப்போர் சங்கத்தையும் சிறப்புடன் இயங்கச் செய்ய வேண்டும். இந்தச் சங்கங்களுக்கு முறையே மாடு ஒன்றுக்கு 5 செண்டு ஆடு ஒன்றுக்கு 1 செண்டு என்ற கணக்கில் பசும்புல் வளர்க்க மேய்ச்சல் தரை அமைக்க அரசு புறம்போக்கு நிலங்களை "ரெவின்யூ காடுகளை" பஞ்சாயத்து நிலங்களை உடனடியாக நீண்ட காலக் குந்தகைக்கு ஒதுக்க வேண்டும். பசும்புல் வளர்க்கவும் மேய்ச்சல் தரை அமைக்கவும் ஆகும் மூலதனச் செலவுகளுக்கு – நிலச் சீர்த்திருத்தம், ஆழ்துளைக் கிணறு அமைத்தல், நீர் இறைவை இயந்திரங்கள் பொருத்துதல் ஆகியவற்றிற்கு 50 சதவிகிதம் தொகை மான்யமாகவும் மீதி 50 சதவிகிதம் தொகை 4 சதவிகிதம் வட்டிக்கு நீண்ட காலக் கடனாகவும் கொடுத்து உதவ வேண்டும். நடைமுறைச் செலவுகள் 4 ஆண்டுகளுக்கு முதலாம் ஆண்டு 100 சதவிகிதம் இரண்டாம் ஆண்டு 70 சதவிகிதம், மூன்றாம் ஆண்டு 50 சதவிகிதம், நான்காம் ஆண்டு 50 சதவிகிதம் மான்யமாகவும் கொடுத்து உதவ வேண்டும். இதற்கிடையில் கூட்டுறவு சங்கங்களின் நில ஆதாரம் பலப்பட்டுவிடின் அரசு மான்யம் கொடுப்பதை நிறுத்திவிடலாம்.

கால்நடை துறையில் நமது அரசுகள் கடந்த பல ஆண்டுகளாகக் கிராமப் புறத்திற்கு வழங்கியுள்ள பணம் கோடிக் கணக்கில் ஆகும். ஆயினும் உருப்படியாக எதையும் காணோம். பசும்பொன் தேவர் திருமகன் மாவட்ட ஆட்சித் தலைவர் திரு. அ. இளங்கோவன், இ.ஆ.ப. கூறியது போல "ஒரே மாட்டைக் காட்டி 40 பேர் கடன் வாங்குகிறார்கள்" ஊரக ஒருங்கிணைந்த வளர்ச்சித் திட்டத்தின் கீழ், ஆடு,

மாடுகள் வாங்க வழங்கிய கடன்களின் மீது 40 சதவிகிதம் கால்நடைச் சொத்துக்கள் உருவாகவுமில்லை; உருவான 40 சதவிகிதம் தரமானவையுமல்ல. அவை நாட்பட வாழ்ந்து போட்ட முதலுக்கு ஏற்ற பயன் தரக் கூடியவை அல்ல. இந்த முறைகேடுகளைத் தவிர்க்க அடியிற் கண்ட முறைகள் பயன்படும்.

தரமான பால் மாடுகளை – ஆடுகளை இன்று வாங்க முடியவில்லை. விவசாயிகளுக்கு நேரிடையாகப் பணம் தருவதால்தான் இலஞ்சம் மற்றும் பல வழிகளில் பணம் பாழாகிறது. ஆதலால் ஒவ்வொரு மவாட்டத்திற்கும் தரமான கால்நடைகளை வளர்த்து விவசாயிகளுக்கு வழங்கக் கூட்டுறவு முறையில் கன்று வளர்ப்புப் பண்ணைகளை அமைக்க வேண்டும். பால் மாட்டுக்கடன், ஆட்டுக் கடன் அனுமதி பெற்றவர்கள் இந்தப் பண்ணைகளுக்குப் போய் மூன்று நாள்கள் தங்கித் தங்களுக்குப் பிடித்தமான மாடுகளை ஆடுகளை நன்றாகச் சோதித்து வாங்கிக் கொள்ளலாம்; பணம் பரிமாற்றம் வாங்குபவர் பெயரால் கூட்டுறவு நிறுவனங்களுக்கிடையே நிகழ வேண்டும். இம்முறையால் கால்நடைத் துறையில் நடைபெறக் கூடிய தவறுகள் தவிர்க்கப் பெறும். விரைந்த வளர்ச்சியும் காணப்பெறும். இப்போது ஒசூர், ஒரத்தநாடு, புதுக்கோட்டை, செட்டி நாடு ஆகிய ஊர்களில் இருக்கும் கால்நடைப் பண்ணைகளைப் பயன்படுத்தலாம். ஆனால் இந்தப் பணித் திட்டம் அந்தப் பண்ணைகளில் இல்லை. இந்தப் பண்ணைகள் ஆராய்ச்சி மையங்களைப் போலவே இயங்குகின்றன. கிராமப் புறங் களில் அமையும் கால்நடை மருத்துவ நிலையங்கள் சிறந்த முறையில் அமைந்து பணி செய்ய வேண்டும். கால்நடை மருத்துவருக்கும் ஊழியர்களுக்கும் மருத்துவமனையின் பக்கத்திலேயே வீடுகள் கட்டிக் கொடுக்க வேண்டும். அவர்கள் எப்போதும் கிராமத்திலேயே தங்கிப் பணி செய்ய வேண்டும். கால்நடை மருத்துவ மனைகளுக்குத் தொலை பேசி இணைப்புகள், ஊர்திகள் குளிர்சாதனப் பெட்டிகள்

முதலிய வசதிகள் செய்து தரப்பெறுதல் வேண்டும். கால் நடைத் துறை மூலமே கோழி வளர்ப்பு, முயல் வளர்ப்பு, பன்றி வளர்ப்பு முதலியவற்றையும் ஊக்குவித்துக் கிராமப்புற விவசாயிகளின் வருமானத்தைப் பெருக்க வேண்டும். பால் மாடுகளின் தரத்தைக் கூட்டி, நாள் ஒன்றுக்கு 20 லிட்டர் வரை பால் கறக்கும்படி செய்தால்தான் பால்மாடு வளர்ப்பு கட்டுப்படியான வாழ்க்கைத் தொழிலாக அமைய முடியும். செம்மறி ஆடுகளை முறையாக வளர்த்தால் 8 மாதத்திற்கு ஒன்று வீதம் 16 மாதத்திற்கு 2 குட்டிகள் போடும். ஆனால் இப்போது பரவலாக 12 மாதத்திற்கு ஒரு குட்டிதான் போடுகிறது. இத்துறையில் ஆராய்ச்சியும் வளர்ச்சியும் தேவை. வெள்ளாடுகள் வளர்ப்பது விவசாயிகளின் வருவாய்ப் பெருக்கத்திற்கு நல்லது. ஆனால் கிராமத்தின் செழிப்புக்கு மூலதனமாக விளங்கக்கூடிய மரங்களை அழித்துவிடும். ஆதலால் வெள்ளாடுகள் வளர்ப்பதை ஊக்குவிக்கக் கூடாது. அப்படியே வளர்ப்பதாக இருந்தால் ஆழ் கூளம் Deeplitter முறையில் வளர்க்கத் திட்டமிட்டு விவசாயிகளை ஈடுபடுத்தலாம். தேவையான பசுந்தழைகளைப் பண்ணையில் வளர்த்துத் தரவேண்டும். இதுபோலவே ஆழ்கூள முறையில் பன்றிகளையும் வளர்க்க விவசாயிகளுக்குப் பயிற்சி தரலாம். இங்ஙனம் பலவகையிலும் கிராமத்தில் மாடு முதலிய பிராணிகளை வளர்த்து வருவாயும் அடையலாம். இத்துறையில் திட்டமிட்ட பணிகள் மேற்கொள்ளப் பெறுதல் வேண்டும்.

## கிராமப்புறத்தில் வேலை வாய்ப்பு

கிராமங்களில் வேலை வாய்ப்பு மிகக் குறைவு. வறுமையின் மறு பெயர்தானே வேலையின்மை. இந்திய நாட்டின் கிராமப்புறங்களில் வேலை வாய்ப்பின்மை என்பது வளர்ந்துவரும் கடுமையான பிரச்சனை. நிலச் சீர்திருத்தங்கள் செய்யப் பெற்றாலும்கூட நிலங்களை நிலமற்றவர்களுக்கு விநியோகம் செய்தாலும் கூட, கிராமப்புற வேலை வாய்ப்புப்

பிரச்சனை தீராது. மூன்று போகம் சாகுபடி செய்யும் கிராமமாக இருந்தாலும் கூட வேலை நேரமும் குறைவுதான். விவசாயிகளுக்கு ஆண்டு ஒன்றுக்குச் சராசரி 83 நாள்தான் வேலை இருக்கும். வேலை இல்லாதோர் முழு நேரப் பணி இல்லாதோர் வீணே வாழ்நாளைக் கழிக்கின்றனர். இல்லை இல்லை; வீணே கழிக்கவில்லை. வம்பு வழக்குகளில் காலத்தைக் கழிக்கின்றனர். இன்று விவசாயத் தொழிலில் நெருக்கடி வேறு. இந்தியாவில் 80 சதவிகிதம் விவசாயத்திலும் 20 சதவிகிதம் இதர தொழில்களிலும் ஈடுபட்டுள்ளனர். குறைந்தது 40 சதவிகிதம் பேர்களை விவசாயத்திலிருந்து வேறு தொழிலுக்கு மாற்றினால்தான் விவசாயத் தொழில் கட்டுப்படியான தொழிலாக அமையும். விவசாயமும் காப்பாற்றப்படும். கிராமங்களில் வேலை வாய்ப்புகளை - கால்நடை வளர்ப்பு, கோழி வளர்ப்பு, பழத்தோட்டம் வளர்ப்பு முதலியவற்றை அதிகப்படுத்த இயலும். இது போக வேளாண்மை அடிப்படையிலான உணவுப் பொருள்களை நுகர் பொருள்களாக மாற்றும் தொழிற்சாலைகளையும் ஏற்படுத்தலாம். கிராமங்களில் வாய்ப்பிருப்பின் அன்றாடத் தேவைக்குரிய தானியங்கள் உற்பத்தி செய்யப்பட்டது போக மீதி நிலங்களில் வேளாண் பொருள் அடிப்படையிலான தொழில்களுக்குரிய மூலப் பொருள்களைச் சாகுபடி செய்யலாம். இதற்கு வாய்ப்பு இல்லையெனில் பிற தொழில்கள் - கிராம வேலை வாய்ப்புக்குத் துணை செய்யக்கூடிய சிறு தொழில்களாகத் தொடங்கலாம். திருக்கோயில்களின் திருப்பணிக்கு அறம் செய்யும் மனப்பான்மையுடையவர்களும் இந்த நூற்றாண்டுக்கு வேலை வாய்ப்புகளை உருவாக்குதல் அறம் என்று உணர்ந்து செயற்பட்டால் நல்லது. கிராமப்புற வேலைவாய்ப்புகளை உருவாக்கும் தொழிற்சாலைகளில் முடக்கும் மூலதனத்திற்கு வருமானவரி வரிகளில் முடக்கும் மூலதனத்திற்கு வருமானவரி வரியையும் தள்ளிக் கொடுக்க அல்லது குறைத்துக் கொடுக்க நடுவணரசு

முன்வரவேண்டும். இதோடு கலால் வரியையும் ஐந்து ஆண்டு களுக்கு விட்டுக் கொடுக்க வேண்டும்; மாநில அரசுகள் முதல் ஐந்து ஆண்டுகளுக்கு விற்பனை வரியிலிருந்து விலக்களிக்க வேண்டும். இங்ஙனம் பலரும் பல்லாற்றானும் ஒத்து வழங்கும் முயற்சி இருந்தால்தான் கிராமப்புறம் மேம்பாடு அடையும்.

## உத்தரவாதம் வேண்டும்

கிராமங்களில் வாழும் மக்களுக்கு இன்று உத்தரவாதம் கூடக் கிடையாது. அவர்களுடைய சொத்துக்கள், உடைமைகள் கூட நகர்ப்புற மக்களாலும் - வட்டிக்கடைக்காரர்களாலும் எப்போதும் விலைக்கு வாங்கப் பெறலாம். கிராமப்புற மக்கள் நாளும் சுரண்டப்படுகிறார்கள். கிராமப்புற ஏழைகள் என்றால், காவல் நிலையத்தினருக்குக்கூடத் தொக்கடிதான்! இவை எல்லாவற்றையும் விடப் பெரிய கொடுமையிலிருந்து பாதுகாப்பு தேவை. அதாவது கிராமப்புறத்தானின் உழைப்பினால் உருவாக்கப்பெறும் செல்வத்தில், அவன் ஒரு கணிசமான பகுதியை அடைந்து அனுபவிக்க உரிமையும் உத்தரவாதமும் வேண்டும்.

## தீய சக்திகளிலிருந்து காப்பாற்ற வேண்டும்

கிராமப்புறத்து மக்களுடைய வருவாயை வளர்த்தலும், நிலைபெறுத்தலும் எளிதான செயலல்ல. ஆனால் இது நடக்க வேண்டும். நடந்தே ஆக வேண்டும். இந்த முயற்சி நடக்கும் பொழுதே கிராமப்புற மக்கள் கையில் சேரும் காசு, மூலதன வடிவத்தை - சொத்து வடிவத்தைப் பெறுவதற்கு முன்பே தட்டிப் பறிக்கின்ற தீய சக்திகள் பல. வட்டிக்காரர்கள், புகை யிலை, பீடி, விற்பனையாளர்கள், ஜோதிடர்கள், திரைப்படக் கொட்டகையாளர்கள், கள், சாராய விற்பனையாளர்கள், பரிசுச் சீட்டுகள், சூதாட்டம், வருவாயை விஞ்சிய ஆடம்பரப் பொருள்கள் முதலியன இத் தீய சக்திகள் ஆகிய இவற்றி லிருந்து கிராமத்து மக்களை முதலில் காப்பாற்றியாக வேண்டும்.

## நுகர்பொருள்கள் கிடைக்க வழிவகை காணல்

*தூய - எளிய ஆனால், வசதியான வாழ்க்கை கிராமப்புற மக்களுக்குக் கிடைக்க வேண்டும். பெரும்பாலும் அன்றாட அடிப்படைத் தேவைகளை (உணவு, உடை தொடர்பானவை) கிராமங்கள் திட்டமிட்டு உற்பத்தி செய்ய வேண்டும். கிராமத்தில் உற்பத்தி செய்யாத - செய்ய இயலாத பொருள்களைக் கிராமங்களுக்கிடையில் பண்டமாற்று முறையில் வாங்கிக் கொள்ளலாம். இந்த முயற்சியைக் கடந்த நிலையில் தேவையிருப்பின் கிராமங்களில் நியாய விலையில் பொருள்களை விற்கக்கூடிய பொதுப்பண்டக சாலைகள் கூட்டுறவு முறையில் நடத்தப் பெறுதல் வேண்டும். செலவுகள் குறைவதும் வரவைப் போலவே கருதப் பெறுதல் வேண்டும் என்ற உண்மை நடைமுறைக்கு வந்தாக வேண்டும்.*

## மூன்று நிறுவனங்கள்

*கிராமப்புற வளர்ச்சிக்கு அடிப்படையான மூன்று நிறுவனங்கள் தேவை என்றார் அமரர் நேரு.*

Every Village should have three things – a Panchayat, a Co-operative and a School.

*என்று அமரர் நேரு கூறியதை மீண்டும் நினைவிற்குக் கொண்டுவருதல் நல்லது. இந்த மூன்றும், அமரர் நேரு அவர்கள் பிரதமராக ஆட்சி செய்த காலத்திலேயே அமைக்கப்பெற்று விட்டன என்பது மகிழ்ச்சிக்குரிய செய்தி. ஆயினும் இவை மூன்றின் செயற்பாடுகள் எப்படி உள்ளன? இவை உண்மையாகவே கிராமங்களின் வளத்திற்கும் வலிமைக்கும் அடிக்கல்லாக அமைந்து விளங்குகின்றனவா? என்று ஆய்ந்தறிந்து தீர்வு காணுதல் வேண்டும்.*

## ஊராட்சி மன்றம்

ஊராட்சி மன்றம், கிராம நிர்வாகச் சார்புடைய நிறுவனம்; அரசாங்க நிர்வாக இயந்திரத்தின் ஒரு சிறப்புமிக்க உறுப்பு. இல்லை - சிறந்த அரசாங்கத்தின் அடிப்படையே ஊராட்சியில்தான் விளங்குகிறது. ஆனால், இன்றைய ஊராட்சிகள் சோளக்கொல்லைப் பொம்மைபோல அமைந்துள்ளன. ஊராட்சிமன்றங்களுக்குப் போதிய அதிகாரங்களும் இல்லை; நிதி ஆதாரங்களும் இல்லை. இன்றைய ஊராட்சிமன்றம் கௌரவஸ்தாபனம் - அவ்வளவுதான்! ஊராட்சி மன்றம் கிராம சமூகத்தினிடத்தில் நல்லிணக்கத்தை உருவாக்கி வளர்க்கக் கூடியதாகவும் தேவைப்படும் பொழுது ஒறுத்து நெறிப்படுத்தக்கூடிய நெறி சார்ந்த நீதி நிறுவனமாகவும் உரிமை பெற்று விளங்க வேண்டும். கிராமத்தில் சட்டம் ஒழுங்கைப் பேணுதலும் இவை தொடர்பான பணிகளும் ஊராட்சி மன்றத்தினுடையனவாக அமைய வேண்டும். அதற்குரிய அளவான உரிமங்களும் அதிகாரங்களும் ஊராட்சி மன்றங்கள் பெற வேண்டும்.

அடுத்து, ஊராட்சியின் இன்றியமையாத பணிகள் கிராமச் சுகாதாரம்: சுற்றுப்புறச் சூழல் பேணல்: குடி தண்ணீர்; குளியல் நீர் நிலைகளைப் பராமரித்தல். மின் விளக்குகள் எரித்தல் முதலியன. இப்போது இவைகளை ஊராட்சி மன்றங்கள் கவனிக்கின்றன. ஆனால் இந்தப் பணிக்குப் போதிய நிதி வசதி இல்லை; அதிகாரங்களும் இல்லை. ஒரு மின்சார பல்புகூட ஊராட்சிமன்றத் தலைவர் வாங்க உரிமை இல்லை. தவறுகளைத் திருத்த நெறிமுறைப் படுத்த வேண்டுமே தவிர, அதற்கு மாறாக ஊராட்சி மன்றங்களின் உரிமைகளையும் அதிகாரங்களையும் பிடுங்கிக் கொண்டு ஊராட்சிமன்றத் தலைவர்களையும் மன்றங்களையும் அவமானப்படுத்துவது கிராமங்களின் வளர்ச்சிக்கு எப்படித் துணை செய்ய இயலும்? இத்தகு அணுகு முறைகள் எப்படிச்

கு.XIII.24.

சமூக ரீதியான அணுகுமுறையாகும்? ஊராட்சி மன்றங்கள் கிராமங்களைச் சீராக நிர்வாகம் செய்ய - வளர்க்கப் போதிய உரிமைகளும் அதிகாரங்களும் பெற வேண்டும். கிராம அளவில் வேலை செய்யும் அனைத்து அரசு நிறுவன அலுவலர்களும் ஊழியர்களும் ஊராட்சி மன்றத்தின் பணிகளுடன் நேரிடையாகப் பங்கேற்று ஒத்துழைப்புத் தர வேண்டும். இவர்கள் ஊராட்சி மன்றத்தின் செயல் முறைகளுக்கும் வெற்றிக்கும் ஒத்துழைப்பதோடன்றி அந்தப் பணிகளுக்கு - மன்றத்திற்குப் பொறுப்பேற்கக் கூடிய வர்களாகவும் இருக்க வேண்டும். இவர்கள் ஊராட்சிமன்றக் கூட்டங்களில் தவறாது கலந்து கொள்ள வேண்டும். இரவுநேரக் கல்விக் கூடங்கள், ஆரம்பப் பாடசாலைகள் ஊராட்சி மன்றத்தின் மேற்பார்வைக்கும் கண்காணிப்புக்கும் உட்படுத்தப்பட வேண்டும். தனியார் பள்ளிகளாக இருந்தாலும் இந்த விதி பொருந்த வேண்டும். அந்தப் பள்ளிகளின் ஆட்சிக் குழுவில் ஊராட்சி மன்றத் தலைவர் அலுவல் ரீதியாக உறுப்பினராதல் வேண்டும்.

ஊராட்சி மன்றத்தின் நிதி ஆதாரங்கள் வலுப்படுத்தப் பெறுதல் வேண்டும். கிராமத்தில் தொழில் உரிமம் வழங்கும் உரிமை ஊராட்சி மன்றத்தினிடமே இருத்தல் வேண்டும். இது தொடர்பான முறையீடுகள் விசாரணைகள் ஊராட்சி ஒன்றிய ஆணையரிடம் ஒப்புவிக்கப் பெற வேண்டும். ஊராட்சிக்குரிய வருவாய்களை நேரிடையாக வசூலிப்பதற் குரிய அதிகாரத்தை, கூட்டுறவு அமைப்புகளுக்கு இருப்பது போல ஊராட்சி மன்றங்களுக்கு வழங்க வேண்டும். ஊராட்சி மன்றங்கள் தமது நிதி வசதியைப் பெருக்கிக் கொள்ளப் பேருந்து நிலையம் கட்டுதல், அங்காடிகள் கட்டுதல், கிராம எல்லைக்குள் வசிக்கவேண்டிய அரசு அலுவலர்கள், ஆசிரியர்கள் - காவல் துறையினர் ஆகியோருக்கு வீடுகள் கட்டுதல், பழத்தோட்டங்கள், மேய்ச்சல் தரைகள் அமைத்தல் இன்னபிற பணிகளுக்கு

என்று திட்டத்தின் அடிப்படையில் அரசு 50 சதவிகிதம் மான்யமும் மீதி 50 சதவிகிதம் கடனும் வழங்க முன் வரவேண்டும். கடன் வழங்க அரசுக்கு இயலாத நிலையிருப்பின் நாட்டுடைமை வங்கிகள் திட்ட அமைப்பில் ஒரு இலட்சத்திற்குள் மாவட்ட ஆட்சித் தலைவர் அவர்களின் ஒப்புதல் பெற்றும், ஒரு இலட்சத்திற்கு மேல் மூன்று இலட்சம் வரை ஊரக வளர்ச்சித்துறை இயக்குநர் ஒப்புதல் பெற்றும் பெற உரிமைகள் வழங்கலாம். ஓர் ஊராட்சி எல்லையில் வசிக்கும் எவருக்கும் ஊராட்சி மன்றங்களின் இசைவு அல்லது சான்று பெறாமல் அரசோ வங்கிகளோ கடன் வழங்கக் கூடாது.

ஊராட்சி மன்றத் தேர்தல்கள் ஐந்தாண்டுகளுக்கு ஒரு தடவை நடத்தப் பெறுதல் வேண்டும். இதில் எந்தக் காரணத்தை முன்னிட்டும் தவறக்கூடாது. ஊராட்சி மன்றத் தேர்தல்களை நடத்தும் பொறுப்பைத் தேர்தல் கமிஷனிடமே கொடுத்தல் நல்லது. இது ஓர் ஆலோசனையேயாம்.

## கூட்டுறவு

கூட்டுறவு நிறுவனங்களைப் பொறுத்தவரை கூட, ஊராட்சி மன்ற நிலையைப் போலத்தான் உள்ளது. பல்வேறு துறைகளில் பரவலாக அமைக்கப்பெற்ற - கூட்டுறவு சங்கங்கள் கவனிப்பின்றிக் காலந்தள்ளுவதை அறியாதார் யார்? சிறிய பெட்டிக் கடை வைப்பவனும் கூட வசதியாக வாழ்கின்றான். ஆனால் கூட்டுறவு நிறுவனங்களோ ஊசலாடிக் கொண்டிருக்கின்றன. ஏன்? பல கூட்டுறவு நிறுவனங்கள் அரசுச் சார்பில் பணிசெய்யும் சங்கச் செயலாளர்களுக்கு ஆயிரக்கணக்கில் ஊதியம் கொடுத்தும் கூட கூட்டுறவுத் தொழிற்சாலையினை நிலைநிறுத்தும் முயற்சி இல்லாமல் கவனக்குறைவுடன் நடத்தப்பெற்று இழப்புக்களைச் சந்தித்து மூடப்பெறுகின்றன. ஆனால் இந்த நிலைமைக்கு இந்த நிறுவனங்களை ஆக்கியவர்கள் யாதொரு

கவலையும் இன்றி ஊதிய உயர்வு, பதவி உயர்வு முதலியன பெற்று வருகின்றனர். ஏன் இந்த நிலை?

இந்தியாவில் - தமிழ்நாட்டில் கூட்டுறவு இயக்கம் தோல்வி என்றே பரவலாகப் பேசப்படுகின்றது. இன்று கூட்டுறவு இயக்கத்தில் பலருக்கு நம்பிக்கை இல்லை. நமது அரசுகளுக்கும் கூட்டுறவுத் துறை உயர் அலுவலர்களுக்கும் கூடக் கூட்டுறவில் நம்பிக்கை இல்லை. நடை முறை அப்படி இருக்கிறது. கடந்த கால் நூற்றாண்டுக்கு மேலாகக் கூட்டுறவு இயக்கத்தின் மூலம் சமூகப் பொருளாதாரம் வளரும் என்ற நம்பிக்கையுடன் ஊழியம் செய்து கொண்டு வரும் நமக்கும் கூட மனநிறைவு ஏற்பட்டிருப்பதாகக் கூறமுடியவில்லை. இதற்குக் காரணம் அரசு மட்டுமன்று, மக்களும் ஆவர். எப்போதும் அரசைச் சார்ந்து வாழ்கின்ற நிலையும் தனி உடைமைக் கோட்பாடும் கூட்டுறவு வளர்சிக்குத் தடை; அதைவிட "நான்" "நீ" என்ற பெருமைச் சண்டை கூட்டுறவு நிறுவனங்களில் தோன்றி வருகின்றன. நமக்குத் தெரிந்த ஒரு கூட்டுறவுத் தொழிற்சாலையில் 50 பேர் ஆண்கள் வேலை செய்கிறார்கள். இவர்களுக்குள் இருக்கும் அணுகுமுறைகளும் உறவும் குழுப்போட்டிகளும் அருவருக்கத்தக்க அளவுக்கு வளர்ந்து அடிதடி அளவுக்குக்கூடச் சென்றுவிட்ட வேதனையை மறக்க முடியவில்லை. உறுப்புகள் பலமாக இருந்தால்தானே உருவம் பலமாக இருக்க முடியும்? ஆனாலும் கூட்டுறவுத் துறையில் நமது நாட்டு மக்கள் நம்பிக்கை இழக்கக் கூடாது. அரசுகளும் கூட்டுறவுத் துறையை வளப்படுத்துவதன் மூலம்தான் நலிந்த மக்களுக்கு, குறிப்பாகக் கிராமப்புற மக்களுக்கு ஆன்மிக பொருளாதார வளர்ச்சிகளைத் தரமுடியும் என்று உறுதியாக நம்பி, அதற்குரிய வழிவகைகளைக் காணவேண்டும். ஏனெனில் கூட்டுறவே சமவாய்ப்புச் சமுதாயத்திற்குரிய ஒரே வாயில் என்பது வரலாறு காட்டும் உண்மை; அரசியல் பொருளா தாரச் சிந்தனையாளர்களின் கருத்தும் கூட.

"உலகத்தில் இதுவரை ஏற்பட்டுள்ள முன்னேற்ற மெல்லாம் கூட்டுறவின் அடிப்படையில் தோன்றியனவாகும். தோல்விகள் எல்லாம், வாழ்க்கையையும் நடவடிக்கையையும் உண்டாக்கும் பொருள்களிடையே கூட்டுறவு காணப்படா ததால் நேர்ந்ததவைகளாகும்." என்றார் எஸ்.கே. டே. "கூட்டுறவு இயக்கம் மிக முக்கியத்துவம் ஆகிவிட்டதை எல்லாரும் புரிந்து கொண்டதாகச் சொல்வதற்கில்லை" என்றார் மாமேதை லெனின். கூட்டுறவு, மக்கள் இயக்கமாக விளங்க வேண்டும். கூட்டுறவு அமைப்புகளில் அரசியல் கட்சிகள் தலையீடும், அரசின் அதிகாரங்களும் ஊடுருவுதல் கூடாது! கூடவே கூடாது. இதனால் அரசின் தொடர்போ, மேற்பார்வையோ, தணிக்கையோ கூடாது என்பதல்ல. அரசின் அணுகுமுறைகள் கூட்டுறவைப் பொறுத்தவரையில் குடியரசின் அடிப்படையான குடிமக்களின் நல்லிணக்க வாழ்க்கைக்கும். கூட்டுறவுப் பொருளாதார வளர்ச்சித் துறைக்கும் நிர்வாக முறைக்கும் பயிற்றுவித்து வழிகாட்டக் கூடியதாக அமையவேண்டும். எந்தக் காரணத்தை முன்னிட்டும் கூட்டுறவு அமைப்புகளின் நிர்வாகக் குழுவைக் கலைத்தல் – தனி அலுவலர் நியமித்தல் போன்றவற்றைச் செய்யக்கூடாது. இங்ஙனம் செய்வது மனித உரிமைகள் அடிப்படையிலும், அறநெறி அடிப்படையிலும் முற்றிலும் தவறானது. ஏனெனில் கூட்டுறவில் அதன் உறுப்பினர்கள் தங்களுடைய நிதி ஆதாரங்களைப் பங்குகளாக இட்டு வைத்துள்ளார்கள். அவர்களுடைய பொருளாதார வளர்ச்சியை அந்தக் கூட்டுறவு அமைப்பு உறுதி செய்துள்ளது. இந்நிலையில் கூட்டுறவு சங்கத்தினர்களை – கூட்டுறவு நிர்வாகிகளை விலக்குவது மரபல்ல.

மக்களும் கூட்டுறவைத் தங்களுடையதாகவும் பொது நலத்திற்கு உரியதாகவும் கொண்டு ஒத்திசைந்து வாழ்தல் வேண்டும். கூட்டுறவில் தனி நலத்திற்கும் பொது நலத்திற்கும் இடையே மோதல் ஏற்படும்போது, பொது நலத்திற்கே

முதன்மை இடம் வழங்கப்பெறுதல் வேண்டும். ஏனெனில், தன்னலத்தில் பொது நலம் அடங்காது. பொதுநலத்தில் தனி மனித நலம் அடங்கும்; மேலும் பத்திரமாகவும் இருக்கலாம். கூட்டுறவு நிறுவனங்கள் அங்கத்தினர்களின் போதிய நிதி ஆதாரங்களைப் பெறுவது வரவேற்கத்தக்கது.

கூட்டுறவு நிறுவனங்களுக்கு, அவற்றின் நோக்கம், நிதி ஆதாரம் பரிந்துரைகளுக்கு ஏற்ப அரசு குறைந்த வட்டியில் கடன் தந்து உதவவேண்டும். கூட்டுறவு வளர்ந்தபின் அரசின் பொறுப்பாகிய மக்கள் நல அரசாங்கம் சிறப்பாக அமையும். எனவே கூட்டுறவின் வளர்ச்சியே மக்கட் சமுதாய வளர்ச்சி; நாட்டு வளர்ச்சி. கூட்டுறவு, மகத்தான மக்கள் இயக்கமாக வளரவேண்டும். கூடித் தொழில் செய்யும் உழைப்பில் மகிழ்வோம்; தியாகம் செய்வதில் பெருமை கொள்வோம்.

## பள்ளிகள்

அடுத்து கிராமங்களில் வளரும் குழந்தைகள் தரமான கல்வி பெறுதல் வேண்டும். வளரும் தலைமுறைக்குக் கல்வியைத் தருதல் சமூகத்தின் பொறுப்பு; அரசின் கடமை. "இந்தியாவின் தலைவிதி அதன் பள்ளிகளில் நிர்ணயிக்கப் படுகிறது" என்பது கோத்தாரி கமிஷனின் கூற்று. மனிதனின் தரம் உயர்ந்தாலே முன்னேற்றம் கைகூடும். அதற்குக் கல்வியே துணை. இன்று கிராமங்களில் உள்ள தொடக்கப் பள்ளிகளின் நிலை இரங்கத்தக்கது. பல தொடக்கப் பள்ளிகளுக்கு உரிய கட்டடம் இல்லை; கற்பிக்கும் கருவிகள் - சாதனங்கள் இல்லை; மாணவர் ஆசிரியர் விகிதம் எழுதிக் காட்ட இயலாத அளவுக்குத் துன்பம் நிறைந்தது. முதல் இரண்டு வகுப்பு ஆசிரியர்களின் பணி, பொறுப்பு வாய்ந்த பணியாகும். இந்த வகுப்புகளில் கூட 90 மாணவர்களைக் கொண்ட வகுப்புக்கு ஓராசிரியரே உள்ளார். பல இடங் களில் ஓராசிரியர் பள்ளிகளே மிகுதியும் உள்ளன. தொடக்கப் பள்ளிகளில் குறைந்தது 35 மாணவர்களுக்கு ஓர் ஆசிரியர்

இருத்தல் நல்லது. இவ்வாறு இருந்தால் நல்ல வண்ணம் கற்றுத் தரலாம். எல்லாப் பள்ளிகளும் எல்லா வசதிகளும் பெற்று விளங்க வேண்டும். தொடக்கப் பள்ளி ஆசிரியர்கள், பணிசெய்யும் ஊர்களிலேயே குடியமர்தல் கட்டாயமாக்கப் படுதல் வேண்டும். நல்லாசிரியர் விருது வழங்குவதில் மாணவர்களின் தேர்ச்சியும் ஒரு அளவுகோலாக எடுத்துக் கொள்ளப் பெறுதல் வேண்டும். கிராமத் தொடக்கப் பள்ளிகள் ஊராட்சி மன்றத்தின் மேலாண்மைக்கு உட் பட்டவையாக அமைய வேண்டும். தரமான தொடக்கக் கல்வியே சமூக வளர்ச்சிக்கும் கிராமப்புற வளர்ச்சிக்கும் அடிப்படை என்பதை மக்களும், அரசும் உணர வேண்டும்.

## கலை – பண்பாடு

மானுட வாழ்க்கைக்குப் பொருள் இன்றியமையாதது. ஆனால் பொருளாதார வாழ்க்கையே மானுட வாழ்க்கை யாகாது. மானுடம் சிறப்புற அமைந்தால்தான் பொருளாதார வாழ்வு சிறப்பாக அமையும். ஆதலால் மானுடம் தன்னுடைய உயிராற்றலை வளர்த்துக் கொள்ள இலக்கியம், கலை, சமயம் சார்ந்த வாழ்க்கையும் தேவை, மானுடம் சோற்றால் மட்டும் ஆகாது. களிப்பும், மகிழ்வும், சமாதானமும். அமைதியும் தேவை. இத்தேவைகளை நிறைவு செய்ய கிராமத்தில் உள்ள திருக்கோயில் முன்வரவேண்டும். அல்லது சமயத் தொடர்பான கழகம் கண்டு அதன் வாயிலாக இந்தப் பணிகளை நிறைவேற்றலாம். ஆனால் 'சமயம்' என்னும் பொழுது விழிப்பாக இருக்க வேண்டும். அனைத்தும் சமயங்களின் கட்டமைப்பாகவே இந்த நிறுவனம் தோன்றிப் பணி செய்ய வேண்டும். கிராமப்புற இளைஞர்கள் கலை, நாடக உணர்வுகளை, திறனை வளர்த்து கிராம வளர்ச்சிக்குப் பயன்படுத்தலாம். அறநெறிச் சொற்பொழிவுகள் நடத்தலாம்: இலக்கிய ஆர்வத்தையும் வளர்க்கவேண்டும். கூட்டுப் பிரார்த்தனைகள், அருள் நெறி

சார்ந்த திருவிழாக்கள், தேசியத் திருவிழாக்கள் முதலியவற்றைச் சிறப்பாக நடத்த வேண்டும்.

## முடிவுரை

சமூகப் பார்வையில் கிராமங்களின் மேம்பாடு பற்றிய பல கருத்துக்களை எடுத்துக் கூறியுள்ளோம். இவையெல்லாம் தாங்கள் அறிந்தவையே. தாங்கள் அறிந்தவைகளையே தங்களுடைய மேலான நினைவிற்குக் கொண்டு வந்திருக் கின்றோம்.

பொதுவாக, இந்தியாவில் கிராம சமூக மக்களுக்கு சமூக நீதி வழங்கப் பெறவில்லை என்பது நமது கருத்து. கிராமப்புற வளர்ச்சிக்குரிய நிறுவனங்கள் உயிர்ப்பாக இயங்க வில்லை. ஆயினும் சென்ற காலத் தவறுகளை நினைத்து அழு வதால் என்ன பயன்? விளையும்? சுவாமி விவேகானந்தர்.

"We have wept long enough. No more weeping now; but let us stand on our feet and be men.

"நீண்ட காலம் அழுதுவிட்டோம்; இனிமேலும் அழ வேண்டாம்! அழுதது போதும். நமது கால்களையே நம்பி நிற்போம்! மனிதர்களாக நிமிர்ந்து நிற்போம்."

என்று சொல்லிய அருளுரையை நினைத்து எழுவோம்! விழிப்புடன் உழைப்போம்!

கிராம மக்களிடையே நிலவும் வறுமை, சமத்துவ மின்மை, மூடநம்பிக்கைகளை எதிர்த்துப் போராடிப் புதிய சமுதாயம் காண்போம்.

திட்டமும் செயல்முறைகளும் இணைந்த வாழ்வியலே வரலாற்றை மாற்றும்.

இந்திய நாட்டின் கிராம வளர்ச்சியில் சமூகப் பார்வை என்ற ஆய்வுப் பணிக்காகக் கூடியிருக்கும் அறிஞர் பெரு மக்களே! தங்களுடைய ஆய்வுக்கு நிறைய செய்திகள்

உள்ளன. ஆழமாகவும் அகலமாகவும் ஆய்வு செய்யுங்கள்! நாட்டு மக்களுக்கும் அரசுக்கும் ஏற்றுச் செய்யத்தக்க பரிந் துரைகளை இந்தக் கருத்தரங்கு வழங்கும் என்று நம்பு கின்றோம். இந்திய நாட்டின் கிராமப்புற வளர்ச்சிக்கு இந்தக் கருத்தரங்கு ஒரு ஆற்றல் வாய்ந்த உந்து சக்தியாக விளங்க வேண்டும்;

இன்றைய இந்திய மக்கள் அடியிற்கண்ட மறை மொழியை வாழ்க்கையின் மந்திரமாக ஏற்றுச் செயற்படுத்து வார்களாக! ஒழுகுவார்களாக!

*'ஸஹநாவவது, ஸஹ நௌ புனக்து,*
*ஸஹ வீர்யம் சுரவா வஹை*
*தேஜஸ் விநாவ தீதமஸ்து மா வித்விஷாவஹை*
*ஓம் ஷாந்தி ஷாந்தி; ஷாந்தி;*
*ஷாந்தி ஷாந்தி!*

"ஒன்று சேர்ந்து நம்மைக் காத்துக்கொள்வோம்;
ஒன்று சேர்ந்து உண்போம்;
ஒன்று சேர்ந்து விஷயம் பெறுவோம்;
ஒன்று சேர்ந்து அறிவொளி பெறுவோம்
ஒருவரையும் வெறுக்காமல் இருப்போம்;
ஓம் சாந்தி! ஓம் சாந்தி! ஓம் சாந்தி!

## 11. மானுடம் போற்றி வாழ்க!

"வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்!" என்பது திருமுறையின் ஆணை! ஆம் நமக்கு வாய்த்த சிறப் பான பிறவி. மானிடப்பிறவி! இந்தப் பிறவியும் ஒரேயொரு தடவைதான் வாய்க்குமாம்! "இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ?" என்றும் கவலைப்படுகின்றனர்! நாம் அனை வரும் இந்த மானிடப் பிறப்பின் பயனை நன்றாக

முழுமையாக அடையவேண்டும் என்பதை அறியவும், உணரவும், உணர்வுவழி வாழவும், வாழ்விக்கவுமே இந்தக் கருத்தரங்கு!

மனித வளம் அளப்பரியது; ஆற்றல் மிக்கது; இயக்கத் தன்மையுடையது. பிற துறை வளங்கள் அனைத்தும் எல்லைக்குட்பட்டவை. மனித ஆற்றல் அளவிறந்தது; நாளும் வளரும் தன்மையது. மனித வளம் பலப்பல. அவற்றுள் சிலவற்றையாவது சிந்தித்துப் பயன்கொள்ளுதல் நல்லது. மனிதவளம் முறையாகப் பயன்பட; மானிடத்தின் அறிவுக் கருவிகளாகிய மனம், புத்தி, சித்தம், துணிதல், மேற்செல்லுதல் (அகங்காரம்) ஆகியவற்றையும் செயற்கருவிகளாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகியவற்றையும் நாம் நமது மேலாண்மைக்குக் கொண்டுவர வேண்டும். செயற்கருவி களாகிய கண்களும் செவிகளும் வாயும் அறிவு ஆக்கத்திற் குரிய செயற்பாடுடையன.

இந்தச் செயற்கருவிகளையும் அறிவுக் கருவிகளையும் முறையாகப் பயன்படுத்த அறிவு தேவை. அறிவுடையார் எல்லாம் உடையார். கல்வி, கேள்வி, வாழ்தல் ஆகியன மூலம் அடையக்கூடியது அறிவு. மனித வளத்திற்கு முதலாக அமைந்தது சிந்தனை. சிந்தனை செய்தல் ஒப்பரிய செல்வம்! கற்றல் தொடர்நிலைப்பணி; அது அறிவு நூல்களையும் ஓதுத லாகும். கற்றார் வாய்க் கேட்டறிதல் கேள்வி! நம்முடைய சொந்த வாழ்க்கையை முறையாக வாழ்வதன் மூலம் அனுபவத்தால் அறிவது அறிவு. அறிவு வளரும் தன்மையது. ஒளியும் இருளும் போல அறிவும் அறியாமையும் போட்டி போடுவன! ஆதலால் விழிப்பாக இருந்து அறிவு பெறுதல் வேண்டும். ஒன்றைப் பிறிதொன்றாகத் தவறாகக் கருதுதலே அறியாமை! அறிவு வளர்ந்து வளர்ந்து முதிர்ச்சியடைந்து ஞானம் ஆகிறது! வாழ்க்கையின் பேறுகளில் சிறந்தது ஞானமே!

இத்தகு உயர்தர மதிப்பும் பயனும் உள்ள மானுடம் இன்று மதிப்பிழந்து துன்பங்களிலும் துயரங்களிலும் சிக்கித் தவிப்பது ஏன்? அறிவறிந்து ஆள்வினைகள் இயற்றி முறைப்படி வாழத் தெரியாமைதான் துன்பங்களுக்கெல்லாம் காரணம். இதற்கு மூலகாரணம் அறியாமையே! ஆதலால் கற்றல், கேட்டல் மூலம் தேவையான கல்வி அறிவைப் பெறுவது, நம் ஒவ்வொருவரின் கடமையுமாகும். மனிதவளம் நொய்ம்மைப்படாமல் பயன்பட உடல்நலம் பேணப்படுதல் வேண்டும். உடல் நலம் மனிதவளத்தின் முதற்பொருளாகும். உடல்நலம் குன்றின் உயிர் நலமும் குறையும்; செயற்பாடும் குறையும். அதனாலன்றோ, "உடம்பை வளர்த்தேன்; உயிர் வளர்த்தேனே!" என்றார் திருமூலர். உடல் நலமுடன் இருத்தற்கு முதல் வழி, உடலை உழைப்புக் கருவியாகக் கருதி முற்றிலும் பயன்படுத்தலாகும். அதாவது உழைத்தல், உழைக்காத உடல் நோய்வாய்ப்படும்; அழியும்.

அடுத்து, இயற்கையோடிசைந்த வாழ்வு வாழ்தல் அவசியம். கதிரொளி உடம்பில்பட உழைத்தல்; தூய காற்றில் தோய்ந்து உழைத்தல் நல்ல காற்றைச் சுவாசித்தல்; தூய தண்ணீர் அருந்துதல்; உடலுக்கு நலம் தரக்கூடிய - உழைக்கும் அளவுக்குத் தேவையான நல்லுணவு உண்ணுதல் ஆகியன உடல்நலம் பேணுதற்குரிய வழிகள்.

உடல்நலம் சீராக அமைய மனநலமும் ஒத்துழைக்க வேண்டும். மனத்தூய்மை உடல்நலத்திற்கு இன்றியமையாது வேண்டப்படும் ஒன்றாகும். மனத் தூய்மை பெருமுயற்சியுடைய வாழ்க்கை. வாழ்வியல் புறத்தே சென்றால், அஃதாவது அழுக்காறு, அவா, வெகுளி வயப்படும் பொறிகளும் புலன்களும் அளவுக்கு அதிக வேகமாகக் கூடுதல் வெப்பமடைந்த நிலையில் இயங்குதலால் எளிதில் நோய்ப்படும். ஒன்றைத் தவறாமல் உளம் கொள்க! நன்மை தரும் செயல்களைச் செய்யும் போது உடல் அதிக வெப்பமடைவதில்லை; வேகமாகவும் இயங்குவதில்லை; மூச்சுக் காற்றும்

அளவுக்குமேல் இயங்குவதில்லை. ஆதலால் உடல் நலத் தினையும் மன நலத்தினையும் பாதுகாத்தல் வேண்டும்.

மனநலத்திற்குத் துணையாய் அமைவது புத்தி. புத்தி, பகுத்தறியும் தன்மையுடையது; நன்று தீது அறியும் தன்மை யுடையது. புத்தியைச் சீருற வளர்த்துக் கொண்டால் வாழ்க்கையைப் பயனுடையதாக்கும் முயற்சியில் வெற்றி பெற்றால், வாழ்வு பெருவாழ்வாகும். சில சமயங்களில் புத்தியும் தவறு செய்யும். புத்தி, தனித் தன்மையுடன் அல்லது சித்தத்துடன் தொடர்பு கொண்டு இயங்கும்பொழுது சிறப்புற இயங்கும். ஆனால், பல சமயங்களில் ஆசைகள் காரணமாக, சார்புகள் காரணமாகப் புத்தி தவறு செய்வதும் உண்டு. ஆதலால் புத்தியை மட்டும் முழுதும் நம்பாமல் என்றும் எப்பொழுதும் தவறுசெய்யாமல் தவிர்க்கக்கூடிய சித்தத்தை - சிந்தனை செய்யும் அறிவுக் கருவியை முற்றாக வழிகாட்டுதலாகக் கொண்டால் உடல்நலம். மனநலம் ஆகியன சீராக அமையும். ஆனால் பெரும்பான்மையோர் சித்தம் என்ற ஒன்று இருப்பதாகவும் அறியவில்லை; அதனை உபயோகப்படுத்தவும் இல்லை என்பது வருந்தத்தக்க உண்மை. இந்தச் சித்தம் என்ற அறிவுக் கருவியின் செயற் பாட்டை "யோசித்துப் பாருங்கள்" என்று நமது முன்னோர்கள் சொன்னார்கள். இன்று யோசிப்பார் யார்? அப்படியே யோசித்தாலும் வேண்டுதல் வேண்டாமை கடந்து நின்று யோசிப்பவர் யார்? மனித வளத்திற்குரியன வற்றிற்கு அடிப்படை சிந்தனை. சிந்திப்போமாக! செயல்படு வோமாக!

அடுத்து, மனிதகுலத்தின் அடைவு, அறிவு! அறிவு ஒரு கருவி! அறிவு மானுடத்தைத் துன்பத்தினின்று மீட்கும்; இன்பநெறியில் உய்த்துச் செலுத்தும்." அறிவு அற்றம் காக்கும் கருவி" என்றார் திருவள்ளுவர். அறிவறிந்த ஆள்வினையே வாழ்க்கையின் உயிர்ப்பு. காலத்தையும் உழைக்கும் சக்தியையும் அவ்வப்போதே பயன்படுத்த வேண்டும். அறிவறிந்த

ஆள்வினையால் வாழ்க்கைக்கு இன்றியமையாதனவாகிய பொருள்கள் படைக்கின்றன. உடம்பினாலாய வாழ்க்கைக்கு உணவு தேவை. உணவையும் மற்ற நுகர்வுப் பொருள்களையும் படைத்தளிப்பது, அறிவறிந்த ஆள்வினையேயாம். இன்று நம்மில் பலர் வாழ்கின்றோமா! உலக வங்கியின் அறிக்கைப் படி 1988ஆம் ஆண்டில் ஏழைகள் மக்கள் தொகையில் 43.2 சதவிகிதம்; பரம ஏழைகள் 26.1 சதவிகிதம், ஆக நம்மில் பலர் ஏழைகளாகப் பிறந்து ஏழைகளாக வாழ்ந்து ஏழைகளாகவே சாகிறார்கள்! ஏன் இந்தக் கொடுமை? வேலையில்லாதோர் பலகோடி பேர்! தகுதிக்கும் வாழ்க்கைக்கும் ஏற்ப வேலை கிடைக்காதோர் பல லட்சம் பேர்! இந்த அவலம் தொடர் கதை ஆவானேன்? பல வீடுகளில் குடும்ப உறுப்பினர் களிடையே உணவில் வேற்றுமை வசதிக் குறைவே காரணம். குடும்பத்தலைவன் நன்கு உண்கிறான்! அதுபோல் உணவு அவன் குடும்பத் தலைவிக்குக் கிடைப்பதில்லை! வளரும் குழந்தைகளில் 17 விழுக்காட்டினருக்கு நல்ல சத்துணவு கிடைக்கவில்லை. இந்தத் துயரக்கதை ஏன் தொடர வேண்டும்? என்பதுதான் விஞ்ஞானி பேராசிரியர் ரங்க ராஜன் அவர்களின் வினா! அவர்களைச் சார்ந்த விஞ்ஞானி களின் வினா! நம்மை நாள்தோறும் காரைக்குடி மத்திய மின் வேதியியல் ஆய்வக விஞ்ஞானிகள், நெம்புகோலாக இருந்து தூண்டித்தான் பார்க்கிறார்கள்! நாம் அவர்களின் எதிர் பார்ப்புக்கு ஏற்ற வண்ணம் விழிப்படையவில்லை! பணி களைச் செய்யவில்லை என்பது உண்மை! ஆயினும் வளர்ச்சி மாற்றங்கள் ஏற்படாமல் போய்விடவில்லை. ஆயினும் போதாது! நம்முடைய மாவட்ட மக்களை வறுமையிலிருந்து மீட்கும்வரை, ஓயாமல் போராட வேண்டும். உண்டும் தின்றும் உடுத்தியும் மகிழக்கூடிய பொருள்களைச் செய்து குவிக்க வேண்டும்!

இந்த உலகியலில் தொகுப்புக்களாக உள்ளனவெல்லாம் எளிதில் அழிவதில்லை. தொகுப்புக்களால் பயன்பாடும்

அதிகம். கடல் கோடிக்கணக்கான நீர்த் துளிகளை உடையது. கோடிக்கணக்கான நீர்த்துளிகளும் ஒருங்கிணைந்து ஒரு பரப்பாக இருப்பதினால் கடல் கடலாகவும் இருக்கின்றது. வான்மழைக்கும் காரணமாகிறது. கடல்படு வளங்களை எழுதிக்காட்டவும் வேண்டுமா? அந்தக் கடலிலிருந்து ஒரு துளி தண்ணீர் கரையில் விழுந்தால் என்ன ஆகிறது? உடனே அத்துளி வற்றிப் போகிறது. அதுபோலத்தான் மானுட வாழ்வும். மானிடர் ஒரு சமூகமாக உறவு கலந்து இணைந்து வாழ்ந்திடின் வளம் கொழிக்கும். இத்தகு சமூக அமைப்பு இருந்த தொடக்க காலத்தில் மானுடம் வளமாக வாழ்ந்தது. காலப்போக்கில் தனி உடைமை உணர்வு மேலோங்கியதன் விளைவாக, கெட்ட போரிடும் கலகத்திற்கு இரையானது; வளம் குறைந்தது; வாழ்வு கெட்டது. நாம் யாராயினும் யாருக்கும் அந்நியரில்லை – நமக்குள் பிரிவில்லை – சண்டை இல்லை என்ற நிலை உருவானால்தான் மனித வளம் ஆக்கத் திற்குப் பயன்படும். ஆதலால் வளரும் பழத்தோட்டம்போல் ஒரு குலமாக ஒருங்கிணைந்து உழைத்து வாழ்வித்து வாழ்வோமாக!

மனித வளத்திற்கு எல்லாம் தலைமை மனிதன்! மனிதனின் ஆன்மா!அதாவது உயிர் இந்த இயற்கையிலமைந்தது. யாராலும் படைக்கப்பட்டதன்று. அழியக் கூடியதுமன்று. இந்த உயிர் சிற்றறிவு சிறு தொழில் உடையதாக அமைந்துள்ளது. இந்த உயிர் தனது அறிவை அகண்டமாக்கிக் கொள்ளவும் ஒப்பரிய சாதனைகள் செய்யவும் கடவுளை நாடுகின்றது. கடவுள் இயற்கையாயமைந்த ஒரு பொருள்; ஆற்றல் மிக்குடைய பொருள்; பேரறிவுப் பொருள்; கடவுள், தேவைகளுக்கு அப்பாற்பட்ட விழுமிய ஞானம்! கடவுள் மனிதனின் உயர்க்குயிராயிருந்து உதவுபவன். கடவுளின் வரம்பற்ற அறிவையும் ஆற்றலையும் சிந்தித்து அவ்வழி நமது பொறிகள் புலன்களில் அந்த அறிவையும் ஆற்றலையும் ஏற்று வாழ்வாங்கு வாழ்தலே ஆன்மநலம்; கடவுள் வழிபாடு

என்பது கடவுள் நெறியாகிய அன்பு நெறியில் அருள்நெறியில் நிற்றலேயாம். இந்த உயர் பதவிக்கு ஓரளவு துணை செய்வனவே சடங்குகள்! இன்று சடங்குகள் சமயமாகிவிட்டன!

உண்மைச் சமயநெறியில் நின்று எய்தற்கரிய மானுடம் போற்றி வாழ்வோமாக!

## 12. இளைஞர்களுக்கு வேண்டுகோள்!

மாணவ நண்பர்களே! நாட்டின் வரலாற்றை உற்று நோக்குங்கள்! சென்ற காலத் தலைமுறை அரசியல் விடுதலையைப் பெற்றுத் தந்து புகழ் சூடிக்கொண்டது! உங்களின் நேர் மூத்த தலைமுறையினராகிய நாங்கள் என்ன செய்தோம்? குறிப்பிடத் தக்கதாக எதுவும் செய்யவில்லை என்பதே உண்மை. நாட்டில் நாங்கள் உங்களுக்காக விட்டு வைத்திருப்பது சாதி, மதச் சண்டைகள்! எழுதப் படிக்கத் தெரியாத கோடானு கோடி மக்கள்! வேலையில்லாத் திண்டாட்டம்! வறுமைக்கோடு! கடன் சுமை ஆகியனதாம். இவைகளுக்குப்பாலும் சில நடந்திருக்கின்றன என்பதையும் மறந்துவிடக் கூடாது. அந்த நல்லனவற்றைக் கணக்கில் எடுத்துக் கொண்டு அவற்றை எங்களை மன்னிப்பதற்குக் காரணமாக்கிக் கொள்ளலாம்.

பழி சுமத்த மக்களை சுமந்து நாடு எய்த்து விட்டது! களைத்துவிட்டது. நீங்கள் கல்லூரி வளாகத்திலிருந்து நாட்டுக்கு வரும்போது நாட்டைத் தாங்கிப் பிடிக்கும் வலிமையுடைய தோள்களுடன் வெளிவருக! துணிவு கொண்ட நெஞ்சத்துடன் வருக! இன்று நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? எத்தகைய கல்வியை விரும்புகிறீர்கள்? எந்த வகையான நூல்களைக் கற்கிறீர்கள்? உங்கள் தனிப்பட்ட வாழ்க்கையைப் பற்றிய உங்கள் மதிப்பீடு என்ன? நாட்டு நலனுடன் மக்கள் சமுத்திரத்தின் நலனுடன் உங்கள் நலன் ஒத்துப் போகிறதா? என்றெல்லாம் நோக்கி, முரண்பாடுகளை அறவே நீக்கி, பொது நலன்தான் தனி மனித நலனை பேணும்

அரண் என்று முடிவு செய்வீர்களா? உங்கள் காலச் சமூகத்தை அதன் நிகழ்வுகளை எப்படிக் கணிக்கிறீர்கள்? இன்று இல்லாமல் நாளை இல்லை! ஆதலால், இன்று பட்டம் பெறுகிற மாணவர்களின் ஆர்வம் என்ன? குறிக்கோள் என்ன? என்ற வினாக்களுக்குக் கிடைக்கும் விடையைப் பொறுத்தே நமது நாட்டில் வரலாறு அமையும்.

நமது வாழ்க்கையை நாமே கட்டுமானம் செய்கிறோம் என்ற உண்மையை மாணவ நண்பர்களுக்கு நினைவூட்டு கிறோம். வாழ்க்கையின் ஒவ்வொரு நொடிப்பொழுதும் எண்ணுதல், கற்றல், கேட்டல், செயலாற்றல், உளப்பாங்கியல், இவைகளுக்கேற்ப வாழ்வு கட்டுமானம் பெறுகிறது. “ஒழுக்கம்” என்ற சொல் அகன்ற பொருளுடையது. “ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்” என்பது திருக்குறள். சௌத்தி ஸ்பென்சர் என்பாரும் “கல்வியின் குறிக்கோள் ஒழுக்க நெறிகளை வளர்த்து ஏற்குமாறு செய்வது” (Education has for its object the formation of character) என்றார். டிஸ்ரேலி என்ற அறிஞர் “ஒரு நாட்டின் தலைவிதி, அந்த நாட்டு மக்கள் பெறும் கல்வியையே சார்ந்திருக்கிறது” (Upon the education of the people of this country the fate of this country depends) என்று கூறிய அரிய வாசகத்தினை மாணவர்களுடைய கவனத்திற்குக் கொண்டு வருகின்றோம். நமது நாட்டுக் கல்வி முறையில் பலகுறைகள்!

கல்வித்துறை அகன்றது. நூல்களைக் கற்பதனால் பெறும் அறிவு மட்டும் கல்வி என்று கொள்வது சரியான கருத்தன்று. காண்கின்ற உலகத்தினை ஊடுருவிப் பார்ப்பதன் மூலமும், இந்த உலகத்தின் போக்கை வரலாற்றுக்கியைய உங்கள் வாழ்நிலையை மாற்றுவதன் மூலமும் பெறும் பட்டறிவும் கூடக் கல்வியேயாம்! இத்தகு பட்டறிவில் கிடைக்கும் அறிவு நுண்ணறிவு, வளரும் வாழ்வியல் மாற்றங் களுடையதேயாம். மாற்றங்கள் வளர்ச்சியின் பாற்பட்டன. இந்த உலகம் எப்படி இருந்தது? எப்படி இருக்கின்றது? என்று

உள்ளனவற்றைக் கற்கும் கல்வியால் பெறும் அறிவைவிட இந்த உலகம் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று எண்ணி முடிவெடுக்கும் அறிவே அறிவு? மாற்றும் முயற்சியே அறிவறிந்த ஆள்வினை! அத்தகைய அறிவியல் மேதைகளாக நீங்கள் விளங்க வேண்டும்.

இந்த உலகத்தை வெறுக்காதீர்கள்! இந்த உலகத்தைப் பரிவுடன் நேசிக்கக் கற்றுக் கொள்ளுங்கள்! உயிர்க் குலத்தி னிடத்தில் அன்பைப் பொழியுங்கள்! யாரோடும் பகை வேண்டாம்! வன்முறை வேண்டாம்! இங்குள்ள மாந்த ருக்குப் பணிசெய்ய விரும்புங்கள்! முயற்சிகளும் போராட் டங்களும்கூட நெடிய வாழ்க்கைப் பயணத்தில் துணையாக உடன் வரக்கூடியன. தக்க தோழர்களைத் தேர்ந்தெடுங்கள்! அத்தோழர்களிடம் அன்பு காட்டுங்கள்! இத்தகு வாழ்க்கையில் நீங்கள் அடியெடுத்து வைக்கும்பொழுது உங்கள் வாழ்க்கையின் குறிக்கோள் தடைபடும்; விலங்குகளை விட - மாக்களைவிட மக்கள் நிலை உயர்ந்ததாக விளங்குதல் நன்னெறிகளாலும் பண்பாடினாலுமேயாகும். நன்னெறிகளாவன: வாழ்க்கைப் பயணத்தின் தடங்கல் அல்லது வழி முறைகள். பண்பாடாவது, பாடறிந்து ஒழுகுதல், அதாவது (Behaviour Science) பழகும் பாங்கு கல்வி அறிவு சார்ந்து வாழும் வாழ்க்கையின் நோக்கம் புகழ்பெறுதல் அல்ல; பரிசுகள் பெறுவது அல்ல. நன்மை செய்ய வேண்டும். இங்கு வாழும் மக்களுக்கெல்லாம் நன்மை செய்ய வேண்டும் என்று எண்ணுவதும் செய்வதும் நன்னெறி. விலங்குகளிடமிருந்து மானிடன் பிரித்தறியப்படுவதற்குத் துணையாக இருப்பது அறிவும் உணர்ச்சியும் மட்டுமல்ல; அவனுடைய செயல்களே! நன்னெறிப்பண் பாட்டில் முதிர்ந்த நிலையே கல்வியின் ஆக்கம் கை கூடிய நிலை.

இன்று நம்முடைய நாட்டை ஒருமுறை உற்று நோக்குங்கள்! உங்களுக்கு மனநிறைவு ஏற்படுகிறதா? நிச்சயம் ஏற்படாது. எங்கும் நெறிமுறை பிறழ்ந்த வாழ்வு உயர் மரபு களை இழந்த சனநாயகச் செயல்முறைகள்! வறுமைக்

கோட்டிற்குக் கீழ் கோடானு கோடி மக்கள்; எண்ணற்ற இளைஞர்களின் இளமை, பாலைவனத்தில் காயும் நிலவெனப் பாழாகிறது. 20 கோடி இளைஞர்களுக்கு வேலை வாய்ப்பு இல்லை. உழைத்து வாழும் உரிமை கிடைக்க வில்லை. வாழ்க்கை முழுதும் பல்வேறு பாத்திரங்கள் வந்து வாழ்க்கையை வளப்படுத்தும் மகளிர்க்குப் பண மதிப்பீட்டுச் சமுதாயம் விளைத்திருக்கும் இன்னல்கள் பலப்பல. அவர்கள் வாழ்க்கையில் என்று உரிமை மகிழ்வு பொங்கப் போகிறதோ? எங்கும் சாதிப் புன்மைகள்? மதபேதங்கள்! அதேபொழுது, ஆடம்பரமான வாழ்க்கைப் போக்குகள்! இன்று படைப் பாக்கம் வளரவில்லை! படைப்பாற்றலில் வேட்கையில்லை! எங்கும் நுகர்வுப் போக்கு மேம்பட்டு வளர்ந்துள்ளது. இது வரவேற்கத் தக்கதன்று. நீங்கள் கடன்காரர்களாகப் பிறந்து கடன்காரர்களாக வளர்க்கப்படுகிறீர்கள்! வாழ்கிறீர்கள்! போதும் போதாதற்கு அந்நிய மூலதனத்திற்கு வேறு நடை பாவாடை விரித்து வரவேற்கப் போகிறார்கள்! மக்களுக்கு லாட்டரிச் சீட்டுக்களையும் மதுக்கடைகளையும் களி யாட்டங்களையும் காட்டி அவர்களை அறிவும் ஆளுமையும் அற்றவர்களாக்கி ஆளப் பார்க்கும் கொடுமை தாங்க முடியாதது. தூறலால் பயிர்கள் வளர்ந்துவிடா! நாட்டை இலவசங்கள் வளர்த்துவிடா. உரிமைசார்ந்த வாழ்க்கையும் கடமை தழுவிய வாழ்க்கையுமே வளர்க்கும்! இந்த உணர்வு உங்களிடத்தில் நீங்காமல் நிலைபெற்றுப் புதிய பொலி வுடைய பாரதத்தைப் படைக்க போராடுவீர்களாக! இது தொடர்பாக மில்டன் கூறியிருப்பதை இங்கே குறிப்பிடு கின்றோம்.

> "முழுமைத் தன்மை வாய்ந்ததும் கருணையுள்ளமும் கொண்ட கல்வி, ஒரு மனிதனை நியாயத் தன்மை யுடைய-திறமையுடைய செயல்களைச் செய்யச் செய்வ துடன் தன்னுடைய வாழ்கையிலும், பொது வாழ்க்கை யிலும் சண்டைகளின்றிச் சமாதானம் காப்பதிலும் நடந்து கொள்ளக் கற்றுத் தரும்"

(I Call therefore a complete and generous education which fits a man to perform justly skilfully and magnanimously all the offices, both private and public, of peace and war") என்பது மில்டன் வாக்கு;

கடவுள் ஒருவரே, அவரும் ஞானத்தின் திருவுரு; பேரறிவு; வாலறிவு; இயற்கையிலே எல்லையில்லா இன்ப முடையான். அவனை நாம் வழிபடுவது எல்லாம் அவனுடைய அறிவை, ஆற்றலை நாமும் பெற்று அந்த அறிவு. ஆற்றலை நம்முடைய பொறிபுலன்களில் தேக்கி வெற்றி பொருந்திய மானுடமாக வாழ்வதற்கேயாம். இந்த ஆன்மவியல் வாழ்க்கை ஒன்றி இருத்தலால், உள்ளக்கிழியில் ஓயாது உய்த்துணர்வதால் அக்கடவுளின் தண்ணருளில் பலகாலும் நனைந்து எழுந்து சிந்திக்க வேண்டும். இத்தகு கடவுள் நம்பிக்கையிருந்தால் சண்டைகள் ஏன் வருகின்றன? சச்சரவுகள் ஏன் வருகின்றன? இன்று சமயங்கள் வாழ்வாக இல்லாமல் ஆதிபத்திய நிறுவனங்களாகி மக்களுக்கு நலம் பயக்கும் நெறியிலிருந்து பிறழ்ந்து விட்டன. மதங்களின் இரும்புப் பிடியிலிருந்து விலகி, சமயச் சார்பற்ற சீலத்தை வாழ்க்கையில் துணிவுடன் ஏற்றுக் கொள்ளுங்கள்! பாரதி சொன்னபடி,

"ஒன்று பரம்பொருள்; நாம் அதன் மக்கள்".

என்பதே நமது நெறியாக அமைதல் வேண்டும்.

இந்தியாவின் பாரம்பரியமான சமயச் சார்பற்ற தன்மையையும் ஒப்புரவு நெறி நின்றொழுகும் பண்பையும் காப்பாற்றும்படி கேட்டுக் கொள்கின்றோம்.

தாய்மொழியில் சிந்தனை செய்யுங்கள்! தாய்மொழி வாயிலாகக் கற்று அறிவை விரிவாக்குங்கள்! நமது மொழியில் இரண்டாயிரம் ஆண்டுகாலமாகவே மனித நேயச் சிந்தனைகள், பொதுமைக் கருத்துக்கள் தோன்றி வளர்ந்து வந்துள்ளன. ஆயினும் அந்தச் சிந்தனைகளைச் செரிமானம் செய்து கொண்டு வாழ்க்கையில் நடைமுறைப் படுத்தாததால்

நமது நிலை, பின்தங்கிவிட்டது. இதற்குக் காரணம் நமது மரபு களையும் மீறி, தலைவிதித் தத்துவம் நம்முடைய வாழ்க்கையில் ஊடுருவியதூஉம் "எல்லா முயற்சிகளும் கடவுள் மேற்றே; மனிதனால் ஆவது ஒன்றும் இல்லை" என்ற பொருந்தாக் கொள்கை வழிபட்டதனாலும்தான். அப்பரடிகள்.

*நாமார்க்கும் குடியல்லோம்; நமனை அஞ்சோம்*
*நரகத்தில் இடர்ப்படோம்; நடலையில்லோம்*
*ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்*
*இன்பமே எந்நாளும் துன்பமில்லை.*
*தாமார்க்கும் குடியல்லாத் தன்மையான*
*சங்கரன்நற் சங்கவெண் குழையோர் காதிற்*
*கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்*
*கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே!*

(நாலாந்திருமுறை 961.)

என்று அருளியமையாலும் அறிந்துணர முடிகிறது. செழுந் தமிழ் வழக்காற்றில் முகிழ்த்த சமயம் மானுடத்தைப் போற்றுவது. மானுடத்திற்குக் கடவுள் துணை என்பதே கருத்து. கடவுள் துணை என்பதனாலேயே பயன்படுத்து வானைப் பொறுத்துத் துணை பயன்படும் என்பதைக்கூறி விளக்க வேண்டுமா?

ஆதலால், தொடர்ந்து நல்ல நூல்களைப் படியுங்கள்! படித்தார் வாய்க் கேளுங்கள்! பக்கலிலுள்ள மத்திய மின் வேதியியல் ஆய்வக விஞ்ஞானிகளுடன் தோழமை பூணுங்கள்! வாழ்க்கையை அறிவார்ந்த நிலையில் அணுகி வாழ்க்கைச் சிக்கல்களுக்கு அறிவார்ந்த நிலையில் தீர்வு காண முயலுங்கள்! நாட்டை வளப்படுத்தும் முயற்சியில் ஈடுபடுங்கள்! எந்தக் கடமையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டாலும அதனை உளமாரச் செய்யுங்கள்! நாட்டின் வரலாற்றை உய்த்துச் செலுத்தும் பேராற்றலாக நீங்கள் விளங்க வேண்டும். இதுவே நமது விருப்பம்; விழைவு; வேண்டுகோள்!

# 48. *வாழும் நெறி

வாழும் நெறி! இப்படி ஒரு சிந்தனை! ஏன்? எதனால்? ஆம்: மனிதகுலம் தோன்றிப் பல்லாயிரம் ஆண்டுகள் உருண்டோடிவிட்டன. கோடானுகோடி மக்கள் பிறந்து வளர்ந்து உண்டு, உறங்கி, இனம் பெருக்கி வேடிக்கை மனிதர்களாகவும் வெற்று மனிதர்களாகவும் செத்துப் போய் செத்துப் போய் சுடுகாட்டுச் சாம்பலாகிவிட்டனர். பிறந்தவர்களில் பலர் செத்துத்தான் போயினர். ஒரு சிலரே காலமாயினர்! ஆனால் இன்றோ பலரையும் காலமாயினர் என்று கூறுதல் மரபாகிவிட்டது! இது தவறு! வாழ்ந்தவர்கள் மட்டுமே காலமாக முடியும். ஆம்! வாழும் நெறி என்று ஒன்று இருக்கிறது! அதனால் மாணிக்கவாசகர். "வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே!" என்று இரக்கப்படுகின்றார்! திருவள்ளுவர், "வாழ்வாங்கு வாழ்தல்!" என்று கூறினார். வாழ்வாங்கு வாழ்தலே வாழும் நெறி!

இந்த மானுடப் பிறவி தற்செயலாகவோ விபத்தின் காரணமாகவோ அமைந்ததல்ல. இஃது ஓர் அரிய வாய்ப்பு. ஒரே ஒரு தடவை மட்டுமே வழங்கப்பெறும் வாய்ப்பு. இந்தப் பிறவியை மதித்துப் போற்றிப் பயன்கொள்ளுதல் கடமை, பொறுப்பு. அதனால் எவ்வளவு நாள் வாழ்ந்தோம் என்பதல்ல; எப்படி வாழ்ந்தோம்? என்பதே கேள்வி! வாழ்ந்த காலம் எந்த முத்திரையைப் பெற்றது? வாழ்ந்த காலம் ஏதாவது அடையாளங்களைப் பெற்றதா? நம் பெயர் காலந்தோறும் பேசப்படுமா? சுடுகாட்டு எல்லையுடன் மடிந்து போதுமா? என்றெல்லாம் சிந்திப்பவர்கள் வாழும் நெறி பற்றிக் கவலைப் படுவார்கள்.

மானுடம் அற்புதமான பிறப்பு. எண்ணி எண்ணி மகிழ வேண்டிய பிறப்பு. அறிவுக் கருவிகள், செயற் கருவிகள்

* தூத்துக்குடி வானொலிக்கு எழுதியது

உடைய பிறப்பு. மனிதன் பெற்றுள்ள மூளை, அளவற்ற ஆற்றலுடையது. உடற் பருமனும் வலிமை மிகுதியும் உள்ள கொடிய நிலங்களைக்கூட அடக்கி ஆளக்கூடிய ஆற்ற லுடைய மனிதன் தன்னை நெறிப்படுத்திக் கொள்ளத் தவறி வீழ்ந்து வீணே மடிந்து போகிறான். மானுடத்திற்கு வாய்த்துள்ள சிந்திக்கும் ஆற்றலும் அறிவு பெறும் வாயில்களும் அளவற்ற சாதனைகளைச் செய்யத் துணை செய்வன. ஆனால் இன்றோ, மனிதன் சிந்திக்கவே மறுக்கிறான். சிந்திக்கவே மறந்துவிட்டான். அறிவைத் தேடும் வேட்கையே இல்லை. "சீனாவில் இருந்தாலும் அறிவைத் தேடு" என்றார் எம்பெருமானார் நபிகள் நாயகம். இன்று அறியாமையை அறிவு என்று நம்பிக்கொண்டிருக்கின்றான். பழக்க வழக்கங்கள் என்ற ஊழ்வழித் தடத்திலேயே சுற்றிச் சுற்றிக் கொண்டிருக்கிறான். புதியன சிந்திப்பதில்லை. புதியன விரும்புவதில்லை. நல்ல நூல்களைக் கற்பதில்லை. கசடறக் கற்கக்கூடிய நூல்களைத் தேர்ந்தெடுத்துக் கற்பதில்லை. ஒரோ வழிக் கற்றாலும் அசைபோடுவதில்லை: பயன்படுத்துவ தில்லை. கம்பனின் கவலை – 'மானுடம் வென்றதம்மா' என்ற கனவை நினைவாக்க முயல்கின்றான் இல்லை. ஐயோ! பாவம்! அற்புதமான மானுடப் பிறவியைச் சுடுகாட்டில் எரிப்பதற்காகவே வளர்க்கின்றான்; வளர்க்கப்படுகின்றான்!

மானுடம் வெற்றிபெறக் கல்வி தேவை. 'கற்க' என்றார் திருவள்ளுவர். 'கற்க' என்ற சொல் ஆணையிடும் தொனியில் அமைந்திருக்கிறது! ஆம்! கற்க! நல்ல நூல்களைத் தேர்ந்தெடுத்துக் கற்க! நாள்தோறும் கற்க! வாழ்நாள் முழுதும் கற்க! உன் உள்ளக் குற்றங்களை நீக்குதலுக்குரிய நூல்களைத் தேர்ந்தெடுத்துக் கற்க! நல்ல நூல்கள் ஆன்மாவுக்கு மருந் தனையவை. ஆம்! மானுடத்தின் வெற்றிக்குத் தடை உள்ளக் குற்றங்கள் தாம்!

ஆன்மாவின் குற்றங்களில் தலையாயது பயம். பயத்திலிருந்து மீள வேண்டும். பயத்தை அச்சம் என்றும்

கூறுவர். திருக்குறள் "அச்சமே கீழ்களது ஆசாரம்" என்றது. அஞ்சி அஞ்சிச் சாவதைப் பேதைமை என்றும் 'அச்சம் தவிர்' என்றும் பாரதி கூறினான். ஆதலால், பயத்தை நீக்குதற்குரிய நூல்களைத் தேர்ந்தெடுத்துக் கற்று, பயத்திலிருந்து விடுதலை பெறவேண்டும். பயத்தைத் தொடர்ந்து வரும் அழுக்காறு, அவா, வெகுளி முதலாய தீமைகளையும் அறவே அகற்றுதல் வேண்டும். இதற்குரிய சாதனம் கல்விதான்; கற்றல்தான்! திருக்குறள்.

> "கற்க கசடறக் கற்பவை கற்றபின்
> நிற்க அதற்குத் தக"
>
> –குறள் 391

என்றது. மனிதன் ஓர் அறிவு ஜீவி. மனிதன் அறிவு பெற்றால் தான் மனிதனாகிறான். இல்லையானால் அவனைக் கால் நடை என்றுதான் கூறவேண்டும். நாடு தழுவிய, தழீஇய வாழ்க்கைக்குக் கல்வி தேவை. நாள்தோறும் மரணம் வரையில் நல்ல நூல்களைத் தேர்ந்தெடுத்துக் கற்பதே வாழும் நெறி.

மனிதன் கற்றால் போதாது. அறிவு வேண்டும். கல்வி, அறிவு பெறுதலுக்குரிய வாயில். ஆனால், கற்றவர்கள் எல்லாம் அறிவுடையவர்களாகி விடுவதில்லை. "கற்றறிந் மூடர்" என்பர் தாயுமானார். "பல கற்றும் கல்லார் அறிவிலாதார்" என்று திருக்குறள் கூறும். இன்று பலருக்கு அறிவு என்றால் என்ன என்பதே தெரியாது. அறிவு விவரங்கள், தகவல்கள் தெரிந்து கொண்டு அவற்றைச் சொல்வதல்ல. அறிவு, வினாக்களுக்கு விடை கூறுவது அல்ல. அல்லது நூல்கள் எழுதிவிடுவதும் அல்ல. அறிவு ஒரு சிறந்த கருவி. அறிவைக் கருவி என்று கூறிய முதல் சிந்தனையாளர் திருவள்ளுவர்தான். அறிவு ஒரு கருவி. மனிதன் அறிவைக் கருவியாகக் கையாளத் தொடங்கிய பிறகுதான் வரிசையாகப் பலப்பல புதுப்புதுக் கருவிகள் தோன்றி வளரலாயின. மனிதனுக்குக் கருவிகளுடன் தொடர்பு ஏற்பட்ட பிறகுதான்

வளரும் நிலையில் முற்றிலும் விலங்கிலிருந்து வேறுபடு கிறான்; வேளாண்மைத் தொழில் வளர்கிறது. கற்காலம், உலோக காலம் என்று வெகுவேகமாக மனித உலகம் மாறி வளர்ந்து வந்திருக்கிறது. இன்று மனிதன் இயந்திர யுகத்தில் வாழ்கிறான். இதற்கு காரணம் அறிவு என்ற கருவிதான்! அறிவுதான் மனித உலகத்தை அழிவிலிருந்து மீட்டிருக்கிறது; மனிதனைத் துன்பத்திலிருந்தும் துயரத்திலிருந்தும் காப்பாற்றி இருக்கிறது.

*"அறிவற்றம் காக்குங் கருவி செறுவார்க்கும்*
*உள்ளழிக்க லாகா அரண்"*

–குறள் 421

எனவே அறிவுடையராதலே வாழும் நெறி.

பல நூல்களைக் கற்கலாம். கருத்துக்களை அறியலாம்; உணரலாம். அந்தக் கருத்தை, கருத்தின் பொருளை நமக்கு உரிமையாக்கிப் கொள்ளும் பொழுதே அந்த நூல்களும், கருத்தும், கருத்து வழியிலான அறிவும் நமக்கு உரிமையாகும். வாழ்க்கையில் துறைதோறும் துணை செய்யும். உணவு வலிமையாகாது. உணவு செரிமானம் ஆகவேண்டும். செங்குருதியாக மாறவேண்டும். உடலுறுப்புக்கள் தோறும் அந்தச் செங்குருதி பாய்தல் வேண்டும். அப்போதே வலிமை கிடைக்கிறது. அதுபோலவே கற்ற கல்வியை, கருத்துக்களைச் சோதனை செய்தல் வேண்டும். அப்போதுான் கல்வி அறிவாக மாறும்.

அறிவைச் செயற்படுத்தி உறுதி செய்யும் பொழுது அல்லது நிருபணம் செய்யும் பொழுது அறிவியல் ஆகிறது. நன்றாக ஆழ்மனத்தில் சிந்தித்த சிந்தனை கருத்துருப் பெற்று பல்வேறு சோதனைகளுக்கு ஆளாகி உறுதிப்படுத்தப் பெற்ற நிலையில் வாழ்க்கையில் நேரிடையாகப் பயன்பாட்டுக்கு வரும் நிலையில் அறிவியலாக இடம் பெறுகிறது. அறிவியல் சாராத வாழ்க்கை மூட நம்பிக்கைகளாலும் தோல்வி மனப் பான்மைகளாலும் கெடும்; அழியும். அன்பைப் பற்றிப்

படித்தல் கல்வி. அன்பு இன்னதென்று உணர்தல் அறிவு. அன்பை எப்படிக் காட்டவேண்டும் என்று ஆராய்ந்து அறிந்து அன்புக்கு இடையூறு ஏதும் வராமல் தொடர்ந்து அன்பு காட்டுவதும் வளர்த்துக் கொள்வதும் பாதுகாத்துக் கொள்வதும் அறிவியலாகும். இத்தகு அறிவியலைச் சார்ந்து வாழ்தலே வாழும் நெறி.

அறிவியல் ஓர் உண்மை. அது தானே இயங்காது. அதை இயக்க மனிதனின் மதிநுட்பமும் ஆற்றலும் தேவைப்படும். இந்த உலகத்தின் மாபெரும் இயக்க சக்தி ஆற்றல்தான். அந்த சக்தி – ஆற்றல் ஆள்வினையாக உழைப்பாக மாற்றம் பெறுகிறது. அறிவறிந்த ஆள்வினை என்பார் திருவள்ளுவர். மனிதத்தின் வெற்றி பொருந்திய பெரு வாழ்வு உடைமை களால் அல்ல; விளம்பரங்களால் அல்ல. அறிவியல் சார்ந்த உழைப்பிலேயே இருக்கிறது.

“ஊழ்” – “தெய்வம்” என்றெல்லாம் சோம்பல் தனத்தை மூடி மறைப்பது மன்னிக்கமுடியாத குற்றம். “ஊழ்” என்று சொல்லி உறங்குபவர்கள். கூழுக்கு அலைவார்கள். ஏழரையாட்டைச் சனி என்பர். அவர்களால் ஏழேழ் பிறப்பும் தலையெடுக்க இயலாது. அறிவறிந்த ஆள்வினையுடன் சலனமின்றி, அவநம்பிக்கையின்றி, இடையீடின்றி உழைத்துக் கொண்டே இருக்கவேண்டும். நாளும் உழைப்பு, அறிவறிந்த ஆள்வினை வளர வேண்டும். நேற்று உழைத்தது போலவே நேற்று உழைத்த பாங்கிலேயே, உழைத்த போக்கிலேயே, உழைத்த அளவிலேயே உழைத்தல் கூடாது. அங்ஙனம் உழைத்தால் வளரும் உலகத்துக்கு ஈடு கொடுக்க முடியாது. அதுமட்டுமல்ல. நாள்தோறும் வளராத உழைப்பால், காலப்போக்கில் சோம்பல் நிறைந்த வாழ்க்கையாகிப் “போதும் என்ற திருப்தி மனம்” வந்துவிடும். ஆதலால், உயிர்ப்புள்ள மனிதனின் வாழும் நெறி அறிவறிந்த ஆள்வினை இயற்றிப் பொருள் ஈட்டிப் புகழ்பட வாழ்தலேயாம்.

வாழ்க்கைக்குப் பொருள் இன்றியமையாதது. "பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை" என்று திருக்குறள் கூறுகிறது. "பகடு நடந்த கூழ் பல்லாரோடு உண்க!" என்பது சங்க இலக்கியம். திருமுறை

"பொன்னும் மெய்ப்பொருளும் தருவானை
போகமும் திருவும் புணர்ப்பானை"

என்றது. ஆதலால் பொன், பொருள் இவற்றால் அமையும் இன்பம் வெறுக்கத் தக்கதன்று. மேலும் அறவழியில் பொருளீட்டி முறையாக நுகர்ந்து வாழ்த்தல் அப்பொருள் இன்ப அன்பு நிலை எய்துதற்குரிய சாதனமும் ஆகும். இடைக் காலத்தில் "வாழ்க்கை நிலையில்லாதது;" "பொன் நிலையில்லாதது" என்ற கருத்து பரப்பப்பட்டது. இந்தக் கருத்து முற்றிலும் பிழையன்று. நிலையில்லாதது என்ற கருத்து நூற்றுக்கு நூறு உண்மை. ஆனால் அவை பயனற்றவை. தேவையற்றவை, கூடாதவை என்பது முன்னோர் கருத்தன்று.

"அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல்" -குறள் 333

என்று திருக்குறள் கூறும். ஆதலால், மானுட வளர்ச்சி பொருளைச் சார்ந்தது. பொருளாக்கத்தைப் பொறுத்தது. அதனால் திருக்குறள், "செய்க பொருளை" என்றும் "போற்று வார்கள் பொருள் உண்டு" என்றும் கூறியது. ஆதலால், பொருளை உற்பத்தி செய்து போற்றி வாழும் நெறியே திருவள்ளுவர் நெறி.

பரந்த மக்கள் சமுதாயத்தில் 'வீடு' தான் கடைசி எல்லையில் உள்ள ஒரு பகுதி. வீடு, கணவன் மனைவி என்ற பொறுப்புள்ள இரண்டு உறுப்பினர்களைக் கொண்டது. குழந்தைகள் - பேணப்படுபவர்கள்; வளர்க்கப்படுபவர்கள். குடும்பம் மகிழ்ச்சியும் அமைதியும் நிறைந்த சூழலுடையதாக அமையவேண்டும். கணவன் - மனைவி இடையே உள்ள

உறவு பாலியல் உறவு மட்டுமல்ல. பாலியல் உறவு வாழ்க்கையின் ஒரு பகுதி. கணவனும் மனைவியும் பொருள் ஈட்டுதல், பாதுகாத்தல், முறையாக - சிக்கனமாகச் செலவு செய்தல் ஆகிய பொருளாதாரக் கடமைகளைக் கலந்து செய்தல் வேண்டும். நல்ல நூல்களைக் கூடியிருந்து படித்தல், படித்த கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ளுதல் மூலம் அறிவையும் திறனையும் வளர்த்துக் கொள்ளுதல் வேண்டும்; நலத்துறைகள் அனைத்திலும் ஒருவரை ஒருவர் பரஸ்பரம் பாதுகாப்பதில் அக்கறையும் காட்ட வேண்டும். நாட்டுக்கு அணி நலம் செய்யும் நல்ல பிள்ளைக்கு பெற்றோர்களாக வேண்டும். ஆண்டு பலவாக நரையும் மூப்புமின்றி வாழ முடியும். எப்போது? வீட்டில் மாட்சிமைக்குரிய மனைவியும் குழந்தைகளும் இருந்தால் முடியும் என்று பிசிராந்தையார் கூறுகின்றார். அறநெறிப்பட்டதே இல்வாழ்க்கையென்பது திருக்குறள் காட்டும் வாழ்க்கை நெறி.

மக்கள் கூடி வாழப் பிறந்தவர்கள். குடும்பம், சுற்றம், விருந்தினர் என்ற படிமுறையில் வளர்ந்து சமுதாயமாக உருப்பெறுகிறது. இந்தியாவில் இன்னமும் இயல்பாக உருவாகவேண்டிய சமுதாயம் உருவாகவில்லை. ஏன்? இந்த நாட்டில் ஜாதி வேற்றுமைகளும், மத வேற்றுமைகளும், பொருளாதார ஏற்றத் தாழ்வுகளும், பதவி, சுரண்டல், ஆசை காரணமாக நாள்தோறும் காளான்களைப் போலத் தோன்றும் அரசியற் கட்சிகளும் இந்தியாவில் சமுதாயம் உருவாகத் தடையாக உள்ளன. இந்தத் தடைகளை எதிர்த்துப் போராடினால்தான் இந்தச் சமூகத் தீமைகள் அறவே அகன்றால்தான் இந்திய சமுதாயம் உருவாகும்.

"எல்லாரும் ஓர் குலம்; எல்லாரும் ஓர் இனம்
எல்லாரும் இந்திய மக்கள்"

என்ற நிலை உருவாகும்.

இந்தக் குறிக்கோளுடன்தான் சங்க காலத்தில் காணப் பெறாத ஒப்புரவு நெறியைத் திருக்குறள் அறிமுகப்படுத்து கிறது. திருக்குறள் நெறியில் பரஸ்பரம் ஒருவருக்கொருவர் கடமைகளும் செய்தற்குரியவர்கள், உரிமைகளைப் பெறுதற்கும் உரியவர்கள். “ஒருவர் எல்லாருக்காகவும், எல்லாரும் ஒருவருக்காகவும்” என்ற மார்க்சிய நெறியே திருவள்ளுவரின் வாழும் நெறி. சமூகம், சமுதாயம் வலிமையாக இருந்தால்தான் நாடு வலிமையாக இருக்கும். நாட்டின் முன்னேற்றப் பணிகள் இடையீடின்றி நடைபெறும். அப்படியல்லாது ‘சமுதாயம்’ உருவாகத் தவறிவிட்டால் கொடுங்கோல் ஆட்சி வரும்; கலகங்கள் நடக்குங் களவும் காவலும் நடைபெறும். காவலர்கள் பெருகி வளர்வர். சிறைச்சாலைகள் நிரம்பும்.

திருக்குறள் நூல் சமுதாய நூல்; திருவள்ளுவர் நெறி சமுதாய நெறி. சமுதாயத்தைத் தொடர்ந்து நாடு வருகிறது. நமது நாடு - தாய் நாடு. இந்தியா. நாட்டுப் பற்று வேண்டும். நமது நாட்டைத் திருக்குறள் நெறியில் நாடா வளத்தனவாக ஆக்க வேண்டும். வளர்ந்த நாடுகள் வரிசையில் விரைவில் நாட்டைச் சேர்க்க வேண்டும். நாட்டுப் பற்றினை வற் புறுத்துவது திருவள்ளுவர் நெறி. இதுவே வாழும் நெறி.

பரபரப்பில்லாமல் சிந்தனை செய்வோம்! வெறும் ஆசைகளாலும் உணர்ச்சிகளாலும் தூண்டப்பெற்ற வாழ்வு என்னாகும்? திருஞானசம்பந்தர் அருளியதைப் போல “சாநாளும் வாழ் நாளும்” யாரறிவார்? ஆதலால், நாம் இன்று வாழ்வது உண்மை. நமக்கு வாய்த்திருக்கும் வாய்ப்புக்களும் அருமையானவை. ஏன் காலம் கடத்த வேண்டும். இன்று நன்று, நாளை நன்று என்று எண்ணிக் காலத்தைப் பாழடிப்பானேன்? இன்றே வாழத் தொடங்குவோம்! வாழத் தொடங்கியதன் முதற்படியாகக் குறிக்கோளைத் தெளிவாகச் சிந்தித்து முடிவு செய்வோம்! அக்குறிக்கோளை நோக்கி நடை பயணத்தைத் தொடங்குவோம்! தடம் புரளாமல் நடப்போம்! அவசியமெனில் ஓடுவோம்! இந்தப் புவியை

நடத்தும் பொறுப்பை ஏற்போம்! பொதுமையில் இந்தப் புவியை நடத்துவோம்! பொதுவில் நடத்துவோம்! கலியுகத் திற்கு விடை கொடுப்போம்! கிரேதாயுகத்தைக் கொணர் வோம்! உலகம் உண்ண உண்போம்! உலகம் உடுத்த உடுத்துவோம்! எங்கு உலகம் தங்கியிருக்கிறதோ அங்கேயே நாமும் தங்குவோம்! 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்று போர்முரசு கொட்டுவோம்! மண்ணகத்தில் விண்ணகம் காண்போம்! திருக்குறள் நெறி உலகப் பொது நெறி; வாழும் நெறி என்பதை உறுதிப்படுத்துவோம்!

# 49. *அறிவியலும் வாழ்வும்

மானுடம் தோன்றி ஏறத்தாழ 10 இலட்சம் ஆண்டு களாகி விட்டன. மனிதனை மற்ற உயிரினங்களிலிருந்து விலக்கி உயர்த்துவது உழைப்பேயாகும். மானுட வாழ்க்கை. அறிந்தோ, அறியாமலோ, விரும்பியோ விரும்பாமலோ அறிவியல் தடத்திலேயே வளர்ந்து வந்திருக்கிறது. ஆயினும், வாழ்க்கையை, அறிவியல் பார்வையில் பார்ப்பவர்கள் எத்தனைபேர்' இன்று நமது நாட்டில் ஏதோ ஒரு விதமான மனச்சோர்வு, சோம்பல் நிலவுகின்றன. வன்முறைகள், வகுப்பு மோதல்கள், கலவரங்கள் நிகழ்கின்றன. இவையெல்லாம் நமக்குக் கலக்கத்தை உண்டாக்குகின்றன. நாம் செல்லும் பாதை சரியானதுதானா? அறிவியல் சார்ந்த பாதைதானா? முன்னேற்றப்பாதைதானா? என்றெல்லாம் ஆய்வு செய்ய வேண்டும். நம்மால் ஆய்வு செய்ய முடியவில்லை. இல்லை, ஆய்வு செய்யும் எண்ணமே இல்லை. அதன் காரணமாக நீண்டதூரம் பின்சென்று கடவுளின் கையிலும் விதியின் கையிலும் வாழ்க்கையை ஒப்படைக்கின்றோம். ஏதோ ஒரு தற்காப்பு உணர்வில் சாதி, மதம், கட்சி ஆகியவற்றில் சிக்கிச் சீரழியும் போக்கு வளர்ந்து வருகிறது. இந்தத் திசையிலிருந்து

* மதுரை வானொலி 26.10.92

நாம் திரும்ப வேண்டும்; திருந்த வேண்டும். திருந்துவதற்குரிய ஒரே வழி அறிவியலைக் கற்பது கூட அல்ல. நமக்கு அறிவியல் மனப்பான்மை - அறிவியல் அணுகுமுறை வேண்டும் முன்னுதாரணங்களைப் பார்த்து நடக்கும் மனப்பான்மை கூடாது.

மானுடப்பிறப்பு, ஆற்றல் வாய்ந்தது, அறிவியல் சார்ந்தது. அறிவியலால் ஆனது. அறிவியலால் மனிதனின் வாழ்க்கை வளர்ந்து வருகிறது. மாறி வருகிறது. மாற்றங்கள் மற்ற உயிரினங்களிடத்தில் இல்லை. ஏன்? அறிவியல் சார்பு இல்லாததே காரணம். வாழ்க்கை இன்று விரிந்தும் பரந்தும் ஆழ்ந்தும் கிடப்பது அறிவியலாலேயாம்'.

அறிவியல் சார்ந்த மனித வாழ்கசை மூடத்தனத்தையும் கொடுமைகளையும் கடந்து வளர்ந்து வந்திருக்கிறது. இன்று வாழ்க்கை, அறிவியல் சார்ந்து இயங்குகிறது. அறிவியலில் காட்சி, சந்தேகம், ஆய்வு, உழைப்பு ஆகியன படிக்கற்கள்; ஆய்வுத் துறையில் எந்த ஒன்றையும் கூர்ந்து ஊடுருவிப் பார்க்க வேண்டும். பொருளை அறிந்தால் போதாது பொருளின் தன்மையை அறிய வேண்டும். காட்சி, அறிவியல் வளர்ச்சியின் முதல் நிலை, அக்காட்சியின்பால் நமக்குச் சந்தேகம் எழுதல் வேண்டும். சந்தேகப்படுதல் தவறன்று. சந்தேகத்தை ஆய்வு செய்யாமல் முடிவு செய்யக் கூடாது! சந்தேகம் ஆய்வு செய்யப் பெற்றுத் தீர்வு காணப்படுதல் வேண்டும்! அந்த முடிவுகளும் நிலையான முடிவுகள் அல்ல! செயற்பாட்டின் வழி துணியப் பெறுதல் வேண்டும்.

மனிதன் அவன் வாழ்க்கையில் முதலில் தொடர்பு கொண்டவை நிலம், நீர், தீ, வான், காற்று ஆகியவை. ஆயினும் அவனுக்கு நிலத்தொடு இருந்த தொடர்பே மிகுதி. அவனுக்கு முதல் அறிமுகம் பெளதீக விஞ்ஞானமே. ஐம்பூதங்களின் இயல் பற்றியதால் பெளதீக விஞ்ஞானம் என்று பெயர் பெற்றது. பெளதீகஇயல் உயிரியலாகச் சிறந்து

விளங்கியது. பௌதீக அறிவியல் எரிசக்தி அறிவியலாக வளர்ந்து மின்சாரம் வந்தது. இதனால், உணவுப் பொருள்களைப் பக்குவப்படுத்தி உண்கின்ற நாகரிகம் வளர்ந்திருக்கிறது. ஆதிமனிதன் இறைச்சியை முதலில் பச்சையாகவே தின்றான். பின் சுட்டுத் தின்றான். இன்று பக்குவமாகச் சமைத்து உண்கிறான். உணவு முறையில் வளர்ந்து வந்துள்ள வேறுபாடுகள் அறிவியலின் ஆக்கம்தானே!

அடுத்து, உயிரியல் துறை வளர்ந்து வந்துள்ள வேகம்... அம்மம்ம! பிரமிப்பூட்டுகிறது. இன்று, வேளாண்மையைச் சார்ந்து வளர்ந்து வந்துள்ள அறிவியல், மனித வாழ்க்கையை இன்ப வாழ்க்கையாக மாற்றியிருக்கிறது. மனிதர்களின் நுகர்வுப் போக்கு அறிவியல் வளர்ச்சிக்குத் தூண்டுகோல்; வேளாண்மை, கால்நடை வளர்ப்புத் துறையில் அறிவியல் வளர்ந்து வந்துள்ளது.

தொடக்க காலத்தில் மனிதன் செடி கொடிகள் மரங்களுடன் தொடர்பு கொண்டான். தாவரங்கள் வளர்வதைக் கண்டான்; அவற்றிலிருந்து உதிர்ந்த விதைகள் முளைப்பதைக் கண்டான்! ஒடிந்த கிளைகள் மண்ணோடு தொடர்பு கொண்டால் முளைப்பதையும் கண்டான். இந்தப் பார்வை...! அல்ல, ஆய்வு சார்ந்த அணுகும் பார்வை வேளாண்மை விஞ்ஞானமாக வளர்ந்தது. வேளாண்மை விஞ்ஞானம் வளர்ந்ததற்கு அடிப்படைக் காரணமாக அமைந்தது உழைப்பு.

உழைப்பே வாழ்க்கை உலகத்தின் அச்சு. உழைப்பும் அறிவியலும் ஒன்றையொன்று தழுவியன. தனித்தும் இணைந்தும் வாழ்க்கையை வளர்ப்பன. ஏன்? வாழ்க்கையை ஆக்குவதில் உழைப்பு, அனுபவம், அறிவியல் என்ற மூன்றுமே இணைந்துள்ளன. அனுபவத்தை விடச் சிறந்த ஆசிரியன் இல்லை! கைகளை நீட்டுகிறான்! கம்பு ஒன்று கையில்

அகப்படுகிறது. இந்த நிலையில் கை அசைகிறது. கையிலிருந்த கம்பும் அசைந்து தூரத்தில் இருந்த பொருளை நகர்த்துவதை அறிகிறான்; ஆய்வு செய்கிறான். இந்த அனுபவமே கருவிகள் தோன்றுவதற்குத் துணை செய்தது. அறிவியல் வளர்ச்சியில் கருவிகளுக்குரிய பங்கு மகத்தானது. அறிவியலும் கருவிகளும் சேர்ந்து மனித வாழ்க்கையை இன்று மகோன்னதமாக வளர்ந்திருக்கின்றன. மனித நாகரிகத்தின் தொடக்கமே. மனிதன் கருவிகளைக் கண்டு பயன்படுத்தத் தொடங்கிய காலம்தான்.

இயற்கையாக விளைந்த காய்கனிகளை உண்டு வாழ்ந்தவன், காடு வெட்டி நிலம் திருத்திக் கரும்பும் நெல்லும் பயிர்செய்து வாழ்க்கையின் அநுபவத்தை வளர்ந்திருக் கின்றான். மனிதன், விவசாயத் தொழிலில் வளர்ந்து இன்று விவசாயத் தொழில் நுட்பத்தை வளர்த்து, எந்த ஒருயிரும் உலகத்தில் உணவின்றிச் சாக வேண்டாத நிலையை உருவாக்கியுள்ளான். அறிவியல் அடிப்படையில் வாழத் தலைப்பட்டால் ஒரு நூற்றாண்டு வாழலாம்; அதற்கு மேலும் வாழலாம்! மனித வாழ்க்கையில் உழைப்பு, கருவிகள் கண்டு பிடிப்பு, கருவிகள் வளர்ச்சி ஆகியவற்றால் வாழ்க்கை வளர்ந்து வந்தது; வளர்ந்து வருகிறது.

அறிவியல் மெள்ள மெள்ளத்தான் வளர்ந்தது. ஆனாலும் நிலையான, வளமான் மாற்றத்தை இந்தப் புவிக்கோளத்திலும் மானுட வாழ்க்கையிலும் தந்தது. கற்களைக் கருவியாகப் பயன்படுத்திய நிலையிலிருந்து ப்டிமுறையில் உலோக காலம். இரும்புக் காலமென வளர்ந்து இன்று அணுவைக் கருவியாகக் கொண்டு இயக்கும் நிலைக்கு வளர்ந்து வந்திருக்கிறது. மானிட வாழ்க்கை; இன்று இயற்கையில் மனிதனின் ஆளுமைக்கும் மேலாண்மைக்கும் அகப்படாதது எது? என்று கேட்டால் இல்லையென்றே கூறலாம். வெள்ளம், புயல், எரிமலை, நிலச்சரிவு முதலியன இன்னமும் அடங்கவில்லை. இவற்றை அடக்க முடியாது

போனாலும் இவற்றினால் ஏற்படும் அழிவுகளைத் தவிர்க்கலாம்! குறைக்கலாம்! இதற்குரிய அறிவியல் வளர்ந்திருக்கிறது; செயற்பாடு போதவில்லை.

மேலும், இன்று மனிதனின் சராசரி வாழ்க்கையின் ஆயுள் வளர்ந்திருக்கிறது. இது அறிவியல் படைப்புக்களால் உண்டான வளமும் வசதியும் நிறைந்த வாழ்க்கையினால் ஆயது. அது போலவே நோய்வாய்ப்பட்டாலும் இன்றைய மருத்துவ விஞ்ஞானம் உச்சாணிக் கொம்பு வரையில் வளர்ந்து கைகொடுக்கிறது. உடலுறுப்புக்களை இருதயம் உள்பட அறுவை சிகிச்சை முறைகளில் காப்பாற்றும் மருத்துவமுறை வளர்ந்திருக்கிறது. மனிதனுடைய உறுப்புக்கள் - இரத்தம் உள்பட கடைகளில் விற்கப்படும் காலமும் உருவாகலாம்!

அறிவியல் வளர்ச்சியால் மிகமிகச் சாதாரணமான பொருள்கள் கூட மதிப்புடையனவாகி விட்டன. வேப்பெண்ணெய் ஒரு காலத்தில் கிராமத்து மக்கள் தேய்த்துக் குளிப்பார்கள். இன்று, இந்த வேப்பெண்ணெய்யும் பிண்ணாக்கும் வேளாண்மைத் துறையில் முக்கிய இடத்தை வகிக்கின்றன. உரம், பூச்சி மருந்து ஆகியவற்றிற்குப் பதிலாக இவை பயன்படுத்தப் படுகின்றன. "போடா! சுத்த விளக்கெண்ணெய்" என்று வழா வழா ஆட்களைத் திட்டுவது உண்டு! இந்த விளக்கெண்ணெய்யைத் தூய்மை செய்தால் நல்ல தரமுள்ள எண்ணெய் உற்பத்தி செய்யலாம். அந்த எண்ணெய்யிலிருந்து பல பொருள்கள் உற்பத்தி செய்யலாம். இங்ஙனம் வேளாண்மை அறிவியல் ஏற்படுத்தும் வளர்ச்சி, இந்த உலகத்தை நன்றாக அனுபவித்து வாழும் சொர்க்கமாக ஆக்கி வருகிறது.

அடுத்து, மனிதனின் தேவை எரிசக்தி. இந்த எரிசக்தி தொடக்கக் காலத்தில் சிக்கிமுக்கிக் கல்லில் தொடங்கியது. தற்செயலாக இரண்டு கற்கள், இரண்டு மரங்கள் உரசும்

பொழுது தீ பிறப்பதைக் கண்ட மனிதன், அதிலிருந்து எரிசக்திப் படைப்பில் படிப்படியாக வளர்ந்து இன்று சூரிய எரிசக்தியை அடுப்பங்கரையில் உபயோகப்படுத்தும் அளவுக்கு வளர்ந்துவிட்டான்! மனித வாழ்க்கையில் எரிசக்தி அறிவியல் ஏற்படுத்தியுள்ள பாதிப்புக்கள் - அனுகூலங்கள் பலப்பல. சுவையாகச் சமைத்து உண்கிறான்; சமைத்த பொருள்களைப் பாதுகாத்துக் கொள்கிறான். தட்ப வெப்பத்தைக் கட்டுப்படுத்தி நலமுடன் வாழ்கிறான்.

அடுத்து, மனித வாழ்க்கையில் காலமும் தூரமும் பிரச்சினையாக இருந்தன. தொடக்கத்தில் கால்களாலேயே காடுகளில் நடந்தான். கால்கள் வலித்தன. விலங்குகளை ஊர்தியாகப் பயன்படுத்தினான். பின், மெள்ள வண்டிக்கு வளர்ந்தான். அதன்பின் படிமுறையில் உந்து ஊர்திகள், விமானங்கள், கண்டம் விட்டுக் கண்டம் செல்லும் உயர் ஆற்றலுடைய விமானங்கள் வளர்ந்து வந்திருக்கின்றன. இதனால் மனிதனின் உழைப்புக்குரிய காலம் கூடியிருக்கிறது. உழைப்பாற்றல் கூடியிருக்கிறது. தனியே அல்லது சிறு குழுக்களாக வாழ்ந்த மனிதன், இல்லை மனித மந்தை இன்று உலகந்தழீஇய மாபெரும் சமுதாயமாக விசுவரூபம் எடுத்து வளர்ந்திருக்கிறது. இது அறிவியலால் ஏற்பட்ட பெரிய மாற்றம். ஆயினும், வசதிகளுக்குரிய அறிவியல் வளர்ந்தது போல, மனித உறவுகளை வளர்த்து, இணைக்கக்கூடிய சமூக விஞ்ஞானம் இன்னும் போதிய அளவு வளரவில்லை. அதனாலேயே சண்டைகள் நடக்கின்றன. சமூகஇயல் துறையிலும் மனிதன் வளர்ந்து விட்டால் இந்த உலகம் சொர்க்கம்தான்;

மனிதனின் கனவாக, புனைவாக இருந்த அண்டங்கள், கண்டங்கள், கோள்கள் இன்று கண்முன்னே தென்படும் உணமைப் பொருள்களாகியிருக்கின்றன என்பது மனித வாழ்க்கைக்கு அறிவியல் தந்த ஒரு பெரிய வரம்! மானுடம்

வெள்ளியில், செவ்வாயில் குடியேறி வாழும் காலமும் வரக்கூடும்.

நமது வாழ்க்கை அறிவியல் சார்ந்ததாக அமைய, நாளும் நாம் சிந்திக்க வேண்டும் பழக்கங்களைத் தவிர்த்துப் பழகும் முயற்சி தேவை. நம்மைச் சுற்றியிருக்கும் உலகத்தோடு நாளும் உறவுகளை வளர்த்துக் கொள்ள வேண்டும். ஆய்வு மனப்பான்மையுடன் அணுக வேண்டும். நம்பிக்கை அடிப்படையில் அறிவியல் ஏற்றுக் கொள்ளாததை, ஏற்றுக் கொள்ளக் கூடாது. இந்த அடிப்படையில் கடவுளும் ஆய்வுப் பொருளே! கடவுளைப் பற்றிய விவாதம் இன்னமும் முடிய வில்லை. விவாதங்கள் முடிவாகா. அறிவியல் முடிவு இரண்டாக இருக்காது; ஒன்றேயாம்!

# 50. அறிவியல் சார்ந்த வாழ்க்கை

வாழ்க்கை வாழ்வதற்கே! இதில் என்ன ஐயம்! கொள்கையில் ஐயமில்லை! ஆனால், எத்தனைபேர் வாழ்கிறார்கள்? நமது நாட்டு மக்கள் தொகை 80 கோடி. ஆனால் எத்தனை பேர் வாழகிறார்கள்! “வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே!” என்று இரக்கப்பட்டாரே மாணிக்க வாசகர்! இந்த ரகத்தில் வாழ்வோர் எண்ணிக்கைதானே பல கோடி! சிலர் வாழக்கூடும்! வாழ்தல் வேறு; பிழைத்தல் வேறு; இந்த உலகில் தோன்றியுள்ள உயிர்க்குலமனைத்தும் பிழைப்பு நடத்துகின்றன. யாதொரு குறையும் இன்றியே கூடப் பிழைப்பு நடத்துகின்றன. இனப்பெருக்கத்தில் கூடப் பிழைப்பு நடத்துபவர்கள் பின்தங்கி விடுவதில்லை. ஆம்! பிழைப்பு நடத்துபவர்களுக்குப் பசியும் காமமும் தானே இலட்சியங்கள்! இவை எப்படியும் கிடைத்துவிடும். ஆனால், வாழ்க்கை அமையுமா? அறிவார்ந்த வாழ்க்கை கிடைக்குமா?

*புகழ்பட வாழும் வாழ்க்கை அமையுமா? என்பதை எண்ணிப் பார்க்க வேண்டாமா?* **வாழ்க்கை வாராது வந்த ஒன்று. ஒரே ஒரு சந்தர்ப்பந்தான்! இதை வாழ்ந்து பயனடைய வேண்டாமா?**

*வாழ்க்கையின் மூல முற்பொருள்* **காலம். வாழ்க்கை** *வரையறுத்த காலவரம்பிற்குட்பட்டது. அந்தக் காலத்திலும் 22-வது வயது வரை குழந்தையென்றும், இளமை என்றும் பெற்றோர்களைச் சார்ந்து கழிந்து விடுகிறது. இது வளரும் காலம்! வாழும் காலமல்ல. முதிய நிலையில் 60 வயதுக்குப் பின் செயலற்ற நிலை! பயண ஆயத்தங்கள் செய்யும் காலம்! இந்தக் காலமும் சார்புகளுடன் சார்ந்து வாழும் காலமே! வாழும் காலமல்ல! 22 வயதுக்கும் 60 வயதுக்கும் இடைப் பட்டுள்ள 38 ஆண்டுகள் அல்லது 40 ஆண்டுகளே வாழுங் காலம். ஆதலால் அறிவார்ந்த* **வாழ்க்கையின் முதல் சிறப்பு, காலம் போற்றல்.** *காலத்தின் அருமைப்பாடு கருதி, காலம் முழுவதையும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். காலம் சலித்துக் கொண்டே இருப்பது; சென்று கொண்டே இருப்பது. காலம் நிற்காது. ஓட்டைகள் பல உள்ள கைகளிரண்டினால் தண்ணீரை அள்ளி ஓட்டைப் பானையில் ஊற்றித் தண்ணீரைச் சேமித்து வைத்துக் குடிக்க நினைத்தவன் கதைபோல ஆகிவிடும், காலத்தைப் போற்றாதவன் நிலை!*

*காலம் வாளா கழியும் வாயில்கள் பலப்பல. முதல் நிலை பேச்சு. தேவையில்லாமல் பேசக் கூடாது. எல்லாம் செயலாகவே அமைதல் வேண்டும். தூக்கம், சுகம் நாடல், பகை கொள்ளல் முதலியன காலச் சிதைவுக்குரிய வாயில்கள்! இவையெல்லாவற்றையும் விடப் பெரிய வாயில் "பொழுது போக்கு" "ஓய்வு" என்ற பெயரில் வீணாகப் போகும் காலம்.* **ஒருவன் தன்னுடைய காலத்தைச் செலவழிக்கும் முறையிலேயே அவனுடைய வாழ்க்கை** *அமைகிறது* **காலம் போற்றிப் பயன் கொள்ளும் வாழ்க்கை அறிவார்ந்த வாழ்க்கையாகும்.**

அறிவு என்பது வாழ்க்கைக்குரிய முதற் பொருள். ஆன்மா, பதப்படுத்தப் பெறாத கச்சாப் பொருள். ஆன்மாவைப் பக்குவப் படுத்தி வாழ்வாங்கு வாழச் செய்யும் அறிவு, வாழ்க்கையின் முதல் தேவை. சென்ற தலைமுறையினர் வாழ்ந்த வரலாற்றிலிருந்து அறிவு பெறலாம். நமது தலைமுறையிலேயே உடன் காலத்திலேயே வாழ்கிறார்களே. அவர்களுடைய வாழ்க்கையின் நடைமுறையிலிருந்து பட்டறிவு பெறலாம். நமது சுற்றுப்புறச் சூழ்நிலைகளை ஆய்வு செய்தும் அறிவு பெறலாம். அறிவு, வாழ்க்கையை இயக்கும் கருவி. அறிவு, வாழ்க்கையின் குறிக்கோளை - இலட்சியத்தைக் காட்டி அமைத்துக் கொடுக்கும் சாதனம். வாழ்க்கையை ஆக்க வழியில் பயனுடையதாக புகழ் பொருந்தியதாக அமைப்பதும் அறிவுதான்! இந்த அறிவு பெறாதார் பிறக்கலாம்; உண்டு வாழலாம்; மனைவாழ்வு நடத்தலாம். பிள்ளை குட்டிகள் பிறக்கலாம். ஆயினும் வாழ்க்கையாகாது.

வாழ்க்கையென்பது பயனும் புகழும் நிரம்பியதாக அமையவேண்டும். அறிவார்ந்த வாழ்க்கையின் முதற்படி உடம்பை வளர்த்தல்; உடம்பைப் பாதுகாத்தல். உடம்பை வளர்த்தல் என்றால் என்ன? உடம்பின் எடையைக் கூடுதலாக்குவதா? இல்லை, இல்லை! உடம்பின் செயற்பாட்டுத் திறன் நாளும் வளர்தல் வேண்டும். உடம்பு ஓர் அற்புதமான கருவி, வளரும் தன்மையுடைய கருவி. உடம்பின் செயலாற்றலுக்கும் அறிவுக்கும் எல்லையே இல்லை. அறிவும் உழைப்புத் திறனும் நாளும் செயற்பட, செயற்பட வளரும். "இருந்தபடியே இருத்தல்" யோகத்திற்குத் தான்; வாழ்தலுக்கல்ல. ஆனால், இன்று பலரின் பணித்திறனில் அறிவும் ஆளுமையும் ஆற்றலும் வளராமல் தேங்கிய நிலையிலேயே உள்ளார்கள். ஏன்? சிலர் பணி நிலைகளில் பிரிவினைகளை உருவாக்கிக் கொண்டு செய்யாமல் விட்டு விடுகிறார்கள். அந்தோ, பரிதாபம்! நமது மூளை, உடற் கருவிகள் இவற்றின் ஆற்றல் மின்னாற்றலை விடக் கூட சக்தி வாய்ந்தது. எப்போது பயன்படுத்தினோம். இன்றோ பலர்

உடல் சுகம் காண்கின்றனர். உழைக்காமலே வாழ்க்கையை நடத்த நினைக்கின்றனர். உழைக்காமல் வாழ்தல் வாழ்க்கையல்ல. இது பிழைப்பு மட்டுமல்ல. பிறரை நம்பி வாழும் திருட்டுப் பிழைப்பு. இரந்து வாழ்தலை நிகர்த்த பிழைப்பு. சோம்பலுடனும் சோர்வுடனும் நூறு ஆண்கள் வாழ்தலில் யாருக்கு என்ன பயன்? இந்தப் பிழைப்பு வேண்டவே வேண்டாம்! ஒரு நாளேனும் பெருமுயற்சியுடன் வாழ்தல் வேண்டும். இதுவே அறிவார்ந்த வாழ்க்கை.

வாழ்க்கையை வாழ்வாக ஆக்க உடல்நலம் தேவை. உடல் நலம் இருவகையது. ஒன்று உள்ளக் கிளர்ச்சியுடன் செயல்படுவது. பிறிதொன்று உடலியக்கத்தில் யாதொரு குறையும் இன்றி, அனைத்தும் இயங்குவது. இவ்விரு நலன் களும் நல்வாழ்க்கைக்கு இன்றியமையாதன. முதல்வகை நம்முடைய வாழ்க்கையை, வாழ்க்கையின் நிகழ்வுகளை நாம் அணுகுவதை அல்லது எடுத்துக் கொள்வதைப் பொருத்தது. பெரும்பாலும் உளவியல் சார்புடையது. நாம் புகழ், செல்வம் இவற்றை அடைவது தவறல்ல. தவறல்லாதது மட்டுமல்ல. அடையவும் வேண்டும். ஆனால் இவைகள் மீது பற்று, ஆசையின் காரணமாக மனம் பாதித்து விடக் கூடாது. அதாவது, தண்ணீர் தளும்பலாம். தண்ணீர்ப் பானை ஆடக் கூடாது. எந்த ஆசையும் நெகிழ்ந்து கொடுக்காத ஆசையாக மாறிவிடின் அது உள்ளத்தைப் பாதித்து மூளையைப் பாதித்து வாழ்க்கையைக் கெடுத்து விடுகிறது. இன்றில்லையா, பரவாயில்லை. நாளை அடைவோம் என்ற எண்ணத்துடன் ஆறுதல் பெறும் தொடர்முயற்சியும் தேவை.

அடுத்து இன்றியமையாத் தேவைப்பட்டியலில் இருப்பது மனநலம். மனம் என்பது புரிந்து கொள்ள முடியாத ஒரு புதிர்; அளவற்ற ஆற்றலுடையது; விரைந்து தொழிற்படும் தன்மையது; காற்றின் வேகத்தை நிகர்த்தது மனத்தின் வேகம், மனம் முறையாக பழக்கப்படுத்தப்பட்டால் வாழ்தலுக்குத் துணை செய்யும் ஒப்பற்ற கருவி. முறையாகப் பழக்கப் படுத்தாது போனால் மனம், மனிதனை ஆட்டிப் படைக்கும்.

இன்று மனத்திற்கு அடிமையாகி மனம் ஆட்டிப் படைக்கின்ற வண்ணம் ஆடிப் பிழைப்பு நடத்துபவர்கள் மிகுதி. மனமடங்கச் செய்து மனத்தை ஒரு கருவியாகப் பயன்படுத்தி முறைமையாக வாழ்வோர் மிகமிகக் குறைவு. மனமது செம்மையாக, சுற்றுப்புறச் சூழ்நிலைகள் செப்பமுற அமைய வேண்டும். மனம், பொறிகளின் வாயிலாக இந்த உலகோடு தொடர்பு கொள்கிறது. அதாவது இந்த உலகத்தின் பொருள்கள் மனிதர்களோடு தொடர்பு கொள்வதன் வழி மனம் ஆசைவயப்படு கிறது. மனம் தனது ஆசையை அடையச் சூர்ப்பனகை, இராவணனையும் காமுகனாக்கியது போல ஆன்மாவின் கண் ஆசையைத் தூண்டி ஆசைப்பட்டதை அடைய முனைப்பு உண்டாக்குகிறது. இந்தச் சூழ்நிலையில் ஆன்மா தனது புத்தியை உபயோகப்படுத்தி மனதை அடக்கலாம். பலருக்குப் புத்தி இருப்பதே தெரியாது. சிலர் புத்தியை உபயோகப்படுத்துவதே யில்லை. மனம் பற்றிக் கொணரும் செய்திகளைப் புத்தியிடத்தில் கொடுத்து ஆய்வு செய்தாலே ஆன்மா பிழைத்து விடும். வாழ்ந்து விடும். மனம் தூய்மை பெற, ஆற்றலுடன் விளங்க மனிதன் வாழும் வாழ்நிலை - சமுதாய அமைப்பு செப்பமாக அமைதல் வேண்டும். தீமை பயக்கும் சூழ்நிலைகள், சார்புகளிலிருந்து மனிதன் விலகிக் கொள்ள வேண்டும். சூழ்நிலைகள், சார்பு களைப் பொருத்தே வாழ்நிலை அமைகிறது. பலவீனமானவர்கள் சூழ்நிலைக்கு அடிமையாவார்கள். பலமுள்ளவர்கள் வாழ்நிலைக் குரிய சூழ்நிலை தேடி அமைத்துக் கொள்வார்கள். இப்படி இருந்தது. இப்படித்தான் இருக்கிறது என்று சொல்லி அழுது என்ன பயன்? இப்படித்தான் இருக்க வேண்டும் என்று சூழ்நிலைகளைப் பற்றிச் சிந்தித்துத் தக்க சூழ்நிலைகளையும் சார்புகளையும் அமைத்துக் கொள்ளுதல் அறிவுடைமை. மனம் பற்றி நின்று ஆன்மாவுக்குச் செய்திகளைத் தந்து வளர்ப்பதற் குரிய சூழ்நிலைகளைச் செப்பமாக அமைத்துக் கொள்ளல் அறிவார்ந்த வாழ்க்கை முறை.

வாழ்க்கை நல்லவண்ணம் அமைய, புத்தி தேவை. அறிவு என்று குறிப்பிடப்படுவதும், புத்தி என்று குறிப்பிடப் படுவதும் ஒன்றா? வேறு வேறா? என்பதை ஆய்வு செய்ய வேண்டும் புத்தி என்பது இயற்கையாயமைந்த அறிவாகவும் அறிவு என்பது கற்றல், கேட்டல், செயற்பாடு ஆகியவற்றால் ஈட்டியதாகவும் இருக்கலாமா? இயற்கை அறிவை, “கல்லாதான் ஒட்பம்” என்று திருக்குறள் கூறும். புத்தி என்பது செயற்பாட்டிற்கு வாராத அறிவின் முதல்நிலை என்றும் அதே புத்தி ஆன்மாவிற்குச் செயற்பாட்டு நிலையில் கருவியாக அமைந்து உதவி செய்யும் போது அறிவு என்று பெயர் பெறுகிறது என்று கருதலாமா? மெய்கண்ட நூலில் ஆன்மாவின் அறிகருவிகளில் ஒன்றாகப் புத்தி கூறப்படுகிறது. மக்களின் வாழ்க்கை நிலையில் ‘புத்தி’ என்பது பெருவழக்கில் வழங்கப் பெறுகிறது. இந்தப் புத்தியும் வளரும் தன்மையது. இந்தப் புத்தி, சிந்தித்தும் ஆய்வு செய்தும் தக்க சூழலை அமைத்துக் கொள் வதாலும் வளர்கிறது. புத்தி வளர்ச்சிக்கு ஆய்வு செய்யும் பான்மை வேண்டும். நல்ல புத்தியுடன் பொருந்தி வாழ்தல் அறிவார்ந்த வாழ்க்கை.

மனிதனுக்கு வாழ்நிலை சிறப்பாக அமைய வாய்த்த மிகச் சிறந்த உறுப்பு சித்தம். சித்தத்தின் தொழில் சிந்தித்தல். சித்தம் என்ற ஒரு கருவி இருப்பதையே இன்று பலர் அறியார். உணரார். இன்று பலர் சிந்திப்பதில்லை. பலர், சிந்திப்பதை மறந்துவிட்டனர். ஏன் இன்னும் பலர் சிந்திப்பதற்கே மறுக்கின்றனர். மதங்கள், சாஸ்திரங்கள் செய்த ஒப்பற்ற கைங்கரியம் மனிதர்களைச் சிந்திக்க விடாமல் செய்ததுதான்! இன்னும் புதுவடிவத்தில் அதிகாரம், பதவி பெயராமல் மக்களைச் சிந்திக்க அனுமதிக்காதவர்கள், பலர். சிந்தித்தல் மனிதனின் முதல்நிலைத் தொழில். சிந்தித்தலைத் தான்” எண்ணுதலும் சிந்தித்தலும் ஒன்றுதானே! ஆய்வுக்குரிய செய்தி! நாம் எண்ணுதலும் சிந்தித்தலும் ஒன்றே என்று கருதுகின்றோம். காலம் விடை

கூறட்டும். சிந்திக்கும் பழக்கமுடைய மனிதனுக்கு நல்லவாழ்வு அமையும். சிந்திக்கும் இயல்பும் பழக்கமும் உடைய மனிதர்கள் பரபரக்க மாட்டார்கள். விரைந்து முடிவு செய்யமாட்டார்கள். அதே போழ்து காரியக் கேடு அடையும் வகையில் காலந்தாழ்த்த மாட்டார்கள். சிந்திப்பவர்கள் சார்புகளில் சிக்கித் தவிக்காமல் நன்மையையே, வாய்மையையே, மனிதத்தையே மையமாகக் கொண்டு சிந்திப்பர். வரலாற்றுப் போக்கை எண்ணி அதற்கேற்ப ஒழுகலாற்றை அமைத்துக் கொள்வர். ஆயினும் வரலாறு சுழன்று வராமலும், தேங்கிப் போகாமலும் இயக்க நிலையில் முன்னேற உந்து சக்தியாக விளங்குவர். சிந்தித்துச் செயற்பட்டு வாழ்வது அறிவார்ந்த வாழ்வு.

சிந்தித்தால் மட்டும் வாழ்வு அமைந்து விடாது எண்ணினால் போதாது. எண்ணித் துணிய வேண்டும். சிந்தையின் முடிவைத் துணிவுடன் காண வேண்டும். அந்த முடிவைப் பற்றுக் கோடாகக் கொண்டு உறுதியுடன் ஆன்மாவை, புத்தியை, புலன்களை, பொறிகளை இயக்க வேண்டும். பலர் சிந்திப்பர்; நல்லவண்ணமாகவே சிந்திப்பர். ஆனால், முடிவுக்கு வரமாட்டார்கள்; குழப்பமாகவே இருப்பர். ஏன் இந்த அவலம்? ஆசைகளாலும் விருப்பு - வெறுப்புக்களாலும், பயத்தினாலும் பாதிக்கப்பட்டிருப்பவர்கள் சிந்திப்பதே அரிது. ஒரோ வழி சிந்தித்தாலும் இவர்கள் முடிவுக்கு வரமாட்டார்கள். முடிவுக்கு வந்தாலும் அந்த முடிவில் உறுதியாக நிற்க மாட்டார்கள்; செயற்பட மாட்டார்கள்; "மனிதம்" மேம்பாடுற மிகப் பெரிய தடையாக இருப்பது பயமே! பயத்திலிருந்து விடுதலை பெறுவது மிகவும் அவசியம். வாழ்வாங்கு வாழ, பயத்தை விட்டொழிக்க வேண்டும். சிந்திக்கப் பழகவேண்டும். அந்தச் சிந்தனையும் சார்புகளைக் கடந்த சிந்தனையாக அமைதல் வேண்டும். சிந்தனையின் பயன் அதன் முடிவில் இருக்கிறது. சிந்தனையின் பயன் நல்லவண்ணமாக

அமையும் என்ற நம்பிக்கை இருப்பின் உலகமே எதிர்த்தாலும் அந்த முடிவில் உறுதியாக இருத்தல் வேண்டும். சிந்தனையின் வழி வாழ்க்கையின் முயற்சிகளை அமைத்துக் கொள்ள வேண்டும். சிந்தனையுடைய வாழ்க்கை **அறிவார்ந்த வாழ்க்கை. சிந்தனையுடன் ஒன்றிய செயல். அறிவார்ந்த வாழ்க்கையின் செயற்பாடு; பயன்!**

அறிவார்ந்த வாழ்க்கை வாழும் போது உழைப்பு ஒரு முக்கிய இடத்தை எடுத்துக் கொள்கிறது. காரியங்களை, தோற்றங்களைப் பற்றி அலட்டிக் கொள்ளாமல் காரணங் களைக் கண்டறிந்து மாற்றுதல் அறிவின் – அறிவியலின் பணி. ஆம்! இன்று நமது நாட்டு மக்கள் வறுமையில் வாடுகின்றனர்; ஏழ்மையில் கிடந்து உழல்கின்றனர். ஏன்? உடற்பிணிகள் தரும் துயர் தாங்கொணாத் தன்மையுடையன. சாதிச் சண்டைகள், மதச் சண்டைகள், பொருளமயின் விளைவுகள், கலகங்கள், கொலைகள், தற்கொலைகள்! இந்த இயல்புகள் நிறைந்த ஒரு நாட்டை நாடெனக் கூற இயலுமா? திருவள்ளுவர் "நாடென்ப நாடா வளத்தன" என்றார். "எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தி" வாழ்தலையே நாடு என்று கம்பன் கவிதை காட்டுகிறது! "குறைவிலாது வாழ்க" என்று சைவம் வாழ்த்துகிறது! நமது நாடு, இந்த நிலையை என்று எய்தும்? இந்த வினாவுக்கு விடை எந்தத் தலைமுறையில் காணப்போகிறது? ஏன் இந்த அவலம்!

மானுடம் அற்புதமான படைப்பு, ஆற்றல்மிக்க படைப்பு. உலக வரலாற்றின் உயிர்ப்பே மானுடம்தானே! 'மானுடம் வென்றதம்மா!' என்று கம்பன் கூறுவான். மானுடம் வெற்றியொடு பொருந்திய வாழ்வினை இயல்பாக உடையது. ஆனால், வெற்றி எப்போது கிடைக்கும்? போராட்டம் இருந்தால் தானே வெற்றி! இன்று நம்மனோர் வாழ்க்கையில் போராட்டம் எங்கிருக்கிறது? போர்க்குணமே

இல்லையே! சூடு, சுரணை எல்லாம் கெட்டுப் போய் விட்டதே! மானம் தொலைந்து விட்ட ஊழ், விதி என்ற தத்துவங்களை முறை பிறழப் புரிந்து கொண்டதன் பயனாய் நடலையாக அல்லவோ வாழ்கின்றோம். பொறிபுலன்கள் பொருளற்றுப் போயின! இந்த நிலையில் மானுடம் வெற்றி பெற இயலுமா?

இன்றுள்ள நமது நாட்டு நிலை, நமது சமுதாயத்தின் - உலக மாந்தரின் வாழ்க்கைப் போக்குகள் நம்மை, நமது உணர்வுகளைப் பாதிப்படையச் செய்யவேண்டும். அல்லது நாம் இந்த இழிவும் அவமானமும் துன்பமும் நிறைந்த வாழ்க்கை ஏன்? இப்படி ஒருவாழ்வும் வாழவேண்டுமா? என்று கேட்க வேண்டும். இந்த உலகம் எப்படி இருக்கிறது? இது தெரிந்த விஷயம் எல்லாருக்கும் தெரிந்த விஷயம்! இதற்கு ஒன்றும் ஆராய்ச்சி செய்ய வேண்டும்! இந்த உலகம் எப்படி இருக்கவேண்டும் என்று எண்ண, சிந்திக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். இத்தகைய சிந்தனைப் போக்கே உலகத்தை மாற்றுதலுக்குரிய - இருக்கும் பொருந்தா நிலை களை எதிர்த்துப் போராடக் கூடிய - போர்க்குணத்தைத் தரும். இன்னாதனவாக இருக்கும் உலகத்தை எதிர்த்துப் போராடாமல் இனியன காண்பது இயலாது.

இந்த உலக வரலாற்றை உற்று நோக்குங்கள்! இந்த உலகத்தின் இயற்கை அமைவை உற்று நோக்குங்கள். இயற்கையே போர்க்குணம் உடையதுதான்! இந்த உலக வரலாறு உழைப்பின் வரலாறேயாகும். மானுடம் வாழ்வதற்காக இந்த உலக இயற்கை அமைவுகளுடன் நிகழ்த்திய போராட்டத்தின் பயன்தான் கழனிகள், ஆறுகள், கால்வாய்கள், ஆலைகள், தொழிற்சாலைகள், சாலைகள், காடுகள், திருக்கோயில்கள், திருக்குளங்கள் முதலியன. இவையனைத்துக்கும் நிழலாக - ஒரு அழிவுப் போரும் தொடர்ந்து வந்திருக்கிறது. போர்களால் ஏற்பட்ட அழிவும் ஒருவகையில் உழைப்பையே சாரும். இந்த அழிவுழைப்பு

அறிவு - அறிவியல் வழியில் செல்லாது. பயன்தரும் வழியில் - வாழ்விக்கும் வழியில் செல்ல வேண்டுமாயின் அறிவும் உழைப்பும் இதயஞ் சார்ந்தவையாக அமையவேண்டும். இதயம் அன்பு வயப்பட்டது, அருளுந் தன்மையுடையது. இதயம் எப்போதுமே ஆக்கும். அறிவும் இதயமும் உழைப்பும் ஒருங்கிணைந்து இயங்கினால் உலகம் வளரும்; வாழும்! உலக வரலாற்றில் அறிவும் இதயமும் சார்ந்த உழைப்பின் சாட்சிகள் சில உண்டு! இவை சிலவே! ஆயினும் ஆணவம், ஆதிக்கம் சார்ந்த (இதயத்தை இழந்த) உழைப்பின் வரலாறு மிகுதி! ஆயினும் நிலைத்து நிற்பது இதயம் சார்ந்த உழைப்பேயாம்!

வறுமை இயற்கையன்று; செயற்கை. ஏழ்மை இயற்கை யன்று; செயற்கை! துன்பம் இயற்கையன்று; வரவழைத்துக் கொண்டது. இந்த எண்ணப் போக்கில் எண்ணினால் இன்றுள்ள அமைப்பை எதிர்த்துப் போராட ஆர்வம் மீதூறும். கோழி முட்டைக்குள் உள்ள குஞ்சு, முட்டை ஓட்டை உடைக்க உள்ளிருந்தே முட்டை ஓட்டை மோதி மோதி உடைப்பதைப் போல, இருக்கும் இன்னாதனவாக அமைந்துள்ள உலகை மாற்ற இடையறாத - சோர்வில்லாத சிரத்தையுடன் கூடிய உழைப்புப் போர் நடத்த வேண்டும்.

உழைப்புப் பகை சோம்பல்! சோம்பல் உள்ளவர்கள் உழைக்க மாட்டார்கள்: சில சோம்பேறிகள் உழைப்பது போலக் காட்டுவார்கள். ஆனால், அந்த உழைப்புப் போலி யில் படைப்பும் இயலாது; காத்தலும் இயலாது. சோம்பல் என்ற ஒன்று இருப்பதனாலேயே இந்த உலகில் வறுமை வாழ்ந்து கொண்டிருக்கிறது. சோம்பல் என்றால் ஒன்றும் செய்யாதிருத்தல் என்பது மட்டும் பொருளல்ல. செய்ய வேண்டியவை அனைத்தையும் முழுமையாகப் பயனுடைய வகையில் செய்யாததும் சோம்பலின் பாற்பட்டதேயாம். சோம்பலுடன் முழு முயற்சி செய்து போராட வேண்டும். செய்யும் வேலையில் சிரத்தையும், செய்யும் இலக்கை அடையும் வரையில் உழைப்பும் தேவை.

உழைப்பு, உயிர்ப்புள்ளதாக இருந்தால் இந்த உலகத்தில் எல்லாரும் இன்புறு நலன்களை அனைத்தும் பெறலாம்.

உழைப்பு, எந்தெந்தப் பொருள்களுடன் தொடர்பு கொண்டு வினை நிகழ்த்தினாலும் அந்தந்தப் பொருளின் மதிப்பும் பயன்பாட்டுத் திறமும் பயன்பட்ட உழைப்பின் அளவுக்கு ஏற்றவாறு கூடும். ஒரு இரும்புத் துண்டை ஒலி பெருக்கியாகச் செய்வதனாலும் அதே இரும்புத் துண்டை கடிகாரமாகச் செய்வதனாலும் முறையே பொருளின் மதிப்புக் கூடுவதன் உண்மையை ஓர்க.

உழைப்பினைக் காலம், இடம், பொருள் கருதி உறுதி யுடன் உழைத்தால் ஆகாதது என்ன? உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ? என்று அன்றும் கேட்கப்பட்டது; இன்றும் கேட்கப்படுகிறது.

நமது வாழ்க்கைக்குத் தேவையான அனைத்தும் தபபாமல் அள்ளிக் கொடுக்கும் நிலத்தொடும் நீரொடும் மற்றும் மரங்களுடனும் இசைந்து அவற்றை வளர்த்து அவற்றால் நமது வாழ்க்கையையும் நடத்தும் உழைப்பினை மேற்கொள்வோம்! அறிவறிந்த ஆள்வினை மேற்கொள் வோம்! உழைப்பே வரலாற்றின் உந்து சக்தி. உழைப்பே வளத்திற்குக் காரணம். நாம் வணங்கும் கடவுளும் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்று தொழில் நிகழ்த்துவதை உன்னுக. நம்மைச் சுற்றியுள்ள இயற்கை ஓயாது உழைத்து மலர்களும் காய்களும் கனிகளும் தந்திடுவதைக் காண்போம். தவிடும் பிண்ணாக்கும் உண்ட மாடு பால் பொழிவதைக் காண்பீ! நோக்கும் திசைதோறும் உழைப்பு! உலகம் உழைப்பால் ஆயது. உழைப்பால் உலகம் ஆவது. **'வினையே ஆடவர்க்குயிரே'?** என்ற நெறி போற்றுவோம்!

மனித குலத்தின் நாகரிகம் அறிவுப் புலனாகிய மூளைக்கும் உழைப்புக் கருவியாகிய கைகளுக்கும் உறவு

ஏற்பட்ட பிறகுதான் கருக் கொள்கிறது. மூளையும் கைகளும் ஒத்திசைந்து ஒத்துழைத்தால்தான் உழைப்பு அறிவறிந்த ஆள் வினையாகும். இந்த உறவு இணைக்கப்படாததன் காரணமாக மூளை தனியே உழைக்கலாயிற்று. உடல் தனியே உழைக்க லாயிற்று. இதனால் மூளை உழைப்பாளர்கள் - அறிவு ஜீவிகள் என்று ஒரு தனிவர்க்கம் தோன்றியது. அது போலவே, உடல் உழைப்பாளர்கள் என ஒரு வர்க்கம் தோன்றியது. இத்தகைய உழைப்புப் பிரிவு தவறான சமுதாய அமைப்பிற்கு வித்திட்டது. காலப்போக்கில் மூளை உழைப்பாளிகள் - அறிவு ஜீவிகள் உயர்ந்தவர்கள் என்றும் உடலுழைப்பு தாழ்வானது என்றும் உடல் உழைப்பாளிகள் தாழ்ந்தவர்கள் என்றும் எண்ணம் உருப்பெற்று விட்டது. இந்த அகன்ற வேறுபாட்டின் காரணமாக அறிவு ஜீவிகளுக்கும் உடல் உழைப்பாளிகளுக்கும் இடையே வேற்றுமை அதிகரித்தது. ஏன் தீண்டாமையே தோன்றி வளர்ந்து இடம் பெற்று விட்டது. இது மட்டுமா? ஊதிய வித்தியாசம், வாழ்க்கை வசதிகள் எல்லாமே வேறுபட்டுவிட்டன. இந்த நடைமுறை களை மாற்ற வேண்டும். இதற்கு பல ஆண்டுகள் பிடிக்கும் போலத் தெரிகிறது. அறிவு ஜீவிகளும் உடலுழைப்பாளர்களும் என்று இணைந்து உழைக்கிறார்களோ அன்றுதான் இந்த உலகு மாறும்; வளரும். அர்த்தமுள்ளதாக விளங்கும்; வாழ்வு சிறக்கும்.

# 51. *அறிவியலும் சமுதாயமும்

மனிதக்கூட்டம் தோன்றிப் பல்லாயிரம் ஆண்டுகள் உருண்டோடிவிட்டன. ஆயினும் என்? மனிதர்கள் இன்னமும் கூட்டமாக வாழ்கிறார்களேயன்றி, சமுதாயமாக வாழக் கற்றுக் கொள்ளவில்லையே! ஏன்? ஏன்? இந்த வினாவுக்கு அறிவியல் உலகம் விடை கண்டு கூறி வழி

* சிந்தனைச் சோலை

காட்டினால் மனித சமுதாயம் தோன்றும். மனிதக் கூட்டம் தோன்றிய தொடக்க காலத்தில் சமுதாயமாகவே வாழ்ந்தனர். பொதுவுடைமைச் சமுதாயமே இருந்தது என்றெல்லாம் கூறுகின்றனர். உண்மையுங்கூட! ஏன் அந்தச் சமுதாய உணர்வு மறைந்தது? இதற்கு அறிவியல் உலகம் விடை காணவேண்டாமா?

இந்த உலகத்தின் இருப்பு நிலையை இந்த உலகத்தின் துன்பச் சூழலை எழுதிக் காட்டி அழவைத்த இலக்கியங்கள் பல உண்டு. ஆனால், இந்த உலகம் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று எண்ணித் துணிந்து கூறிய அறிஞர்கள், படைப்பாளர்களைக் காணோம்! சங்க காலத்தில் அருமையாக இலக்கியப் படைப்பாளர் ஒருவர் தோன்றினார். அவர் பெயர் பக்குடுக்கை நன்கணியார். இவர் இந்த உலக வரலாற்றில் முதன் முதலாக "இன்னாதம்ம இவ்வுலகம்! இனிய காண்க இதன் இயல்புணர்ந்தோரே!" என்றார். இந்தப் பாடலுக்கும் மரபு வழியில் பொருள் கூறிப் படைப்பில் இருந்த புரட்சித் தீயை அணைத்துவிட்டனர். அதாவது 'இந்த உலகம் துன்பமாக இருக்கிறது. ஆயினும் என்ன செய்வது? உலகத்தில் உள்ள துன்பத்தையே இன்பமாக நினைக்கும் மனநிலையைப் பெறுக' என்று பொருள் கூறினர். அதாவது "துன்பம் இயற்கை! துன்பத்தை ஏற்று அனுபவிக்கும் உளப்பாங்கைப் பெறுதலே வாழ்வியல்" என்று அறிவுறுத்தினார்கள். இதன் காரணமாக "வாழ்க்கையைச் சூழ்ந்துள்ள அறியாமை வறுமை, ஏழ்மை... முதலிய துன்பங்கள் இயற்கையாக அல்லது கடவுள் திருவருள் குறிப்பு வழி அமைந்தவை. இவற்றை அனுபவித்தே தீரவேண்டும். இவை மாற்றுதற்குரியன அல்ல. இல்லை, இல்லை! இவற்றை மாற்ற நினைப்பதே தவறு-பாபம்" என்று கூறிவிட்டார்கள். இதன் காரணமாகவே இந்தியா தொடர்ந்து சாதிப் பிரிவுகளிலும் பிணக்குகளிலும் சிக்கித் தவித்துச் சீரழிந்து வருகிறது. வறுமையிலும் ஏழ்மையிலும்

கிடந்துழல்கிறது. ஆனால் கவிஞனின் கருத்து அதுவன்று. இந்த உலகம் துன்பமாக இருக்கிறது! இந்தத் துன்ப உலகத்தை இனியனவாகக் காண்பதற்குரிய முயற்சிகளை மேற்கொள்க! இனியனவாக்குக! என்பதுதான் கவிஞனின் கருத்து. கவிஞனின் 'இனிய காண்க!' என்ற சொற்றொடருக்கு இங்ஙனம் பொருள் கொள்வதே அறிவியல் சார்ந்த முறை.

அறிவு எது! அறிவு ஒரு சிறந்த கருவி! அறிவு அற்றம் காக்கும் கருவி செறுவார்க்கும் வாழும் மாந்தர்க்கு அறிவு ஒரு சிறந்த கருவி. வாழ்க்கையை, வாழ்க்கையில் எழும் சிக்கல் களை எப்படி அணுகுகின்றோம் என்பதைப் பொருத்தே அறிவியல் சார்பு வாழ்க்கையில் வந்தமைகிறது.

நம்முடைய நாட்டில் இன்னமும் சமுதாயம் என்ற அமைப்பு தோன்றவில்லை! ஏன்? நமக்கு இன்னமும் இந்தச் சமுதாய அமைப்பில் தனி மனிதன் யார்? அவனுக்குரிய பொறுப்புக்கள், கடமைகள் என்ன? உரிமைகள் என்ன? என்பன பற்றிப் பலருக்குத் தெரியாது. சமுதாயம் என்ற அமைப்பு எப்படி உருக்கொள்கிறது? எந்தெந்த வாயிலாக உருப்பெறுகிறது? சமுதாயம் ஏன்? இதைப் பற்றியெல்லாம் பலருக்குத் தெரியாது. தெரிந்து கொள்ளலாம் விரும்புவ தில்லை. சமுதாய அமைப்புக்குரிய வாயில்கள் எளிதாக இயற்கையாவே அமைந்துள்ளன. இயற்கையேயாயினும் மனிதனின் அகநிலை, புறநிலை வாழ்நிலைகள் மூலம்தான் சமுதாய அமைப்பு முழுமை பெறுகிறது. பயன் தருகிறது.

மனிதன் கூடிவாழப் பிறந்த சமுதாயப் பிராணி (Social Animal). கூடி வாழ்தல் என்ன அவ்வளவு எளிதா? கலித் தொகை கண்டுணர்த்திய பழகும் பாங்கியலை (Behaviourial Science) அறிந்து கொள்ள வேண்டாமா?

பலருடன் நட்புறவுடன் பழகுதல் என்பது ஒரு கலை. இந்தக் கலை கைவராமையினாலேயே பலருடைய வாழ்க்கைப் பயணத்தில் இடைமுறைவுகள் ஏற்பட்டுத் துன்

புறுகின்றனர். பழகுதல், அன்பினை வளர்த்துக் கொள்ளுதல், ஒத்துழைப்பும் உதவியும் வழங்கல் ஆகிய செயல்முறையால் புறப் பண்புகளை, குணநலன்களை வளர்த்துக் கொள்ள வேண்டும். பழகும் பாங்கியலின் வெற்றி ஒப்புரவறிதலில் முழுமையுறும்.

எந்த ஒரு சூழ்நிலையிலும் உணர்ச்சிகளைக் கடக்க வேண்டும். புத்திசாலித் தனத்துடன் நடந்து கொள்ள வேண்டும். உணர்ச்சி வெறும் எழுச்சி. அது பயன்தராதது மட்டுமன்றி எதிர்விளைவுகளையும் தரும். அறிவார்ந்த சிந்தனையும் செயலுமே வாழ்க்கைக்கு ஆக்கம் தரும். சமுதாயம் அமைதியாக இயங்கவும் சிந்தனை வழிப்பட்ட செயல்கள் துணை செய்யும். தற்சார்பான உணர்வுகளால் மனிதன் மிக மிகத் தனிமைப்பட்டுவிடுவான். சமுதாயத்திற்கு அந்நியமாகி விடுவான். ஆதலால் சமுதாய அமைப்பு கால் கொள்ளவும் செழித்து வளரவும் பிறர் நலம் நாடும் பெருங் குணம் தேவை. சமுதாய அமைப்பு தோன்றவும் நிலை பெறவும் ஒழுங்குகள் வழிப்பட்ட அணுகுமுறைகளும் ஒழுக்க நெறி வழிபட்ட வாழ்வியலும் தேவை. உறவுகளை வளர்ப்பதில் ஒழுங்குகள் பெறும் பங்கு மிகுதி. காலந்தவறாமை. எல்லைக்கண் நின்று பழகுதல் வேண்டும். எந்தவகையாலும் மறந்தும்கூடத் தம்முடன் பழகுகிறவர்களுடைய காலம், நேரம், சொத்துக்கள் பாழ்படச் செய்தல் கூடாது. அது போலவே பழகுபவரின் தனிப்பட்ட வாழ்க்கையினை அறிந்துகொள்ள ஆசைப்படுதல் கூடாது. பழகுபவன் குற்றங் குறைகளைக் காணக்கூடாது. ஐயங்கொள்ளுதல் கூடாது. ஒரோ வழி தெரிந்திருந்தாலும் அதைப்பற்றி எண்ணக் கூடாது; பேசக் கூடாது. சொல்லக் கூடாது. ஆயினும் நல்ல சூழ்நிலை வாய்க்கும் பொழுது தாயிற் சிறந்த பரிவுள்ளத் துடனும் மருத்துவரின் சிறந்த அன்புடனும் மனங்கொள்ளும் வகை யில் எடுத்துக்கூறித் திருத்தங்காண முயற்சி செய்ய வேண்டும்; இதில் மிகவும் மதி நுட்பம் தேவை.

ரு.XIII.௨௭.

சமுதாயம் மிகவும் விரிந்தது; பரந்துபட்டது. சமுதாயத்தில் அனைவருடனும் நட்புணர்வுடன் பழகுதல் இயலாது. ஒரு சிலருடன்தான் பழக, இயலும். மற்றவர்களுடன் பகை கூடாது. பகை என்பது கூரையில் வைத்த நெருப்புப் போன்றது. சமுதாயத்தில் ஒருவருக்கொருவர் பகைகொள்வதால் சமுதாயம் முற்றாக அழிந்து போகும். யாரோடும் பகைமையைத் தவிர்த்திடும் அறிவு தேவை. நம்முடைய பகைவரித்திலும்கூட பகைமையைத் தவிர்த்திடும் அறிவு நமக்குத் தேவை. பொருளியலில் சார்ந்து வாழும் நட்பும் உறவும் வளரா. பயனும் தரா. அதே போழ்து, சார்ந்து வாழ்தலும் தவிர்க்க இயலாதது. பழகுபவர், ஏதாவது ஒரு வகையில் பழகுபவருக்குத் தவிர்க்க இயலாத நிலையினர் என்ற பாங்கில் வாழ்நிலையை அமைத்துக் கொள்ள வேண்டும். இதனால் பரஸ்பரம் சார்பு அமையும். சார்பு தவறாகாது. பயனேயின்றிச் சுமையாக வாழ்தல் கூடாது. ஏதாவது ஒருவகையில் பயன்படக்கூடிய வாழ்க்கையை மேற்கொண்டால் பெறுவது தவறல்ல. இதற்கு நல்வாழ்க்கையில் பெறுதல் நிகழாது. எடுத்துக் கொள்ளுதலே நிகழும். இத்தகு ஒழுக்கம், உறவு வளரத் தேவை. அகநிலையிலும் புறநிலையிலும் நொய் அள வேனும் பிரிவு இன்றிச் செழித்த அன்போடு நினைந்து நினைந்து வாழ்தலே ஒழுக்கம் செறிந்த வாழ்க்கை.

பழகுதலுக்கு உரியவரை - உறவினைத் தேர்ந்தெடுப்பதில் கவனம் தேவை. பலகாலும் அறிந்து ஆராய்ந்து தெளிந்து தேர்ந்தெடுக்க வேண்டும். தேர்ந்தெடுத்தபின் பிரிதல் கூடாது. “பேயோடு ஆயினும் பிரிவு தீயது” என்பது பழமொழி. நட்புக்கும் உறவுக்கும் மரபு வழிச் சார்புகள் பெரும்பாலும் துணை செய்வதில்லை. உணர்ச்சிப் போக்குகளும் துணை செய்வதில்லை. வாழக்கையின் குறிக்கோள்களே பெரிதும் நல்ல நட்புறவுக்குத் துணை.

குறிக்கோள் என்பது என்ன? குறிக்கோளைத் தேர்வு செய்வதில் அறிவியல் துணை செய்ய வேண்டும். வாழ்வியல்

தனி வாழ்வியல். சமூக வாழ்வியல் என்று இருவேறு நிலையாக அமைந்துள்ளது என்பது தேற்றம். ஆயினும் ஒன்றையன்றி ஒன்று இல்லை. இந்த அறிவியல் உண்மையை உணர்தல் அவசியம். அதுமட்டுமன்றி ஒவ்வொருவருடைய தனி வாழ்விலும் சமூகத்தின் பங்கே பெரும் பகுதியாக அமைந்து கிடக்கிறது. வாழ்வியல் தேவைகளாகிய காற்று, தண்ணீர், உணவு, உணர்வு, அறிவு, மகிழ்ச்சி இவை எல்லாமே சமூகம் உயிர்க்கும் - வழங்கும் கொடைகள் என்பதனை அறிக. தனி உடைமையும் பண மதிப்பீட்டுச் சமுதாயமும் வளர்ந்த பிறகு வேண்டுமானால் பணத்தைக் கொண்டு, சந்தையில் எதையும் பெறலாம் என்ற துணிவில் பலர் சமூகத்தை - உயிர்குலத்தை பேணுவதில்லை. வளர்ப்ப தில்லை. உயிர்ப்பினைத் தந்து வாழ்விக்கும் உயிரிக் காற்று **(Oxygen)** சந்தையில் பணத்தினால் வாங்க முடியுமா? வாழ்வதற்குரிய மூச்சுக் காற்றினை மரங்கள், தாவரங்கள் வழங்கினாலொழிய வேறுவழியில்லை.

ஆதலால் மரங்களை, தாவரங்களை வளர்க்காமல் அவற்றை நாளும் அழித்து வந்ததன் விளைவாக இன்று மழைவளம் குறைந்திருக்கிறது. எந்த ஒரு மனிதனாவது. தன்னிடத்தில் அதிகம் கேட்காமல், கேட்டுத் தொல்லை கொடுக்காமல் அவனுக்கு உயிர்க் காற்றினைத் தந்தும் அவன் வாழும் புவிக்கோளத்தினை வெப்பதட்பத்தினைப் பராமரித்தும் மழையை வரவழைத்து நீர்வளம் பெருக்கியும் உணவுப் பண்டமாகப் பயன்பட்டும் மருந்துப் பொருளாக நோய் நீங்கியும் வாழ்வளிக்கும் மரங்களின்றி மானுடம் இல்லை என்ற அறிவியல் உண்மையை உணர்ந்துள்ளனரா? ஒரு நொடிப்பொழுது மரங்கள் வளர்ப்பில் பாதுகாப்பில் கவனம் செலுத்துகின்றனரா? அதுதான் இல்லை! என்று மானுடன் மரங்களை, தாவரங்களைப் பேணி வளர்க்கத் தலைப்படுகின்றானோ அன்றுதான் துன்பத்திலிருந்து விடுதலை பெறுவான். நாள்தோறும் நூறாயிரக்கணக்கான

மூச்சுக் காற்றினைக் குடிக்கும் மனிதனே! உனக்குத் தேவையான மூச்சுக் காற்றினைப் பெற ஒரு மரமாவது வளர்ப்பாயாக. நல்ல வண்ணம் வளர்ப்பாயாக!

அடுத்துத் தண்ணீர்! “நீரின்றிமையாது உலகு” என்றது திருக்குறள். தண்ணீர் வளம் குறைந்த நாடு நமது நாடு. ஆதலால், இருக்கும் தண்ணீர் வளத்தையும் கிடைக்கும் மழைவளத்தையும் சிக்கனமாகப் பயன்படுத்திப் பாதுகாக்க வேண்டும். தண்ணீரின் தூய்மை காப்பாற்றப்படுவது அவசியம். தண்ணீரின் தூய்மையைக் காப்பாற்றத் தவறினால் பல நோய்கள் தோன்றும். வாழ்க்கையின் நலம் அழியும். மரங்களை வளர்த்து மாமழையைப் பெற வேண்டும்.

அடுத்து உணவு, நமது நாட்டளவில் பெரும்பாலும் ஏழைகள் - நடுத்தர வர்க்கத்தினர் உணவில் போதிய அக்கறை காட்டுவதில்லை. கிடைத்ததைச் சாப்பிடுவார்கள்; கெட்டும் போவார்கள். ஒரு சிலர் சுவைக்காக வயிறுமுட்டச் சாப்பிடுவார்கள். இதுவும் தவறு. ஒவ்வொருவரும் அவரவர் உடல் அமைப்பு, உழைப்பு ஆகியவற்றிற்கு ஏற்ப உணவைத் தேர்ந்தெடுத்து உண்ண வேண்டும். நல்ல மகிழ்வான மனநிலையில் பலருடன் கூடி உண்பது உடல் நலனுக்கு அவசியம்.

அடுத்து உடல், உழைப்பிற்கே உரியது. உடலுக்கும் போதிய உழைப்பு தராவிடின் பயன்படுத்தப்படாத இரும்பு துருப்பிடித்து அழிவதைப்போல், உடல், நோய்வாய்ப்பட்டு அழியும். ஆதலால் உடலுக்கு நல்ல உழைப்புத் தேவை. உழைக்கும் உடம்புடையார் நீடுவாழ்வர். திறமையுடன் வாழ்வர்; புகழ்பட வாழ்வர். இருவேறு பயனும் பெற்றின்புறுவர்.

உடல் எவ்வளவு சிறப்புடையதாக அமைந்தாலும் உடம்பை இயக்கிப் பயன்கொள்ளும் ஆன்மா - உயிர் நல்ல வண்ணம் அமைந்தால்தான் அனைத்தும் சிறப்பாக இயங்க

இயலும். அதனாலேயே மானுட வாழ்க்கையையே "ஆன்மிக வாழ்க்கை'' என்று சிறப்பித்து நமது முன்னோர்கள் வளர்த்தனர். நமது ஆன்மிகம். அறிவியற் சார்புடையதேயாம். ஆனால் காலப்போக்கில் ஆன்மிகம் பயனற்ற சடங்குகளில் சிக்கி, பகுத்தறிவுக்கும் ஞானத்திற்கும் விடை தந்துவிட்டது. ஆன்மாவின் தரத்தை. வாழ்நிலையின் சிறப்பை உயர்த்து வதற்கே கடவுள் வழிபாடு. தத்துவ ஞானம், சமயம் எல்லாம்! ஆனால் இன்றோ ஆன்மிகம், சமயம் ஆகியன ஆன்மாக்க ளுக்குப் புலமும் நெறியும் காட்டி வளர்க்கும் பணியைச் சிறப்பாகச் செய்யவில்லை என்ற வேதனையை வெளிப் படுத்துவது பொழுதுபுலரத் துணை செய்யும் அல்லவா?

அடுத்து, மனிதத்தை வளர்க்கும் பணியில் பங்கேற்கும் இயற்கையை அறிந்தோம்! இந்த இயற்கையைத் தழுவிக் கொண்ட நிலையில் வளரும் மனிதனையும் கண்டோம். இவ்வளவும் சிறப்பாக அமைந்தாலும் -'மனிதம்' - வாழும் மனித சமுதாய அமைப்பு சிறப்பாக அமையாவிடில் எத்தனை வளம் பெற்றிருந்தாலும் அனைத்தும் பாழே! தனி மனிதனே சமுதாயத்தில் தாக்கத்தை - பாதிப்பை உண்டாக்கு கின்றான் என்பது ஒரு சிநதனை! இல்லை, சமுதாய அமைப்பும் நிகழ்வுமே தனி மனிதனிடத்தில் தாக்கங்களை ஏற்படுத்தி இயக்குகின்றன. தனி மனிதன் சமுதாய அமைப்பின் அடிப்படையிலேயே வளர்கின்றான். வாழ்கின்றான் என்பது ஒரு கொள்கை. இதனை,

> "ஆன்றவிந் தடங்கிய கொள்கைச் சான்றோர்
> பலர்யாம் வாழும் ஊரே!"

என்னும் புறநானூறு.

> "மனத்து ளதுபோலக் காட்டி ஒருவற்கு
> இனத்துள தாகும் அறிவு"
>
> -குறள் 454

என்னும் திருக்குறள் ஆகியவற்றால் அறிக! உணர்க!

சமுதாய அமைப்பைச் செழுமைப்படுத்தி வளப் படுத்தினால்தான் தனிமனிதன் வளர்வான். அறிகருவிகள் (பொறிகள்) செயற்கருவிகள் (புலன்கள்) ஆகியன புறச் சூழ்நிலைகளுடனும் சமுதாயத்துடனும் தொடர்பு கொண்டு அத்தொடர்புகளுக்குகேற்பத் தம்மை ஆக்கிக் கொள்கின்றன. வாழ்கின்றன. ஆதலால் தோற்றத்தில், தனி மனிதன் உண்டு. ஆயினும் அவன் ஒருவன் அல்லன். அவன் ஒரு கலவை மனிதன். கற்கும் நூல்களாலும் பழகும் நண்பர்களாலும் வாழும் சமுதாய நிகழ்வுகளாலும் மனிதன் உருவாக்கப்படு கிறான். ஆதலால் சமுதாய அமைப்பை, தனி மனிதனுக்கு ஆக்கந் தரத்தக்கதாக அமைக்க வேண்டும். சமுதாயம் அல்லது சமுதாயம் கண்ட அரசு, தனி மனிதனுக்குச் சலுகை களை மருந்து போல் வழங்கலாம்; உணவு போல் வழங்கி விடக் கூடாது. வளர்ப்புகளிலும் நிதானம் நடுநிலை வேண்டும். அறிவும் திறமையும் பெறத்தக்கவாறு சமுதாய அமைப்பு அமைய வேண்டும். உழைப்பது, உண்பது என்பது உயர்நிலைப் பண்பு என்ற நெறியைச் சமுதாயம் வழங்க வேண்டும். நாட்டுப் பற்றும் மனித நேயமும் விருப்பங்களாக ஏற்றுக் கொள்ளப்பெற்ற சமுதாயம் தேவை. "ஒருவர் பலருக்காகவும் பலர் ஒருவருக்காகவும்" என்ற கொள்கை ஏற்றுக் கொள்ளப்பெற்ற ஒழுக்கமாக, சமுதாயத்தின் நடை முறையில் விளங்க வேண்டும்.

இன்று நம் மக்களிடையே அறிவியல் சார்ந்த சிந்தனை இல்லை; செயலும் இல்லை. பல நூறு ஆண்டுகளாகச் சாதிப் பிரிவினைத் தீமைகளிலும் மதச் சண்டைகளிலும் வறுமை யிலும் கிடந்து உழன்ற வரலாறு மாற்றப்படவில்லை! இந்தத் துன்பந்தரும் சூழலிலிருந்து மீள அறிவியல், சமூக அறிவியல், அரசியல் அறிவியல், பொருளியல் அறிவியல் வழிகாட்ட வேண்டும். பொது மக்களும் ஏற்றுக் கொண்டொழுக வேண்டும் அந்த நன்னாள் வருக! வருக!

# 52. எது வலிமை?

"வலிமையுடையனவெல்லாம் வாழும்" - என்பது உலகியல் நியதி. ஆம்: இயற்கையோடு, பொருந்தா உயிர்க் குலத்தோடு, ஒத்திசைந்து வாரா மனிதகுலத்தோடு போராடிப் போராடி வெற்றிகளைப் பெற்று வாழ்பவனே வலிமையுடைய மனிதன்! வலிமையுடையவன் அவன் வாழும் காலத்திலும் வாழ்கிறான்; அவன் மரணத்திற்குப் பின்னும் வரலாற்று ஏடுகளில் - மக்கள் நினைவில் வாழ் கிறான்! ஆம்! நிலையான வாழ்வுக்கு வலிமை வேண்டும்; வலிமையே வேண்டும்.

வலிமை - எது வலிமை? வலிமையை எப்படிப் பெறுவது? என்ற வினாக்களுக்கு விடை கண்டாக வேண்டும். வலிமைகள் பற்றி விரித்துப் பலவாகக் கூறலாம். அப்படிக் கூறினால் தவறில்லை. ஆயினும் நாம் சில தலைமைத் தகுதி யுடைய வலிமைகளை எடுத்துக் கொள்வோம்! இவற்றுள் முதலிடம் பெறுவது உடல்வலிமை "உடம்பை வளர்த்தேன்; உயிர் வளர்த்தேனே!" என்றார் திருமூலர். உடம்பை வளர்த்தல் என்றால் என்ன? உடம்பின் வலிமையை உடம்பின் பயன்படுமாற்றலை வளர்த்துக் கொள்ளுதல் என்பது கருத்து. ஆம்; உடல் நோயில்லா உடம்பாக - எந்தச் சூழ்நிலையிலும் பயன்படத் தக்க சுறுசுறுப்பும் ஆளுமையும் மிக்க உடம்பாக அமைத்துக் கொள்ளுதல் வேண்டும். "கருவிகள் அனைத்தும் காரியப்பாட்டுக்கே!" என்றொரு முதுமொழி உண்டு. கருவிகளைப் பயன்படுத்த வேண்டும். பயன்படுத்தப் படாத கருவிகள் துருப்பிடித்தும், மட்கியும் அழியும். அது போலவே தான். உழைப்பில் ஈடுபடுத்தப்படாத உடல்திறன் அழியும்; நோய்வாய்ப்படும். உடல் உழைப்பால் வளர்வது; வாழ்வது; ஆதலால், உடலை - உடலின் பல்வேறு பொறிகளையும் புலன்களையும் இயக்குவதன் மூலம் பயன்கொள்ள

வேண்டும். அவ்வழி, உடலை வலிமையுடையதாக வைத்திருக்க முடியும்.

அடுத்த வலிமை அறிவு வலிமை. உடலமைவின் பொறிகளுள் ஒன்றாகிய மூளையின் பாற்பட்டது அறிவு வலிமை. ஆயினும், அறிவைத் தனிநிலையில் வைத்தெண்ணுவது மரபு. மரபு மட்டுமன்று. அவசியமும் கூட! ஏன்? உடல்வலிமைக்கும் கூட அறிவு வலிமை துணையாய் அமைவது. எவ்வெவற்றை உண்பது? எப்படி வாழ்வது? என்றெல்லாம் அறிவுறுத்துவது அறிவுதானே! அறிவு ஒரு சிறந்த கருவி! வலிமை சான்ற கருவி. அறிவைக் கல்வியால் பெறலாம். ஆனால் கல்வியே அறிவு அல்ல. அறிவு நுட்பமானது; நன்மையே செய்வது; வெற்றியே பெறுவது. அறிவில் நல்லது - கெட்டது இல்லை! அறிவு ஒரு போதும் தீமை செய்யாது. ஆனால், அறியாமையே பல சமயங்களில் அறிவு என்று நம்பப்படுகிறது இது தவறு. அறிவு, வேற்றுமைகளைக் கடந்தது. மனித உலகத்தை அணைப்பது; வாழ்விப்பது. இத்தகு அறிவே அறிவு; வலிமையுடைய அறிவு. அறிவு துணிவினைச் சார்ந்தது; சலனமற்றது. இத்தகு அறிவுடையார் எல்லாம் உடையார் என்பது திருக்குறள் கூறும் உண்மை.

அடுத்தது ஆன்ம வலிமை: ஆம்! எல்லாக் கருவிகளையும் வலிமைகளையும் ஆளும் உரிமையும் பொறுப்பும் உடைய ஆன்மா - உயிர் வலிமை உடையதாக இருக்க வேண்டும். ஆன்மா, செத்துச் செத்துப் பிழைத்தால் எங்ஙனம் வலிமை பெறும்? வலிமைசான்ற கருவிகளைக் கையாளும்? துன்பம் - தொல்லைகளால் கவலை வாய்ப்பட்டு, கவலையால் அரித்து அழிக்கப்படும் ஆன்மா வாழ்ந்து என்ன? செத்தால் என்ன? அச்சத்தினின்றும் அகன்று - பயத்தைக் கொண்டு போய்த் தூரத் தள்ளித் துள்ளியெழும் ஆன்மாவே வலிமை உடையது. இடறினும், இடறி வீழ்ந்திடினும், வீழ்ந்து தளர்ந்தே போயினும் நோய்கள் பல தொடரினும் அஞ்சாது - அடிபடும் பந்தைப் போல

எழுந்து நின்று பணிகளைச் செய்யும் ஆன்மா - வலிமை யுடைய ஆன்மா.

"நாமார்க்கும் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை யல்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
இன்பமே எந்நாளும் துன்ப மில்லை
தாமார்க்கும் குடியல்லாத தன்மை யான
சங்கரன் நற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்னும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடிஇணையே குறுகி னோமே!"

(திருநாவுக்கரசு சுவாமிகள்: 6-961)

"உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலமென்
றங்கப் பழஞ்சொற் புதுக்குமெம் அச்சத்தால்
எங்கள் பெருமான் உனக்கொன் றுரைப்போங்கேள்
எங்கொங்கை நின்னன்பர் அல்லார்தோள் சேரற்க
எங்கை உனக்கல்லா தெப்பணியும் செய்யற்க
கங்குல் பகலெங்கண் மற்றொன்றுங் காணற்க
இங்கிப் பரிசே யெமக்கெங்கோன் நல்குதியேல்
எங்கெழிலென் ஞாயிறு எமக்கேலோர் எம்பாவாய்"

(திருவெம்பாவை. 19)

என்றெல்லாம் பாடப் பெற்றுள்ள பாடல்கள் ஆன்ம வலிமைக்குச் சான்றுகளாகும். ஆயினும் ஆன்மாவுக்கு வலிமை சேர்க்கவும் பெற்ற வலிமையைப் பாதுகாக்கவும் துணை தேவை! அங்ஙனம் ஆன்மா நாடி அணையும் துணை வகை இரண்டு. ஒன்று மானுடத் துணை. மானுடத் துணையும் இரண்டு வகையின. ஒருதுணை காதல் வழியது. பிறிதொரு துணை நட்பின் வழியது. இவ்விரண்டும் வகைபட அமைந்தால் வலிமை மிகும். நல்ல காதலி அமைந்தால் இகழ்வார் முன் ஏறு போல் நடக்கலாம் என்று திருவள்ளுவர்

கூறுகிறார். ஆற்றலைத் தந்து வாழ்வளிக்கும் காதலியின் கடைக்கண் பார்வை. தலைவனுக்கு ஒப்பற்ற ஆற்றலை வழங்குவதாக பாரதி கூறுவான். நட்பு பற்றிச் சொல்லவே வேண்டாம்! பழகிய நட்பினால் அமையும் தோழர் வாய்ப்பின் வரலாறு படைக்கலாம். ஆன்மா நாடி அணையும் பிறிதொரு துணை - தணித்துணை ஒன்று உண்டு. அது எது? ஆம்! தனித்துணை - வழித்துணை அது! நரகொடு சொர்க்கம் புகினும் பிரியாத் துணை! அத்துணைதான் கடவுள்! கடவுள் வாழ்த்துப் பொருள் அல்ல! வாழ்வுப் பொருள். அவன் துணை வலிமை சார்ந்தது! கூற்றுவனையும் எதிர் கொள்ளும் வலிமை தரவல்லது கடவுள் துணை!

இத்துணை வலிமைகள் அமைந்தாலும் வலிமை பயன் பட வேண்டாமா? வலிமை வளர வேண்டாமா? வலிமை எதற்கு? கடவுள் துணை என்று சொர்க்கத்தை நிரப்பவா? தோழர்களும்தான் எதற்கு? களித்துப் பேசி மகிழவா தோழர்கள்! காதலியுந்தான் எதற்கு? உடற்பசிக்கும் உறவுக்கும் பிள்ளை பெறவும்தானா? அறிவு வலியும்தான் எதற்கு? விவாதங்கள் நிகழ்த்தவா? இல்லை வாழ்வது எதற்கு? பிழைப்பு நடத்துவது வாழ்வா: என்ன? சீ.சீ நாயும் பிழைக்கும் இந்தப் பிழைப்பு என்றான் பாரதி. வாழ்தல் எதற்கு? வாழ்க்கை குறிக்கோளுடையதாக அமைய வேண்டும். வாழ்க்கைக்குக் குறிக்கோள் தேவை! குறிக்கோள் என்பது என்ன? இந்த உலகத்தில் பிழைத்து விடுவதல்ல. வாழ்க்கையின் உழைப்புத் திறன் மேலும் மேலும் வளர வேண்டும். வையகம் வாழ வாழும் முயற்சிகள் மேற்கொள்ள வேண்டும்; உழைப்பும் வேண்டும். இந்தியாவில் இத்தகு குறிக் கோளுடையவர்கள் சென்ற காலத்தில் பலர் வாழ்ந்தனர். இந்த நூற்றாண்டில் உண்டியே, உடையே, பாலுறவே என உகந்து வாழும் வெற்றர்கள் மிகுதி. ஓர் இளைஞன் பள்ளியிறுதித் தேர்வில் வெற்றி பெறுகிறான்! அவன் மேலும் படிக்க விரும்பவில்லை! தேர்ந்த தொழில் செய்யும் முனைப்பில்லை! எங்காவது ஒரு துப்பரவுத் தொழிலாளி

பணி கிடைத்தால் கூடப் பல்லிளிக்கிறான்! துப்பரவுத் தொழில் கீழான தொழிலல்ல! 'சந்தி பெருக்கும் நல்ல சாத்திரம் கற்போம்' என்பான் பாரதி! ஆயினும் இவனுடைய வயதுக்கும் கல்விக்கும் உரியதொழில் அல்ல. துப்புரவுத் தொழிலைச் செய்யவும் விருப்பம் இல்லை! ஆள்பிடிக் கிறான்! பார்ப்பதோ ஏவலர் வேலை! ஆனால், ஏவலர்க் குரிய பணிசெய்ய விரும்புவதில்லை! எல்லாம் பணம் படுத்தும் பாடு! எந்தப் பணியிடத்திலும் எந்தப் பணியிலும் முறையாக ஈடுபட்டு உழைத்தால் அங்கெல்லாம் கைநிறைய ஊதியம் வாங்கமுடியாதா? பிற்காலச் சேமவைப்பு ஏற்பாடு செய்ய இயலாதா? புதியதொரு தடம் அமைக்கும் உழைப்பைத் தர விருப்பம் இல்லை! முனைப்பில்லை! முழுச் சோம்பல் ஆட்டிப் படைக்கிறது: இந்தச் சூழ்நிலையில் பத்திரமான, பாதுகாப்பான, தப்பாமல் பணம் கிடைக்கக் கூடிய பணியை நாடுகின்றனர்; ஏன் இந்த அவலம்? வாழ்க்கையில் குறிக்கோள் இல்லை!

இளைஞர்களுக்கு இந்த நூற்றாண்டின் குறிக்கோள் எதுவாக அமைய வேண்டும்? அனைவரும் கூடி வாழ்வது இந்த நாட்டில்! நாடு வளம் கொழித்தால்தான் நம் ஒவ்வொருவர் வாழ்விலும் வளம் காண இயலும்! நம்மைக் காப்பாற்றி வாழ்வளிக்கும் இயற்கையைக் காப்பாற்றுங்கள்! மண்ணரிப்பைத் தடுத்து நிறுத்துங்கள்! மண்ணுக்கு உரமிடுங்கள்! மண்ணில் வளரும் மரங்களை இயற்கைத் தாவரங்களைக் காப்பாற்றுங்கள்! உயிர்க் குலத்தை நேசி யுங்கள்! மானுடத்தை மதித்திடுமின்! வளர்வீர்! வளமை யொடு வளர்வீர்! வாழ்வித்து வளர்வீர்!

# 53. *சமுதாயம் செழிக்க

கழனியில் பயிர் செழிக்கக் களை தடை; ஒளி விளக்கின் ஒளிக்குத் தடை புகைக் கரடு; தூய இன்பக்

* வானொலியில்...

காதலுக்குத் தடை காமம். நெஞ்சார்ந்த பக்திக்குத் தடை ஆசை; நெஞ்சு கலந்த நட்புக்குத் தடை நம்பிக்கையின்மை; அறிவார்ந்த ஆள்வினைக்குத் தடை அச்சம்; தெளிந்த ஊற்றுக்குத் தடை பாசி. அதுபோல மனித குலம் செழித்து வளரத் தடை ஒன்றல்ல; பலப்பல. வேளாண்மையில் களை யெடுத்தலும் ஒரு தொழில். நம்முடைய மனித சமுதாயம் செழித்து வளர வேண்டும். அறிவில் செழிக்க வேண்டும். ஆள்வினையில் செழிக்க வேண்டும்! வாய்மையில் செழிக்க வேண்டும். இன்பத்தில் செழித்துக் குலுங்க வேண்டும்; ஆம், வாழ்க்கை வாழ்வதற்கே! இன்பத்தோடு வாழ்வதற்கே!

வாழ்க்கையின் இயற்கை இன்பமே! ஆனால் இன்பம் அருகிக் கிடக்கிறது; துன்பமே சூழ்ந்து கிடக்கிறது. துன்பத்தைக் கண்டு வாழ்க்கையே தீயதென்று புலம்பி அழுபவர்களும் உண்டு. ஆனால் அது வாழும் முறையன்று. திருநாவுக்கரசர் "வாய்த்தது-நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடு மின்" என்று ஆணையிட்டுள்ளார். உலகம் இன்னாததாக இருக்கலாம். ஆனால் இன்னாத உலகத்தை இனியதாக்குதல் மனிதனின் கடமையென்று புறநானூற்று பேசுகிறது. "இன்னா தம்ம இவ்வுலகம் இனிய காண்க" என்பது புறநானூற்றின் ஆணை. துன்பம் மனிதனை அழிக்கும் தரத்தன்று. மனித ஆற்றல் வளரவே துன்பம் துணை செய்யும். இயற்கையில் நிலத்தில், செந்நெல்லும் விளைவிக்கலாம். செங்கரும்பும் பயிர் செய்யலாம். செந்நெல்லும், செங்கரும்பும் பயிர் செய்ய முயற்சி தேவை. ஆனால் பயன்படாத கள்ளி முளைக்க முயற்சி தேவையில்லை. பயன் தரும் மரம் வளர்க்க முயற்சி தேவை. ஆனால் புல்லுருவியோ தானே வளர்கிறது.

வாழ்க்கை செழித்து வளரத் தடையாயுள்ள கேடுகள் களையப்பெறுதல் வேண்டும். அறியாமை ஒரு சாபக்கேடு. விலங்குகள் கால்களால்தான் நடக்கின்றன. மனிதனும் கால் களால்தான் நடக்கின்றான். ஆனால் மனிதனைக் கால்நடை என்று கூறுவதில்லை? ஏன்? மனிதன் கால்களால்

நடந்தாலும் அவனுடைய நடைக்குக் கருத்திருக்கும்: பொருளிருக்கும் என்று சமூகம் நம்புகிறது. அதனால் மனிதனின் ஒழுக்கத்தையே நடையென்று கூறினர். ஆனால் நடைமுறை அப்படியில்லை. மனிதன், தளிர்கள் தளிர்த்துத் தழைக்கும் மரமென விளங்க வேண்டும். அதாவது பழைய வாழ்க்கையின் அனுபவம் என்று பழுப்பும். நேற்றைய வாழ்க்கையின் அனுபவம் என்று தழையும், இன்றையச் சிந்தனையென்ற புத்தறிவாகிய தளிரும் பொருந்தி விளங்க வேண்டும். அவனே மனிதன். சமுதாயம் செழிக்க அறியாமையைக் களைந் திடுவோம். வாழ்வில் புத்தொளி வீசும்; புகழ் பூக்கும்.

விலங்கினங்கள் மேய்க்க மேய்வன. உண்பிக்க உண்பன. வேலைவாங்க வேலை செய்யும் இயல்பின. ஆனால் மனிதன் உண்பிக்க உண்பதில்லை. அவனே உண்கின்றான். மனிதன் தனக்குரிய உணவைத் தானே தேடிக்கொள்ள வேண்டும் என்பது இயற்கையின் நியதி, தனக்கு மட்டுமல்ல. தன்னைச் சார்ந்தோர்க்கும் தேடவேண்டும். அவன் உழைத்து உணவைப் படைத்து உண்பிக்க வேண்டும். ஆக மனிதன் உழைப்பதற்கே படைக்கப்பட்டவன். பிறிதொருவன் வேலை வாங்காமல் தானே வேலை செய்பவன்தான் மனிதன். உழைப்பிற்குரிய ஊக்கக் கிளர்ச்சி அவனுக்கே உரியது. ஆனால் உழைப்பென்றால் உள்ளம் சுருங்குபவர் எத்தனையோ பேர்! "அத்திட்டத்தில் வாழ முடியாதா? ஆண்டவன் கருணை பாலிக்க மாட்டானா?" என்றெல்லாம் ஏங்குபவர் இன்று எத்தனையோ பேர்! திறனறிந்து உழைக்கும் உழைப்புள்ளம் இன்மை ஒரு கேடு. உழைக்காமல் உண்பது பாவத்தில் பாவம். சோம்பித் திரிந்து சுகம் தேடும் கேட்டடினைக் களைவோம். இம்முறையால் பொருளுற்பத்தி பெருகும். சமுதாயம் செழிக்கும்.

விலங்கு தன்னைத்தான் நேசிக்கும். இயற்கை நிர்ப் பந்தத்தால் சில காலம். தான் ஈன்ற கன்றுகளை நேசிக்கும்.

ஆனாலும் தொடர்ச்சியில்லை. மனிதனோ அன்பு காட்டவே படைக்கப் பட்டவன். அவனுடைய உருவ அமைப்பு, மற்றவர்களிடத்தில் அன்பு காட்டவும், அன்பைப் பெறவுமே அமைந்தது. அன்பு மனிதனின் உயிர். அன்பு இல்லா மனிதன் என்புக் கூடு. இன்று சமுதாயத்தை அறித்து அழிக்கும் நோய் அன்பின்மையேயாகும். கோட்டைகள், கொத்தளங்கள், கொலைக் கருவிகள், சிறைச்சாலைகள், சட்டங்கள், காவலர்கள், பூட்டு சாவிகள் இவையெல்லாம் பெருகி வளர்ந்திருக்கின்றன. அன்புத் தேவதையின் மரணக் குழியிலே தானே முன்னர்க்கூறியவை பெருகி வளர்ந்திருக்க வேண்டும். ஈரம், பசும்பல் வளரத் துணை செய்யும், ஈரம் என்ற சொல்லுக்கு அன்பு என்றும் பொருளுண்டு. "ஈரம் அளைஇ" என்பது வள்ளுவம். கடவுளின் மறுபெயரே அன்பு. "அன்பே சிவம்" என்பது திரு மந்திரம். அன்பின்மை சமுதாயத்தைப் பற்றி அலைக்கும் என்புருக்கி நோய். அன்பின்றி வாழும் வாழ்க்கை வெறும் பாழ்! சமுதாயம் செழிக்க அன்பின்மை யாகிய கேட்டினைக் களைவோம்! மனிதன் அகம் விரியும்! நெஞ்சு நெகிழும்: உணர்வு சிறக்கும்: உலகம் தழைக்கும்.

அன்பு சிறைகளைக் கடந்தது. எல்லைகளைக் கடந்தது. அன்பு வாழ நினைக்காது; வாழ்விக்கவே நினைக்கும். இன்று மனிதன் "நான்", 'எனது' என்ற நச்சுப் பாம்புகளால் தீண்டப் பட்டுக் கிடக்கிறான். இந்த நஞ்சு அறிவை அழித்திருக்கிறது. உணர்வை உருக்குலையச் செய்திருக்கிறது. ஏன்? இந்த நஞ்சினால் மனிதன் பேயாகிவிட்டான். ஐயோ; பரிதாபம்! நான் என்பது வாழ முடியாது. 'எனது' என்பது எய்ப்பினில் வைப்பாகாது. "நாம்" என்பது நல்ல மந்திரம். 'நாமில்' நானும் இருக்கிறேன். உலகம் இருக்கிறது. நம்முடையது ஆகா! இந்த சொல்லுக்குத்தான் என்ன அற்புத சக்தி இருக்கிறது! உலகம் தழீஇ வளரும் சொல்! ஒருவருக்காகப் பலர், பலருக்காக ஒருவர் என்ற கூட்டுச் சமுதாய அமைப்பு சொர்க்கத்தின் ஊற்றன்றோ! வள்ளுவம் இந்தத் தூய வாழ்க்கையை "ஒப்புர

வறிதல்'' என்று எடுத்துக் காட்டிற்று. எங்கே அந்த வள்ளுவத்தின் வாழ்க்கை? மனிதனிடத்தில் அடர்ந்து வளர்ந்துள்ள இந்த தன்னலக்காடு அழிக்கப் பெறுதல் வேண்டும். ஆங்கு "நாம்" 'நமது' என்ற பொதுமை நலமிக்க குளிர் நிழல் தரு மரங்கள் வளர்க்கப் பெறுதல் வேண்டும். தன்னலக் காடாகிய கேட்டினைக் களைவோம். சமுதாயம் செழித்து வளரும்.

உலகத்தில் உறவு வளர்வதற்குரிய இன, துணைச் சார்புகளே அதிகம். ஆனால், மனிதன் உறவை வளர்க்க விரும்புகின்றானில்லை. இனம் மறந்து வெறுப்பை வளர்த்துக் கொள்கின்றான். அவ்வழி பகை வளர்க்கிறான். போர்க் களங்கள் காண்கிறான்; ஆள்வினைக்கும், அணைத்தற்கும் தந்த கரங்களை, அடித்தற்குப் பயன்படுத்துகின்றான். கற்காலத்திலிருந்தே மனிதன் இந்த வகையில் கொலைக் கருவிகளின் ஆற்றலைப் பெருக்கியே வளர்த்து வளர்ந்திருக் கின்றான்.

கல்லெறியும் தூரத்திலிருந்த ஆற்றல் கலணாகத் தாண்டி வளர்ந்து, வில் அம்பாக வளர்ந்து, துப்பாக்கியாக வளர்ந்து இன்று இறுதியாக ஏவுகணையில் வந்து நிற்கிறது. அவன் அன்பின் ஆற்றலைப் பெருக்கி வளர்த்தானில்லை. அழிக்கும் கருவிகளின் ஆற்றலைத்தான் பெருக்கி வளர்த்திருக் கிறான். அதனால் எங்கும் அமைதியின்மை! இனிமையான உறக்கம்; இந்த உலகத்தில் யாருக்குத்தான் உண்டு!

ஊர்களை இணைக்கவும அண்டங்களை இணைக்கவும் மண்ணில் சாலைகளைக் கண்டான். விண் வழிப் பயணப் பாதைகளைக் கண்டான். அலைகடலில் வழிகள் வகுத்தான். புறத்தால் இந்த வழிகள் நிலவுலகை இணைத் திருப்பது உண்மை. ஆனால் மனித உள்ளங்களை இணைக்க உயர் சான்றோர் கண்ட நெறிகள் மனிதர்களின் நெஞ்சங்களை இணைப்பதில் இன்னமும் வெற்றிபெறவில்லை. மனித உலகத்தின் ஈடேற்றத்திற்கென்றே கொடுந்துன்பங்களை

அனுபவித்த அப்பரடிகள், ஏசு பெருமான், நபிகள் நாயகம் ஆகியோர் உபதேசங்கள் என்னாயிற்று? எரிநெருப்பில் விழுந்த பொரியென மனிதனின் பகை நெருப்பில் விழுந்து வீணாயிற்றே! மனித குலத்திற்கிடையே பகை வளர்வதற்குக் காரணமான வேறுபாடுகளாகிய கேடுகள் அறவே களையப் பெறுதல் வேண்டும். வேறுபாட்டிற்குக் காரண்மாகிய பிறப்பில் வேற்றுமை பாராட்டும் வேறுபாடுகள் உயர்சாதி, கீழ்ச்சாதி வேற்றுமைகள் அறவே அகற்றப் பெறுதல் வேண்டும்.

நாடு, நாடுகளின் எல்லை ஆகியன நிர்வாக நலன் கருதி அமைந்தவையே! ஆனால் அவை இன்று பிணக்குக்கு வித்தாக அமைந்திருக்கின்றன. நாடு, எல்லை காரணமாக ஏற்படுகிற முரண்பாடுகள் அகற்றப்பெற வேண்டும். "யாதும் ஊரே" என்ற தமிழ் தத்துவம் மனித குலத்தின் வாழ்க்கை நெறியாக அமைதல் வேண்டும். மனித குலத்தில் ஒருவருக்கு ஒருவர் உளங்கலந்த உறவினைத் தோற்றி வளர்க்கவே மொழிகள் தோன்றின. ஆனால் மொழி இன்று வெறித் தனத்தை ஊட்டுகிறது. சொல் மாறுபட்டாலும் பொருள் ஒன்றுதானே! மொழியின் காரணமாக ஒரு மனிதன் பிறிதொரு மனிதனைப் பகைப்பது அல்லது ஆதிக்கம் செலுத்துவது பகை நெருப்பை எளிதில் மூட்டுகிறது. மனிதன் பல்சுவை உணவை விரும்பி உண்பதைப் போல் பன்மொழி உணர்வையும் விரும்பி ஏற்றுக் கொள்ள வேண்டும். சாளரம் சாத்தப்பட்ட வீட்டுக்குள் ஒளியும் இல்லை. உயிர் மூச்சுக்குப் பயன்படும் தூய காற்றும் இல்லை. அதுபோலப் பன்மொழி யறிவும், பல்வகை உணர்வும், இல்லாத மனித குல வாழ்க்கை செழித்து வளராது. ஆதலால் சாதி, குல, சமய, நாடு, அரசியல் எல்லை ஆகிய வேறுபாடுகள் அனைத்தும் சருகென உதிர்தல் வேண்டும். மனிதனை மனிதனோடு மோதவிடும் எந்தவிதப் பகைமைக் கேடும் அறவே களையப் பெறல் வேண்டும்.

மனித சமுதாயத்தைச் செழுமைப்படுத்திப் பண்படுத்தி வளர்க்கவே சமய நெறி தோன்றிற்று: வழிபாடு தோன்றிற்று:

திருக்கோயில்கள் முதலிய வழிபாட்டு நிறுவனங்கள் தோன்றின. ஆனால் இவற்றின் ஒட்டு மொத்தமான பயனென்ன என்று ஆராய்ந்தால் வேதனையே மிகும். அவை தத்துவமாக - வாழ்க்கை முறையாக இருந்தவரையில் பயன் விளைந்ததுண்டு. காலப்போக்கில் அவை நிறுவனங்களாக (Institution) உருமாறி வடிவம் பெற்ற பிறகு, மனித சமுதாயத்தை அருள்நெறியில் வழி நடத்தி அழைத்துச் செல்லும் ஆற்றலை இழந்து விட்டன. சடங்குகளே மிஞ்சின. சாரத்தைக் காணோம். உதடுகளே பேசுகின்றன. உள்ளம் பேசவில்லை. சமயப் பேரொளியைக் கவ்விச் சூழ்ந்திருக்கும் கருமேகத்தை அகற்றியாக வேண்டும். சமயம் சடங்கு ஆசாரக் காடுகளிலிருந்து விடுதலை செய்யப் பெற்றுத் தூய்மையான வாழ்க்கை முறைக்குக் கொண்டுவரப் பெறுதல் வேண்டும். வள்ளுவமும் "மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்" என்று அறை கூவி அழைத்துக் கூறியது. இறைவனை மாளிகையனைய கோவில்களில் எழுந்தருளச் செய்து விட்டு, மனிதன் ஒதுங்கித் தப்பித்துக் கொண்டு ஓடக்கூடாது. மனிதனுக்கு உண்மையில் கடவுள் நம்பிக்கை இருக்குமானால் முதலில் மனத்தைக் கோவிலாக்கட்டும்! மாதேவனை அங்கே கொலுவிருக்கச் செய்யட்டும். அதற்குத் துணிவில்லையேல் இவனுக்கென்ன உரிமை கடவுள் பெயரைக் கூறுவதற்கு?

சமய நெறியை வாழ்க்கையாக்காமல், பிழைப்பு நெறியாக்கும் பெருங்கேடு களையப் பெற்றாலே மனித சமுதாயம் செழித்து வளரும்; இன்பத்தில் தங்கித் திளைக்கும்!

# 54. *தமிழ் இனம்

காலத்தால் முன்னர்த் தோன்றிய மூத்த இனம் தமிழினம் என்பது இன்றைய வரலாற்று ஆசிரியர்கள் முடிபு.

* மண்ணும் விண்ணும்

கு.XIII.28.

உலகு முதலில் நெருப்பு, காற்று, நீர், கல், மண் உயிர்கள் ஆய முறையே தோன்றி வளர்ந்தது. இவ்வளர்ச்சி முறையில் கல் தோன்றி மண் தோன்றுவதற்கு முன்னே தோன்றி மூத்த குடி தமிழ்க்குடி என்று தமிழின் புறத்துறை இலக்கண நூல் - புறப்பொருள் வெண்பா மாலை - பேசுகிறது. இத் தமிழினம் வாழ்ந்த எல்லை விரிந்தும் பரந்தும் கிடந்தது. ஒரு காலத்துத் தமிழகத்து வட எல்லை இமயப் பனிமலை, தெற்கே குமரித் துறை, கிழக்கும் மேற்கும் கடல், என்று,

> "தென்குமரி வடபெருங்கல் குண,
> குட கடலாவெல்லை"

ஒரு புலவர் பேசுகிறார். இப்புலவர் காலத்திற்குமுன் இன்றைய குமரித்துறைக்கு அப்பாலும் விரிந்த தமிழ் நிலம் இருந்ததாகச் சரித்திர ஆசிரியர்கள் கூறுகின்றனர். அப் பகுதிகளை எல்லாம் கடல்கொண்ட கண்டம் - லெமூரியா - என்று சரித்திரம் குறிப்பிடுகிறது. கடல்கொண்ட தமிழ் நிலத்தில் சரித்திரத்தை நுழைந்து ஆராய்ந்து பார்த்தால் கி.மு. 30,000க்கும் அப்பாற்பட்ட பழமைக்குச் செல்லுகிறது. தமிழர் வாழ்வுத் தொடக்கத்தின் தொன்மை. இக்கடல் கொண்ட, தமிழ் நிலத்திலே தமிழும் தமிழ் வளர்த்த சங்கங்களும் தமிழரசர் ஆட்சி முறையும் தமிழ்ச் சமயமாம் சைவ நெறியும் வளர்ந்திருந்தது என்று சரித்திரம் பேசுகிறது. இந்த நாகரிகத்தின் தொடர்ச்சியே சிந்துவெளி நாகரிகம். சிந்துவெளி நாகரிகத்தைப் பற்றி சர்ஜான் மார்ஷல் துரை மகனார் எழுதும் பொழுது அந்த நாகரிகத்தை ஒரு முழு நிலை அடைந்த தனித் திராவிட நாகரிகம் என்று குறிப்பிடு கின்றார். தமிழரைத் திராவிடரென்றும், தமிழ் நாகரிகத்தைத் திராவிட நாகரிகம் என்றும் குறிப்பிடுகின்ற வழக்காறு மிகப் பிற்பட்ட காலத்தில் எழுந்தது ஆகும். எனவே, திராவிடர் நாகரிகம் என்று வருவது தமிழ் நாகரிகமே ஆகும்.

## தமிழ்மொழி

மனித சமுதாயம் கை அசைத்து - சைகை காட்டி - வாழ்ந்த காலத்தில் பைய நாவசைத்தாள் தமிழன்னை என்று கரந்தைக் கவியரசர் கூறுகிறார். மொழி நூல் வரலாற்று முறைப் படிக்கும் தமிழ் மொழி மிகத் தொன்மையான மொழியாகும். இத் தமிழ்மொழியே தென்னாட்டு மொழி களுக்கெல்லாம் தாய்மொழி. இந்திய நாட்டின் மொழிகள் பலவற்றிற்கும்கூட தமிழே மூலமாகும். தமிழ் மொழி காலத்தால் மூத்த மொழி, முதுமொழி, இனிமைப் பண்பு மிக்க மொழி, நெஞ்சோடு நெஞ்சாகக் கலந்து நிற்கும் நிறையுடைய மொழி. வழிகாட்டும் திருமறைகளும், வாழ்வு விளக்கும் இலக்கியங்களும் அளவிலா இன்பந்தரும் பல கலைகளும் பெற்றுப் பொலிவுடன் நின்றுலவும் ஒப்பற்ற ஒரு மொழி, அதுவே தமிழ் மொழி, நமது தாய்மொழியும் ஆகும்.

## மொழிவழி நாகரிகம்

ஒரு மொழியும் அம் மொழியில் அமைந்துள்ள இலக்கியங்களும் வெறும் மொழி இலக்கியம் என்ற அளவோடு அமைந்து விடுவதில்லை. அம்மொழி பேசும் மக்களை நயத்தக்க நாகரிக வாழ்வுப் பாதைக்கு அழைத்துச் செல்லும் சாதனமாகும். மேலும், பண்பட்ட வாழ்க்கையை விளக்கும் கருவியும் ஆகும். மக்கள் நாகரிகத்தைத் தெரிந்துகொள்ளச் சாதனமாக அமைந்துள்ளது, மொழியும் அம்மொழியின் இலக்கியங்களுமேயாகும். தமிழ் மொழியும் அத்தகு பேரிலக்கியங்களைத் தன்னகத்தே கொண்டிருந்தது. அவைகளுள் பலவற்றைக் கடல் கொண்டுவிட்டது. எஞ்சி நிற்பவை சங்க இலக்கியங்கள் என நாம் கொண்டாடும் பத்துப் பாட்டும், எட்டுத் தொகையும், பதினெண்கீழ்க் கணக்கு முதலிய இலக்கியங்களும், தொல்காப்பியம் என்ற இலக்கண நூலுமே ஆகும். தொல்காப்பயித்திற்கும் முந்திய

அகத்தியத்தில் சில பகுதிகளே கிடைத்துள்ளன. இந்த இலக்கிய இலக்கணங்களைப் படிக்கின்றபொழுது தமிழர் நாகரிகம் எவ்வளவு சிறப்புற்றோங்கியிருந்தது என்று அறிந்து கொள்ள முடிகிறது. அன்பின் வழி நின்ற வாழ்வு, வாய்மை நெறி நின்ற ஒழுக்கம், ஈத்துவக்கும் இன்ப நுகர்ச்சி, புலனழுக்கற்ற வாழ்வு, யாதும் ஊரே யாவரும் கேளிர் என்ற விரிந்த நோக்கு, பிறவாமை தரும் பெரு நெறிபற்றி நின்ற கொள்கை முதலிய இவை போல்வன தமிழர் நாகரிகத்திற் சிலவாம்.

இத்தமிழ் நாகரிகம் எகிப்தியர், சுமேரியர், ஆகிய நாகரிகங்களுக்குச் சமகாலத்ததாகவும், சற்று முன்னோடியாகவும் கூட இருந்திருக்க வேண்டும் என்று நம்புவதற்குரிய சான்றுகள் கிடைத்துள்ளன. மேலும், தமிழின நாகரிகமே இன்றைய உலக நாகரிகத்திற்கும் பண்டைய உரோம, கிரேக்க வட இந்திய நாகரிகங்கட்கும் முன்னோடியாய் இருக்கக் கூடும் என்று பழம்பொருள் ஆராய்ச்சிக்காரர்கள் கருது கின்றனர். எனவே, உலக நாகரிகம் பலவற்றிற்கும் தாய்மை நிலை பெற்றது தமிழ் நாகரிகமே ஆகும்.

## பிறவா நெறி

தமிழருக்கு மறு பிறப்புக்களிலும் வினைத் தொடர்ச்சி யிலும் அசைக்க முடியாத நம்பிக்கை உண்டு. இதைச் சங்க இலக்கியங்களும் சிறப்பாகத் திருக்குறளும் தெளிவாக விளக்குகின்றன. தமிழர் பிறப்பிறப்புக்களால் விளைகின்ற இன்ப துன்ப நுகர்ச்சிகளுக்கு அஞ்சியவர்களாய் அதற்குக் காரணமாக இருக்கின்ற பிறப்பையும் கூடப் பேதமை என்று குறிக்கலாயினர். மீண்டும் பிறவா நெறியே தமிழர் விரும்பியது. 'வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை' என்று திருவள்ளுவர் வேண்டுகின்றார். இப்பிறவாமையின் பாற் பட்ட வேட்கையும் வினைநீக்கத்தின் விழைவும் தமிழர் களைச் சிறந்த சமய வாழ்வுடையவர்களாக ஆக்கியது. தமிழ்

மக்களது சமயம் இறை, உயிர், தளை என்ற மூன்று அடிப்படையில் தோன்றி வளர்ந்து விரிவடைந்துள்ளது. உயிர் இயல்பாகவே பாசத் தளையொடு பின்னிக் கிடக்கிறது. தளையினின்றும் விடுபெற்று, இயல்பாகவே பாசங்களி னின்றும் விடுபெற்று இன்பப் பரம்பொருளாய் இலங்கும் சிவபெருமானின் திருவடிகளைச் சார்தலின்மூலம் பிறப்பிறப்புக்களினின்றும் விடுபெற்று, வற்றாத முற்றாத திருவருள் இன்பத்தில் திளைத்து வாழ்கிறது. இதுவே நமது சைவ சித்தாந்த செந்நெறியின் விழுமிய கருப்பொருள். விரிப்பிற் பெருகும், தொகுப்பில் எஞ்சும், காலமின்மை கருதி முடிக்கின்றோம்.

## தமிழர் சமயநெறி

தமிழினம் தமக்கென ஒரு சமயநெறி கொண்டு வாழ்ந்தது. அதுவே சைவ சித்தாந்த நெறி. தமிழினத்தின் சமயப் பண்புகளைப் பற்றிப் பேராசிரியர் சுநிதிக் குமார் சாட்டர்ஜி கூறுவது நம்முடைய நினைவிற்குரியதாகும். வினைப்பயன் பற்றிய கோட்பாடு, பிறப்பிறப்பு பற்றிய கொள்கை, சிவம், அன்னை, திருமால் ஆகிய தெய்வங்களை மையமாகக் கொண்ட ஆன்மீகக் கருத்துக்கள். தீ வேள்விக்கு மாறான வினைமுறைகளை உடைய பூசை என்ற வழிபாட்டு முறை முதலியன தமிழர் வாழ்வினின்றே மற்றையவர்கள் மேற்கொண்டனர் என்பது. திருத்தந்தை ஹீராஸ் ஐரோப்பிய நாகரிகத்தின் இரு கூறுகளாகிய உலகியல் நாகரிகம் ஆன்மீக நாகரிகம் ஆகிய இரண்டிற்குமே மூல முதல் தமிழர் நாகரிகமே என்று இப்பொழுது அறியத் தொடங்கியுள்ளோம் என்று கூறுகிறார். சைவ சித்தாந்தக் கொள்கையானது தமிழரது பேரறிவின் சிறந்த பயன் என்று போப் ஐயர் தமது திருவாசக மொழி பெயர்ப்பின் முகவுரையில் கூறியுள்ளார். இக்கருத்தைக் கனம் கவுடி என்னும் பாதிரியாரும் விரிவாக எடுத்து விளக்கியுள்ளார். அவர் சொல்லுவதாவது. சைவ

சித்தாந்தக் கொள்கையானது தொன்மை நலம் பல அமையப் பெற்றது. இதுவே பழந் தமிழர்களின் சமய நெறியாகும். அணிபெற அமைந்த சமயமாயும் நம்பிக்கைக்கும் நல்வாழ்க்கைக்கும் எடுத்துக்காட்டாக அமைந்த சமயம் ஆகும். இந்தியா முழுவதிலும் கூட சைவ சித்தாந்தமே இந்தியர் நினைவின் சீர்மைக்கும் உயர்தர வாழ்க்கைக்கும் எல்லையாகும் பெருமை படைத்தது என்பதே. இக் கருத்தையே தமிழ் மறைகள் சைவத்தின் மேற்சமயம் வேறில்லை என்றும், சைவ சித்தாந்தமே சித்தாந்தம் என்றும் தமிழர் நெறி முடிந்த முடிபு என்றும் சாற்றுகின்றன. பிற மொழி நாகரிகக் கலப்பிற்கு முன்னர்த் தமிழர் கடவுட் கொள்கைக்குத் திருநெறி என்றும் சிவநெறி என்றும் அருள் நெறி என்றும் பல பெயர்கள் வழங்கி வந்தன. திருநெறிய தமிழ் என்றும் நன்மை பெருகும் அருள் நெறி என்றும் வரும் தெய்வத் திருமறைகளின் வழக்கைக் காண்க. கடவுளுக்குச் சிறந்த தமிழ்ப் பெயராய் நன்மை, நேர்மை, தூய்மை, கருணை, செம்பொருள், இன்பம், மங்களம் என்ற பல பொருள் பயக்கும் சிவம் என்ற சொல் வடமொழிக் கலப்பிற்குப் பின் சைவம் என்றாயிற்று. எனவே, தமிழர் வாழ்வோடு வாழ்வாகத் தொடங்கி-தோய்ந்துகிடந்து வளர்ந்து வாழும் சமய நெறி சிவ நெறியேயாகும்.

## அகமும் புறமும்

மனித இனத்தின் வாழ்வு, அகமும் புறமும் ஒருங்கியங்கி நினைக்கின்ற நினைப்பு செய்கின்ற செயல்களே நல்லின்பம் தருவனவாகவும், நிலை பேறுடையனவாயும் இருக்கும். அகமும் புறமும் ஒருங்கு இயையாதவைகள் சிலகால அளவே நின்று, குறைவுடைத்தாய இன்பமே நல்கும். சிற்சிலபோது இதனால் துன்பங்களும் விளைவதுண்டு. அதனால் அகத்திலே எழும் உணர்ச்சிகளைப் புறத் தோற்றத் திற்கும் பொறிகளின் நுகர்ச்சிக்கும் உரிய முறையில் ஒலி

வடிவு, வரி வடிவு, வண்ணமும் உறுப்புக்களும் பொருந்திய முழு உருவத் தோற்ற வடிவம் முதலியவற்றிற்குக் கொண்டு வருகின்றனர். இது அகத்தில் எழுந்த உணர்ச்சிகளை நிலை நிறுத்தி – நல்லின்பம் தொடர்ந்து அனுபவிப்பதற்காகப் புறத்தே ஆக்கிக் கொண்ட முறை. இம்முறை அமையாதாயின் பொறிகள் உலகியலின் ஆழ்ந்த காலப்போக்கில் அகத்தில் இருந்த நல்லுணர்ச்சியையும் கெடுத்துவிடும். இம்முறையைக் கையாளுபவர்கள் தவம் நிறைந்த ஞானிகளும், அருட்கவிஞர் களும் ஆவர். இத்தகு முறையை அவர்கள் கையாண்டமை யினால் அவர்கள் பெரும்பயன் அடைந்ததோடன்றிப் பின்னர் தம்வழி வரும் பல்லாயிரக்கணக்கான மக்களுக்கும் ஒரு பேருதவியைச் செய்தவர்களானார்கள். உலகில் மிகச் சிலரே அகத்தில் வளர்த்துப் புறத்தேயும் படைக்கும் திறம் படைத்து நல்லருள் நிலை எய்துகிறவர்கள். பெரும்பான்மை யோர் புறச் சாதனங்களினின்று அகத்தை வளர்ப்பவர்கள். ஆனால் அகமின்றிப் புறம் உருவாக முடியாது. சாலை போடுபவரின்றிச் சாலையும் இல்லை, சாலையின் மீது வழி நடப்போரும் இல்லை. ஒரு சிலர் சாலை அமைந்த பிறகு பல்லாயிரம் பேர் அச்சாலை வழி நடந்து ஊர் சென்றடைதல் இயல்பு. அதுபோலத் தவம் நிறைந்த தமிழ்ச் செல்வர்கள் சிலரால் இருளகற்றித் துன்பத்தின் தொடர்வறுத்து இன்பம் பெருக்கிப் பிறவா நெறி அளிக்கும் செம்பொருளினை நினைந்து நினைந்து வாழ்ந்தனர். அச்செம்பொருள் இப்படியன், இந்நிறத்தன, இவ் வண்ணத்தன் என்று எழுதிக் காட்ட முடியாததாக இருந்தாலும், தாம் அனுபவிப்பதற்காக நீக்கமற எங்கும் நிறைந்த அந்தப் பரிபூரணனுக்கு உள்ளக்கிழியில் உரு எழுதினர். எழுதத் துணை நின்றது அனுபவ வாழ்வு. அருளனுபவத்தின் திட்பமும் திறமையும் அதைச் சாதித்தது. உள்ளக் கிழியில் எழுதிய திருவுருவம் “குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற்குமிண் சிரிப்பும்–”, என்று அமுதத்

தமிழில் ஒலி வரி வடிவுகளாய் வெளிப் போந்தது. இவ்வரி வடிவு அருளோடு கலையும் கொண்டு விளங்கிக் கலைஞர் கைத் திறனால் கண்கள் கண்டு களிக்கவும், தீண்டி இன்பம் நுகர்தற்குரிய முறைகளும் திருவுருவ வடிவமாக மலர்ந்தது. இதுவே திருவுருவ வழிபாட்டு முறையில் அமைந்து கிடக்கும் கொள்கையும் படிமுறை வளர்ச்சியும் ஆகும். இங்ஙனம் நமது வழிபாட்டு முறை வளர்ந்து பல்லாயிரம் ஆண்டுகள் ஆகிவிட்டன. நமது சமயத் துறையில் இலிங்க வழிபாடு. பசுபதியாகிய சிவ வழிபாடு, அன்னை வழிபாடு ஆகியவை பதினாயிரக்கணக்கான ஆண்டுப் பழமையும் உலகெங்கும் பரந்த பெருமை உடையனயாகும்.

## தமிழர் சமயமும் சமுதாயமும்

தமிழர் சமய நெறி சமுதாயத்தோடு பின்னிக் கிடந்தது. இத்தகு மாட்சிமை மிக்க வாழ்வு சங்க காலத்திலும் அதற்கு முன்னரும் தமிழர்களிடையே பொருந்தியிருந்தது. "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்பதின் வழிமொழியே "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்ற திருமூலர் வாக்கு. பின்னர் பிறமொழிச் சார்பினருடைய நுழைவோடு பிறப்பால் உயர்வு தாழ்வு கற்பிக்கும் பேதமையும் நிறைந்தது. சாதி குலக்கோத்திரச் சண்டைகள் பெருகத் தலைப்பட்டன. இதனால் சமய வாழ்வில் குழப்பமும், சமுதாய வாழ்வில் வேற்றுமைகளும் வேறுபாடுகளும் இடம்பெற்றன. இந்த நிலையைக் கண்டு ஆற்றொணாத் துயரமுற்று இரங்கிய தமிழினத்தின் தவத்தால் தமிழ் மறை தந்த நால்வர் பெருமக்கள் தமிழகத்தில் தோன்றினர். அவர்கள் ஒரு மகத்தான தமிழர் சமய மறுமலர்ச்சி இய்க்கத்தைத் தொடங்கித் திறம்பட நடத்தி மாநில இயக்கமாக்கினர். தமிழர் சமயத்தைச் சிதைக்க முற்பட்ட பிறமொழி நுழைவு பிறப்பால் வேற்றுமைகள் ஆகிய இரண்டையும் களைய முயற்சித்தனர். அப்பேரியக்கத்தின் வழிநின்று வாழ்வதே

இன்றைய தமிழகத்தின் சமயம். மேலும், அதே காலத்தில் சமுதாயத்தை விட்டு விலகிச் சமயம் தனியே போய்க் கொண்டிருந்தது. சமயம் சமுதாயத்தின் வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் பயன்படாது சடங்கு அளவோடு நின்று கொண்டிருந்தது. இம் மாபெரும் தவறினால் சமுதாயத்தில் வளமற்ற வாழ்வு காணப்பட்டது. இக்குறையை நிறைவாக்குவதே சமய வாழ்வு எனப் பல சமயச் சான்றோர்கள் வாழ்ந்து வழி காட்டத் தொடங்கினர். நடமாடுகின்ற மக்களினமும் தெய்வமே. அவர்களுக்குச் செய்வனவும் இறைவனுக்கேயாம் என்று எடுத்துக் கூறுவதோடு செயலிலும் ஈடுபட்டனர். சித்தத்தைச் சிவன்பால் வைத்து வையகத்துள்ளோர் இன்பத்துடன் வாழ்வதற்குரிய மக்கட் பணிகளில் ஈடுபட்டனர். பசித்தவர்களுக்குச் சோறு போட்டனர்; துணியற்றவர்களுக்குத் துணிகள் கொடுத்தனர். அழுக் குடையை வெளுத்துக் கொடுத்துத் தூய்மையைக் காப்பாற்றினர். பொதுவாகத் தொண்டின் வழியது தூய சமய வாழ்வு என எடுத்துக் காட்டினர். இதனை நமக்குச் சேக்கிழார் அருளிச் செய்த பெரிய புராணம் நன்கு விளக்குகிறது. மக்கள் வாழ்வொடு வாழ்வாகப் பின்னி மக்கள் நலம் பேணும் கொள்கை உடையதொரு சமயம் உலகில் வேறொன்றில்லை என்றே துணிந்து கூறலாம்.

## இன்றைய நிலை

இன்றைய நிலையில் தமிழர் தம் சமய வாழ்வில் இரண்டு பகுதியாகப் பிரிந்து நிற்கின்றனர். பழந்தமிழர் வழி வந்து சங்கச் சான்றோர்களும் நால்வர் பெருமக்களும் வளர்த்துக் கொடுத்த நெறியில் முழு ஈடுபாட்டுடன் நிற்பவர் ஒரு சிலரே. பெயரளவில் நிற்பவர்கள் பெரும் பகுதியினர். அவர்கள், தீண்டாமை, வழிப்பாட்டுத் துறைகளில் தெய்வ தமிழ் இடம் பெறாமை, சமுதாயத்தின் இன்ப துன்பங்களில் பங்குகொண்டு வேண்டிய நல்லறத் தொண்டுகளைச்

செய்யாமை முதலிய குறைகளுடன் பெயரளவில் வாழ்கின்றனர்.

இன்னும் எண்ணிக்கையில் மிகச் சிலர் தமிழர் சமயநெறியை முழுதும் புரிந்து கொள்ள முடியாத நிலையில் மிகப் பிற்போக்கான இங்கர்சால் முதலிய நாஸ்திகவாதி களுடைய வழியிலும் தமிழருக்குத் தொடர்பில்லாத நம்முடைய வாழ்வோடு பொருந்தாத வேறு பல சமயங்களை நல்லன என மாறுபட உணர்ந்து நாடுகின்றனர். இவர்கள் தமிழினத்தின் தன்மானத்தைச் சிதைக்கின்றனர் என்று வருத்தத்தோடு குறிப்பிட வேண்டியிருக்கிறது. இத்தகு நிலை களைச் சிந்தித்துப் பார்க்கும் தமிழன்பர்கள் உடனடியாகப் பழந்தமிழர் நெறியாம் சிவ நெறியை மக்கள் மன்றத்தில் வளர்க்க முன் வருவார்கள் என்று நம்புகின்றோம்.

## நமது கடமைகள்

அவ்வப்பொழுது இனம், மொழி, நாகரிகம், அரசியல் படையெடுப்புக்களால் நம்முடைய தமிழ்ச் சமயத்தில் நுழைந்திருக்கின்ற கொள்கைகளில் தாழ்வில்லாத நன்மை களைக் கைக்கொண்டு தமிழரின் அடிப்படைக் கொள்கைக்குப் புறம்பான சாதி சழக்கு நெறிகளைக் களைந்து நமது உயிரினும் இனிய தமிழ்ச் சமயத்தினை வளர்க்க வேண்டும். மக்களினம் மொழி இவற்றை நடுநாயக மாக வைத்துக்கொண்டு நமது சமயத்தை வளர்க்க எல்லாவகையான பொதுப் பணிகளையும் மேற்கொள்ள வேண்டும். இத்தகு நோக்கத்துடன்தான் தாயகத்தில் அருள் நெறித் திருக்கூட்டம் தொடங்கப் பெற்றுப் பேச்சு, எழுத்து, சமூகப் பணி, மாணவ மாணவி இல்லங்கள், கல்விச் சாலைகள் முதலிய பல துறைகளிலும் ஈடுபட்டுச் சேவை செய்து வருகிறது. இந்தப் புனித அருள் நெறித் தொண்டில் தமிழகத்தின் ஆதினங்கள், மடங்கள், பல்கலைச் செல்வர்கள், பன்மொழிப் புலவர்கள், தேசியத் தொண்டர்கள், இளைய

பல நல்ல ஊழியங்கள் ஆர்வத்தோடு ஈடுபட்டுள்ளனர். அதுபோலவே இந்நாட்டில் வாழும் தமிழ்ப் பெருமக்களும் ஒருமுகமாக நல்ல திட்டத்தோடு செயலில் ஈடுபட்டுச் செந்தமிழையும் சிவ நெறியையும் பேணி வளர்க்க வேண்டியது கடமை, தலையாய கடமையுமாகும்.

# 55. *இளைஞர்களே வேலை இல்லை என்று சொல்லாதீர்கள்!

இந்திய வரலாற்றில் விவேகானந்தர் ஒரு மைல் கல். மைல் கல் மட்டுமல்ல. ஒரு திருப்பு மையமும் கூட.

இந்து மதம் என்பது சும்மா இருப்பது; வினைகளை அனுபவிப்பது; அழுது தீர்ப்பது என்றிருந்த காலத்தில் - "இல்லை, இல்லை! இந்து மதம் அழுது தீர்ப்பதல்ல!" என்று இடித்துக் கூறிச் செயல் தடத்தில் திருப்பிய பெருமை விவேகானந்தருக்கு உண்டு!

விவேகானந்தருக்கு மட்டுமே உண்டு!

"பஞ்சம் என்பது நமது நாட்டைப் பொறுத்தவரை ஒரு தீராத வியாதியாகவே ஆகிவிட்டது. தற்போது இதுபோல வெளிநாடுகளில் எங்காவது இருக்கிறதா? இல்லை! ஏன்? ஏனெனில் அங்கெல்லாம் மனிதர்கள் வாழ்கிறார்கள். இங்கோ உயிரற்ற நடைப்பிணங்கள்தான் வாழ்கின்றன" என்பது விவேகானந்தரின் அருள்வாக்கு.

நாட்டின் இந்த நிலையையும் எண்ணி, விவேகானந்தரின் வாக்கையும் படித்தால் என்ன உணர்வு வரும்?

வறுமைய - ஏழ்மையை எதிர்த்துப் போராடும் குணம் வராதா?

* குமுதம் 16.1.1992

வராது போனால் அவன் மனிதனா? அவனுக்குச் சூடு, சுரணை இருக்கிறது என்று யாரால் நம்ப இயலும்?

விவேகானந்தரின் அடிச்சுவட்டில் வறுமையை - ஏழ்மையை எதிர்த்துப் போராடுவதுதான் குன்றக்குடித் திட்டம்!

இளைஞர்களே!

'வேலை இல்லை' என்று சொல்லாதீர்கள்! முணு முணுக்காதீர்கள்!

விவேகானந்தரின் அடிச்சுவட்டில் எழுந்து நடை போடுங்கள்!

துருப்பிடித்த இரும்பு ஆகாதீர்கள்! காய்ச்சிய இரும்பாக வலிமை பெறுங்கள்!

துருப்பிடித்த இரும்பு அடி தாங்காது! சுக்குத் தூளாகப் போய்விடும்! காய்ச்சிய இரும்பு வலிவும் பெறும்; எந்த உருவத்தையும் பெறும்!

அதுபோலக் கடின உழைப்புக்கு ஆயத்தமாகுங்கள்! வருந்தி உழைக்க மறுக்காதீர்கள்! மறந்து விடாதீர்கள்! மனநிறைவை நாடாதீர்கள்!

பெருந்தவ நோக்கங்களை ஏற்பீர்!

காடுகளை வளர்ப்போம்! கழனிகளைத் திருத்துவோம்! உண்ணும் பொருள்களை விளைவித்துக் குவிப்போம்! பஞ்சத்திலிருந்து நமது சகோதரர்களை மீட்போம்!

இந்தப் போருக்கு ஆயத்தமாகுங்கள். போதும்!

பேச்சுக் கச்சேரி; எரியுங் கட்சி; எரியாத கட்சிச் சண்டைகள் வேண்டாம்.

"சாதி, சமயம், நிறம் வேற்றுமை இல்லாமல் எல்லாரிடமும் எல்லா நிலையிலும் தன்மையை விரும்பும் உணர்வே வேண்டும்." என்பது விவேகானந்தரின் போதனை.

இந்தப் போதனையை வாழ்வாக்க என்ன தயக்கம்?

ஏன் தயக்கம்? தயக்கத்தைத் தூரத் தள்ளுங்கள்! தூக்கத்தை விடுங்கள்!

"சிரத்தைக் கொள்ளுவோம்! தன்னம்பிக்கையுடன் எழுந்து நடப்போம்! பலமே வாழ்வு; பலவீனம் மரணம்!"

-எனும் விவேகானந்தர் வாக்கு நமக்கு வழிகாட்டுவதாக!

# 56. *வாழ்க்கை நெறி - கார்ல் மார்க்ஸ் சிந்தனைகள்

## 1. மாற்றமும் வளர்ச்சியும்

கார்ல் மார்க்ஸ் ஒரு மாமேதை. பிறவிச் சிந்தனையாளர்; பலர். திறமைசாலிகளாக இருக்கலாம். ஆனால், சிந்தனையும் அறிவும் இருக்காது. திறமையைக் கொண்டே காலத்தைக் கடத்துவர் ஆனால். மார்க்ஸ் சிந்தனையும் திறனும் உடையவர். மார்க்சுக்கு முன்பு வாழ்ந்த தத்துவ ஞானிகள் பலர் உலகம் எப்படி இருந்தது? எப்படி இருக்கிறது? என்று எழுதினார்கள். வறுமையின் கொடுமையைப் பாடிவந்த தலைமுறைகள் பல உண்டு! எந்த ஒரு தத்துவ ஞானியும் உலகம் எப்படி இருக்க வேண்டும்? வேண்டிய மாற்றங்கள் என்ன? என்று கூறவில்லை! உலகம் எப்படி இருக்கிறது என்பது பலரும் அறிந்த செய்தியே! இதை எடுத்துக்கூற, தத்துவ ஞானியா வேண்டும்? உலகம் எப்படி இருக்க வேண்டும்? அதற்கு நாம் என்ன செய்ய வேண்டும்? உலகத்தில் உள்ள குறைகள் என்ன? குற்றங்கள் என்ன? இவற்றில் எத்தகைய மாற்றம் வேண்டும் என்று சிந்திக்க வேண்டும். மாற்றமும் வளர்ச்சியும் ஒன்றையொன்று தழுவியன. மாற்றங்கள் இல்லையேல் வளர்ச்சியில்லை.

* சிந்தனை மலர்கள்

வளர்ச்சி வேண்டுமானால் மாற்றம் தேவை என்று உணர்த்திய மேதை மார்க்ஸ்.

இத்தகு சிந்தனை நெருப்பு. தமிழகத்திலும் எழுந்தது, இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன். அந்த நெருப்பின் பொறி தெறித்தது! ஆனால் அந்தப் புரட்சிக்கனலை அவித்து விட்டனர்.

*"இன்னா தம்ம இவ் வுலகம்*
*இனிய காண்க இதன் இயல்புணர்ந் தோரே!"*

என்பது அந்தத் தீப்பொறி! "இனிய காண்க!" என்று கூறியது. இன்னாதனவாகவுள்ள உலகத்தை இனியனவாக அமையும்படி மாற்றுக! மாற்றி வளர்த்திடுக என்பதற்கே! அதுவே கவிஞனின் ஆணை! ஆனால் மரத்துப் போனது நமது மூளை! இன்னாதனவாக உள்ள உலகத்தை மாற்றாமல், வளர்க்காமல் இன்னாதனவற்றையே இனியனவாகக் காண்க என்றனர். ஆன்ம திருப்தியைப் பெறுக என்றனர். ஆன்ம திருப்தியைப் பெறுக என்று கூறியதோடு நிற்கவில்லை. ஆன்ம முயற்சிகளுக்கும் ஊழின் பெயரால் தடை விதித்து விட்டனர். நமது இடைக்காலச் சிந்தனை, கல்வி, வாழ்க்கை முறை அனைத்தும் அறிவியல் சார்ந்த விழிப்புணர்வும் அறிவறிந்த ஆள்வினையுமின்றித் தலைவிதியையே சுற்றிச் சுற்றி வந்துள்ளன. விழிப்புணர்வே இல்லை! சிலர் இத்தகைய மூட வாழ்க்கைக்குச் சமயங்களே காரணம் என்று கூறுவர். இது தவறு. உயர்ந்த சமயச் சிந்தனையாளரான திருஞான சம்பந்தர்.

**அவ்வினைக்கு இவ்வினையும் என்று சொல்லும் அஃதறிவீர்**
**உய்வினை நாடா திருப்பதும் உந்தமக்கு ஊனம் அன்றே"**

என்று முயற்சிக்கு மாறுபட்ட வினை நம்பிக்கையைச் சாடு கின்றார்! அருணகிரிநாதர். "நாள் என்செயும், வினைதான் என்செயும்?" என்று வினாக்கள் எழுப்பி நமக்குத் தெளிவூட்ட

முயற்சி செய்துள்ளார். ஆனால், மூடநம்பிக்கையே வெற்றி பெற்றது. அறிவு வெற்றி பெறவில்லை! மார்க்ஸ். எங்கோ எதிர்வரும் பல நூற்றாண்டுகளுக்கு முன்னால் உலகத்தைக் கொண்டு வந்து நிறுத்தியுள்ளார்.

இனிய அன்புடையீர்! உலகம் இப்படித்தான் இருக்கிறது என்று பேசுவதை ஆமோதிக்காதீர்கள்! இப்படித்தான் இருக்கும் என்று கூறினாலும் ஏற்காதீர்கள்! உலகியல்புகளை மாற்றுவதே, வளர்ப்பதே வாழ்க்கையின் குறிக்கோள்! நமக்குத்தேவை மாற்றங்களும், மாற்றங்கள் வழிப்பட்ட வளர்ச்சியுமேயாகும். இந்த உலகம் இப்படித்தான் இருக்கும் என்று அங்கலாய்த்துக் கொண்டு முணுமுணுப்பதில் பயனில்லை. இந்த உலகம் எப்படி இருக்க வேண்டும் என்று சிந்திக்கவும். சிந்தித்து எடுத்த முடிவுப்படி இந்த உலகத்தை மாற்றவும் நமக்கு உரிமை உண்டு. உரிமை உண்டு என்பது மட்டுமன்று. அதுவே நமது கடமையும் ஆகும் என்பது கார்ல் மார்க்சின் கொள்கை.

சென்ற கால வரலாற்றுக்குள் ஓடி ஒளிந்து கொள்ளாதீர்கள்! மண்பானைக்குள் தலையை விட்டுக் கொண்டு எடுக்கும் முயற்சி ஏன்? புதியதோர் உலகைச் செய்ய வேண்டும்! அந்த உலகம் எப்படி அமைய வேண்டும் என்று சிந்தனை செய்யுங்கள்! முடிவு எடுங்கள்! பிறர்பங்கைத் திருடுபவர்களிடமிருந்து உலகத்தை மீட்பீர்களாக! ஒருவர் எல்லாருக்காகவும், எல்லாரும் ஒருவருக்காகவும் என்ற நியதி, வாழ்வியலாகட்டும்! ஒத்தறிந்து செய்து உறவு கொண்டு வாழுங்கள்! நம்முடைய சமய நெறியில் காலையில் பிரார்த்தனை நெறிமுறை அமைந்தது ஆன்மசோதனைக்காகத்தான். பிழைகளைத் தவிர்த்து, புதுவாழ்வு பெற ஆன்ம சோதனை – தனிமைப்பட்ட பிரார்த்தனை துணை செய்யும்.

நாளும் மாற்றங்கள் தேவை நாளும் வளர்ச்சி தேவை. தேங்கியதெல்லாம் கேடு செய்யும். நமது மரபுகளைக் கூடத்

தேங்கிய நீர்நிலைகளாக ஆக்காதீர்! அவற்றை ஏரிகளாக்குங்கள்! நம்முடைய நாட்டு மக்கள் வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள தேக்கத்தை உடையுங்கள்! மாற்றுங்கள்! வளர்ச்சி காணுங்கள்! சூழ்நிலைமீது பழிபோடாதீர்கள்! வாய்ப்பான சூழ்நிலைகளை உருவாக்குங்கள்! நல்ல வாய்ப்புகளை ! சந்தர்ப்பங்களை எதிர்பார்த்துக் கொண்டு ஏங்கி இருக்கா தீர்கள்! வாய்ப்புகள் உருவாக்கப்படுகின்றனவேயாம்! வாய்ப்புகளை உருவாக்கிக் கொள்ளுங்கள்! கார்ல் மார்க்ஸ் கற்றுத் தந்த வாழ்க்கை இதுவே! மாற்றங்களும் வளர்ச்சியும் தேவையென்பதே மார்க்ஸ் தந்த வாழ்க்கைப் பாடம்! 1.5.90

## 2. உழைப்பு

மானிட வாழ்வின் ஆக்கம் அனைத்தும் உழைப்பின் விளைவே! மானிடத்தின் உடல், உழைப்பிற்காக அமைந்த கருவி! உழைப்பில் ஈடபடாத உடம்பு, பயனற்றுப் போகிறது; நோய்வாய்ப்படுகிறது. வாழ்வு அழிகிறது! உடம்பு - அற்புதமான உழைப்புக் கருவி! இன்று மானிடத்திற்கு மதிப் பில்லை! அங்கீகாரம் இல்லை! இன்றைய மதிப்பீடு, பணத்தைச் சார்ந்திருக்கிறது! இன்றையச் சமுதாயம் பண மதிப்பீட்டுச் சமுதாயம். கார்ல் மார்க்ஸ் இந்தப் பணமதிப் பீட்டு முறையையும் கீழ்மையையும் கதே, ஷேக்ஸ்பியர் போன்ற கவிஞர்களின் மேற்கோள்களிலிருந்து எடுத்துக் காட்டி விளக்குகிறார் ஷேக்ஸ்பியர்:

> "The yellow slave
> Well knit and religious, bless the accursed
> Make the hour leprosy adorned, place theives
> And give them title, knee and approbation
> With senators on the bench".

என்று கூறுகிறார். அதாவது,

*இந்த மஞ்சள் அடிமை*
*மதங்களைச் சேர்க்கவும் பிரிக்கவும் செய்யும்*
*கெட்டவர்களுக்கு ஆசி வழங்கும்*
*குட்ட நோயைப் போற்றச் செய்யும்*
*திருடர்களுக்குப் பட்டம் வழங்கி*
*அரசப் பிரதிநிதிகளோடு சரியாசனமும்*
*பெருமையும் அருளும்.....*

என்பது. ஆனால் பணமோ உழைப்பினால் ஆயது. உழைப்பினாலேயே பணம் படைக்கப்படுகிறது. ஆயினும், செல்வக் குவியல் முறையில் தன்னைப் படைத்த மனிதனையே அடிமைப்படுத்தும் ஆற்றல் பணத்திற்கு வந்துவிட்டது. நாம் இந்தப் பொய்ந்நெறியில் செல்லக் கூடாது. உழைப்பை மதித்து, உழைத்து வாழ விரும்ப வேண்டும். 'பணம் பண்ணும்' வாழ்க்கையை நாம் மேற்கொள்ளும்பொழுது ஒழுக்கத் துறையில் விழிப்பாக இருக்க வேண்டும். பிறரை ஏமாற்றாமல் பிறர் உழைப்பின் பங்கைத் திருடாமல் வாழக் கற்றுக்கொள்! ஏமாற்றவும் கூடாது! ஏமாறவும் கூடாது! உனது உழைப்பின் படைப்பு. உனக்கும் சமூகத்திற்கும் உரியது. இதை யாரும் திருட அனுமதிக்காதே!

உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ? என்பது அனுபவ விஞ்ஞானம். ஆயினும் உழைப்பினால் விளையும் உற்பத்தி சுரண்டப்படும்பொழுது மனிதன் அவனுடைய உற்பத்திப் பொருளிலிருந்து அந்நியமாக்கப் படுகிறான்! காலப் போக்கில் உழைப்புக்கே அந்நியமாகி விடுகிறான். உழைப்பைக் கண்டு அஞ்சுகிறான். நோயைக் கண்டு அஞ்சுவது போல், உழைப்புக்குரிய வாய்ப்புக்களையும் கண்டு அஞ்சுகிறான்! உழைப்பிலிருந்து தப்பித்துக் கொள்ளவே விரும்பும் குணம் வளர்ந்து வருகிறது. இது வாழ்விய லன்று! உழைக்கும் சக்தி, உழைக்க உழைக்கத்தான் வளரும். உழைப்பு பெருகி வளர்ந்தாலே வையகம் இயங்கும். வளரும்; வாழும்!
கு. XIII. ௨௯.

உழைப்புக் குறைந்தால் மனிதகுலத்தின் தேவைகளைப் படைக்க முடியாமல் போகும். மனிதகுலத் தேவைப்பொருள் களை உற்பத்தி செய்ய வேண்டிய உழைப்பு, காலப்போக்கில் ஒரு தனி மனிதன் அன்றாட - சாதாரணமான தேவைகளை அடையும் சாதனமாகத் தரம் குறைந்துவிடும். நமது உழைப்பு. ஒரு பிழைப்புக் கருவியாக இடம் பெற்று விடக்கூடாது. "வெறும் சோற்று"க்காகவோ இந்த உழைப்பு? இல்லை இல்லை! உழைப்பு ஆற்றல் வாய்ந்தது! உலகை இயக்கும் சக்தி வாய்ந்தது! ஆதலால், உழைப்பு ஒரு சாதாரணமான பிழைப்புக் கருவியாகக் கூலிக்கு விற்கக் கூடியதாக இருத்தல் கூடாது! உழைப்பது என்பது நமக்குப் பசி, தாகம், பாலுணர்வு முதலியன இருப்பது போல, ஓர் ஆன்ம குணமாக அமைதல் வேண்டும். பிழைப்பதற்கு உழைப்பல்ல! உழைப்பே, வாழ்க்கை! வாழ்க்கையே உழைப்பு என்பதே மானிட இயலில் கார்ல் மார்க்ஸ் கண்ட நியதி; நீதி!

உழைப்பு இயல்பாக அமைய வேண்டும். பெருமை, அதிகாரம், பணம் ஆகிய தூண்டுதல்களால் இயங்கும் உழைப்பு நிறைநலஞ்சான்ற பயன்தராது அதுபோலவே கட்டுப்பாடு, வலியுறுத்தல், நெருக்கடிகளைத் தருதல் ஆகிய அடிப்படையில் இயங்கும் உழைப்பு, பயன்தராது! உழைப்பு ஓர் உயிர்க்குணமாக ஏன் உயிரியாகவே மாறி உழைத்தல் வேண்டும்.

இறைவன் திருக்காட்சியேகூட. உழைபபாளிகளுக்குத் தான் என்பதை, இறைவன் சந்நிதிமுன் உள்ள எருது - உழைத்து உழுது கொடுத்த (நந்தி) கற்றுத் தருகிறது. நாடாண்ட மன்னனைவிடப் புலன்களை உழுது வெற்றிபெற்ற அறிவு உழைப்பாளியாகிய பூசலார் வரலாறு சிறப்புடையது என்று வரலாறு கூறுகிறது. வைதீகப் புரோகித வாழ்க்கையிலும் உழைத்து வாழும் வேடர் குலம் காட்டும் அன்பு பெரிதென்று கண்ணப்பர் வரலாறு பறைசாற்ற வில்லையா?

ஏன்? இறைவனே ஓயாது உழைக்கும் தொழிலாளி! படைத்தல், காத்தல் இயற்றும் தொழிலாளிதானே கடவுள்! நாம் மட்டும் ஏன் உழைக்காமல் வாழ விரும்ப வேண்டும்? உழைத்து வாழ்வோம்! உழைப்பே வாழ்க்கையாக உருவாகுக!

3.5.90

## 3. மனித நேயம்

"மதம் மக்களுக்கு அபினி" என்று கார்ல் மார்க்ஸ் சொன்னார். ஆம்! அவர் சொன்னது உண்மை! "ஆகா! ஊஹூ! மதத்தை அபினி" என்று மார்க்ஸ் சொல்லி விட்டாரே என்று அங்கலாய்ப்பதில் பயனில்லை. ஏன் சொன்னார்? எதனால் சொன்னார்? எப்படிச் சொன்னார்? என்று ஆய்வு செய்ய வேண்டாமா? உண்மையைத் தேடும் - ஞானத்தைத் தேடும் - ஆவேசம் வேண்டாமா? மார்க்சின் வாசகம்.

> "மதத் தொடர்பான கருத்துகளை வழிபாடு செய்வதை அவர்கள் ஒரு மரபாகச் செய்திருக்கிறார்களே தவிர அவற்றை வளர்ப்பதில்லை - நியாயமான குறிக்கோள் இல்லை"

என்பது மதங்கள் எதற்குத் தோன்றின? ஏன் தோன்றின? மனிதர்கள் அறிவியல் சார்ந்த வாழ்வில் தலைப்பட்ட போது, கடவுள் நம்பிக்கை தோன்றியது. மதம், கடவுளைச் சார்ந்து எழுந்த கொள்கை! கோட்பாடு! தொடக்க காலத்தில் மதம். மனித நேயத்தைக் குறிக்கோளாகக் கொண்டிருந்தது! காலப் போக்கில் மதம் மனிதனை மையமாகக் கொள்ளவில்லை. கடவுளின் பெயரால் புரோகிதர்களையும், புரோகிதர்களைப் பாதுகாக்கும் நிலப்பிரபுக்களையும் முதலாளிகளையும் காப்பாற்றும் சாதனமாக மதம் உருமாற்றம் பெற்று விட்டது. மதம் மதத்தைச் சார்ந்தவர்களிடையே கூடப் பொருளா தாரச் சுரண்டல் முறையில் கலகங்களையும் சண்டைகளையும்

உருவாக்கிறது. மனித குலத்தின் வாழ்வியல் நலனுக்கு உகந்த முறையில் மாறுபாடுகளை முரண்பாடுகளைத் தீர்த்து வைப்பதற்குப் பதிலாக மதங்களே தம்முள் முரண்பட்டு நின்று சண்டை போடலாயின! "அபினி" ஒரு போதைப் பொருள்! அதுபோல "மதம்" என்ற ஒன்றை அனுபவிப்ப வர்கள் மதத்தின் உயிர்நாடிக் கொள்கையாகிய மனித நேயத்தைக் காலப்போக்கில் மறந்தனர். மறந்தது மட்டுமல்ல. மனித நேயத்திற்கு மாறுபட்டும் நடந்தனர். ஏன், மதத்தின் பேரால் மனிதர்களையே கொன்று குவிக்கும் ஈனச் செயல் களுக்கு இரையாயினர். இன்றும் இரையாகிக் கொண்டிருக் கின்றனர். இவர்களுடைய கலவர ஒலியில் தாயுமானவரின் சமரச கீதமும் வள்ளலாரின் சன்மார்க்கமும் நமது காதில் விழவில்லை. காலப் போக்கில் கடவுளையே கூட. மதப் புரோகிதர்கள் கடவுள் பெயரை பிழைப்புக் கருவியாகவே ஆக்கினர். கடவுள் பெயரை துஷ்பிரயோகம் செய்தனர். மானிடத்தை வளர்த்தல் - உயர்த்துதல் என்ற உயர் குறிக் கோளிலிருந்து மதங்கள் விலகி நீண்ட தூரம் சென்றுவிட்டன. இன்று நாம் காண்பதெல்லாம் சுரண்டும் தன்மையும் ஆதிபத்திய குணாம்சமும் சண்டைபோடும் மூர்க்கத்தனமும் உடைய மத அமைப்புகளையே! திருக்கோயில்கள் தேவை! ஆனால், அவை உரிமை பெற்ற - பொருளாதார உரிமை பெற்ற மனிதர்களின் சுய விருப்பத்தில் கட்டப்பட வேண்டும். அன்றே மதம் அபினியாக இல்லாமல் ஆன்மிகமாக விளங்கும். இன்றைய மனிதன் கடவுள் முன்னேகூட, கடவுள் சந்நிதியில்கூட அடிமையாகவே நிற்கிறான். அடிமையாகவே நடத்தப் படுகிறான்! இந்த நிலையில் மானுடம் வெற்றி பெறுவது எங்ஙனம்?

வரலாற்றில் கூட உரோமாபுரி, மதத்தின் செல்வாக்கி லிருந்து விடுபட்ட பின்னரே வெற்றி பெற்றது. இந்தியாவிலும் அண்ணல் காந்தியடிகள் குறுகிய சமய பேதங்களிலிருந்து நம்மை விடுதலை செய்து, இந்தியராக்கிய பிறகுதான்

விடுதலை கிடைத்தது. ஆயினும் நாம் தொடர்ந்து இந்த நிலையைக் கடைப்பிடிக்கவில்லை என்பது உண்மை மட்டு மல்ல; வருந்தத் தக்கதுமாகும்.

மதம், மனித நேயத்தை வளர்க்க வேண்டும். மத அவ நம்பிக்கைகளையும், கோழைத்தனத்தையும் வளர்க்கிறது என்று - கார்ல் மார்க்ஸ் எழுதினார். தத்துவ ஞானிகளின் நோக்கம் மனிதகுல விடுதலையாகவே இருக்க வேண்டும். இன்று தேவை. உண்மையான - முரணில்லாத மனிதாபி மானமே! மலட்டுத்தனமில்லாத உயர்ந்த அன்பு நலஞ் செறிந்த நட்பே தேவை. தான் வேறு, பிறர் வேறு என்ற உணர்ச்சியிருப்பது தவறு அல்லவா? மனிதனின் ஆன்மா ஒளிப்பிழம்பாக வேண்டும். அந்த ஒளி, இந்த வையகம் முழுவதும் பரவி இருளகற்றி இன்பந் தரவேண்டும். நாம் மனித நேயத்தை மையமாகக் கொண்ட வாழ்வை வளர்ப் போம்! கார்ல் மார்க்சின் அடிச்சுவட்டில் கெட்ட போரிடும் உலகத்தைத் திருத்துவோம்!

கார்ல் மார்க்ஸ் மதக் கருத்திற்கு வளர்ச்சியில்லை என்றார். வளர்ச்சியைக் காண்போம்! உயர் நோக்கம் வேண்டும் என்றார்! மதச் சார்பான வாழ்நிலையில் உயர் நோக்கம் காண்போம்! ஒன்றே பரம்பொருள்! மனிதகுலமும் ஒன்றே! ஆம்! மதங்களுக்கு மனிதநேயமே உயர்நோக்கம்! பொதுமையே உயர்நோக்கம்! மனித நேயத்தை ஒழுக்கமெனக் கொள்வோம்! யாண்டும் எங்கும் பொதுமை காண்போம்! போற்றுவோம்!

5.5.90

# 57. பொருளாதார உறவுகள்

இனிய அன்புடையீர்,

மானுட வாழ்க்கையின் முதலும் முடிவுமாக விளங்கும் உந்து சக்தி பொருளாதாரமேயாகும் இந்தக் கொள்கைக்கு உடன்படமாட்டார்கள், மதநம்பிக்கை உடையவர்கள்!

ஆனால், கூர்ந்து நோக்கினால் உண்மை புலப்படும். இதனை மாமுனிவர் மார்க்ஸ் இயக்க இயல் பொருள் முதல்வாதம் என்றார். திருவள்ளுவரும் "பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை" என்றார்.

பொருள் என்பது பணம் மட்டும் அல்ல. இன்று பணமேலாதிக்கம் உள்ள சமுதாய அமைப்பு இருப்பதால் எல்லாம் பணமாகக் கருதப்படுகின்றது. உண்மையில் சொல்லப்போனால் மனித வாழ்வுக்குப் பயன்படக்கூடிய அனைத்தும் பொருள்களே! திருக்குறள் மக்களைக் கூடப் 'பொருள்' என்று குறிப்பிடுகிறது. "தம் பொருள் என்ப தம் மக்கள்" என்பது திருக்குறள். ஆம்! மானுட வாழ்க்கைக்குப் பயன்படக்கூடிய பொருளை உற்பத்தி செய்யும் மக்களைப் பொருள் என்று கூறுவது சரியே! காலப்போக்கில் பொருள் என்ற சொல் - பண்டமாற்றுக்குப் பதில் நாணயமாற்று முறை அறிமுகப்படுத்தப் பட்டதின் விளைவாக - உடைமையைக் குறிப்பதாக மாறிவிட்டது. பொருள்கள் உடைமைகளான வுடன் உடைமைப் பற்று வளர்ந்து வந்துள்ளது. இன்று குடும்பச் சூழலிலிருந்து சமூகம் - நாடு வளர உடைமைப் பற்றே உள்நுழைந்து மனித நேயத்தினையும் உறவுகளையும் உள்ளீடழிந்து வருகின்றது.

உழைப்பும் - அறநெறியும் சாராத உடைமைப் பற்றின் விளைவாகச் சமூகத் தீமைகளாகிய அழுக்காறு, அவா, வெகுளி முதலிய ஒழுக்கக்கேடுகள் நாட்டை அலைக்கழித்து வருகின்றன. இதன் விளைவாக மனித குலத்தின் பீடழிந்து வருகிறது. அதே போழ்து மனித குலத்தை ஆட்டிப் படைக்கும் பொருளாதாரம் வளமாக இல்லை.

பொருளின் தேவை, இயற்கை அமைப்பு பொருள் மனிதனின் படைப்பு ! சில பொருள்கள் இயற்கையாகவும் கிடைக்கலாம்; கிடைக்கின்றன. ஆனாலும் நுகர்வுப் பொருள்கள் அனைத்தும் இயற்கையாய் அமைந்து விடுவ

தில்லை! பல பக்குவப்பட்டால்தான் நுகர்வுக்குரியனவாகும். பொருளுற்பத்திக்கும் சிலபல பொருள்களை நுகர்தலுக் குரியனவாகச் செய்தலுக்கும் உழைப்பு தேவை. உழைப்பு மனிதனுடையது. உடைமை வழிச் சமுதாய அமைப்பு தோன்றிய நிலையில் உடைமைகள் எல்லாரிடமும் இல்லை; இருக்கவும் இயலாது. ஆனால், உழைக்கும் சக்தி எல்லா மனிதரிடத்திலும் உண்டு. **உழைப்புக்கும் பொருளுடைமைக்கும் உள்ள உறவே "வேலை" என்பது. உழைத்துண்ண வேண்டும் என்ற நியாயம், உழைப்பாலாய உணவை உட்கார்ந்து சாப்பிட்டால் அழியும் என்ற கொள்கை அடிப்படையிலே உடைமை வழிப்பட்ட சமுதாய அமைப்பில் உறவுகள் அன்பினடிப்படையில் அமைவதில்லை; செழித்தும் வளர்வதில்லை. உறவை நிர்ணயிப்பதே பொருளாக அமைந்து விடுகிறது.**

உறவு நிலையில் விவாதத்திற்குரிய நிலையை எய்திய பொழுதே ஆட்சி, சட்டங்கள், வழக்குகள், தோன்றுகின்றன. இன்று கணவன் – மனைவி உறவுகளில் 'வரதட்சணை' என்ற பெயரில் சொத்து அல்லவா ஆதிக்கம் செய்கிறது! தந்தை – மகனுக்கு இடையே உள்ள உறவில் சொத்தும் பொருளுமே ஆளுமை செய்கின்றன. இந்த உறவில் பல சமயங்களில் மோதல்கள் ஏற்பட்டுக் கொலைகள் நடந்துள்ளன. ஆக, சொத்து சமூகத்தின் ஆக்கத்திற்குப் பயன்பட்ட அளவுக்கு அழிவையும் செய்திருக்கிறது; பண்பாட்டுச் சிதைவையும் செய்திருக்கிறது. சொத்தால், பொருள்களால் எவ்வளவுதான் தீங்கு ஏற்பட்டாலும் சொத்தையும் பொருளையும் சமுதாயம் இழக்காது; இழக்கத் துணியாது. சொத்துடைமையை, பொரு ளுடைமையைப் பொதுவாக்கினார்கள்; பொதுவுடைமை யாக்கினார்கள். பொதுவுடைமைச் சமுதாய அமைப்பிலும் எப்படியோ சொத்துடைமைகள் உருவாகிவிட்டன; முதலாளிகள் உருவாகிவிட்டனர். ஆதலால், சாத்துடைமை தவிர்க்க இயலாதது; தவிர்க்கவும் கூடாதது. சொத்துடைமைச் சமுதாயம் இருந்தே தீரும். ஒரு சொத்துடைமைச் சமுதாய

அமைப்பில் சமூக உறவுகள் எப்படி இருந்தால் நல்லது என்று ஆராய்ந்து அறிந்து ஒழுகுவதே நல்லது. அறிவுடைமையும் கூட!

சொத்துடைமை காரணமாக எவரும் உழைப்பைத் தவிர்த்தல் கூடாது. உழைப்பது உடைமைக்கு ஆக்கம் தரும். உடல் நலத்தினைத் தரும். எல்லாரும் உழைப்பில் ஈடுபட்டு வாழ்ந்தால் உறவுகள் வளர வாய்ப்புண்டு. எல்லாரும் உழைக்கின்றோம் என்கிற மன அமைதியில் உறவு நிலை நன்றாக அமையும். அதுபோலவே நுகர்வுகளிலும் உள்ள வேறுபாட்டின் இடைவெளி குறைய வேண்டும். நுகர்வுகளில் ஏற்படும் இடைவெளியே சமூகத் தீமைகளுக்கெல்லாம் காரணம். ஒருவன் உடுப்பதிலும் உண்பதிலும் காட்டப்படும் எளிமை சமநிலை உறவுகளை வளர்க்கும்; பாதுகாக்கும். சொத்துடைமை; பொருளுடைமை என்பது பலவீனமான மனிதர்களைக் கெடுக்கும் தன்மை உடையது. அதாவது, கெட்டபழக்கங்கள் கால்கொள்ளும். இந்தச் சூழ்நிலையில் மனிதன் விழிப்பு நிலையில் இருந்து பாதுகாத்துக் கொண்டால் உறவுகள் வளரும்; சொத்தும் பாதுகாப்பாக இருக்கும்.

சொத்தும் பொருளும் இனந்தெரியாத அகங் காரத்தைத் தோற்றுவிக்கும்; தன் முனைப்பைத் தரும். அதனாலன்றோ திருக்குறள்.

> "எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்
> செல்வர்க்கே செல்வந் தகைத்து."
> —குறள் 125

என்று கூறியது. ஆதலால், சொத்து - பொருளுடைமை காரணமாக ஆரவாரமாக நடக்காமல் - ஆடம்பரமாகத் திரியாமல் அடக்கத்துடனும் எளிமையுடனும் வாழ்ந்தால் சமூக உறவுகள் இருக்கும். எந்தச் சூழ்நிலையிலும் சமூக உறவுகள் பாதிக்காது. சொத்துடைமையும் பொருளுடைமையும் சமூக வாழ்க்கையைப் பராமரிப்பதற்காகத்தானே! ஆதலால் சொத்துடைமையின் பயன்களை எல்லாரும் அடையக் கூடிய நிலையில் குறிப்பாக வறுமையும் ஏழ்மையும்

சமூகத்தைத் தாக்கி உருக்குலைத்து விடாமல் சொத்துடைமைகள் மாறும் முறைகளை ஏற்றல் நல்லது. ஒன்றிரண்டு உதாரணங்கள்: திருமண உறவை ஏற்படுத்திக் கொள்ளும் பொழுது சொத்துடைமைக் குடும்பம், சொத்துடைமை இல்லாத அல்லது குறைவாக உள்ள குடும்பத்தில் சம்பந்தம் செய்யலாம். மகப்பேறு இல்லாத சொத்துடையவர்கள் சொத்துடைமை இல்லாத அல்லது குறைவாக உள்ள குடும்பத்தில் மகவு ஏற்கலாம். நமது நாட்டில் அனைவருக்கும் உரிய நலன்கள் அல்லது தேவைப்படும் நலன்கள் இன்னமும் கிடைக்கவில்லை. குடிக்கும் தண்ணீர், பெறும் கல்வி, மருத்துவ வசதி போன்றவை, இன்னமும் எல்லாருக்கும் கிடைக்கவில்லை. ஒரோவழிக் கிடைப்பதும் தரமாகக் கிடைப்பதில்லை இதனால், சமூக ஏற்றத் தாழ்வுகள் அகலமாகிக் கொண்டே போகின்றன. ஏற்றத் தாழ்வுகள் வளர, வளர சமூக உறவுகள் பாதிக்கின்றன. ஆதலால், நிறைந்த சொத்துடையவர்கள் எல்லாருக்கும் நல்ல குடிதண்ணீர் கிடைக்கும் ஏற்பாடுகளுக்குத் தங்களது சொத்துக்களை எழுதி வைக்கலாம்; பயன்படுத்தலாம். பழைய காலத்தில் இங்ஙனம் செய்தார்கள். தண்ணீர்ப் பந்தல் வைத்தார்கள். நகரத்தார் சமூகத்தைச் சேர்ந்தவர்கள் ஊருணிகள் அமைத்தார்கள். இன்று இந்த எண்ணம் பரவலாக இல்லை. ஆனால் தேவை. அதுபோலவே, தரமான கல்வி தேவைப்படும் மக்களுக்குத் தரமான கல்வி - நகர்ப்புற மக்கள் பெறக்கூடிய கல்வி போல பெருமளவிற்கு வசதிகளுடைய கல்வி நிறுவனங்களைத் தோற்றுவிக்கலாம். இந்தப் பணி மூலம் சமூகம் வளரும்; உறவுகளும் ஆழம்பட்டு நிற்கும். இந்த நூற்றாண்டில் வேலை வாய்ப்பின்மை என்பது பரவிவரும் ஒரு தீமை. இத்தீமை உடனடியாகக் கட்டுப்படுத்தத் தவறினால் சமூகம் பல தீமைகளுக்கு ஆளாகும். ஆதலால், படித்த, உழைத்து வாழ்வதில் ஆர்வம் காட்டக்கூடிய இளைஞர்கள் தொழில் செய்து பிழைக்கக்கூடிய வகையில் தொழிற்சாலைகளை அமைத்துத் தரலாம்; அமைத்துத் தர

வேண்டும். இது சொத்துடைமைச் சமுதாயத்தில் நிலவும் உறவுமுறைச் சீர்கேடுகளைக் களைய உதவியாக இருக்கும். சொத்தும் பல்கிப் பெருகி வளரும். இன்று நமது சமுதாயத்தின் வரலாற்றுக்குக் களமாக விளங்குவனவும் நமது முன்னேற்றத்துக்கு உந்துசக்தியாக விளங்குவனவுமாகிய திருக்கோயில்கள் பல இடிபாடுகள் உடையனவாய் இருக் கின்றன. இந்தத் திருக்கோயில்களை எடுத்துத் திருப்பணி செய்து அத்திருக்கோயில்களை மையமாகக் கொண்ட சமுதாயம் அமைக்கும் திருப்பணியில் சொத்து பயன் படுத்தப்படுமானால் சமூக உறவுகள் விரிவாகும்.

மனித சமூக உறவுகள் இன்றியமையாதன. எந்தச் சூழ்நிலையிலும் உறவுகள் காப்பாற்றப்படுதல் வேண்டும். இந்தச் சமூக - மனித உறவுகளைப் பொருளாதாரம் சீரழிக்கிறது. இந்தச் சீரழிவிலிருந்து மனித - சமூக உறவுகளைப் பாதுகாக்க உரிய முயற்சிகள் எடுத்துக் கொள்ளப் பெறுதல் வேண்டும்.

சொத்தும் பொருளாதாரமும் மனித வாழ்க்கையின் சாதனங்களே தவிர, இலக்குகள் அல்ல; குறிக்கோள் அல்ல; பயனுமல்ல. சாதனங்களை வைத்துக் கொண்டு மனிதத்தை இழப்பது பேதைமை. சொத்துடைமைகள் மனிதனை, மனித உறவுகளை நிர்ணயிக்கும் ஆற்றல் பெறக் கூடாது. மனித உறவுகளை அன்புடைமைதான் நிர்ணயிக்க வேண்டும். சொத்துடைமையின் காரணமாக மனிதர்கள் உறவுகளை முறித்துக் கொண்டு கலகம் செய்வது அறியலாம். அதே போழ்து நியாயங்களையும் தேவைகளையும் கவனத்தில் எடுத்துக் கொள்ளாமல் சொத்துக்களை ஆக்கிரமிப்பது அல்லது உரிமைப்படுத்திக் கொள்ள முயற்சி செய்வது வரவேற்கத் தக்கதல்ல. அதுமட்டுமல்ல கண்டிக்கத் தக்கதும் கூட. சொத்தினை பயன்பாட்டு நெறி வழியில்தான் சொத்துடைமை என நியாயமாகக் கொள்ளலாம். பலருக்கும் பயன்படாத சொத்துரிமை விரும்புவது அறநெறியாகாது. இன்றைய தேவையின் அடிப்படையில் அணுக வேண்டும்.

ஒருவருக்குக் குடியிருக்க மனை இல்லை, தேவை, இன்னொருவருக்கு இரண்டாவது மூன்றாவது வீடுகளுக்கு மனைதேவை. வாழ்வதற்கல்ல; சொத்துக்காக என்றால் வாழ்வதற்குத் தேவைப்படுவோருக்கே மனை அவசியம். இங்கு விட்டுக் கொடுப்பதே சமூக உறவுகளைப் பாதுகாக்கும். சமூகம் தேவைகளை உந்து சக்தியாகக் கொண்டு இயங்கு கிறது. இயக்கத்தின் உண்மைநிலை தன்னலமேயாம். இது உண்மை நிலை. இந்த நிலையை எதிர்த்துப் போராடுதலால் பயனில்லை. ஆயினும், உடன்போகவும் இயலாது. ஆதலால், மனித – சமூக உறவுகளை வளர்ந்து வரும் பொருளாதாரம் பாதிக்காமல் செய்ய நல்லவர்களுடன், பொதுநோக்குடைய வர்களுடன் உறவு ஏற்படுத்திச் சமன்செய்ய வேண்டும். வேக மாக வளர்ந்து வரும் ஆடம்பரத்தன்மை வாய்ந்த சுகவாழ்வு நுகர்வுகளின் படைப்பைக் கட்டுப்படுத்த வேண்டும். இன்றி யமையாத் தேவைகள் உடை, உணவு, உறையுள் எல்லாருக்கும் கிடைக்கும் வரையில் எல்லாருமே எளிய வாழ்க்கையை நோன்பாக ஏற்றுக்கொள்ள வேண்டும். இந்த மானுட வாழ்க்கைக்குப் பொருளாதாரம் இன்றியமையாத் தேவை மட்டுமே. ஆனாலும், பொருளாதாரம் வாழ்க்கையின் குறிக்கோள் அல்ல; பயன்பாடும் அல்ல. மனித நேயமும் மனித உறவுகளுமே முதன்மையானவை. இந்தத் தத்துவத்தையே புத்தரும், அப்பரடிகளும் பட்டினத்தாரும் கற்றுத் தந்துள்ளனர். வாழ்தலும் வையத்தை இயக்குதலும் நமது பொறுப்பும் கடமையுமாகும்.

# 58. *தனிமனித உரிமையா சமுதாய உரிமையா?

தனி மனிதனுக்கு உரிமையுண்டா இல்லையா என்பது இங்கு விவாதமேயல்ல. தனி மனிதனுக்கு உரிமையில்லாத

* பொங்கல் பரிசு

நாட்டில் சுதந்திரம் எப்படி இருக்க முடியும்? தனி மனிதனுக்கு உரிமை உண்டா இல்லையா? என்பது பேச்சல்ல! முதன்மைப்படுத்தக் கூடியது. முக்கியத்துவம் கொடுக்கக் கூடியது எது என்பதுதான் பேச்சு. சமுதாய உரிமை என்று பேசும்போதுகூட தனி மனித உரிமை ஒத்துக் கொள்ளப்பட்ட ஒன்றுதான். மலையிலே மழை பெய்து, வாய்க்கால்கள் வழியாக ஓடிக் கழனிகளுக்கு வந்து, மீண்டும் தனித்தனியாய்ப் பயிர்களுக்குத்தானே போகின்றது? அது போல, சமுதாய உரிமை - சோஷலிச உரிமை - பொது உரிமை என்று சொல்லுகின்ற போதும் கூட அது தனிமனிதனை வந்து சாரத்தான் செய்கிறது. எனவே, தலைப்பின் உட்பொருள் - நுட்பம், எது முதன்மைப்படுத்துக் கூடியது என்பதுதான். சமுதாய உரிமை முதன்மைப்படுத்தப் படும்போது, தனிமனித உரிமையை மறுப்பதாகக் கொள்ளக் கூடாது. சமுதாயப் பிரிவிலே தனி மனித உரிமை நசுக்கப்பட வேண்டும் - பொசுக்கப்பட வேண்டும் - ஒடுக்கப்பட வேண்டும் என்று கூறப்படுவது தவறு. அப்படித் தனிமனித உரிமை நசுக்கப்பட்டு - பொசுக்கப்பட்டு - ஒடுக்கப்பட்டு விட்டால் அவர்களெல்லாம் மிருகக் காட்சி கூண்டில் போய் வாழுவதா? தனிமனித உரிமை நசுக்கப்படுவதோ - பொசுக்கப்படுவதோ - ஒடுக்கப்படுவதோ நமது இலட்சிய மல்ல. தனிமனித உரிமை சமுதாயத்திற்குக் கேடு தரும் என்ற ஓர் எண்ணம் வருகிறபோது, தனிமனித உரிமையை ஓர் எல்லைக்குள் கட்டுப்படுத்துவதுதானே தவிர தனி மனித உரிமையை நசுக்குவதும் பொசுக்குவதும் ஒடுக்குவதும் அல்ல சமுதாயத்தின் இயல்பு. எனவே, சுதந்திர நாட்டில் முதன்மைப்படுத்தக் கூடியது தனிமனித உரிமையா சமுதாய உரிமையா? இந்தக் கேள்வியே எப்பொழுது எழும் என்று கருதுகிறீர்கள்? ஓர் எடுத்துக்காட்டுக் கூறினால் நன்றாகப் புரியும்.

ஒரு மிராசுதார் இருக்கிறார். அவருக்கு உள்ளூரிலே இருபத்தைந்து ஏக்கர் நிலம் இருக்கிறது. மற்ற ஊர்களினும்

நாட்டில் சுதந்திரம் எப்படி இருக்க முடியும்? தனி மனிதனுக்கு உரிமை உண்டா இல்லையா? என்பது பேச்சல்ல! முதன்மைப்படுத்தக் கூடியது. முக்கியத்துவம் கொடுக்கக் கூடியது எது என்பதுதான் பேச்சு. சமுதாய உரிமை என்று பேசும்போதுகூட தனி மனித உரிமை ஒத்துக் கொள்ளப்பட்ட ஒன்றுதான். மலையிலே மழை பெய்து, வாய்க்கால்கள் வழியாக ஓடிக் கழனிகளுக்கு வந்து, மீண்டும் தனித்தனியாய்ப் பயிர்களுக்குத்தானே போகின்றது? அது போல, சமுதாய உரிமை - சோஷலிச உரிமை - பொது உரிமை என்று சொல்லுகின்ற போதும் கூட அது தனிமனிதனை வந்து சாரத்தான் செய்கிறது. எனவே, தலைப்பின் உட்பொருள் - நுட்பம், எது முதன்மைப்படுத்துக் கூடியது என்பதுதான். சமுதாய உரிமை முதன்மைப்படுத்தப் படும்போது, தனிமனித உரிமையை மறுப்பதாகக் கொள்ளக் கூடாது. சமுதாயப் பிரிவிலே தனி மனித உரிமை நசுக்கப்பட வேண்டும் - பொசுக்கப்பட வேண்டும் - ஒடுக்கப்பட வேண்டும் என்று கூறப்படுவது தவறு. அப்படித் தனிமனித உரிமை நசுக்கப்பட்டு - பொசுக்கப்பட்டு - ஒடுக்கப்பட்டு விட்டால் அவர்களெல்லாம் மிருகக் காட்சி கூண்டில் போய் வாழுவதா? தனிமனித உரிமை நசுக்கப்படுவதோ - பொசுக்கப்படுவதோ - ஒடுக்கப்படுவதோ நமது இலட்சிய மல்ல. தனிமனித உரிமை சமுதாயத்திற்குக் கேடு தரும் என்ற ஓர் எண்ணம் வருகிறபோது, தனிமனித உரிமையை ஓர் எல்லைக்குள் கட்டுப்படுத்துவதுதானே தவிர தனி மனித உரிமையை நசுக்குவதும் பொசுக்குவதும் ஒடுக்குவதும் அல்ல சமுதாயத்தின் இயல்பு. எனவே, சுதந்திர நாட்டில் முதன்மைப்படுத்தக் கூடியது தனிமனித உரிமையா சமுதாய உரிமையா? இந்தக் கேள்வியே எப்பொழுது எழும் என்று கருதுகிறீர்கள்? ஓர் எடுத்துக்காட்டுக் கூறினால் நன்றாகப் புரியும்.

ஒரு மிராசுதார் இருக்கிறார். அவருக்கு உள்ளூரிலே இருபத்தைந்து ஏக்கர் நிலம் இருக்கிறது. மற்ற ஊர்களினும்

தனிமனித உரிமை வேறு - தனிமனித வளர்ச்சி வேறு. நமது மதிப்பிற்குரிய காமராஜர் அவர்கள் சேவையினால் சிந்தனையால் தன்னை வளர்த்துக் கொண்டவர்கள். தனிமனித வளர்ச்சி அவர்களிடத்திலே இருப்பதைக் காண் கிறோம் - நேருஜியிடத்திலும் அந்தத் தனிமனித வளர்ச்சியை நாம் காண்கிறோம். தனிமனித வளர்ச்சி பாராட்டற்குரியது தான். ஆனால் ஒருவர் ஓராயிரம் வேலி நிலத்திற்கு மிராசு தாராக இருக்க அவரே ஏக போகமாக அந்தப் பெரு நிலத்தை வைத்து அனுபவித்துக் கொள்ள அந்தத் தனிமனித வளர்ச்சி பயன் படக்கூடாது.

தனிமனிதனுடைய வளர்ச்சி பரிணாம வளர்ச்சி இல்லாமல் சமுதாயம் நலம்பெற முடியாது. ஆனாலும், தனிமனித வளர்ச்சியால் சமுதாயத்திற்கு ஒரு தீங்கு வருகிற பொழுது நிச்சயமாக அதனை ஓர் அளவிற்குள், எல்லைக்குள் உட்படுத்தியதாக வேண்டும் என்பதை மறுப்பதற்கில்லை. நேருஜியும் காமராஜரும் தனி ஆற்றலால் தம்மை வளர்த்துக் கொண்டவர்கள். சுதந்திர பாரதத்தில் 46 கோடி மக்களும் நேருஜியின் தலைமைக்குக் கட்டுப்பட்டிருந்தார்கள் என்றால், அது நெருஜியின் தனிமனித வளர்ச்சி. அயூப்கான் போலவோ ஜின்னா போலவோ நேருஜி ஆகியிருந்தாரானால் அவரது தலைமை தூக்கியெறியப் பட்டிருக்கும் என்பதிலே கருத்து வேறுபாடில்லை. தலைமை அமைச்சர்கள் - அனுபவமிக்க வர்கள் ஆகியோர் ராஜினாமாச் செய்ய வேண்டும் என்று ராஜினாமா யோசனையை முதன் முதலில் வெளியிட்ட நமது காமராஜர் முதற் கொண்டு "நேருஜி ராஜினாமாச் செய்யக்கூடாது" என்று கூறக் கூடிய அளவில் நேருஜியின் தலைமை மதிக்கப்படுகிறது - போற்றப்படுகிறது. காரணம் நேருஜியின் தனிப்பட்ட ஆற்றல் - தனிப்பட்ட சக்தி, ஆம். கவர்ச்சிக்கும் சக்தி, இந்தச் சக்தி பலருக்குக் கிடைக்க முடியாதுதான். அதற்குக் காரணம் அன்றே கொஞ்சம் வளர்ந்த சமுதாயத்தில் தோன்றியவர் நேருஜி என்பதுதான்.

பல பேர் அவ்வாறு வளர்ந்த சமுதாயத்திலே தோன்றாதவர்கள். ஆனாலும் அடுத்தடுத்த தலைமுறைகளில் ஊருக்கு ஒரு ஜவஹர்லால் நேரு இருக்க முடியும். அவர் பிறந்து மொழி பயின்று வளர்கிற காலத்திலே இந்த நாடு அடிமை நாடாக இருந்தது. அன்றைக்கு நன்கு வளர்ந்திருந்த ஒரு குடும்பத்திலே அவர் பிறந்தார். அதனால் அவரது வளர்ச்சிக்கு ஒரு வாய்ப்பும் இருந்தது. நம் நாட்டைப் பொறுத்த வரையில் நூற்றுக்கு எழுபத்தைந்து பேருக்கு வாய்ப்புக்கள் இன்மையால் அவர்கள் வளரவில்லை. எனவே தான் நம்முடைய அரசாங்கம் இந்த வாய்ப்புக்களையும் வசதிகளையும் எல்லோருக்கும் வாரி வழங்கும் முறையில் செயற்பட்டு வருகிறது. எல்லோருமே ஜவஹர்லால் நேரு போல வரவேண்டும் என்று ஆசைப்படுகிறது. அதனால், இன்னும் 50 ஆண்டுகள் - இரண்டு தலைமுறைகள் போனால், ஒரு ஆளிடத்தில்தான் தனிமனித வளர்ச்சி இருக்கிறது என்று சொல்லுகிற நிலை இல்லாமற் போய்விடும். இன்னும் 50 ஆண்டுகள் கழித்து நாம் மீண்டும் இங்கு பிறந்தால் அந்த நிலையை நேரில் காணலாம். இல்லை யானால், அப்போதைய வரலாறு அதை உணர்த்தும்.

தனிமனித வளர்ச்சி மிகவும் முக்கியமானது. தனி மனித உரிமை நசுக்கப்பட்டால் ஒரு சமுதாயம் வளர முடியாது. எனவே தனிமனித உரிமை என்றும் நசுக்கப்படாது - நசுக்கப்படக் கூடாது. சோஷலிச பாணிச் சமுதாயத்தில் தனிமனித உரிமை சாவதாகக் கருதக் கூடாது. மாறாக தனிமனித உரிமை காப்பாற்றப்படும்.

தனிமனித உரிமை நசுக்கப்பட வேண்டும் - பொசுக்கப் பட வேண்டும் - பறிக்கப்படவேண்டும் என்பது சோஷலிச பாணிச் சமுதாயத்தின் இலட்சியமல்ல. தனி மனித உரிமை நசுக்கப்பட்டுவிட்டால் - ஒடுக்கப்பட்டு விட்டால் - பிடுங்கப் பட்டுவிட்டால் சமுதாயத்தில் ஒரு தேக்கம் - சூனியம் ஏற்பட்டு விடும். தனிமனித ஆசைகள் - உணர்வுகள்

தூண்டிவிடப் படவேண்டும். இரண்டு சட்டைகள் போடுகிற இடத்தில் 4-வது சட்டை போட வேண்டும் என்ற ஆசை வருகிறது; அது தேசத்தின் மறுமலர்ச்சிக்கு அடையாளம்.

"ஏதோ சினிமாப் பார்த்துத் தகர டப்பாப் பாட்டுக் கேட்டதற்குப் பதிலாக வானொலி கேட்க வேண்டும் என்ற ஆசை தோன்றியிருக்கிறது. அது வளர்ச்சியின் அடையாளம்" என்று நமது காமராஜர் அவர்கள் கூறுவார்கள். நம்முடைய நாட்டில் எல்லாரும் எல்லா நலன்களும் பெற்றுவாழ வேண்டும் என்பதுதான் நமது அரசின் இலட்சியம். இதனால் சமுதாய உரிமை வளர்கின்ற போது தனிமனித உரிமை அழிந்து போகாது. ஆனாலும், நாட்டுக்குப் பயன்படும் பணத்தைத் தனியொருவன் தன் பெட்டிக்குள் வைத்துப் பூட்டி வைப்பதைச் சமுதாயம் அனுமதிக்காது.

தனி மனிதனுடைய சிந்தனையுரிமையை - அறிவுரிமையை அரசு பிடுங்க முடியுமா? தனிமனிதனுடைய பேச்சுரிமைக்கு மரியாதை கொடுப்பது நமது சுதந்திர நாடுதானே! இங்கு சமுதாய உரிமைக்குக் கேடு தரும் தனி மனித உரிமை கட்டுப்படுத்தப்படும். சமுதாய உரிமைக்குக் கேடு தராத தனிமனித உரிமைகள் உயிரினும் இனிதாகப் போற்றப்படும். ஆம் சமுதாயத்திற்குக் கேடு பயக்காத - சமுதாயத்தை அரித்துத் தின்னாத தனிமனித உரிமைகள் தெய்வச் சிலைகளைப் போலத் தூய்மையாகப் போற்றிக் காப்பாற்றப்படும். இதுதான் இந்த நாட்டின் பொதுவிதி. இதற்காகத்தான் இந்த நாடு சுதந்திரம் பெற்றது.

"இந்த நாட்டில் இருக்கிற எல்லா மக்களும் சாதி, இன, மொழி, மத, கட்சி வேறுபாடுகளின்றி எல்லா விதமான உரிமைகளையும் இந்த நாட்டில் பெறுவார்கள் என்பதுதான் நமது அரசியல் சாசனம் - அரசியல் வேதம். அரசியல் சாசனம் வழங்கிய இந்தத் தனிமனித உரிமையை இந்த உலகத்தில் இனி யாராலும் பறிக்க முடியாது என்றாகி

விட்டது. இனி மனித உரிமைக்கு ஆபத்து வரப்போவதே இல்லை. ஆனால், தனிமனிதன் தன் திறமையினால் - போட்டியினால் - வலிமையினால் - வாய்ப்பினால் சமுதாயத்தினுடைய பெருவாரியான உரிமைகளை வாரிச் சுருட்டி முடக்கிக் கொள்ளுவதை அனுமதிக்க முடியாது.

நம்முடைய சுதந்திர நாட்டில் தனிமனித உரிமை போற்றிப் பாதுகாக்கக் கூடியது. ஆனாலும், சமுதாய உரிமைக்குக் கேடுவரும் போது, தனிமனித உரிமையைப் புறக்கணித்துச் சமுதாய உரிமைக்குத்தான் முதன்மை தர வேண்டும். அதுதான் நியதி - அதுதான் நியாயம் - அதுதான் ஒழுக்கம் - அதுதான் தர்மம் - அதுதான் கடவுள் நெறி!

# 59. சேவை சங்கங்களின் பங்கு - பெண்களை அரசியலில் ஈடுபடுத்துவது பற்றிய கருத்து

இந்திய மரபு வழியிலும், சிறப்பாகத் தமிழ் நாகரிக வழியிலும் பெண்களுக்கு உரிமைகளும், மதிப்பீடுகளும் இருந்தன. தலைமகன் பொருளீட்டுவோன் ஆயினும் அப்பொருளை வைத்து நிதி நிர்வாகம் செய்து குடும்பத்தை நடத்தியது பெண்ணேயாம். "வளத் தக்காள் வாழ்க்கைத் துணை" என்பது குறள். காலப்போக்கில் பௌத்த, சமூக, மாயாவாத மதங்களின் தாக்கத்தால் பெண்களின் மதிப்பு குறைந்தது.

பெண்களின் முன்னேற்றம், நாட்டின் முன்னேற்றம். பெண்ணே அடுத்த தலைமுறையின் விழுப்பத்திற்கும் முன்னேற்றத்திற்கும் பொறுப்பேற்கிறாள். பெண்களுக்குக் கல்வி தேவை; சொத்துரிமை தேவை. ஆயிரம் தான் பணத்தை - பணத்தின் மதிப்பீட்டால் குறைத்துப் பேசினாலும் சமுதாயத்தில் பணத்திற்கு இருக்கிற மதிப்பு

ஒருபொழுதும் குறையாது. திருக்கோயிலில் சுவாமியைப் பிரதிஷ்டை செய்யும்பொழுது கூடப் பணம் போட்டுத்தான் பிரதிஷ்டை செய்கின்றோம். ஆதலால், பெண்களுக்கு என்று சொத்தும் தனி வருவாயும் இருப்பது அவசியம். ஆதலால், சேவைச் சங்கங்கள பெண்கள் முன்னேற்றத்திற்கு அடியிற்கண்ட பணிகளைச் செய்ய வேண்டும்.

1. பெண்களுக்கு உயர் கல்வி, தொழில் கல்வி வரை தடையின்றி வழங்க வேண்டும்.
2. பெண்களின் திருமணங்கள் அவர்களுடைய விருப்பத்திற்கு ஏற்றார்போல நடைபெற வேண்டும்.
3. பெண்கள் வேலை வாய்ப்புப் பெறத்தக்க முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும்.

பெண்கள் வேலைக்குப்போவது, பொருள் ஈட்டுவது என்ற நெறிமுறை தோன்றியபின், பெண்களின் வேலைச் சுமை கூடியிருக்கிறது. அலுவலங்களில் – பள்ளிகளில் ஏழு அல்லது எட்டு மணி நேரம் வேலை பார்த்து மீண்டும் வீட்டுக்குச் சென்று ஒரு மனைவி – தாய் என்ற அடிப்படையில் அமைந்த பணிகளையும் செய்ய வேண்டியிருக்கிறது. ஒரு சில ஆண்களே மனைவியின் வீட்டுப் பணிப் பொறுப்பில் பங்கேற்கிறார்கள். பெரும்பாலோர் பங்கேற்பதில்லை. அதனால், பெண்களின் உடல் நலத்தில் பாதிப்பு ஏற்படுகிறது. குழந்தைகளையும் முறையாக, நன்றாக வளர்க்க முடிவ தில்லை. ஆதலால் அரசு, பெண்களுக்கு அலுவலக நேரத்தில் சலுகை தர முன்வரவேண்டும். பெண்களின் உரிமை மதிப் பீடுகள் மாறி வருவது உண்மை. இருப்பினும் நிலத்தெளிதல் போலத்தான் இருக்கிறது. இன்னமும் பெண்களைப் பொறுத்தவரையில் பொழுது விடியவில்லை. ஆண்களின் மேலாதிக்கச் சமுதாயத்தின் இறுக்கமான பிடிகள் அசைவு கண்டுள்ளன; ஆனால் நெகிழ்த்து விடவில்லை; நெகிழ வைக்க வேண்டும.

பெண்களை விளம்பரப் பொருளாகக் கருதும் போக்கை எதிர்த்து, சேவைச் சங்கங்கள் போராட வேண்டும். இன்றைய இதழ்களில், திரைப்படங்களில் பாலியல் மிகுதியாக இடம் பெற்று வருகின்றன. இவற்றைத் தவிர்க்க வேண்டும். பெண்களுக்கு எதிராக இயற்றப்பெறும் எல்லா விதக் கொடுமைகளையும் சேவைச் சங்கங்கள் எதிர்த்துப் போராட வேண்டும்.

பெண்கள் அரசியலில் ஈடுவடுவது வரவேற்கத்தக்கது. நாட்டில் சமநிலையில் வாழும் பெண்கள், இந்த நாட்டின் மக்களாட்சி முறையில் பங்கேற்காது போனால், அரசியல் முழுமை பெறாது. ஆனால், நமது நாட்டுப்பெண்கள் அரசியலில் ஈடுபட நம்முடைய நாட்டு அரசியலின் தரமும் வளர வேண்டும். பெண்களை இரண்டாம் நிலையினராகக் கருதி இடம் ஒதுக்கீடு செய்தல் கூடாது. பெண்களுக்கு என்று தனித் தொகுதிகள் ஒதுக்கலாம்; ஒதுக்க வேண்டும். பெண்கள் என்பதற்காக மட்டும் அரசியலில் இடம் பிடித்தல் கூடாது. அரசியல், சமூகம், பொர்ருளாதாரம் ஆகிய துறைகளில் தேர்ந்த கல்வியும் ஞானமும் உடைய பெண்கள் இடம் பெற வேண்டும். சமுதாயத்தில் பெண்களுக்குச் சொத்துரிமையும் அரசியல் உரிமையும் இன்றியமையாதன. இவற்றை நமது பெண்கள் அடைய - அனுபவிக்க சேவைச் சங்கங்கள் முயல வேண்டும்.

# 60. *அன்புச் செல்விக்கு

## (திருமண வாழ்த்து)

அன்புள்ள செல்வி!

நல்வாழ்த்துக்கள்!

உனக்குத் திருமணம் நடைபெறுகிறது. உன்னுடைய திருமண வாழ்க்கை புதிய சூழ்நிலைகளுக்கு ஏற்ப அமைந்திட

* செல்வி ச. முத்துலட்சுமி என்ற ஜெய திருமண நாள் 6.7.1994 வெளியீடு

உன்னை ஆயத்தப்படுத்திக்கொள்! நாற்றங்காலில் நாற்று வளரும்! பருவம் வந்தவுடன் பறித்துக் கழனியில் நடப்பெறும். அந்த நாற்று பயிராகக் கழனியில்தான் வளர வேண்டும். கதிர் ஈன வேண்டும். கழனி பிடிக்கவில்லை என்று, திரும்ப நாற்றங்காலுக்கும் நாற்றுப் பயிர் வர இயலுமா! அது போலத்தான் பெண்! பெண்ணுக்குப் பிறந்த வீடு நாற்றங்கால்! திருமணம் செய்து கொண்டு புகும் வீடு கழனி. அப்பரடிகளும் தேவாரத்தில் "அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தை" "தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே!" என்றார். ஆதலால் நீ மனைவியாகச் செல்லும் வீடு, ஊர் இவற்றின் சூழ்நிலைகளுக்கு ஏற்ப வாழக் கற்றுக்கொள்! பழகிக்கொள்! நாம் இங்ஙனம் கூறுவது ஒத்துப்போவதற்குரியது.

திருமணத்திற்குப் பிறகு இயல்பாகவே கணவனுக்கும் சரி, மனைவிக்கும் சரி பழக்கங்கள் மாறும்! இஃது இயற்கை! ஆம்! தம்முள் மாறி அன்பு காட்டுவதால் சுவை முதலியன கணவனுக்கு மனைவியைச் சார்ந்தும் மனைவிக்குக் கணவனைச் சார்ந்தும் ஏற்படுகின்றன. ஆதலால் கணவன் உவப்பனவற்றை உவந்து ஏற்றுக்கொள்! கணவனின் சுற்றத்தை உன் சுற்றமாக ஏற்றுக் கொள்! தமிழ் மரபில் சுற்றம் பேணல், குடி செயல் போன்ற அறங்கள் இல்லறத்தார் செய்ய வேண்டியவை. அந்த அறங்களை உன் கணவன் செய்வதற்குத் துணையாக இரு. குடும்பத்தின் சூழலில் அமைதி நிலவினால்தான் மகிழ்ச்சியுடன் வாழ முடியும். ஆதலால், எந்தச் சூழ்நிலையிலும் குடும்பத்தின் அமைதியைப் பாது காத்துக் கொள்ளத் தவறிவிடாதே!

நீ, படித்த பெண். உனக்கு அதிகம் எழுத வேண்டுமா என்ன? நீ, கணவன் வீட்டுக்குப் போகும் பொழுது திருக் குறளை எடுத்துக் கொண்டு போ! அடிக்கடி திருக்குறளைப் படி! திருக்குறள் காட்டும் நெறியில் வளர்க! வாழ்க!

திருக்குறள், குடும்பத் தலைவியை "வாழ்க்கைத் துணை நலம்" என்று போற்றுகிறது. தலைவனுக்குத் தலைவி

இல்லறத்துக்கு வாய்த்த துணை என்று வாளா கூறாமல் அதன் பயனாகவே "துணை நலம்" என்று சொல்லும் பாங்கை உய்த்தறிக.

கற்பு, நுண்ணிய நலமுடையது. அன்பின் ஆக்கம் கற்பு. மனம், வாக்கு, உடலைக் கடந்தது கற்பு. இத்தகு புனிதக் கற்பைச் சிறை காக்க இயலாது. தலைவனாலும் காத்தல் இயலாது. ஆதலால் 'தற்காத்து' என்றார். காமம் ஒரு பசி, பசி தீர்த்துழியன்றி வேட்கை தீராது. கணவனின் கற்பினைப் பேணிக் காக்க வேண்டிய பொறுப்பும் தலைவியிடமே உள்ளது. ஆம்! தலைவனைப் பரத்தையின் வழிச் செல்லாமல் தடை செய்து காத்துக் கொள்ள வேண்டிய பொறுப்பு, தலைவியினுடையதேயாம்.

தலைவன் - கணவன் புகழ் பெரியது. அது வழிவழியாக ஈட்டப்பட்டதாகக் கூட அமையலாம். கணவன் பீடுநடை போட வேண்டுமானால், தலைவி - வாழ்க்கைத் துணை நலம் வளத்திற்குத் தக்க வாழ்வு அமைத்து 'இல்லை' என்ற சொல் இல்லாமல் செய்து. வருகின்ற விருந்தினை உபசரித்து அனுப்புவாளாயின் அவள்தம் குடும்ப நிர்வாகம், அன்பியல் தழுவிய வாழ்வியல் தலைவனுக்கு - கணவனுக்குப் பெருமையைத் தருகிறது. ஒரோவழி இழுக்கு வந்தாலும் அந்த இழுக்கு வழுக்கலாகிவிடாமல் தடுத்து மடை மாற்றி வாழ்வியலைச் செப்பம் செய்து உயர்த்துவதே வாழ்க்கைத் துணை நலம். திருநீலகண்டர் மனைவியும் கண்ணகியும் இதற்கு எடுத்துக்காட்டாவர்.

கண்ணகி தன் கணவனின் புகழை, தன் குடும்பப் புகழைக் காக்கவே பாண்டியனின் அரசவையில் போராடினாள். கணவனின் புகழைக் காத்தல் வேண்டும். குடும்பத் தலைமகள் - வாழ்க்கைத் துணை நலம் சோர்வற்றவளாகத் திகழ்தல் வேண்டும். வாழ்க்கைத் துணைநலமே இன்பத்திற்கு

- அறத்தின் ஆக்கத்திற்கு, புகழுக்கு - அனைத்திற்கும் அடிப்படை.

> *"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற*
> *சொற்காத்துச் சோர்விலாள் பெண்"* -குறள் 56

என்பது திருக்குறள்.

விருந்தோம்பல் என்பது உலகத்தழீஇய பண்பு. நமது நாட்டில் விருந்தோம்பல் பண்பைப் பாராட்டிப் புகழாத இலக்கியம் இல்லை. தொல்காப்பியம் முதல் திருஞான சம்பந்தர் தேவாரம் வரை விருந்தோம்பல் பண்பு பாராட்டப் படுகிறது. பெரியபுராணத்தில் விருந்தோம்பற் பண்பு போற்றப்படுகிறது.

விருந்தினர்கள் - புதியவர்கள்; முன்பின் அறிமுகம் ஆகாதவர்கள். இது மரபுவழிக் கருத்து. வீட்டிற்கு வரும் விருந்தினரை இனிய முகத்துடன் வரவேற்று உணவளித்து உபசரிக்க வேண்டும். உணவைவிட உபசரணை முக்கியம். உபசரணையின் தரம் குறைந்தால் விருந்தினர் வருந்துவர்; விருந்தினரை உபசரிப்பது ஒரு பண்புமட்டுமல்ல; கலையும் கூட; இல்லற வாழ்க்கையின் கடமை வரிசையில் விருந் தோம்பலும் இருக்கிறது.

செல்வி! நீ எப்போதும் விருந்தினரை வரவேற்று உபசரிக்க ஆயத்தமாக இரு! குறைந்த நேரத்தில் சமைக்கக் கூடிய பண்டங்களைச் சேகரித்து வைத்துக் கொள்! கணவன் வீட்டிலிருக்கும் பொழுது விருந்தளிப்பது என்பது முறை. தவறுகள் நிகழாமல் தவிர்க்க இது அவசியம். கூடுமான வரையில் விருந்தினரை அழைப்பது, குறித்த நாளில் குறித்த நேரத்தில் வரும்படி அழைப்பது ஆகிய நற்பழக்கங்களை நீயும் பழகிக்கொள்; விருந்தினரையும் பழக்கு.

நமது நாட்டில் விருந்தினர் திடீரென்று வந்து விடுவர். கணவனும் வீட்டில் இல்லை. என்ன செய்வது? அறச்சங்கட

மாகி விடும். எனவே, ஒரு மாதத்தில் சில நாட்கள் விருந்தினர்களுடன் இருப்பது, கூடி உண்பது என்ற நல்ல பழக்கத்தை நடைமுறைப்படுத்தலாம். இஃது ஒரு நல்லமுறை. விருந்தோம்பல் மூலம் சுற்றம் விரிவடையும்; மன அமைதியுடன் கூடிய மகிழ்ச்சியுடன் வாழலாம்! விருந்தோம்புக! விருந்தோம்புதலைக் கடமையாகக் கொள்க!

நீ, குடும்ப அடிப்படையிலும் சுற்றத்துச் சூழ்நிலையிலும் பலருடன் கூடி வாழும் நிலை உருவாகியிருக்கிறது. இங்ஙனம் கூடிவாழ்தல் ஒரு கலை; பண்பு; நாகரிகம். ஆயினும் கூடிவாழ்தல் எளிதான ஒன்றல்ல.

கூட்டு வாழ்க்கைக்கு முதற்பகை அழுக்காறு. "அழுக்காறு என ஒருபாவி" என்று திட்டித் தீர்ப்பார் திருவள்ளுவர். ஆம்! மற்றவர்களைப் பார்த்து அழுக்காறு கொள்ளாதே! மற்றவர்களுடைய அழகை நீயும் ஆராதிக்கக் கற்றுக்கொள்! மற்றவர்களுடைய திறமையைப் போற்றிப் பாராட்டி உன்திறமையை வளர்த்துக் கொள்க!

ஆசைப்படாதே! - இது என்ன துறவிக்கு உபதேசமா? இல்லை, இல்லை! இல்லறத்தில் வாழப்போகும் அருமைச் செல்விக்குத்தான் ஆலோசனை! ஆம்! மற்றவர்களிடம் இருப்பதற்காக நீயும் வேண்டும் என்று ஆசைப்படாதே! "தேவைகளின் பெருக்கமே வறுமை" என்று ஓர் அனுபவ வாக்கு உண்டு. ஆதலால், உனது குடும்ப வருவாய் அளவில் அனுபவிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். மற்றவர்களைப் பார்த்து, தொலைக்காட்சி விளம்பரங்களைப் பார்த்து ஆசைப்படக் கூடாது. யாரையும் கோபித்துக் கொள்ளாதே! சினம் சேர்ந்தாரைக் கொல்லும்! வேண்டாம் சினம்! எந்தச் சூழ்நிலையிலும் கோபம் வேண்டாம்! கடுஞ்சொல் கழறுதல் தீது. கொடிய சொற்களைக் கூறாதே. இனிமையாகப் பேசக் கற்றுக்கொள்! இனிய சொற்களையே வழங்குக! இந்தப் பண்பியல்புகளை நீ பெற்று விளங்கினால் உன் இல்லறம்

சிறக்கும். சுற்றத்தார் சுற்றமாகச் சூழ்வர் - வாழ்க்கையில் அமைதி இருக்கும். மகிழ்ச்சி பூத்துக் குலுங்கும்!

நல்ல வண்ணம் இல்லறம் அமைய இரண்டு பண்புகள் இன்றியமையாதன. ஒன்று, அன்பு, பிறிதொன்று, அறம், அன்புள்ள செல்வி! குடும்பத்தலைவி, அன்பின் பிரதிநிதி குடும்பத்தலைவன் அறத்தின் பிரதிநிதி. அன்பு-பண்பு. அறம்-பயன்.

அன்புள்ள செல்வி! அன்பு, அர்ப்பணிப்புத் தன்மை யுடையது. நெகிழ்ந்து கொடுப்பது; வாழ்வித்து வாழ்வது. அன்பு, ஒரு பண்பு, அறம், வாழ்க்கையின் இலட்சியம்; குறிக்கோள் அறம் செய்ய உடல் வலிமை தேவை; வன்மை தேவை; துணிவு தேவை. புறத்தில் நெகிழ்ந்து கொடுத்தல் இயலாது. அன்பு என்ற பண்பின் உறைவிடமாகக் குடும்பத் தலைவி விளங்கினால் குடும்பத்தில் இன்பச் சூழல் அமையும்; அமைதி நிலவும்; உண்பன கிடைக்கும்! ஊரவர் கேண்மையும் கிடைக்கும். அன்பு, குடும்பத்திற்கு உயிர், அறம் பலரையும் வாழ்விப்பது. ஈதல், அறம் அறநெறிபேணும் குடும்பத் தலைவன் நாட்டிற்கும் வீட்டிற்கும் அரணாவான். வாழ்க்கையின் பயனே அறம். இல்லற வாழ்க்கையையே அறம் என்பார் திருவள்ளுவர். "அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை" என்று திருக்குறள் இல்லற வாழ்க்கையைப் போற்றுகிறது. ஆயினும் அந்த இல்லறம் பிறர் பழிக்க இயலாதவாறு அமைதல் வேண்டும். அன்பின் பிரதிநிதியாக வாழ்ந்த கண்ணகி, காரைக்காலம்மையார், மங்கையர்க்கரசி யார் முதலிய மாதரசிகளை முன்னுதாரணமாகக் கொள்க. ஆனால், இந்த மாதரசிகளின் வாழ்க்கையில் வாய்த்த கணவன்மார்கள் அறத்தின் பிரதிநிதிகளாக இருக்கத் தவறி விட்டார்கள். ஆயினும் பொறுத்தாற்றும் பண்புடன் - தத்தம் கணவன்மார்களை நெறிப்படுத்திய பெருமை இவர்களுக்கு உண்டு. இளமை மீதூர எளியராகி - ஒழுக்கநெறி தவறிய திருநீலகண்டரை அவர்தம் மனைவி நெறிமுறைப்படுத்திய

வரலாறு நுட்பமானது. மனைவியின் ஆணையை ஏற்றுக்கொண்டு மனைவியுடன் ஒரே வீட்டில் வாழ்ந்து இல்லறக் கடமைகளில் வழுவாமல் வாழ்ந்துள்ளார். ஆயினும் புணர்ச்சி இல்லை. இந்த அற்புது புணர்ச்சியின்மை அயலவருக்குத் தெரியாது சொற்காக்கும் கற்புடைய பொண்ணுக்கு இது சான்று. செல்வி உன் இல்லறத்தை திட்ப நுட்பத்துடன் இயக்குக. செல்வி! நீ அன்பாக வாழ்! அன்பே ஆகுக! நின் வாழ்க்கைத் துணைவர் அறத்தோடு நிற்கத் தூண்டுக! துணை செய்க!

மங்கலமானது மனையறம் ஆம்! மனையறத்தின் சிறப்புக்கள் அனைத்தும் பொருந்திய மனைமாட்சியே மங்கலமாகும். அன்பு நிறைந்த மனைவி, வளமாக வாழச் செல்வம், செல்வச் செழிப்பின் நற்றாயாகிய அறிவு, செல்வச் செழிப்பின் செவிலியாகிய உழைப்பு மங்கலத்தைச் சிறப்பிக்கும் விருந்தோம்பல், ஒப்புரவு அமைந்த வாழ்க்கை முறை அமையுமாயின் அந்த மனையறம் மாட்சிமைப் பட்டதுதானே! மங்கலம் நிறைந்ததுதானே!

மங்கலமாகிய மனைமாட்சியின் பயன்-நன்கலம் நன்மக்கட் பேறு! செல்வி! மனையறம் சிறப்புடையதெனப் போற்றப் படுதலுக்கு முதற்காரணம் ஒருயிர்க்கு உய்தி யளிக்கக் கூடிய இந்த வையக வாழ்க்கையை வழங்கு வதானால்தான்! மனைவாழ்க்கையின் சிறந்த பயன் இன்பம் மட்டுமல்ல, மக்கட்பேறும் கூட!

செல்வி! உனக்குப் பிறக்கும் நன்மகனும், நன்மகளும் நாட்டுக்கு நலம் சேர்ப்பர், வாழ்க! உன் மனைமங்கலம்! வளர்க, நின் மக்கட் செல்வம்.

இல்லறம் 'அறம் எனப் போற்றப்படுகிறது. நமது நாட்டில் இல்லறம் மிகச் சிறப்புடையதெனவும் போற்றப்படு கிறது. ஆனால் துறவறத்தினும் இல்லறமே கடினமானது; பொறுப்பு நிறைந்தது. எப்படி?

பெரும்பாலும் துறவியர் வாழ்க்கை தனிமனித நிலையிலானது; ஓர் ஆள் சைக்கிளில் போவது போன்றது. இல்லறம் இரண்டு பேரையும் அதற்கு மேலும் பலரையும் சார்ந்தது. இரண்டு பேர் சைக்கிளில் போவது போல் ஒருவர் சைக்கிளில் போவதில் விபத்து நடக்க வழியில்லை. அப்படியே விபத்து நடப்பினும் ஆபத்து குறைவு; துன்பம் குறைவு. ஆனால், இல்லறம் என்பது அப்படியல்ல. இரண்டு பேர் சைக்கிளில் சவாரி செய்வது போன்றது. ஓட்டுநர் கணவர். பின்னே உட்கார்ந்திருப்பவர் மனைவி ஓட்டுநர் ஒழுங்காக ஓட்டாவிட்டாலும் விபத்து ஏற்படும். அல்லது பின்னே உட்கார்ந்திருப்பவர் சரியாக இல்லாமல் ஆடினாலும் விபத்து ஏற்பட்டுவிடும். மேலும் ஒன்றிரண்டு ஆண்டுகளான பின் நபர் எண்ணிக்கை கூடும். ஆதலால் செல்வி, நிதானமாக இல்லறத்தை நடத்தக் கற்றுக்கொள். எந்த சிறு பாதிப்பும் ஏற்படாமல் நடத்தக் கற்றுக்கொள்; கணவனையும் நெறிப்படுத்துக.

குடும்பம் மகிழ்ச்சியாக இருக்க வேண்டுமானால் கடன் கூடாது. ‘இரவில் வெறும் வயிற்றோடு கூடப்படுக்க லாம். கடனோடு படுக்கக் கூடாது.” என்பர். ஆதலால் குடும்ப வருவாய்க்கு தக்கபடி குடும்பத்தை நடத்து, நீயும் சோம்ப லாக இல்லாமல் பொருளீட்ட முயற்சி செய்ய வேண்டும். வீட்டுக்கொல்லையில் தோட்டம் அமைத்தல் நல்ல முயற்சி. நல்ல பச்சைக் காய்கறிகள் உண்ணக் கிடைக்கும். வீட்டு உபயோகம் போக மீதியை விற்றும் காசாக்கலாம். அடுத்து, வீட்டில் ஒரு பசு இருப்பது அழகு. திருமகள் நலம் வந்து சேரும். வீட்டில் எல்லாருக்கும் பூரண உணவாகிய பால் கிடைக்கும். எஞ்சியதை விற்றுக் காசாக்கலாம். தையல் முதலிய வீட்டுத் தொழில் செய்யலாம். இங்ஙனம் செய்து பொருள் ஈட்டுதல் வருவாய்க்குத் துணை செய்யும். பொழுதும் நல்ல வண்ணம் கழியும், சுறுசுறுப்பாக வாழலாம்.

*தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற*
*சொற்காத்துச் சோர்விலாள் பெண்*

–குறள் 56

என்ற திருக்குறளில் "தற்கொண்டாற் பேணி" என்ற தொடருக்குப் பரிமேலழகர் "கணவனை உண்டி, முதலியவற்றால் பேணல்" என்று கூறினார். நல்ல உணவு, உடல் நலத்திற்குத் தேவை. நல்ல உடல் நலம் குடும்ப வாழ்க்கைக்குத் தேவை. ஆதலால், சமவிகிதச் சத்துணவு குடும்பத்தில் எல்லோருக்கும் கிடைக்கும்படியாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். அரிசிச் சோற்றைக் குறை! காய், கனி வகைகளை அதிகப்படுத்து! அளவுக்கு அதிகமாக வேக வைத்து உணவுப் பொருள்களின் சத்தை வீணாக்கிவிடக்கூடாது; அளவோடு வேக வைக்க வேண்டும், காரட் முதலியவற்றை வேக வைக்கக்கூடாது. பச்சையாகவே உண்ண வேண்டும். நெய்யை உருக்கியும் மோரைப் பெருக்கியும் பயன்படுத்த வேண்டும். உடலுக்குத் தேவையான உணவுகளை முதலில் பரிமாற வேண்டும். சுவையானவற்றை கடைசியில் பரிமாற வேண்டும். அன்றாட உணவில் பருப்பு, தானியவகைகள் தவறாமல் சேர்த்துக் கொள்ள வேண்டும். அதுபோலவே, முருங்கைக் கீரை, முருங்கைக்காய், கருணைக்கிழங்கு முதலியவற்றை அடிக்கடி உணவில் சேர்த்துக் கொள்ள வேண்டும். தூதுவளைக்கீரை எல்லா வகையிலும் உயர்ந்தது; சுண்டைவற்றல் எத்தனை ஆண்டானாலும் வறுத்தாலும் சத்துக் கெடாது வாரத்திற்கு ஒரு நாளாவது சுண்டைவற்றல் உணவில் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

நல்ல உணவு வழங்கும் அன்னபூரணியாக, அட்சய பாத்திரமாக வளர்க!

கூடுமான வரையில் குடும்பத்தில் எல்லோரும் ஒன்றாகக் கூடி உட்கார்ந்து உரையாடிக்கொண்டு உண்பது நல்ல பழக்கம். நம்மில் சிலர் உண்ணும் பொழுது பேசக் கூடாது என்பர். இது தவறு. "உண்ணும்பொழுது

உரையாடா"திருப்பது மரபன்று, "காகம் போல் உறவு கலந்து உண்பதே" நமது மரபு. உரையாடலில்தான் உறவு வளரும், கூடி உண்ணும் பழக்கத்தைக் குடும்பத்தின் நடைமுறை யாக்குக.

நீங்கள் புது வீடு கட்டி அதில் குடியேறியிருக்கிறீர்கள் என்று அறிய மகிழ்ச்சி. ஆம்! பழங்காலத்தில் ஒவ்வொரு தலைமகனும் தானே பொருளீட்டி மகட்கொடை தந்து திருமணம் செய்து கொண்டான். இன்றோ தலைமகன் மணமகள் வீட்டாரிடம் கொடை எதிர்பார்க்கிறான். இது மரபும் அன்று, அறமும் அன்று, அதுமட்டுமா? ஒவ்வொரு குடும்பத்தினரும் அக்குடும்பத்தின் தலைவன் ஈட்டிய பொருளில் வீடு கட்டி வாழ்வர். அந்த வீட்டில் தாமே ஈட்டிச் சேகரித்த பொருள்களைக் கொண்டு சுவையாகச் சமைத்துத் தமது சுற்றத்தாருடன் கூடி உண்பர். இங்ஙனம் வாழ்கின்ற இன்பம்-இல்லற இன்பம் மேலானது என்பது திருக்குறள் கருத்து.

> "தம்மில் இருந்து தமதுபாத் துண்டற்றால்
> அம்மா அரிவை முயக்கு" —குறள் 1107

என்பது குறள்.

தமிழர் மரபில் கூட்டுக் குடும்பம் கிடையாது. கூட்டுக் குடும்ப முறை அயல் வழக்கு. இளங்கோவடிகள் கோவலன்-கண்ணகி தனிக்குடித்தனம் தொடங்கியதை மனையறம் படுத்த காதையில் விவரிக்கின்றனார். இன்றும் பழந்தமிழ் நாகரிகத்தைப் பிரதிநிதித்துவப்படுத்திக் கொண்டு வாழும் நகரத்தார் சமூகத்தில் 'வேறு வைத்தல்' என்ற பெயரில் மகன்-மருமகளுக்கு தனிக்குடும்பம் அமைத்தல் என்ற நிகழ்ச்சி முறை இருக்கிறது. கூட்டுக் குடும்பத்தில் வெற்றி காண்பவை மிகச் சில குடும்பங்களே! பல குடும்பங்கள் மன முறிவுகளுக்கு ஆளாகின்றன. வாழ்க்கையின் சுவை, நபர்கள் தோறும் மாறுபடும். வாழ்க்கையை அனுபவிக்கும்

திறன்களும் முறைகளும் கூட மனிதருக்கு மனிதர் வித்தியாசப்படும். இந்த வித்தியாசத்தை ஒரு சில மூத்தோர்களே தாங்கிக் கொள்வர்; ஒருக்கால் தாங்க இயலாதது எனக் கருதின் இதமாக அறிவுறுத்தி நெறிப் படுத்துவர்! மிகப் பலர் உளப்பாங்கியல் அறியாவண்ணம் இடித்துரைத்துக் காயப்படுத்துவர்; இல்வாழ்க்கையைக் கசப்பாக்கி விடுவர். தலைமகன் பாடு திண்டாட்டம்! தாயின் பக்கமா? தாரத்தின் பக்கமா? இந்தச் சிக்கல்களைத் தவிர்த்து அமைதியான நல்வாழ்க்கைக்கு வழிகோலுவது தனிக்குடும்ப அமைவேயாம்.

அப்படியானால் குடும்பப் பரிவு பாசம் பாதிக்காதா? என்று கேட்கலாம். மாமன் மாமி உறவு பாதிப்புக்குள்ளா காதா? என்று கேட்கலாம். ஒருக்காலும் பாதிப்புக் குள்ளாகாது. பிரிவு அன்பைத் தூண்டி வளர்க்கும். அன்பைச் செழுமையாக வளர்க்கப் பிரிவு துணை செய்வது போல வேறொன்றும் துணை செய்யாது. பிரிவு, பிரிந்தவர்களின் அருமைப் பாட்டினை அறிந்து கொள்ள உதவியாக இருக்கும். அதனால்தான் போலும் களவியலில் கூடக் காதலுக்குப் பிறகு பிரிவு வைத்தனர். மாணிக்கவாசகர் இறைவனைக் கண்டு பின் பிரிந்ததால்தான் அன்பின் பிழிவாகிய திருவாசகம் கிடைத்தது. சின்னமனிதர்கள் அல்லது அற்ப மனிதர்கள்தான் பிரிவில் மறப்பர். இத்தகைய மனிதர்கள் ஒன்றாக இருந்தாலும் ஒருமை நலத்துடன் வாழார். குடும்பத்தில் கோள் முதலியவற்றால் கலகம் விளைவிப்பர். வளர்ந்தவர்கள் பிரிவின் பொழுது அன்பினை வளர்த்துக் கொள்வதாக உணர்ச்சி கலந்த நட்புப் பாங்கு வளரும்.

செல்வி, அடிக்கடி மாமனார் மாமியார் வாழும் இல்லத்திற்குச் செல்! அவர்களுக்கு உவப்பான பண்டங் களை எடுத்துக் கொண்டு போய் வழங்கு! நலம் கேள்! நலம் செய். அன்பாகப் பேசு! மாதத்தில் சில நாள் உன் வீட்டுக்கு அழைத்து வா! நல்ல வண்ணம் உபசரணை செய்! அவர்கள்

உவப்பன செய்! ஆல் போல் தழைத்துக் குடும்பம் வளரும்; உறவு வளரும்.

குடும்பத்தின் வளர்ச்சிப் படிகளில் ஏறும் பொழுதெல்லாம் அவர்களிடம் ஆலாசனை பெறத் தவறாதே! நல்ல நாள்களில் குடும்பத்துடன் வந்து மாமனார், மாமியாரை வணங்கி வாழ்த்துப் பெறவும் தவறாதே! நல்ல குடும்பப் பாங்குடன் நடந்துகொள்! வெற்றி பெறுவாய்.

மகிழ்ச்சியுடன் உன் மனையறம் சென்று கொண்டிருப்பது மன நிறைவைத் தருகிறது. மகிழ்ச்சியைத் தருகிறது. அதுசரி! குடும்ப வரவு-செலவு இருக்கிறது. குடும்பப் பொருளாதாரம் முக்கியமானது. அதனால் வரவு-செலவுத் திட்டமிட்டுக் குடும்பத்தை நடத்துகிறாயா! நமது நாட்டு அரசாங்கங்களைப் போலப் பற்றாக்குறை நிதி நிலையுடன் வாழ்கிறாயா? நாட்டின் அரசுகளுக்குப் பற்றாக்குறை வரவு-செலவுத் திட்டம் இருப்பது நல்லதல்ல. ஆயினும் தீமையாகாது. ஏன் எனில் பரந்துபட்ட மக்கள் தொகையுடன் சம்பந்தப்பட்டது, அரசின் வரவு-செலவுத் திட்டம். ஆனால், குடும்பம் வரவுக்குத் தக்க செலவுதான் செய்ய வேண்டும். குடும்பப் பொருளாதாரத்திற்குப் பிறிதொருவரை, நெருங்கின சுற்றத்தாரைக்கூட, தந்தை, தாய், மாமன், மாமியாரைக் கூடச் சார்ந்து வாழ்தல் கூடாது. அதனால் திருவள்ளுவர், குடும்பத் தலைவியை, "வளத்தக்காள் வாழ்க்கைத்துணை" என்றார். முன்பு ஒரு கடிதத்தில் இதுபற்றி எழுதியிருப்பதை மீண்டும் படி.

பொருள் நலம் பேணல் குறித்துத் திருவள்ளுவர் அருமையான நெறிமுறைகளை வகுத்துத் தந்துள்ளார். தேவைக்கேற்பத் தாமே முயன்று பொருள் ஈட்டுதல் நன்று. அஃது இயற்கையாகப் பலருக்கு இயலாத ஒன்று. ஆதலால் வருவாய் பெருகி வளரவில்லையெனில் கவலைப்பட்டு என்னாவது? மற்றவர் கைப்பொருளை எதிர்பார்ப்பதும்

கேட்பதும் இழிவானது மட்டுமல்ல. அவர்களுடைய சூழலையும் பாதிக்கும்! மிச்சம் மனதுன்பமும் பகையும்தான்! எல்லா இடங்களிலுமே எல்லாருடைய வீடுகளிலுமே பொருளியல் சிக்கல் இருக்கும். நாம் மற்றவருக்குத் தொல்லைதரக் கூடாது. ஒரு சிலர் மற்றவர்களுடைய வேதனை புரியாமல் பணம் கேட்டுத் தொல்லைப்படுத்துவர். இது வாழும் இயல்பன்று. வருவாய் பெருகி வளரவில்லை யாயினும் செலவுத்துறை அகலாமல் இருந்தால் செல்வம் பெருகும்; வளரும்.

> ஆகாறு அளவிட்டி தாயினும் கேடில்லை
> போகாறு அகலாக் கடை

என்பது திருக்குறள். ஆதலால் குடும்ப வரவு-செலவைத் திட்டமிட்டு இயக்க. வரவுகளை வங்கியில் இட்டு வைத்து எடுத்துச் செலவு செய்! செலவி செய்யும் உணர்வுக்கு வங்கி ஒரு பாதுகாப்பு! கையிலிருந்து காசுகள் செலவாவதைவிட, வங்கியில் இயக்கும் செலவில் சிக்கனம் ஏற்படுகிறது. வங்கி, செலவைக் கண்காணிக்கும் உணர்வைத் தருகிறது. இது நமது அனுபவமும் கூட!

வரவுக்குள் செலவு செய்யத் திட்டமிடு! செலவுத் திட்டத்தில் முதற் செலவு என்ன தெரியுமா? எதிர்வரும் காலத்திற்குச் சேமித்தல் தான் முதற் செலவு! நம்மில் பலர், "வாழ்க்கையை நடத்தவே வரவு போதவில்லை. எங்ஙனம் சேமிப்பது?" என்பர். இது தவறு. உழைத்து ஈட்டும் காலத்தில் சேமிக்கத் தவறிவிட்டால் உழைக்க இயலாத காலத்தில் என்ன செய்வது? தவறான பொருளியல் நடைமுறையினால் தான் குழந்தைகள் பெற்றோரையும், பின் பெற்றோர்கள் பிள்ளைகளையும் சார்ந்து வாழ்கிறார்கள். சார்ந்து வாழ்தல் சுதந்திரமற்றது; மதிப்பு இழந்தது. தன்மானத்திற்கு எதிரானது. குடும்பங்களில் இரண்டு மூன்று சேமிப்புக் கணக்குகள் தொடங்க வேண்டும். குழந்தைகள் ஒவ்வொருவருக்கும் ஒரு

சேமிப்புக் கணக்கு அல்லது ஆயுள் காப்பீட்டுக் கழகத்தில் பிரிமியம் கட்ட வேண்டும். அவர்கள் வளர வளர அந்தச் சேமிப்பும் வளர்ந்து அவர்கள் படிப்பு திருமணம் முதலியவற்றிற்குப் பயன்படும். அதுபோகக் குடும்பத்திற்கென ஒரு சேமிப்பு எப்படியும் வருவாயில் 10 விழுக்காட்டுக்குக் குறையாமல் 25 விழுக்காடு வரையில் சேமிக்க வேண்டும். இந்த சேமிப்புக்குப் பிறகு எஞ்சிய தொகையில்தான் வாழ்க்கையை நடத்த வேண்டும். வாழ்க்கைச் சடங்குகளைக் குறைந்த 'செலவில் நடத்த வேண்டும். சாமிகும்பிடுவதில் அதிகம் செலவழிக்கக் கூடாது. பொருட் செல்வம் போற்றுவார்கள் உண்டு, என்ற திருக்குறளை மறவற்க.

நீ, தாயாகப் போகும் செய்தி செவிக்கினிய செய்தி! தாய்மைப்பேறு தவம் செய்துபெறும் பேறு. "இறைவன் அடிக்கடி உலகத்திற்கு, நான் வர முடியாமையால் தாயைப் படைத்தான்!" என்று கூறுவர். தாய் அற்புதமான வியக்கத்தக்க படைப்பாளி! தாயின் கருப்பையே மானுடத் திற்கு வடிவம் தருகிறது; பொறி, புலன்களை வழங்குகிறது'. கருவுற்ற எட்டாவது மாதத்திலிருந்தே குழந்தைக்குப் புலன்கள் இயங்கத் தொடங்கி விடுகின்றன. இந்தக் காலம் தொட்டே தாய்க்கு நல்ல சிந்தனை தேவை. நல்ல நூல்களைப் படித்தல், படிக்கச் செய்து கேட்டல் முதலிய பழக்கங்கள் தேவை. ஒரு குழந்தை கருவுற்ற எட்டாவது மாதத்திலிருந்து அது பிறந்து எட்டு வயது வரையில் கவனத்துடன் பேணி வளர்த்தால்- அறிவு நலமும் அன்பு நலமும் கெழுமிய நிலையில் - வளர்த்தால் அந்தக் குழந்தை சிறப்புற வளரும். இந்த உலகை வென்றெடுக்கும் குழந்தையாக விளங்கும்.

குழந்தைகளை வளர்க்க வேண்டும். அதனால்தான் திருவள்ளுவர்,

> *"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை; அறிவறிந்த*
> *மக்கட்பே றல்ல பிற"*
>
> —குறள் 61

என்றார். பெற்றோர்கள் குழந்தைகளுக்கு நல்ல கல்வி வழங்குவதுடன் பண்பாட்டுடன் பழக்கி வளர்க்க வேண்டும். எந்த அவைக்குச் சென்றாலும் முதலில் இருக்கும் நிலைக் குரிய தகுதியுடன் குழந்தையை வளர்க்க வேண்டும். நல்ல தாய், நல்ல தந்தை என்ற பெயரைப் பல்கலைக் கழகம் தர இயலாது. நம்முடைய குழந்தைகளின் வாழ்வியலை மைய மாகக் கொண்டு, அளவுகோலாகக் கொண்டு நாடு வழங்கு வதாகும்! ஆதலால், செல்வி! உங்களுக்குப் பிறக்கும் குழந்தையை நன்றாக வளர்த்துப் புகழுக்குரியவராக்குக! குழந்தை பிறந்தவுடன் எழுது, வாழ்த்துக்களும் விளை யாட்டுப் பொறிகளும் அனுப்பி வைக்கின்றோம். உங்கள் குடி விளங்க வரும் மக்களுக்கு வரவேற்பு! வாழ்த்துக்கள்.

*மண்ணில்நல் லவண்ணம் வாழலாம் வைகலும்*
*எண்ணில்நல் லகதிக்கு யாதுமோர் குறைவிலை*
*கண்ணில்நல் லஃதுறுங் கழுமல வளநகர்ப்*
*பெண்ணில்நல் லாளொடும் பெருந்தகை இருந்ததே"*

—திருஞானசம்பந்தர்

# 61. *குழந்தைகள்

குழந்தைகள் வளர்க்கப் பெறுதல் வேண்டும். நாளைய நாடு இன்றைய குழந்தைகள் கையில்தான் இருக்கப் போகிறது. மனிதர்கள் வருவார்கள் - போவார்கள்! ஆனால், நாடு என்றும் இருக்கும். ஆதலால் நாட்டின் நிலையான தன்மையை நினைவிற்கொண்டு எதிர்வரும் தலைமுறையைச் சீராக வளர்க்க வேண்டும். நமது நாட்டின் நேற்றைய தலைமுறை அதாவது நமக்கு முந்திய தலைமுறை நாட்டுக்குச் சுதந்திரம் வாங்கிக் கொடுத்த தலைமுறை.

* வாழ்க்கை நலம்

இன்றைய தலைமுறையினராகிய நாம் சுதந்திரத்தை அனுபவிக்கின்றோம். அதேபோழ்து நாம் மற்றவர்கள் சுதந்திரத்தில் ஆக்கிரமிப்புச் செய்து கொண்டிருக்கிறோம். கையூட்டு, வரதட்சணை, முறை பிறழ்ந்த குடியாட்சி முறைகள் மற்றவர்களுடைய சுதந்திரத்திற்கு கேடு விளை விப்பதுதானே! ஆனாலும் நாம் எதிர்வரும் தலைமுறையைச் சீராக வளர்க்க வேண்டும்.

கிராமம் தோறும் முன்கல்விப் பள்ளி (Primary Schools) தொடங்கப் பெற வேண்டும். இந்தப் பள்ளி மூன்று முதல் ஐந்து வயதுக் குழந்தைகளுக்குரியது. இந்த பள்ளியில் பயில ஏடுகள் வேண்டாம். கரும்பலகைகள் வேண்டாம். கூட்வும் கூடாது. காணல், கேட்டல், சொல்லுதல் ஆகியனவே பயிற்சி, இந்தப் பருவத்தில் உற்றுக் காணல், கவனமாகக் கேட்டல், ஆர்வமுடையன சொல்லுதல் ஆகிய பயிற்சிகள் விளையாட்டுகளுடனும் இசையுடனும் சொல்லித்தரப் பெறுதல் வேண்டும்.

குழந்தைகளுக்குப் பாரம்பரியமும் சூழ்நிலையும் சீராக அமைந்தால் சிறப்பாக வளர்வார்கள். இன்றைய கிராமக் குழந்தைகளுக்கு இவை இரண்டுமே பாராட்டத்தக்க வகையில் அமையாதது ஒரு பெருங்குறை. இன்றைய அறங்களில் தலைசிறந்தது-இன்றைய நாட்டுப் பணிகளில் சிறந்தது இன்றைய குழந்தைகள் நன்றாக வளர்வதற்குரிய சூழ்நிலைகளை அமைத்துத் தருவதேயாம். இந்தப் பணியைச் செய்வதில் பெற்றோர்களுக்கும் சமூக நிறுவனங்களுக்கும் அரசுக்கும் நிறைய பொறுப்புண்டு.

குழந்தைகள் வளர்ச்சி நிலைப்பருவம் 18 மாதம் முதல் 13 வயது வரை ஆகும். இந்த வயதுக் காலத்தில் குழந்தைகள் பாலர் பள்ளி, ஆரம்பப் பாடசாலைகளில் கல்வி பயிலுகின்றனர். பல சிற்றூர்களில் பாலர் பள்ளிகள் இல்லை. இருக்கும் இடங்களில் தக்க ஆசிரியர்கள் இல்லை. இன்றைய

ஆரம்பப் பாடசாலைகளின் நிலை... எழுதக் கை நடுங்கு கிறது! அவ்வளவு மோசமான நிலை!

இன்றைய ஆரம்பக் கல்வி குழந்தைகளை ஊக்கப் படுத்தி ஆற்றுப்படுத்துவதாக இல்லை. ஆரம்பப் பாடசாலை ஆசிரியர்களிலும் தங்களுடைய பொறுப்பு வாய்ந்த பணியை உணர்ந்து செயற்படுவோர் சிலரே! எல்லாவற்றையும்விட இந்தக் குழந்தைகளைச் சுற்றியுள்ள உலகம் திருத்தமுறுதல் நல்லது. காரணம், இந்தக் குழந்தைகள் தாம் காண்பன வற்றைத் தான் முன் மாதிரியாக எடுத்துக் கொள்கின்றன.

நவம்பர் 14 குழந்தைகள் தினவிழா, குழந்தைகள் நலனுக்குரியன செய்வோம்! முறையாக வளர்ப்போம்! சீராக வளர வாய்ப்பளிப்போம்! இன்றைய குழந்தைகளின்-நாளைய தலைவர்களின் அறிவையும், ஆற்றலையும் முறையாக வளர்ப்பது நமது கடமை! நீங்காக் கடமை.

# 62. *உறுதி கொள்வோமாக

டாக்டர் அம்பேத்கார் அவர்கள் இந்திய வரலாற்றில் ஒரு மைல் கல். மனு, சாணக்கியன், திருவள்ளுவர் ஆகியோர் அரசியல் சட்டங்கள் இயற்றியுள்ளனர். இவர்களுள் மனுவும் சாணக்கியனும் இயற்றிய சட்டங்கள் நடுநிலை பிறழ்ந்தவை. வல்லாங்கு வாழ்வோருக்கே இவர்களுடைய சட்டங்கள் அரண்செய்தன. திருவள்ளுவர் இவர்களில் மாறுபட்டவர். "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்ற பெருநெறி கண்டவர். ஆயினும் திருவள்ளுவர் எந்த ஓர் அரசையும் சார்ந்து ஒழுகாததால் திருக்குறள் ஆட்சியியல் தத்துவமாக, அரசியல் சட்டமாக ஏற்றுக் கொள்ளப்படவில்லை. மேலும் மேலும் திருக்குறளில் இலக்கிய நலன்கள் செறிந்திருந்தாலும் திருக்குறள் பொது நெறி பேசியதாலும் வல்லாங்கு

* சிந்தனைச் சோலை

வாழ்ந்தவர்கள் திருக்குறளை இலக்கிய உலகுக்குத் தள்ளி விட்டனர். அதோடு திருக்குறளுக்குத் தம் நிலையில் உரை யெழுதி, முற்போக்கு அணியிலிருந்த திருக்குறளைப் பிற் போக்கு அணியில் சேர்த்துக் கொண்டனர். "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்ற திருக்குறளுக்கு, பிறப்பில் எல்லா உயிர்களும் ஒத்த உரிமை உடையன என்ற இயல்பான உரை காணாமல், "கருவாய்ப் பட்டுப் பிறப்பதில் எல்லா உயிர்களும் ஒத்தன" என்று உரையெழுதித் திருக்குறளின் பொதுத் தன்மையைச் சீர்குலைத்து விட்டனர்.

டாக்டர் அம்பேத்கார் நமது தலைமுறையில் வாழ்ந்த பேரறிஞர். புதுயுகம் படைத்த மனு. சுதந்திர இந்தியாவுக்கு ஓர் அரசியற் சட்டத்தை இயற்றிக் கொடுத்த மாமேதை, உயர் மரபுகள் சார்ந்த ஜனநாயகப் பண்புகள், மனிதநேயத்தை மையமாகக் கொண்ட சட்ட வரைவுகள் நம்முடையவை என்று பெருமை கொள்ளலாம். பல்லாயிரம் ஆண்டுகளாக இந்திய சமுதாயத்தை அழுத்தி வருத்திக் கொண்டிருந்த தீண்டாமை மற்றும் பல வேற்றுமைகளுக்கு சமாதி கட்டி எல்லாரும் இந்தியர்; எல்லாம் ஒரு நிலை; ஒரு விலை என்ற முதன்முதலாக மனித உரிமைகளைச் சட்டத்தின் முன் உறுதி செய்த பெருந்தகையாளர் டாக்டர் அம்பேத்கார். இந்தத் தீண்டாமை, சாதி வேற்றுமையை எதிர்த்துப் போராடி வெற்றி பெற முடியாதுபோன புத்தர், ராமானுஜர், அப்பரடிகள் ஆகியோர்களின் ஆன்மாக்கள் இப்போது மகிழும்.

அரசியல் சட்டப்படி இந்ததிய சமூகத்தில் பிரிவில்லை. பேதமில்லை. ஆயினும் இந்திய சமூகத்தில் நடைமுறை வாழ்வில் வல்லாங்கு வாழ்பவர்களே தங்களுடைய பிடியை இறுக்கமாக்கிக் கொண்டு வருகின்றனர். ஆதலால், நமது அரசியல் சட்டம் வழங்கும் உரிமைகளை நமது இந்தியா முற்றாக அனுபவிக்க இயலவில்லை. இந்திய அரசியல் சட்டத்தில் வழங்கப்பெற்றுள்ள உரிமைகள் கடைகோடி

மனிதனுக்குத் தெரியாது. ஆதலால் டாக்டர் அம்பேத் காருக்கு செய்யும் நன்றி, இந்திய அரசியல் சட்டம் வழங்கி யுள்ள கடமைகளையும் உரிமைகளையும் பற்றி மக்களிடத் திலே பரப்பி, அரசியல் சார்ந்த விழிப்புணர்வு உண்டாக்க வேண்டும். எல்லாரும் ஒரு நிலை, ஒரு விலை என்ற நியதியைப் பற்றிய அறிவுத் தாக்கத்தை ஏற்படுத்த வேண்டும். சாதி மதங்களின் பாற்பட்ட சமூக மேலாதிக்கங்களைத் தகர்த்து நவீனச் சுரண்டல் முறைக்காரர்களிடமிருந்து இந்தியாவை மீட்பதும் கடை கோடி மனிதனுக்கும் எல்லா உரிமைகளும் கிடைக்கச்செய்வ்தும் நமது கடமை. டாக்டர் அம்பேத்கார் நூற்றாண்டு விழாவின்போது இந்தக் கடமையை நிறைவேற்ற உறுதி கொள்வோமாக!

1. எந்த நிலையிலும் எந்த இடத்திலும் எந்தச் சூழ்நிலை யிலும் தீண்டாமையை யாரும் எந்த ஒரு செயலிலும் கடைப்பிடித்து ஒழுகுதல் கூடாது. தீண்டாமை என்பது சாதிப் பிரிவினைகளின் நிழலேயாம். ஆதலால், சாதிப் பிரிவினைகளையும் முற்றாக விலக்கி சாதிப் பிரிவினைகளின் முதிர்ந்த நச்சுப் பழமாகிய தீண்டாமையை விலக்க வேண்டும்.

2. சாதிப் பிரிவினைகள் தீண்டாமை முதலியவை களைப் பழைய வடிவங்களினின்றும், மாற்றிப் புதிய வடிவங் களில் அறிமுகப்படுத்த வல்லாங்கு வாழ்வோர் முயல்வர். இந்த முயற்சியையும் முறியடிக்க வேண்டும். இந்த நவீன முயற்சியில்தான் இன்றைய கல்வி உலகம் நடைபோட்டுக் கொண்டிருக்கிறது. எல்லாருக்கும் ஒரே தரமான கல்வி வழங்கப்படவில்லை. இன்றைய கல்விமுறை இரண்டு சாதி முறைகளை உருவாக்கிக் கொண்டு வருகிறது என்பதை நாம் உணர்ந்து, இதனை மாற்றப் போராட வேண்டும். பழைய சமுதாய அமைப்பில் உடைமையே சொத்து. அதாவது நிலம். இன்றைய சமுதாய சொத்து. கல்வி, அறிவு, திறமை போன்றவை. இவற்றை இன்றைய சூழ்நிலையில் வாய்ப்பிழந்த

சராசரி மக்கள் பெற இயலவில்லை. அதனால்தான் எழுத்தறிவு முயற்சியில்கூட, நமது நாடு வெற்றி பெற இயல வில்லை. வசதியுடையோர் தனிக் கல்வி பெறும் அமைப்பு உள்ளவரை புதுமையும் பொதுமையும் மலரா. அனை வருக்கும் சிற்றூர் முதல் பேரூர் வரை - ஒரேமாதிரியான கல்வி வழங்கப் பெறுதல் வேண்டும். இந்த முயற்சியில் நாம் வெற்றி பெற்றால் அம்பேத்கார் எண்ணம் நிறைவேறும்.

3. இந்தியப் பெண்களின் நிலையில் அம்பேத்கார் எண்ணியபடி மாற்றம் ஏற்படவில்லை. வரதட்சணைக் கொடுமை வளர்ந்துகொண்டே போகிறது. இதற்கும் ஒரு முற்றுப் புள்ளி வைத்தாக வேண்டும். எந்தச் சூழ்நிலையிலும் பெண், கவர்ச்சிப் பொருளாகவும், அனுபவப் பொருளாகவும், அறிமுகப்படுத்தப்படும் நிகழ்வுகள் குறையவில்லை. இன்று பெரும்பாலான திருமணங்கள் பெற்றோர்களாலேயே நிர்ணயிக்கப்படுகின்றன. பெண்களின் விருப்பம் அறியும் முயற்சி இல்லை. ஒரோ வழி. பெண்கள் விருப்பத்தின் வழி நிகழும் காதல் திருமணங்களுக்கு, சமூகம் பெரும்பாலும் தடையாகவே இருக்கிறது. இந்த நிலை மாற, ஆண்களும் பெண்களும் சேர்ந்து பயிலும் பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள் மட்டுமே இயங்க வேண்டும். பெண்களுக்கு என்று தனிக் கல்வி நிலையங்கள் அறவே கூடாது. இங்ஙனம் கூட்டுக் கல்வி முறையால் ஒரோ வழி சில தவறுகள் நிகழலாம். அதனால் ஒன்றும் குடிமுழுகிப் போய்விடாது. பெண்ணடிமைத் தன்மையை நீக்கக் கூட்டுக் கல்வியும் காதல் திருமணங்களுமே வழி செய்யும். இத்தகு நடைமுறைகள் வளர, நிலைபெற பணி செய்வது டாக்டர் அம்பேத்காரைப் போற்றும் சிறந்த செயல்முறையாகும்.

4

# பல்துறைக் கட்டுரைகள்

## 63. மூலமும் முதலும் உள்ளமே

*வாழ்க்கை, பார்வைக்கு எளிதாகக் காட்சியளிக்கிறது. அப்படித்தான் பலர் கருதி வாழ்ந்து கொண்டிருக்கிறோம். ஆனால். உண்மையான வாழ்க்கை அருமையானது; ஆனாலும் எளிமையானது; சிக்கல்கள் நிறைந்தது; ஆனாலும் தீர்வு காணவல்லது. எத்தனை நாள் வாழ்ந்தோம் என்பது கேள்வியல்ல. எப்படி வாழ்ந்தோம் என்பதே கேள்வி. அதனாலன்றோ மாணிக்கவாசகரும் "வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே!" என்று இடித்துரைக்கின்றார். வாழும் வகையில் வாழாத வாழ்க்கை பயனற்றது. ஆதலால், அது வாழ்வன்று. அப்பரடிகளும் "பேசாத நாளெல்லாம் பிறவா நாளே!" என்பார். வாழும் வகையே வளத்திற்கு அடிப்படை. வரலாற்றுக்கு ஊற்றுக் கண். அதனாலன்றோ, வள்ளுவம், "வாழ்வாங்கு வாழ்க!" என்று ஆணையிட்டது.*

*சுவைத்து உண்கின்றோம். ஆனாலும் சுவைத்து வாழ்வதில்லை. மற்றவர்களிடமிருந்து ஆயிரம் ஆயிரம் எதிர் பார்க்கின்றோம். ஆனால் மற்றவர்கள் நம்மிடமும் எதிர்*

பார்ப்பதற்கு உரிமை உண்டு என்பதை மறந்துவிடுகின்றோம். பசுவைக் காயவைத்துக் கறந்து வாழ்வோரும் உண்டு. அது போல அன்புப் பசுவைக் காயவைத்து வாழ முயல்வது வறண்ட பாலைவனத்தில் தளிரைத் தேடியது போலாகும்.

உடைமைகள் இல்லையே என்று உடைமையற்றவர்கள் ஏங்குகிறார்கள். உடைமை உடையவர்கள் காப்பதற்கு ஆளில்லையே என்று கலங்குகிறார்கள். இஃதொரு விநோத மான வறுமை. அதனாலன்றோ இன்றைய செல்வத்தில் மூன்றில் ஒரு பங்குக்குக் குறையாத விழுக்காடு காவலுக் கென்று செலவழிக்கப்படுகிறது. எங்கும் எதிலும் அன்பு முத்திரைக்குப் பதில் காவல் முத்திரைகள் இடம் பெற் றுள்ளன. எந்தையும் தாயும் எழுந்தருளியுள்ள திருக்கோயிலே இன்று கண்காணிப்புக்கும் காவலுக்கும் ஆளாகியிருக்கிறது. எல்லா நாட்டு அரசுகளும் படைகளுக்கென்று ஒதுக்கும் பெருந்தொகை, மானிடசாதியின் பஞ்சத்தை மாற்றவல்ல பெருந்தொகையாகும். ஒருபுறம் படைப்பெருக்கும். பிறிதொருபுறம் பஞ்சத்தின் வளர்ச்சி. பொதுவாக நாட்டில் இன்று பஞ்சம், உடைமைகளுக்கன்று. அன்பு கலந்த உறவுக்கே பஞ்சம்! உடைமை உணர்வு பூதாகாரமாக வளர்ந்திருக்கின்றது. அஃது உறவுக்குப் பதில் பகையை வளர்த்து வளர்கிறது. தொன்மைக் காலத்தில் உடைமை யுரிமை நடைமுறை நிர்வாக நலன் கருதியே தோன்றிற்று. உடைமையுரிமை உடையவர்களே அனுபவத்திற்கும் உரிய வர்கள் என்பது பொருந்தாத நெறிமுறை. பெரும் பொருள் பெற்றுவந்த பெருஞ்சித்தனார், “ஏற்றுக உலையை, ஆக்குக சோறே!” “என்னோடும் சூழாது எல்லார்க்கும் கொடுமதி மனைகிழவோயே!” என்று கூறினார். ஏன்? செந்தமிழ் உலகம் “செல்வத்தின் பயனே ஈதல், துய்ப்பேம் எனினே தப்புந பலவே” என்றும் முடிவு செய்தது.

எந்த உடைமை இருந்தாலும் அல்லது இல்லாது போனாலும் கவலையில்லை. மனிதன் மகிழ்ச்சியோடு வாழ

முடியும். அவனுக்கு ஒன்றின்மீது மட்டும் உரிமையிருக்கு மானால், அந்த ஒன்று எது? காணியா? இல்லை, காசுகளா? இல்லை, கடைகளா? இல்லை, ஆலைகளா? இல்லை, தொழிற்சாலைகளா? இல்லை, ஆடுமாடுகளா? இல்லை, பொன்மணிகளா? இல்லை! பின் என்னதான் அது? வேறொன்றுமில்லை. நமது உள்ளம்தான்! உலகத்தையே உரிமை பெற்றிருந்தாலும் நமது உள்ளத்தினிடத்து நமக்கு உரிமையில்லாது போகுமானால் எந்த உரிமையும் நிலை நிற்காது. அதனாலன்றோ, "உள்ளம் உடைமை உடைமை" என்றது வள்ளுவம். இந்த உலகத்திலேற்பட்ட வரலாற்று நிகழ்ச்சிகளுக்கும். இன்று நம்முன்னே நிகழ்ந்து கொண் டிருக்கும் மூலமும் முதலும், உள்ளமேயாம். நிலத்தின் இயற்கையும் செயற்பாலதேயாம். அறிவுப் புலனும் ஆற்றுதலுக்குரியதேயாம். ஏன்? கோயிலில் கடவுளும் மனிதனின் படைப்பேயாம். நமது உள்ளத்தில் நமக்கு முழு உரிமை இருக்குமானால் முடியாதது ஒன்றில்லை.

உள்ளமோ விந்தையானது; அது கைக்கு அகப்படுவ தில்லை; விரைவில் பயணம் செய்கிறது; கடிதில் பற்றுகிறது; துன்பத்தை இன்பம் போலக் காட்டுகிறது; தனி உணர்வை வளர்க்கிறது. ஆயினும், உள்ளத்தைக் கெட்டதென்று சொல்ல முடியாது. திருஞானசம்பந்தரும், "நாளும் நீ நினையாய், நன்னெஞ்சே" என்று நெஞ்சைக் குறிப்பிடுகின்றார். அதை முறையாகப் பழக்கப்படுத்தினால் நல்ல வேலை ஆள். கைக்கு அடக்கமாக வைத்துக் கொண்டிருந்தால் அதனிற் சிறந்த தோழமை இல்லை. ஆனால், அதை எஜமானன் ஆக்கினால் வந்தது கேடு!

உள்ளத்தை ஒரு பொழுதும் ஓயவிடக்கூடாது. அதற்கு ஒழுங்காக முறை வைத்து வேலை கொடுத்துக் கொண்டிருக்க வேண்டும். அதற்குரிய நல்ல வேலைகளைக் கொடுக்காது உறங்க வைத்தால் அது உறங்குவதில்லை; ஊர்சுற்றப் புறப்பட்டுவிடும். உள்ளத்திற்கு நல்ல சிந்தனைகளையும்

கருத்துக்களையும் உணவாகத் தரவேண்டும். அன்பினை நீராக வார்க்க வேண்டும். இனிய செயலினை அதன் மூச்சாக்க வேண்டும். உயர்ந்த பக்தியினை அதன் உயிர்துடிப் பாக்க வேண்டும். அப்பொழுது உள்ளம் செழித்து வளரும். வாழ்க்கையும் பூத்துக் குலுங்கும். மனித சமுதாயம் அனைத்தும் உறவு கலந்து உண்டு களித்து வாழும்! எங்கும் இன்ப அன்பு மலர்ந்து மணம் பரப்பும்.!

திருச்சி வானொலியில் ஆற்றிய அறவுரை.

# 64. *நன்றியின் அடையாளம்

## வேற்றுமை இருப்பது இயல்பு

மனிதர்கள் அனைவரும் உருவத்தால் ஒரே வகையினரே, இதுகூட முற்றான உண்மையன்று. சிந்தனையில், உணர்வில், வாழ்க்கை முறைகளில் வேறுபாடுகள் இருப்பது இயற்கை. அதுமட்டுமல்ல. வேற்றுமைகள் இருப்பதுதான் உயிர்ப்புள்ள சமுதாயத்திற்கு அடையாளமாகும். வேற்றுமைகள் உள்ள சமுதாயத்தில் ஒருமைப்பாடு உணர்வு கலந்த உறவு வளராது-நிலை பெறாது என்று எண்ணுவது தவறு. ஒருமைப் பாட்டுக்கும் உறவுகளுக்கும் வேற்றுமைகள் தடையல்ல. இந்த வேற்றுமைகளை அணுகும் பாங்கில்தான் இருக்கிறது. தற்சலுகையுடையவர்கள், தன் மதிப்பு அதிகம் பாராட்டு பவர்கள், அதிகாரப் பசியுடையவர்கள், மற்றவர்களை மதிக்கத் தெரியாதவர்கள், சந்தேக மனப்பான்மை கொண்ட வர்கள் தாம் வேற்றுமைகளைப் பெரிதுபடுத்துவார்கள். ஏன்? வேற்றுமைகளை முரண்பாடுகளாகவும் பகையாகவும் மாற்றி வளர்ப்பர்.

* கடவுளைப் போற்று! மனிதனை நினை!

## அன்பு என்பது என்ன?

அன்பும் ஒப்புரவும் உறவின் ஊற்றுக்கண்கள். அன்பு மின்சாரத்தினும் ஆற்றலுடையது; இயக்கத் தன்மையுடையது. அன்புடையோர் ஒப்புரவு நெறியில் நிற்றல் இயல்பு. ஒப்புரவு என்பதை ஒத்துழைத்தல் என்று கொள்ளலாம். ஒருவரின் இலட்சியங்கள் நிறைவேற ஒருவரின் வாழ்க்கை வளம்பெற ஒத்துழைத்தல் என்பது சமுதாய வாழ்வின் தவிர்க்க இயலாத கடமை. இந்தக் கடமைகளைப் பொறுப்புடன் நிறை வேற்றாதவர்கள் நிறைவேற்ற மனம் இல்லாதவர்கள்கூட "அன்பு" என்ற வார்த்தையைப் பயன்படுத்தலாம். வார்த்தையில் என்ன இருக்கிறது? வாழ்க்கையில் அல்லவா இருக்க வேண்டும். நன்றி, விசுவாசம், உழைப்பு, முயற்சி, அன்பு, காலம் சொல்லும், - என்ற சொற்கள், அந்தச் சொற்களுக்குரிய பொருளுக்கு இயைபின்றியே பயன்படுத்தப் படுகின்றன. வெறும் ஆரவாரத்துக்கே இந்தச் சொற்கள் பயன் படுகின்றன.

## நன்றி என்பது என்ன

நன்றி என்ற சொல் நன்று, நன்மை, நல்லது என்ற அடிப்படையில் பிறந்த சொல். அதாவது வாயினால் சொல்வது நன்றி ஆகாது. நன்மையான ஒன்றைக் கடைப் பிடித்து ஒழுகுதலின் மூலம் இந்த நன்மையைத் தொடர்ந்து பேணிக் காப்பதுமே நன்றி ஆகும். ஒருவர் ஒருவருக்குச் செய்த உதவிக்கு பிரதி உதவி செய்துவிடுவதோ, விரோதம் இல்லாது இருப்பதோ நன்றி ஆகாது. ஓர் அறிஞர் சொற்பொழிவு நிகழ்த்துகிறார் என்றால் சொற்பொழிவு நிகழ்ச்சி முடிந்த வுடன் அவருக்கு நன்றி கூறி முடித்துவிடுதல் நன்றியன்று. அச்சொற்பொழிவுகள் பயனைத் தெரிந்து, தெளிந்து வாழ்க்கையில் கடைபிடித்து அச்சொற்பொழிவுக்குரிய பயனைத் தருதலே உண்மையான நன்றி!

## உழைப்பைத் தருதலே நன்றி

ஒருவர் வேலையில்லாமல் இருக்கிறார். அவருக்கு வேலைவாய்ப்பை ஒருவர் வழங்கினால் வேலைவாய்ப்பு எந்தத் துறையில் வழங்கப் பெற்றதோ அந்தத் துறையில் பயன் தரத்தக்க உழைப்பினைத் தருதலே நன்றி. மேலும் வேலை வாய்ப்புத் துறை மலடாகப் போய்விடாமல் மேலும் மேலும் வேலை வாய்ப்புக்கள் உருவாகும் வகையில் உழைப்பு அமைய வேண்டும். இன்று நம்முடைய நாட்டில் வழங்கப் பெற்றுள்ள ஒவ்வொரு வேலைவாய்ப்பும் அவர் வேலைக்கமர்ந்தவுடன் மலடாகிவிடுகிறது. அவருடைய உழைப்பிலிருந்து புதிய வேை வாய்ப்புகள் உருவாவதில்லை. ஏன்? முறையான அறிவறிந்த ஆள் வினையெல்லாம் வேலை வாய்ப்புக்களை உருவாக்கும் வாயில்களாகும்.

ஒருவர் தமக்குக் கிடைத்த பணியினை முறையாகச் செய்தாலே பலருக்கு இயல்பாகவே வேலை கிடைக்கும் வாழ்க்கை கிடைக்கும். இன்புறுநலன்கள் கிடைக்கும். மகிழ்ச்சியும் கிடைக்கும். இன்று இங்ஙனம் நமது நாட்டில் கடமைகளை இயற்றுவோர் எண்ணிக்கை அருகியுள்ளது. 'நன்றி' என்ற சொல் நன்மையைச் செய்வது; நன்மையை வளர்ப்பது. நன்மை இடையறாது, ஆற்றொழுக்குப் போல வளரத் துணை செய்வது, உழைப்பது என்பதுவேயாகும். இந்த வகையில் நாட்டில் உள்ள அனைவரும் உழைத்தால் நாடு நலம் பெறும்.

–"மக்கள் சிந்தனை" 2–3–83

# 65. *நம்பிக்கை உயர்த்தும்

நம்பிக்கை என்பது வாழ்விற்கு அடித்தளம். நம்பிக்கை ஓர் உள்ளப் பண்பு. நம்பிக்கை என்ற அகநிலைப் பண்பால் நன்மைகளே விளையும். ஒரோ வழி தீமையும் விளையலாம்,

* சிந்தனை மலர்கள்

தீமை நம்பிக்கையினால் விளைவதல்ல. நம்பிக்கை என்ற அகநிலைப்பண்பைத் தவறாகக் கடைப்பிடித்தொழுகினால் தான் தீமை விளையும். அதாவது நம்பிக்கை அறிவுக்கு முரணன்று. நம்பிக்கை தொடக்கநிலை; வாழ்க்கையின் முதல் அடி. அடுத்த அடி காரண காரியங்களை ஆய்வு செய்தல். ஒவ்வோர் அடியாகத்தான் நெடுந்தொலைவைக் கடக்க வேண்டும். நம்பிக்கையென்னும் முதல் காலை ஊன்றி வாழ்க்கை நடைப் பயணம் தொடங்குகிறது. அடுத்த அடி காரண காரியங்களை ஆய்வு செய்து தெளிவு பெறுதல். பின் தெளிவைத் தேர்ந்த அறிவாக்கல். அதனைத் தொடர்ந்து முயற்சி தோன்றும். நம்பிக்கையும் முயற்சியும் ஒன்றை யொன்று தழுவியன. நம்பிக்கை இல்லாத இடத்தில் முயற்சி தலையெடுக்காது. முயற்சியே நம்பிக்கையை உறுதிப் படுத்துவது.

நம்பிக்கை இல்லாத வாழ்க்கை நரகம். நம்பிக்கை யின்மையே ஒழுக்கக்கேடுகளுக்குக் காரணம். நம்பிக்கை இல்லாத வாழ்க்கை வெறும் சூன்யம். நம்பிக்கை நமக்கு உடைமை; ஒளி நம்பிக்கையே அறிவுக்கு வழித்தடம். நம்பிக்கையே முயற்சிகள் சாதனை செய்யும் களம். நம்பிக்கையே மருந்தும், மந்திரமுமாகும்.

நம்பிக்கையின் தொடக்கம் தன்னம்பிக்கை. தன்னம்பிக்கை இழிவு மனப்பான்மையிலிருந்து விடுதலை செய்கிறது. தன்னம்பிக்கை கால்கொண்டவுடன் வாழ்நிலை உயர்தலுக்குரிய அனைத்து முயற்சிகளும் தலையெடுக்கும். நம்மால் முடியும் என்ற எண்ணத்தின் ஆற்றல் அளப்பரியது. இந்த நம்பிக்கையினாலேயே உலகில் பல சாதனைகள் நிகழ்ந் துள்ளன. தன்னம்பிக்கையுடையாரிடையே வாய்ப்புகள் பய னுடையவை ஆகின்றன. வாழ்க்கையின் முதலும் முடிவுமாக இருப்பது தன்னம்பிக்கையேயாம்.

அடுத்து, நம்பிக்கை பயிலும் களம் நட்பு. “முதலில் எதை நான் இதயபூர்வமாக நம்புகின்றேனோ அதையே

வேறோர் ஆன்மாவும் நம்புமேல் அப்பொழுது நம்பிக்கை அளவு கடந்த ஆற்றல் பெறும்” என்றார் நொவாலிஸ். அதாவது வாழ்க்கையின் தொடக்கம் நட்பே. அதற்குப் பிறகுதான் காதல். இரண்டுபேர் ஒருவரை ஒருவர் நம்பிய நட்பில் விளைவது வியக்கத்தக்க ஆற்றல். அவர்கள் அரிய பல சாதனைகளைச் செய்வர். நிலையான காரியங்கள் பல நடக்கும். இத்தகைய நட்பு நினைந்து நினைந்து ஈட்டப் படக்கூடிய ஒன்றாகும். இந்த நம்பிக்கை நிறைந்த நட்பு வாழ்க்கையில் ஒரே குறிக்கோள் உயர்ந்து விளங்கும், இவர்கள் வாழ்க்கையில் உயர்வு, தாழ்வு இல்லை. தேவைகள் இருக்கும். ஆசைகள் இரா. தேவைகளை அடையும் அல்லது எடுத்துக் கொள்ளும் சுதந்திரமும் உரிமையும் இருக்கும். காலப்போக்கில் ஒரே ஆன்மாவோ என்று எண்ணி அதிசயிக்கத்தக்க நிலையை அடைவர்.

அடுத்து, காதல் வாழ்க்கை. இந்த வாழ்க்கையில் நம்பிக்கையே அனைத்தும். மனைவாழ்க்கையில் நம்பிக்கையே நல்ல இராகம். எந்த வீட்டில் நம்பிக்கையுடைய இருவர் காதலராக வாழ்கின்றனரோ அந்த வீட்டில் அழகு பொலியும்; வளம் கொழிக்கும்; அமைதி நிலவும்; மகிழ்ச்சி ததும்பும். நல்ல தலைமுறையும் தோன்றும். மனை வாழ்க்கையில் நிறைய நலம் சார்ந்த ஒப்படைப்பு முறை பயனுடையது. நம்பிக்கை நிறைந்த வாழ்க்கையில் ஈருடல் இன்பம் துய்க்கும் சாதனமே தவிர, உண்மையில் ஈருடல் அல்ல என்ற எண்ணம் தோன்ற வேண்டும். உடலும் உயிர் இன்றியமையாதது. உயிருக்கு உடல் இன்றியமையாதது. அதுபோல மனைவாழ்க்கைக்கு நம்பிக்கை இன்றியமை யாதது. இது நாள்தோறும் அறிவறிந்த நிலையில் வளர்க்கப்பட வேண்டிய ஒன்று.

நாம் வாழ்வது, இந்த உலகத்தில்! இந்த உலகம் என்பது மக்களின் தொகுதி, இந்த மக்களுடன் நாம் வாழ்ந்து, வளர்ந்து மடிய வேண்டியது என்பது நியதி. மக்கள் தொகுதி கடல்

போன்றது. கடலில் இங்கும் அங்கும் எங்கேயாவது அழுக்கு இருக்கும். அதனால், கடலே - கடலில் உள்ள தண்ணீர் முழுவதுமே - அழுக்கு என்ற முடிவுக்கு வரக்கூடாது. மனித சமுத்திரத்தை நம்ப வேண்டும். மனித சமூகத்தை நம்பிக்கையுடன் பழக வேண்டும். ஒரோவழி ஏற்படக்கூடிய ஏமாற்றங்களுக்குரிய காரண காரியங்களை அறிவியல் அடிப்படையில் ஆராய்ந்து தவிர்த்துக் கொள்ள வேண்டும். ஏரிகளின் ஓட்டையை அடைக்க வேண்டுமே தவிர, ஏரியைத் தூர்த்து விடக் கூடாது. மானுடம் வெற்றி பெறுவதற்குரிய ஆற்றல் நம்பிக்கையிலேயே இருக்கிறது.

கடவுள் பற்றிய சிந்தனை நம்பிக்கையிலேயே தொடங்க வேண்டும். காணாதனவற்றைக்காண, இருக்கும் நம்பிக்கையின் அடிப்படையில்தான் முயற்சி தோன்றும். இல்லாதனவற்றைப் பெறுதற்குரிய முயற்சிகளனைத்தும் நம்பிக்கையின் அடிப்படையிலேயேயாம். நம்பிக்கை கொள்க. வெற்றிகள் பெற்று உயர்ந்திடுக.

31-12-88

# 66. *உணர்ச்சியும் அறிவும்

இன்றைய மாணவர்களிடத்தே அறிவுப் பசியும், ஆய்வு வேட்கையும் மிகுந்து வளர்கின்றன. அப்பசிக்கு ஈடு செய்யும் வண்ணம் நல்ல தரமான இலக்கியங்கள் வளரவில்லை. இந்நிலை மாணவ சமுதாயத்தைத் திசைமாற்றிக் கெடுத்துவிடும்.

சந்தைக்குச் சென்று கீரைக்கட்டு வாங்கும்போது, பூச்சிக் கீரைகளை ஒதுக்கி, நல்ல கீரைதானா என்று பார்த்து வாங்குகிறோம். ஆனால், தரமான இலக்கியங்களைத் தேர்ந்தெடுத்துப் படிப்பதில் கீரைக்கட்டு வாங்குவதில் காட்டும் அளவு அக்கறைகூடக் காட்டுவதில்லை. புத்தகங்கள் வாங்கும்போது, நல்ல - அழகான - கவர்ச்சிகரமான

* பொங்கல் பரிசு

அட்டைப்படம் போட்டிருக்கிறதா என்று பார்க்கிறோம். புத்தகத்தை எழுதியவர் ஏற்கனவே நன்கு விளம்பரம் ஆனவர்தானா என்று பார்க்கிறோம். அப்படியிருக்க நாம் எப்படி நல்ல இலக்கியங்களைத் தேர்ந்தெடுக்க முடியும்?

உலைப் பானையில் ஊற்றிய தண்ணீர் கொதிப்பது போல, மனிதனும் சீக்கிரம் உணர்ச்சி வசப்பட்டுக் கொதிப் படைகிறான். இந்நிலையானது, மழைபெய்து தண்ணீர் புரண்டு வருகிறது; அதனைக் கால்வாய்களின் வழிக் கொணர்ந்து, ஏரிகளில் தேக்கிக் கழனிக்குப் பாய்ச்சும் போது தான் உரிய பயன் ஏற்படுகிறது. அது போல மனிதனிடம் உணர்ச்சிகள் தோன்றுவதியற்கை, அவ்வுணர்ச்சிகளை அறிவுக்கால்கள் வழிச்செலுத்தி அனுபவம் என்கின்ற ஏரியில் தேக்கி செயல்முறைக் கழனியில் செலுத்தினால் உரிய பயன் விளையும். சிந்திக்காத மனிதனின் உணர்ச்சிகள் பொட்டல் காட்டில் பெய்த மழையைப்போல் பயன்படாமல் போய் விடும்.

வாழ்க்கையைப் பற்றி முதன் முதலில் கவலைப்பட்ட மனிதன் தமிழன் தான். வாழ்க்கைச் சிக்கலைத் தீர்க்கும் எண்ணம் தமிழனுக்கு இருந்ததைப் போல ஏனையோருக்கு இருந்ததாகக் குறிப்பிடமுடியாது. தொல்காப்பியக் காலக் கவிஞன் வீட்டுச் சிக்கலைப் போக்குவது பற்றி எண்ணிச் சிந்தித்து அதற்கான வழியையும் கண்டிருக்கிறான். மனிதனின் வீட்டு வாழ்க்கைக்கு அகத்திணை என்றும் சமுதாய வாழ்க்கைக்குப் புறத்திணை என்றும் இலக்கணம் கண்டவன் தமிழன்.

வரலாறு எழுதும் முறை அண்மைக் காலத்தில் தோன்றியதே. பெரும்பாலான வரலாற்றாசிரியர்கள் தொடர்பாக ஒரு தவற்றைச் செய்து வருகிறார்கள். அதாவது, வெறும் புள்ளி விவரங்களையே வரலாற்றில் எழுதித் தருகிறார்கள். வாழ்க்கையையும் வீழ்ச்சியையும் அவற்றின் புறஇயல் காரணங்களையும் மட்டும் காட்டுவது நிறைவான வரலாறு அல்ல. மனித சமுதாயத்தில் மனிதன் கருத்தால் -

கொள்கையால் வளர்ந்த - வழிநடை பயின்ற குறிப்புக் களையும் வரலாறு தரவேண்டும். அப்போதே சமுதாயத்தில், சென்ற காலத் தவறுகள் குறையும்; எதிர்காலச் சிறப்புகள் தோன்றும். இதனை வரலாற்றாசிரியர்கள் உணர்ந்து வரலாறுகள் எழுதித் தர வேண்டும். இன்று சிலர் மண்ணையும் பொன்னையும், இலையையும், செடியையும் ஆராய்வார்கள். இந்த உலகில் புரியாத புதிராக இருக்கின்ற மனிதனைப்பற்றி ஆராய்வதில்லை. கொள்ளுகின்ற கோலம் - ஆற்றுகின்ற செயல் - சிந்தனை எல்லாம் மனிதனுக்கு மனிதன் வேறுபட்டிருக்கின்றன. ஒரு மனிதனேகூட அவனுடைய வாழ்க்கையின் தரம் பல கட்டங்களில் மாறுகின்றன.

போரையும் காதலையும் சங்ககால இலக்கியங்கள் பாராட்டின. ஆதலால் தமிழர்களிடத்துப் போர் உணர்வு மிகுந்திருந்தது. ஆனால் போருக்குப் பகைவர்கள் - அந்நியர்கள் அகப்படவில்லை. அதன் காரணமாக - தமிழ் மன்னர்கள் தமக்குள் பொருதி அழிந்தனர். தமிழர்கள் உள்ளத்தில் ஒற்றுமை யுணர்வு உருவாகி வளர்ந்தாலே நாம் வாழ்வோம்; தமிழ்ச்சமுதாய மாளிகை தோன்றி எழும்; தமிழர்களிடத்தில் தனிமனித உணர்வே மிகுதி; தன்னைத் திட்டினால் ஆத்திரப்படுவான்; ஆனால், தன்னுடைய தமிழ் இனத்தை - மொழியை - நாட்டைத் திட்டினால் ஆத்திரப் படமாட்டான். தமிழன் சமுதாயத்தை மறந்துவிட்டு வீட்டுக்குள் அடங்கி விட்டதையே இது காட்டுகிறது.

பலர் பசுமாட்டைக் குளிப்பாட்டுவார்கள்; பொட்டு இட்டு இலட்சுமி என்று பாராட்டுவார்கள். அதற்குத் தீனி மட்டும் சரியாக வைக்க மாட்டார்கள். அதுபோல தமிழர்கள் இலக்கியங்களைப் படிப்பார்கள் - பாராட்டுவார்கள். ஆனால் படித்தவற்றைச் சீரணித்துக்கொள்ள மாட்டார்கள்: வாழ்க்கையில் ஏற்று நடைமுறைப்படுத்த முன் வரமாட் டார்கள். நடைமுறைக்கு வராத கல்வி ஊற்றில்லாத கிணறு - **சிந்தனை மணமில்லா மலர் - அறிவு விளைவில்லாக் களர் நிலம்.**

கு. XIII. 32.

பழைய மனிதன், வெயில் பனி மழை இவற்றின் தாக்குதலிலிருந்து உடலைக் காப்பாற்றிக் கொள்ளவே வீடு கட்டினான். ஆனால் இன்றோ பக்கத்து வீட்டுக்காரனைத் திருடனாக அல்லது பகைவனாக ஆக்கி அவனிடமிருந்து தன்னை - தன்னுடைய உடைமையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்ற களவு - காவல் சிந்தனையின் தொடர்பில் வீடுகட்டுகிறான். இப்படி மனிதர்களுக்குள் நிலவும் அவநம்பிக்கையையே மூலப்பொருளாகக் கொண்டு வளர்ந்து விட்டது காவல் துறை; பெருகி விட்டன பூட்டுக் கடைகள். பூட்டுவிற்பனையாளர்கள் பணம் குவிக்கின்றனர்.

இன்று பலர், கையிலிருந்து பணம் கொடுக்கும் போது ஏன் எதற்கு என்று ஆராய்கிறார்கள். ஆனால் தமது கைக்குப் பணம் வரும்போது இது எப்படி வருகிறது? நியாயமான வழியில் வருவதுதானா என்று சிந்திக்க விரும்புவதில்லை. அப்படிச் சிந்தித்தால் நாட்டில் ஒழுக்கமும், நாணயமும் வளரும். இந்த அவல நிலைக்குரிய காரணம் படிப்புக்கும் வாழ்க்கைக்கும் தொடர்பு இல்லாமையே என்பதை நாம் உணர வேண்டும். மாணவர்கள் நிறையப் படிக்க வேண்டும்; தரமான இலக்கியங்களைத் தேர்ந்தெடுத்துப் படிக்க வேண்டும்; படித்தவற்றைச் சிந்தனை செய்து தெளிவு பெறுதல் வேண்டும். சிந்தனையைச் செயற்படுத்தும் முயற்சியில் ஈடுபடுதல் வேண்டும். முயற்சியின் பயனாக இப்பாரினைச் செழிக்கச் செய்து - இன்ப அன்பிலே திளைத்து வாழ வேண்டும்.

# 67. *நாத்திகமும் ஆத்திகமும்

இன்று உலகம் முழுவதும் ஆத்திகமும் பரவி வளர்கிறது; வளர்ந்துவரும் ஆத்திகத்திற்கு ஈடு கொடுக்கும் வகையில் நாத்திகமும் வளர்ந்து வருகிறது. ஆத்திகம் - நாத்திகம் இவற்றிற்கிடையே என்ன வேறுபாடு? என்ன

* விடுதலை மலர், செப்டம்பர் 1993

பயன்? என்றெல்லாம் ஆராய்வது இன்றைய தலைமுறைக்கு வழிகாட்ட உதவும். ஆத்திகம் - நாத்திகம் ஆகிய இரண்டு கொள்கைகளுக்கும் கடவுளுக்கும் எந்தவிதத் தொடர்பும் இல்லை. ஆத்திகர் என்றால் "கடவுள் நம்பிக்கை உடையவர்" என்று பொருள் கொள்ளக்கூடாது. அப்படிப் பொருள் கொள்ளக்கூடிய ஒரு பொயம்மையை ஆத்திகர்கள் என்று தம்மை இனங்காட்டிக் கொள்பவர்கள் தோற்றுவித்து விட்டனர். உண்மை அதுவன்று. ஆத்திகம் என்பது கடவுள் நம்பிக்கையுடைய கொள்கையாக இந்தால் கடவுள் நம்பிக்கையுடைய இசுலாமிய சமயத்தை எதிர்ப்பது ஏன்? மசூதியை இடிப்பது ஏன்? கிறித்தவ சமயத்தை எதிர்ப்பது ஏன்? கிறித்தவர்களை வெறுப்பது ஏன்? கிறித்தவ சர்ச்சுகளை இடிப்பது ஏன்? கடவுள் ஒருவர் தானே! அவர் தானே எல்லாருக்கும் கடவுள்! "ஒன்று பரம்பொருள்" என்ற கொள்கை பொய்யா? கடவுளர் பலரா? தேவர்கள் எல்லாரும் கடவுளரா? 'பூசுரர்' என்ற பூதேவர்களும் கடவுள்களா? இல்லை, இல்லை! இன்று ஆத்திகர்கள் என்பவர்களுக்குக் கடவுளிடத்தில் நம்பிக்கை இருக்கிறதா என்பது ஆய்வுக்குரிய செய்தி. ஆனால், ஒன்று உண்மை. சாத்திரங்கள் சடங்குகளில் நம்பிக்கை இருக்கிறது. சாத்திரங்கள் கற்பித்த வருணாசிரமத்தில் நம்பிக்கை இருக்கிறது; வினைகளில் நம்பிக்கை இருக்கிறது. பணக்காரன் - ஏழை ஏற்பாடு கடவுள் ஏற்பாடு. பூர்வ ஜன்ம புண்ணிய பலாபலன் என்ற கொள்கையில் நம்பிக்கை இருக்கிறது. இவைகளைக் காப்பாற்றி மனித வர்க்கத்தில் தீண்டாமை யையும் சாதிகளையும் நிலையாகக் காப்பாற்றிச் சுரண்டுகிற சமுதாயத்திற்குப் பாதுகாவலாக அமைந்து தம்மை உயர் சாதியினராக, புரோகித சாதியினராக உயர்த்திக் கொள்வதில் ஆத்திகர்களுக்கு அக்கறை.

நாத்திகர்கள் இதற்கு நேர் எதிரிடையானவர்கள்! தலைவர் பெரியார் "நான் கடவுளை நம்பவில்லை! ஏன்?

நான் அதைக் கண்டதில்லை! ஆனால் கடவுள் பெயரால் மனித குலத்திற்கு இழைக்கப்படும் அநியாயங்களைக் காண்கிறேன். இன்று ஏமாற்றுக்காரர்களுக்குக் 'கடவுள்' ஒரு சாதனம்; கருவி! எனவே, நான் கடவுளைப் பற்றிக் கவலை படவில்லை! எனக்குக் கவலையெல்லாம் மனிதனைப் பற்றித் தான்! குறிப்பாகத் தமிழனைப் பற்றியேதான்!" என்றார். ஆரிய வேத மத சாத்திரங்களை ஆராய்பவர்களை நாத்தி கர்கள் என்று பட்டம் கட்டித் துன்புறுத்தினார்கள் என்பதை இரணியன் வரலாறு காட்டுகிறது. மத புராணங்களில் - இதிகாசங்களில் கூறப்படும் பிறர் மனைவியைக் கூடிய கயவர்களுக்குக் கூட இராவணனுக்குக் கிடைத்த அளவு கண்டனம். தூற்றுதல் இல்லை! இராவணன் சீதையைத் தீண்டக்கூட இல்லை. ஆனால். இராவணனுக்கு நாடு தழுவிய பழி தூற்றல் ஏன்? இராவணன் உயர் சாதியன் அல்லன். முனிவன் அல்ல. இதனால், நமக்குப் புரிவது நாத்திகம் என்பதற்கும் கடவுளுக்கும் சம்பந்தமில்லை என்பது தான்! நாத்திகம் என்பது ஆரிய சாத்திரங்களை கோட்பாடு களை எதிர்ப்பவர்கள் மீது சூட்டப்படும் பட்டம்! கடவுள் மறுப்பாளன் என்று பறை சாற்றுவார்கள். உண்மையில் நாத்திகத்திற்கும் கடவுளுக்கும் சம்பந்தம் இல்லை.

பிறப்பில் வேற்றுமைகள்! குலம் கோத்திர வேறுபாடுகள் மனிதகுலத்தினை உருக்குலைக்கும் கொள்கைகள்! கடவுளுக்கே சாதி! இன்ன சாதியினர்தான் கடவுளைப் பூசிக்கலாம். சோறு படைக்கலாம்! பணக்காரன் - ஏழை ஏற்பாடுகள்! சுரண்டும் வர்க்கத்திற்குப் பாதுகாப்பு! புரோகிதம், மதம் இவற்றிற்குத் தலைமை தாங்க உயர் சாதியினருக்கே உரிமை! சமஸ்கிருதமே தேவ மொழி! தமிழ், சூத்திர மொழி! தமிழில் வழிபாடு கூடாது! தமிழனும் பூசனை செய்யக்கூடாது! இவற்றுக்கு மாறானவையெல்லாம் நாத்திகத்தின் கொள்கைகள், கோட்பாடுகள்!

இன்று நம்மை ஆளுவது மனிதர்கள் அல்ல. அரசியல் சட்டமே ஆளுகிறது. நம்முடைய அரசியல் சட்டம் சமயச் சார்பற்ற தன்மையை விவரிக்கிறது. ஆனால் நாட்டை ஆள்பவர்கள் சமயச் சார்பற்ற தன்மையை மறந்து பல ஆண்டுகளாகிவிட்டன ஏன்? நமது நாட்டுக் காவல்துறை யினரும் படைவீரர்களும் ராம நாம பஜனையில் ஈடுபட்டுத் தம்மையே மறந்து நின்று, பாபர் மசூதியை இடிப்பதைப் பார்த்துக் கொண்டுதானே இருந்தார்கள். இராமர் மீதிருந்த பக்தி, பாபர் மசூதிக்கு வேட்டு! இது எப்படி சமயச் சார்பற்ற தன்மையாகும்?

அடுத்து, நமது அரசியல் சட்டம் "ஜனநாயக சோஷ லிசக் குடியரசு" என்று பேசுகிறது. இன்று இந்தியாவில் எங்கே சோஷலிசம் இருக்கிறது? நாளும் 'பணக்காரர்கள் "புனல் நிறைந்த தொட்டிகள் ஆகி" வருகிறார்கள். "பொத்தல் இலை களைப் போல" மக்கள் ஏழைகள்ஆகிவருகிறார்கள். கருப்புப் பணம் குவிகிறது. அந்தக் கருப்புப் பணம் தேர்தலைப் பணச் சந்தையாக மாற்றி வருகிறது. ஏழைகளுக்குக் கிடைப்ப தெல்லாம் 'ஜீவனாம்சம்'! இலவசம்! 'குடியரசு' என்று பிரகடனம் செய்யப்பட்டுள்ளது. 'ஜனநாயகக் குடியரசு' என்று பிரகடனம் செய்கிறார்கள். ஜனநாயகம் எங்கு இருக்கிறது? ஆளுங்கட்சித் தலைவர், பாராளுமன்றத் தலைவர் என்று இருந்த மரபை மாற்றிவிட்டார்கள்! இன்று ஜனநாயகப் போக்கில் தனி மனிதர் வழிபாடே நடந்து வருகிறது. அரசியல் விருப்பு - வெறுப்புக்கள், கோபங்கள், கட்சித் தாவல்கள் எல்லாம் நடைபெறுகின்றன. இதனால் தான் தலைவர் பெரியார் ஜனநாயகத்தை நம்ப மறுத்தார்: கேலி செய்தார்! நாட்டைக் கெடுக்கும் ஐந்து பேய்களை மக்களுக்கு அறிமுகப்படுத்தி மக்களை எதிர்க்கும்படி தூண்டினார். அந்த ஐந்து பேய்கள் எவை? கடவுள், மதம், ஜனநாயகம், பத்திரிகை, திரைப்படம் ஆகையவையேயாம்! இவை மக்களிடம் இடம் பெற்றவை. மக்களுக்குத்

தேவையானவையும்கூட. ஆனால் - இவற்றை நன்னெறியில் பயன்படுத்தாது போனால் - தலைவர் பெரியார் அவர்கள் மனித சமுதாயத்தின் பால் கொண்ட பரிவை நிறைவேற்ற இயலாமல் போகும்.

# 68. *மனக் கோணல்கள்

மனிதன் ஒரு விந்தையான படைப்பு. மனித உலகத்தை இல்லை! எண்ணில் பல் கோடியாகப் பல்கிப் பெருகியிருக்கும் மனித உலகத்தை நாம் குறிப்பிடவில்லை. ஒரு மனிதன் - ஒரே ஒரு மனிதன்! ஆம், அவனே ஓர் உலகம்! அவனுடைய உணர்வுகள் ஒன்றா. இரண்டா? "கருதுப கோடியும் அல்ல பிற" என்று குறள் கூறும். கோடானு கோடி எண்ணங்கள்! மனித வாழ்க்கையின் மையம், மூலம், முதல் எல்லாமே மனம்தான். அம்மம்ம, இந்த மனம் என்ற ஒன்றின் ஆற்றல் எவ்வளவு பெரியது! நுண்மையிலும் நுண்மையதாக இலங்கும் மனம், பருமனிலும் பருமனாகிய பல் பொருள் களையும் இயக்குகிறது; நொய்யச் செய்கிறது. மனித உலகத்தின் வரலாறுகளே மன இயக்கங்கள் படைத்தவை தானே!

மனம் உருவெளி காண முடியாது நுண் பொருள்; ஆயினும், ஆற்றல் மிக்குடையது. ஆவதற்கும் அழிவதற்கும் மனமே அடிப்படை, இன்பத்திற்கும் துன்பத்திற்கும் மனமே அடிப்படை. உயிர் பயனுடைய வாழ்க்கையை நடத்தத் துணை செய்வது மனமே. உயிர், உலகத்தை அறியவும், அறிந்து அனுபவிக்கவும் துணை செய்வதும் மனமே. மனமே சிந்திக்கிறது. ஆதலால், மனத்தின் இயக்கங்களாகிய சிந்தனையும் புத்தியும் செய்திகளைச் சிந்தனை செய்து ஆராய்ந்து நிர்ணயித்தும் உறுதிப்படுத்தியும் கடமையைச் செய்கின்றது.

* வானொலியில்...

உடல் வேறு; உயிர் வேறு; மனம் வேறு; ஆயினும், அம் மூன்றையும் தனிப்படுத்தவும் இயலாது. ஒன்றின் இயக்கம், இன்னொன்றின் இயக்கத்தைப் பாதிக்கவே செய்கிறது. மன இயக்கத்தில் ஏற்படும் உணர்வுகளின் தாக்குதல்கள் உடலியக்கத்தையும், உயிரியக்கத்தையும் மிகவும் கடுமையாகத் தாக்குகிறது. அவ்வளவு கடுமையாக உடலியக்கத்தின் மாறு பாடுகள் மன இயக்கத்தைத் தாக்குவதில்லை. ஆனாலும், தாக்குதலும் பாதிப்பும் இல்லாமலே போகாது. ஆதலால், சிறந்த முறையில் வாழ விரும்பும் மனிதனுக்கு மனச் சுகாதாரமும் தேவை; உடல் சுகாதாரமும் தேவை. இந்த இரண்டு சுகாதாரமும் அமைய சுற்றுப்புறச் சூழ்நிலைச் சுகாதாரமும் இன்றியமையாதது. அதனாலேயே தனி மனிதனை ஆளும், மனத்தில் தொடங்கி, மனித சமுதாயத்தை ஆட்சி செய்து நெறிப்படுத்தும் அரசியல் நெறி வரையில் நெறி முறைகளையும், மரபுகளையும் உண்டாக்கினார்கள். நெறி, இன்பம் தருவது; இனிய மனத்திற்கு வித்தாக அமைவது.

நெறிவழி, இன்பம் நிறைந்த வாழ்விற்கும் களமாக அமைவது. துன்பம், கவலை, போட்டி, பகை, போராட்டம் - இவை இனிய பண்புகளாகா. இவை தனி மனிதனுக்கோ அல்லது சமுதாயத்திற்கோ ஒரு பொழுதும் நலம் பயப்பன அல்ல. ஆயினும் என்ன? எங்கும் இன்பத்திற்கு மாறான உணர்வுகளே நிலை பெற்றிருக்கின்றன! ஏன்? நெறியல்லா நெறி தன்னை நெறியாக நினைந்து வாழ்வதனாலேயாம். மன வேறுபாடுகளால் மனித உலகத்திற்கே கேடு சூழ்கின்றன. உடற்குறையைத் தாங்கினாலும் தாங்கலாம். மனக் குறையைத் தாங்கமுடியாது. ஓங்கி அடித்தலைவிட மனம் நோக நடப்பது கேடு பயப்பது. அதனாலன்றோ "நெருப்பினால் சுடுதலும் ஆறும்; மனம் நொந்து நோகச் சுடுதல் ஆறாது" என்று வள்ளுவம் கூறிற்று.

மனம் ஒரு வழிப்பட்டதல்ல. ஒருவனுடைய மனத்தில் தோன்றும் உணர்வுகள், அவன் வாழும் சமுதாயத்தின் கடந்த

கால - நிகழ்கால - எதிர்காலப் பிரதிபலிப்புகளின் எதிரொலி யாகவே இயங்குகிறது. ஆதலால், மனக் குறைக்கும் மனக் குற்றத்திற்கும் ஒரு மனிதனே பொறுப்புடையனாதல் இல்லை. அவனுடைய அகச் சுற்றமாகிய குடும்பமும், அகப்புறச் சுற்றமாகிய கல்வி உலகமும், புறச் சுற்றமாகிய சமுதாயமும் மிக முக்கியமான இடத்தை வகிக்கின்றன. மனம், நனவுப் பகுதி - நனவிலிப் பகுதி என இரண்டு பகுதியாக இயங்கு கின்றது என்று அறிஞர்கள் ஆராய்ந்து கூறியுள்ளனர். இதனையே புற உள்ளம், அகவுள்ளம் என்று அழைக் கின்றோம். வேறு சிலர் மனம், அடிமனம் என்பர். மனம் எளிதில் உணர்ச்சிவயப்படுவது. அடிமனம் ஆராயும் இயல் பினது. தேர்தலும் தெளிதலும் அடிமனத்தின் இயக்கங்கள். அடிமனம் அழிவற்றது. அங்கேயே புலன்களின் பதிவுத் தொகுதிகள் செயற்படுகின்றன. அடிமனம் நினைவின் களஞ்சியம். நாள்தோறும் தம்மை நாடுவோர்க்குக் குறை நீக்கி முறை நல்கும் நீதித்தலம். அடிமனத்தின் குரலைத்தான் அண்ணல் காந்தியடிகள் அந்தராத்மாவின் குரல் என்றார். அடிமனத்தையே தான் கிராமிய வழக்கில் 'மனசாட்சி' யென்று குறிப்பிடுகின்றோம்; உயிராற்றலும் திருவருளும் கூடிக் கலந்து மகிழும் இடமும், அடிமனமேயாம். அடிமனமே மனிதனை முழு மனிதனாக்கும் படைப்பாற்றல் உடையது.

"நினைத்துப் பார்!" "எண்ணிப் பார்!" "நீ நாளும் நினையாய்!" "பரிசீலனை செய்க!" என்றெல்லாம் கோரிக் கைகள் வைக்கப் பெறுவது அடிமனத்தின் முன்னாலேயாம். அடிமனத்திற்கு வேலை கொடுக்காதவன் அரை மனிதனாகி விடுகின்றான். அதனாலேயே ஆளுமையுடைய மனிதனுக்கு இலக்கணம் வகுக்கும் பொழுது "தேரான் தெளிவும், தெளிந்தான் கண் ஐயுறவும்'' என்று திருவள்ளுவர் மொழிந்தார்.

மேல் மனத்தை ஆசைகள் இயக்கும். அடிமனத்தை அறிவு இயக்கும். மேல் மனத்தைப் பாசங்கள் பற்றும்.

அடிமனத்தைப் பண்புகள் பற்றும். மேல் மனம் துய்ப்பிலேயே நாட்டம் கொள்ளும். அடிமனம் படைப்பாற்றலிலேயே நாட்டம் கொள்ளும். மேல்மனம் பகை நெறி பாராட்டும். அடிமனம் அருளார்ந்த பொறுத்தாற்றும் நெறி பாராட்டும். மேல்மனம் ஆரவாரங்களை நாடும்; புகழை நாடும். அடிமனம் புகழ்கேட்க நாணும். மேல்மனம் தற்சலுகை பேணும். அடிமனம் பிறர் நலம் பேணும். மேல் மனம் குறைகளை மறைக்கும். அடிமனம் குறைகளை மாற்றும். மேல் மனம் தன்னியல்பு அறியக் கூசும். அடி மனம் தன்னியல்பை ஆராய்ந்தறியும். மேல் மனம் விரிந்த உலகை நாடும். அடிமனம் 'எல்லாமாய் அல்லதுமாய்' இருக்கும் இறையை நாடும். மேல்மனம் சடங்குகளில் அமைதி கொள்ளும். அடிமனம் ஆரா அன்பில் அமைதி கொள்ளும். அடிமனத்தின் ஆற்றலுக்கு மேல்மனத்தை உட்படுத்தினால் மனிதன் கடவுள் ஆவான்; மண்ணகம் சொர்க்கம் ஆகும். மேல்மனம் அடிமனத்தை மூடிமறைக்குமானால் மனிதன் மிருகமாவான். மண்ணகம் நரகம் ஆகும். இஃது ஒரு முன்னுரை! ஆராய்க!

மனம் நேரிதாக இருக்கவேண்டும். அதையே தான் நேர்மையென்று கூறுகின்றோம். நேர்மை யென்பதன் தெளிவான பொருளாவது; இரு புள்ளிகளை இணைக்கும் கோட்டுக்கு நேர்கோடு என்று பெயர். அதுபோலவே உயிரறிவையும், இறையறிவையும் நேராக இணைப்பது நேர்மை. இறையருளையும், உயிரருளையும் இணைப்பது நேர்மை. ஓர் உயிரின் இன்ப உணர்வை இன்னோர் உயிரின் இன்ப உணர்வோடு இணைப்பது நேர்மை. இந்த இணைப்பு, வாழ்க்கையின் ஒவ்வொரு படியிலும் ஒவ்வொரு கட்டத்திலும் இருக்குமாயின் "இன்பமே எந்நாளும் துன்ப மில்லை" என்ற அப்பர் அடிகளின் அருள்வாக்கு நனவாகும்.

மனத்தில் கோட்ட மிருத்தலாகாது. சாதாரண ஈருருளை வண்டியின் சக்கரங்களில் கோட்டமிருந்தாலே

வண்டு உருள்வதில்லை, ஓடுவதில்லை, வண்டியின் பிற உறுப்புக்களோடு ஒத்துழைப்பதில், இயங்குவதில்லை. வண்டியின் சக்கரத்தில் ஏற்பட்ட கோட்டத்தின் குறையறி யாமல் வண்டியை அமுக்கிச் செலுத்தினால் வண்டிக்கும் சேதம் ஏற்படுகிறது; செலுத்துபவனுக்கும் துன்பம் ஏற்படு கிறது. அது போலத்தான் மனக்கோட்டங்களும் கூட. நம்முடைய மன வாழ்க்கையில் நெறிமுறைகளைக் கடந்த மனக்கோட்டங்கள் தோன்றிவிடும். வாழ்வு துன்ப மயமாகி விடுகிறது. அதிருப்தி தலைகாட்டுகிறது. அலுப்புகளும் சலிப்புகளும் தோன்றிவிடுகின்றன. தற்கொலைகளும் கொலைகளும் மலிகின்றன. வஞ்சினமும் காழ்ப்பும் வையகத்தில் இடம் பெறுகின்றன. ஆதலால், வளைந்து செல்லும் சாலைகளை நேராக்குவதை விட தொங்கிவிழும் மீசைகளை முறுக்கி நேராக்குவதைவிட, ஏன்? இடிந்த கோயில்களை எடுப்பதைவிட ஒப்பற்ற பெரும்பணி மனக் கோட்டங்களைத் தவிர்ப்பது. மனக்கோளாறுகளைத் தவிர்ப்பது.

மனக் கோளாறுகளில் பலவகை உண்டு. மனம் எப்படி யிருக்க வேண்டுமோ அப்படியல்லாமல் நெறிமுறை பிறழ்ந்து விடுவதால் பல்வேறு வகையான துன்பங்கள் ஏற்படுகின்றன. இந்த மனப்பிறழ்வுக்கு, இன்றையச் சூழ்நிலையில் மனப்பிறழ் வுடைய மனிதனையே பொறுப்பாக்குகிறது சமுதாயம். தனி மனிதனுக்கு அவனுடைய மனப்பிறழ்வுகளில் இருந்து சிறந்த முறையில் அமைத்துக் கொள்ளாததால் உள்ள பொறுப்பு ஓரளவு உண்டு. ஆயினும், ஒருவருடைய மனப்பிறழ்வுக்கு வீடும், நாடும், நாட்டின் சூழ்நிலைகளும் சமுதாயப் பழக்க வழக்கங்களும் கூட மிகுதியும் பொறுப்புடையதாக இருக்கிறது என்பதே உண்மை.

மனக்கோளாறு ஏற்படுவதற்குரிய பல காரணங்களில் தாழ்வு மனப்பான்மையும் ஒன்று. நான் ஏழை, பாமரன், அனாதை என்ற உணர்வுகள் மனிதனைத் திகிலடையச்

செய்கின்றன. மற்றவர்களை நோக்க நாம் தாழ்ந்தவர்களாக இருக்கிறோமே என்ற கவலை அவர்களை வாட்டுகிறது. உயிர்களின் பிறப்புரிமை சுயமரியாதை உணர்ச்சி. அந்தச் சுயமரியாதை உணர்ச்சிக்கு ஊறு ஏற்படும் பொழுதெல்லாம் மன முறிவுகளும் ஏற்படுகின்றன. அதனால், மற்றவர்களோடு இணங்கி வாழ முடியாமையால் மனித சமூகத்திலிருந்து ஒதுங்கிவிடுகிறான். முரண்பாடு - இணக்கமின்மை முதலி யவைகளினால் ஏற்படுகிற முடிவு (Tension) துடிப்பாகும். இந்தத் துடிப்பின் வேகத்தை உணர்ந்து குறைக்கத் தவறி அலட்சியமாக முரண்பாடு ஏற்படவில்லை என்று நினைத்து வாழ்ந்தால் முரண்பாடு மேலும் வளர்ந்து மனக் கோளாறுகளை உண்டாக்கி விடுகின்றன.

மனிதனின் மனம், விருப்பங்களின் ஊற்றுக்களன், காணாதவற்றையெல்லாம் காணவும், கேளாதவற்றையெல்லாம் கேட்கவும், துய்த்தறியாதனவற்றையெல்லாம் துய்க்கவும் நாடி அலைவது மனத்தின் இயற்கை. இங்ஙனம், எழும் விருப்பங்களை - அறிவினால் ஆராய்ந்து தகுதியில்லாத விருப்பங்களை - அவன் தன் மனத்தினின்று அகற்றிவிட வேண்டும். இது சால்பு நிறைந்த ஒழுக்கத்திற்கு அளவுகோல், இத்துறையில் வெற்றி காண்பது எளிதன்று. ஒருவனின் தகுதியுடைய விருப்பங்களையேகூட அவன் அடைந்து அனு பவிக்க முடியாமல் சமுதாயம், பழக்கம், வழக்கம், சட்டம் என்ற பேரால் தடை செய்கிறது. மண்ணிற்போட்ட வித்து முளைக்கத் தவறினாலும் தவறலாம். மனத்திலேற்பட்ட விருப்பமென்றவித்து, முளைத்தற்குத் தவறாது. நியாயமான தகுதியான மனிதனின் விருப்பத்திற்கு சமூகம் தடை செய்யும் பொழுது மனக்கோளாறுகள் தோன்றுகின்றன. தன்னுடைய விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ளத் தடையாக இருக்கும் சமூகத்தை அவன் கடுங்கோபத்துடன் பார்க்கிறான். இதன் காரணமாக சமூகத்திற்கும் அவனுக்கும் மனமுறிவு ஏற்பட்டு கொலைகளும், தற்கொலைகளும் பெருகுகின்றன. நிறை

வேறாத விருப்பங்கள் அடிமனத்தில் பதிவாகி மனமுறிவைக் காலத்தால் தோற்றுவிக்கின்றது.

பொதுவாக மனிதன் தன்னல உணர்வுக்கும், பிறர்நலம் கருதும் உணர்வுக்குமிடையே போராடிக் கொண்டிருக் கிறான். இந்த வகையில் காதலும் அடங்கும். தன்னலம் காக்கும் மனப்போக்கு எதையும் கண்டு அஞ்சும் தனக்கொரு பாதுகாப்பான சூழ்நிலை இல்லையென்று, எண்ணி எண்ணி ஏங்கும். ஒரு மனிதனின் தடைப்பட்ட நசுக்குண்ட விருப்பம் மனத்தைவிட்டு அகலாமல் அதன் ஆழ்ந்த பகுதியில் பதுங்கிக் குறுக்கு வழிகளில் பயன்பெற விழைகிறது. இதுவே, மனநோயின் தொடக்கம். இயல்பூக்கங்கள் - பற்றுக்கள், பொதுவாக விருப்பங்கள் பல வேலைகளில் ஒன்றோ டொன்று போராடுவதால் மன அமைதி கெடுகிறது; எரிச்சலும், சோர்வும் ஏற்படுகிறது. இங்ஙனம் தோன்றும் எரிச்சல், சோர்வு மனிதனின் செயலாற்றும் திறமையை இழக்கும்படிச் செய்கிறது.

மனநோயாகிய மன எரிச்சலுக்கு மூல நோய் மனக் கடுப்பாகும். ஒரு மனிதனின் தாழ்வுணர்ச்சி – எதிர்பாராமல் சந்தித்த தோல்வி - நம்பிக்கை ஏமாற்றங்கள் - தனது விருப்பம் நிறைவேறுவதற்கு முட்டுக்கட்டையாக இருந்த தடைகள் ஆகியவைமீது மனக்கடுப்பு ஏற்படுகிறது. இந்த மனக்கடுப்பு மற்றவர்களிடம் வெறுப்பை வளர்க்கிறது; பகைமை பாராட்டச் செய்கிறது; நீங்காச் சின்னத்தைத் தோற்றுவிக்கிறது. எப்பொழுதும் 'சிடு சிடு' என்ற பேச்சு எதிர்த்தரப்பைக் கேட்காமலே பேசும் குணம் இவற்றை மனக்கடுப்பு உருவாக்குகிறது. மனக்கடுப்பு ஒரு தொத்து நோய். அது மறைந்து அழுந்திக் கிடக்கும் வெறுப்புணர்ச்சி களை மற்றவர்களிடமும் தூண்டிவிடுகின்றது. தன்னுடைய விருப்பத்திற்கு ஏற்றவாறு இல்லாமல் மாறாக நடந்து கொள்ளும் மனிதர்களைப் பார்த்தாலும் மன எரிச்சல் நோய் வருகிறது. நம்மோடு நெருங்கிப் பழகுகிறவர்களைப் பற்றி நாம்

ஏதாவது தவறான முடிவை எடுத்துக் கொண்டாலும் மீண்டும் அந்த ஆளைச் சிந்திக்கும் பொழுதெல்லாம், சந்திக்கும் பொழுதெல்லாம் - மன எரிச்சல் வருகிறது. தான் துய்த்து மகிழ விரும்பிய ஒன்றைப் பிறிதொருவர் தடை செய்யும் பொழுதும், அல்லது பிறிதொருவர் தட்டிப் பறித்து இவர் காண அவர் அதை அனுபவிப்பதும் மன எரிச்சல் நோயைத் தோற்றுவிக்கிறது. சிறப்பாகக் காதல் துறையில் ஏற்படும் ஏமாற்றத்தில் ஏற்படுகிறது. அண்மைக் காலமாகப் புகழ் வேட்டலிலும் இந்த மன எரிச்சல் நோய் கால் கொண்டிருக்கிறது.

தனக்கு உடன்பாடில்லாதவரை அல்லது பகைவரை மற்றவர் புகழக் கேட்கும் வாய்ப்புக் கிடைத்துவிட்டால் தாங்க முடியாத மன எரிச்சல் நோய் உண்டாகிறது. தெளிவாகச் சொன்னால் அழுக்காற்றின் விரிவாகவும், பயனாகவும் இருக்கிறது மன எரிச்சல் நோய். கண்ணேறு படுதல் - திருஷ்டி போடுதல் ஆகியனவும் மன எரிச்சல் நோயின் விளைவே. மனஎரிச்சல் நோய் மிகும் பொழுது சினமாக வடிவம் பெறுகிறது. இதே மன எரிச்சல் நோய், உடல், பொருள், வலிவற்றோரிடம் இருக்குமானால் "ம்... தெரியாதாக்கும்!" என்று உதட்டைப் பிதுக்குதலும், ஓரக்கண் அடித்தலும் நிகழ்கின்றன. மன எரிச்சல், இனிய பொருள்களைக் கூடத் துன்பமுடையதாக்குகின்றன. மன எரிச்சல் உடையவர்களுக்குப் பச்சைத் தண்ணீரும் சுடும்; கோயில் மணி ஒலியும் கூகையின் குரலாகக் கேட்கும் இந்த மன எரிச்சல் நோய் உடலையும் கெடுக்கும்; மன நலத்தையும் கெடுக்கும்; வளத்தையும் கெடுக்கும்; வாழ்வையும் கெடுக்கும். ஆதலால், மனத்தைச் சிறந்த முறையில் பழக்கிப் பண்படுத்த வேண்டும். பொதுவாக நல்ல பழக்கங்களை ஏற்படுத்திக் கொள்வது அவசியமாகும். தன்னலத்தை விட்டுப் பிறர் நலத்தைப் பேணுகின்ற பண்பை ஏற்றுக் கொண்டாலே மனம் தூய்மை பெற்று இலங்கும். பிறருக்குரிய மரியாதைகளைத் தந்து, பாராட்ட வேண்டியவற்றைப் பாராட்டிக்

குறை பார்க்காமல் குணம் பார்த்துச் சீராட்டி வாழத் தொடங்கினால் வாழ்வு சிறக்கும். உலகம் செழிக்கும்.

வாழ்க்கையின் உறவுக் களங்களை நம்பிக்கையின்பாற் படுத்த வேண்டும். வாழ்க்கையில் தொடர்பும், உறவும் உடையவர்களிடத்தில் மனம் விட்டுப் பேசிப் பழகுதல் வேண்டும். தவறுகளையும் துன்பங்களையும் அறவே மறந்து மனத்தினை அன்பினால் ஆற்றிக் கொள்ள வேண்டும். நாள்தோறும் மனத்தினை திருவருள் நினைப்பில் தோய்த்துத் தூய்மை செய்து கொண்டு வர வேண்டும். உலகத்திற் சிறந்தது அறம்; வாழ்க்கையிற் பின்பற்ற வேண்டியது அறம். வாழ்க்கையில் செய்ய வேண்டியது அறம். அஃது எந்த அறம்? வள்ளுவரே வகுத்துத் தந்துள்ளார். "மனத்துக் கண் மாசிலனாதல் அனைத்து அறன்" என்பது குறள். "அனைத்து அறன்" என்ப தாவது, அதுவே பல அறங்களுக்கும் வழியாகும். ஆதலால், மனநலம் காத்து வாழ்வோமாக.

# 69. *கலையும் வாழ்வும்

தொழிலாளர்கள் கட்டுக்கோப்புடன் ஒற்றுமையாக ஒரு குலமாக வாழ்ந்து, கல்விச் செல்வத்தையும் பொருட் செல்வத்தையும் பெற்று, சிறப்புடன் திகழ்ந்து கவலையற்ற, நேர்மையும் செம்மையும் நிரம்பிய நிலையுடன், குடி கெடுக்கும் செயல்களைத் தள்ளித் திறமை கொண்ட தீமையற்ற தொழில் புரிந்து, யாவரும் தேர்ந்த கல்வி ஞானமெய்தி வாழவேண்டும்.

கலைகள் கருத்தைக் கவர்வன; களிப்பைத் தருவன. கருத்தற்ற கலைப் படைப்புக்கள் கால வெள்ளத்தை எதிர்த்து நீந்தி சென்று வாழ இயலாதவை. கருத்து, கற்றறிந்தோர் உள்ளத்திலே, தேங்கிநின்று தேசிய உணர்ச்சிக்கும் சமுதாய

* முத்து மொழிகள்

உயர்வுக்கும் உதவக்கூடியது. காலத்தால் மூத்த நமது இனம் கருத்தில் நாட்டம் கொண்டதாலேதான் கருத்தரங்கங்களில் ஏறி நின்று ஏற்றம் பெற்றது; கருத்துவழிவாழ் வாழ்ந்து மகிழ்ந்தது; கருத்துக்களிலே நல்லனவும் தீயனவும் உண்டு. கருத்து என்ற பேரில் உண்டாகும் எல்லாமே வாழ்வுக்கு உகந்தனவாக இருந்ததில்லை. இருப்பதுமில்லை – இருக்கவும் முடியாது.

இயல் இசை நாடகம் போன்ற கலைகள் தமிழனைப் பொறுத்தமட்டில் மகிழ்வை ஊட்டியதோடு – வாழ்வையும் காட்டின. “வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்” என்ற உண்மையைத் தமிழர் களின் கலைகள் எடுத்தியம்பின. இதனாலே கழைவழிக் கலாசாரம் முகிழ்த்து, அன்பும் அறனும் பண்பும் பணிவும் மலர்ந்தன. கருத்துவழிப்பட்ட வாழ்வு அரும்பி மலர்ந்து மணம்வீசக் கலைகள் பயன்பட வேண்டும். இசை நாடகம் போன்றவற்றை அழகுக் கலைகள் என்கிறோம். அழகுக் கலைகள் ஆழ்ந்தகன்ற நுண்ணறிவை ஆக்கவேண்டும். இறந்த காலத்தைப் பற்றிய அறிவையும் நிகழ்காலத்தை யொட்டிய கருத்தையும் வருங்காலத்தைப்பற்றிய திட்டத்தையும் தமிழ்க் கலைகள் எடுத்துச் சொல்லவேண்டும். கல்லூரிகளிலே கற்கும் சிறார்களின் நற்சிந்தனைக்கும் – நல்ல முன்னேற்றத் திற்கும் கல்லூரி விழாக்களில் இடம் பெறும் கலை நிகழ்ச்சிகள் உதவவேண்டும். பருவம் அறந்து பக்குவம் தெரிந்து கலை நிகழ்ச்சிகளின் மூலம் நற்கருத்துக்களைத் தூவி விடவேண்டும். இன்றைய நிலையிலே பள்ளிகளின் மூல மாகப் போதிக்கமுடியாத நற்கருத்துக்களை மாணவர்க்குக் கலைகளின் வழியே போதித்து விடலாம். இப்போது கலை களை அனுபவித்துப் போற்றும் சூழ்நிலை இளைஞர்களிடத் திலே உருவாகியுள்ளது. இந்த நல்லநிலையைப் பயன்படுத்தி நயத்தக்க கருத்துக்களைக் கலைகள் மூலம் கற்பிக்க வேண்டும்.

'கற்றிலானாயினுங் கேட்க' என்றார் வள்ளுவர். அதைப்போல் 'படிப்பிலனாயினும் பார்க்க' எனலாம். இளைஞர்கள் நடிப்பு நடனம் போன்றவைகளைப் பார்த்து அனுபவிக்க விரும்புவது போல் அவைகளினூடாக வரும் கருத்துக்களையும் கேட்க வேண்டும். கேள்வியறிவு பேரறிவைத் தரவல்லது - பார்த்துப் பெறுமனுபவங்கள் பாரிற் சிறக்க வழிசெய்யும்; புத்தகத்தையே தொடாத - படிக்காத சில பாமரமக்கள் கேள்வியறிவினாலும் வாழ்க்கை யனுபவத்தாலும் உயர்வதைப் பார்க்கிறோம். கல்வியாற் பெற்ற உண்மைகளோடு காட்சியாலும் கேள்விகளாலும் பெறும் கருத்துக்களும் உலகியல் வாழ்க்கைக்கு உறு துணையாய் நின்று உதவக் கூடியன; கலைகள் காட்டும் கருத்துக்களிலே கழிப்பதைக் கழித்துக் கொள்வதைக் கொள்ள வேண்டும். உலகப் பெரியார் சொன்னதைப் போல் குணம் நாடிக் குற்றம் களைய வேண்டும். வாழ்வுக்குப் பயன் அளிக்காத - வாழ்வையே அழிக்கக் கூடிய சில கருத்துக்கள் சுவையுடன் வெளிப்படுத்திப் படுவதால் இளைஞர்களை அவை ஈர்த்து விடுகின்றன. கள்ளமோ களங்கமோ இல்லாத வெள்ளை உள்ளங்கள் அக்கருத்து வழிச் சென்று வாழ்வின் பயனை அனுபவிக்காது அல்லலுறுகின்றன. பிஞ்சு நெஞ்சங் களை நற்கருத்துக்கள் பிணிக்கவேண்டும். பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும் - ஈதல் இசைபட வாழ்தல் - இன்னா செய்தார்க்கு நன்னயம் செய்தல் காலத்தினாற் செய்யும் உதவி - அன்புக்கும் உண்டோ அடைக்குந்தாழ் - அறனெனப் பட்டதே வாழ்வு - ஒன்றே குலம் ஒருவனே தேவனும் போன்ற வேண்டப்படும் கருத்துக்கள் கலைகளின் மூலம் புகுத்தப்பட வேண்டும்.

நல்லெண்ணமும், நல்லுறவும் நற்சிந்தனையும் நாடு முழுவதும் பரவப் பெருகக் கலைகள் பயன்பட வேண்டும். அறிவைத் தேடிக் கொள்ளாதவர்கள் வாழ முடியாது அவதிப்படுகிறார்கள். அதிகம் படித்தவர்கள் திக்கு முக்காடு கிறார்கள். நடுத்தரப் பிரிவினர் இரண்டுங் கெட்ட நிலையில்

இன்னலுறுகின்றார்கள். இவர்களுக் கெல்லாம் அறிவை, நிம்மதியைச் சலனமற்ற நிலையைக் கலைகள் காட்ட வேண்டும். நாட்டிலே நாடக மேடைகளிலே மட்டும் கலையும் கலையைச் சார்ந்த கருத்துக்களும் மின்னி முழங்கி விட்டாற் போதாது. வீடுகள் தோறும் கலையின் விளக்கம் என்று கவிஞன் பாரதி கூறியது போல் கலைகள் இல்லங்கள் தோறும் எழுந்தருளி இருள் நீக்கி ஒளிபரவ வேண்டும். நமது நாட்டிலே நம்மிடையே கலைப் பெருக்கத்திற்குக் குறை வில்லை. பெருக்கமிருக்கிறதே தவிர பெருக்கத்தை யொட்டிய பலனைக்காணோம். நமக்குள் ஒரு நல்ல மனப்பான்மை யுண்டு – அது எதையும் பாராட்டுதல். வீணை வித்துவானை – நடிப்புச் செல்வனை – பாடலாசிரியனை – இசை விற் பன்னனைப் பாராட்டி மகிழ்வதில் நமக்கு ஒரு தனிவிருப்பு. பாராட்டி மகிழ்வதோடு பயன்களையும் விளைவிக்க வேண்டும். கலைகள் வெறும் பாராட்டுக்களோடு நின்றால் வாழ்வுக்குப் பயன்படாத வீண்பொழுதுபோக்காய் முடியும். நம்மிடையே சந்தேகமும் கள்ளத்தனமும் இப்போது உருவாகி யிருக்கின்றன. பொருள் உள்ளவனிடத்திலே இல்லாதவன் களவாய்க் கவர்ந்து செல்ல நினைக்கிறான். பொருள் உள்ளவன் நல்லவனைக் கூடச் சந்தேகித்து தற்காப்புத் தேடிப் பொருட்காப்புச் செய்கின்றான். முன்பெல்லாம் பனி, மழை, வெய்யில் போன்றவற்றிற்கும் விலங்குகள் போன்றவற்றிற்கும் தப்பிக் கொள்ளவே தற்காப்புத் தேடி வீடுகளைக் கட்டினார்கள். இன்று பக்கத்து வீட்டானைப் பகைவனாக்கி அவனை நம்பாமல் திருடனாக்கி அயோக்கியனாக்கி அவனிடம் இருந்து நம்மை நாம் காப்பாற்றவே வீடுகளை எழுப்புகிறோம். களவுகாவல் என்ற தத்துவ அடிப்படையில் வீடுகளைக் கட்டுகிறோம்.

இந்த நிலை மாறவேண்டும். மாற்றத்தைக் கலைகள் போதிக்க வேண்டும். மனித வாழ்வின் எல்லாத்துறை களுக்கும் வேண்டிய நல்லுணர்வுகளைக் கலைகள் காட்ட

வேண்டும். உழைத்துப் பிழைத்து முன்னேற வேண்டிய அவசியத்தை உணர்த்த வேண்டும். பாடுபடுபவன் உழைப்பவன் நல்லபடி வாழ - அதிக ஆசையற்றுப் போதுமென்ற மனத்துடன் பொதுமை வாழ்வில் அக்கறை கொள்ள மனிதனை ஆற்றுப்புத்தி ஆவன செய்யவேண்டும். 'கொடுக்கும் தெய்வம் கூரையைப் பிய்த்துக் கொண்டு கொடுக்கும்' என்று நொந்த, நைந்த மனோபாவத்துடன் தூங்கும் ஏழையை விழிக்க வைக்க வேண்டும். சமுதாய விழிப்பிற்கும் - அகத் துறைப் புரட்சிக்கும் கலைகள் தொண்டாற்றி வெற்றி பெற வேண்டும்.

கடவுள் நம்பிக்கையில் ஊறிய - தெய்வக் கொள்கையைப் பாராட்டுகிற மனித சமுதாயத்தை உண் டாக்கி - சமவாய்ப்புச் சமுதாயத்தில் நாட்டம் கொண்டவர் களை வாழ்த்தவும், கலைகள் வழி வகுக்க வேண்டும். முதலாளி தொழிலாளிகளுக்கிடையே இருக்கிற வேற்றுமை களை அழித்தொழித்து அருள் வெள்ளம் பெருக்கெடுத் தோடுமாறு செய்ய வேண்டும். இறைவன் ஒருவனே நமக்கெல்லாம் முதலாளி. நாம் எல்லாரும் அவனது தொழிலாளிகள் என்ற எண்ணம் மக்கள் மத்தியில் அரும்பி மலரவேண்டும். தாய்மொழிப் பற்றும் தாய்மொழி நாகரிகமும் தாய்மொழி வழிபாடும் எங்கும் எல்லோரிடத்திலும் பரவ வேண்டும். மனிதர்களிடைய ஏழை என்றும் அடிமை என்றும் எவருமில்லை ஜாதியில் என்ற மனோதத்துவம் தேவை. மனிதர்களிடையே பாமர மனிதர்கள் இருப்பது நமக்கு இழிவைத் தருகிறது; மரங்களிலே கூட பாமரங்கள் இல்லை. தென்னையிலோ, பனையிலோ, பலாவிலோ பாமரர்கள் உண்டா? ஆனால் நம்மிடையே எத்தனை வகைப்பட்ட பாமரங்களை உண்டாக்கி இருக்கிறோம்.

எனவே, கலைகள் கருத்தைக் கொண்டனவாக - கருத்தை இருத்தி இன்ப அன்பு வாழ்வுக்கு அடிகோலு

வனவாக இருக்க வேண்டும். மனித மனங்களைத் தவிர ஏனைய உயிர்களின் உள்ளங்களைப் பிணிக்கும் ஆற்றல் கலைகளுக்கு உண்டு. குறிப்பாக ஆனாயநாயனாரின் வரலாறு இசை மூலம் மிருக இனத்தையும், பறவையினங் களையும் ஈர்த்திழுத்தமையைக் காட்டி நிற்கிறது. ஆகவே கருத்தைப் பிணிக்கும் கலைகள் நயத்தக்க கருத்துக்களைப் பரவச் செய்யப் பயன்பட வேண்டும்; கலைஞர்களும் தேவை யானவற்றைக் காட்ட வேண்டும் - போதிக்க வேண்டும். மக்கள் விரும்புவதைக் காட்டக் கூடாது. மக்களுக்கு எது தேவையோ அதைக் காட்ட வேண்டும்! வாழ்க்கை ஒரு நாடகம். நாம் எல்லாம் நடிகர்கள். நடகர்களிடத்திலே நல்லுணர்ச்சி உண்டென்றால்தான் நாடகம் சிறக்க வழியுண்டு; நல்லுணர்ச்சியோடு நற்சிந்தனையாளரைப் படைக்க வழியுண்டு. நல்லுணர்ச்சியோடு நற்சிந்தனை யாளரைப் படைக்க கலைகள் உதவ வேண்டும்.

# 70. *புத்தாண்டுச் சிந்தனைகள்

ஆண்டுகள் உருண்டோடுகின்றன. பழைய ஆண்டு போகிறது; புதிய ஆண்டு வருகிறது. வழக்கம்போல ஆர்வத் துடன் வரவேற்கிறோம்; ஆனால், ஆண்டுகள் வருவதில் போவதில் ஏதாவது தவறுகள் உண்டா என்று தேடிப் பார்த்தால் இல்லையென்றே பதில் வருகிறது!

விடைபெற்றுச் செல்லும் ஆண்டு, ஆங்கீரச ஆண்டு! வரவேற்புப் பெறும் ஆண்டு ஸ்ரீமுக ஆண்டு! விடைபெற்றுச் செல்லும் ஆண்டு, நமக்கு மகிழ்ச்சியை தராததோடன்றி, ஆற்றொணாத் துயரத்தையும் தந்துள்ளது. நமது நாட்டில் கொள்ளைகள், கொலைகள் பரவலாகி வளர்ந்துள்ளன. தீவிரவாதம் என்ற பெயரில் பயங்கரவாதம் தலைதூக்கி

* மதுரை வானொலி; 13.4.93

உள்ளது. நினைவில் நீங்கா வடுப்படுத்திய நிகழ்ச்சி, அயோத்தியில் நடந்த நிகழ்ச்சி! இந்த நிகழ்ச்சி நாட்டை அதிர்ச்சிக்குள்ளாக்கியது.

"வணங்கு துறைகள் பலப்பல ஆக்கி" - என்பது ஆழ்வார் திருவாக்கு. "இவர் தேவர் அவர் தேவர் என்று இரண்டாட்டாது ஒழிந்து ஈசன் திறமே பேணி" என்பது அப்பரடிகள் வாக்கு. கடவுள் ஒருவரே! இதுவா? அதுவா? என்றால் விவாதம் வளரும். இதுவே அது.

அதுவே இது என்ற நம்பிக்கையே சரி,

> "தென்னாடுடைய சிவனே போற்றி!
> எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி!"

என்று மாணிக்கவாசகர் அருளியதை அறிக.

> "வேறுபடு சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்
> விளங்குபரம் பொருளே, நின் விளையாட்டல்லால்
> மாறுபடும் கருத்தில்லை முடிவில் மோன
> வாரிதியில் நதித்திரளாய் வயங்கிற்றம்மா"

என்றார் தாயுமானார். இந்து சமுதாயம் இப்படி நீண்ட நெடுங்காலமாகப் பின்பற்றி வந்த சகிப்புத்தன்மை - சமயப்பொறை ஆகிய உயிர்க் கொள்கைகளுக்கு ஆபத்துத் தந்த ஆண்டு! இந்தியா ஓரணியில் திரண்டு நின்றது, மத நல்லிணக்கத்தைப் பேண - மனித நேயத்தைப் பாதுகாக்க!

இந்தப் புத்தாண்டு தினத்தன்று நாம் கவனமாகச் சிந்திக்க வேணடும். நாட்டு மக்களின் மௌனத்தைக் கலைக்க வேண்டும்: நாட்டில் நடக்கும் நிகழ்வுகளைப் பற்றிப் பேச வேண்டும். நாட்டின் நலன், சமுதாயத்தின் ஒருங்கிணைந்த வளர்ச்சிப் பணிகள் பற்றிப் பேச வேண்டும்; திரும்பத் திரும்பப் பேச வேண்டும். ஒருநாட்டு மக்கள் எதைப்பற்றி அதிகமாகப் பேசுகிறார்களோ, அந்தத் திசையினை நோக்கி நாடு நகரும். நாட்டின் முன் எண்ணற்ற பிரச்சனைகள் உள்ளன. நாடு முழுவதும் ஏதோ ஒருவிதமான மூளைச்

சோம்பல் ஒருபுறமும், பாதுகாப்பின்மை உணர்வும், பதற்றமும் நிலவுகின்றன. எங்கும் எதிலும் சேதாரங்கள்! காலச் சேதாரம், அறிவுச் சேதாரம், உழைப்புச் சேதாரங்கள் மலிந்து விட்டன. இவைகளைப் புறத்தே தள்ளிப் புத்தாண்டில் புத்துயிர்ப்புப் பெறுவோமாக!

நம் நாடு, வெகு வேகமாக மேற்கத்திய நாடுகளின் நாகரிகத் திசைநோக்கிச் செல்கிறது. இது தவறல்ல. ஆயினும் அதற்குரியவாறு நம்மைத் தகுதிப் படுத்திக் கொள்ள வேண்டாமா? நமது நாட்டில் திறந்த வெளிச் சந்தை அறி முகப்படுத்தப் பெற்றுள்ளது. அப்படியானால், உள்நாட்டுப் பொருள்களை வாங்கிப் பயன்படுத்த வேண்டும் என்ற சுதேச உணர்வு இனி, தேவைப்படாது; இருக்காது. எனவே, நாம் உற்பத்தி செய்யும் பொருள்கள் தரமானவையாக இருக்க வேண்டும்; விலையும் குறைவாக இருக்க வேண்டும். இந்த உணர்வு நம்மிடம் இல்லையாயின் நம்முடைய உற்பத்தி மிகவும் பாதிக்கும். நம்முடைய உழைப்பின் தரத்தை உயர்த்தி, தரமான பொருள்களை உற்பத்தி செய்து உலகச் சந்தை களுக்கு அனுப்ப உறுதி கொள்வோமாக!

சாதி, வகுப்பு வாதங்களைத் தலைதூக்க விடாமல் தடுக்க, புத்தாண்டில் உறுதிகொள்வோமாக! நமது நாடு, பாரத நாடு! நாம் அதன் மக்கள்! நாம் அனைவரும் ஒருகுலம்; ஓர் இனம்; ஒரு விலை; ஒரு நிறை என்ற உணர்வு, புத்தாண்டின் பரிசாகக் கிடைக்கட்டும்! நமது நாட்டினை வளர்ப்பதில் முதற்கவனம் செலுத்தப் பெறுதல் வேண்டும். நாட்டின் புதல்வர்களாகிய நாமோ, நமது நாட்டை வளர்க்காமலும் - வளர்க்காதது மட்டுமல்ல - சுரண்டியும் வருகின்றோம். எதிர் வரும் புத்தாண்டிலிருந்து நமக்குத் தொழில் அன்பு செய்தல், நாட்டுக்கு உழைத்தல் என்று உறுதிகொண்டு வாழ்வோமாக! புத்தாண்டில் புதிய வரலாறு படைக்க வேண்டும். பழைய வரலாற்றைப் புதுப்பித்து வரலாற்றின் பக்கங்களில் இடம் பெறக்கூடிய காரியங்களைப் புத்தாண்டில் செய்ய உறுதிகொள்வோமாக!

# 71. *கொலுவும் வாழ்க்கையும்!

பாரத தேசத்தில் சமய சமூக நிகழ்ச்சிகளில் அன்னை பராசக்திக்கு முதன்மையான இடமுண்டு. இயல்பாகவே பாரத நாட்டுச் சமயம், எல்லாவற்றையும் அன்னை பராசக்தியின் வடிவமாகப் பாவித்து வாழ்த்தி வணங்குதல் மரபு. நாட்டை வளப்படுத்துகிற ஆறுகள், வாழ்க்கையை வளப்படுத்துகிற கலைகள், எல்லாமே அன்னையின் வடிவம். பெண்மையை இழிவு படுத்திக் கோழைமைத் தனத்திற்கு ஆளாக்கியது மிகவும் பிற்காலத்தியக் கொள்கையே யாகும். அன்னை பராசக்தி கலைமகளாகத் திகழ்ந்து கலைகள் பலவற்றைக் கற்றுத் தருகிறாள்; திருமகளாகத் திகழ்ந்து தேடும் செல்வங்களனைத்தும் தருகிறாள்; கொற்றவையாகக் குலவிக் கொடுமையையும் தீமையையும் அழித்து நன்மை சேர்க்கிறாள். இந்த நம்பிக்கை இந்த நாட்டினுடைய மக்கள் வாழ்க்கையில் ஜாதி இன மொழி வேறுபாடுகளைக் கடந்து பரவியுள்ளது.

பாரதம் முழுவதும் கொண்டாடப் பெறுகிற ஒரு சிறந்த திருவிழா இந்த நவராத்திரி விழா. இந்த நாட்டில் நடைபெறும் பல திருவிழாக்கள் கோவில்களில் மட்டுமே கொண்டாடப் பெறுவதுண்டு. ஆனால் நவராத்திரி விழா கோவில்களில் மாத்திரமின்றிக் குடும்பங்களிலும் கொண்டாடப்பெறுவது நாம் நினைவில் கொள்ளத்தக்க சிறப்பான நிகழ்ச்சி. குடும்பங்கள் செழித்தாலே கோவில் செழிக்கும். குடும்ப வாழ்வில் அன்பியலும் அருளியலும் செழிக்குமானால் கோவில்களும் செழிக்கத்தானே செய்யும்! நவராத்திரி விழாவில் நாடு முழுவதுமே மகிழ்கின்றது! நம் குழந்தைகள் எல்லாம் ஆடி விளையாடுகின்றன! கலைஞர்கள் கலைத் திறன் காட்டுகின்றனர்! அணங்குகள்

* பொங்கல் பரிசு

அழ கூட்டுகின்றனர்! அறிஞர்கள் ஆய்வுரை கூறுகின்றனர். அர்ச்சகர்கள் அன்னை பராசக்தியை அகங்கொண்டு, மலர் கொண்டு அர்ச்சிக் கின்றனர். அன்னை பராசக்தி கடைக்கண் பாலிக்கின்றாள். இத்தகு வாய்ப்பு வேறு எத்திரு விழாவிற்குத்தான் இருக்கிறது!

நவராத்திரி விழாக்காலத்தில் வீடுகளில் கொலு வைப்பதுண்டு. கலைப் பொருள்கள் ஓவியங்கள் சிற்பங்கள் ஆகியவைகளைச் சேர்த்து அழகுற அமைத்துக் கொலுக் காட்சியைப் படைக்கின்றனர். அடுக்கி வைக்கப் பெற்ற கொலு கண்ணுக்கும் விருந்து - கருத்துக்கும் விருந்து. சமய நிகழ்ச்சிகள் அல்லது சடங்குகள், தத்துவங்கள் சார்புடைய கருத்துக்களின் வெளிப்படைப்பேயாகும். வாழ்க்கை ஒரு அடுக்கிவைக்கப் பெற்ற கொலுபோல. பொன்னால், பொரு ளால் புகழால் வாழ்க்கை அடுக்கி வைக்கப்பெற்ற கொலுப் போல காட்சியளிக்கலாம். ஆனாலும், அது நிரந்தரமான தன்று. என்றோ ஒரு நாள் அது கவலைப்பட வேண்டியதே. "சா நாளும், வாணாளும் யாரறிவார் நன்னெஞ்சே" என்பது திருஞானசம்பந்தர் வாக்கு. ஆதலால், அடுக்கி வைக்கப் பெற்ற கொலு கலைவதற்கு அல்லது கலைக்கப் பெறுவதற்கு முன்னால் வாழ்க்கையை வெற்றியுடையதாக்கிக் கொள்ள வேண்டும்! அதாவது, பயனுடையதாக்கிக் கொள்ள வேண்டும். இங்கே பயன் என்று குறிப்பிடப்படுவது, வாழ்க்கையை முழுமைப் படுத்திக் கொள்வதேயாகும். இந்த ஆழ்ந்தகன்ற சித்தாந்தத்தை விளக்குவதே நவராத்திரிக் கொலு.

அடுத்து, கொலுவுக்கு அழ கூட்டுவது மனிதனின் திறமையேயாம். கல்லைக் கவின்தரு சிலையாக ஆக்குவதும், கூடும் அன்பினில் கும்பிடத்தக்க தெய்வமாக்குவதும் மனிதனின் ஆற்றல்தான். ஆதலால், ஆற்றலைப் பெருக்கி வளர்த்து உலகத்தை வளப்படுத்தி அழகுப் படுத்துவதன் மூலம் வையத்தை வாட்டும் துன்பத்திலிருந்து இவ்வையத்தை

விடுவித்து இன்பம் பொங்கச் செய்யலாம். இம்மண்ணகத்தை விண்ணகமாக்கலாம் என்ற தத்துவத்தையும் இவ்விழா நமக்குப் போதிக்கிறது.

இவ்விழா பௌராணிக மரபுப்படி ஒரு தேவ அசுர யுத்தத்தை நினைவுபடுத்துகிறது. நமது பழைய புராணங்களில் வருகின்ற தேவ அசுர யுத்தங்கள் நன்மைக்கும் தீமைக்கும் ஏற்பட்ட போராட்டங்களேயாகும். இந்தப் போராட்டம் மனித உலகம் சிந்திக்கத் தொடங்கிய காலந்தொட்டுத் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டே இருக்கிறது. தீமைகள் அசுர வடிவமாகவும், நன்மைகள் தெய்வ வடிவமாகவும் கருதப் பெறுகின்றன. தீமையை எதிர்த்துப் போராடி நன்மையைச் சாதிப்பது உயர்ந்த மனிதனின்கடமை. அந்த மனிதனுக்குத் துணை நிற்பது தெய்வத்தின் பொறுப்பு. இக்கருத்தினையே திருவள்ளுவரும் கூட,

> "குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
> மடிதற்றுத் தான்முந் துறும்" –குறள் 1023

என்று கூறுகின்றார்.

தெய்வம் தீமையை எதிர்த்துப் போராடுகிறது என்பதன் சின்னமாகவே தெய்வங்களின் கைகளில் கருவிகள் உள்ளன. அக்கருவிகளின் மனிதனை எதிர்த்துப் போராடு வதற்காகவோ மனிதனைப் பயப்படுத்துவதற்காகவோ அன்று. மருத்துவன் கையிலுள்ள கத்தியைப் போல, உழவன் கையிலுள்ள மண்வெட்டியைப் போல, உலகியலின் நன்மை கருதிய தெய்வத்தின் திருக்கரங்களில் கருவிகள் காணப்பெறு கின்றன. அந்த யுத்தங்களிலும் கூட தீமையை எதிர்ப்பதன்றி தீமை யுடையோரை எதிர்ப்பதில் இல்லை போராட்டம்.

"ஆழ்க தீயது எல்லாம்" என்பார் திருஞானசம்பந்தர். அதனாலன்றோ தேவ அசுர யுத்தங்களின் முடிவில் அசுரர்கள் தங்களின் தகாத செயலுக்கு வருத்தப்படுவதையும், அவர்கள் மன்னிக்கப் பெற்று அருள்பாலிக்கப் பெறுவதையும்

காண்கிறோம். அது போலவே, நமது அன்னை பராசக்தி உலகத்தைத் துன்புறுத்திக் கொண்டிருந்த மகிஷாசுரனை வெற்றி காண ஒன்பது நாட்கள் நோன்பிருந்து போராடி வெற்றி பெற்றாள் என்பதே வரலாறு. எல்லாம் வல்ல பராசக்தி நோன்பிருந்து தவம் செய்தது ஏன்? தான் செய்து காட்டுவது பிறரைச் செய்யும்படி செய்வதற்கு சுலபமான வழி! சொல்லிச் செய்யும்படி செய்வதைவிட செய்து காட்டிச் செய்யும்படி செய்வதே நாகரிகமுறை. நாம் இந்த நவராத்திரி விழாக் காலத்தில் நிறையச் சொல்வதைவிடச் சிலவற்றை யாவது செய்ய முயற்சிக்க வேண்டும். நம்மைச் சுற்றிச் சூழ்ந் திருக்கிற கலியுகத் துன்பத்தை மாற்றியமைக்க வேண்டும்! பசியும் பகையும் நீங்கி அன்பும் பண்பும் பெருகி வளர வேண்டும்! மனித உள்ளங்கள் அழகிலும் கலையிலும் ஈடுபட வேண்டும்! மீண்டும் அன்னை பராசக்தியின் திருவுள்ளத் திற்கு அபிராமி பட்டர் அருளிய கீழ்க்கண்ட பிரார்த் தனையை நினைவு படுத்துவோமாக!

> தனந்தரும் கல்விதரும்
>         ஒருநாளும் தளர்வறியா
> மனந்தரும் தெய்வவடிவும்
>         தரும் நெஞ்சில் வஞ்சமிலா
> இனந்தரும் நல்லன எலாம் தரும்
>         அன்பர் என்பவர்க்கே
> கனம்தரும் பூங்குழலாள்
>         அபிராமி கடைக்கண்களே.

# 72. *தீபாவளிச் சிந்தனைகள்

இருளே உலகத்தியற்கை. இருளை அறவே அகற்றும் முயற்சி இதுவரையில் வெற்றி பெறவில்லை. ஒளியை ஏற்றும்

* மதுரை வானொலி 21.9.94

முயற்சி அறிவு தொடங்கிய நாள் தொட்டு நடைபெற்று வருகிறது. ஒளியைக் கொணரும் முயற்சியில் தாமஸ் ஆல்வா எடிசன் மகத்தான வெற்றி பெற்று, மின்னொளி மூலம் புவிக்கோளத்தை ஒளிமயமாக்கினார். ஆயினும் இருள் முற்றிலும் அகன்ற பாடில்லை.

நாம் மின்னொளியில் உட்கார்ந்து தான் எழுதிக் கொண்டிருக்கின்றோம். எழுதும் பேனாவின் பின்பகுதி நிழல் இருட்டு! இருள் திணிந்தது. ஒளிவரும் பொழுது, இருள் அடங்குகிறது; ஒளிகிறது. அவ்வளவுதான்! ஒளி அகன்றவுடன் இருள் சூழ்ந்து கொள்ளும்! ஆதலால், ஒளியை ஏற்றும் முயற்சியில் தொடர்ந்து ஈடுபடவேண்டும். ஏற்றிய ஒளியை அணையாமல் பாதுகாக்க வேண்டும். இதுவே, தீபாவளி தரும் படிப்பினை! ஒளிதரும் விளக்குகளின் அழகுமிக்க அணிவரிசையே தீபாவளி! ஆனால், நமது தமிழ் நாட்டில் தீபாவளி நாளன்று ஒளிவிளக்குகள் ஏற்றும் பழக்கம் இல்லாமல் போய்விட்டது. ஒளி! ஒளி! ஒளிமயமான உலகம் தோன்றட்டும்! இதுவே, தீபாவளியின் செய்தி!

ஒளிவகை இரண்டு. ஒன்று புறவிருள் நீக்கும் ஒளி! மற்றொன்று அகவிருளாகிய அறியாமையை அகற்றும் அறிவொளி! இன்று நமது நாட்டில் எங்கும் எத்திசையிலும் கேட்கும் ஒலி அறிவொளி! அறியாமை இருளைவிடக் கொடியது! இருள், இருள் என்று தெரிகிறது. அறியாமை என்பது அறியாமையே என்று ஒரு சிலருக்குத்தான் தெரியும். பலருக்கு அறியாமை அறிவுபோலத் தோன்றும். அறியாமையையே அறிவெனக் கருதிக் கொண்டு ஆர்ப்பரவம் செய்வர். இதனைப் புல்லறிவு என்று திருக்குறள் பேசும். இன்று, நம்மைச் சூழ்ந்துள்ள துன்பங்களுக்கெல்லாம் அறியாமையே காரணம். அறிவு என்பது தொடரும் ஒன்று. 'அறிவு முற்றிற்று' என்று கூறமுடியாது. 'அறிதோறும் அறியாமை' என்று திருக்குறள் கூறும். எழுத, படிக்கத் தெரிந்துகொண்டால் போதாது. நல்ல தரமான நூல்களைக்

கற்க, உணர, அனுபவிக்கவும், அனுபவித்ததைச் சிந்தனை செய்யவும், செயல்வடிவம் கொடுக்கவும் கற்க வேண்டும். இந்த நிலையில்தான் அறிவு வருகிறது; வாழ்க்கைக்கு உதவி செய்கிறது. ஆதலால், அகவிருளாகிய அறியாமையை அகற்றி அறிவொளியை அகத்தில் ஏற்றுவதும் தீபாவளியின் போது நிகழ வேண்டிய ஒன்று.

நரகாசுரன் என்பவன் துவாபரயுகத்தில் வாழ்ந்தான்! அவன் மக்களுக்கும் தேவர்களுக்கும் துன்பம் கொடுத்து வந்தான். திருமால் அவதாரம் செய்து நரகாசுரனை வதம் செய்து மக்களையும் தேவர்களையும் பாதுகாத்த புராண வரலாற்றை நினைவூட்டுவது தீபாவளி! நரகாசுரன் இறக்கும் தருணத்தில் தன் நினைவாக மக்கள் கொண்டாட வேண்டும் என்ற வேண்டுகோளுக்கு இணங்கத் தீபாவளி கொண்டாடப் பெற்று வருகிறது.

தீபாவளி, அசுரத் தன்மை மறைந்த நாள்; துன்பம் நீங்கிய நாள்; மகிழ்ச்சிக்குரிய நாள். அசுரத்தன்மை தொலைந்தது என்ற உணர்வில் எண்ணெய் தேய்த்துத் தலை முழுகுகின்றோம்; மகிழ்ச்சியைக் கொண்டாட வெடிகள் வெடிக்கப்படுகின்றன; புத்தாடை உடுத்து மகிழ்கின்றோம். பல்வேறு சுவையுடைய பண்டங்கள் செய்து உண்பித்தும் உண்டும் மகிழ்கின்றோம்.

தீபாவளி ஆண்டு தோறும் வழக்கமாக வந்து கொண் டிருக்கிறது. ஆனால், தீபாவளியின் தத்துவங்கள், கொள்கை - கோட்பாடுகள் எந்த அளவுக்கு வெற்றிபெற்றுள்ளன என்று கூறமுடியாது. இந்த நாட்டின் கடைகோடி மக்களான ஏழைகள் தீபாவளி கொண்டாட முடியாது. நடுத்தர வர்க்கத்தினரும் கூடக் கடன்வாங்கித் தான் கொண்டாடு கின்றனர். நன்மையும் பூரணமாக வளர்ந்து விடவில்லை. நம்மைச் சுற்றி, பகை இன்னும் அகலவில்லை.

இந்த மங்கல நாளாகிய தீபாவளியன்று நாம் நல்லனவே எண்ணவும், நல்லனவே செய்யவும் உறுதி

கொள்வோமாக! அசுரத் தன்மை தலை எடுக்காத வண்ணம் தொடர்ந்து போராடுவோம். எல்லோரும் வாழ்க! வளமுடன் வாழ்க! இன்பத்துடன் வாழ்க! வையகம் வளர்க! வாழிய உலகம்!

ஞாலத்தைச் சூழ்ந்திருக்கும் இருள் அகலுக! எங்கும் ஒளி விளக்குகளை ஏற்றுவோம்! அறிவொளியை ஏற்றுவோம்! கற்போம்! கற்பிப்போம்! ஒளியும் அறிவும், புதுமையும் இனிமையும் நிறைந்த உலகத்தைப் படைக்க இத் தீபாவளித் திருநாளன்று உறுதி கொள்வோம்! சரி, காலம் நீட்டிக்கிறது தின்பண்டங்களின் வாசனை அழைக்கிறது! உண்பிப்போம்! உண்போம்! வாழ்க மங்கலத் தீபாவளி!

# 73. *போகித் திருநாள் சிந்தனைகள்

பாரதி, முதுமையடைந்த - வளர்ச்சிக்குத் தகுதியில்லாத - மாற்றத்தை விரும்பாத பாரதத்தைப் 'போ! போ! என்று விரட்டினான்! அதே போழ்து ஒளி படைத்த இளைய பாரதத்தை வரவேற்றான்! பழைமை பயனற்றதுதானா? ஆம்! அதிலென்ன ஐயம்! பழைமை பழைமையாகவே அமைந்து விடில் யாதொரு பயனும் இல்லை. பழைமை நாளும் நாழிகையும் வளர்ந்து புதுமையாக வேண்டும். வளர்ச்சியும் மாற்றமும் உலகத்தின் நியதி. கடவுளேகூட, முன்னைப் பழம்பொருளாக இருக்கலாம். அந்தக் கடவுள் பின்னைப் புதுமைக்கும் புதுமையாக விளங்கி உலா வராவிடில் கடவுளைத் தொழுவார் யார்? விரும்புவார் யார்?

"முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம்பொருளே!
பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப் பெற்றியனே"

என்பது திருவாசகம்.

* மதுரை வானொலி 13.1.94

மானும் தோன்றிப் பலநூறாயிரம் ஆண்டுகள் உருண்டோடி விட்டன. இந்தப் பயணத்தில் கண்ட கொள்கைகள் பலப்பல. அவற்றுள் பல காலத்தால் அழிந்து போயின. சில வளர்ந்தும் மாறியும் உயிர்ப்போடு சமுதாயத்தில் இடம்பெற்றிருக்கின்றன. இன்னமும் சிலபல பழைய கொள்கைகள் வாழ்க்கைக்குப் பயன்படாதன மட்டுமல்ல, முட்டாள்தனமானவையும் நிலவுகின்றன என்பதூஉம் உண்மை.

இந்தியா பலவீனமைடந்த நாடு, நாளும் பலவீனம் அடைந்து வருகின்றது. அது எதனால்? சாதி வேற்றுமைகள், குலகோத்திர வேற்றுமைகள் காரணமாகப் பாரத சமுதாயம் உள்ளீடழிந்து வருகிறது. சிலர், இந்த வேற்றுமைகள் தான் இந்தியாவின் பலம், இந்தியாவைக் காப்பாற்றி வருவது என்றும் கூறுவர். வேற்றுமைகள் இருத்தல் என்பது வேறு. வேற்றுமைகளை உள்ளடக்கிக் கொண்டு சமுதாயம் வளர்வது என்பது வேறு. வேற்றுமைகள் பொருளற்றவையாகிச் செயலிழந்து காலப் போக்கில் மறைந்து விடும். இந்த நடைமுறைகள் ஒரு காலத்தில் இருந்தன. அன்று, சாதி முறைகள் நெகிழ்ந்து கொடுத்தன. இன்றோ, சாதிமுறைகள் இறுக்கமடைந்து வருகின்றன. ஒன்றோடொன்று மோதும் பகைமை சக்திகளாக உருப்பெற்று வருகின்றன. சாதிச் சண்டைகள் அன்றாட நடைமுறைகளாகி விட்டன. சாதிகளை அங்கீகரிக்கும் போக்கும், சாதிமுறைகளுக்கு ஊக்கம் தருவதும் இன்றைய அரசியலின் கோட்பாடாகி விட்டன. இது வளரும் இந்தியாவுக்கு நல்லதல்ல. பகைமையையும் பிணக்கையும் வளர்க்கும். சாதிமுறைகள் போகட்டும்! போகட்டும்! இந்தியாவை ஒன்றுபடுத்தி "எல்லாரும் ஓர் குலம்; எல்லாரும் ஓர் இனம்; எல்லாரும் இந்தியர்." என்ற பாரதியார் கொள்கை வெற்றி பெறட்டும்.

"ஒன்றே குலம்; ஒருவனே தேவன்" என்ற திருமந்திர மொழி வெற்றி பெறட்டும்!

கடவுள் நம்பிக்கை வேறு; மதம் வேறு. இன்று கடவுள் நம்பிக்கையை மதங்கள் ஜீரணித்து விட்டன. மனித குலத்தை இணைக்கும் சங்கிலியாக மதம் தோன்றியது. இன்று மதம், இணைப்புச் சங்கிலியாக உருமாற்றம் பெற்றிருந்தால் பாபர் மசூதி இடிக்கப் பட்டிருக்குமா? மண்டைக்காடு கலவரம் தான் தோன்றியிருக்குமா? இன்று மதங்கள் மனிதனை மூடனாக்குகின்றன; வெறியனாக்குகின்றன. மதம் - மதத் தலைவர்கள் கற்றுத் தந்த மூடப் பழக்கங்கள், விதி நம்பிக்கை அத்தனையும் போய்த் தொலையட்டும். நல்லெண்ணமும் நம்பிக்கையுமுடைய புதிய தலைமுறை உருவாகட்டும்.

நாட்டை வளர்ப்பது மக்கள் கடமை. இன்று நாட்டுப் பணி என்ற கடமையைச் செய்வார் அருகிப் போயினர். நாட்டுக்கு மக்களே சொத்து. மக்களுக்கு நாடு சொத்து அல்ல. இன்று மக்கள் நாட்டையே சொத்தாக நினைத்துச் சுரண்டி வாழ்கின்றனர். இத்தகைய பொருந்தா வாழ்க்கை போயகல வேண்டும். நாளும் நாட்டிற்கு உழைத்தல் யோகம் என்ற பாரதியின் கொள்கை வெல்க!

இந்தச் சிந்தனைப் போக்கில் தான் நமது முன்னோர்கள் போகிப் பண்டிகை என்ற சடங்கை, தைத்திங்கள் பிறப்புக்கு முதல் நாளில் அமைத்துள்ளனர். வீடுகளில் பயன்படாதன கழிக்கப்படுகின்றன. வீடுகள் புதுமையும் பொலிவும் பெறுகின்றன!

நாமும் சிந்தனை, செயலால் வளர்வோம்! வாழ்வோம்! போக வேண்டியன எல்லாம் போய்த் தொலையட்டும். வரவேண்டியன வரவேண்டும் என்று பிரார்த்தனை செய்வோமாக!

# 74. *போகிச் சிந்தனைகள்

போகி என்பது போக்கல் என்ற பொருளில் அமைந்த வழக்காக இருக்கக் கூடும். அதாவது குடியிருக்கும் ஊர்களில் உள்ள குப்பைகள், குடியிருக்கும் வீடுகளில் உள்ள குப்பைகள் — அழுக்குகள் போக வேண்டும். சுற்றுப்புறச் சூழல் தூய்மை, பாதுகாப்பு என்ற 'சிந்தனை தமிழருக்குப் பழைமையானது. ஆதலால், பொங்கலுக்கு முதல் நாள் வீட்டைச் சுத்தம் செய்கின்றனர். சிவப்புப் பட்டை அடிக்கின்றனர்; அழகூட்டுகின்றனர்.

போகி என்ற சொல்வழி, சுற்றுப்புறத் தூய்மை மட்டு மல்ல. மனத்தூய்மையும் நினைவுக்கு வருகிறது. வீதியிலும் வீட்டிலும் மட்டுந்தானா நாள்தோறும் அழுக்குச் சேர்கிறது? நம் மனத்திலும் எத்தனை எத்தனை தூய்மைக் கேடுகள்,* அழுக்குகள் சேர்கின்றன; “மனத்தது மாசு” என்பார் திருவள்ளுவர். “அழுக்கு மனத்தொடு” என்பார் சுந்தரர். மனத்தில் உள்ள அழுக்குகளையும் அகற்ற வேண்டும். மனத்து அழுக்குகளைத் திருக்குறள் பட்டியலிட்டுக் காட்டுகிறது! அவற்றுள் சில அழுக்காறு, அவா, வெகுளி, பாழ்படுத்தும் உட்பகை முதலியனவாம்! இந்த மன அழுக்குகள் எல்லாம் அகன்றால்தான் மனிதன் உருவத்தில் மட்டும் மனிதனாக இல்லாமல் மனிதனாகவே வாழ இயலும். மனிதன் கூடித் தொழில் செய்வான்; கூடி வாழ்வான்!

அழுக்காற்றினைப் “பாவி” என்று திட்டுகின்றார் திருவள்ளுவர். மற்றவர்கள் அடைவது பொறுக்கமாட்டாமல் புழுங்குவது அழுக்காறு. நல்ல காரியங்களில் பொறாமைப் படலாம் என்று சிலர் அமைதி கூறுகின்றனர். அதுவும் தவறு. அழுக்காறுடையான் மற்றவர்கள் உடுப்பதையும் உண்பதையும் கூடக் காணப் பெறாதவன் ஆயிரம் குற்றம்

* மதுரை வானொலி 14.1.95

கண்டு சொல்வான். அழுக்காறுடையான் ஆக்கம் பெற முயற்சி செய்வதில்லை. அறிவறிந்த ஆள்வினை இல்லாதானின் அவா, தீது. வெகுளி, சேர்ந்தாரைக் கொல்லும். உட்பகை புற்றுநோயிலும் கொடியது. ஆதலால், பொங்கலுக்கு முன்பே இந்தத் தீமைகளிலிருந்தெல்லாம் மனிதன் விலக வேண்டும். இதனைத் திருக்குறள்,

*"மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்*
*ஆகுல நீர பிற"*

—குறள் .34

என்று கூறுகிறது.

மனத்துக்கண் மாசில்லாது வாழ்தலே அறவாழ்க்கை. மற்ற அறங்களெல்லாம் ஆரவாரத் தன்மையுடையன. ஆதலால், குற்றம் குறைகளையும், நிறைகளையும் கணக்கிட்டுக் குற்றங்களை நீக்கிக் கொள்க; குறைகளைத் தவிர்த்திடுக! நிறைகளைப் பெற முயலுக. பகைமையை விலக்குக! அழைத்துப் பேசுக' உறவுகளை வளர்த்திடுக! உடனிருந்து உண்க!

தனிமனித வாழ்க்கை சிறப்புற அவன் வாழும் குடும்பமும் சமூகமும் நாடும் நன்றாக அமைய வேண்டும். குடும்பம் நடத்துதல் ஒரு கலை; பண்பாடு! மனநிறைவும் மகிழ்ச்சியும் அமைதியும் ஆற்றல்மிக்க அன்பும் குடும்பத்தில் நிலவ வேண்டும். செல்வத்தினால் மட்டும் வாழ்க்கை சிறப்ப தில்லை! "செல்வம் என்பது சிந்தையின் நிறைவே" என்றனர். ஆதலால், குடும்பத்தில் அன்பு தழீஇய உறவுகளும், இருப்பதைக் கொண்டு மனநிறைவுடன் வாழும் பாங்கும் நிலவ வேண்டும். சமூகம் உற்றுழி உதவும் பாங்குடையதாகவும் ஒருமைநலம் மிக்கதாகவும் அமைய வேண்டும். ஒருவர் எல்லோருக்காகவும் எல்லோரும் ஒருவருக்காகவும் என்ற உயர் நெறி சமூகத்தில் நிலவ வேண்டும்; நாட்டில் பாது காப்பும் உத்தரவாதமும் தரக்கூடிய அரசு வேண்டும்.

இவையெல்லாம் ஒருங்கே அமையின் போகமும் இன்பமும் தழுவிய வாழ்க்கையும் அமையும். போகி, இன்ப வாழ்க்கைக்குரிய வாயில்! ஆம்! தை பிறந்து விட்டது! அறு வடையும் முடிந்து விட்டது! களஞ்சியங்கள் நிறைந்துள்ளன. திருமணமானவர்களுக்கு மகிழ்ச்சியூட்டும் இல்வாழ்கை! திருமணமாகாதவர்களுக்குத் தை மாதத்தில்தான் வழி பிறக்கிறது! காதலும் களிப்பும் கலந்த வாழ்க்கை!

ஆண்டில் - முதலில் சமூக விழா, மஞ்சு விரட்டு, ஏறு தழுவல் விழா! அடுத்துத் திருக்கோயில்களில் தைப்பூச விழா! பழந்தமிழர் வாழ்க்கையில் தைப்பூச விழா, புகழ்பெற்ற திருவிழா! "தைப் பூசம் காணாது போதியோ பூம்பாவாய்!" என்று திருஞான சம்பந்தர் பாடுகின்றார்! திருக்கோயில் களிலும் தைப்பூசத் தேர்விழா!

போகி, கழிப்பன கழித்துச் சேர்ப்பன சேர்க்கும் நாள்! இன்ப வாழ்க்கைக்குக் கட்டியம் கூறும் நல்ல நாள். புது மனிதராக மாறுவோம்! புதியதோர் உலகம் அமைப்போம்!

# 75. *பொங்கல் வாழ்த்து

வீட்டைப் புதுமைப்படுத்துவோம்

சமூகத்தைச் சீரமைப்போம்!

சந்தர்ப்பங்களைச் சமமாக்குவோம்.

புதுப்பானை தேடுவோம்!

புதிய சிந்தனையைத் தேடுவோம்.

அடுப்பில் பொங்கல் பானை!

வாழ்வெனும் அடுப்பில் நாம்!

எரியும் விறகு - கொழுந்து விட்டெரியும் இலட்சியத் தீ! பால் பொங்குகிறது - அறிவு பொதுளுகிறது!

* குமுதம் 16.1.1992 இதழ்

செந்நெல் அரிசி - எடுத்த குறிக்கோள்!

இனிக்கும் வெல்லக்கட்டி - இதந் தரும் அன்பு சர்க்கரைப் பொங்கல் - கன்னல்நிகர் வாழ்க்கை! உண்பித்து உண்போம்! மகிழ்வித்து மகிழ்வோம்! மாடுபோல உழைப் போம்! உழைப்பின் பயனை உலகுக்கு அளிப்போம்! உழைப் பதற்காக உண்போம்!

பொங்கலோ பொங்கல்!

மகிழ்ச்சிப் பொங்கல்!

பானையில் பால் பொங்குவது போல வாழ்க்கையில் மகிழ்ச்சி பொங்கட்டும்!

வீட்டைச் சுற்றியுள்ள குப்பைகள் தொலையட்டும்!

சாதிக் குப்பைகள் அவிந்து சன்மார்க்கம் தோன்றட்டும்!

ஏழ்மை அகலட்டும்!

ஏக்கம் குறையட்டும்! எல்லாரும் வாழட்டும்!

கலகங்கள் போகட்டும்!

கலைகள் வளரட்டும்! மக்கள் மனத்தில் மகிழ்ச்சி வெள்ளம் நிறையட்டும்!

## 76. *தமிழர் திருநாள் சிந்தனைகள்

தமிழர் வாழ்வில் ஆண்டு முழுதும் பல திருவிழாக்கள்! மாதந்தோறும் விழாக்கள் உண்டு. இந்தியர்கள், சடங்குகள் - விழாக்களிலேயே பிறந்து வளர்ந்து வாழ்க்கையை முடிக் கின்றனர். தமிழர்களின் தனிவிழா, பொங்கல் விழாவேயாம். பொங்கல் விழா, இயற்கைக்கு முரணானது அல்ல. பயனற்ற

* மதுரை வானொலி 14.1.94

செலவுகளும் இல்லை. பொருந்தா உணவு வகைகளும் இல்லை.

தமிழர் திருநாள் - பொங்கல் விழா நான்கு நாள்கள் நடைபெறுகின்றன. முதல் நாள், குடியிருக்கும் வீட்டையும் சுற்றுப் புறங்களையும் தூய்மை செய்வது நடைபெறும். வீடுகள் சுண்ணாம்பு அடிக்கப் பெற்று எழிலோடு விளங்கும். இரண்டாம் நாள் சிறப்பான நாள். தமிழரின் மரபுவழித் தொழில், உழவுத் தொழில். மழையின் அதிதேவதைகளான இந்திரன், கதிரவன் இவற்றை இயக்கும் கடவுள் ஆகியோருக்கு வழிபாடு நிகழ்த்தும் திருநாள்.

'இத் திருநாளில் புதுப்பானையில் பாலும் தண்ணீரும் கலந்து செந்நெல் அரிசியோடு வெல்லக் கட்டியும் சேர்த்துப் பொங்கி நெய்கூட்டிப் படைத்து உண்பது வழக்கம். பானையில் அரிசி இடுவதற்கு முன்பு பானையில் ஊற்றிய பாலும் தண்ணீரும் பொங்க வேண்டும். பானையில் பால் பொங்கும் போது "பொங்கலோ, பொங்கல்" முழக்கம்; இதயத்தில் மகிழ்ச்சி நிறைய முழங்குவர். இ,ந்த இரண்டாம் நாள் விழாதான் பொங்கல் திருநாளின் மகிழ்ச்சி நிறைந்த நன்னாள். சர்க்கரைப் பொங்கல் கிடைக்கும்; கடித்துத் தின்னக் கரும்பும் கிடைக்கும்.

மூன்றாம் நாள் விழா, மனிதனின் - விவசாயியின் செல்வமாகிய மாடுகளுக்கு! 'மாடு' என்றாலே செல்வம் தான்! தமிழ்ச் சமுதாயம் ஒரு காலத்தில் செல்வ ஆதாரத்தை, மாடுகளை வைத்தே கணக்கிட்டது. பசுமாடு, பால்பொழிந்து நமது உடலை, உயிரை வளர்க்கிறது. எருது, உழுது கொடுத்து விவாசயத் தொழிலின் முதுகெலும்பாக விளங்குகிறது- கால் நடைகள் விவசாயத்தைப் பாதுகாத்து வளர்க்கின்றன. கால்நடை வளர்ப்பும், விவசாயமும் இணைத் தொழில்கள்.

மாட்டுப் பொங்கல் நாளான இன்று, மாடுகளுக்குப் புத்தாடை கிடைக்கும். ஏன்? சோறுகூடக் கிடைக்கும். மாடு

களுக்கு மாட்டுப் பொங்கலன்று சோறூட்டுவர். மற்ற நாள்களில் எல்லாம் வைக்கோல்தான்! "உழுத நோன் பகடு அழி தின்றாங்கு" என்பது புநானூறு – மாட்டு பொங்கலன்று மாடுகளுக்கு குதூகலம்! விளையாட்டு! மாடு அவிழ்த்து விடுதல், மஞ்சுவிரட்டு முதலியன நிகழும்.

நான்காம் நாள், காணும் பொங்கல் நாள் என்பர். இளைஞர்களும் யுவதிகளும் விளையாடி மகிழும் திருநாள். இளைஞர்கள் சடுகுடு விளையாட்டில் ஆர்வம் காட்டுவர்; ஏறு தழுவலில் ஈடுபடுவர். இந்த விளையாட்டுக்களை யுவதிகள் பார்த்துப் பூரிப்பர். மனத்தைப் பறிகொடுப்பர். காதல் கனியும்; வழியும் பிறக்கும். "தை பிறந்தால் வழி பிறக்கும்" என்பது வழக்கு. யுவதிகள் கும்மி, கோலாட்டம் ஆடுவர். இதைக் கண்டு மகிழ இளைஞர்களுக்கு ஒரு வாய்ப்பு. மாலை நேரத்தில் அனைவரும் மற்ற வீடுகளுக்குச் சென்று "பால் பொங்கியதா?" என்று விசாரித்து வாழ்த்துக் கூறுவர். பெரியோர்களை வணங்கி வாழ்த்துப் பெறுவர். இது தலைமுறை தலைமுறையாக நடந்து வரும் மரபு. மாலை நேரத்தில் சிறுவர் – சிறுமியர் ஆரத்தியுடன் இல்லங்கள் தோறும் சென்று கும்மியடிப்பர். காசுகள் பெறுவர்; பொதுவாக மகிழ்ச்சி நிறைந்த நன்னாள்.

தமிழர் திருநாள் – பொங்கல் திருநாள் தமிழினத்திற் கோர் திருநாள். காசுகள் கரியாகாமல் வீடுகள் சீரமைக்கப் பெறும் திருநாள். உணவும உடையும் மனிதனின் அடிப் படைத் தேவைகள்! இவ்விரண்டையும் வழங்கும் விவசாயத் திற்கு ஒரு விழா! செந்நெல், செங்கரும்பு, மஞ்சட் கொத்துக்கள் முதலிய வேளாண்மைப் பொருள்கள் பயன்படுத்தப் பெறும் விழா; அறுவடை விழா என்றே கொண்டாடப் பெறும் விழா! மனுதனின் செல்வமாகிய மாடுகளை வளர்ப்பதற்கு ஊக்கமளிக்கும் ஒரு விழா; மாட்டுப் பொங்கல், கிராம மக்களுக்கிடையில் ஒற்றுமை

ஏற்படுத்தும் விழா! பெரியோரைக் காணலும் வாழ்த்துப் பெறுதலும் நடக்கும் விழா!

பானையில் பால் பொங்கட்டும்! மனத்தில் மகிழ்ச்சி பொங்கட்டும்! இல்லங்கள் எல்லாம் எழில் பெற்று விளங்கட்டும்! விவசாயத் தொழில் வளர்க! உழவர்குடி உயர்க! உண்டி கொடுப்போர் வளர்க! வாழ்க! பசுமாடுகள் பால்பொழிந்து தரட்டும்! உழும் எருதுகள் உழுபடை சாலில் செல்வம் கொழிக்குமாறு செய்யட்டும்! இளைஞர்கள் விளையாடி மகிழட்டும்! காதலர்கள் கற்புக் கடம்பூண்டு வளர்க! வாழ்க!

# 77. *பொங்கல் சிந்தனைகள்

பொங்கலோ, பொங்கல்! பொங்கலோ, பொங்கல்! புதுப்பானையில் பால் பொங்கி வழிகிறது! செந்நெல் அரிசியும் வெல்லமும் போட்டு, நெய்யும் கூட்டிச் சுவையான சர்க்கரைப் பொங்கல் சமைக்கப்படுகிறது! ஞாயிறு முதல் வேண்டிய தெய்வங்களுக்கெல்லாம் படைக்கப்படுகிறது! அப்புறம் உண்ணும் படலம்!

புதுப்பானையில் பொங்கல்! பயன்படும் நிலையில் இருந்தாலும் பழைய பானையைப் பயன்படுத்துவதே இல்லை! புதுப்பானையில் சர்க்கரைப் பொங்கல்! அது போலவே, பழக்கங்களைத் தவிர்த்துப் புதுப் பிறப்பெடுத்துப் புது மனிதனாகிப் புதியதோர் உலகம் படைக்க வேண்டும். சர்க்கரைப் பொங்கலின் பின்னணி என்ன? செந்நெல் அரிசி எளிதில் கிடைத்ததா? காடு வெட்டித் திருத்திக் கழனி யாக்கிப் பயிர்செய்து, பாதுகாத்து நெல் விளைத்து, அறுவடை செய்து, பின் நெல்லைக் காயவைத்து, குற்றி அரிசியாக்க வேண்டும். இது செந்நெல் அரிசியின் வரலாறு.

* மதுரை வானொலி 15.1.96

வெல்லக் கட்டி என்ன வீதியிலா கிடைக்கிறதா? கரும்பு சாகுபடி செய்து, கருப்பஞ்சாறு எடுத்துக் காய்ச்சி வெல்லமாக்க வேண்டும். கரும்பை நசுக்கிச் சாறு எடுக்க வேண்டும். "கரும்புபோல் கொல்ல" என்று திருக்குறள் கூறும். வெல்லம் போட்டவுடன் நெய் சேர்க்க வேண்டும். நெய்யின் வரலாறும் கடினமானதுதான்! இங்ஙனம் பல சோதனைகளைக் கடந்து வந்த பொருள்கள்தான் இனிய சர்க்கரைப். பொங்கலுக்குப் பயன்படுகின்றன! சர்க்கரைப் பொங்கலில் பயன்படுத்தப் பெறும் பொருள்களின் தரம் குறைந்தால் சர்க்கரைப் பொங்கலின் சுவை குறையும். அது போலத்தான், மானிட வாழ்க்கையும் பல சோதனைகளைக் கடந்து, இடுக்கு வழிகளைக் கடந்து முன்னேறி வந்தால் புதிய மனிதனாவான்; ஆக்கத்திற்குப் பயன்படுவான். இத்தகை யோன் வாழ்க்கையே அவனுக்கும் இன்பம் அளிக்கும்; மற்றவர்களுக்கும் இன்பம் அளிக்கும்.

> "சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
> சுடச்சுட நோற்கிற் பவர்க்கு"

என்ற திருக்குறள் அறிக. திருஞானசம்பந்தரும் "இடரினும் தளரினும் எனதுறு நோய் தொடரினும்" என்றருளியமை யையும் அறிக. உலகில் சிறந்த சாதனையைச் செய்தவர்கள், வரலாற்றில் புகழ் பெற்றவர்கள் அனைவரும் எளிதில் அந்தப் பேற்றினை அடையவில்லை! கடின உழைப்பினை மேற்கொண்டனர்! அளவற்ற சோதனைகளுக்கு ஆளாகினர். வள்ளலார் வாக்குக்கு ஏற்ப, "உண்மை தூய்மையுற வசை வெல்லாம் வாழ்த்தெனக் கொண்டு" உழைத்தனர். உலகம் வளர்ந்தது; பூவுலகு புதுமைகள் பலவற்றைக் கண்டது. புதுமை வேட்டல் என்பது அறிவின் பரிணாம வளர்ச்சி. பழைமை புதுமையை ஈன்றெடுத்துத் தரும். புதுமை - பழைமைக்கு இது சுழற்சி முறை. இந்தச் சுழற்சி முறை இடையீடின்றி இயங்காது போனால் மானுட வாழ்க்கை

தேங்கிப் போகும். எந்தச் சூழ்நிலையிலும் தேக்கம் விரும்பத்தக்கதல்ல.

நமது நாட்டில்தான் பழைமை விரும்பிகளுக்கும் புதுமை விரும்பிகளுக்கும் இடையே விவாதம்! பகுத்தறியும் அறிவு, அனைவருக்கும் பொது! ஆனால், இன்று யார் பகுத்தறிகிறார்கள்? ஆய்வு மனப்பான்மை அருகி வருகிறது. அறிவு என்பதற்கு அணுகுமுறை, ஆய்வு செய்யும் பாங்கு என்றே பொருள் கொண்டனர். பழந்தமிழ் இலக்கியங்களில் அறிவியல் உண்மைகள், சமூக இயல் உண்மைகள் இருந்தன. அவற்றை நாம் படித்ததோடு சரி! ஆய்வும் சோதனையும் செய்யத் தவறியதால் தமிழர்கள் அறிவியல் துறையில் பின்தங்கினர்; தமிழ் மொழியும் இருபத்தோராம் நூற்றாண் டுக்கு ஏற்ப வளரவில்லை. இன்றளவும் முத்தமிழே! நான்காம் தமிழ், அறிவியல் தோன்றவில்லை. ஏன்?

நாம் நமது தமிழ் மொழியை உணர்ச்சி வேகத்துடன் அணுகுகின்றோம்! நமது தாய்மொழியாம் தமிழைத் தெய்வமாக்கி வழிபாடு செய்கின்றோம்! ஆனால், தமிழை வளர்க்கும் முயற்சியில் ஈடுபடவில்லை! பல்வேறு பகை களைக் கண்டு வளர்ந்த தமிழ், வெள்ளத்தையும் நெருப்பையும் கண்டு மீண்ட தமிழ், ஆங்கிலத்தின் பாதிப்பிலிருந்து மீள இயலவில்லை!

தைத் திங்கள் பொங்கல் விழா! தமிழர் விழா! சேமமுற வேண்டும் எனில் தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செய்வோம்! உலகத் தமிழ் மாநாட்டில் நமது மாண்புமிகு முதல்வர் கூறியதைப் போல, அறிவியலில் துறைதோறும் தமிழை வளர்ப்போம்! தமிழ் வளர்ந்த மொழி! இனிய மொழி! எளிய மொழி! தமிழை அனுபவிப்போம்! தமிழை வளர்ப்போம்! "எங்கும் தமிழ்,! எதிலும் தமிழ்!" என்று ஆக்கும் முயற்சி செய்வோம் என்று இத்தைத் திங்களில் பொங்கல் திருநாளில் உறுதி எடுத்துக் கொள்வோம்!

உடலுக்கு உறுதி சர்க்கரைப் பொங்கல்! உயிருக்கு உறுதி செந்தமிழ்! பொங்கல் வாழ்த்துக்கள்!

# 78. *பொங்கலோ பொங்கல்!

பொங்கலோ, பொங்கல்! தமிழகத்தின் தனி விழா பொங்கல் விழா; இனிய விழா; எளிய விழா; உழவர் விழா; இந்த விழா உழவர் வீடுகளில் மட்டும் மரபாகக் கொண்டாடப்படுகிறது! ஏன்? கிராமப்புற வறுமை இன்னமும் நீங்கியபாடில்லை! களஞ்சியமாக இருந்த கிராமங்களில் இன்று நியாய விலைக் கடைகள்! உண்ணும் சோற்றுக்கு அரிசி வாங்கக் கிராமப்புற ஏழைகள் நெடிய வரிசையில் நிற்கிறார்கள்! அதிலும் கொடுமை கிராமத்தில் வாழ்கின்ற கொஞ்சம் வசதிபடைத்த சிலர் அந்த ரேஷன் கார்டுகளையும் அடகு பிடிக்கிறார்கள்! என்ன நடந்தால் என்ன? நடக்காது போனால் என்ன? பொங்கல் நிற்குமா? தீபாவளி நிற்குமா? அல்லது லாட்டரி சீட்டு வாங்காமல் இருக்க முடியுமா? நல்ல காலம் இன்று வராதா? நாளை வராதா? என்ற ஏக்கம் நிறைந்த எதிர்பார்ப்புகளுடனேயே கிராம மக்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

என்று பொழுது விடியும்? பொழுதை விடியவைக்க வேண்டும். கதிரொளி துரத்தத் துரத்தத்தான் பொழுது விடிகிறது! கலியுகத்தை வீழ்த்த வேண்டும். கிரேதாயுகத்தைக் கொண்டு வர வேண்டும். இதற்குக் கிராமப்புற மக்களிடத்தில் விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டும். உழைப்பை உத்தரவாதம் செய்ய வேண்டும்! உழைப்பாளர் தம் உழைப்பச் சுரண்டும், உழைப்பாளர் பங்கைத் திருடும் சமுதாய அமைப்பை மாற்ற வேண்டும்.

* தினத்தந்தி 15.1.95

போகிப் பண்டிகை வந்துபோனால் போதாது. நாட்டு மக்களை நலிவடையச் செய்யும் தீமைகள் போயாக வேண்டும். நல்லனவெல்லாம் வளரவேண்டும். சர்க்கரைப் பொங்கல் பொங்கும் பானை மாறுவது போல, உழைப்பின் களம் புதுமை பெற வேண்டும். சமைப்பதற்குரிய எரிசக்திக்கு விறகைப் பயன்படுத்துவது தவிர்க்கப்படவேண்டும். சோலாரி லிருந்து (கதிரொளி வெப்பத்திலிருந்து) எரிசக்தி பலவாகி விட்டன. முறைசாரா எரிசக்தியைப் பயன்படுத்துதல் வேண்டும். விறகுக்காக மரங்களை வெட்டுதல் கூடாது. நமது சுற்றுப்புறத்தைப் பாதுகாத்து நமக்கு ஜீவ சக்தியைத் தருபவை மரங்கள்; தாவரங்கள்!

நோயற்ற வாழ்க்கையே இன்பமான வாழ்க்கை! இன்று நம்முடைய மக்கள் பலரிடம் நோய் எதிர்ப்பு சக்தி இல்லை. ஏன்? "இவற்றை எப்படிச் சாப்பிட வேண்டும்" என்பது தெரியவில்லை. நல்ல சத்துணவு சாப்பிடுவதில்லை. சுவைக்காகச் சாப்பிடுகின்ற பழக்கம் பலரிடம் இருக்கிறது. உணவு உண்ணும் பழக்கத்தில்கூட உடலுக்கு நலம் தரும் உணவை முதலில் உண்ண வேண்டும். பின்தான் சுவைக்குரிய உணவை உண்ண வேண்டும். நல்ல சத்துணவு உண்பதற்குரிய வசதிகள் இல்லையே என்று கூறலாம். அது உண்மையே யானாலும் இயற்கையில் கிடைக்கும் பலவகை உணவுகள் உள்ளன. முருங்கை ஏழைகளின் கற்பக தரு. முருங்கைக் கீரை, பூ, காய் முதலிய நல்ல முதல்தரமான சத்துணவு. ஏன்? நெல்லை ஆலையில் அறைக்காமல் குற்றிப் பயன்படுத்தி னாலே நல்ல சத்துணவுதான்! "நல்ல உடலில்தான் நல்ல மூளை," "நல்ல உடலில்தான் ஞானம்" என்றெல்லாம் சொல்லப் பட்டுள்ளன. போகி நாளன்று பொருந்தாச் சூழ்நிலைகளை மாற்றுங்கள்! பொருந்தாப் பழக்கங்களை மாற்றுங்கள்! பொருந்தா உணவுப் பழக்கங்களை மாற்றுங்கள்! மதுவை அறவே விலக்குவீர்; வேண்டாம், வேண்டாம் புகை பிடிக்க வேண்டாம்!

பொங்கல் திருநாளன்று புது மனிதப் பிறவி எடுப்போமாக! மரங்களை நேசித்து வளர்ப்போமாக! நம்மை ஊட்டி வளர்ப்பதுடன் வளமும் தரும் கால்நடைகளை வளர்ப்போமாக! உணவு வழங்கும் உழவுத் தொழிலில் ஈடுபட்டிருப்போரை மதிப்புடன் நடத்துவோம்! அவர்கள் வாழ்வில் வளம் சேர்க்க முயலுவோம்!

பொங்கல் விழா தமிழ் விழா; தமிழர் விழா! "யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம்" என்றான் பாரதி! தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செய்வோம்! தமிழர் என்று இன ஒருமை நலத்துடன் இனமானம் காப்போம்! எப்பணிக்கும் முதற்பணி தமிழ்ப் பணி! எங்கும் தமிழ்; எதிலும் தமிழ்! துறைதோறும் தமிழை வளர்ப்போம்! நமது மூச்சினை பேச்சினை, செயலினைச் செந்தமிழுக்கே அர்ப்பணிப்போம்! உள்ளங்களில் பொங்குக தமிழ்க் கல்வி!

பானைகளில் பால் பொங்குக!

# 79. *பொங்கல் வாழ்த்து

இன்று பொங்கல புதுநாள். தமிழகம் எங்கும் மகிழ்ச்சி பொங்கும் திருநாள். சராசரி வசதியுடையவர்கூட, பொங்கல் திருநாளன்று மகிழ்ச்சியோடிருப்பர். எளிமையில் இருக்கும், மகிழ்ச்சி ஆடம்பரத்தில் வருவதில்லை.

பொங்கல் விழா வாழ்க்கையில் நிகழும் அருமையான விழா; எளிமையான விழா, வளமுடையோர், வளமற்றோர் ஒத்த நிலையில் கொண்டாடும் நாட்டுத் திருவிழா பொங்கல்தான்! வறுமையுடையோர் வளமுடையோர் அனைவருக்கும் மண்பானையில்தான் பொங்கல்! பொங்கல் விழாவின் தத்துவம் உயர்வுடையது. பொங்கல்விழா

* சிந்தனைச் செல்வம்

அறுவடை விழா. ஆலயங்கள் முதல் ஆண்டிகள் வரை அவாவி நிற்பது நெற்களஞ்சியங்களையே!

அதனாலன்றோ மணிமேகலை "உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே" என்றது. "பகடு நடந்து கூற் பல்லாரோடுண்க" என்றும் அறவுரை தோன்றியது. உலகம் முழுதுக்கும் உணவளிக்கும் திருநாளாகிய பொங்கலுக்கு ஈடேது? இணை எது?

பொங்கல் திருநாள்! வீட்டைச் சாணமிட்டு மெழுகி தூய்மை செய்வதில் தொடங்கிப் புதுப்பானையில் புத்தரிசி இட்டுப் பொங்கிப் படைத்து, உறவு கலந்து உண்பதில் அமைந்திருக்கிறது. பொங்கல் திருநாளில் அறிவியலும் உண்டு. தாவர இனத்தை, பிற உயிர்க் குலத்தைக் காக்கும் கதிரவன் ஒளியைப் போற்றுதல்! மாமழைப் பொழிந்து மண்ணை வளமாக்கும் மழைத் தெயவத்திற்கு மனமறிந்த போற்றுதல்!

நமது உழைப்பில் மிகுதியும் பங்கு கொண்டு உழைத்து விளைபொருளில் தரம் தாழ்ந்த வைக்கோலை மட்டுமே அவாவி நிற்கும் எருதுவிற்கு எண்ணத்திற் சிறந்த பாராட்டுகள்! நெல்லின் கழிவாகிய தவிட்டையும், சமையலின் கழிவாகிய கழுநீரையும் அமுதமென உண்டு அமுதத்தினும் சிறந்த பாலைப் பொழிந்து பாரினை வளர்க்கும் பசுக்களுக்குப் பத்திமையோடு கூடிய வழிபாடு!

ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோருக்கு வழிபாடு! தத்தம் அகவை நிலையில் ஒத்தாருடன் கூடி விளையாடும் களிப்பு விளையாட்டுக்கள்! ஆம்! வாழ்க்கையின் துறைதோறும் தழுவிய பொங்கல் திருநாளுக்கு ஈடேது? இணை எது?

அன்புடையீர், உலகம் முழுதுக்கும் உழுது உணவளிக்கும் உழவர் பெருங்குடி மக்களை எண்ணுமின்! உழவர்குடி உயர உழைத்திடுங்கள்! உழவுத் தொழிலில்

உழைப்போருலகம் வளர வளர வையகம் வளரும். அதனாலன்றோ வள்ளுவம் "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்" என்று கூறியது.

நமது நாட்டு உழவர்களின் வாழ்க்கை நிலை மன நிறைவைத் தரத்தக்கதாக இல்லை. அவர்களின் வாழ்க்கைத் தரம் உயர்வது நாட்டு மக்கள் அனைவரின் வாழ்க்கைக்கு அரணாக அமையும். உழவர் குடி உயர, உரிய உதவிகளைச் செய்ய இன்று உறுதி கொள்க; உயர்வு பெறுக.

உழவனின் தோழமை எருது,. மானிட சாதிக்கு வளமான உணவை வழங்கும் பசுக்கள் நாட்டின் வற்றாத செல்வம், கால்நடைகள் என்று கூறப் பெற்றாலும் அவற்றின் 'நடை' சிறப்புடையது. அவை உழைத்தே வாழ்கின்றன. உயிர்க் குலத்தை வாழ்வித்தே வாழ்கின்றன. கால்நடை களைப் போற்றி வளர்த்தால் செல்வநிலை வளரும்! சிவபெருமான் எருதையும் கண்ணபிரான் பசுவையும் போற்றி வளர்த்து வழி காட்டினார்கள்!

கால்நடைகளை வருத்தாமல் வளர்க்க திருமந்திரம் வழி காட்டுகிறது. "யாவர்க்குமாம் பசுவுக்கு ஒரு வாயுறை" என்பது திருமந்திரம். மாடு என்றாலே செல்வம்தான்! அத்தகைய பெருஞ்செல்வத்தைப் பேணிப் பாதுகாக்க உறுதி கொள்வோமாக!

பொங்கல் புது நாள் வாழும் வீட்டைத் தூய்மை செய்யும் நன்னாள்; வீட்டின் உள்ளும் புறமும் தூய்மை செய்து வெள்ளையடித்துப் புற்று மண்ணால் தரை மெழுகி புதுச் சாணமிட்டு மெழுகிப் பொலியுண்டாக்கும் திருநாள்!

வாழக் கிடைத்த வாழ்க்கையை வைத்தியருக்கு ஒத்தி வைக்காமல், எளிதில் எமனுக்கு தானம் செய்யாமல் வாழ, வாழும் இடமும் சுற்றுப் புறமும் தூய்மையாக இருக்க வேண்டும்.

விலை மதிக்க முடியாத மானிட வாழ்க்கையைச் சீரழியச் செய்யும் நச்சுப் புழுக்களுக்கு இரையாகாமல் பாதுகாக்க என்றும் எப்பொழுதும் வீட்டில் உள்ளும் புறமும் தூய்மை பேணுங்கள்! எங்கும் காணப்படும் தூய்மை திருவருட் சிந்தனையைத் தூண்டும்.

வீட்டின் தூய்மை மட்டும் போதாது. வீதிகளையும் தூய்மையாக வைத்துக் கொள்ள ஊர் கூடித் திட்டமிடுங்கள்! ஊரும் ஊரின் சுற்றுப்புறமும் தூய்மையாக இருந்தால்தான் தூய்மையான காற்று கிடைக்கும். தூய்மையான காற்றே தூய்மையான சிந்தனைக்கு அடிப்படை. பொங்கல் புது நாளில் பூவுலகம் எங்கும் தூய்மை பேணுவோமாக!

வீடும் வீதியும் தூய்மையாக இருந்தால் போதுமா? உடலும் உயிரும், அறிவும் உணர்வும் தூய்மையாக இருக்க வேண்டும். ஆதலால், அன்பு நெறியில் மனத்தை, உயிரை வளர்த்து உலகை வளர்ப்போமாக! பானையில் பால் பொங்கி வழிவதைப் போல மகிழ்ச்சி மனதில் பொங்கி முகத்தில் மலர்வதாக!

ஆண்டுதோறும் வழக்கமாக வரும் பொங்கலானாலும் புதுப்பானையும் புத்தரிசியும் தேடுகிறோமல்லவா? அது போல வாழ்க்கையை வழக்கங்களுக்கு மட்டும் அடிமைப் படுத்தாமல் புதிய அறிவினைத் தேடுக! புதிய உணர்வினைப் பெறுக! புதுமைகளைப் படைக்கும் ஆர்வம் கொள்க! கரும்பு போல் வாழ்க்கை இனித்திடுவதாக.

கரும்பு, அடி முதல் நுனி வரை இனிப்பதைப் போலச் சமுதாயம் முழுதும் இன்புற்று வாழ இப்பொங்கல் புது நாளில் பிரார்த்தனை செய்வோமாக! பணிகளைச் செய்வோ மாக! பொங்கல் வாழ்த்துக்கள்!

மாமழை பொழிய மாநிலம் செழிக்க
மார்கழி மறுநாள் தைமுதல் திருநாள்
அகமும் புறமும் அழகே நிறைக!
அன்பும் அறமும் பண்பும் பொங்குக!

செயலின் திறமும் செல்வமும் பெருக
செம்மை வாழ்வில் குறளும் பொங்குக!
பொங்கும் மாட்சி போற்றிட பொலிக!
பொங்குக எங்கும் பொங்கலோ பொங்கல்!

"சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால்
உழந்தும் உழவே தலை" * கோவை AIR ஒலிபரப்பு 14.1.80

# 80. *பொங்கல் செய்தி!

இனிய அன்பர்களே! பொங்கல் வாழ்த்துகள்! இனிய அன்பர்களே! வாழ்க்கைப் போக்கில் நாளும் கிழமையும் வருவது வாழ்க்கையில் பயனை விளைவிப்பதற்கேயாம்! பொங்கல் விழா, தமிழ்நாட்டின் தனிவிழா! நமது உழைப்பின் பயனை அறுவடை செய்து பயன்காணும் விழா! தமிழ் நாட்டுக்குப் புத்தாண்டின் தொடக்கமே தைத்திங்கள்தான்! "தைபிறந்தால் வழி பிறக்கும்" என்பது பழமொழி! தைத் திங்களைத் தொடர்ந்துதான் வீடுகளில் திருமணங்கள்! திருக் கோயில்களில் திருவிழாக்கள்! மக்கள் மன்றங்களில் தமிழ் விழாக்கள்! பொங்கல் விழா. வாழ்க்கையோடிணைந்த விழா!

பொங்கல் விழாவுக்கு வீடுகள் பழுது பார்க்கப் பெறுகின்றன! சுண்ண வண்ணம் பூசப் பெறுகின்றன! சுற்றுப் புறங்கள் தூய்மை செய்யப்பெறுகின்றன! உடல் வாழ்வின் நலத்திற்குத் தேவை நல்ல சுற்றுச் சூழ்நிலை! நல்ல வீடு! இது விழவின் தொடக்கம்! நல்ல வீடு நல்ல மனிதர்களை

* சிந்தனை மலர்கள்

உருவாக்குகிறது. வீடுகளைப் பழுதுபார்த்தல் போல் மானுட வாழ்க்கையின் மிகச் சிறந்த கருவியாகிய உடம்பையும் மருத்துவ சோதனை செய்து மருத்துவம் செய்து கொண்டு, நலமுற வைத்துக் கொள்ள வேண்டும். உணவை மருத்துவ அடிப்படையில் தேர்ந்து உண்டால் மருந்து தேவையில்லை. இல்லையெனில், மருந்து தவிர்க்க இயலாத தேவையாகி விடும்! வெளித் தோற்றத்தில் மட்டும் நல்ல வீடாக அமைந்தால் போதாது! அகநிலையிலும் நனிசிறந்து விளங்க வேண்டும். வீட்டின் சாளரங்களால் காற்றின் வெப்பம் குறை வதைப் போல மனத்தின் சாளரமாகிய வாயினால் கருத்துப் பரிமாற்றங்கள் நிகழ்ந்து அக நிலை வாழ்க்கையில் உள்ள வெப்பம் குறைய வேண்டும். நல்லெண்ணம் கொள்ள வேண்டும். வீட்டின் சுவருக்கு வண்ணப்பூச்சால் அழகூட்டு வதைப் போல, மனத்தினை மனித நேயம் என்ற வண்ணத் தால் அழகூட்ட வேண்டும். வீட்டில் ஒளிவிளக்கு ஏற்றி அழகூட்டுதல் போல, அகநிலையில் அறிவொளி கண்டு மகிழ்தல் வேண்டும். நம்மில் பலர், தீபாவளித் திருவிழாவின் போதுதான் புத்தாடை உடுத்துகின்றனர். இது தவறன்று. இதனால், பொருளாதார அடிப்படையில் குடும்பச் செலவு பகிர்வாகிறது. இயன்றால், பொங்கல் திருநாளின்போதும் புத்தாடை உடுத்துதல் சிறப்பு! நல்ல தூய்மையான ஆடை உடுத்துதல் வேண்டும். புத்தாடை உடுத்தினால் மட்டும் போதாது. வேண்டாத நேற்றையக்கவலை சுமந்த வாழ்க்கையைத் தூரத் தள்ளிவிட்டுப் புத்துணர்வு மிக்க புதிய வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும் நாளும் உடலையும், உயிரையும், உணர்வையும், அறிவையும் புத்துணர்வுடைய தாக்கிக் கொள்ளுதல் வேண்டும். இது வாழ்வுக்கலை! இளமையைக் காக்கும் வாழ்வியல் முறை.

அடுத்து என்ன? பொங்கல்! ஆம்! சுவைமிக்க சர்க்கரைப் பொங்கல்! செந்நெல் அரிசியும் செங்கரும்பின் சாறும் கூட்டிச் சுவையாகச் சமைத்த சர்க்கரைப் பொங்கல்!

ஆம்! வாழ்க்கையிலும் சர்க்கரைப் பொங்கலைப் போல மகிழ்ச்சி சிறந்திடுதல் வேண்டும்! அதோ, காதில் விழுகிறது! "பொங்கலோ பொங்கல்!" என்னும் மங்கல ஒலி!ஆம்! பானையில் பால் பொங்கி வழிகிறது. பொங்கல் பால்! ஜனநாயகம் பொங்குக! சமதர்மப் பால் பொங்குக! வாழ்க்கை, கசப்பாக ஆகிவிடுதல் கூடாது! கொலைகளும் தற்கொலைகளும் கூடாது! கூடவே கூடாது! அதனால்தான் சர்க்கரைப் பொங்கல்! மானுட வாழ்க்கை முழுவதும் சர்க்கரைப் பொங்கல் போல இனிமை தவழுட்டும! இன்பம் பொங்கிப் பொலிக! பானை பிடித்தவளின் பாக்கியம் பொங்கலின் சுவை! நமது சகோதரிகளின் கைவண்ணமே களிப்பூட்டும் சர்க்கரைப் பொங்கல்! நமது சகோதரிகளின் வாழ்விலும் சுதந்திரமும் மகிழ்வும் பொங்கட்டும்! பொங்கலன்று வீட்டு வாசற்படியின் சூழ ஒளிவிளக்கிற்கு வாழ்வு தருக! மகளிர்குலம் களிப்பில் சிறந்து "பொங்கலோ பொங்கல்" என்று களியாட்டம் ஆடுக.

மானுட வாழ்க்கையின் இரட்டை நாடிகளாக விளங்குவன வேளாண்மை! கால்நடை வளர்ப்பு! பொங்கல் விழா. வேளாண்மைக்கு முடிசூட்டும் விழா! வேளாண்மையைத் தொழிலாக உடையவர்கள் வாழ்க்கை சிறக்க வேண்டும். இன்றைய அரசு, இதுபற்றிச் சிந்தனை செய்கிறது! காரிருள் நீங்கட்டும்! கதிரொளி தோன்றட்டும்!

அடுத்து, கால்நடைகளைப் போற்றும் விழா! மாட்டுப் பொங்கல் விழா! மனிதன் பிறந்து மொழி பயின்ற காலம் முதல் அவனுக்குப் பாலூட்டி வளர்த்த பசுக்களின் தியாகம்! பல்முளைத்த காலம் முதல் உண்டு வளர, சோறும் காய்கறிகளும் கொடுத்த உழவு மாடுகள்! நமது உணவில் புதிய புதிய சுவைமிக்க உணவுகள் இடம் பெறுகின்றன! ஆனால் நம்மை வாழவைக்கும் கால்நடைகளுக்கு வைக் கோலும் புல்லும்தான் உணவு! "உழுத நோன்பகடு அழிதின்றாங்கு" என்ற புறப்பாடல் அடிகளை நினைவு கூர்க!

கால்நடைகளே நமது செல்வம்! நமக்கென வாழும் இயல்பின! அந்தக் கால்நடைகளைப் பேண வேண்டும்! அவற்றை வளர்த்துப் பாதுகாக்க வேண்டும்! வீட்டிற்கு ஒரு பசு! கிராமப்புறங்களில் இந்த இயக்கம் தேவை! புரதச் சத்துள்ள பாலுணவு கிராமப்புறச் சிறுவர்களுக்கு இயற்கை யான தேவை! நம்மைக் காப்பாற்றும் கால்நடைகள் வளர்க! வாழ்க!

அடுத்து, அறிவினை வளர்க்கும். உணர்வினை வளர்க்கும் தமிழுக்குப் பண்பாடுங்கள்! துறைதோறும் தமிழ் வளர வேண்டும்! நம் குழந்தைகள் தமிழிலேயே அனைத்தையும் கற்க வேண்டும்! அறிஞர்களாக வேண்டும்! பொங்கல் நாளில் தமிழே கல்வி மொழி என்று உறுதி கொள்க! தமிழ்ப் பொங்கலிடுக!

தமிழினம், "யாதும் ஊரே! யாவரும் கேளிர்!" என்று வாழ்ந்த இனம்! "ஒன்றே குலம்; ஒருவனே தேவன்" என்பது வாழ்வியல் சமுதாயக் கொள்கை! இடையில் வந்த சாதிக் குப்பைகளை மறப்போம்! ஒருகுடியென ஒத்தாரும் உயர்ந் தாரும் தாழ்ந்தாரும் எவரும் கூடி உலகியல் நடத்த உறுதி கொள்வோம்! கெட்ட போரிடும் போக்கிற்கு ஒரு முடிவு கட்டுவோம்! எல்லாருக்கும் எல்லாம் என்ற கொள்கையை நோக்கி, நமது சமூக அமைப்பை இயக்குவோம்! உழைப்பே வேள்வி! பகுத்துண்ணலே அறம்! இதுவே, இந்தப் பொங்கல் செய்தியின் கோட்பாடு! பொங்கலோ பொங்கல்! இன்ப நலன்கள் மல்குக! வாழிய, வாழியவே!

14.1.90

# 81. *பொங்கற் பரிசு

தமிழகத்தின் தனிவிழா - தமிழினத்தின் நாகரிகப் பெருவிழா - உழைப்பின் திருநாள் - உழைப்பாளர் உலகம்

* பொங்கல் பரிசு

கு-XIII-35.

உவந்து மகிழும் திருநாள் தைத்திங்கள் முதல் நாள். இந்த நன்னாளில் தங்களுக்கு இந்த இனிய வாழ்த்துச் செய்தியைத் தெரிவிப்பதில் மகிழ்ச்சியடைகின்றோம்.

தமிழர் திருநாள் பொங்கல் திருநாள். வறுமையில் வரும் விழா அல்ல - வளத்தில் வரும் விழா. காசைக் கரியாக்கும் விழா அல்ல - கரும்பாக்கும் விழா. எரிக்கும் விழா அல்ல - எண்ணரிய புதுமைக் கோலமூட்டும் விழா. வயிற்றுவலித் திருவிழா அல்ல - பொங்கல் திருவிழா. சாறு வடித்த சோற்று விழா அல்ல - சாற்றோடு கலந்த சத்துணவு விழா! பொங்கலோ பொங்கல்!

தமிழர், நீண்ட நெடிய நாட்களுக்கு முன்பே, பண் பாட்டமைப்புடைய வாழ்க்கைக்குக் கால்கோள் செய்தனர் - வாழ்க்கைக்குச் சோறும் தண்ணீரும் இன்றியமையாதன. அவை மட்டுமே போதுமா? போதா? மகிழ்ச்சி என்ற சோறும் தேவை! விழா எடுத்தல் மூலம் மகிழ்ச்சி கிடைக்கும் என்பது பழந்தமிழர் கொள்கை. எனவே, மக்கள் கூடிக் கலந்து பழகி இனிது வாழ வாய்ப்புக்கள் பெருகும் என்று கருதித் திருவிழா எடுக்கும் கொள்கையைத் தோற்றுவித்தனர். தமிழினத்தின் குடும்பத் திருவிழாவாக - சமுதாயத் திருவிழாவாக - தமிழகத்தின் தனிப்பெரும் விழாவாகக் காட்சி தருவது பொங்கல் விழா. இஃதன்றிச் சமய விழாக்களாகத் திருக் கோயில் திருவிழாக்களும் நடைபெறும்.

தமிழின நாகரிகத்தில் மார்கழித் திங்கள் நிறைமதி நன்னாளில் (பருவம்) புதிய ஆண்டு தொடங்குகிறது என்ற ஒரு கருத்துண்டு. மார்கழி நிறைமதி நாள் தொடங்கித் தைத்திங்கள் நிறைமதி நாளில் நிறைவுறும் மார்கழி நீராடல் - தை நீராடல் என்றழைக்கப் பெறும். இன்றையப் பாவை நோன்பு நிகழும். குடும்பத் தோற்றத்திற்குக் காரணமாக அமைய வேண்டிய கன்னிப் பெண்கள் தமக்கு வாய்க்கும் கொழுநன் இனிய வகையில் - ஏற்றவனாக அமைதல்

வேண்டும் - நாடு முழுவதும் செல்வத்தால் செழிக்க வேண்டும் என்று பிரார்த்தனை செய்வது பாவை நோன்பு. பாவை விழாவைத் தொடர்ந்து நடைபெறும் விழா பொங்கல் விழா!

பொங்கல் திருநாளை முன்னிட்டு வீடுகள் புதுக்கப் பெறும். வண்ணச் சுண்ணாம்புச் சாந்துகள் பூசப்பெறும். பழகிப் பயனற்றுப் போன பழைய பொருள்கள் கழிக்கப் பெறும். புதிய பொருள்கள் வாங்கிச் சேர்க்கப் பெறும். பொங்கல் விழா நல்வாழ்விற்குரிய அடிப்படை முயற்சி களிலே தொடங்குகிறது. நோயின்றி நெடிது நாள் வாழ வீட்டின் அமைப்பும், சுகாதார வசதியும் அவசியமானவை யாகும். அதுபோல்வே, பழைய கழித்தலும் புதியன கொள்ளு தலும் தேவை. இது வீட்டிற்கு மட்டுமா? ஆழமாகச் சிந்தித் தால் உயிரியல் வாழ்க்கைக்கும் பொருந்தும். நாளுக்கு நாள் உலகம் வளர்கிறது? பரு உலகமும் வளர்கின்றது - கருத்துலகமும் வளர்கிறது! மனிதன் ஒரு சிந்தனைப் பிராணி; சிந்திக்கின்ற மனிதன் ஒரு வற்றாத ஊற்றைப் போல, புத்தம் புதிய கருத்துக்கள் தோன்றிக் கொண்டேயிருக்கும். காலத்தின் வளர்ச்சி கருத்தின் வளர்ச்சியோடு இணைந்தது. வளரும் புதிய கருத்தை ஏற்றுக் கொள்ள வேண்டும். அதற்கேற்ப வாழ்க்கையைத் திருத்தி அமைத்துக் கொள்ளவும் வேண்டும். இது வாழத் தெரிந்தவனின் நெறி முறை. அதனாலன்றோ, ஊனெலாம் நின்றுருக ஆட்கொள்ளும் திருவாசகம் தந்த மாணிக்கவாசகர் இறைவனைப் பார்த்து 'முன்னைப் பழமைக்கும் முன்னைப் பழமையதாய்ப் பின்னைப் புதுமைக்கும் பெயர்த்துமப் பெற்றியனாய்' விளங்குகிறாய் என்று பாடுகின்றார். இங்கு, பழமை புதுமை என்பன காலத்தோடு பட்டன அல்ல. வாழ்க்கைக்குப் பயன்படும் பெற்றிமை நோக்கியதேயாகும். வீட்டில் உள்ள பழைய - பயன்படாத பொருள்களைக் கழிப்பது போலச் சமுதாய வளர்ச்சியில் நேற்றையத் தேவையின் பேரில் தோன்றிய -

ஆனால் இன்று பயன்படாத பழைய கொள்கைகள் இருக்குமாயின் அவற்றை விட்டொழிப்பதும் அவசியமாகும். அதற்குப் பெருந்துணிவு வேண்டும். அந்தத் துணிவை - வலிமையைப் பொங்கற் புதுநாளில் நாம் பெற வேண்டும். அதுபோலவே, வளர்ந்துவரும் - பயன்தரும் புதிய கருத்துக்களைக் கூச்சமின்றி ஏற்றுக் கொள்ளும் மனப்பண்பும் வேண்டும்.

ஞாயிறு, காலத்தை அளக்கும் கருவி; அதுமட்டுமல்ல - உயிரினத்தின் தோற்றம் - வளர்ச்சி - வாழ்க்கை அனைத் திற்குமே ஞாயிற்றின் ஒளி இன்றியமையாத ஒன்று. ஞாயிற் றொளியின் துணை கொண்டே பொருள்கள் விளைகின்றன. ஆதலால், ஞாயிறு போற்றுதல் பழந்தமிழ் மரபு. அதனா லன்றோ இளங்கோவடிகள், தமது காப்பியத்தின் தொடக்கத்தில்.

'ஞாயிறு போற்றுதும்
ஞாயிறு போற்றுதும்'

என்று பாடுகின்றார். பொங்கற் புதுநாள் ஞாயிறு! போற்றும் நிகழ்ச்சியோடு தொடங்குகிறது!

தமிழர் வாழ்க்கை இயற்கையோடியைந்தது. தமிழின நாகரிகத்தில், அது காதல் வாழ்க்கையாயினும் சரி, கடவுள் வாழ்க்கையாயினும் சரி ஏறு முதன்மையிடம் பெறுகிறது. பழங்காலத் தமிழ் இளைஞர்கள் காதல் வாழ்க்கையில் ஏறு தழுவிக் கன்னியரைக் கைப்பிடித்தும். புறத்திணை வாழ்க்கையில் நிரை கவர்தல் மூலம் நிலங்கொண்டும் வாழ்ந்தனர். தமிழகத்தின் தனிநெறியாகிய சிவநெறியிலும் எருதுக்குத் தனிச் சிறப்புண்டு. சிவபெருமான் விருப்பத்தோடு ஊர்ந்து வரும் ஊர்தி எருதேயாகும். அப்பரடிகள்.

"ஆன்அலாது ஊர்தியில்லை
ஐயன் ஐயாறனார்க்கே"

என்று கூறகின்றார். பிற்காலப் பிற வாகனங்களை அப்ப ரடிகள் உடன்படவில்லை என்று தெரிகிறது. சிவபெருமான் ஊர்ந்து வரும் ஒரேயொரு ஊர்தி எருதேயாகும்.

சிவபெருமான் உயர்த்திப் பிடிக்கும் கொடியும் இக்கொடியேயாகும். 'ஏறு கொண்ட கொடி எம்மிறை' என்று திருமுறை பேசுகின்றது. சிவபெருமான் 'வான் பழித்து இம்மண் புகுந்து மனிதரை ஆட்கொள்வதற்காகக் கொலு வீற்றிருக்கும் திருக்கோயில்களின் நுழை வாயில்களில் நாம் முதலில் காண்பது எருதேயாம். எருதைப் பார்த்த பிறகே இறைவன் சந்நிதிக்குச் செல்ல வேண்டும்! அழகிய சித்தாந்தம்! இறைப்பண்பு இதயத்தோடு இணைந்துப் பேசப் பெறுவது மிகத் தொன்மையான மரபு. இறைவன் எருதில் ஊர்ந்து வருகிறான் என்றால், உலகியலில் வேறு பொருள் கொண்டாலும் அருளியலில் கொள்ளத் தக்க சிறந்த பொருள் ஒன்றுண்டு. மலரை இடமாகக் கொண்டு மணம் வெளிப் படுதல் போல, தண்ணீரை இடமாகக் கொண்டு தண்மை வெளிப்படுதல் போல, உயிரை இடமாகக் கொண்டு இறைத் தன்மை வெளிப்படுகின்றது. சிவன் எம்பிரான் எருதை ஊர்தியாகக் கொண்டு உலா வருகிறான் என்றால் எருதின் மிகச் சிறந்த பண்பாகிய அற வாழ்க்கையினை மேற்கொண்ட உயிர்களை இடமாகக் கொண்டு விளங்குகின்றான் என்பதே பொருள். அறவாழ்க்கையாவது. ஆற்றலுக் கேற்றவாறு உழைத்தல். உழைப்பின் பயனால் வாழ்க்கை அனுபவத்திற் குரிய பொருள்களைத் தோற்றுவித்தல் - படைத்த பொருள் களைப் பலருக்கும் கொடுத்து மகிழச் செய்து பிறர் மகிழ்ச்சியில் தம் மகிழ்ச்சியை உருவாக்கிக் கொள்ளுதல் ஆகியனவே. இவ்வியல்புகள் மற்றெல்லா உயிரினங்களையும்விட எருதினிடத்திலேயே அதிகமாக இருப்பதைப் பார்க்கிறோம். பசு கூட நிறையப் பால் கொடுக்கும். ஆனால், பால் தர அது உழைக்க வேண்டிய அவசியமில்லை. எருது ஒன்றே உழைப்பின் வழிப் பலன் தருகிறது.

'உழுத நோன்பகடு
அழிதீன் றாங்கு'

என்பது புறநானூற்றுப் பாட்டு. உழுத மாடு தன்னுடைய உழைப்பினாலாகிய செந்நெல் அரிசியை மனித உலகிற்குத் தந்துவிட்டு, மனிதர்களுக்குத் தேவையில்லாத வைக் கோலைத் தின்று, மீண்டும் மனித குலத்திற்கு உழைத்துத் தரவேண்டும் என்ற நன்னோக்கத்துடன் உழைக்கிறது - வாழ்கிறது. இந்தப் பண்பாட்டையே அறநெறி என்று இலக்கியம் காட்டுகின்றது. சமுதாய வாழ்விலும் சமய வாழ்விலும் ஏறு நடைபோடும் - புகழ் பெற்று விளங்கும் எருதினைப் போற்றும் விழா, பொங்கல் விழாவில் குறிப்பிடத் தக்கதாகும்.

பொங்கல் விழாவின் இறுதி நிகழ்ச்சியாக சமுதாய விளையாட்டு விழா நடக்கிறது. இளைஞர்களும் பெரியவர் களும் தத்தம் இயல்புக் கேற்றவாறு விளையாடி மகிழ் கின்றார்கள். இத்தகு எழுச்சியும் ஏற்றமும் மிக்க பொங்கல் திருநாளை - தமிழர் திருநாளை இன்ப அன்பு பொங்க நாம் கொண்டாட வேண்டும்.

பொங்குக பொங்கல்! பொங்கல் விழாவில் நாம் நினைத்து பார்க்கக்கூடிய நிகழ்ச்சிகள் பலப்பல உண்டு. முதலாவது, புதிய பானையில் புதிய அரிசியிட்டுப் பொங்கல் பொங்குகிறோம். புதிய பானையும் புத்தரிசியும் புதிய சிந்தனைப் பார்வையைத் தருகின்றன. சோறாக எங்கும் விளைந்து விடவில்லை. நெல்லாகவே விளைகிறது. நெல்லாக விளைவதைச் சோறாக ஆக்குவதற்கு நாம் எடுத்துக் கொள்ளும் முயற்சிகள் பலப்பல. முதலாவதாக நெல், தண்ணீர் கலந்த ஈர நிலையிலேயே விளைகிறது. அறுவடை சென்றதும் முதற் கடமையாக நெல்லைக் காய வைத்து ஈரத்திலிருந்து பிரிக்கின்றோம். பின்னர் அதைப் புழுங்கல் அரிசியாக்கத் தண்ணீரில் நனைத்து ஊறவைத்து அவித்துப்

பின் நன்றாகக் காய வைக்கிறோம். பின்னர் அதை மீண்டும் தண்ணிரில் நனைத்தே சோறாக்குகிறோம். அதுபோலவே ஆன்மாக்களை அன்பில் நனைத்து நனைத்துப் பையப் பையப் பக்குவப் படுத்தும் முயற்சியும் ஆகும். அரிசி சோறாக மாறப் பயன்படும் தண்ணீர் வீணாக்கப் பெறாமல் பொங்கப் பெறுவதற்குப் பொங்கல் என்று பெயர். அதுபோலவே, மனித ஆற்றலைத் தப்புக் கணக்குகள் காட்டி வீணாக்காமல் வைத்து வளர்த்துப் பண்படுத்துவதே பண்பான காரியம்.

புதிய பானை பொங்கலுக்குத் தேவை. அது போலவே, மனித வாழ்க்கையின் இணைப்புக்கும் மகிழ்ச்சிக்கும் புதிய மனம் தேவை. சென்றதை நினைந்து கவலையில் ஆழ்தலோ, சென்றதை நினைந்து குத்திக் குறைக்காட்டுதலோ நல் வாழ்க்கைக்கு உரியனவல்ல. அதனால்தான் போலும்.

'நன்றல்ல தன்றே
மறப்பது நன்று'

என்று தமிழ்மறை பேசியது. நன்றல்லாதன நிகழக் கூடும். பரந்துபட்ட உலகில் அது தவிர்க்க முடியாததும் கூட, எனினும் அதை மறப்பது மனிதனுக்கு இயற்கையாக அமைய வேண்டிய விழுமிய பண்புகளுள் ஒன்று. நிலத்தோடு பட்ட குப்பை எருவாகி ஆக்கத்திற்குப் பயன்படுதல் போல, பிறர் செய்யும் நன்றல்லாதனவற்றையும் அன்போடு பொறுத்துக் கொண்டு அவர்தம் குணத்தைத் திருத்தமுறவும், ஆக்கத் திற்குப் பயன்படும் வண்ணமும் மாற்ற முயற்சிக்க வேண்டும். புதிய பார்வை வராத வகையில் பகை மாறாது - நட்பு வளராது. ஆதலால் அடுப்பில் புதிய பானையை ஏற்றுதல் போலவே புதிய பாவனையையும் நாம் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

பொங்கலன்று பொங்கற் சோறு பொங்குதலில் மரபுகள் பல உண்டு. சாதாரணமாக, தண்ணீர் வைத்தே சோறு பொங்குதல் இயற்கை. அன்று மட்டும் பால் ஊற்றிப்

பொங்கவைத்துப் பின் தண்ணீர் ஊற்றிப் பொங்கல் வைப்பார்கள். உலகில் தூய்மையின் சின்னமாக - தூய்மைக்கு அடையாளமாகப் பேசப் பெறும் பொருள்கள் இரண்டு. ஒன்று திருநீறு - மற்றொன்று பால். புதிய பாவனை அல்லது பார்வை மட்டும் போதாது. பார்க்கும் மனம் திரிபு இன்றித் தூய்மையான நன்னெஞ்சத்துடன் வாழ்க்கையைத் தொடங்க வேண்டும். ஒருவரைப் பக்குவப்படுத்த முயற்சிப்பவன் அவன் தேறமாட்டான் என்ற மாறுபட்ட உணர்வுடன் கூடிய முடிவோடு முயற்சிப்பானாயின் அம் முயற்சி தோல்வியிலேயே முடியும். திருத்த முறல் என்பது ஒருபால் ஆற்றலுக்கு மட்டும் உட்பட்டதல்ல. இருபால் ஆற்றலுக்கும் உட்பட்டது. பயிர் செழித்து வளர விதையின் இயல்பும் நன்றாக இருக்க வேண்டும். அது தொடர்பு கொள்ளும் நிலத்தின் இயல்பும் நன்றாக இருக்க வேண்டும். இந்தப் புதிய சிந்தனையோடுதான் புதுப்பானையில் பால் ஊற்றும் நிகழ்ச்சியைத் தொடங்கியிருக்கிறார்கள். பால் பொங்கி பானை நிரம்பி வழிகிறது. சுற்றி நிற்பவர்கள் 'பொங்கலோ பொங்கல்' என்று மகிழ்ச்சி ஆரவாரம் செய் கிறார்கள். பானையில் பால் பொங்கினால் மட்டும் போதாது. மக்கள் மனத்தில் மகிழ்ச்சியும் பொங்கி வழிய வேண்டும்! இரண்டும் நிகழும் பொங்கல் நாளே உண்மையான பொங்கல் நன்னாள். பானையில் பால் பொங்க வைத்தல் எளிய முயற்சி! மனித மனத்தில் மகிழ்ச்சி பொங்கச் செய்தல் அரிய முயற்சி!

இந்தப் பொங்கற் புது நாளில் அந்த அரிய முயற்சி களைப் பற்றிச் சிந்தனை செய்தலும் செயல் திட்டங்கள் அமைத்துக் கொள்ளுதலும் அவசியம்!

வாழ்க்கை அன்பு காட்டுதற்கென்றே அமைந்தது என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. நாம் அமிழ்ந்திருக்கும் பிறவிப் பெருங்கடலில் நம்மை அமிழ்த்திக் கொண்டிருக்கும்

துன்ப நீரை இறைத்து வெளியேற்றும் ஒருருளையிற் பூட்டிய வாளிகள் அன்பும் தொண்டுமேயாகும்.

பகை கொள்ளுதற்குப் பகுத்தறிவு தேவையில்லை. ஆண்மையும், ஆள்வினையும்கூடத் தேவையில்லை. ஆதலால், அன்பு மலர முயற்சிப்போம்! குற்றங்களை மறந்து குணங் களைப் படைக்க முயற்சிப்போம்! திருவருட் சிந்தனையோடு இந்த உலகில் புதுமை படைப்போம்! பொதுமையும் காண்போம். இந்த அரிய முயற்சியை ஒருவராகச் செய்ய முடியாது. பலர் கூடிச் செய்தல் வேண்டும். ஆதலால், இறவாத இன்ப அன்பு மலர நாம் அனைவரும் ஒன்றுபட்டு முயற்சிப்போமாக! நன்மை பெருக - அருள்நெறி நாளும் வளர வழி காண்போமாக! சென்ற காலத்தில் தாங்கள் காட்டிய பழுதிலா அன்பிற்கு நமது நன்றி! எதிர்காலச் சிறப்பிற்குத் துணை நிற்கக்கூடிய தங்களுடைய இனிய அன்பிற்கு - ஒத்துழைப்பிற்கு வாழ்த்துக்களுடன் கூடிய நமது வரவேற்பு!

# 82. *எருதுபோல் உழைப்போம்

ஞாயிறு திரிதரு உலகம் என்பது வழக்கு. இந்த உலகத்தினை ஞாயிறு வலம் வருவதை ஆண்டாக, நாள்களாகக் கணக்கிடுகின்றோம். ஞாயிறு வலம் வருவதை 'திரிதரு' என்று கூறியது உலக வழக்கம். இன்றைய உலக வழக்கில் திரிதருதல் என்றால் பயனற்று இங்கும் அங்குமாகச் சுற்றுதலைக் குறிக்கும். ஆனால் ஞாயிறு நாள்தோறும் வலம் வருதலில் அளவிடற்கரிய பயன்கள்! உலகம் ஒளிமயமாகிறது; தூய்மையாகிறது; தாவரங்கள் வளர்கின்றன; உயிர்க்குலம் தழைத்து வாழ்கிறது; இருள் அகலுகிறது. "இருள் கடிந்து எழுகின்ற ஞாயிறே போன்று" என்று மாணிக்கவாசகர் பாடினார்.

* 'தினகரன்' பொங்கல் மலர் 1995

ஞாயிற்றின் வலம் வரும் சுற்றுக்களே காலக் கணக்கீடு! இந்தக் கணக்கீடு இந்த உலகத்தில் - இந்த உலகத்தில் வாழும் மனித குலத்தின் வாழ்நாளை - வரலாற்றைக் கணிக்கிறது; நிர்ணயிக்கிறது. ஒரு மனிதன் வளர்ந்து வாழ்தலுக்குரிய களம் காலமேயாம்! அப்பரடிகள் காலத்தை உடைமையாக்கினார். காலம் களவு போகிறது என்கின்றனர். நம்மைச் சுற்றி யிருக்கும் மனிதர்களில் பலர் காலத்தின் அருமை தெரியாமல் வறுமொழிகள் பேசியும் அம்பளந்தும் அரட்டைக் கச்சேரிகள் செய்தும் காலத்தைக் கழிக்கின்றனர். அவர்கள் என்ன செய்யலாம் என்று யோசிப்பதிலேயே காலத்தைக் கழிக் கின்றனர்; தேடிச் சோறு தினம் தின்கின்றனர். பழங்கதைகள் பேசுகின்றனர். இவைமட்டுமா? நல்லவர்கள் உழைத்து வாழ்பவர்களின் காலத்தையும் களவாடிச சென்று விடு கின்றனர். நமது ஒரு நாள் வாழ்க்கையில் களவு போன காலம்தான் மிகுதி. நாமும் சமூகத்தில் வாழ்வதால் இந்த அடாவடித்தனமான காலக் களவுக்கு இரையாக நேரிடு கிறது. இதனால் உலகமாந்தர் வாழ்க்கை மனநிறைவு உடைய தாக இல்லை; மகிழ்ச்சி நிரம்பியதாக அமைய இல்லை. அருவருக்கத்தக்க நிர்வாணமான சுயநலம்! பொருட் பேராசை! பகற் கொள்ளை போல நடைபெறும் இலஞ்ச லாவண்யங்கள் இன்று சமுதாயத்தின் அங்கீகாரம் பெற்று விட்டன! அருவருக்கத்தக்க போட்டிகள்! இவைகளால் சமுதாயம் சீரழிந்து கொண்டு வருகிறது.

இந்தியா ஒரு வளமான நாடு; ஆனால், இந்தியாவில் ஏழைகள்! ஏன்? “பொருட் செல்வம் போற்றுவார்கள் உண்டு” என்றது திருக்குறள். இன்று பொருட் செல்வத்தைப் போற்றுவார் யார்? வசதிபடைத்த செல்வர்கள் மட்டும்தான் போற்றுகிறார்கள்! ஏழைகள் செல்வத்தின் மதிப்பையே உணர்வதில்லை! “உள்ளவர்களுக்கு மேலும் தரப்படும்; இல்லாதவர்களிடத்திலிருந்து உள்ளதும் எடுக்கப்படும்” என்ற விவிலிய வாக்கு நமது ஏழைகளுக்குப் பொருந்தும். இவர்

களுக்குச் செல்வத்தின் மதிப்புத் தெரியாது. சில்லரைகளும் சேரச்சேர மூலதனமாகும் என்ற உண்மையை உணரமாட்டார்கள். வளர்ந்து விட்ட நுகர்வுச் சந்தையில் இறங்கி மூழ்கிக் கடனாளியாகி விடுவார்கள்! கடனில்லாத வீடு காண்பதற்கு நமது நாட்டைப் பற்றியோ சொல்ல வேண்டாம். பன்னாட்டு மூலதனக் கடன்கள் நாட்டிலும் ஊடுருவி நமது மூலதானத்தில் அருமைப்பாட்டை அரித்துக் கொண்டிருக்கிறது. பண வீக்கம், விலைவாசி ஏற்றம், வேலையின்மை ஆகிய தீமைகளால் நாடு நாளும் உருக்குலைந்து வருகிறது.

நமது நாடு மக்கள் தொகை பெருகி வளர்ந்துள்ள நாடு. 90 கோடி மக்கள் வாழ்கின்றோம். இந்தத் தொண்ணூறு கோடி மக்களில் 30 கோடி பேர் எதற்கும் பயனற்றவர்களாக வெற்று மனிதர்களாக வாழ்கின்றனர். இல்லை, இல்லை! பிழைப்பு நடத்துகின்றனர். ஒரு முப்பது கோடி பேர் ஏதோ ஒரு வேலை செய்கின்றனர். ஆனால் வேலையின் பயன்பாடு என்ன என்று கேட்கமுடியாது. வேலையின் தரமும் அளவும் பயனும் கணக்கிட்டால் மனம் நிறைவுபெறாது. இந்த முப்பது கோடி பேர் பொறுப்புணர்வுடனும் கடமை உணர்வுடனும் தங்கள் கடமைகளைச் செய்தால் நாடு நகரும், நாடு வளரும். இந்த முப்பது கோடி பேரும் அறிவு ஜீவிகள், நாட்டை நடத்திச் செல்லும் உரிமையும் கடமையும் பூண்டவர்கள். இவர்களிடம் இன்று பொறுப்புணர்வு இல்லை. கடின உழைப்பு இல்லை. பயன்பாட்டு நலன் செறிந்த உழைப்பு இல்லை! ஏன்? சுரண்டல் குணம் வந்திருக்கிறது! அதனால் துணிவு இல்லை! தன்னம்பிக்கையும் இல்லை! கடைசியாக இருக்கும் முப்பது கோடி மக்கள் உழைப்பாளிகள்! அவர்களுடைய உழைப்பு பயன்படுகிறது. ஆம்! இந்த முப்பது கோடியில் பலரும் அன்றாட வாழ்க்கையுடன் தொடர்புடையவர்கள். நமக்குத் தெரிந்தவரையில் இவர்கள் உழைப்பில் குறைவிருப்பதாகத் தெரியவில்லை. எப்படி? நாட்டில் உணவுப் பஞ்சம் இல்லை! அதனால் உழவர்கள்

மேற்கொண்டுள்ள வேளாண்மையில் சீரான முயற்சி இருக்கிறது. மற்றபடி நமது அன்றாட வாழ்க்கையை இயக்கும் தொழிலாளிகள் தங்கள் பொறுப்பைச் சீராகச் செய்து வருகிறார்கள். இன்னும் சிறப்பாகவும் பொறுப்பாகவும் செய்யலாம் என்று கருத இடமிருக்கிறது. அறிவியல் சார்ந்த தொழில் நுட்பத்துடன் நமது வேளாண்மையும் கால்நடையும் வளர்ந்தால் மேலும் பயன் கூடும் என்பதில் ஐயமில்லை. ஆயினும் இத்துறைகளில் ஈடபட்டுள்ளவர்கள் உழைக்கிறார்கள். ஆனால் இவர்களுக்குத்தான் போதிய ஊதியம் இல்லை. வாங்கும் சக்தியும் இல்லை. மேலே உள்ள அறுபது கோடி மக்களை இந்த முப்பது கோடியே சுமப்பதால் நலிவடைந்து போய்விடுகின்றனர்; ஏழைகளாகி விடுகின்றனர். இந்தக் கொடுமையிலிருந்து நாட்டை மீட்க வேண்டும்.

பொங்கல் திருநாள், உழவர் திருநாள், மாட்டுப் பொங்கல் என்று வருவதெல்லாம் விழக்கள் மட்டும் அல்ல! படிப்பினைகள் கற்றுத் தரும் வாழ்வியல் விழாக்கள்! உழுதுண்டு வாழ்வார் உலகத்துக்கு ஆணி! உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே! உழவர் உலகம் மேம்பாடடைய வேண்டும். வெல்லம் கரும்பின் பயன்! கரும்பு கடினமான பக்குவமுறைகளுக்கான பிறகே வெல்லமாகிறது! அதுபோல மனிதன் கடின உழைப்புக்களினால் வருந்தினால்தான் மனிதனாக, புவியை நடத்துபவனாக வாழமுடியும்! நெய் - எத்தனை முயற்சிகளுக்குப் பிறகு நெய்யைக் காண்கிறோம்! வாழ்க்கையில் மேம்பாடு அவ்வளவு எளிதா என்ன? நெய்யை நினைத்துப் பாருங்கள்! அத்தனை பாடுபட்டால் தானே நமது வாழ்வு வளமுடன் மலரும்! புவியை நடத்தலாம்! பொதுவில் நடத்தலாம்! செந்நெல்லும் செங்கரும்புச் சாறும் சுவையூறும் நெய்யும் சேர்ந்தாலும் சர்க்கரைப் பொங்கலாக்கும் கைவண்ணம், தொழில் வண்ணம் வேண்டாமா? அதுபோல வாழ்க்கையில் எத்தனை எத்தனை பேறுகள் கிடைத்தாலும் அத்தனையையும்

செல்வமாக வளமாக் நலம் சார்ந்த வாழ்க்கையாக அமைத்துக் கொள்ளும் ஆள்வினை வேண்டும்! ஆர்வம் நிறைந்த அன்பு வேண்டும்!

தமிழர் வழக்கில் 'மாடு' என்றால் செல்வம் என்று பொருள். ஆம்! மாடு, செல்வம்! மனித உழைப்புத் திறனுக்கும், பண்பாட்டுக்கும் அரிமானம் ஏற்பட்டிருக்கும் இன்றைய சூழ்நிலையில் 10 மனிதரை வைத்துக் கொண்டாலும் முன்னேற்றம் என்பது அரிதாகவேயிருக்கிறது. இருந்தாலும் முழுநிலையில் பயன்பாடு கிடைப்பதில்லை. அதற்குப் பதில் பத்து மாடுகள் வைத்துக் கொண்டால் செல்வமும் சம்பாதிக்கலாம். நன்றாகவும் வாழலாம். மன உளைச்சலே இன்றி வாழலாம். ஆனால், மனிதன் பிறப்பில் ஆறாவது அறிவு உடையவன், பிறப்பினால் உயர்ந்தவன் என்ற பெயரில் உயர்நிலைகளுக்கு உழைக்காமல் உண்பதற்கு உரிமை கொண்டாடுகின்றான்! எவருடைய உரிமைமகளும் மதிப்பிற்குரியன தான்! அறநெறி அடிப்படையில் மறுக்கப் படாதவையும் கூட! ஆனால் உரிமைகள் தகுதியின் பாற்பட்டனவாக தகுதிகளுக்கு இசைத்தனவாக இருக்க வேண்டும். இதனை மாணிக்கவாசகர் "வேண்டத்தக்கது அறிவோய் நீ!" என்று பாடினார். ஆனால் மாடுகள், பசு மாடுகளாயினும் எருதுகளாயினும் கடின உழைப்புக்களைத் தருகின்றன. பசுக்கள் குடம் குடமாகப் பால் கறந்து மனிதனுக்கு ஊட்டச் சத்து மிக்க உணவாகத் தருகின்றன. எருதுகள் கழனிகளை உழுது வளப்படுத்தப் பயன்படு கின்றன; பரம்படிக்கப் பயன்படுகின்றன; உரம் தருகின்றன. இங்ஙனம் உழைத்து மனித உலகத்திற்குச் செந்நெல்லையும் செங்கரும்பின் சாற்றையும் கொடுத்துவிட்டு உழுத மாடுகள் பயன்படாத வைக்கோலைத் தின்று உயிர் வாழ்கின்றன. இதனைப் புறநானூறு, "உழுத நோன்பகடு அழிவின்றாங்கு" என்று கூறுகிறது. கடவுள் இந்த எருதையே ஊர்தியாகக் கொண்டுள்ளான். என்ன தத்துவம்? பிறருக்கென உழைத்து மற்றவர்களை வாழ்வித்து வாழ்கிறவர்கள் நெஞ்சத்தில்

இறைவன் எழுந்தருள்வான் என்பதுதான்! எம்பெருமான் சிவன், ஓங்கி உயர்த்திப் பிடித்திருக்கும் கொடியும் எருதுக் கொடிதான்! எருதுக் கொடியின் தத்துவம் உழைப்பதும் உழைப்பின் பயனை மற்றவர்களுக்கு அளிப்பதும் தான் கடவுட் கொள்கை. கடவுளுக்கு விருப்பம். கடவுள் விரும்பும் பத்திமை என்பது உழைப்பும் உதவும் கரங்களுமேயாம். ஆதலால் பொங்கல் விழாவில் எருதுகளும் பாராட்டப் படுகின்றன.

உழைத்துப் பொருளீட்டினால் போதுமா? மகிழ்ச்சி யாக வாழ, வாழ்க்கை. துணை நலம் தேவை. பழங்காலத்தில் தமிழ்நாட்டில் பெண் பார்க்கும் பழக்கம் இல்லை. பெண்ணடிமைத்தனம் இல்லை. மகளிர் ஆடவர்க்கு அளிக்கும் கொடைகளும் (வரதட்சணை) இருந்ததில்லை. மகளிர் தம்முடைய கணவரைத் தேர்ந்தெடுத்தனர். முதலில் வீரத்தினைக் கண்டுதான் மணக்க இசைந்தனர். காலம் மாற மாறப் பொருளாதாரத்திற்கு முதன்மை கொடுக்கும் சமூக அமைப்புத் தோன்றியது. பின், பொருள்களை மகட் கொடையாக மணமக்களுக்கு பரிசில் தரும் பழக்கம் அறிமுகம் ஆனவுடன் செல்வத்தின் மதிப்பு ஈட்டத்தின் அடிப்படையில் கணவனைத் தேர்ந்தெடுத்தனர். பின் காலம் மாற அயல் வழக்கு நுழைந்ததன் பயனாகப் பெண்ணடிமைத் தனம் தோன்றியவுடன் பெண்ணடிமைத் தனத்தின் விளை வாகத் தலைவன் - ஆண், பெண்ணிடம் (வரதட்சணை) கேட்கும் பழக்கம் தோன்றி இன்று நடைமுறையில் இருந்து வருகிறது. பழங்காலத்தில் மாட்டுப் பொங்கல் அன்று அல்லது அதற்கு மறுநாள் அன்று ஏறு தழுவுதல் நடைபெறும். காதலிலிருவர் கருத்தொருமித்துக் கூடி வாழ்தலே மகிழ்ச்சி. பானையில் பால் பொங்கினால் போதாது. உள்ளத்திலும் மகிழ்ச்சி பொங்க வேண்டும்.

வாழ்க்கையை மகிழ்ச்சியுடையதாக அமைத்துக் கொள்ள அறிவு தேவை. அறிவுக்குச் சிந்தனை தேவை. நமது சிந்தனை தாய்மொழியாகிய தமிழில்தான் வளரும். ஆதலால்,

பொங்கலைத் தமிழ் விழாவாகவும் கொண்டாடுதல் இயல்பு. ஆம்! தமிழன், தமிழில் சிந்திக்க வேண்டும்; தமிழ் வழியி லேயே கற்க வேண்டும். துறைதோறும் தமிழே ஆட்சி செய்தல் வேண்டும்.

இந்த உயர் குறிக்கோளையடையத் தமிழரைச் சுற்றி வருகிறது 'தினகரன்'. தினகரன் தரும் எழுச்சி பயனுடையதாக அமைய, பொங்கல் திருநாளன்று வாழ்த்துகின்றோம்.

செந்தமிழ் வழக்கு அயல் வழக்கை வென்று விளங்குக! தமிழன் வளர்க! தமிழ் வளர்க! தமிழ் வாழ்க!

# 83. *பொருளியல் நூல்

திருக்குறள் ஒரு வாழ்க்கை நூல், ஒரு முழு அற நூல். தனி மனித வாழ்க்கை, சமுதாய வாழ்க்கை. அரசியல் ஆகியவற்றில் மிகவும் முற்போக்கான கருத்துக்களை இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே உணர்த்திய பெருமை திருவள்ளுவருக்கு உண்டு. திருக்குறள் எல்லாரும் எல்லா நலன்களும் பெற்று வாழும் சமநிலைச் சமுதாய அமைப்பை வலியுறுத்துகிறது. இன்றையச் சமுதாய அமைப்பில் நிறையப் பொருளாதாரச் சிக்கல்கள் இருக்கின்றன. இச்சிக்கல்கள் களையப்படுவதற்குச் சிலரின் தான தர்ம உணர்ச்சிகள் மட்டும் போதா; அல்லது தீவிர சட்டங்களும் ஆட்சி முறை களுமே பிரச்சினைகளுக்குத் தீர்வு கண்டுவிடவும் மாட்டா. அடிப்படையான சில உணர்வு மாற்றங்களும் தேவை. இத்தகைய கருத்துக்களைத் திருக்குறள் வாயிலாகக் காணலாம். பொருளாதார முன்னேற்றத்தை நாடும் ஒரு சமுதாயத்தில், பரம்பரைச் சொத்துரிமை ஒரு முட்டுக் கட்டையேயாகும். பரம்பரைச் சொத்துரிமையின் மூலம் மீண்டும் மீண்டும் முயற்சியால் பொருளீட்ட வேண்டுமென்ற ஆர்வமும், அதன் வழிப்பட்ட முயற்சிகளும் இளைத்துப்

* பொங்கல் பரிசு

போகின்றன. ஆதலால், திருவள்ளுவர், தன் முயற்சியால் ஈட்டிய பொருளைக் கொண்டு விருந்தோம்பல் முதலிய வற்றைச் செய்ய வேண்டும் என்கிறார். "தாளாற்றித் தந்த பொருளெல்லாம்" என்பது குறள். காதலிலிருவர் கருத்தொரு மித்துக் கூடி மகிழும் காதல் இன்பத்திற்கு எடுத்துக் காட்டாகத் திருவள்ளுவர் 'தம்மில் இருந்து தமது பாத் துண்டாற்றால்' என்ற குறட்பாவைச் செய்துள்ளார்; அதாவது, தான் முயன்று ஈட்டிய பொருளில் தன்னாலேயே கட்டப் பெற்ற சொந்த வீட்டில், தன் முயற்சியால் ஈட்டிய பொருளைக் கொண்டு அறுசுவை உணவாக்கிப் பலரோடு இருந்து கூடி மகிழும் இன்பம் போன்றது காதலின்பம் என்று குறிப்பிடுகிறார். ஆதலால் முயற்சியின் வழி வருவதே செல்வம் என்ற அடிப்படை உணர்வு மக்களிடத்தே பெருகி வளர வேண்டும்.

பொருள் தேடினால் மட்டும் போதாது; தேடக் கூடிய வழிகளிலும் தேட வேண்டும். அறமல்லாத வழிகளில் பொருள் ஈட்டுவதால் தவறுகள் பெருகுவதோடு தாளாண் மையும் குறைகிறது. பொருள் வருவதற்குரிய புதிய புதிய வழிகளைக் கண்டு அவ்வழிப் பொருளீட்ட வேண்டும். ஈட்டுதலைவிடப் பொருள் வருவதற்குரிய புதிய வழிகளைக் காணுதல் அவசியமாகும். அதனாலன்றோ திருவள்ளுவர், **'இயற்றலும் – ஈட்டலும் காத்தலும் காத்து வகுத்தலும் வல்லது அமைச்சு'** என்று குறிப்பிடுகின்றார். ஒருவர் ஒரு துறையில் முயன்று பொருள் ஈட்டினால் அவ்வழிகளையே மற்றவர் களும் பின்பற்றக் கூடாது. அப்படிப் பின்பற்றினால் புதிய வாயில்களைக் காணும் ஆர்வம் குன்றும்; முயற்சி தடைப் படும்; மேலும், ஆரோக்கியமில்லாத போட்டிகள் ஏற்படும். இதனை இன்று நம் நாட்டில் பெருகி வளர்ந்துள்ள வணிகத் தொழில் மூலம் அறியலாம். ஆதலால், பொருள் வருவதற் குரிய வாயில்களைக் கண்டுபிடிக்கும் புதிய முயற்சியில் பொது மக்களை ஈடுபடுத்தலே பொருளாதாரச் செழிப்புக்கு வழி கோலும்.

பொருள் முயற்சி இருவகைப்படும்; ஒன்று, பொருள் களை உற்பத்திச் செய்யும் முயற்சி; இன்னொன்று பொன் (நாணயம்) பெறும் முயற்சி. அதாவது, பணம் தேடும் முயற்சி, நல்ல தன்று. பொருளை உற்பத்தி செய்யும் முயற்சியே வரவேற்கத்தக்கது. வட்டிக் கடை நடத்துதல், வாணிகம் செய்தல் ஆகியன பணம் தேடும் முயற்சியின்பாற் பட்டவை. வேளாண்மைத் தொழில் செய்தல், வேறு பல துறைகளின் மூலம் மக்கள் பொருள்களை உற்பத்தி செய்தல் ஆகியன பொருள் உற்பத்தியைச் சார்ந்தவை. முன்னையது ஒறுக்கத் தக்கது - பின்னையது வரவேற்கத் தக்கது.

ஒரு நாட்டின் பொருளாதாரச் செழிப்பு அந்த நாடு பொருள் உற்பத்தியில் ஈடுபடுவதைப் பொறுத்ததே யாம். பொருள் உற்பத்தி பெருகாமல், சமநிலைச் சமுதாயத்தை எப்படி அமைக்க முடியும்? தரித்திரத்தையா பங்கு போடுவது? அதனாலேயே திருவள்ளுவர் வலிமை நிறைந்த குரலில், "செய்க பொருளை" என்று ஆணையிடுகிறார். செய்க பொருளை என்று ஆணையிட்டமையாலேயே "செய்க பொன்" என்பது விலக்கப் பெறுகிறது. பொருள் எனும் வழக்கு மனித குலம் அனுபவிக்கக் கூடிய பொருள்களையே குறிக்கும். இதனைப் பரிபாடலில் வரும். "சேர்வாராதலின் யாம் இரப்பவை பொருளும் பொன்னும் போகமுமல்ல - நின்பால் அருளும் அன்பும் அறனும் மூன்றும் உருளிணர்க் கடம்பின் ஒலிதாரோயே" என்ற பாடலால் உணரலாம்.

பொருள் உற்பத்தி செய்யும் உணர்ச்சியில் பொருள் களுக்கு மதிப்புத் தருகிற உணர்ச்சியில் நம் நாட்டு மக்களின் உணர்வு இப்பொழுது பின் தங்கியே இருக்கிறது. விலை மதிப்புள்ள மாடுகளை - கால்நடைகளைக் கவனிப்பதில்லை. தானியங்களைப் பாதுகாப்பதில்லை - ஆனால், சிறு காசு களைக் கூட முடிந்து பத்திரமாகக் காப்பாற்றுகிறார்கள். பணம், பொன் இவற்றில் உள்ள பற்றுதல் குறைந்து பொருள் உற்பத்தித் துறையில் நாட்டு மக்களின் ஆர்வம் பெருக வேண்டும்.

கு·XIII·36·

பொருள்களை உற்பத்தி செய்தால் மட்டுமே போதாது. உற்பத்தி செய்த பொருள்களை ஓரிடத்தில் குவியாதவாறும் பார்த்துக்கொள்ள வேண்டும் தேவை போக மிஞ்சும் பொருளைத் தன்னியல்பாகவே தேவையுடையவர்களுக்குக் கொடுப்பது ஒரு சிறந்த சமுதாய ஒழுக்கம். இப்படி நாம் சொல்வதானது ஈதல், ஏற்றல் என்ற முறையில் அல்ல. திருவள்ளுவர், கடமை உரிமை என்ற அடிப்படையில் இப்பண்பாட்டை 'ஒப்புரவறிதல்' என்று குறிப்பிடுகிறார். ஒப்புரவறிதல் அதிகாரத்தில் அவர் பயன் மரம் - கனிகளைக் கனித்துத் தரும் மரங்களை எடுத்துக்காட்டாகக் காட்டுகிறார். மரம் தான் வளர்வதற்காக எரு, தண்ணீர் முதலியவற்றைப் பூமியிலிருந்து எடுத்துக் கொண்டு, உணவாக அதை மாற்றி உண்டு உயிர் வாழ்கிறது. தன்னுடைய தேவை போக எஞ்சிய பொருளைக் காய்களாக - கனிகளாக மாற்றித் தானே தந்து விடுகிறது. அதே போல மனிதனும் தான் உயிர் வாழ்வதற்குத் தான் உற்பத்தி செய்த பொருளில் தேவையானதை எடுத்துக் கொள்ள வேண்டும். எஞ்சியதைச் சமுதாய நியதி - ஒழுங்கு என்ற பெயரால் சமுதாயத்திற்குத் தானே தந்து விட வேண்டும். 'இந்தக் கொள்கைக்குப் பெயர் 'சோஷலிசம்' என்றால் அதில் என்ன தவறிருக்கிறது? இங்ஙனம் சமுதாயக் கொள்கை அமைப்புக் குறித்து மிக முற்போக்கான கருத்துக்களைச் சொல்லுவதால் திருக்குறளை ஒரு சிறந்த சோஷலிசப் பொருளியல் நூல் என்றும் கூறலாம்.

# 84. திருக்குறள் பேரவைத் தலைமையுரை

இனிய அன்புடையீர்,

நமது திருக்குறள் பேரவையின் மாநில மாநாட்டிற்கு வந்துள்ள நண்பர்களே! நாம் கூடியுள்ள நேரம் உலகம்,

இந்தியா, தமிழ் நாடு ஆகிய அனைத்துக்கும் நெருக்கடிகள் நிறைந்துள்ள நேரம்: இன்றைய மனிதகுல வாழ்க்கைப் போராட்டத்தில் யுகப்புரட்சி செய்த சோவியத்திலேயே நெருக்கடி! தத்துவங்களுக்குச் சோதனை! இந்தியா - தமிழ்நாடு, சமயச் சார்பற்ற ஜனநாயகத் தன்மை வாய்ந்த அரைநூற்றாண்டாக அமைந்த ஜனநாயக சோஷலிசம் என்ற தடத்திலிருந்து மாறுகிறது. பிற்போக்குச் சக்திகளின் வளர்ச்சி கூடியுள்ளது. இந்தச் சூழ்நிலையில் மதுரையில் கூடியுள் ளோம்! சிந்தித்து நல்ல முடிவுகளை எடுத்துச் செய்ய வேண்டு வனவற்றைச் செய்ய மாநாடு வழிகாட்டும் என நம்புகின்றோம்.

தமிழ், வளர்ந்த ஒரு மொழி. ஆயினும் காலந்தோறும் வளர்ச்சி பெற வேண்டிய மொழி. தமிழில் எண்ணற்ற இலக்கியங்கள் உண்டு! அவையெல்லாவற்றையும் விடச் சிறந்து விளங்குவது திருக்குறள்! திருக்குறள் ஓர் இலக்கியம் மட்டுமன்று. திருக்குறள் சமுதாய மாற்றத்திற்குரிய கருவி நூல். பிரெஞ்சுப் புரட்சிக்குக் கருவியாக அமைந்த ரூசோவின் "சமுதாய ஒப்பந்தம்", சோவியத் புரட்சிக்கும் கருவியாக அமைந்த "மூலதனம்" ஆகிய நூல்களைப்போல, சமுதாய மாற்றத்திற்குத் துணை செய்யக்கூடிய கருவிநூல் திருக்குறள். ஆனால் தமிழ்நாட்டில் சமுதாய மாற்றம் ஏற்படவில்லை. ஏன்? புவியை நடத்தவும், பொதுவில் நடத்தவும் தமிழர்கள் விரும்புவதில்லை.

திருக்குறள் அறம் பேசுகிறது; பொருள் காட்டுகிறது; இன்பம் தருகிறது. திருக்குறள் முப்பால். மானுடத்தின் முழுமைக்கு மூன்றும் தேவை. அதனால், திருக்குறள் முப்பாலாகத் தோன்றியது.

திருக்குறள் தனி மனிதனை வளர்க்கிறது; குடும்பத் தினை அமைத்துக் காட்டுகிறது; சமுதாய அமைப்பு உருக் கொள்ளத் துணை செய்கிறது. திருக்குறள் சமுதாயத்தின்

துறைதோறும் அறிவூட்டுகிறது; சமுதாய வளர்ச்சிக்கு வித்தாக அமைந்து விளங்குகிறது. எனவே திருக்குறள் சமுதாய மாற்றத்திற்குரிய கருவி நூல்.

திருக்குறள் வாழ்வாங்கு வாழ்தலையே அறம் என்று பேசுகிறது. "வையத்துள் வாழ்வாங்கு வாழ்தல் அறம்" என்பது திருக்குறள். அறச் செய்ய விரும்புதல்; அறம் செய்தல் - இவை யெல்லாம் காலத்திற்கேற்ப வையத்துள் வாழ்வாங்கு வாழும் வழியில் அமையின் அறம்; அஃதில்லையாயின் ஆரவாரம்.

திருக்குறள், பொருள் இன்றியமையாதது என்று பேசுகிறது. "செய்க பொருளை!" என்று அறிவுறுத்துகிறது. பொருள் செய்தலுக்கு, பொருள் இயற்றலுக்கு அறிவறிந்த ஆள்வினை வழிகாட்டுகிறது. ஊழ்வினை உருத்துவரும் பழக்கங்கள் - வழக்கங்கள் தொடர்தல் இயற்கை! வாழ் பெரு வலிமை உடையதுதான்! ஆயினும் முயற்சியின் முன் ஊழின் வலிமை நிற்காது. தளராத முயற்சி, நாளும் வளரும் முயற்சி ஊழை வெற்றிகொள்ளும். இதுவே வாழ்வியல். ஆதலால் ஊழின்பாற் பழியைப் போட்டுவிட்டு வாளா உறங்குதல் கூடாது. ஊழையும் உப்பக்கம் காணும் ஆள்வினையை ஏற்போம்.

திருக்குறள் ஒருமை நலம் உணர்த்தும் நூல் "பிறப் பொக்கும் எல்லா உயிர்க்கும்" இதுவே திருக்குறளின் சமுதாய அறம்! திருக்குறள் வழி அமையும் சமுதாய அமைப்பில் சாதிகள் இல்லை! மதங்கள் இல்லை! எந்த வேற்றுமையும் இல்லை! ஒரு குலமே!

தனி மனிதன் - குடும்ப அமைப்பு சொத்துடைமைக்கு அடிப்படை. சொத்துடைமைச் சமுதாயமே அரசியலுக்குக் களம்! திருக்குறள் அரசியல் நூல்! திருக்குறள் நெறி, சமுதாய நீதி சார்ந்த அரசியல் நெறி, சமுதாய நீதி சார்ந்த அரசியல் நெறி! தனி மனிதச் சொத்துடைமை தோன்றியதன் விளைவாக அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல்

என்ற ஒழுக்கக்கேடுகள் தனிமனிதர்களிடம் இடம் பெற்றன. இதனைத் தொடர்ந்து பொருளாதார ஆதிபத்தியப் போட்டிகள் தொடங்கி வளர்ந்தன. இதனைத் திருக்குறள்,

> பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும்
> கொல்குறும்பும்”

என்று கூறுகிறது. நாட்டில் செப்பமான சமுதாய அமைப்பு இல்லாவிடின் அரசையே அச்சுறுத்தும் கயமைக் கூட்டம் வளரும். இன்றைய நமது நாட்டின் நிலையும் இதுவே.

இந்தக் கேடுகளைத் தவிர்க்கத் திருக்குறள் ஒப்புர வறிதல் என்ற வாழ்வியல் நெறியை அறிமுகப்படுத்துகிறது. ஒப்புரவறிதல் என்பது கூட்டுறவுத் தத்துவம் போல ஒரு கூட்டு வாழ்க்கை முறை. “ஒருவர் எல்லாருக்காகவும் எல்லாரும் ஒருவருக்காகவும்” என்ற தத்துவத்தின் வழி மலர்வது கூட்டுறவு வாழ்க்கை. நமது நாட்டில் இந்த கூட்டுறவு வாழ்க்கையும் வளரவில்லை. விளங்கவில்லை. ஏன்? எல்லா வற்றுக்கும் அரசின் தலையீடே காரணம். சமூகநீதி தழுவிய ஒப்புரவு வாழ்வியலே திருக்குறள் காட்டும் பொருளாதார வாழ்க்கை.

திருக்குறள் தோன்றி 2000 ஆண்டுகள் உருண்டோடி விட்டன. திருக்குறள் தோன்றிய காலத்திலிருந்து அனைத்து இலக்கியப் படைப்பாளர்களாலும் விரும்பி ஏற்கப்பட்ட நூல்! திருக்குறளை விரும்பிக் கற்றவர்கள் பலர். திருக்குறளை அனுபவித்துப் படித்து உரையெழுதியவர்கள் பலர். திருக்குறள் பலமொழிகளில் மொழி பெயர்க்கப் பெற்றுள்ளது. திருக்குறள் உலக அங்கீகாரத்தைப் பெற்ற நூல். ஆயினும் இன்னமும் திருக்குறள் தோன்றியதன் நோக்கம் நிறைவேற வில்லை; சமுதாய மாற்றம் ஏற்படவில்லை.

திருக்குறள் தோன்றிய பொழுது இருந்த சமுதாயம் அப்படியேதான் இருக்கிறது. அன்று திருக்குறள் கற்காமல் அறியாமையில் கிடந்து உழன்றார்கள். இன்று திருக்குறளைக்

கற்றும் அறியாமையிலேயே கிடந்து உழல்கின்றனர்! அன்று மனித குலத்தில் சாதிகள் இருந்தன. இன்றும் சாதிகள் இருக்கின்றன. ஆனால் அன்று சாதிமுறைகள் நெகிழ்ந்து கொடுத்தன. இன்றோ சாதி முறைகள் நெகிழ்ந்து கொடுக்காமல் இறுக்கமாக இருக்கின்றன. அன்றும் வறுமை இருந்தது. இன்றும் வறுமை இருக்கிறது. திருக்குறள் சமுதாய மாற்றத்தை உருவாக்கவில்லை. ஏன்? திருக்குறளை நாம் இலக்கியமாகக் கற்கிறோம்! ஆம்! திருக்குறள் ஓர் இலக்கியமாக விளங்கலாம். ஆனால், திருக்குறள் இலக்கியம் மட்டுமா? திருக்குறள் ஒரு சமுதாய நூல்; அரசியல் நூல்; அறிவு நூல், சமுதாய வளர்ச்சித் திசையில் மனிதனைத் தூண்டி உந்திச் செலுத்தும் கருவி நூல் என்பதை நம்மில் பலர் உணர வேண்டும்.

திருக்குறள் அறிவைக் கருவியாகக் காட்டுகிறது. துன்பங்கள் தொடர் கதைகளாக வளராமல் புறவாழ்வு படைப்பதே அறிவு "அறிவு அற்றம் காக்கும் கருவி" என்பது திருக்குறள். வாழ்க்கைக்குப் பொருள் தேவை; "பொருளி லார்க்கு இவ்வுலகம் இல்லை". பொருள் செய்து குவித்தல் வேண்டும். "செய்க பொருளை" - என்று திருக்குறள் கூறுவதால் **உற்பத்திப் பொருளே சிறப்புடைய பொருள்** என்று கொள்க. அறிவறிந்த ஆள்வினையுடையராதலே சிறப்பு; முறை செய்யும் அரசு தேவை என்றெல்லாம் வாழ்வியல் காட்டிய திருக்குறள், தமிழ் நாட்டில் சமுதாய மாற்றத்தை உருவாக்கவில்லை. ஏன்? ஆழமாகச் சிந்தனை செய்வோமாக.

இனிய அன்புடையீர்,

திருக்குறள் பேரவை தோன்றி இருபது ஆண்டுகள் ஆன பிறகும் கூடத் திருக்குறள் ஒரு கருவி நூல் என்ற அறிவை, உணர்வை நாம் எவ்வளவு தூரம் பெற்றிருக்கிறோம் என்பது ஆய்வுக்குரியது. இந்த நாடு, இந்தச் சமூகம் எப்படி அமைய வேண்டும் என்று எண்ணுபவர்கள் எத்துணை பேர்!

புரட்சியாளர்களின் கருவியாகத் திருக்குறள் இடம் பெற வில்லை. திருக்குறள் கற்றவர்கள், கற்பவர்கள் வளர்ச்சியில் நாட்டம் செலுத்தவில்லை. மாற்றம் அவர்களின் விருப்பமாக இல்லை. ஏன்? திருக்குறள் உரைகளால் விளைந்த தீமை இது. இன்று பேரவை என்ன செய்ய வேண்டும்?

திருக்குறளைத் தொடர்ந்து ஆழமாகச் சிந்தனை செய்யுங்கள். சமுதாய மாற்றத்திற்குரிய சிந்தனை தோன்றும்! அத்திசையில் முயற்சி செய்யுங்கள்! சாதி மத வேற்றுமை களை எதிர்த்துப் போராடுங்கள். பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் என்ற திருக்குறள் நெறியை வெற்றி பெறச் செய்யுங்கள். நிச்சலும் கொல்லும் வறுமையை எதிர்த்துப் போராடுங்கள். 'செய்க பொருளை' என்ற வாழ்வியல் நெறியைப் போற்றுங்கள்! இத்துறைகளில் வெற்றி பெற்றாலே தமிழகம் வெற்றி பெறும். திருக்குறள் படைப்பின் நோக்கமும் கைகூடும்.

இனிய அன்புடையீர்,

திருக்குறள் வாழ்வியல் கருத்தரங்குகளை நடத்துங்கள்! மக்களிடையே விழிப்புணர்ச்சியை உண்டாக்குங்கள்! திருக்குறள் வெற்றி பெறும்! அதுதான் திருக்குறள் பேரவையின் குறிக்கோள்! கடமை!

# 85. *மருவுமின் மாண்பார் அறம்

"இன்று கொல் அன்று கொல் என்று கொல் என்னாது
பின்றையே நின்றது கூற்றம் என் றெண்ணி
ஒருவுமின் தீயவை ஒல்லும் வகையால்
மருவுமின் மாண்டார் அறம்

என்பது நாலடியார்.

* சென்னை வானொலிப் பொழிவு

இன்று வாழலாம்; நாளை வாழலாம்; இன்று செய்யலாம்; நாளை செய்யலாம் என்ற மனப்போக்குக் கூடாது. நல்ல வண்ணம் வாழ நினைப்பவர்களுக்கு எல்லா நேரமும் நல்ல நேரமே. அதுமட்டுமல்ல. சென்ற காலம் சென்ற காலமேதான். இனி, திரும்பி வரக்கூடியது அல்ல. எதிர்காலம் இனிமேல் வரக்கூடிய ஒன்று. அது வருமா? வாராதா? என்பது ஐயப்பாட்டிற்குரியது. ஆதலால், எதிர் காலத்தைச் சான்றோர்கள் கணக்கில் எடுத்துக் கொள்ள மாட்டார்கள். இன்று வாழ்வதே உண்மை. ஒவ்வொரு நாள் வாழ்க்கையிலும் மரணம் நிழல்போல் தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது. மரணம் என்பது தவிர்க்கமுடியாத இயற்கை நியதி. ஆதலால் “இன்று நன்று, நாளை நன்று என்று காலத்தைக் கடத்துதல் கூடாது. கழிக்கப்படுகின்ற ஒவ்வொரு விநாடியும், வாழ்நாளின் ஒரு பகுதி என்பதை உயத்துணர வேண்டும். மரணம் என்று வரும்? எப்பொழுது வரும்? எப்படி வரும்? இந்த உண்மை யாருக்கும் தெரியாது. “யாரறிவார் சாநாளும் வாழ்நாளும்? என்று திருமுறை கேட்கும்.

ஆதலால், நம்முடைய வாழ்நாளின் ஒவ்வொரு விநாடியையும் பொருளுடையதாக்க வேண்டும்; பயனுடைய தாக்க வேண்டும். முதலில், வாழ்நாள் பயனுடையதாவதற்குத் தடையாயிருக்கிற தீமையிலிருந்து முற்றாக விடுதலை பெற வேண்டும் நம்முடைய மனத்திற்கு இயல்பாக நன்றும் தீதும் பகுத்தறியும் திறனில்லை. அது ஆசை, கவர்ச்சி ஆகியவற்றுக்கு இரையாகிக் கண்டபடி சுற்றும். வாழ்க்கைக்குரிய நன்மையை, தீமையைப் பகுத்தறியும் ஆற்றல் புத்திக்கே உண்டு. மனதை, புத்தியின் ஆளுகைக்குக் கொண்டு வரவேண்டும். அதன் மூலம் நன்மை தீமைகளைப் பகுத்தராய்ந்து, தீமைகளிலிருந்து விடுதலை பெற வேண்டும். இந்த விடுதலை இயல்பாகக் கிடைக்காத ஒன்று. கடுமையான போராட்டம் தேவை. பொல்லாத மனம் தீமையை நன்மை போலக் காட்டும்.

துன்பத்தை இன்பம் போலக் காட்டும். இதற்கிடையில் பழக்கவாசனை வேறு. எல்லாவற்றிற்கும் மேலாக நாம் வாழும் சமுதாயச் சூழலின் நெருக்கடி வேறு. இவ்வளவுக்கும் இரையாகி "மீன் வற்றல் விற்ற பெண்" போல், தீமையையே நன்மையென்று கருதி வாழ்தல் மனிதகுலத்தின் இயல்பாகி விட்டது. இந்த இடத்தில்தான் பகுத்தறிவின் தெளிவும், தெளிவைக் கடைப்பிடிக்கும் துணிவும் தேவைப்படுகின்றன. தீமையிலிருந்து விடுதலை பெற்ற பிறகு, ஆன்மா சூன்யத்தில் இருக்க முடியாது. தீமையிலிருந்து விடுதலை பெறவும், தீமையிலிருந்து பெற்ற விடுதலையை நிலையாகப் பராமரிக்கவும் ஆன்மாவிற்கு நன்மையின் பற்றுக்கோடு தேவை.

ஆதலால், உயிர்க்கு உடனடியாக அறநெறிச் சார்பு தேவை. அறநெறியிலும் சாதாரண - நெடிய - பயன்தர இயலாத அறங்கள் உண்டு. இவைகளைச் செய்தால் மட்டும் போதும். ஆனால், நிலையில்லாத உலகத்தில் நிலையாக வாழ ஆசைப்படுபவர்கள் - இறந்த பின்னும் வாழ ஆசைப்படுப வர்கள் மிகப் பெரிய பேரறங்களை மேற்கொள்ள வேண்டும். நெடிய உலக வரலாற்றில் புகழ் பெற்ற மாந்தர் சிலர் உண்டு. அவர்கள் சிறந்த பேரறங்களைக் கண்டு உணர்த்தியுள்ளனர். அந்த அறங்களுக்காகவே அவர்கள் தம் வாழ்நாளில் இன்னல்கள் பலவற்றை ஏற்றுத் துன்பப்பட்டுள்ளனர். இறந்தும் இறவாமை பெற்றனர். இத்தகு புகழ்மிக்கோர் வரலாற்று ஏட்டில், அப்பரடிகள், புத்தர், ஏசு, நபிகள் நாயகம், அண்ணல் காந்தியடிகள் ஆகியோர் இடம் பெற்றுள்ளனர். இவர்கள் காட்டிய அந்தப் பேரறம் என்ன? தீமை தோன்ற வாய்ப்பளிக்காத வாழ்க்கை முறையே, தீமையற்ற வாழ்க்கை முறை. அதாவது, நல்லற வாழ்க்கை. தீமை, பிரிவினையில் தோன்றும். நன்மை ஒருமைப்பாட்டில் தோன்றும். தீமை, தன்னயப்பில் தோன்றும், நல்லறம், பிறர் நலத்தில் தோன்றும். தீமை, பகைமையில் தோன்றும். நன்மை, இணக்கத்தில்

தோன்றும். தீமை அறியாமையில் தோன்றும். நன்மை, தெள்ளிய அறிவில் தோன்றும். தீமை, திருவருட்சார் பில்லாதது. நன்மை திருவருட் சார்புடையது. தீமை எல்லா வற்றையும் அழிக்கும். நன்மை எல்லாவற்றையும் ஆக்கும். வாழ்க்கையில் சிறப்புடைய சான்றோர் காட்டுவது அறம். அந்த அறம் மனித உலகத்தை ஒருங்கிணைக்கும். அன்பிற் கலந்த ஒரு குடும்பமாக்கும், எல்லாருக்கும் எல்லாம் என்ற பேரறம் தழுவிய சமுதாய அமைப்பைக் காணும். போரற்ற சமாதான அமைதியில் அந்த உலகம் தங்கும். இதுவே மாண் புடையோர் அறம். இந்த அறத்தை இன்றே மேற்கொள்க. இப்பொழுதே மேற்கொள்க. இந்த அறநெறியில் நின்றோர் செத்தும் வாழும் கலையில் வல்லவராவர்.

## ஆற்றும் துணையும் பொறுக்க!

*வேற்றுமை இன்றிக் கலந்திருவர் நட்டக்கால்*
*தேற்றா ஒழுக்கம் ஒருவன்கண் உண்டாயின்*
*ஆற்றும் துணையும் பொறுக்க; பொறாமையின்*
*தூற்றாதே தூர விடல்*

என்பது நாலடியார்.

வாழ்க்கைக்கு நட்பு இன்றியமையாதது. ஒருவர் வாழ்க்கை மிகவும் சிறப்புடையதாக. வெற்றி பொருந்தியதாக துணை செய்யும் உறுப்பு நட்பு உறுப்பேயாம். ஒருவர் "நான் காதலிக்காமல் கூட இருக்க முடியும். நட்பு இல்லாமல் இருக்க முடியாது" என்று சொல்லியதுமுண்டு. நட்பு, வாழ்க்கைக்கு அறிவினை அள்ளித் தரும்; துணையாக அமையும்; துணிவு தரும்; புகழ் கொடுக்கும்; பாதுகாப்பாக அமையும். நட்பில் வேற்றுமை கூடாது. எந்தவிதமான வேற்றுமையுமின்றி, ஒன்றாகக் கலந்து பழகுதலே சிறந்த நட்பு. சிறந்த நண்பர் களுக்கிடையில் ஐயம் கிடையாது; இரகசியம் கிடையாது;

காவல் கிடையாது; ஒளிவு மறைவும் கிடையாது. இங்ஙனம் ஒன்றி வாழ்தலே நட்புடைய வாழ்க்கை.

வேற்றுமையே அறியாது அனைத்திலும் ஒன்றாகவே வாழ்தல் என்று சிறந்து விளங்கிய நட்பு வாழ்க்கையில் தனது நண்பனிடம் தேற்றிக் கொள்ள முடியாத அளவுக்குக் கடுமையான – மோசமான குற்றங்கள் தோன்றினாலும் பொறுத்துக் கொள்ள வேண்டும். கடுமையான குற்றங்களாவன: நண்பனுடைய பொருளை அபகரித்துக் கொள்ளுதல், நண்பனின் மனைவியை நயத்தல் போல்வன. "உண்டாயின்" என்று ஆசிரியர் சொல்வதால் இத்தகைய குற்றங்கள் தோன்றாது என்பதே கருத்து. ஒரோ வழி ஆசையின் காரணமாகவும், மற்றையோர் தூண்டுதலின் காரணமாகவும் இத்தகு கடும் குற்றங்கள் தோன்றலாம். இத்தகைய குற்றங்கள் தன் நண்பனிடத்தில் தென்படின், அவற்றைக் கண்டபொழுது ஆத்திரப்படக் கூடாது. அவசரப்படக் கூடாது. குற்றங்களுக்குரிய காரணங்களைக் கண்டு ஆராய வேண்டும். அந்த நண்பருக்கும் அறியாமல் அந்தக் காரணங்களை மாற்ற முயற்சி செய்ய வேண்டும். அதன் பின்னும், அந்த குற்றங்களினின்றும் நண்பர் நீங்காது போனால், இதமாக எடுத்துச் சொல்லித் திருத்த வேண்டும். அதுவும் இயலாது போனால் பொறுத்துக் கொள்ள வேண்டும். பொறுமையும் எல்லை கடந்து போய் நட்பாயிராமல் அவரே வலியப் பிரிந்து போய்விட்டால் கவலற்க. அது மட்டுமன்று, அவர்தம் குற்றத்தை மற்றவர் அறியத் தூற்றாமல் வாளா இருந்திடுக! பொறுத்தாளுக! இங்ஙனம் பொறுத்தாற்றிக் கொண்டால் நட்பில் அமைதியும் வந்து பொருந்தும். வேற்றுமையும் விரிவடையாமல் நிற்க வாய்ப்பு உண்டு. பிரிந்து சென்றவர்களும் திரும்பி வருவதற்குரிய வாயிலும் ஏற்படும். எல்லாவற்றிற்கும் மேலாக ஒருபால் அமையும் தகுதி சான்ற நட்பு, பிறிதொருபால் நெஞ்சறிவு லூஉவாக அமைந்து திருந்த வாய்ப்பேற்படும்.

ஆதலால் நட்புச் செய்க! தேர்ந்து தெளிந்து நட்புச் செய்க! நண்பனின் வாழ்க்கையில் ஒன்றாகுக! கடமைகளைச் செய்க! உரிமைகளைப் பெறுக! உரிமைகளை வழங்கிடுக! உடனிருந்து உண்க! கலந்து பேசி மகிழ்க! வாழ்வித்து வாழ்க! இன்புறுத்தி இன்புறுக! இதுவே நட்பு! இதுவே அருள்நலம் சார்ந்த நட்பு. இத்தகைய நட்பில் கடமையும், உரிமையும், உணர்வும் ஒன்றாக இனம் கண்டு கொள்ள முடியாதபடி ஒன்றாகி விட்டன. இத்தகு நட்பு வையகத்து வாழ்க்கையை வானகத்து வாழ்க்கையாக மாற்றும். மண்ணில் விண்ணகத்தை படைக்கும் ஆற்றல் தூய நட்புக்கே உண்டு. வேற்றுமை இன்னதென்று தெரியாமல் பழகுவதே நட்பு. இத்தகைய நட்பில் ஆக்கம் தவிர வேறொன்றுமில்லை. ஒரோ வழி சூழ்நிலையின் காரணமாகப் பொறுத்தாற்றிக் கொள்ள முடியாத கூடா ஒழுக்கம் தோன்றிடின் மெல்ல விலகுக! பொறுத்தாற்றிக் கொள்க! யார் மாட்டும் அந்நண்பனின் குற்றங் குறைகளைச் சொல்லற்க! தூற்றாது இருந்திடுக! தவறு செய்யாத நன்னெஞ்சின் நயப்புடன், அவர் பழகிய காலத்தில் காட்டிய நட்பாங்கிழமையால் செய்த நல்ல உதவிகளை எண்ணி மகிழ்ந்திடுக! இங்ஙனம் பழகின் நட்பு வளரும். இன்ப அமைதி வளரும். தவறுகள் செய்த பிறகும் அவர்பால் சினம் கொள்ளாது அன்பே காட்டுக.

கலந்து பழகிய ஒருவர் பிரிந்த பொழுது, அவரைத் தூற்றுவது வறட்சித் தன்மையுடையது. தொடர்ந்து நட்பிற் பிரிவு மட்டுமின்றிப் பகையையும் வளர்க்கும். பகை மூண்ட பிறகு, ஒருவருக்கொருவர் வசைச்சொற் பரிமாற்றங்கள் நிகழும். அதனால் இருவர் வாழ்க்கையுமே பாதிக்கும். ஆதலால் தூற்ற தூர விலகுகின்றார். தேர்ந்து தெளிந்து நட்பினைப் பெறுக. பெற்ற நட்பினைப் பேணி வளர்த்துப் பாதுகாத்திடுக! நட்பு வாழ்க்கையில் அனைத்து உரிமைகளையும் வழங்கிடுக! நட்பும் காட்டுக! நட்பும் பெறுக! எந்தச் சூழ்நிலையினும் பொறுத்தாற்றும் பண்பே நட்புக்கழகு. தூற்றாமை தூய நட்புக்கு இலக்கணம்.

# 86. திருப்பத்தூர்த் தமிழ்ச் சங்கத் தொடக்கவிழா உரை

(18-5-1967)

அன்பிற்கும் பாராட்டுதலுக்கும் உரிய தமிழ்ப்புலவர் பெருமக்களே; உங்கள் அனைவருக்கும் "நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி நற்கனகக் கிழிதருமிக்கு அருளிய" திருத்தளிநாதனின் திருவடிகளை நினைந்து நம்முடைய வாழ்த்துடன் கூடிய வரவேற்பு:-

**முன்னுரை:** தமிழ் காலத்தால் மூத்தமொழி. கருத்தாலும் வளர்ந்தமொழி. முத்திறத்தாலும் வளர்ந்த முத்தமிழ். அதாவது திருவருளாலும், அரசர்களாலும், பொதுமக்களாலும் பேணி வளர்க்கப்பட்ட பெருமொழி பல கடற்கோள்களாலும், மாறுபட்ட அரசர்களாலும் அழிக்கப் பெறாமல் நின்று நிலவும் நிலையான மொழி. தமிழ் இனிமை நிரம்பிய மொழி. எளிமை நிறைந்த மொழி. சொற்சுவை நிறைந்த மொழி, பொருட்சுவை நிறைந்த மொழி. பொருள் வழி வரவேண்டிய பயனும் தரும் மொழி.

**தமிழின் சிறப்பு:** தமிழ் இனிய எளிய மொழி. ஆயினும் இலக்கண வரம்பு நிறைந்த மொழி. தமிழைப்போல இலக்கண வரம்புடைய பிற மொழி இந்த நாட்டில் இல்லை. "மண்ணிடைச்சில இலக்கண வரம்பிலா மொழிபோல் எண்ணப்படுமோ" என்று பேசுகிறது திருவிளையாடற் புராணம். இன்று, தமிழில் தொன்மையானதாகவும் முதல் நூலாகவும் விளங்குவது தொல்காப்பியம். தொல்காப்பியம் ஓர் இலக்கண நூல், ஒருவகையில் இலக்கிய நூலும்கூட. அதாவது வாழ்க்கையின் இலக்கைக் காட்டி அவ்வழியில் மனித இனத்தை ஆற்றுப்படுத்தி, அந்நெறியில் வாழ்விக்கச் செய்வதுதானே இலக்கியம்? தொல்காப்பியப் பொருள்

அதிகாரத்தில் வாழ்வியல் பேசப்படுகிறது. அதனால் தொல்காப்பியம் இலக்கியமும் ஆகும். இந்நூல் மூவாயிரம் ஆண்டுகட்குப் பிந்தியது என்று சொல்வார் யாரும் இல்லை. ஐயாயிரம் ஆண்டுகட்கு முந்தியது என்ற கருத்துடையவரும் உளர்., மொழியும் மொழிவழிக் கருத்துக்களும் திடீரெனத் தோன்றிவிடுபவை அல்ல. அம்மொழியைப் பேசுகிற மக்களின் காலத்தோடு இயைந்த அநுபவத்தின் விளைவாகவே கருத்துக்கள் தோன்றும்; மாறும்; வளரும்; இது இயற்கை. தமிழ் உலகத்தில், பழைமை - புதுமைச் சண்டை நேற்றுக் கிடையாது. நேற்றைக்கு முன்தினம் கிடையாது. அதாவது முற்காலத்தில் கிடைாயது. ஆனால், இன்று பழமை - புதுமைச் சண்டைகள் தோன்றி உள்ளன. முன்பு இல்லாததற்குக் காரணம், நம்முடைய முன்னைய தமிழ் இனம் சிந்தனை ஆற்றல் உடையதாக இருந்ததாகும். அவர்கள் புதுமை காண்பதில் பேரார்வம் காட்டினர்:- பழமைக்குப் புதுமைப் புத்துணர்வு கொடுப்பதிலும் கருத்துச் செலுத்தினர். மனித உலகுக்குத் தேவையான ஒன்று புத்துணர்வுடனும் புதுமைப் பொலிவுடனும் என்றும் விளங்கும். தேவை இல்லாத பழையது சருகெனத் தாமே அழியும். புதியன, தாமே புகும். இது தமிழ் மரபு. “பழையன கழிதலும், புதியன புகுதலும் வழுவல காலவகையினானே” என்பது தமிழ் இலக்கணம். அருளாசிரியராகிய மாணிக்க வாசகரும் இறைவன் முன்னைப் பழமைக்குப் பழமையாய். பின்னைப் புதுமைக்குப் பெயர்த்தும் அப்பெற்றியாய் உளன் எனப் பாடிப்பரவுவது பழமை உலகத்திற்கும் எதிர்வரும் புத்துலகத்திற்கும் இணைப்பூட்டுவதாக உள்ளது. தமிழ் மரபு வழி வளந்த மொழி. நலம் தரும் பழயன போற்றும் மொழி. புதுமை ஏற்கும் மொழி. இலக்கணக் கட்டமைந்த மொழி இத்தகு சிறப்புக்கள் இருந்தமையால் அன்றோ அள்ளக் குறையாத அனுபவத்திற்குத் தெவிட்டாத இலக்கியம் பலவற்றைத் தமிழ் உலகம் காணமுடிந்தது?

**தமிழ் மறை:** இன்றைய சமுதாயத்தில் அறிந்தோ அறியாமலோ வேதம் என்ற சொல்லாட்சிக்கு மதிப்புக் கிடைத்திருக்கிறது. சைவத் தமிழ் உலகத்திலும்கூட வேதங்களுக்கே முதல் இடம் வழங்குகிறார்கள் வேதம் வடசொல்! மறை தமிழ்ச்சொல் தமிழர்களுக்கு உரிய மறை, இன்று வழக்கத்தின் காரணமாக நம்மீது திணிக்கப்படுகின்ற ஆரிய மொழி மறைகள் அல்ல என்பதை நல்லோர் போற்றும் நச்சினார்க்கினியர். சிவஞானப்போதப் பேருரை கண்ட மாதவச் சிவஞான முனிவர், தனித் தமிழ் மலை என விளங்கிய மறைமலை அடிகள் ஆகியோர் எடுத்துக் கூறியும், நம்மனோரில் பலரிடம் கருத்துத்தெளிவு ஏற்படவில்லை. இது குறித்துச் சைவத் தமிழ் இனம் வாழ்க்கைக்குக் கைக்கொள்ள வேண்டிய மறைகள் - எவை என இத்திருப்புத்தூர்த் தமிழ்ச் சங்கப் புலவர் பெருமக்கள் வழி காட்டுவார்கள் என்று நம்பு கின்றோம். இன்று தமிழ் இனம் செய்த நல்வாய்ப்பின் காரண மாகத் தமிழர்களிடத்தில் ஒரு நூல் தமிழர் மறை என்று வேறுபாடின்றிப் பாராட்டப் பெறுகிறது. அதுதான் திருக்குறள் ஒரு முழுதுறழ் அந்நூல் மறை என்பது வேற்றுமை களை குறைக்க வேண்டும். திருக்குறளுக்கு மனிதர்களுக் குள்ளாக நெருங்கிய பாசம் கலந்த உறவை உருவாக்க வேண்டும். திருக்குறளுக்கு இந்த இயல்பு உண்டு. குணம் குறிகளைக் கடந்த பரசிவம்போல சாதி, இனம், மொழி, நாடு, அரசியல் வேறுபாடுகளைக் கடந்த ஒப்பற்ற நாகரிகத்தை விளக்கும் திருநூலாகத் திருக்குறள் திகழ்கிறது.

**திருக்குறள், தமிழர் தம் வாழ்க்கை மறையாகவும் இந்திய நாட்டின் தேசிய நூலாகவும், விளங்குங் காலம் அண்மையில் இருக்கிறது.**

**தமிழும் சமயமும்:** சமயம் என்பது வாழ்க்கையின் ஒரு பகுதி அன்று. ஒரு சில சடங்குகள் மட்டும் சமயம் அல்ல. ஒவ்வொரு தனி மனிதனுடைய வாழ்க்கையிலும் ஒட்டு மொத்தமான சமுதாய அமைப்பிலும் சமயம் ஒரு முழு நிலை

